

# அதிதுடிஇமை குணாம்சம்

எம்.எம்.நௌஷாத்

டாக்டரின் பெயர் யுக்ஸியி. அந்தப் பெயர் யாருக்கும் தெரியாது. எல்லோரும் அவரை தங்கப் புத்தகம் என்று செல்லமாக அழைத்தார்கள். தங்கத்திற்கு நிகரான நற்குணங்கள் அவர் கொண்டிருந்தார் என்பதற்காகத்தான் அவருக்கு அந்தப் பெயரைச் சூடியிருந்தார்கள் என்றால் அது தவறு. யுக்ஸியின் மேசையிலே தங்க நிறத்தில் பெண்டு செய்யப்பட்ட ஒரு புத்தகம் இருந்தது. பார்ப்போரின் கண்ணைக் கவரும் விதத்தில் அசல் தங்கப்பாளம் போல் நேர்த்தியாக வடிவமைக்கப்பட்டிருந்தது அந்தப் புத்தகம். அந்தப் புத்தகத்தை அழகிய கண்ணாடிப் பேழையிலே பத்திரப்படுத்தி வைத்திருந்த குறும்புக்காரரான அவர் கண்ணாடிப் பேழை மீது 'இது தங்கம்' என்று செதுக்கியும் விட்டார்.

அதன் பிறகு தங்கப் புத்தகமாகி விட்டார் யுக்ஸியி. புதியவர்கள் யாரும் அந்தப் பேழையைச் சுட்டிக்காட்டி 'இது என்ன டாக்டர்?' என்று கேட்டு விட்டால் போதும் 'அது தங்கம் தொடாதீர்கள்' என்று சீரியசாகச் சொல்லுவார் யுக்ஸியி. சுவாரஷ்யம் என்னவென்றால் சிகிச்சைக்காக வந்த திருடனொருத்தன் அந்தப்புத்தகத்தை உண்மையிலே தங்கமென நம்பி களவாடிப் போனான். ஒருசில நாட்களில் 'மன்னிக்கவும்' என்ற கடித்தோடு புத்தகப்பேழை திரும்பி வந்து விட்டது.

சிறிய அந்தப் புத்தகம் Hutchison's clinical methods என்ற ஆங்கில மருத்துவ நூல் ஆகும். மருத்துவக் கல்லூரி மாணவர்களுக்கு இந்நூலின் பெறுமதி நன்றாகத் தெரியும். நோயாளியொருவரோடு எப்படி உரையாடுவது, நோய் அறிகுறிகள், நோய் திருஷ்டாந்தத்தை எப்படி அறிந்து கொள்வது, வயிற்றை, காலை, இதயத்தை, நுரையீரலை, தலையை, தோலை எப்படிப் பரிசோதிப்பது என்று அந்நூலில் விலாவாரியாகப் போட்டிருப்பார்கள். அந்நூலிலுள்ள தாற்பரியங்களைக் கற்றுத் தேறாமல் யாரும் டாக்டராகி விடமுடியாது. அற்புதமான அப்புத்தகம் யுக்ஸியி மருத்துவக் கல்லூரியில் கற்றுக் கொண்டிருந்தபோது செய்த சாதனைகளுக்காக கிடைத்ததா என்றால் அப்படி இல்லை. யுக்ஸியி ஓய்வாக இருக்கும் வேளையில் படிக்கும்போது செய்த முட்டாள் தனங்களை நினைத்து தன்னுடைய தலையிலே தானே குட்டிக் கொள்வார்; சிலவேளை குபீரென்று சிரித்தும் விடுவார் அப்படிச் செய்த முட்டாள்தனத்திற்கு கிடைத்த பரிசுதான் அந்தத் தங்க பெண்டு தங்க புத்தகம்.

மருத்துவப் படிப்பின் மூன்றாவது ஆண்டின் முதல் நாளன்று அந்த முட்டாள்தனம் நிகழ்ந்தது. எல்லா மாணவர்களும் வெள்ளை ஓவர்கோட் அணிந்து ஸ்டெதஸ் கோப்பை கழுத்தில் சுற்றிப்போட்டுக்

கொண்டு ஜாலியாக வந்திருந்தார்கள். ஜாலிக்கு காரணம் இருந்தது. அன்றுதான் முதன் முதலாக டாக்டர்களின் அடையாளச் சின்னமான ஸ்டெதஸ்கோப்ஜ தொட்டிருக்கிறார்கள். அன்றுதான் உண்மையான நோயாளிகளோடு உரையாடப் போகின்ற அவர்களுடைய ஆஸ்பத்திரிப் பயிற்சிகள் ஆரம்பிக்கின்றன. தமக்கென ஒதுக்கீடு செய்யப்பட்ட நோயாளிகளோடு உரையாட ஆரம்பித்தார்கள் மருத்துவ மாணவர்கள். யுக்ஸியி நீலநிற உடை அணிந்து கம்பீரமாக இருந்தார். அவருடைய சட்டைப்பையில் Pen torch, Measuring Tape, Knee Hammer என்பன துருத்திக் கொண்டிருந்தன.

புன்னகையே இல்லாத கடூர முகத்தோடு மருத்துவப் பேராசிரியர் வாட்டுக்குள் நுழைந்ததும் அத்தனை பேரும் முகங்கள் வாடிப்போய் அச்சத்தோடு அவரைப் பார்த்தார்கள். அவருடைய கண்களில் முதன்முதலில் பட்டது யுக்ஸியி தான். எல்லோரும் குட்மோனிங் சேர் என்று சொல்ல அவர் அதனைக் கவனியாதது போல் யுக்ஸியியை நோக்கி ‘எங்கே உன் நோயாளியின் திருஷடாந்தத்தை சொல்லு’ என்றதும் யுக்ஸியி கதிகலங்கிப் போனான். அவனுக்கென்று ஒதுக்கப் பட்ட நோயாளிக்கு காய்ச்சல், தொடர்ச்சியான வாந்தியுடன் வயிற்று நோவும் இருந்தது. நெருப்புக் காய்ச்சலாக இருக்க கூடும் என்ற சந்தேகத்தில் அனுமதிக்கப்பட்டிருந்தார் நோயாளி.

யுக்ஸியி நாக்குழறியபடியே ஆரம்பித்தான்.
“வாந்தியும் காய்ச்சலும்”
“மேலே சொல்லு”
“வாந்தியும் காய்ச்சலும் மூன்று நாட்கள்”
“மேலே சொல்லு”
“வாந்தி மூன்று நாட்கள், காய்ச்சல் மூன்று நாட்கள்”
பேராசிரியர் முகம் ஜிவ்வென்று சிவந்தவராக “இவ்வளவுதானா நீயெடுத்த விவரங்களின் இலட்சணம்?” என்று கேட்டார்.
“ஆம் சேர்”
“வேறு ஒன்றும் எடுக்கவில்லை”
“ஆமாம் சேர்” கோபம் தலைக்கேறிய பேராசிரியர் அங்கே நின்ற ஏழு மாணவர்களையும் கொலை செய்யும் முனைப்போடு பார்க்க எல்லோரும் வெடவெடுத்துப் போய் அவரைப் பார்க்க “வெட்கங் கெட்ட கோவேறு கழுதைகளா, ஏன் முகத்தைப் பார்த்துக்கொண்டு நிற்கிறீர்கள்? இப்போதே வாட்டைவிட்டு வெளியேறி விடுங்கள்” என்று பொரிந்து தள்ளினார் பேராசிரியர். அடுத்தகணமே தலையைத் தொங்கப் போட்டுக்கொண்டு ஏழு மாணவர்களும் ஒருவர் பின் ஒருவராக வெளியேறினார்கள். வெளியே வந்த யுக்ஸியிக்கு நிறைய கசப்பு மருந்துகளும், ஊசிமருந்துகளும் காத்திருந்ததோடு அவனைப் பின்னி

எடுத்த மற்றைய ஆறு மாணவர்களும் பிரபஞ்சத்திலுள்ள அத்தனை மிருகங்களினதும் பெயரைச் சொல்லி அவனைத் திட்டினார்கள்.

மருத்துவப் படிப்பை விட்டுவிடுவோமா என்று யோசித்தான் யுக்ஸியி. யுக்ஸியி மேனியிலிருந்து சுரந்த வியர்வையெல்லாம் வடிந்தோடிய பின், உலர்ந்த நாவு ஈரலிப்பாகிய பின், படபடத்த இதயம் சாதாரண நிலைமைக்கு திரும்பியபின் இரக்கமுள்ள சக மாணவாகள் அவனருகிலே வந்து நோயாளியிடமிருந்து திருஷ்டாந்தம் எடுக்கும் பகுதியை வாசித்துக் காட்டினார்கள். நோயாளியின் பெயரிலிருந்து ஆரம்பித்து ஆணா, பெண்ணா, வயது, தொழில் போன்ற விபரங்களோடு தொடர்ந்த அந்தப் பகுதி அதன் அடுத்த கட்டமாக நோயாளி சொல்லும் அறிகுறிகள், எப்போது அறிகுறி ஆரம்பித்தது, தொடர்ந்து இருக்கின்றதா? இடைக்கிடை வருகின்றதா? எந்தக் காரணத்தால் அறிகுறி உக்கிரமடைகின்றது? எக்காரணியால் இலேசாகின்றது என்று அழகாக கோர்வைப்படுத்தி புரிய வைத்தான் ஒரு மாணவன்.

அடுத்த நாள் மருத்துவப் பேராசிரியர் விடுதிக்குள் நுழைந்து எல்லா மாணவர்களும் "குட்மோனிங் சேர்" என்று காலை வந்தனம் சொல்லிய பின் முந்தைய நாள் நடந்த தவறுக்காக அத்தனை மாணவர்களும் அவரிடம் மன்னிப்புக் கேட்க பேராசிரியரும் 'ம்......ம் சரி சரி' என்று தலையசைத்து விட்டு யுக்ஸியிடம் புதியதொரு நோயாளியை சுட்டிக்காட்டி திருஷ்டாந்தம் எடுக்கும்படி உத்தரவிட்டார். யுக்ஸியி ஆரம்பித்தான். "உங்கள் பெயர் என்ன?" நோயாளி பெயரைச் சொன்னான். "வயது என்ன?" நோயாளி வயதைச் சொன்னான். "நீங்கள் ஆணா? பெண்ணா?" யுக்ஸியி இந்தக் கேள்வியை நோயாளியிடம் தொடுத்த அதே நிமிடம் விடுதி முழுவதும் வெடிச் சிரிப்பு பரவ என்றுமே சிரித்தறியாத மருத்துவப் பேராசிரியர் கூட சிரித்து விட்டார்.

அடுத்த ஒரு வாரத்திற்கு யுக்ஸியி விரிவுரைகளுக்குகோ, ஆஸ்பத்திரிக்கோ செல்லாமல் தன்னுடைய அறைக்குள்ளேயே முடங்கிக் கிடந்தான். எதுவுமே சாப்பிடவில்லை; தண்ணீர்கூட இல்லை. தொண்டைக் குழியில் எதுவும் இறங்க மறுத்தது. ஏழாவது நாள் காலையிலே அழைப்புமணிச் சத்தம் கேட்டு கதவைத் திறந்தவன் அப்படியே திகைத்து விட்டான். அங்கே பேராசிரியர் கையிலே பார்சலோடு நின்று கொண்டிருந்தார். அந்தப் பார்சலை அவர் யுக்ஸியிடம் நீட்ட அவன் தயக்கத்தோடு அதனை வாங்கிக் கொண்டான். இப்போது அவருடைய மேசையிலே அழகிய பேழைக்குள்

வீற்றிருப்பது இருபது வருடங்களுக்கு முன் அவர் தங்க பைண்டு செய்து கொடுத்த அந்தப் புத்தகம் தான்.

“இலக்கம் இருபது” என்று தாதி கூப்பிட்டதும் ஜெல் தேய்த்து, நடுவில் வகிடு எடுக்கப்பட்டு, கேசம் பின்னால் வாரப்பட்டு கம்பீரமாகக் காட்சியளித்த அழகான வாலிபன் உள்ளே நுழைந்தான். அவனின் முகத்திலும், கைக்கடிகாரத்திலும், ஆடையிலும், சப்பாத்துக்களிலும் செல்வச் செழிப்பின் சாயல் டாண்டாண் என்று ஜொலித்தது.
“குட்ஆப்டநூன் டாக்டர் யுக்ஸியி”
“குட்ஆப்டநூன்”
“உங்களைப் பற்றி நிறையக் கேள்விப்பட்டிருக்கிறேன். எல்லோரும் உங்களைப் புகழ்ந்து பேசுகிறார்கள். என்னுடைய நண்பன் உங்களைச் சிபார்சு செய்ததால் வந்தேன்”
“உங்கள் பாராட்டுரைக்கு நன்றி. வந்த விஷயத்தைச் செல்லுங்கள்”
“நான் ஜூவன் வயது 25”
“மேலே சொல்லுங்கள்”
சிறிது நேரம் தயங்கிய ஜூவன் பேச ஆரம்பித்தான். “டாக்டர் என் விரல் நகக்கண்களில் யாரோ ஊசியை ஏற்றுவதுபோல் ஒருவலி. என்னால் தாங்க முடியவில்லை. சிலவேளை விரல்கள் எல்லாம் மரத்துப் போவது போலவும் ஓருணர்வு” என்றான் நோயாளி.
“எத்தனை நாட்களாக உங்களுக்கு இந்தப் பிரச்சினை இருக்கிறது?”
“இரண்டு வாரங்கள் இருககும்”
“வலி விட்டு விட்டு வருகிறதா, தொடர்ச்சியாக வருகிறதா?”
“இடைக்கிடை வந்து போய்கொண்டிருக்கிறது, டாக்டர்”
“காய்ச்சல், தலையிடி ஒன்றுமில்லை?”
“இல்லை”
“நீரிழிவு பிரஷர் என்று எதுவுமில்லை?”
“இல்லை”

ஜூவனின் இதயம், நுரையிரல், நாடித்துடிப்பு, நரம்புகள், கண்கள், காது, வயிறு, ஈரல் என்று முழுப் பரிசோதனையை செய்து முடித்த டாக்டர் யுக்ஸியி பிறகு நோயாளியைப் பார்த்து “ஜூவன் நீங்கள் பயப்படக்கூடிய நோய் எதுவுமில்லை. இது சாதாரண விற்றமின் குறைபாடுதான். நல்ல விற்றமின் ஒன்று எழுதித் தருகிறேன். தொடர்ந்து இரண்டு வாரங்கள் சாப்பிட்டு வந்தால் எல்லாம் சரியாகி விடும்” என்றார். “டாக்டர், நான் நன்றாகத் தான் சாப்பிடுகிறேன். எனக்கெப்படி விற்றமின் குறைபாடு ஏற்பட்டது, நம்பமுடியவில்லையே” என்று ஆச்சரியப்பட்டான் ஜூவன். “திரு ஜூவன் புரிந்து கொள்ளுங்கள், எவ்வளவு சாப்பிடுகிறோம் என்பதல்ல முக்கியம். எதனைச் சாப்பிடுகிறோம் என்பதில்தான் சிக்கல் இருக்கின்றது. உடம்புக்கு அத்தியாவசியமான விற்றமின் ஒன்றை நீங்கள் தவிர்ந்து

வந்திருக்கிறீர்கள். அதுதான் உங்களுக்கு ஏற்பட்ட விற்றமின் குறைபாடு” என்று விளக்கமளித்தார் யுக்ஸியி. இரண்டு வாரங்கள் கழிந்த பின் ஜூவன் மீண்டும் வந்தான். இப்போது நோயாளியின் முகத்திலிருந்த ஜொலிப்பும் குறைந்து போய் கம்பீரமான நடையில் தளர்வையும் அவதானித்தார் யுக்ஸியி. “டாக்டர் நீங்கள் எழுதித்தந்த மாத்திரைகள் முடிந்து விட்டன. என்னுடைய நோய் குறைந்தபாடில்லை” என்றான் நோயாளி.

யுக்ஸியி மற்ற டாக்டர்களைப் போல் ஒருவர் அல்லர். எந்த நோயாளிக்கும் ஒருமுறை தான் மாத்திரை எழுதிக் கொடுப்பார். அதற்குப் குணமடையவில்லையென்றால் விஷேட வைத்திய நிபுணரிடம் அனுப்பிவிடுவார். அதற்கென்று அவரிடம் பதிவுப் புத்தகம் இருந்தது. அந்த பதிவுப் புத்தகத்தை எடுத்து மூக்குக் கண்ணாடியூடாக நோட்டமிட்ட டாக்டர் யுக்ஸியி “திரு ஜூவன் கவலைப்பட வேண்டாம். எனக்குத் தெரிந்த Neurologist இருக்கிறார். கடிதம் ஒன்று எழுதித் தருகிறேன். அவரிடம் கொண்டுபோய் காட்டினீர்ர்கள் என்றால் எல்லாம் சரியாகி விடும்” என்றார் யுக்ஸியி.
“Neurologist என்றால் என்ன அர்த்தம் டாக்டர்”
“நரம்பு சம்பந்தமான விஷேட நிபுணர்”
“எனக்கு நரம்பு வியாதியா உண்டாயிருக்கிறது டாக்டர்?”
“நான் அப்படிச் சொல்ல வரவில்லை. அதுவா இல்லையா என்பதை முடிவு செய்வதற்கத்தான் நான் உங்களை அனுப்புகிறேன்” என்றார் யுக்ஸியி.

சரியென்ற ஜூவன் ஒரு மாதம் கழித்து திரும்பி வந்தான். “நரம்பியல் நிபுணரைச் சந்தித்தீர்களா?” என்று கேட்டார் யுக்ஸியி. ஆமென்று தலையாட்டிய நோயாளி பைல்கட்டைத் தூக்கி டாக்டரின் மேசையிலே போட்டான். EEG, EMG, MRI, CATS SCAN என்று நிறைய பரிசோதனை அறிக்கைகள்.
“உங்கள் நோய் இப்போது குணமாகி விட்டதா?”
“எனக்கு எந்த விதமான நரம்பு வியாதியுமில்லை என்று டாக்டர் சொல்லி விட்டார்”
“நல்லது இப்போது எதற்காக வந்திருக்கிறீர்கள்?”
“புதுப் பிரச்சினை டாக்டர். அடிவயிற்றிலிருந்து மேல்நெஞ்சை நோக்கி ஏதோ உருண்டு திரண்டு வருவது போல் உணர்வு. இரண்டு நாட்களாக மிகவும் அவதிப்படுகிறேன் டாக்டர்”
“மேல் வயிற்றினுள் நெருப்புச் சுடுவது போல் ஓர் எரிவுக் குணம் உண்டாகிறதா?”
“ஆம்”
“இரவு நடுநிசியிலும் நெஞ்சுக்குள் எரிவு ஏற்படுகின்றதா?”
“ஆம்”

“பசியிருக்கின்ற வேளைகளில் எரிவுக்குணம் கூடுவது போல் உணர்கின்றீர்களா?”
“ஆமாம் டாக்டர்”
“பயப்பட வேண்டாம், இது சின்ன விடயம். உங்களுக்கு கொஞ்சம் அல்சர் குணம் இருக்கிறது. ஆரம்பக் கட்டம் தான், சுகப்படுத்திவிடலாம். நான் மாத்திரைகள் எழுதித் தருகிறேன். உறைப்புச் சேர்ந்த, எண்ணெய்ப் பட்சணங்களை தவிர்த்து கொள்வது நல்லது. இரண்டு வாரங்களில் என்னை வந்து பாருங்கள்” என்றார் டாக்டர்.

“டாக்டர் கொஞ்சம் கூடக் குறையவில்லையே” என்று சொல்லிக்கொண்டே இரண்டு வாரங்கள் கழித்து மீண்டும் நோயாளி வந்ததும் நிபுணர்களின் பதிவுப் புத்தகத்தை எடுத்து பெயர்களை வாசித்துக் கொண்டே வந்த யுக்ஸியி “கண்டுபிடித்து விட்டேன். எனக்கு தெரிந்த Gastroenterologist இருக்கிறார். அவரைப் போய்ச் சந்தியுங்கள். உங்கள் நோய் விரைவில் குணமடைந்து விடும்” என்றார். “Gastroenterologist என்றால் யார்?” என்று கேட்டான் ஜுவன். “இரப்பை, குடல் சம்பந்தமான விஷேட நிபுணர்” ஒருமாதம் கழித்து நோயாளி மீண்டும் வர “நான் சொன்ன டாக்டரைப் சந்தித்தீர்களா?” என்று கேட்டார் யுக்ஸியி. ஜுவன் ஒன்றும் பேசாமல் ஒரு கற்றை தஸ்தாவேஜுகளை யுக்ஸியிடம் கையளித்தான். Enzyme Studies, Ba Meal, US Scan, Biopsy Report, Endoscopy Reports இத்தியாதி இத்தியாதி.
“உங்கள் வயிற்றிலுள்ள எரிவுக்குணம் குறைந்து விட்டதா, ஜுவன்?”
“ஓரளவு நன்றாகத்தான் இருக்கிறேன். இப்போது வேறொரு பிரச்சினை முளைத்துள்ளது” “சொல்லுங்கள்”
“அதிக நேரம் நின்றால் பாதத்திலிருந்து இடுப்புவரை ஏதோ ஊர்ந்து செய்வது போல் உணர்கிறேன். நடப்பதும் சிரமமாக இருக்கிறது”
“நிற்பதைக் குறைத்துக் கொள்ளுங்கள்”
“அப்படியும் செய்து பார்த்தேன் டாக்டர். குறைந்தபாடாகத் தெரியவில்லை. அத்தோடு கால்வலி வேறு”
“திரு ஜுவன் நீங்கள் யோசிக்க வேண்டாம். இது சின்னப் பிரச்சினைதான். நல்ல வலி நிவாரணியொன்று எழுதித் தருகிறேன். வாங்கிப் பாவித்து விட்டு இரண்டு வாரத்தில் சொல்லுங்கள்” என்று மாத்திரைகளை எழுதிக் கொடுத்தார் டாக்டர் யுக்ஸியி.

இரண்டு வாரங்கள் கழித்து மீண்டும் திரும்பி வந்த நோயாளியின் முகம் கவலையில் ஆழ்ந்திருந்தது.
“டாக்டர் நீங்கள் தந்த மருந்துகளால் எந்தப் பிரயோசனமும் இல்லையே. திமிர்வும் வலியும் அப்படியேதான் இருக்கிறது”

“கவலைப்படாதீர்கள்” என்று சொன்ன யுக்ஸியி மீண்டும் நிபுணர்களின் பதிவுப் புத்தகத்தை புரட்டினார்.
“எனக்குத் தெரிந்த Vascular Surgeon இருக்கிறார். மிகவும் கெட்டிக்காரர். உங்கள் நோயை பூ என்று சொல்வதற்கிடையில் குணப்படுத்தி விடுவார்”
“Vascular Surgeon என்றால் யார்?”
“நாடி, நாளம், இரத்தவோட்டம் சம்பந்தமான விஷேட நிபுணர்”

ஒருமாதம் கழித்து மீண்டும் வந்த நோயாளியிடம் “ஜுவன், உங்கள் கால் நோய் சுகமடைந்து விட்டதா?” என்று யுக்ஸியி கேட்க பைல்கட்டை டாக்டரின் மேசை மீது தூக்கிப் போட்ட நோயாளி “Vascular Surgeon எனக்கு எந்தப் பிரச்சினையுமில்லை என்று கூறி விட்டார்” என்றான்.
“எல்லா பரிசோதனைகளும் செய்தாரா?”
“ம்……. நிறையச் செய்து என்னைத் திக்குமுக்காடச் செய்துவிட்டார்”
“இப்போது ஏன் வந்தீர்கள் திரு ஜுவன்?”
“இப்போது பெரிய நோயொன்றால் அவதிப்படுகிறேன் டாக்டர்”
“சொல்லுங்கள்”
”ஏதாவது வேலையைச் செய்ய ஆரம்பித்தால் இதயம் நின்றுவிட்டதோ என்று பயப்படுமளவுக்கு உடம்பு படபடக்கிறது. அதனால் எந்த வேலையையும் இஷ்டப்படி செய்ய முடியாமல் அவதிப்படுகிறேன் டாக்டர்”

“இந்தச் சின்ன பிரச்சினைக்காகவா இவ்வளவு கவலைப்படுகிறீர்கள்? கொஞ்சம் relax ஆக இருக்க வேண்டும். Tension ஆவதைக் குறைத்துக் கொள்ளாவிட்டால் அது மன அழுத்தத்தில் கொண்டு போய்விடும். நான் மாத்திரை எழுதித் தருகிறேன். இரவில் ஒவ்வொன்று விழுங்க வேண்டும். காலையில் உடற்பயிற்சி செய்யுங்கள். நிறையக் காய்கறிகள், பழங்கள் சாப்பிடுங்கள், எல்லாம் சரியாகி விடும்”
“இரண்டு வாரங்கள் கழித்து மீண்டும் வரவேண்டுமா டாக்டர்?”
“குறைந்தால் வரவேண்டிய தேவையில்லை”

இரண்டு வாரங்களில் மீண்டும் வந்த நோயாளி “வருத்தம் குறையவில்லை டாக்டர், உங்களுக்கு தெரிந்த நல்ல டாக்டர்கள் இருந்தால் கடிதமொன்று எழுதித் தாருங்கள், போய்க் காட்டிவிட்டு வருகிறேன்” என்று கேட்க “கெட்டிக்கார endocrinologist ஒருவர் இருக்கிறார், இன்றோடு பிரச்சினை தீர்ந்துவிட்டதென்று நினைத்துக் கொள்ளுங்கள்” என்றார் யுக்ஸியி.
“endocrinologist என்றால் யார் டாக்டர்”

“endocrinologist என்றால் ஹோர்மோன்கள், உடற்றொழிலியல் தொடர்பான விஷேட நிபுணர். உங்களுக்கு ஏற்பட்டிருக்கின்ற இந்த படபடப்பு, பதைபதைப்பு எல்லாவற்றிக்கும் காரணம் ஹோர்மோன்களில் ஏற்பட்டுள்ள சமச்சீரின்மை ஆகும்” என்றார் யுக்ஸியி. நோயாளியும் விளங்கியும் விளங்காததுமாக தலையை ஆட்டினான்.

நோயாளி ஜூவன் இப்படியே போவதும் வருவதுமாக இருக்க யுக்ஸியிக்கு ஜூவனைக் கண்டாலே எரிச்சலாக வந்தது. மருத்துவ நிலைய தாதியருக்கும் அலுத்து விட்டது. ஏனைய ஊழியர்களும் அலுத்துப் போனார்கள். நோயாளி தங்களையெல்லாம் ஏமாற்றிப் போக்குக் காட்டுவது போல் அவர்களுக்குத் தோன்றிற்று. ஒவ்வொரு முறையும் ஒவ்வொரு குணங்குறிகளோடு போய் டாக்டர்களை ஏமாற்றும் Münchausen syndrome என்றொரு நோய் இருக்கிறது. யுக்ஸியி முடிவு செய்தார். இவனுக்கும் இந்தப் பொல்லாத நோய்தான் பீடித்திருக்கிறது. அடுத்த முறை நோயாளி வந்தால் நோயாளிக்கு நல்லதொரு பாடம் படிப்பிக்க வேண்டும் என்று ஆவலோடு காத்திருந்தார் டாக்டர் யுக்ஸியி.

எதிர்பார்த்த படியே நீண்ட நாட்களின் பின் ஜூவன் திரும்பி வந்தான். வாலிபனான அவன் இப்போது வயது முதிர்ந்த கிழவனைப்போல் தோற்றமளித்தான்; அழகான கன்னங்கள் சுருங்கிப் போய் கேசம் பரட்டையாகி அவலட்சணமாக இருந்தான்; அங்குமிங்கும் வியர்வை திட்டுகள் அப்பி காணப்பட்டான்; அவனுடைய கால்கள் தள்ளாடின; கைகள் சூம்பிபோயிருந்தன. உண்மையில் அவனுக்கு ஏதாவது நோயிருக்கக் கூடுமோ என்று டாக்டருக்கே சந்தேகம் வந்தது.

“Good Afternoon டாக்டர்”
“Good Afternoon” நோயாளி இந்த முறை பைல்கட்டு எதுவுமே கொண்டு வரவில்லை. அதற்குப் பதிலாக அவனுடைய கரங்களிலே அழகான டயறி இருந்தது. மூக்குக் கண்ணாடி அணிந்து நோயாளியைப் பரிசோதிக்கும் டாக்டர் ஒருவரின் படத்தைப் அதிலே போட்டிருந்தார்கள். “என்னப்பா புதுசா டயறி, என்ன விஷேசம்?”
அவன் டயறியை டாக்டரிடம் நீட்டினான்.
“டாக்டர் நான் கொஞ்சம் காலம் வராமல் இந்த டயறியைத் தான் படித்துக் கொண்டிருந்தேன். இந்த டயறியிலே எல்லா விஷேட நிபுணர்களின் பெயர் விபரங்களைப் போட்டிருக்கிறார்கள்” “ஆமாம் அதற்கென்ன இப்போது?”
“ஒருவிடயம் எனக்குப் புரியாமல் இருக்கிறது டாக்டர்”
“தாராளமாகக் கேளுங்கள்”

“நீங்கள் இந்த டயறியில் இருக்கக் கூடிய எல்லா வைத்திய நிபுணர்களிடமும் என்னை அனுப்பியிருக்கிறீர்கள். ஆனால் ஒருவருமே எனக்கு இன்ன வியாதிதான் என்று இதுவரை கண்டு பிடிக்கவில்லை. ஆனால் நீங்கள் ஒருவரைத் தவறவிட்டு விட்டீர்கள் டாக்டர். அவரிடம் என்னை அனுப்பினால் என்ன?” என்று பேசிவிட்டு நிறுத்தினான் நோயாளி. “தவறவிட்டு விட்டேனா யார் அது?” என்று யுக்ஸியி கண்களை அகல விரித்தபடி கேட்க “Gynaecologist” என்று பதிலளித்தான் நோயாளி.

அதைக் கேட்டதும் மருத்துவ நிலையத்தில் பணியாற்றும் ஊழியர்கள் மட்டுமல்ல வந்திருந்த நோயாளிகள் அனைவருமே சிரிக்க வெட்கித்த நோயாளி “ஏன் டாக்டர் எல்லோரும் சிரிக்கிறார்கள்?” என்று கேட்டான். “Gynaecologist பெண் நோயியல் சம்பந்தப்பட்ட நிபுணர். உன்னை எப்படி அவரிடம் அனுப்புவது?” என்று கேட்டார் யுக்ஸியி. நோயாளி சற்று யோசித்தவாறு “அதற்கேன் சிரிக்க வேண்டும் டாக்டர்? நீங்கள் என் மனைவியை அவரிடம் அனுப்பி நோயைக் கண்டுபிடிக்கலாம் தானே” என்றான். யுக்ஸியி கடுஞ்சினத்துடன் “என்னுடன் என்ன விளையாடுகிறாயா?” என்று கேட்டார்.

“டாக்டர் நான் சொல்வதைக் கொஞ்சம் கேளுங்கள்”

“நீ எதுவும் சொல்ல வேண்டியதில்லை. நான் உன்னை விட மெத்தப்படித்தவன், அதைத் தெரிந்து கொள்”

“டாக்டர் தயவுசெய்து நான் சொல்வதைக் கேளுங்கள்”

“என் கண்முன்னே நிற்காதே, இங்கிருந்து ஓடிப் போய்விடும்” என்று யுக்ஸியி பொரிய காலில் பிடறி அடிபடஅடிபட நோயாளியும் அங்கிருந்து ஓடிப்போனான்.

இத்துடன் நோயாளி தொலைந்து போனான் என்று மருத்துவ நிலையத்தில் இருந்த அத்தனை பேரும் நிம்மதிப் பெருமூச்சு விட்டு கொண்டிருந்த வேளையில் கொஞ்ச நாள் கழித்து நோயாளி மீண்டும் திரும்பி வந்தான்.

“போன தடவை நடந்த சம்பவத்திற்காக என்னை மன்னித்துக் கொள்ளுங்கள் டாக்டர். என் மனைவியோடு கதைத்துச் சிலவேளை நோயைக் கண்டுபிடித்துவிடலாமென்று நான் முட்டாள்தனமாக நினைத்து விட்டேன்”

“பரவாயில்லை, மனிதன் தவறுவிடுவது இயல்பு. நீ உன் தவறை ஒப்புக் கொண்டாயே, அதுவே பெரிய விஷயம்” என்றார் யுக்ஸியி.

“கேட்கிறேனென்று கோபிக்க வேண்டாம் டாக்டர், எனக்கிருக்கின்ற உண்மையான வியாதியைச் சொல்லி விட்டீர்களென்றால் நிம்மதியாக வீட்டுக்குப் போய் விடுவேன்”

வெடிக்கப் புறப்பட்ட கோபத்தைச் சிரமத்துடன் அடக்கிய யுக்ஸியி "ஜுவன் அவர்களே, உங்களுக்கு ஏற்பட்டுள்ள நோயை நான் சொன்னால் பயந்துவிடுவீர்கள் என்று நினைத்துத் தான் நான் இவ்வளவு நாளும் உங்களிடம் சொல்லவில்லை" என்றார்.

"நீங்கள் பயப்படாமல் சொல்லுங்கள் டாக்டர். நோயைக் கண்டுபிடித்து விட்டீர்களே அந்தச் சந்தோஷத்திலேயே போய்விடுகிறேன்" என்றான் நோயாளி. "அந்த நோயின் பெயர் அதிதுடிஇமை குணாம்சம்" என்றார் யுக்ஸியி. அவன் குழப்பத்துடன் டாக்டரைப் பார்த்து "டாக்டர் இப்படி ஒரு நோயை நான் கேள்விப்பட்டதில்லையே" என்றான். "நீ நிச்சயமாக கேள்விப்பட்டிருக்க மாட்டாய். ஏனென்றால் காய்ச்சல் போல், வயிற்று வலியைப் போல் எல்லோரையும் பீடிக்காத இது அபூர்வமான ஒரு நோய்" என்று சொன்ன யுக்ஸியி நோயாளியை அழைத்துப் போய் அங்கிருந்த நிலைக்கண்ணாடி முன்னால் நிறுத்தினார்.

"ஜுவன் கண்ணாடியில் உங்கள் முகத்தைப் பாருங்கள்"

"என் முகம் தெரிகிறது. வேறொன்றும் காணவில்லையே"

"நன்றாகப் பாருங்கள்"

"தெரியவில்லையே"

"உங்கள் கண்களை நன்றாக உற்றுப் பாருங்கள்"

"கண்கள் நன்றாகத்தானே இருக்கிறது"

"கண் இமைகள் மின்னிமின்னி மூடுவதும் திறப்பதும் தெரியவில்லையா?"

"தெரிகிறது. ஆனால் அது நோயில்லையே டாக்டர்"

"அது நோயில்லை என்றாலும் உங்கள் இமைகள் அளவுக்கு மீறி மூடுகின்றன, திறக்கின்றன" "ஆ..ஆமாம்..."

'இந்த நோயின் பெயர் தான் அதிதுடிஇமை குணாம்சம்"

"சந்தேகமில்லாமல் இது நோய்தானே"

"நான் டாக்டர் சொல்லுகிறேன். சந்தேகம் வேண்டாம், இது நோய்தான்"

"டாக்டர் கடைசியில் என்னுடைய நோயைக் கண்டுபிடித்து விட்டீர்கள். உங்களுக்கு எப்படி நன்றி சொல்வதென்றே தெரியவில்லை. இந்த நோயை குணப்படுத்த முடியுமா டாக்டர்?"

"நிச்சயமாக அதற்கென்று நிறைய நல்ல மாத்திரைகள் இருக்கின்றன"

"நீங்கள் எத்தனையோ வைத்திய நிபுணர்களிடம் அனுப்பினீர்கள் அல்லவா, அவர்களால் ஏன் என்னுடைய நோயைக் கண்டுபிடிக்க முடியாமல் போயிற்று?"

"ஜுவன், நீங்கள் சரியான மையத்திற்கு வந்துவிட்டீர்கள். இரத்தப் பரிசோதனையை செய்தோ, ஸ்கேன் பண்ணியோ இதனைக் கண்டுபிடிக்க முடியாது. டாக்டர் என்றால் மிகத் துல்லியமான முறையில் நோய் நிர்ணயம் செய்யும் ஆற்றல் இருக்க வேண்டும். மருத்துவ மொழியில் clinical acumen என்று சொல்லுவார்கள்" என்று

மிக நீளமாகப் பேசிய யுக்ஸியி மிக நீளமான மருத்துவ சிட்டை ஒன்றையும் நோயாளியிடம் கையளித்தார்.
“இத்தனை மாத்திரைகளும் விழுங்க வேண்டுமா டாக்டர்?”
“விழுங்காவிட்டால் நோய் எப்படிக் குணமடையும்? நீங்கள் இந்த மாத்திரைகளை மூன்று மாதங்கள் ஒழுங்காக எடுத்து வந்தால் வியாதியென்ற பேச்சுக்கே இடமிருக்காது” என்றார் யுக்ஸியி உறுதியான குரலில்.

நோயாளி மருத்துவ நிலையத்தை விட்டு வெளியேறியபின் “டாக்டர் அது என்ன புது வியாதி, இத்தனை வருடங்களாக நான் உங்களுடன் வேலை செய்து கொண்டிருக்கிறேன். இப்படியொரு நோயைக் கேள்விப்பட்டது இல்லையே” என்று கேட்டாள் தாதி.
“சில நோயாளிகள் இருக்கிறார்கள், அவர்கள் எப்படிப்பட்டவர்களென்றால் தங்களுக்கு நோயிருப்பதாக எண்ணிக் கொண்டு மருந்து தேடி அலைவார்கள். ஆங்கிலத்தில் அதனை hypochondriasis என்று அழைக்கிறோம். இவனும் அப்படிப்பட்ட நோயாளி தான். அவனுக்காகத்தான் இந்நோயை நான் கண்டுபிடித்தேன்”
“நீங்கள் சொல்வது புரியவில்லையே, டாக்டர்”
“அதி என்றால் விரைவான, இமை என்றால் கண் இமைகள், துடி என்றால் துடித்தல், குணாம்சம் என்றால் நோய்க்குறிகளின் தொகுப்பு. எல்லாம் சேரும்போது அதிதுடிஇமைகுணாம்சம்” என்று சிரித்தார் புக்ஸியி. “ஆகவே இந்தநோயாளி இனிமேல் டாக்டர் நோயைக் கண்டுபிடித்து விட்டார் என்ற சந்தோஷத்திலேயே வாழ்ந்து கொண்டிருப்பான்” என்றார் யுக்ஸியி.

ஒரு விடியற்காலை யாருமே எதிர்பாராத சம்பவம் நடந்தது. ஓடிவந்து மருத்துவ நிலையத்திற்குள் பிரவேசித்த ஓர் அழகான இளம்பெண் “டாக்டர், என் கணவரை காப்பாற்றுங்கள்” என்று கதறியவளாக யுக்ஸியியின் அறைக்குள்ளே அடாத்தாக நுழைந்தாள்.
“யார்நீ, இங்கே வந்து ஏன் காட்டுக்கூச்சல் போடுகிறாய்? நோயாளிகள் வரக்கூடிய இந்த இடத்தில் நீ அமைதியாகப் பேச வேண்டும்” என்று அதட்டும் தொனியில் கூறினார் யுக்ஸியி. “என்னை மன்னித்து விடுங்கள், டாக்டர். விஷயம் மிகமிக அவசரம் என்பதால் அப்படிப் புலம்பினேன். தயவுசெய்து என்னோடு கொஞ்சம் வாருங்கள். தூக்குக் கயிற்றை கூரையிலே மாட்டிக் கொண்டு என் கணவர் தற்கொலை செய்துகொள்ளப் போவதாக மிரட்டுகிறார்” என்றாள் இளம் பெண்.

“அதற்கு டாக்டராகிய நான் என்ன செய்வது? பொலிஸுக்கல்லவா நீங்கள் போகவேண்டும். அவர்களால் தான் உன் கணவரைக் காப்பாற்ற முடியும்” என்றார் யுக்ஸியி.

“டாக்டர் என்னோடு வாருங்கள் பிளீஸ். இது சிக்கலான பிரச்சினை. அங்கே வந்தால் எல்லாம் விளங்கிவிடும்” என்று சொன்ன இளம்பெண் பதிலை எதிர்பார்க்காமல் டாக்டரின் கையைப் பிடித்து தரதரவென்று இழுத்துக் கொண்டு ஓடினாள். அங்கு போனபோது எல்லாம் முடிந்திருந்தது. தூக்குக் கயிற்றில் கழுத்தை மாட்டி சாகப்போன அவனை அயலவர்கள் வந்து காப்பாற்றி ஆஸ்பத்திரியில் அனுமதித்திருந்தார்கள். அதிதீவிரசிகிச்சைப் பிரிவில் படுத்திருந்த அவனின் முகத்தைப் பார்த்தும் டாக்டருக்கு தூக்கிவாரியது, அவன் ஜுவன்.

“இவன் உன் கணவனா?”

“ஆம் டாக்டர், கொஞ்சக்காலம் இவர் பாலியல் பலவீனத்தால் பாதிக்கப்பட்டிருந்தார். எங்கள் விவாகம் கிட்டத்தட்ட முறியும் நிலைக்கு வந்துவிட்டது. விவாகரத்தை எதிர்கொள்ள முடியாமல் அவர் மனமொடிந்து போயிருந்தார். இன்று நீதிமன்றம் இறுதித்தீர்ப்பு அளிக்க இருந்தது” என்று தேம்பினாள் இளம்பெண்.

“இது நிறையப்பேருக்கு ஏற்படக்கூடிய சின்னப் பிரச்சினைதானே. டாக்டர் ஒருவரிடம் கலந்தாலோசித்து நல்லதொரு சிகிச்சை முறையைப் பின்பற்றியிருந்தால் எல்லாம் சரியாகி இருக்கும்” என்றார் டாக்டர் யுக்ஸியி.

‘இவருக்கு கொஞ்சம் கூச்சசுபாவம் உண்டு. உங்களிடம் பத்துத் தடவைகளுக்கு மேல் வந்திருக்கிறார். நீங்களும் நிறைய வைத்திய நிபுணர்களிடம் அனுப்பி வைத்திருக்கிறீர்கள். ஆனால் யாருமே அவருடைய விவாக வாழ்க்கையைப் பற்றியும், மனைவியைப் பற்றியும் எந்தக் கேள்வியுமே கேட்கவில்லை” என்று இளம்பெண் சொல்லிக் கொண்டு போக யுக்ஸியியிக்கு வியர்த்தது. எத்தனை பெரிய தப்பைச் செய்துவிட்டோம். அவள் சொல்வதெல்லாம் உண்மைதானே. அவனுடைய விவாக வாழ்க்கையைப் பற்றி நாம் இதுவரை ஒரு வார்த்தை கேட்டது கிடையாதே.

மருத்துவப் பேராசிரியர் தள்ளாடித் தள்ளாடி யுக்ஸியின் அருகில் வந்தார்.

“டியர் student, என்னை இங்கே எதிர்பார்க்கவில்லை தானே?”

“இல்லை சேர்”

“எங்கே நான் தந்த தங்கப்பேழை, அதைக் கொஞ்சம் போய்ப் பார்க்கலாமா?”

யுக்ஸியி ஒன்றும் புரியாதவராக "தாராளமாகப் பார்க்கலாம் சேர்" என்றார்.
"நீ அந்த நோயாளியிடம் இருந்து நோய் திருஷ்டாந்தம் எடுத்தாய், ஆனால் விவாக திருஷ்டாந்தம் எடுக்கவில்லை"
"ஆமாம்"
"அந்த நோயாளி இப்போது உயிருக்குப் போராடிக் கொண்டிருக்கிறான்"
"ஆம்"
"இந்தப் புத்தகத்தை இருபது வருடங்களாக நீ திறந்து பார்க்கவேயில்லை" யுக்ஸியி திடுக்குற்றுப் போனார்.
"எப்படி சேர், இப்படி அச்சொட்டாகக் கண்டுபிடித்தீர்கள்?"
"விவாக திருஷ்டாந்த பக்கங்களை நான் பிரித்தெடுத்து என்னுடன் வைத்திருந்தேன். நீ இதுவரை என்னைத் தேடிவரவே இல்லையே" என்று சொன்ன பேராசிரியர் தன்னுடைய சட்டைப் பையிலிருந்த அந்தப் பிரித்தெடுத்த பக்கங்களை மேசையிலே போட்டார்.
"ஒன்று சொல்கிறேன், நீ சரியான டாக்டர் கிடையாது. நோயாளி மரணித்து விட்டால் நீயும் தற்கொலை செய்துகொள்வது தான் நல்லது"



# அரசனும் அரசனும் நிறுவனம்

எம்.எம்.நௌஷாத்

என் மனைவியின் பெயர் மிகா. அவளுடைய நாயின் பெயர் ரிகா. அவளுடைய மகளின் பெயர் ஸிகா. என் மனைவியின் கதையை அவள்சொன்ன விடுகதையொன்றுடனாரம்பித்தால் நல்லது. அந்த விடுகதை இதுதான்.

“என் இமையிலும் இருக்கும், என் நாவிலும் இருக்கும், என் தொப்புளில் இருக்கும், என் கரங்களில் இருக்கும். அது என்ன?” நான் நெடுநேரமாக மண்டையைப் போட்டுக் குழப்பிவிட்டு அப்பாவித் தனமாக ‘இரத்த நாளங்கள்’ என்று சொல்ல கலகலவென்று சிரித்த மிகா வாயைத் திறந்து நாக்கை நீட்டினாள்; நாநுனியைத் துளைத்து வைர வளையமிருந்தது.தொப்புளைக் காட்டினாள்;தொப்புளைத் துளைத்து வைரவளையத்தைச் சொருகியிருந்தாள். இமையைக் காட்டினாள்; கண்ணிமைகளை ஊடறுத்து வைரவளையங்கள் மின்னின. சரியான விடை *வைரவளையம்*. என்னை நோக்கிய மிகா ‘இன்னும் விடுகதைகள் உண்டு கேட்கவா?’ என்றதும் ‘ஐயோ, வேண்டவே வேண்டாம்’ என்று ஓடிப்போனேன் நான். திருமணம் முடித்து ஓரிரண்டு நாட்களிலேயே என்னை ரபா என்று கூப்பிட ஆரம்பித்தாள் மிகா. என்னுடைய சரியான பெயர் ரம்பசுரகனாத். ‘அழகான என் பெயரை ஏன் இப்படி சுருக்கிச் சிதைத்து விட்டாய்?’ என்று கோபத்துடன் நான் கேட்க ‘உங்கள் பெயர் என்ன அழகாகவா இருக்கிறது? உண்மையான பெயரைச் சொல்லி அறிமுகப்படுத்தினால் என்ன புராதனகாலத்து மனிதரையா திருமணம்செய்திருக்கிறாய் என்று தோழிகள் கிண்டல் பண்ணுகிறார்கள்’ என்றாள் மிகா.

‘இன்னும் உண்டு’ என்றாள் மிகா. ‘வேறென்ன?’ என்று கேட்டேன் நான். ‘உங்களுக்கு நன்றாக ஆங்கிலம் பேச வருமா?’ ‘இதுவென்ன அர்த்தமில்லாத கேள்வி, ஆங்கிலத்தை நான் கரைத்துக் குடித்தவன்’ ‘சும்மா வாய்ச்சவடால் அடிக்காதீர்கள். உங்களின் ஆங்கில சொற்றொடர்கள் பிசிறுகின்றன, பேச்சு நடை நளினமாக இல்லை, சொல்வளம் கிடையாது, நா தடுமாறுகிறது, சிக்கலான வசனங்களை அமைக்கத் தெரியாமல் மேலும் கீழும் விழிக்கிறிர்கள்’ என்று குற்றசாட்டுகளை அடுக்கினாள் மிகா.

அவள் சொன்னது அத்தனையும் நூற்றுக்கு நூறு உண்மை என்பதால் நான் பதிலளிக்காமல் இருந்தேன். ‘கரடுமுரடான ஆங்கிலம் பேசுபவர்களை எங்கள் பரிபாஷையில் காட்டுமிராண்டிகள் என்போம்’ என்றதும் என்னிதயத்தில் சுருக்கென்று தைத்தது. என்னைத்தான் மிகா சுட்டுகிறாள்.

'அதற்கு நான் என்ன செய்வது? உங்களைப் போல் நான் ஆங்கிலப் பாடசாலையில் கற்கவில்லையே. நான் நாட்டுப்புறத்தான். கிராமத்துப் பாடசாலையில் படித்தேன். அங்கு ஆங்கிலமென்பது மருந்துக்கும் கிடையாது' என்றேன் நான். ஆனாலும் மிகா என்னை விடவில்லை. அடுத்தநாள் ஆங்கிலம் கற்பிப்பதற்கு வாத்தியாரினைக் கொண்டுவந்த என் மனைவி ஆங்கில இலக்கணத்தை கரைத்துக் குடித்த மகாகனவான் என்று அவரை எனக்கு அறிமுகப்படுத்தினாள். தோற்றத்தில் அவர் அப்படித்தான் எனக்குத் தெரிந்தார்; கோட்சூட் அணிந்திருந்தார்; பளபளக்கும் சப்பாத்து, கேசம் எண்ணெய் தேய்த்து, நடுவகிடு எடுத்து அழகாக வாரப்பட்டிருந்தது. முகத்தில் கற்றோரிடம் காணப்படும் ஆங்கிலக்களை. நல்ல வாத்தியார் தான்.

மாலை ஐந்து மணியானதும் நான் ஒடுங்கிப்போன சிஷ்யனாக அவர் முன்னால் போய் நிற்பேன். அவரோடு வேகமாக ஆங்கிலத்தில் நான் உரையாட வேண்டும். என்னுடைய எல்லா வாக்கியங்கிலும் வழுக்களிருப்பதாக அவர் என்னைப் பார்த்து திட்டுவார். என் மனைவியும் வாத்தியாருக்கு ஒத்தூதுவாள். வாத்தியாரின் கையில் பிரம்பு மட்டுமே இருக்கவில்லை. மற்றப்படி வாத்தியாருக்கே உரித்தான அத்தனை முரட்டுத்தனங்களும் இருந்தன. அவர் எனக்கு ஆங்கிலம் கற்பிப்பதை அக்கம்பக்கத்திலுள்ளவர்கள் வேடிக்கை பார்த்தார்கள். அவர் ஆங்கிலம் சொல்லித் தரும் முறையே அலாதியாக இருந்தது. வந்தும் வராதுமாக மூன்று கடினமான ஆங்கிலச் சொற்களைத் தருவார். மூன்றையும் உள்ளடக்கியதாக மூன்று நிமிடங்களுக்குள் வாக்கியம் அமைக்க வேண்டும். உதாரணமாக Greedy, Prairie, Enchantment. நான் திணறுவேன். வாத்தியார் என்னைக் கடிவார்; மிகா ரசிப்பாள். அல்லது தொலைக்காட்சியின் விளையாட்டு அலைவரிசையைத் திறந்து விடுவார். நான் ஆங்கிலத்தில் நேர்முக வர்ணனை செய்ய வேண்டும். படகோட்டப்போட்டி, நீச்சல், பாரந்தூக்குதல், பனிச்சறுக்கு விளையாட்டு என்று இத்தனைப் போட்டிகளுக்கும் கலைச் சொற்களை கண்டுபிடித்து வர்ணனை செய்து முடிவதற்குள் வேண்டாம் வேண்டாம் என்றாகிவிடும். அப்படியுமில்லாவிட்டால் கதை சொல்லுவார். பூசணிக்காயை வாங்கி வந்தேன்; பிளந்தேன்; கண்களைக் கசக்கியபடி அதற்குள்ளிலிருந்து ஒரு மனிதன் வந்தான்; அவன் குள்ளமாக இருந்தான். இரதகஜதுரகபதாதிகர்களே யுத்தத்திற்கு தயாராக இருங்கள் என்று அவன் கூச்சலிட்டான். படையினர் புஜங்களை நிமிர்த்தியபடி கம்பீரமாக அணிவகுத்து வந்தார்கள். ஆங்கிலத்தில் மொழி பெயர்த்துப் பார்த்தால் தெரியும், அவ்வளவு கடினமான பயிற்சி.

இப்படியாக பேச்சு ஆங்கிலம் கற்கப்போய் பலதும் கற்ற பண்டிதனானேன் நான். ஆறுமாத சிறை வாழ்க்கை ஒருநாள் முடிந்தபோது 'மிகா உன் கணவரைக் குறித்து இப்போது தாராளமாக சந்தோஷப்பட்டுக் கொள்ளலாம். அவர் இனிமேல் ஆங்கிலக் கனவானைப் போல் சரளமாக ஆங்கிலம் பேசவார்' என்று வாத்தியார் பிரகடனம் செய்ய இந்த வாக்குமூலத்தைக் கேட்டவுடன் மிகா அப்படியே பூரித்துப் போனாலும் கடைகண்ணிக்குச் சென்ற அவள் ஒருநாள் வாட்ட முகத்தோடு வீடு திரும்பி, வந்தும் வராததுமாக 'நீங்கள் என்ன கம்பனியில் வேலை பார்க்கிறீர்கள்?' என்று கேட்டாள்.

'அர்த்தமில்லாத கேள்வி'

'விதண்டா வாதம் வேண்டாம், சொல்லுங்கள்'

'Zintage Detergents Limited'

'கம்பனியைக் கொண்டுபோய் குப்பையில் போடுங்கள்'

'மிகா என்ன நேர்ந்துவிட்டது? இது நான் வேலை பார்க்கும் கம்பனி'

'இந்தக் கம்பனி நமக்கு சரிப்பட்டுவராது. இராஜினமாக் கடிதம் கொடுத்து விடுங்கள்' 'குழந்தைத்தனமாக கதைக்கிறீர்கள். இந்நிறுவனத்தில் பத்து வருடங்களாக நான் பணிபுரிகிறேன். இதுவரை எந்தச் சிக்கலும் இல்லை. MD நல்ல மனிதர். நான் எதற்காக விலக வேண்டும்?' 'நீங்கள் வேலை செய்கிறீர்களே இந்தக் கம்பனி, இதற்கு சமூகத்திலே எந்தவிதமான அந்தஸ்தும் கிடையாது. அங்கே பணி செய்பவர்ளுக்கும் துட்டுமதிப்பு கிடையாது'

'ஏன் அர்த்தமில்லாமல் உளறுகிறீர்கள்?'

'நானா உளறுகிறேன்? நாளைக்கு என்னையும் உங்கள் கம்பனிக்கு அழைத்துச் செல்லுங்கள் உங்கள் கம்பனியின் இலட்சணத்தை உங்களுக்குக் காட்டுகிறேன்' என்று பொரிந்து தள்ளினாள் மிகா.

மிகா பிடிவாதக்காரி. அடுத்த நாள் அவளையும் அழைத்துக் கொண்டு அலுவலகம் போனேன். என்னோடு மனைவியை பார்த்தவுடன் ஆச்சரியப்பட்டு அலுவலக நண்பர்கள் எங்களைச் சூழ்ந்துகொண்டு குசலம் விசாரித்தார்கள். நண்பர்கள் கலைந்தவுடன் அருகில் வந்த மிகா 'பார்த்தீர்களா உங்கள் நண்பர் குழாம்? அலுவலக etiquette தெரியாத காட்டுக்கூட்டம்' என்று இளக்காரமாகச் சொன்னாள்.

'அவர்களில் என்ன பிழை? மிகவும் அழகாகத் தானே ஆடை அணிந்துள்ளார்கள்'

'எவராவது ஆங்கிலத்தில் உரையாடினார்களா?'

'இல்லை'

'எவராவது Tie அணிந்திருக்கறார்களா?'

'இல்லை'

'எவராவது சப்பாத்து போட்டிருக்கீறார்களா?'

'இல்லை' மனைவி என்னைத் தரதரவென்று இழுத்துக் கொண்டு முகாமைத்துவ பணிப்பாளர் அறைக்குப் .போனாள். தூக்குமேடைக்கு கைதியை அழைத்துச் செல்வதுபோல் அவளுடைய நடத்தை இருந்தது.

'good morning sir'
'good morning' இவள் என்னுடைய மனைவி என்று மிகாவை அறிமுகப்படுத்த MD புன்னகைத்தார்.
'ஆசனங்களில் அமருங்கள்'

கையிலிருந்த கைப்பை விழுவதுபோல் பாசாங்குகாட்டி கீழே போட்டுவிட்டு 'எடுங்கள் என் கைப்பையை' என்று எனக்கு கட்டளையிட்டாள் மிகா. நான் குனிந்தவுடன் அவளும் குனிந்து 'உங்கள் BOSSஇன் சப்பாத்தைப் பாருங்கள்' என்று காதிற்குள் கிசுகிசுத்தாள். வீடுவந்து சேர்ந்தவுடன் 'எதற்காக BOSSஇன் சப்பாத்தைப் பார்க்கச் சொன்னீர்கள்?' என்று எரிச்சலுடன் நான் கேட்க 'உயரதிகாரி என்று பீற்றிக் கொண்டிருக்கிறீர்கள். இந்தச் சின்ன விஷயத்தை உங்களால் கண்டுபிடிக்க முடியவில்லையா? அவருடைய சப்பாத்து நன்றாக அழுக்கடைந்து போயிருந்தது. மினுக்கி எப்படியும் இரண்டு வாரங்களாவது இருக்கும். உங்களுடைய MD இப்படி நடந்த கொண்டால் அவருக்குக் கீழே வேலை செய்யும் மற்றவர்கள் எப்படியிருப்பார்கள்?' என்று கேட்டாள் மிகா.

'இதே பார் மிகா! இந்தக் கம்பனியில் நாங்கள் சலவைத்தூள் தான் உற்பத்தி செய்கிறோம். நீங்கள் எதிர்பார்க்கும் தகுதிகள் அதற்குத் தேவையில்லை. எனக்கும் கொழுத்த ஊதியம் கிடைக்கிறது. வருடமுடிவில் போனஸ் தருகிறார்கள். நாங்கள் சந்தோஷமாக வாழ்கிறோம். இந்த வசதி வாய்ப்புக்களைத் தவிர நமக்கு வேறென்ன வேண்டிக் கிடக்கிறது?'
'சந்தோஷமாக வாழ்கிறோம் என்று எப்படிச் சொல்வீர்கள்? நான் ஆறாத்துயரில் மூழ்கிக் கிடக்கிறேன். எந்த வைபவத்திலும் உங்கள் கம்பனியை பற்றிச் சொல்லவே வெட்கமாக இருக்கிறது. தோழிகள் கிண்டல் பண்ணுகிறார்கள்' என்றாள் மிகா.
'வேலை எதுவுமில்லாத தோழிகள்'
'அப்படிச் சொல்லாதீர்கள், இப்போதும் சொல்கிறேன், உடனே கம்பனியை விட்டு விலகிவிடுங்கள்' 'அதற்கு பிறகு நான் வீதியில் அலைந்து திரிய வேண்டியது தான்'
'வீதியில் அலைந்து திரிவது எவ்வளவோ மேல். உங்கள் திறமைக்கு அனுபவத்திற்கும் வேலை தருவதற்கு எத்தனையோ கம்பனிகள் காத்திருக்கின்றன'
'அசட்டுத்தனமான நம்பிக்கை விபரீதத்தில் முடியும்'
'இல்லை அதுதான் உண்மை'

அவள் விளையாட்டாகத்தான் என்னுடன் விவாதிக்கிறாள் என்று நான் எண்ணினேன். அவளோ விடாப்பிடியாக நச்சரிக்க நான் வேலையை இராஜினாமாச் செய்தேன். 'என்னுடன் கோபமா?' என்று செல்லமாகக் கேட்டாள் மிகா. பெண்களின் இயல்பே இப்படித்தான். செய்வதையெல்லாம் செய்துவிட்டு தங்களுடைய அன்புப் பிடிக்குள் நம்மைச் சிக்கவைக்க பகீரத பிரயத்தனம் செய்வார்கள். நான் எங்கேயோ பார்த்துக் கொண்டு 'இல்லை' என்று சொல்ல 'கவலைப்படாதீர்கள் நான் உங்களுக்கு நல்ல வேலையொன்று தேடித்தருகிறேன்' என்று சொன்னாள் மிகா. எனக்கு அழுவதா சிரிப்பதா என்றே தெரியவில்லை. மிகா சும்மா இருக்காமல் தன்னுடைய செல்வாக்கை நிறையவே பயன்படுத்தியதால் நேர்முகத்தேர்வுக்கான அழைப்புக்கள் எனக்கு தொடர்ந்து வந்தன. எல்லாம் மிகா எதை எதிர்பார்க்கிறாளோ அப்படிப் பெரிய கம்பனிகள். உதாரணங்களுக்கு இவை Jenny Hutson Tea Exporters, Ridex Soap Manufatarers, Hemo Pray Milk Products, King And King Associates, Tooth And Mouth Limited. நேர்முகப் பரீட்சைக்கு அடிக்கடி செல்லும் பிஸியான ஆளாக நான் மாறிவிட்டேன்.

*Office grooming And Etiquette* என்ற மூன்றுமாதப் பாடநெறி, மிகா அதிலும் என்னைச் சேர்த்து விட்டாள். நாகரிகமான அலுவலகச் கனவானாக எப்படி நடந்துகொள்வது என்பதைப்பற்றி அங்கு விலாவரியாக சொல்லித் தந்தார்கள். tie கட்டுவது எப்படி, tie pin சொருகுவது எப்படி? சப்பாத்துக்கு நாடா கட்டுவது எப்படி? பொலிஷ் போடுவது, ஆசனத்தில் அமருவது, வாயைத் திறக்காமல் பேசுவது, குட்மோனிங் சொல்வது, நளினமாக நடப்பது என்று தொடங்கி கண்ணசைவு, விரலசைவு, முகபாவங்கள், புன்னகை போன்ற அற்பமான விஷயங்களையெல்லாம் கற்பித்தபோது மொன்ரிசோரி பையனைப்போல கற்று தயார் நிலையில் போன போதிலும் எல்லா நேர்முகப் பரீட்சைகளிலும் நான் தோல்வியடைந்தேன். மிகா அட்டவணை போட்டுத் தந்த நிறுவனங்கள் எல்லாம் வெள்ளை மேனியுள்ள ஆட்களையே எதிர்பார்த்தன. மற்றது பிரபலமான பாடசாலையொன்றில் படித்திருக்க வேண்டும். மேலும் ஆங்கிலத்தை நளினத்துடனும் சரளமாகவும் பேசவேண்டும். நானோ பூச்சியம். கதிரையில் அமர்ந்த மாத்திரத்திலேயே என்னை நிராகரிக்கும் முகபாவனையை அல்லது முகச்சுளிப்பை நான் அவதானித்தேன். கடினமாக பயிற்சி எடுத்துக்கொண்ட போதிலும் சரளமான பேச்சுநடை எனக்கு வரவில்லை. அதுபோல் ஆங்கில கொச்சை சொற்களைக் கையாளுவதில் நான் பலவீனமாக இருந்தேன். குறைந்தபட்சம் பிரபலமான பாடசாலைக்குக் கூட நான் போகவில்லை.

இதற்கெல்லாம் எதிர்மாறாக இருந்த என் மனைவி 'நானொரு தகுதியற்ற ஆளுக்கு வாழ்க்கைப் பட்டிருக்கிறேன்' என்று அடிக்கடி சொல்லுவாள். அதன் அர்த்தம் அவள் என்மீது அன்பில்லாமல் வாழ்க்கையை ஓட்டினாள் என்பதல்ல. நல்லவளான அவள் என்னையும் அவள் போல் ஆக்க பிரயத்தனமெடுத்தாள். எங்கள் திருமணங்கூட விபத்து மாதிரித்தான் நிகழ்ந்தது. அவள் துணிச்சலான முடிவெடுத்து என்னை மணந்தாள். கொஞ்ச நாட்களாக மிகாவின் முகத்தில் கவலை ரேகைகளைக் கண்டேன். நான் வேலையில்லாமல் இருப்பதால் நிதி நெருக்கடி போன்ற காரணங்கள் எதுவுமில்லை. கையில் நிறையப் பணமிருந்தது. இரண்டு தலைமுறைக்குச் செலவழிக்கலாம். கணவனுக்கு வேலையில்லை என்பது உலகிலே எந்த மனைவிக்கும் கவலை தரக்கூடிய பிரச்சினை தான். மாதங்கள் இப்படியே ஓட ஒருநாள் அரசனும் அரசனும் நிறுவனத்திலிருந்து எனக்கொரு கடிதம் வந்தது. நான் ஆவலுடன் பிரித்துப் படித்தேன். நேர்முகத் தேர்வுக்கான அழைப்பு. 'இந்தப் பதவி உங்களுக்கு கிடைக்கும்' என்று அதீத நம்பிக்கையுடன் சொன்னாள் மிகா. 'அரசனும் அரசனும் நிறுவனத்தைப்பற்றி நன்றாக எனக்குத் தெரியும். என்னுடைய பள்ளித்தோழி அங்குதான் வேலை செய்கிறாள். அவர்களுடைய நேர்முகத்தேர்வு கடுமையாக இருக்கும்' என்று என்னைப் பயமுறுத்தினாள் மிகா. *'ஆடைத் தயாரிப்பில் அதிசய முன்னோடிகள்'* என்ற சுலோகத்தை அவர்கள் எப்போதும் போடுவார்கள். businees quest என்ற வர்த்தகச் சஞ்சிகை வருடாவருடம் பிரசுரிக்கும் மிகச்சிறந்த 10 நிறுவனங்களில் இந்த நிறுவனத்தின் பெயர் எப்போதும் இருக்கும்.

தலைமைக் காரியாலயம் இருபது மாடிக் கட்டடம். கட்டடத்தை வடிவமைத்தவர் படவரைஞர் டிமிபாக். அரசனும்அரசனும் நிறுவனத்தின் தற்போதைய தலைவர் ரெமியோ பாட். இவருக்கு இரண்டு மனைவியர். இவரின் தந்தை 1992 விமான விபத்தில் அகால மரணமடைந்தவுடன் ரெமியோ பாட் நிறுவனத்தைப் பொறுப்பேற்றார். ரெமியா பாட்டின் சகோதரர் ஜோலி பெட்டர்ஸன். இவர் அமெரிக்காவின் ஹார்வார்டு பல்கலைக்கழகத்தில் முகாமைத்துவ இயலில் கலாநிதிப் பட்டம் பெற்றவர். கம்பனி பற்றிய எல்லா விஷயங்களும் விரல்நுனியில் இருக்கவேண்டும். கேட்பார்கள், கேட்கின்ற கேள்விகளுக்கு பட்பட்டென்று பதிலளிக்க வேண்டும் என்று மனைவி என்னை எச்சரித்திருந்ததால் ஒருவரி விடாமல் மனப்பாடம் செய்தேன். கம்பனியில் எத்தனை கதிரைகள் இருக்கின்றன என்று கேட்டால் அதற்கும் விடை செல்லுவென், அப்படி.

வணக்கம் கூறிக்கொண்டே அறைக்குள் போனதும் மூக்குக்கண்ணாடி கடதாசியை என்னிடம் நீட்டியது, வாங்கினேன்.
'திரு ரபா அவர்களே, இந்தப் பந்தியை நீங்கள் ஆங்கிலத்தில் மொழிபெயர்க்க வேண்டும். பதினைந்து நிமிடங்கள் தருகிறேன்'
நான் நினைத்தது சரி, நாடகம் ஆரம்பமாகி விட்டது. எத்தனையோ நேர்முகத் தேர்வுகளுக்குப் போய் சதம் போட்ட எனக்கு இந்த நாடகங்களெல்லாம் அத்துப்படி. ஆள் தேவையில்லை என்று முடிவுசெய்தால் முட்டாள் தனத்தோடு தான் ஆரம்பிப்பார்கள். ஐபல்கோபுரம் கட்ட எவ்வளவு தொன் இரும்பு பாவிக்கப்பட்டது? நைல் நதியில் எத்தனை லீற்றர் தண்ணீர் உண்டு? சீனப்பெருஞ்சுவரின் நீளம் அங்குலத்தில் சொல்க. என்ற மாதிரியான கேள்விகளைக் கேட்டுக் கேட்டு காதுகளும் புளித்து விட்டன. இப்படியான உப்புச்சப்பில்லாத வினாக்களை நேர்முகத் தேர்வில் யாராவது தொடுத்தால் அதன் அர்த்தம் நீ எழுந்து போய்விடு என்பதாகும். என்னால் ஒருபுத்தகமே எழுதிவிட முடியும். தலைப்பு இப்படித்தான் அமையும் *'நேர்முகப் பரீட்சையில் முட்டாள் தனமான கேள்விகளுக்கு விடையளிப்பது எப்படி?* வேறு நேர்முகப் பரீட்சையாக இருந்திருப்பின் நான் விருட்டென்று எழுந்து போயிருப்பேன். ஆனால் இங்கே வாழ்வா சாவா என்ற போராட்டம் என்பதால் பல்லைக் கடித்துக் கொண்டு பந்தியை வாசிக்க ஆரம்பித்தேன்.

எவ்வா*றான* சிக்கலான நிலைமைகளிலும் *அச்சிக்கலான* நிலைமை உலகின் எந்த மூலையிலிருந்தும் பீறிட்டு கிளம்பி வந்தபோதிலும் கூட அதன் மூலம் தாங்கவொண்ணா நெருக்கடி அல்லது குழப்ப நிலைமை தோற்றுவிக்கப்பட்டாலும் கூட அவ்வா*றான* இரண்டுங் *கெட்டா*ன் நிலைமையை நெஞ்சுரத்துடன் எதிர் நீச்சலடித்து ஒரு தைரியமுள்ள மனிதன் எவ்வாறு சிங்கத்தினுடையைப் போன்ற அஞ்சா நெஞ்சத்துடனும் மனப்பக்குவத்துடனும் அப்பிரச்சினையை எதிர் கொள்*வா*னோ அவனுடைய அடிச்சுவட்டை அச்சொட்டாகப் பின்பற்றி அச்சிக்கலான நிலைமையை எதிர்கொள்ளக்கூடிய கடினசித்தம் கொண்டவன் நான்.

எனக்கு மூச்சுத் திணறலை ஏற்படுத்த வேண்டுமென்பதற்காகவே தந்திருக்கிறார்கள். எமகாதர்கள். நானோ விடாக்கண்டன். மூக்குக் கண்ணாடி தந்த காலக்கெடுவிற்குள் பந்தியை ஆங்கிலத்தில் மொழிபெயர்த்துக் கொடுத்தேன். மூக்குக் கண்ணாடி நமட்டுச் சிரிப்புடன் என்னைப் பார்த்துவிட்டு ஒரு வசனத்தை தந்தது. Peter Piper Picked A Peck of Pickled Peppers. மீண்டும் மீண்டும் வேகமாக உச்சரிக்க வேண்டுமாம். நான் அந்தக் காரியத்தையும் நல்ல சிஷ்யனாகச் செய்தேன். எனக்கு KinderGarten நாட்கள் ஞாபகத்திற்கு வந்து விட்டன. அந்தக் காலத்தில் எனது ஆசிரியையும்

இப்படித்தான், பிரம்பை அப்படியும் இப்படியும் ஆட்டியவாறே நாக்கைப் புரட்டிப்புரட்டி சொற்களை உச்சரிக்கச் சொல்லி அதட்டுவாள். நாங்கள் நடுநடுங்கி நிற்போம். இது என்ன ஆடையுற்பத்தி தொழிற்சாலையா, அல்லது ஒக்ஸ்போர்டு பல்கலைக்கழகமா?

'அடுத்த கேள்வி waterloo என்றால் என்ன?' என்றது மூக்குக் கண்ணாடி. வாழ்க்கையில் ஒரு போதுமே கேள்விப்பட்டிராத சொல். 'ஒரு மென்பானம்' என்று நான் சொல்ல அங்கிருந்த அனைவரும் கொல்லென்று சிரிக்க 'அல்லாவிட்டால் சொக்லேட்' என்றேன். மூக்குக் கண்ணாடி என் கண்ணுக்கு முன்னால் கடதாசியில் பெரிய முட்டையை வரைந்தது.

'இரண்டாவது கேள்வி' 'சொல்லுங்கள் ஐயா' என்றேன் நாக்குழறிக் கொண்டே.

'Daphne எதுவாக மாற்றப்பட்டாள்?'

'Daphne யார், நடிகையா?'

மீண்டும் எல்லோரும் சிரித்தார்கள். இப்படியான கேள்விகளுக்கு விடையளிக்க பயிற்சி தராத மனைவியைத் திட்டினேன். இரண்டாவது பெரிய முட்டையைக் கீறி அதற்குள்ளே கோழிக்குஞ்சு ஒன்றையும் வரைந்து தொடர்ந்து மூன்றாவது முட்டையையும் வரைந்து என் புகைப்படத்தைப் பைலிலிருந்து பிரித்தெடுத்து முட்டைக்குள் ஓட்டி விட்டு மூன்றாவது கேள்வியையும் கேட்டது மூக்குக் கண்ணாடி. 'Minotaur என்றால் என்ன?' நான் எதுவுமே பேசாமல் என்னுடைய தஸ்தாவேஜுகளைத் எடுத்து கக்கத்தில் இடுக்கிக் கொண்டு உடனடியாக வெளியேறினேன்.

அரசனும் கைவிட்டான் கண்ணே! என் வாழ்க்கையும் போச்சுடா கண்ணே! என்று பாட ஆரம்பித்தேன். கவலைகள் என்னைச் சூழ்ந்தன. வானத்தைப் பார்த்தேன், கருமேகங்கள். இருண்டு போய்விட்டதா என் நிலைமை? அரசனும்அரசனும் நிறுவனத்தில் வேலை கிடைக்குமென்று எவ்வளவு ஆவலாக நம்பியிருந்தேன். மனைவி எவ்வளவு ஆவலாக எதிர்பார்த்திருக்கிறாள். இனி எந்த வேளையும் கைபேசியில் அழைப்பு வரும், தாங்கமாட்டாள். கைபேசியை அணைத்துவிட்டு நான் காரை ஸ்ராட்பண்ணினேன்.

எரிபொருள் போதுமானளவு இருக்கிறது. கார் எங்கேயாவது போகட்டும். உலக முடிவு என்று சொல்லப்படுமிடத்தில் நிற்கட்டும். நான் அங்கே இறங்கி மரஞ்செடிகொடிகளுடன் பேசிக் கொள்கிறேன். Autogear. நான் சொல்லாமலேயே கார் அதன் பாட்டில் ஓடியது. அம்புக்குறிகள் வந்தன; பெயர்ப்பலகைகள் வந்தன; ஊர்களும் நகரங்களும் மாறின; எதனையும் வாசிக்கும் மனோநிலையில் என்னுள்ளம் இருக்கவில்லை. அம்புக்குறி காட்டும் திசைகளில்

எல்லாம் நான் திரும்பினேன். எவ்வளவு நேரம் ஓடினேனோ தெரியாது, எவ்வளவு தூரம் ஓடினேனோ தெரியாது, தாகித்ததால் தண்ணீர் பருகுவதற்காக காரை நிறுத்தினேன். குப்பென்று நெடி. யாரோ அருகில் நிற்பது போல் இனம் புரியாத உணர்வு. குள்ளர்களின் தீவில் வந்திறங்கிய ரொபின்ஸன் குருஷோ போல் நான் காணப்பட்டேன். அச்சம் என்னைச் சூழ்ந்தது, தாகமும் என்னை வாட்டியது. தாகத்தை தணிப்பதற்கு தேவை ஒரு குவளை தண்ணீர். நான் நடக்க ஆரம்பித்தேன். இடுப்பில் கோவணம், அதற்கு மேலே மஞ்சல் பட்டியுடன் பாதையோரம் ஓர் அபூர்வமான மனிதன் நின்றான். ஆடைகள் இல்லாத அவன் தலைக்கு மேலே அரச சின்னம் செதுக்கப்பட்ட கீரீடம் அணிந்து மாதுளம்பழம் சாப்பிட்டுக் கொண்டிருந்தான்.

'பெரியவரே, நான் கடுமையான தாகத்தால் கஷ்டப்படுகிறேன். ஒரு குவளை தண்ணீர் தர முடியுமா?' என்று நான் கேட்க அபூர்வ மனிதன் என்னைச் சட்டை செய்யாமல் மாதுளம்பழத்தில் மூழ்கியிருந்தான். விளங்கவில்லையாக்கும் என்று நினைத்து ஆங்கிலத்தில் பேசினேன். அவன் என்னை ஏறஇறங்கப் பார்த்து விட்டு 'ஐயா நீங்கள் எந்த தேசத்திலிருந்து வருகிறீர்கள்?' என்று கேட்டான். அவன் பேசியது கோவணாண்டிப் பாஷை. கோவணாண்டிப் பாஷை என்பாட்டி எனக்கு கற்றுத் தந்த பாஷை, எனக்கு நன்றாகத் தெரியும். அதே கோவணாண்டிப் பாஷையில் 'நான் சுவர்க்கபுரியிலிருந்து வருகிறேன்' என்று பதிலளித்ததும் திக்குமுக்காடிப் போன கோவணாண்டி என்னைக் கட்டிப்பிடித்து கொஞ்சி தண்ணீரும் மொண்டு தந்தான். அவன் யாரென்றால் கோவணாண்டி நாட்டின் மந்திரி. மந்திரியைக் கண்ட மாத்திரத்திலேயே கோவணம் போட்ட எல்லாப் பிரஜைகளும் அவனுக்கு மரியாதை செலுத்தினார்கள். எனக்குப் புரிந்தது, சிறுவயதிலே பாட்டி என்னிடம் வர்ணித்த கோவணதேசம் இதுதான்.

பிரதானிகள் வீற்றிருந்த விசாலமான அத்தாணி மண்டபத்திற்கு மந்திரி என்னை அழைத்துச் செல்ல முழுமையாக ஆடையணிந்திருந்த என்னை எல்லோரும் வியப்புடன் பார்த்தார்கள். கோவண அரசருக்கும் அரச கிரீடமும், கோவணமும் தான். மந்திரி அரசனின் காதில் ஏதோ கிசுகிசுக்க 'திரு ரபா அவர்களே, நீங்கள் எந்த நோக்கத்திற்காக கோவண தேசம் வந்தீர்கள்?' என்று கேட்டான் கோவண அரசன். நான் நடந்த விஷயங்கள் அனைத்தையும் அரசனிடம் எடுத்துரைக்க 'நீங்கள் எதுவரை கல்வி கற்றிருக்கிறீர்கள்?' என்று கேட்டார் கோவண அரசர். 'நான் பல்கலைக்கழக பட்டதாரி. வியாபார முகாமைத்துவத்தில் மேற்படிப்பு படித்திருக்கிறேன்' என்று பதிலளித்தேன் நான்.

சிறிதுநேர சிந்தனைக்குப் பின் கோவணஅரசன் 'திரு ரபா அவர்களே, நீங்கள் நன்றாகப் படித்திருக்கும் மேதாவி. கோவண பாஷையையும் சரளமாகப் பேசுகீறிர்கள். உங்களை எனக்குப் பிடித்துவிட்டது.......' என்று பீடிகை போட்டார். எதற்காக இந்தப் பீடிகை என்று நான் யோசிக்க முன்பாகவே 'எங்கள் கோவணதேசத்தின் வெளிநாட்டு அலுவல்கள் ஆலோசகராக உங்களை நியமிக்க விரும்புகிறேன், சம்மதமா?' என்று கேட்டார் அரசர். கிணறு வெட்ட பூதம் புறப்பட்டது போல் கதை இது என்பதால் திகைத்துப் போய் நான் பதில் சொல்ல முடியாமல் தத்தளிக்க மந்திரி எனக்கருகில் வந்து காதிற்குள் கிசுகிசுத்தார். 'திரு ரபா, சந்தர்ப்பத்தை விட்டு விடாதீர்கள். பெரிய பதவி. இந்த வாய்ப்புக்காக எத்தனையோ பேர் ஏங்கிக் கொண்டிருக்கிறார்கள், சரியென்று சொல்லுங்கள்' நானும் 'சரி அரசே' என்று தலையாட்டினேன். கோவண அரசர் பூரித்துப் போனவராக, 'எங்கே, பணிப்பெண்கள் இவரை அழைத்துச் செல்லுங்கள்' என்று கம்பீரமாக கட்டளையிட, பணிப் பெண்களின் வரவேற்பு மழைக்குள் சிக்கி நான் கிறங்கிப்போனேன். குளிரூட்டப்பட்ட சொகுசு வாகனம், வசிப்பதற்கென்று அழகான பங்களா, கற்பனைக்கும் எட்டாத அளவு சம்பளம். இதை விட வேறென்ன வேண்டும்? மனைவி ஆரம்பத்தில் பிகு பண்ணினாலும் வீதிஅதிர நான் சொகுசு வாகனத்திலிருந்து கம்பீரமாக வந்திறங்கி, தங்கமுலாம் பூசப்பட்ட Visiting Card ஐக் காட்டியவுடன் கப்சிப் என்று அடங்கிவிட்டாள். Visting Card இப்படி அமைந்திருந்தது.

*mm rampasuraganath MBA*
*royal councellor for foreign affairs*
*the state of UWP*
*phone : 0896 – 325 – 615 – 822*
*Email: vampasuraganath @ gmail.com*

UWP என்றால் under wear people அதாவது கோவண மக்கள்

நான் வேலை முடிந்து வீடு திரும்பும்போது கோவண நாட்டு வீரர்கள் எனக்கு காவலாக வருவார்கள். கோவண மனிதர்களுடன் சுற்றித்திரிவது சகிக்க முடியாததாக இருந்தாலும் என் மனைவி அதனைப் பற்றி கிஞ்சித்தேனும் கவலை கொள்ளாமல் எனக்குக் கிடைத்த அரண்மனைப் பதவியைப் பற்றி ஊர் முழுவதும் பீற்றித் திரிந்தாள். என் சம்பளத்தை ஆறுமடங்காக உயர்த்தினாள். நாள் செல்லச்செல்ல இந்த வாழ்க்கை எனக்கும் பிடித்துப் போயிற்று.

கோவண அரசர் ஒருநாள் என்னைக் கூப்பிட்டு 'அரசனும்அரசனும் நிறுவனத்தைப் பற்றி உங்களுக்கு தெரியுமா?' என்று கேட்க நான் ஆச்சரியத்துடன் 'மிக நன்றாகத் தெரியும்' என்றவுடன் அரசர்

பைல்களை என் முன்னால் போட்டார். 'எங்கள் நாட்டின் சனத்தொகை மூன்றரைக்கோடி, எங்கள் நாட்டு மக்களுக்குத் தேவையான கோவணங்கள் அனைத்தையும் இந் நிறுவனம் தான் தயாரித்து தருகிறது. அவர்களுடனான ஒப்பந்தம் இவ்வருடத்துடன் முடிவடைவதால் ஒப்பந்தத்தை புதுப்பிக்க வேண்டியிருக்கிறது. இந்தப் பைல்களைப் படித்துவிட்டு உங்கள் அபிப்பிராயத்தைச் சொல்லுங்கள்' என்றார் அரசர்.

அரசனும்அரசனும் நிறுவனப் பெயரின் தாற்பரியம் இப்போது எனக்குப் புரிந்தது. அப்படியானால் கோவணம்தான் நீங்கள் உற்பத்தி செய்யும் ஆடை. நான் www. Kingking.uwp.com என்ற அரசனும் நிறுவனத்தின் இணையத் தளத்திற்குச் சென்று வரிவிடாமல் படித்து எல்லாத் தகவல்களையும் தரவுகளையும் ஆராய்ந்தேன். என்ன ஆச்சரியம்! கோவண தேசத்தினுடனான கோவண ஒப்பந்தத்தைப் பற்றி அங்கே ஒரு தகவலும் இல்லை. தொண்ணுத்தாறு சதவீதமான வருமானத்தை கோவணம் மூலம் சம்பாதித்தாலும் அந்த விஷயத்தை நூறு வீதம் இருட்டடிப்புச் செய்திருந்த அவர்கள் அமெரிக்காவின் philadelphia மாநிலத்திலுள்ள ஒரு கம்பனிக்கு எப்போதோ நானூறு ஷோர்ட்கள் ஏற்றுமதி செய்த கதையை பக்கம் பக்கமாக வர்ணப் படங்களுடன் விபரித்திருந்தார்கள். தொண்ணுத்தாறு சதவீத வருமானத்தை ஈட்டித்தந்த கோவணத்தைப் கௌரவக்குறைச்சலாக கருதினார்களோ என்னவோ கோவணம் என்ற சொல்லை புத்திசாலித்தனமாகத் தவிர்த்து அகச்சரும அடிப்படை ஆடை (Internal Skin Primitive Clothes) என்று உலகத்தில் எந்த அகராதியிலும் இல்லாத ஒரு சொற்தொடரைப் பயன்படுத்தியிருந்தது அரசனும்அரசனும் நிறுவனம்.

'அரசனே, நான் சொல்கிறேனென்று தவறாக நினைத்து விடாதீர்கள். அரசனும்அரசனும் நிறுவனம் உங்கள் நாட்டை நன்றாக இழிவுபடுத்தியிருக்கின்றார்கள்' என்றேன் நான்.

'என்ன சொல்லுகிறீர்கள்?'

'ஆம் அரசே, அமெரிக்க தேசியதினத்தை கோலாகலமாக கொண்டாடியிருக்கும் இவர்கள் கோவணதேசத்து தேசிய தினத்தை முற்றாக மறந்து விட்டார்கள்'

'உண்மையாகவா?'

'அதுமட்டுமல்ல அவர்களுடைய எந்த ஆண்டறிக்கையிலும் உங்களைப் பற்றியோ, உங்கள் நாட்டைப் பற்றியோ ஒருவரி கூட வராமல் தவிர்த்து வந்திருக்கிறார்கள்'

'உண்மையாகவா?'

'உண்மைதான்'

'என்னால் நம்பவே முடியவில்லை. இந்த நிறுவனத்தை ஆரம்பிப்பதற்காக முழு மூதலீட்டையும் செய்தவர் என் பாட்டன். ஐம்பது வருடங்களுக்கு மேலாக அவர்கள் உற்பத்தி செய்யும் கோவணங்களை எங்கள் நாட்டுமக்கள் அணிந்து வருகிறார்கள். இவர்கள் ஏமாற்றினார்கள் என்பதனை நம்புவதே கஷ்டமாக இருக்கிறது' என்றார் அரசர் ஆதங்கத்துடன்.

நான் அவர்களால் தரப்பட்ட புள்ளி விபரங்கள் தகவல்கள், வென்வரிப்படங்கள், வரைபுகள் அத்தனையும் கொண்டு கோவணஅரசனுக்கு விளங்கப்படுத்த கோவண அரசன் கோபத்தால் முகம் சிவந்தவராக, மீசை துடித்தவராக, உதடுகள் கறுத்தவராக, அலுவலக மேலாளரைக் கூப்பிட்டு ஓப்பந்தத்தை ரத்துசெய்து விடுவதாக இப்போதே தொலைநகல் அனுப்பிவிடுங்கள் என்று உத்தரவிட்டார்.
'அரசரே, கொஞ்சம் பொறுமையாயிருங்கள், கொஞ்சம் யோசித்து முடிவெடுப்போம்'
'இந்த விஷயத்தில் யோசிப்பதற்கு எதுவுமில்லை. அரசர் அளித்ததே தீர்ப்பு' என்றார் கோவணஅரசர் அரசமிடுக்குடன்.

அடுத்தநாட் காலையிலே அரசனும் அரசனும் நிறுவனத்தைச் சேர்ந்த பதினைந்து பேர் அடங்கிய தூது கோஷ்டி பதறியடித்துக் கொண்டு கோவண தேசத்திற்கு வந்து சேர்ந்தது. எல்லோரும் நிறுவனத் தலைவர், பிரதம நிறைவேற்று அதிகாரி, சிரேட்ட பணிப்பாளர்கள் என்று கம்பனியை ஆட்டுவிக்கும் உயர்மட்ட அதிகாரிகள். பரபரப்புடனும், பதட்டத்துடனும் காணப்பட்ட அத்தனை முகங்களும் இஞ்சி தின்ற குரங்கின் தோற்றத்தில் இருந்தன. அதற்குள் இருந்த நேர்முகத் தேர்வில் எனக்கு முட்டை போட்டவர்கள் என்னைக் கண்டவுடன் 'நேர்முகப் பரீட்சையில் நடந்து கொண்ட முறைக்காக எங்களைத் தண்டித்து விடாதே. எத்தனை தடவை வேண்டுமென்றாலும் உன்னிடம் மன்னிப்புக் கேட்டுக் கொள்கிறோம்' என்று கெஞ்சினார்கள்.

கோவண அரசர் சிம்மாசனத்திலே கம்பீரமாக வீற்றிருக்க காலடியிலே பாரசீகக் கம்பளத்தின் மேலே தூதுகோஷ்டியினர் சப்பாணி கொட்டி ஒடுங்கிப்போய் அமர்ந்தார்கள். 'ஐயா நாங்கள் தவறு செய்து விட்டோம். எங்களை மன்னித்து விடுங்கள்' என்றார் நிறுவனத் தலைவர். 'ஐயா என்று கூற வேண்டாம். மேன்மை தங்கிய அரசரே என்ற சொற்றொடரை பயன்படுத்தவும்' என்று அவருடைய காதிற்குள் கிசுகிசுத்தேன் நான். 'மேன்மை தாங்கிய அரசரே, எங்கள் நிறுவனம் சுவர்க்கத் தீவிலே நம்பர் வன் கம்பனியாக உயர்ந்து நிற்கிறது. நீங்கள் இறக்குமதியை நிறுத்தி விட்டீர்களௌன்றால் நொடித்துப் போய் ஓட்டாண்டிக் கம்பனியாகி விடுவோம்' என்று அழாக் குறையாக புலம்பினார் தலைவர். 'மேன்மை தாங்கிய அரசரே, அரச

குடும்பத்திற்கு என்று வருடாவருடம் தங்கநூலால் இழைத்த ஆயிரம் கோவணங்களை அன்பளிப்புச் செய்யத் தீர்மானித்துள்ளோம்' என்றார் தலைவர் மீண்டும். வியாபாரக் குழுவின் மற்றைய உறுப்பினர்களும் எவ்வளவோ விஷயங்களைப் பேசினார்கள். கோவணஅரசர் இம்மென்றும் சொல்லாமல் இல்லையென்றும் சொல்லாமல் ஆடாமல் அசையாமல் அவர்களையே பார்த்துக் கொண்டிருந்தார்.

'திரு ரபா அவர்களே, நாங்கள் பேசிக்கொண்டே போகிறோம். அரசர் பதில் இல்லாமல் சிலை போல் வீற்றிருக்கிறாரே' என்று நிறுவனத் தலைவர் என்னிடம் இரகசியமாகச் சொன்னார். 'நானும் அதைத்தான் சொல்ல நினைத்தேன். நீங்கள் இப்போது என்ன மொழியில் பேசிக் கொண்டிருக்கிறீர்கள்?'
'ஆங்கில மொழியில்'
'கோவண அரசருக்கு ஆங்கிலம் தெரியாது. கோவணாண்டி மொழியில் பேசுங்கள்'
'கோவணாண்டி மொழியா, அது எங்கள் யாருக்குமே தெரியாதே' என்று அப்பாவித்தனமாகச் சொன்னார் தலைவர். நான் அதிர்ந்தேன். 'உங்கள் கம்பனி முற்றுமுழுதாக கோவண தேசத்தை நம்பியிருக்கிறது. ஐம்பது வருஷமாக பில்லியன் கணக்கில் சம்பாதித்தும் இருக்கிறீர்கள். கோவணாண்டி பாஷை யாருக்கும் தெரியாது என்று சொல்ல உங்களுக்கு வெட்கமாக இல்லை?' என்று சீற்றத்துடன் அவர்களைக் கடிந்து கொண்ட நான் வேறு வழியில்லை என்பதாலும் கெஞ்சுகிறார்களே என்பதற்காகவும் அவர்களுக்காக நான் பரிந்துரை செய்யவே நீண்ட நேர கலந்துரையாடலின் பின் கோவண அரசர் ஒப்பந்தத்தை நீடிப்பதற்கு ஒப்புக் கொண்டார்.

விருந்துபசாரமொன்றும் அவர்களுக்காக ஏற்பாடு செய்யப்பட்டது. அரசர் மண்டபத்திற்குள் நுழைந்ததும் அத்தனை பேரும் நான் சொல்லிக் கொடுத்தபடி கோவணாண்டி பாஷையில் வணக்கம் சொன்னார்கள். விருந்து, ஆடல்பாடல் அத்தனையும் முடிந்து தூதுகோஷ்டியினர் புறப்படத் தயாரானவுடன் நான் அவர்களிடம் 'கோபிக்கமாட்டீர்களென்றால் ஒரு சந்தேகம் இருக்கின்றது. விடை சொல்லமுடியுமா?' என்று கேட்டேன்.
'கேளுங்கள்'
'நீங்கள் நேர்முகப் பரீட்சையிலே கேட்டீர்களே மூன்று கேள்விகள், Waterloo, Daphne, Minatour என்ற இந்தச் சொற்களின் அர்த்தம் என்ன?' நிறுவனத் தலைவர் எல்லோரையும் ஒருமாதிரியாகப் பார்க்க எல்லோரும் சிரித்தார்கள்.

'ஏன் சிரிக்கிறீர்கள்?'

‘நேர்முகப் பரீட்சைக்கு வரும் யாரையாவது கம்பனியில் சேர்த்துக்கொள்ள விரும்பவில்லையென்றால் இந்தச் சொற்களின் அர்த்தத்தைக் கேட்டு அவர்களை மடக்கி விடுவோம், அவ்வளவுதான். இது ஐம்பது வருடங்களாக நடந்துவரும் சமாச்சாரம்‘

‘நீங்கள் சொல்லும் விஷயம் அன்றைக்கே எனக்குத் தெரியும். எனக்குத் தேவை இந்தச் சொற்களின் உண்மையான அர்த்தம்’ என்றேன் நான். மீண்டும் எல்லோரும் சிரித்தார்கள்.

‘இப்போது ஏன் சிரிக்கிறீர்கள்?’ ‘எங்களுக்கும் அர்த்தம் தெரியாதே?’ என்று தூதுகோஷ்டியிலிருந்த அத்தனை பேரும் ஓரே கோராஸாக கூவினார்கள்.



# அழகு என்பதற்கான நிறமூர்த்த ஒழுங்கு

எம்.எம்.நௌஷாத்

நான் பாப்லு. எனக்கு வயது பதினெட்டு. எல்லாப் பையன்கள் போலவும் நான் காதல் வயப்பட்டேன். அவள் பாஸ்மா. என்னுடைய அதே வகுப்பில் படித்தாள். அவள் என்னை முற்றாக ஆகர்ஷித்தாள். என் உடம்பு, உள்ளம், நகக்கணுக்கள், இரத்தம், சதைப்பிண்டம், என்புகள், சிறுநீரகம் எல்லாவற்றிலும், ஒவ்வொரு கலங்களிலும், இழைமணிகளிலும், இழையங்களிலும் அவள் உயிர் வாழ்ந்தாள். எனக்கு கொஞ்சம் ஓவியம் வரையத் தெரியும். நான் ஓவியம் வரைந்து கொண்டிருந்தேன் ஒருநாள். வனாந்தரத்திலே ஒரு யானை. யானையின் தும்பிக்கையில் அமர்ந்திருக்கும் கழுகு. கழுகுக்கு முன்னால் மரத்தில் தொங்கும் சர்ப்பம் தும்பிக்கையைச் சுற்றக் காத்திருக்கிறது.

சர்ப்பத்தின் வாய்க்கருகிலே தவளையொன்று. “என்ன ஓவியம் வித்தியாசமான ஜாடையில் இருக்கிறது?” என்று கேட்டாள் பாஸ்மா. “எல்லா உயிர்களும் ஒற்றுமையாக அன்புடன் வாழவேண்டும் என்பதை அர்த்தப்படுத்தும் ஓவியம்” என்று பதிலளித்தேன் நான். “நீங்கள் சொல்லும் அர்த்தம் இயற்கை முறைமைகளுக்கு முரணானது. நான் ஒன்று சொல்கிறேன் கேளுங்கள்.இந்தக் கழுகை எடுத்துவிடுங்கள், இந்தப் பாம்பை எடுத்துவிடுங்கள், இந்தத் தவளையை எடுத்து விடுங்கள். அன்புக்கு அடையாளம் தானே வேண்டும். ஒருசோடி மணிப் புறாக்களை வரைந்து விடுங்கள். அர்த்தமுள்ளதாகவும் இருக்கும், அழகாகவும் இருக்கும் என்றாள் பாஸ்மா.

பாஸ்மா உச்சரித்த அன்புக்கு அடையாளமான மணிப்புறா என்னை முழுமையாக வசீகரித்தது. அன்றைய தினம் விடியும் வரை மணிப்புறாக்களை வரைந்து தள்ளினேன். அன்றே, அந்தக் கணமே நான் காதல் வயப்பட்டேன். “நானும் ஓவியம் வரையப் போகிறேன். உங்கள் தூரிகையை கொஞ்சம் தருவீர்களா?” அவள் கேட்டாள்.
தருவதில் ஆட்சேபனை இல்லை, ஆனால் ஓவியன் தூரிகையைக் கேட்டால் கொடுக்க முடியும். ஓவியமே தூரிகையைக் கேட்டால் எப்படிக் கொடுப்பது?”
“என்ன சொல்கிறீர்கள்? புரியவில்லையே”

“நீங்களே அற்புதமான ஓவியம்” என்றேன் நான். பாஸ்மா கிளுக்கென்று சிரித்துவிட்டாள். முன்பெல்லாம் எந்த உணர்வையும் ஏற்படுத்தாத இந்தச் சிரிப்பு இப்போது உள்ளத்திலே அவஸ்தையை உண்டாக்கியது. காதலின் இந்த அவஸ்தையை நீங்கள் அனுபவித் திருப்பீர்கள். நான் இப்போது தான் முதன்முறையாக அனுபவிக்கிறேன். தவளையின் குடல், கரப்பானின் உணர்கொம்பு, மனித உடலின் இதயம், மீனின் பூக்கள் எல்லாம் படித்துக் கொண்டிருந்தேன். அது உயிரியல் முன் மருத்துவ வகுப்பு.

எல்லா உயிர்களிலும் அவள் முகம் மட்டும் தான் தெரிந்தது. படித்தவைகள் எதுவும் மனதில் நிற்கவில்லை, அவள் தான் நின்றாள். நடப்பது கஷ்டமாக இருந்தது. பைசிக்கிள் ஓடுவது அதைவிடக்

கஷ்டமாக இருந்தது. பல் விளக்குவதும், பொத்தான்கள் பூட்டுவதும் கடினமாயிற்று அப்படியே. அவளை ஓவியமாக பார்த்த அந்த நாளும், அந்த நிமிடமும், அந்தச் செக்கன்களும், அவள் உருவமும், அவளின் ஆடைகளும், ஆடைகளின் நிறமும், ரிபனும், அதன் நிறமும், கூந்தலும், அதன் நறுமணமும், வளையல்களும், அதன் ஒலியும் என் மனதிலே நன்றாகப் பதிந்து விட்டன. எந்தப் பாடமும் இப்படிப் பதிந்தது கிடையாது இதுவரை. வகுப்பு நடந்து கொண்டிருக்கையில் நான் அவளையே உற்றுப் பார்ப்பேன். வகுப்பு ஆரம்பித்து வகுப்பு முடியும்வரை பார்த்துக் கொண்டே இருப்பேன். ஆசிரியர் வருவார், போவார். அப்படித்தான் எனக்கு விளங்கியது. பாடம் நடந்து முடிந்தது எனக்குத் தெரியாது. பாடங்களின் பெயர்கள் மாத்திரமே ஞாபகமிருந்தது. விலங்கியல், தாவரவியல், பௌதீககியல், இரசாயனவியல். இந்த இரகசியம் வகுப்பிலுள்ள ஒரே ஒரு நண்பனுக்கு மாத்திரமே தெரியும். அவன் என்னை இரகசியமாக பார்த்து மெலிதாகப் புன்னகைப்பான்.

ஒருகணமும் என்னால் அவளை பிரிந்திருக்க முடியாது என்பதால் பாடசாலை இறுதி மணி அடித்ததும் நானும் பாஸ்மாவுடன் பஸ்ஸில் ஏறிவிடுவேன். பாஸ்மாவின் வீட்டுக்கு அடையாளம், வீட்டு முற்றத்திலே வலது மூலையிலே நின்ற நாவல் மரம். நாவல் மரத்திலே முக்கோண வடிவத்திலே மூன்று கிளைகள். முதற் கிளை கிளைத்து இரண்டு கிளைகளாக இருந்தன. இரண்டாம் கிளை கிளைத்து மூன்று கிளைகளாக இருந்தன. மூன்றாம் கிளை கிளைத்து நான்கு கிளைகளாக இருந்தன. அவற்றில் இரண்டு பட்டுப்போன கிளைகள். மூன்று அணில்கள் அங்கு வந்து போகும். இவற்றில் ஒன்று கொழுத்த அணில். இருந்தாற்போல் ஒரு கபில மரஅணில் வந்துபோகும். தினசரி அங்கு வந்துபோகும் பறவைகளின் மொத்த எண்ணிக்கை இருபத்திரண்டு தொடக்கம் இருபத்தைந்து.

பன்னிரண்டு அடி அகலமான முன்பக்க வீட்டுப்படலை கம்பிக்கி ராதியால் செய்யப்பட்டிருந்தது. வீட்டுப்படலையிலே நாற்பத்தியெட்டு நெடுங்கம்பிகள் இருந்தன. குறுக்குக்கம்பிகள் ஆறு. மையத்திலே கம்பியிலேயே வடிவமைக்கப்பட்ட பதின்மூன்று சூரிய காந்திப் பூக்கள். வீட்டுப்படலையின் நிறம் ஒரேஞ்ச். வர்ணம் பூசப்பட்டு சரியாக மூன்று வருடங்களும் ஏழு நாட்களும். பாஸ்மாவின் வீட்டுக்ருகிலே பஸ்தரிப்பு நிலையம் இருந்தது. பஸ்ஸின் மணியை அடித்து அவள் இறங்குவாள். இறங்கும் போது “நீங்கள் எங்கே போகிறீர்கள்?” என்று என்னைப் பார்த்துக் கேட்பாள். வழமையைப் போல “இரண்டு கிலோமீற்றர் தள்ளி என்னுடைய உறவினர் ஒருவர் இருக்கிறார். அவருடைய வீட்டிற்குச் செல்லுகிறேன்” என்ற பொய்யைச் சொல்லும் நான் அடுத்த பஸ் தரிப்பிலே இறங்கி நடந்து வருவேன். உண்மையிலே இரண்டு கிலோமீற்றர் நடை. என்றாலும் எனக்குக் களைப்பதுமில்லை, வியர்ப்பதுமில்லை.

நல்ல வேளையாக பாஸ்மாவின் வீட்டிற்கு முன்னால் தேநீர்க் கடை இருந்தது. கடை முதலாளி நல்லவர். நான் பாஸ்மாவின் மீது காதல் வயப்பட்டிருப்பதை அவர் நன்றாக அறிந்து வைத்திருந்தார். அவரின் கடையின் பின்பக்க மூலையிலே பழைய பத்திரிகைக் கட்டு ஒன்று எப்போதும் இருந்தது. நான் தேநீர்க் கடைக்கு முன்னால் போடப்பட்டிருந்த பழைய வாங்கிலே அமர்ந்து கொள்வேன். என்னுடைய வேலை என்னவென்றால் பழைய பத்திரிகை ஒன்றை எடுத்து முதல் பக்கத்திலிருந்து ஆரம்பித்து முடியும் வரை ஒருவரி விடாமல் வாசிப்பது. விளம்பரங்களைக் கூட விட்டு வைக்கவில்லை. காரியாலய முகவரி, தொலைபேசி எண்களையும் வாசிப்பேன். இடைக்கிடை தேநீர் அருந்துவேன். இருந்தாற் போல் பாஸ்மா வீட்டின் முற்றத்திற்கு வருகையில் என்முகம் மலரும்; மனமும் மலரும். பாஸ்மா வாழும் குக்கிராமத்திலுள்ள வாகனங்களின் நிறம், இலக்கம், மனிதர்களின் ஆடையமைப்பு, கடைகளின் பெயர்கள், பெயர்ப்பலகைகளில் மலிந்துள்ள எழுத்துப் பிழைகள், மிருகங்கள், பசுக்கள் புல் மேயும் இடங்கள் எல்லாம் எனக்கு அத்துப்படி. கிராமத்தை வருடிச் செல்லும் தென்றலின் இதமான நறுமணம், வெட்டுக்கிளிகள் வாழும் இடம், புற்றில் வாழும் பாம்புகளின் தோல், தவளைகளின் ஒலி இவைகளும் அத்துப்படி. என் கிறுக்குத்தனங்களையெல்லாம் அறியாமல் பாஸ்மா வாழ்ந்தாள். நான் தேநீர்க் கடையில் இருக்கும்போதும், பைசிக்கிளில் ஓடும்போதும் அவளுடன் பேசிக்கொண்டிருப்பது அவளுக்குத் தெரியாது. மனம் விட்டுப் பேசுவேன்.

“பாஸ்மா உங்களுக்கு கதைப்புத்தகங்கள் நாவல்கள் படிக்கும் பழக்கமுண்டா?” என்று கேட்டேன் ஒருநாள். “அப்படிப்பட்ட கெட்ட பழக்கங்கள் எனக்குக் கிடையாது” என்று சிரித்தபடியே சொன்னாள் பாஸ்மா. அந்தச் சிரிப்பு என் இதயத்தை கொள்ளை கொண்டு விட்டது. ‘இனிமேல் கலகலத்துச் சிரிக்கும் போது பாரசீகக் கம்பளத்தை விரித்து வைத்து விட்டுச் சிரியுங்கள்’ என்று நான் சொல்ல ‘பாரசீகக் கம்பளத்திற்கும் சிரிப்புக்கும் என்ன சம்பந்தம்?’ என்று புரியாதவளாகக் கேட்டாள் பாஸ்மா. “கலகலத்துச் சிரிக்கும் போது உதிரும் சிரிப்பையெல்லாம் இந்தப் பாரசீகக் கம்பளத்திலே சேகரித்து சுவர்க்கத்துக்குப் பறந்து செல்வேன்” என்றேன் நான். பாஸ்மா மீண்டும் கலகலத்துச் சிரித்தாள். மனதை ஆகர்ஷிக்கும் அந்தச் சிரிப்பிலிருந்து நான் ஓர் உண்மையை கண்டுபிடித்தேன். அந்த உண்மை என்னவென்றால் பாஸ்மாவும் என்னை விரும்புகிறாள். அவள் தொடர்ந்தும் என்னுடன் பேசிக்கொண்டிருக்க விரும்புகிறாள். நேரடியாக தனது விருப்பத்தை சொல்லாமல் சிரிப்பின் மூலம் சொல்ல விழைகிறாள்.

நான் கதைப் புத்தகங்களை அவளிடம் நீட்டி ‘கெட்ட புத்தகங்கள், வாசித்துப் பாருங்கள்’ என்றேன். புத்தகங்களை வாங்கிக் கொண்ட

அவள் தலைப்புக்களைப் பார்த்தாள். *'உனக்காக நான்' 'ஊமை இதயம்' 'சொல்லத் துடிக்கிறேன்' 'இதயத்தில் நீ' 'காதல் வாழ்க'* இப்படியான கதைத் தலைப்புக்கள். 'கெட்ட புத்தகங்கள் தான்' என்றாள் பாஸ்மா. அவள் இப்போதெல்லாம் என்னிடம் புத்தகங்கள் இரவல் வாங்குவதை வழக்கமாக்கிக் கொண்டாள். நான் சும்மா இருந்தேனென்றால் இல்லை. நூறு பக்கங்கள் கொண்ட வெண்ணிறத்தாள் சித்திரம் வரையும் புத்தகம் வாங்கி எழுத்தணிக் கலையைப் பயன்படுத்தி எண்ணூற்று எண்பத்தெட்டு வடிவங்களிலும், எண்ணூற்று எண்பத்தெட்டு நிறங்களிலும் பாஸ்மா பாஸ்மா என்று எழுதிக் கொண்டேயிருந்தேன். எழுத்தணிக்கலை பற்றிக் கேள்விப் பட்டிருக்கிறீர்களா? கணனிகளில் பார்த்தீர்களென்றால் World Art என்று இருக்குமே, அதுதான். ஒவ்வொரு பாஸ்மாவும் அழகாக இருந்தது, கலைத்துவம் பரிணமித்தது. எல்லாவற்றையும் விட ஒவ்வொரு பெயரும் உள்ளக் கிளர்ச்சியை உண்டுபண்ணியது. ஒவ்வோர் இரவிலும் நிலைக்கண்ணாடி முன்னால் நின்று பாஸ்மாவைப் பார்ப்பேன், அவளும் என்னை பார்ப்பாள். அவள் என்னைப் பார்த்து புன்னகைக்க அவளுடைய வதனம் பிறையைப் போல் ஒளிவீசிப் பிரகாசிக்கும். பௌர்ணமி தினங்களில் பூரணநிலவாக இருக்கும். என்னுடைய கற்பனையும் பூரணநிலவுக்குச் சென்று அவளுடன் உரையாடும். நான் வர்ணிப்பேன். அவள் சங்கோஜப்பட்டுக்கொள்வாள்.

"பாஸ்மா உண்மையிலேயே உன்னை விரும்புகிறாளா?" என்று கேட்டான் நண்பன் ஒருநாள். "அந்தச் சந்தேகம் உனக்கும் வரக்கூடாது, எனக்கும் வரக்கூடாது" என்றேன் நான். "சின்னஞ்சிறிய கேள்வி, நீ என்னை விரும்புகிறாயா என்று கேட்டுவிடேன்" என்றான் நண்பன். "முதலில் அன்பு வளரவேண்டும். அது வளர்ந்து விருட்சமாக வேண்டும். அதற்குப் பிறகு பார்க்கலாம்" என்றேன் நான். "சின்னக் கேள்விக்கு இத்தனை பின்னணி ஆலாபனையா? உன் சார்பாக நான் கேட்டு விடட்டுமா?" என்று கேட்டான் நண்பன் "வேண்டாம், காலம் கனியும்" என்றேன் நான்.

எண்ணிலடங்கா வினோதமான காரியங்களில் ஈடுபட ஆரம்பித்த நான் பாஸ்மாவுக்கு என்னென்ன விடயங்கள் விருப்பங்களாக இருந்ததோ அவற்றையெல்லாம் என்னுடைய விருப்பங்களாக மாற்றினேன். அவள் வெளிர் நீலநிற ஆடை அணிந்தால் அன்றையதினம் நான் நீலநிற ஆடை அணிவேன். ஒலிவ் பச்சை அணிந்தால் நானும் பச்சை அணிவேன். அவள் செம்மஞ்சள் அணிந்தால் நான் இளமஞ்சள் அணிவேன். அவள் ரோசா அணிந்தால் நான் இளஞ்சிவப்பு அணிவேன். அவள் என்ன ஆடை அணியப்போகிறாள் என்று எப்படி எனக்குத் தெரியுமென்றால் ஆராய்ச்சி மூலமாகத்தான். தொடர்ச்சியான கண்காணிப்பு, அவதானம், அந்தத் தரவுகளிலிருந்து நான் செய்த அனுமானம், இறுதியில் ஆராய்ச்சி முடிபுகள். குறிப்புகளும் சொல்லுவேன். "இந்த நிறமல்லாமல் அந்த நிற ஆடைகள் என்றால்

நன்றாக இருக்கும்” அவள் அப்படியே அணிந்தாள். “அந்த வகைக் குதிக்காலணிகள் அழகாக இருக்கும்” அவள் அப்படியே மாறினாள். “கைக்கடிகாரத்தின் பட்டி கறுப்பாயின் எடுப்பாக இருக்குமல்லவா?” அவள் அப்படியே வாங்கினாள். பாஸ்மாவின் அன்பை நிரூபிப்பதற்கு எனக்கு வேறு காரணங்கள் தேவையா?.

உயிரியல் மாணவனான எனக்கு இந்த உளவியல், உடலியல், உடற்றொழிலியல் மாற்றங்களுக்கெல்லாம் காரணம் ஹோர்மோன்கள் என்ற விடயம் நன்றாகத் தெரியும். பெண்களிலே ஈஸ்ட்ரஜன் அதிகமாகச் சுரக்கும். ஆண்களிலே அன்ரஜன்களும், டெஸ்தொஸ்திரோனும் அதிகமாகச் சுரக்கும். மனசு விஞ்ஞானியை நம்பவுமில்லை, ஹோர்மோன்களை நம்பவுமில்லை. பாழாய்ப்போன அந்த மனசு பாஸ்மாவின் பின்னாலேயே அலைந்து திரிந்தது. அவளுடைய உருவம் அப்படியே மனசுக்குள் பதிந்து விட்டது. இப்படியெல்லாம் நான் வர்ணனை செய்வதைப் பார்த்து நான் பாடங்களைப் படிக்காமல் சுற்றித் திரிந்தேன் அல்லது சோம்பிக் கிடந்தேன் என்று நீங்கள் நினைத்து விடக்கூடாது. என்னைச் சுற்றி புத்தகங்கள் குவிந்து கிடந்தன. நான் யுத்தஞ் செய்யத் தயாராக இருந்தேன். அளவிடற்கரிய ஞாபக சக்தி நிறைந்தவளாகவும், கூரிய புத்தியுடையவளாகவும் இருந்த பாஸ்மா நுழைமுகத் தேர்விலே சித்தியடைந்து மருத்துவக் கல்லூரிக்குச் செல்லுவாள் என்பதில் எவருக்கும் எந்தச் சந்தேகமும் இருக்கவில்லை. நானும் இந்தத் தேர்விலே சித்தியடைய வேண்டும். அப்போது தான் அவளோடு சேர்ந்து நானும் மருத்துவக்கல்லூரிக்குச் செல்ல முடியும். அதற்காகத் தான் இந்த முனைப்பு எல்லாம்.

நான் சொல்லப்போகும் விஷயத்தை நம்புவது உங்களுக்கு கஷ்டமாக இருந்தாலும் நான் சொல்வதெல்லாம் உண்மை. பரீட்சை நெருங்க நெருங்க என்ன செய்தேனென்றால் உடுத்தியிருந்த ஆடையையும், ஒரேயொரு மாற்றுடையையும் தவிர மற்ற எல்லா ஆடைகளையும் எரித்தேன். ஆடைகள் இல்லாததால் நான் ஆசைதீரக் குளிக்கவில்லை, வெளியூருக்குப் பயணங்கள் செல்லவில்லை, மாலை வேளைகளில் ஜாலியாக உலாவர முடியவில்லை, சினிமா பார்க்கச் செல்லவில்லை. மொத்தத்தில் எல்லாச் சந்தோஷங்களையும் தொலைத்துவிட்டு பித்துப் பிடித்தவனைப் போல் படித்தேன். எல்லாம் அவளுடன் வாழ்க்கையில் ஒன்று சேர்ந்து வாழ வேண்டும் என்ற அந்த ஒரே சந்தோஷத்திற்காக. நான் எதை எதிர்பார்த்து ஆவலுடன் தவமிருந்தேனோ அது நடந்தது. நானும் பாஸ்மாவும் ஒரே மருத்துவக்கல்லூரிக்குத் தெரிவானோம். இந்த மகிழ்ச்சியைக் கொண்டாட சொற்கள் உண்டா? அளவீடு உண்டா? அந்தக் குதூகலத்தை விவரிக்கக்கூடிய நோபல் பரிசு பெற்ற எழுத்தாளர்கள் உண்டா? என் புத்தகராக்கையிலிருந்த எல்லா அகராதிகளிலும் தேடிப் பார்த்தேன். என் உள்ளத்துடிப்பை அச்சொட்டாக வர்ணிக்கக் கூடிய எந்தச் சொல்லும் எனக்கு கிடைக்கவில்லை.

இனிக் காலம் கனிந்து விட்டது. காதலைச் சொல்ல வேண்டிய நேரம் வந்துவிட்டது. நான் என் நண்பனைக் கூப்பிட்டு என்னுடைய செய்தியை பாஸ்மாவிடம் தெரிவித்து வரச் சொன்னேன். "நீயே போய்ச் சொல்லலாமே" என்றான் நண்பன். "நண்பனே, நான் கதையில் சிங்கத்தை போலிருக்கிறேனே தவிர என் இதயம் நொய்ம்மையானது. பாஸ்மா என்னைப் பார்த்து நானும் உங்களை விரும்புகிறேன் என்று சொல்லும் அந்தக் கணத்தில் என் இதயம் வெடித்துவிடும்" என்றேன் நான். போனவன் திரும்பி வரும்வரை என் உயிர் என்னிடத்திலே இருக்கவில்லை, ஆகாரம் தொண்டைக்குழிக்குக் கீழே இறங்கவில்லை. நண்பன் திரும்பி வந்தான். திரும்பி வந்த அவனுடைய முகம் கறுத்துப்போய் இருந்தது. முகபாவனையிலிருந்து ஏதோ நடக்கக் கூடாதது நடந்து விட்டதாக என் உள்மனம் ஓலமிட்டது.

வந்த வேகத்திலேயே "நீ உன்னுடைய முகத்தை எப்போதாவது கண்ணாடியில் பார்த்திருக்கிறாயா?" என்று கேட்டான் நண்பன். "என்ன அர்த்தமற்ற கேள்வி? பாஸ்மாவைச் சந்தித்தாயா? முதலில் அதற்கு விடையைச் சொல்" என்றேன் நான். "அதற்கு விடை இருக்கிறது, முதலில் நான் கேட்ட கேள்விக்கு விடையைச் சொல். கண்ணாடியில் உன் முகத்தை பார்த்திருக்கிறாயா? பார்க்கவில்லை யென்றால் இப்போது பார்" என்று நிலைக்கண்ணாடியை என் முன்னால் நீட்டினான் நண்பன். என்ன பைத்தியமா பிடித்து விட்டது இவனுக்கு? நான் நிலைக்கண்ணாடியில் என் முகத்தை பார்த்தேன். கன்னங்கறுப்பான மேனி, தடித்த உதடுகள், பந்து போன்று உருளைக் கண்கள், மிகவும் அவலட்சணமாக காட்சியளித்தேன் நான். சினிமாக்களில் எத்தனையோ அவலட்சணமான மனிதர்களைப் பார்த்த நான் இன்று இங்கே காண்கிறேன்.

"காகக்கறுப்பு, அடுப்புக்கரி போல் கறுப்பு, நடுநிசிக் கறுப்பு, அழகு எள்ளளவேனும் இல்லாதவன். சிரித்தால் பேய்க்கூச்சலாகவும், பேசினால் காண்டாமிருகம் பேசுவதுபோலும் இருக்கும். குள்ளத்தீவு மனிதர்களைப் போல் குள்ளம். இப்படியான அவலட்சணமான உருவத்தை வைத்துக் கொண்டு உனக்கு எப்படிக் காதல் வந்தது? பாஸ்மாவுக்கு அருகில் நின்று உன்னால் பேச முடியுமா? அழகி அவள். மனதைக் கொள்ளை கொள்ளும் வசீகரமானவள்" என்று மூச்சுவிடாமல் பேசிப் போனான் நண்பன். வருடக்கணக்கான எங்கள் நட்புறவில் அவன் ஒருபோதும் என்னைக் களங்கப்படுத்தி பேசிய தில்லை, கடிந்து கொண்டதுமில்லை. இன்று மிகவும் வித்தியாசமாக இருக்கிறான். நண்பனின் கண்கள் கசிந்தன, "பாப்லு இப்படியெல்லாம் அசிங்கமாகப் பேசி உன்னை நிராகரித்து விட்டாள் அந்த அகங்காரம் பிடித்த பெண்" என்று சொல்லி விம்மினான் நண்பன்.

நான் ஸ்தம்பித்து ஆடாமலசையாமல் இருந்தேன். நேரம் போய்க் கொண்டிருந்தாலும் போனதே தெரியவில்லை. மூன்று மணித்தியாலங்களா? நான்கு மணித்தியாலங்களா? எனக்குத் தெரியாது. நண்பன் அவ்விடத்தை விட்டு அகன்றபின் அழ ஆரம்பித்த நான் மூன்று நாட்களாக அழுதேன். அவள் அப்படியெல்லாம் சொல்லியிருக்க மாட்டாள். மனசு குழம்பி ஏதோ உளறியிருக்கிறாள். அவளை நான் மன்னித்து விடுவேன். என்னை ஆசுவாசப்படுத்திக் கொண்டே *என்னுடைய முகம் கறுப்பாக இருக்கலாம். ஆனால் உள்ளம் வெள்ளையானது. நான் அவலட்சணமானவன், ஏற்றுக் கொள்கிறேன். ஆனால் உன்மீது நான் வைத்து இருக்கும் அன்பு வானம் இருக்கும் இடம்வரை விரிந்து விரிந்து செல்லும், வியாபித்திருக்கும்*. என்று நண்பன் மூலமாக பாஸ்மாவுக்கு மீண்டும் செய்தி அனுப்பினேன். பதிலும் உடனே வந்தது. *“யாருடைய உள்ளத்தையும் நல்ல கிரியைகள் மூலம் வெள்ளையாக்கி விடலாம். ஆனால் கன்னங்கரிய முகத்தை வெள்ளையாக்கலாமா? ஆளே அவலட்சணமாக தோற்றமளிக்கும் போது அன்பு இமயமலையளவு உயர்ந்திருந்தும் கிடைக்குமா பயன்?”* என்று பதிலனுப்பியிருந்தாள் பாஸ்மா.

பாஸ்மாவைச் சந்திப்பதற்கு எவ்வளவோ முயற்சி செய்தும் எப்போதும் என்னோடு கலகலவென்று பேசிக்கொண்டிருக்கும் பாஸ்மா இப்போது என்னைக் கண்டாலே முகத்தை திருப்பிக் கொண்டாள். நான் பித்தனானேன், எல்லாத் தவணைப் பரீட்சைகளிலும் குறைந்த புள்ளிகளைப் பெற்றேன். நண்பன் என்னைத் தேற்ற எவ்வளவோ முயன்றும் எந்த ஆறுதல் வார்த்தைகளாலும் என் இதயத்தில் உண்டான ரணம் ஆறவில்லை. நடுஇரவில் திடீரென விழித்து சிலவேளை அழுவேன். எதிர்கால டாக்டர் இப்படிச் சிறுபிள்ளையைப் போல் தேம்பலாமா என்று நண்பன் கேட்டான். என்னுடைய மனவேதனையை யாரிடம் போய்ச் சொல்லுவது?

நானறிந்தவரை மனிதர்களின் நிறவேறுபாடுகளுக்குக் காரணம் மெலனின் எனப்படும் இரசாயனப் பதார்த்தம் ஆகும். Pheomelanin என்றும் Eumelanin என்றும் இரு வகையான மெலனின்கள் காணப்படுகின்றன. இயுமெலனின் சிவப்பையும், பியமெலனின் கபிலநிறத்தையும் வெளிப்படுத்தும். அவ்விரு மெலனின்களின் பல்வேறுபட்ட சேர்க்கையால் மனிதமேனியின் நிறம் வேறுபடலாம். நான் மனிதர்களின் நிறமூர்த்தங்கள் சம்பந்தமான ஆராய்ச்சியில் இறங்கினேன். Gene Therapy எனப்படும் நிறமூர்த்த சிகிச்சை பற்றி கேள்விப்பட்டிருப்பீர்கள். இந்த சிகிச்சையின் மூலம் அவலட்சணமான உருவத்தை அழகாக்க முடியுமா என்றும், கறுப்பான முகத்தை வெள்ளையாக மாற்ற முடியுமா என்றும் நூலகம் முழுவதும் தேடி புத்தகங்களைப் புரட்டிப் பார்த்தேன். மனிதர்களைப் படைத்தவன்

கடவுள்தான். இந்த விஷயத்தில் உங்களுக்கு கிஞ்சித்தேனும் சந்தேகம் இருந்தால் நீங்கள் ஞானஸ்தன் இல்லை. ஞானஸ்தனாக இருந்தால் Gene mapping படித்துப் பார்க்கலாம். Gene mapping என்றால் நிறமூர்த்தங்கள் ஒழுங்குபடுத்தப் பட்டுள்ள ஒழுங்கு. மனிதன் என்பவன் நுட்பங்களின் தொகுப்பு அல்ல, நுட்பங்களின் பிரளயம். கடவுள் சிருஷ்டித்துள்ள இந்தப் பிரளயத்திலே ஒரு துளிதான் Gene mapping. அதைப் படிக்கப் படிக்க கடவுளைப் பற்றிய ஞானம் அதிகரித்துக் கொண்டே போகும்.

“என்னப்பா பாப்லு, கவலையடைந்த பிரகிருதியாய் அலைகிறாய்?” என்று பேராசிரியர் கேட்க நான் என் காதலிக்காகப் படும் அவஸ்தையை மனந்திறந்து சொன்னேன். மிகவும் நட்புள்ளம் கொண்ட நிறமூர்த்தவியல் பேராசிரியர் அவர். “உன்னை அழகாக்க, கறுப்பை வெண்மையாக்க சிகிச்சையா? என்ன பாப்லு என்னைக் குழப்பத்தில் ஆழ்த்துகிறாய்?” என்று கேட்டார் பேராசிரியர். அந்தச் சந்திப்புக்குப் பின் பேராசிரியரைப் பார்க்கும் வேளைகளிளெல்லாம் ஆழ்ந்த சிந்தனையில் மூழ்கிப்போயிருந்தார். அல்லது எப்போது பார்த்தாலும் நூலகத்தில் உள்ள தடித்தஅட்டை கொண்ட பாரமான புத்தகங்களைப் அவர் புரட்டிக் கொண்டிருப்பதை நான் கண்ணுற்றேன். அல்லது இணையத்தளத்தில் எல்லாத் திறப்புச் சொற்களையும் பாவித்து மேய்ந்து கொண்டிருந்தார். “ஐயா பேராசிரியரே, எனக்காக உங்கள் பெறுமதியான நேரத்தை வீணாக்க வேண்டாம்” என்று நான் எவ்வளவோ எடுத்துச் சொல்லியும் பேராசிரியர் என் கதையை காதில் போட்டுக்கொள்ளவில்லை. “இருபது வருடங்களாக ஆயிரக்கணக்கான மாணவர்கள் என்னிடம் படித்துவிட்டுப் போய் விட்டார்கள். ஆனால் அவர்கள் புத்தகப் பூச்சிகள். கற்ற அறிவை பரீட்சித்துப் பார்ப்பதற்கு நீதான் உண்மையான வேலை தந்திருக்கிறாய்” என்று பதிலளித்தார் பேராசிரியர். கடைசியிலே அழகு என்பதற்கு விஷேடமான நிறமூர்த்தமில்லை என்பதை பேராசிரியரும் ஒப்புக் கொள்ள வேண்டியதாயிற்று.

நான் மனமுடைந்தேன். “Cloning மூலம் முயற்சியொன்று செய்து பார்ப்போமா?” என்று பேராசிரியர் கேட்டார்.
“என்னையா?”
“இல்லை அவளை”
பேராசிரியர் விளங்கப்படுத்தினார். பாஸ்மாவிலிருந்து டிஎன்ஏ ஐ எடுத்து அதன்மூலம் அவளையே உருவாக்குதல். அதாவது அவளுடைய அசல்பிரதி. “பாப்லு நான் பாஸ்மாவை உருவாக்குகிறேன். ஆனால் அவள் பெரியவளாகும் வரை நீ கிட்டத்தட்ட இருபது வருடங்கள் காத்திருக்க வேண்டியிருக்கும்” என்றார் பேராசிரியர்.

“எத்தனை வருடங்களானாலும் நான் பாஸ்மாவுக்காக காத்திருக்கிறேன் ஐயா. ஆனால் பாஸ்மாவின் டிஎன்ஏ யிலிருந்து நீங்கள் யாரை உருவாக்கப் போகிறீர்கள்?”
“பாஸ்மாவைத் தான் உருவாக்கப் போகிறேன்”
“அவள் எப்படிப்பட்டவளாக இருப்பாள்?”
“அச்சொட்டாக பாஸ்மாவைப் போலவே இருப்பாள்”
“அவளுடைய மனசு?”
“மனசும் பாஸ்மாவின் மனசைப் போலவே இருக்கும்”
“அப்படியானால் அதே பிரச்சினை மீண்டும் உண்டாகும்”
“என்ன பிரச்சினை?”
“அந்தக் குளோன் பெண்ணும் வெள்ளைத் தோற்றமுள்ள அழகான ஓர் ஆணைத்தான் விரும்புவாள், என்னை வெறுப்பாள்” என்றேன் நான்.

எல்லா வாசல்களுக்கும் தாழ்ப்பாள் விழுந்தாயிற்று. நான் மின்மினி. என் லூசிபெரஸ் நொதியங்கள் தீர்ந்தன, விளக்குகள் அணைந்தன, தன்னந்தனியாக இருட்டில் தடுமாறினேன். முடிவு எடுக்க வேண்டிய தருணம் வந்துவிட்டது. முடிவை எடுத்தேன். அன்று எனது பிறந்தநாள். பிறந்தநாளில் என் கண்கள் கலங்கியிருப்பதைப் பார்த்ததும் பயந்த நண்பன் எனக்கு எவ்வளவோ தேற்றும் வார்த்தைகள் எடுத்துச் சொன்னான். அன்றிரவு நான் என் அறைக் கதவு, ஜன்னல்களுக்கு இரட்டைத் தாழ்ப்பாள் போட்டுவிட்டு கடிதம் எழுத ஆரம்பித்தேன். ‘அன்புள்ள பாஸ்மா’ என்று தொடங்கும் போதே கண்களில் கண்ணீர் தளும்பியது. தொடர்ந்து எழுதினேன். எழுதிக் கொண்டே இருந்தேன். கண்களிலிருந்து கண்ணீர் சொட்டுச்சொட்டாய் விழுந்து தெறித்து கொண்டிருக்க எழுதும் காகிதமும் நனைந்து கொண்டே இருந்தது. கடிதம் முடிந்தபோது விடிந்தது. சுற்றும் முற்றும் பார்த்தேன், இறுதிப்பார்வை. விஷம் - தூக்க மாத்திரைகள் - திரவங்கள் நிறைந்த சிறு குப்பிகள் - எதை அருந்தினாலும், எதை விழுங்கினாலும் மரணம் நிச்சயம். நான் மனதைக் கல்லாக்கிக் கொண்டேன்.
“உலக மாந்தர்களே, என்னை மன்னித்து கொள்ளுங்கள். பாஸ்மா இல்லாமல் என்னால் வாழவே முடியாது” நான் விஷத்தை முற்றாக வாய்க்குழிக்குள்ளே ஊற்றினேன்.

இருபது வருடங்களுக்குப் பிறகு போதனா வைத்தியசாலைக்கு நான் Gene therapist ஆக இடமாற்றம் பெற்றுச் சென்றபோது பாஸ்மாவும் அங்கிருந்தாள். சார்ள்ஸ் டிக்கன்ஸ் இருபது வருடங்களுக்கு பிறகு சந்தித்ததை போல் உடல்தளர்ந்தோ, ஒடுங்கியோ, நிறம் குறைந்தோ இல்லாமல் முன்பைவிட பேரழகுடன் அவள் காட்சியளித்தாள். கண்களில் அதே ஒளிப்பிரவாகம் பளிச்சிட்டது. நான் ‘ஹலோ’ என்றேன். அவளும் பதிலுக்கு ‘ஹலோ’ என்றாள். அவள் என்னுடன் பேசுவாளா என்று சற்றுத் தயங்கினேன். ஆனால் பாஸ்மாவோ ஒன்றுமே நடக்காதது போல் என்னுடன் சகஜமாக உரையாடினாள். நான்

பணிபுரிந்த அதே ஆஸ்பத்தியிலேயே அவள் Clinical Psychiatrist ஆகப் பணிபுரிந்தாள். நாட்கள் போகப்போக சின்னச்சின்ன விடயங்களை நாங்கள் கதைத்தாலும் அவளின் குடும்பத்தைப் பற்றி நான் வாயே திறக்கவில்லை. ஒருநாள் பாஸ்மாவே பேச்சை எடுத்தாள். “எனக்கு இரண்டு பெண்களும் ஒரு ஆணும்” என்றாள் அவள். “எனக்கு இரண்டு ஆண்களும் ஒரு பெண்ணும்” என்றேன் நான்; கணவனைப் பற்றி அவள் சொல்ல நான் என் மனைவியைப் பற்றிச் சொன்னேன். அவளுடைய குழந்தைகளின் பிறந்தநாள் வைபவங்களுக்கு அவள் என்னை அழைக்க நான் போனேன். என்னுடைய குழந்தைகளின் பிறந்தநாள் வைபவங்களுக்கு அவளை அழைக்க அவள் வந்தாள். “எனக்காக தற்கொலை செய்ய முயற்சித்தீர்களாமே” என்று சிரித்துக்கொண்டே கேட்டாள் பாஸ்மா ஒருநாள். எனக்கு வெட்கமாகிப் போக நான் சிரித்தேன். “அதுமட்டுமல்ல” என்று சொன்ன நான் அவளுக்காகச் செய்த முட்டாள் தனமான காரியங்களையெல்லாம் பட்டியல் போட்டுச் சொன்னேன்.

அவளுடைய பெயரைப் பக்கம் பக்கமாக எழுதியது, அவளுடைய வீட்டைச் சுற்றிச்சுற்றி வந்தது, அவளை பைசிக்கிளில் பின் தொடர்ந்தது, அவளைப் போல் ஆடை அணிந்தது, அவளுடைய படத்தை வரைந்தது, தனியாக பாட்டுப் பாடியது என்று நான் இப்படியே சொல்லிக் கொண்டு போக “எனக்கு இவையெல்லாம் தெரியாதென்றா நினைத்துக் கொண்டிருந்தீர்கள்? எல்லாம் எனக்குத் தெரியும்” என்றாள் பாஸ்மா. “அதையும்விட இன்னும் நிறையவே இருக்கிறது” என்று சொன்ன அவள் மற்றவர்களுக்குத் தெரியாமல் நான் புரிந்த சில்மிஷங்களையெல்லாம் விலாவாரியாக என்னிடம் விவரிக்கவும் “உங்களுக்கு இவையெல்லாம் எப்படித் தெரியும்?” என்று நான் ஆச்சரியத்துடன் வினவினேன். “எனக்கும் ஒற்றர் படை இருந்தது” என்று புன்னகைத்தாள் பாஸ்மா. எவ்வளவு துல்லியமாக என்னை அவதானித்திருக்கிறாள் இந்தக் குறும்புக்காரப் பெண். எல்லாவற்றையும் தெரிந்து கொண்டு எந்தவித முகப் பிரதிபலிப்பும் இல்லாமல் இருந்தது எவ்வளவு கடினமான காரியம்! எவ்வளவு நெஞ்சழுத்தம் வேண்டும்.

ஒருநாள் அவள் சிற்றுண்டி உணவுகள் தயாரித்துக் கொண்டுவர அவைகளை நான் ரசித்துச் சாப்பிட்டேன். “நீ சமையல் நிபுணியாக வரவேண்டியவள். இங்கு அல்லாடிக் கொண்டிருக்கிறாய்” என்று நான் சொல்ல “அளவு மீறிய புகழ்ச்சி” என்றாள் பாஸ்மா. “இல்லை மனம்விட்டுச் சொல்கிறேன். அற்புதமான இந்தச் சுவையை வாழ்க்கையில் நான் அனுபவித்ததே இல்லை” என்றேன் நான். சந்தர்ப்பம் கிடைக்கும் போதெல்லாம் பாஸ்மா சுவையான தீன்பண்டங்கள் கொண்டுவர நானும் விரும்பி உண்டேன். இப்போது

எங்களது தனிப்பட்ட விருப்பு வெறுப்புக்கள், தகவல்களையும் நாங்கள் பரிமாறிக் கொண்டோம். ஆடைகள், பொழுதுபோக்கு, பூச்செடி வளர்த்தல், பிடித்த விளையாட்டு வீரர், நாடகம், கவிதை இப்படி எங்கள் உரையாடல்கள் விரிந்துகொண்டே சென்றன. பிள்ளைகளின் கல்வி, எதிர்காலம், புறக்கிருத்தியங்கள் தொடர்பாகவும் நிறையப் பேசினோம்.

எப்படியிருந்த போதிலும் பாஸ்மா எனது அவலட்சணமான உருவத்தையும், கறுப்பையும் காரணமாகக் காட்டி என்னை நிராகரித்த விடயம் நெருஞ்சிமுள் போல் என் மனதில் உறுத்தியது. வாழ்க்கையில் எப்போதாவது அவளைச் சந்திக்கும்போது கடுமையாக இரண்டு வார்த்தைகள் கேட்க வேண்டுமென்று பிரதிக்ஞை எடுத்திருந்தேன். காலம் போகப்போக அந்த உணர்வு கொஞ்சம் கொஞ்சமாக குறைந்து இறுதியில் அடியோடு அழிந்து விட்டது. அது மட்டுமல்லாமல் அவளது அழகிய முகத்தை பார்க்கும் போதெல்லாம் இந்த இடக்குமுடக்கான கேள்வியைக் கேட்டு அவளுடைய முகம் கோணலாகிப் போவதைப் பார்க்க என் உள்ளம் கிஞ்சித்தேனும் விரும்பவில்லை.

ஓரிரண்டு நாட்கள் பாஸ்மா வேலைக்கு வரவில்லை. மூன்றாவது நாள் அவள் வேலைக்கு வரும் போது அவள் முகம் நன்றாக வாடியிருந்தது. "ஏன் என்ன நடந்தது?" என்று நான் கேட்க அவள் ஒரு கடிதத்தை என்னிடம் நீட்டினாள். இடமாற்றக் கடிதம்.
"பாஸ்மா நீங்கள் எவ்வளவு காலம் இந்த ஆஸ்பத்திரியில் வேலை செய்கிறீர்கள்?"
"சுமார் பத்து வருடங்கள்"
"அப்படியானால் கவலைப்படுவதற்கு என்ன இருக்கிறது? இத்தனை வருடங்கள் ஒரே இடத்தில் வேலை செய்வதும் போரடிக்கும் விஷயம் தானே. போவது தான் நல்லது" என்றேன் நான். அப்போது தான் அவளது கண்களில் கண்ணீர் தளும்பியிருப்பதை அவதானித்தேன்.
"பாஸ்மா இப்போது என்ன நடந்து விட்டது? இந்தச் சின்ன விஷயத்துக்காக ஏன் இப்படி அழுகின்றீர்கள்?" என்று கேட்டேன் நான்.
"பாப்லு, உண்மையைச் சொல்லுங்கள். நான் இடமாற்றம் பெற்றுச் செல்வது உங்களுக்கு துயரத்தை உண்டு பண்ணவில்லையா?"
"பாஸ்மா, ஏன் குழந்தை மாதிரி பேசுகிறீர்கள்? நீங்கள் யார்? நான் யார்? இந்தச் சின்ன விஷயத்துக்காக நான் ஏன் கவலைப்பட வேண்டும்?"

பாஸ்மாவின் கண்களிலிருந்து கண்ணீர் பொலபொலவென்று உதிர சட்டென்று என் விரல்களைப் பிடித்துக் கொண்டே "நான் உங்களை விரும்புகிறேன்" என்று சொன்னாள் பாஸ்மா. இந்த எதிர்பாராத சம்பவத்தால் நான் ஸ்தம்பித்துப் போக தொண்டைக்குழிக்குள்ளேயே சொற்கள் அடைத்து என்னால் மேலே பேசவே முடியவில்லை. என்னை சுதாகரித்துக் கொண்டே "பாஸ்மா என்ன விளையாடுகிறீர்களா?" என்று

சற்றுக் கோபத்துடன் கேட்டேன் நான். "விளையாடவில்லை. மிகவும் நன்றாக யோசித்துத் தான் சொல்கின்றேன் I love you" என்றாள் பாஸ்மா. "பாஸ்மா, இருபது வருடங்களுக்கு முன் இதே வார்த்தைகளைச் சொல்லியிருந்தீர்களென்றால் நான் எவ்வளவு சந்தோஷப்பட்டு இருப்பேன். இப்போது அந்தக் கதையெல்லாம் முடிந்து விட்டது. நான் இப்போது திருமணமான ஆண். நீங்கள் திருமணம் ஆன பெண். இப்படிச் சொல்வதே மகாபாவம்" என்றேன் நான். "நீங்கள் என்ன நினைத்தாலும் சரி இருபது வருடங்களாக ஆசையை மனதிலே தேக்கி வைத்துக் கொண்டு நான் அழுத நாட்கள் எத்தனை தெரியுமா? இந்த வாக்கியத்தை நான் சொல்லக் கூடாதது தான். நான் இப்போதாவது சொல்லாமல் விட்டிருந்தால் எனக்குப் பைத்தியம் பிடித்திருக்கும்" என்று பாஸ்மா சொல்லச் சொல்ல எனக்கு என்னையே நம்பமுடியவில்லை. பாஸ்மா என் முன்னிலையில் தேம்பித் தேம்பி அழுது கொண்டிருந்தாள். இது என்ன அதிசயமான வாழ்க்கை நாடகம்?

"அப்படி என்றால் இவ்வளவு ஆசைகளையும் வைத்துக் கொண்டு அன்று ஏன் என்னை அவமானப்படுத்தினீர்கள்?"
"நிச்சயமாக நான் அவமானப்படுத்தவில்லை. உங்கள் புகைப்படம் எப்போதும் என் கைப்பையில் இருந்தது. இப்போதும் அலுமாரியில் பத்திரமாகப் பூட்டி வைத்திருக்கிறேன். உங்கள் மதம் வேறு. என்னுடைய மதம் வேறு. என் தந்தையோ தீவிர மதவாதி. நான் விருப்பம் தெரிவித்திருந்தாலும் எங்கள் திருமணம் ஒருபோதும் நடந்திருக்காது. நீங்கள் அந்தத் துயரத்திலேயே உங்கள் வாழ்க்கையை இழந்திருப்பீர்கள். இப்போது வாழ்க்கையில் உயர்ந்த இடத்திற்கு நீங்கள் வந்திருக்கிறீர்கள். நீங்கள் என்னைக் கடுமையாக வெறுக்க வேண்டுமென்பதற்காகவே அன்று அந்த வார்த்தைகளைப் பாவித்தேன். அன்றைய நாள் நான் எவ்வளவு அழுதேன் தெரியுமா? இரண்டு வாரங்கள் சாப்பிடாமலேயே இருந்தேன். ஆனால் நீங்கள் என்னை வெறுக்கவேயில்லை. நீங்கள் தற்கொலை செய்ய முயற்சித்த விஷயம் பிறகு தான் எனக்கு தெரியும். அதந்குள் எனது திருமணமும் நடந்து விட்டது" என்று பேசி முடித்தாள் பாஸ்மா.

"இருபது வருடங்கள் என் நினைவாகவே வாழ்ந்திருக்கிறீர்கள். அது உன் கணவனுக்குச் செய்யும் மாபெரும் துரோகமல்லவா?"

"உண்மைதான். அறிவுபூர்வமாக பார்த்தால் தவறுதான். ஆனால் மனத்தை கட்டுப்படுத்தும் ஆற்றல்தான் எனக்கில்லையே. நான் பலவீனமான பெண். இனிமேலும் நீங்கள் இல்லாமல் என்னால் வாழவே முடியாது" என்று தீர்க்கமாகச் சொன்னாள் பாஸ்மா. நான் முடிவு செய்தேன். இக்கதை தொடர்வது நல்லதல்ல. இது நடக்கவே கூடாத நாடகம். "பாஸ்மா நீங்கள் பத்தொன்பது வயது பருவப்பெண் மாதிரி கதைக்கிறீர்கள். சரியோ பிழையோ நடக்க வேண்டிய விஷயங்கள் எல்லாம் நடந்து முடிந்து விட்டன. அது மட்டுமல்ல நான்

ஒரு டாக்டர். நீங்களும் ஒரு மனோதத்துவ டாக்டர். இப்படி நீங்கள் பேசவேகூடாது. எப்போதும் போல் நல்ல நண்பர்களாகவே இருப்போம்" என்றேன் நான். பாஸ்மா கைப்பையைத் திறந்தாள். அவள் கரத்திலே அழகிய வேலைப்பாட்டுடன் வைரமோதிரமொன்று மின்னியது. "ஓகே. நீங்கள் சொல்வதை ஏற்றுக் கொள்கிறேன். இதோ இருக்கிறது வைரமோதிரம். இந்த மோதிரத்தை உங்கள் கைகளால் என்விரலில் அணிந்து விடுங்கள். அந்த மனத் திருப்தியுடனேயே நான் எனது மிகுதிக் காலத்தை கழித்து விடுகிறேன். நாம் நல்ல நண்பர்களாகவே இருப்போம்" என்றாள் பாஸ்மா பைத்தியக்காரி மாதிரி. நல்ல வேளையாக ஆபத்பாந்தவனைப்போல் நண்பன் வந்துவிட கதை நின்று விட்டது. அன்றிலிருந்து பாஸ்மாவுடன் பேசுவதை நான் அடியோடு நிறுத்தினேன். அவளைத் தவிர்த்துக் கொள்வதற்காக இரண்டு வாரங்கள் விஷேட விடுமுறை எடுத்துக் கொண்டு மனைவி மக்களுடன் சுற்றுப்பயணம் போனேன்.

பாஸ்மாவிடமிருந்து என் கையடக்கத் தொலைபேசிக்கு நாளைக்கு நூறு தடவைகளாவது அழைப்புக்கள் வந்தாலும் நான் ஒன்றுக்கும் பதிலளிக்கவில்லை. கொஞ்சநாட்கள் கழித்து பாஸ்மா சுகவீனமுற்றிருப்பதாக கேள்விப்பட்டும் நான் பார்க்கச் செல்லவில்லை, அவள் வேலைக்கு வரவுமில்லை. ஒருநாள் நண்பன் என்னிடம் வந்தான். "பாப்லு, கல்நெஞ்சக்காரனாக நீ இருப்பாயென்று நான் நினைக்கவேயில்லை. பாஸ்மா மரணப்படுக்கையில் இருக்கிறாள். என்னை காணும் போதெல்லாம் உன்னை ஒருதடவை வந்து பார்க்கும்படி கெஞ்சுகிறாள். ஏன் இப்படி நடந்து கொள்கிறாய்?" என்று என்னைக் கடிந்து கொண்டும் நான் பார்க்கச் செல்லவில்லை. நாட்செல்லச்செல்ல பாஸ்மாவின் உடல்நிலை குறித்து மோசமான செய்திகள் வர ஆரம்பித்த அதேவேளை நண்பன் மீண்டும் வற்புறுத்தவே நான் போக மனமின்றி அங்கு சென்றபோது அவள் படுக்கையிலிருந்த நிலைமை மிகமிக மோசமாக இருந்தது. அழகு எல்லாவற்றையும் இழந்து, நிலைகுலைந்து, உருக்குலைந்து, மீனின் எலும்புக் கூடு போல் தோற்றமளித்தாள் பாஸ்மா. என்னைப் பார்த்து என்னவெல்லாமோ பேசத் துடித்தாள். அவளால் முடியவில்லை. கணவன், பிள்ளைகள் எல்லோரும் அவள் அருகிலேயே சோகத்துடன் அமர்ந்திருந்தார்கள். டாக்டர் என்ற முறையிலாவது அவளது கையைத் தொட்டு ஆறுதல் சொல்லும்படி நண்பன் என்னை எவ்வளவோ கெஞ்சியும் நான் பிடிவாதமாக மறுத்து விட்டேன். அடுத்த நாள் காலையிலே பாஸ்மாவின் உயிர் பிரிந்து விட்டதாக எனக்குச் செய்தி வந்தது. என் கண்இமைகளில் கண்ணீர் அருவி போல் ஓடியது. இருபது வருடங்களுக்கு முன் எப்படி அழுதேனோ அப்படி.

"ஏன் மாசாலைக்கண்ணீர்? இவ்வளவு அழுகின்ற நீ நோயாளி என்று நினைத்தாவது அவளது கையைத் தொட்டு ஆறுதலாக இரண்டு

வார்த்தைகள் சொல்லியிருக்கலாமே" என்றான் நண்பன். "டாக்டர் என்றால் புனிதமான எண்ணத்துடன் நோயாளியைத் தொடவேண்டும். என்னிடம் அந்தப் புனிதம் இல்லை" என்றேன் நான்.

"என்ன சொல்கிறாய் பாப்லு?"

"வாழ்க்கையில் நான் மிகப் பெரும் தவறொன்று செய்தேன். அது தான் தற்கொலை செய்ய முயற்சித்தது. எந்த மனிதனுக்கும் தன்னுடைய உயிரை மாய்த்துக் கொள்ள உரிமை கிடையாது. அது மகாபாவம். நரகத்துக்கு கொண்டுபோய்ச் சேர்க்கும். அந்தப் பாவத்திலிருந்து கடைசி நேரத்தில் வந்து என்னை காப்பாற்றினாய். அதைப்போல் மீண்டுமொரு தவறைச் செய்ய நான் விரும்பவில்லை"

"நான் அறிந்த வரை நீ வேறு தவறு ஏதும் செய்ததாகத் தெரியவில்லையே" என்றான் நண்பன். "அன்றொரு நாள் திருமண மோதிரத்தையும் கையில் வைத்துக்கொண்டு விரலில் போட்டுவிடச் சொல்லி பாஸ்மா கெஞ்சினாள் அல்லவா"

"ஆமாம்"

"பிரமச்சாரியாக நான் இருந்திருந்தால் அன்றைக்கே மோதிரத்தை போட்டுத் திருமணமும் செய்திருப்பேன்" என்றேன் நான்.

"என்ன பாப்லு, தப்புத் தப்பாய்க் கதைக்கிறாய்?"

"தப்புத் தப்புதான். இருபது வருடங்களுக்கு முன் மரணப் பிடியிலிருந்து என்னை நீ காப்பாற்றிய போது என்னிடம் வாக்குறுதியொன்று கேட்டாய். ஞாபகமிருக்கிறதா?"

"ஆம் நன்றாகவே ஞாபகமிருக்கிறது. நீ பாஸ்மாவை முற்றாக மறந்துவிட வேண்டுமென்று நான் கேட்டுக்கொண்டேன். நீயும் சரியென்று வாக்குறுதி தந்தாய்"

"உண்மையைச் சொல்லப்போனால் அந்த வாக்குறுதியை என்னால் காப்பாற்ற முடியவில்லை" "என்ன பாப்லு சொல்கிறாய்?" என்று அதிர்ச்சியுடன் கேட்டான் நண்பன்.

"துளியூண்டுகூட என்னால் பாஸ்மாவை மறக்கவே முடியவில்லை. இருபது வருடங்களாக அவள் என்மனதில் வாழ்ந்து கொண்டிருக் கிறாள். இனியும் வாழ்வாள்......"

சிங்கம் இந்த நரக வாழ்க்கையை வெறுக்கும் நிலைமைக்கு எப்போதா வந்துவிட்டது. நாளாந்தம் கம்பிகளை எண்ணும் வேலை. அறுபத்தெட்டு கம்பிகள். அயலிலுள்ள மரங்களின் இலைகளை யெண்ணும் வேலை. ஐந்து இலட்சத்து அறுபத்தேழாயிரத்து அறுநூற்று தொண்ணூற்றியாறு இலைகள். சந்தோஷம் தரக்கூடிய பழைய முகவரியைத் தொலைத்தது மனதில் சலிப்பை ஏற்படுத்தியது. அது "திரு சிங்கம், காட்டுராஜா, காட்டுத்தர்பார், காடு" என்ற முகவரி. சிங்கத்தின் புதிய முகவரி "திரு சிங்கம், சிங்கக்கூடு, மிருகக் காட்சிசாலை, சொர்க்கபுரி" இது மிகவும் சோகமான முகவரி.

காடு, மரங்களடர்ந்து, கொடிகளர்ந்து, கற்களும் முட்களும் நிறைந்து இருந்தது. பாதைகள் கரடுமுரடாக இருந்தன. ஆனாலும் வனாந்தரத்தில் வாழ்வதிலே அலாதியான இன்பம் இருந்தது. காலையில் எழுந் திருத்தல், சூரியனை ரசித்தல், சோம்பல் முறித்தல், இரையைத் தேடி அலைதல், இரையைப் பாய்ந்துபிடித்தல், கிழித்துப் புசித்தல், ஏப்பம்விட்டு படுத்துத் தூங்குதல் என்று வனாந்தர நாட்களின் ஆரம்பமே திரில்லாக இருக்கும். காலிலே முட்கள் தைத்தாலும், நடக்க முடியாமல் கால்கள் வீங்கினாலும், மேனியிலே செடிகொடிகளும், மரத்துண்டுகளும் உராய்ந்து ரணமானாலும், ரணமாகிச் சீழ்வடிந்தாலும் காட்டிலே கிடைக்கின்ற சுதந்திரத்திற்கும், நிம்மதியான வாழ்க்கைக்கும் இங்கே அனுபவிக்கின்ற சொகுசுகள் எவையுமே ஈடாகமாட்டா. எல்லாவற்றை விடவும் காட்டுக்கு அரசன் நான் என்ற கம்பீர தோரணை இருந்தது, அங்கே நிமிர்ந்த, கூரிய பார்வை இருந்தது, கர்வம் இருந்தது, காற்றையும் ஊடுருவிப் பார்க்கக் கூடிய விழிகள் இருந்தன. காட்டிலே நடந்து செல்லும்போது நிலம் அதிரும் காடே அசையும். கர்ஜனையைச் செவிமடுக்கும் அனைத்துக் காட்டுவாழ் ஜீவராசிகளும் அலறியடித்துக் கொண்டு ஓடும்போது அளவிடற்கரிய சந்தோஷம் உள்ளத்திலே கரை புரண்டோடும்.

இன்று சந்தோஷத்தைத் தொலைத்தாயிற்று. எல்லா நாட்களும் ஒரே வகையான மாமிசத்தைப் புசித்துப்புசித்து நாக்கு செத்துப் போய்விட்டது. பாவிமனிதன் என்னைக் கொண்டுவந்து இரும்புக் கூண்டிற்கள் அடைத்துவிட்டான். கூண்டின் நான்கு மூலைகளிலும் நான்கு சிங்கங்கள். விடியற்காலை விழித்ததிலிருந்து நான்கு பழைய ராஜாக்களும் ஒருவர் முகத்தை ஒருவர் பார்த்துக்கொண்டிருக்கும் பரிதாப நிலைமை. வாழ்க்கை முற்றாகவே போரடித்தது. வந்து சேர்ந்த ஆரம்பநாட்களில் சிங்கம் அடம்பிடித்து அழுதது, மிருகக்காட்சிசாலைக்கு வரும் சிறுவர்கள் சிங்கத்தின் கண்களில் கண்ணீர் வடிந்திருப்பதைப் பார்த்தார்கள். சிங்கமாவது கண்ணீர் வடிப்பதாவது, நாடகம்! மாசாலைக்கண்ணீர்! என்று அவர்கள்

பேசிக்கொண்டார்கள். அந்த உரையாடலை அடிக்கடி செவிமடுக்கும் சிங்கம் மிகவும் துயருற்றது.

ஒருநாள் குட்டிப் பையனொருவன் சிங்கத்தைப் பார்த்து "நீ உண்மையிலேயே சிங்கம்தானா?" என்று கேட்க சிங்கமும் "ஆம் நான் சிங்கமே!" என்று அவனுக்குப் பதில் சொல்லிற்று. சிங்கம் சொன்னபதில் சிறுவனுக்குப் புரியவில்லை. ஆனாலும் அருகிலிருந்த சுட்டிச் சிறுமி அழகாகப் பதிலளித்தாள். 'சிநேகிதனே, காட்டில் இருக்கும் வரை அது சிங்கமாகத்தானிருந்தது, சிங்கத்திற்கு ராஜாங்கம் இருந்தது. இன்று சிங்கம் பூனையாகி விட்டது. அது கூண்டிற்குள் இப்போது எலி பிடித்துக் கொண்டிருக்கிறது' என்று கேலியாகச் சொன்னாள் அவள். உரோஷம் பொத்துக்கொண்டு வந்த சிங்கம் வெகுண்டெழுந்தது. ஆக்ரோஷத்துடன் அவர்கள் இருவரையும் கடித்துக் குதறவேண்டும்போல் அதற்குத் தோன்றிற்று. எப்படித்தான் ஆர்ப்பரித்தாலும் இறுதியிலே கர்ஜிப்பதோடும், உறுமுவதோடும் சிங்கம் அடங்கிப்போகும். அன்றும் அடங்கிப்போனது. குரங்குகளுக்கு வாழைப்பழம் கொடுப்பதைப்போல் சிறுவர்கள் சிங்கத்தின் வாய் இருக்குமிடத்தை இலக்கு வைத்து கம்பிகளுக்கூடாக அவிந்த வாழைப்பழங்களை எறிவாரகள், சிலர் கடலை விதைகளையும், சிலவேளை மாங்கொட்டைகளைக் கூட எறிவார்கள். அத்தருணங்களில் சிங்கம் அடக்கவொண்ணாச் சினத்தால் அவதியுறும், கூண்டுக்கம்பிகளை முன்னங்கால்களால் பிறாண்டும், கால்களிலிருந்து இரத்தம் கசியும். "நான் வாழைப்பழம் சாப்பிடாத ஜாதி" என்று உரத்துக் கதறும். அதன் அலறல் யாருக்குமே கேட்காது.

எல்லாவற்றையும் விட மிகக் கொடுமையான விஷயமாக இருந்தது மற்றச் சிங்கங்களுடன் ஒரே கூண்டிற்குள் வாழ்வது. நான்கு சிங்கங்களும் ஒன்றின் முகத்தை ஒன்று பார்த்துக்கொள்ளும், பேச வார்த்தைகள் இருக்காது. நான் ராஜா என்ற மீசையை முறுக்கும் கம்பீரம் இருக்காது, அழும், சிங்கமான நீ அழக்கூடாது என்று மனசு சொல்லும். என்றாலும் உள்ளம் துயருரும். அதனையும் மேவி கண் இமைகளில் கண்ணீர் துளியாய் முகாமிடும். பத்தடிபத்தடி கூண்டிற்குள் நான்கு ராஜாக்களா என்ற கேள்வி சிங்கத்தின் மனதில் அடிக்கடி தோன்றும். அந்த வேளைகளில் சிறுமி சொன்ன வார்த்தைகள் எத்துணை தாற்பரியமுள்ளனவை என்பதை அது புரிந்து கொண்டு 'கடவுளே, நான் எலிபிடிக்கும் பூனைதான்' என்று தனக்குத் தானே தேற்றிக்கொள்ளும், சிலவேளை தன்தலையில் தானே குட்டிக்கொள்ளும். 'என்ன டொமி ஆழமாக யோசித்துக்கொண்டிருக்கிறாய்?' என்று கேட்டது மற்றச் சிங்கம். டொமி என்பது மற்றச் சிங்கம் இதற்கு வைத்த பெயர்.

'ஒன்றுமில்லை ஒன்றுமில்லை' என்று சமாளிக்கப் பார்த்தது டொமி. 'நீ அப்படிச் சொன்னாலும் உன் முகம் காட்டிக் கொடுத்துவிட்டது. இந்தக் கூண்டுக்குள்ளேயே அடைபட்டு வாழ்வதை நினைத்துத்தானே கவலைப்படுகிறாய்' என்று கேட்டது மற்றச் சிங்கம்.

"சரியாகக் கண்டுபிடித்தாய். கவலைப்படாமல் வேறென்ன செய்வது? விசாலமான வனாந்தரத்தில் காட்டுச் சக்கரவர்த்தியாக ஆட்சிபுரிந்த நீ இந்தக் கூண்டுக்குள் கிடந்து அழுந்துவதைப் பற்றி ஒருபோதும் யோசித்துப் பார்த்ததில்லையா?' என்று கேட்டது டொமி.

'இதுவென்ன முட்டாள்தனமான கேள்வி, நானும் உன்னைப் போல் தான். என்னுடைய ராஜாங்கம் பிரமாண்டமானது. காட்டு மிருகங்களெல்லாம் எனக்கு கைகட்டி சேவகம் புரிந்தன. அவை முடிந்துபோன நாட்கள். இந்த துயர வாழ்க்கையைப் பற்றி நான் நினைக்காத நாட்களே இல்லை. அல்லல்பட்டு தினந்தினம் செத்துமடிகிறேன்' என்று கவலையுடன் சொன்னது மற்றச் சிங்கம். 'தப்பிச் செல்வோமா?' என்று கேட்டது டொமி.

"நான் இங்கேவந்து கிட்டத்தட்ட ஐந்து வருடங்களாகின்றன. இவ்வளவு காலமும் தப்பிச் செல்வதற்கு எத்தனையோ தடவை முயற்சிகள் செய்துபார்த்து விட்டேன். இந்தக் கூண்டின் கம்பிகள் வலிமையான எஃகினால் செய்யப்பட்டுள்ளன. முயற்சி செய்த ஒவ்வொரு தடவையும் மூக்கை உடைத்துக் கொண்டதுதான் மிச்சம்" என்றது மற்றச்சிங்கம்.

'புத்தியைக் கொஞ்சம் பாவித்துப் பார்ப்போம்"

'மனிதனை விடவுமா நீ புத்திசாலி? மனிதனின் அறிவைக் குறைத்து எடைபோடாதே. கூரிய நகங்களையும், கோரப் பற்களையும், பலசாலியான எல்லா மிருகங்களையும் அடக்கியாளுவதற்கு அவன் தெரிந்து வைத்திருக்கிறான். நீயானாலும் நானானாலும் அவனுக்கு வெறும் தூசுதான்' 'எம்மை நாமே தாழ்த்திக்கொள்ள வேண்டாம்' என்றது டொமி. மற்றச் சிங்கம் சிரித்துக்கொண்டே, 'கற்றுக்குட்டியான நீ மனிதர்களைப் பற்றி இன்னமும் நன்றாகப் புரிந்து கொள்ளவில்லை. அவன் நாம் எதிர்பார்க்காத நேரம் பார்த்து நம்முடைய காலை வாரி விடுவான்' என்றது. இப்படியே இரு சிங்கங்களுக்குமிடையில் விவாதம் தொடர்ந்து கொண்டிருக்கும்போதே பணியாளர் வந்து கூண்டின் ஜன்னலைத் திறந்து அதனூடாக இறைச்சித் துண்டமொன்றை வீசியெறிந்தான். இறைச்சித்துண்டு டொமியின் பிட்டத்திலே பட்டு பின்னர் கம்பியிலே தெறித்து மீண்டும் டொமியின் மூஞ்சியிலே பட்டுக் கீழே விழுந்தது. "மனிதனின் அகங்காரத்தைப் பார்த்தாயா?" என்று சலித்துக் கொண்டது டொமி.

இரண்டாயிரத்து ஆறு ஏப்ரல் பத்தொன்பதாம் திகதி முக்கியமான நாள். அன்று மிருகக் காட்சிசாலையில் சீவிக்கும் மிருகங்கள், பறவைகள், எண்ணிலடங்கா ஜீவராசிகள் எல்லாம் மனிதர்களைப்போலவே பேசவும், உரையாடவும் தகவல் பரிமாற்றம் செய்யவும் சந்தர்ப்பம் வழங்கினார்கள். எல்லா ஜீவராசிகளும்

குதுாகலத்துடன் காணப்பட்டன. காலை ஏழு மணியாகு முன்பாகவே மிருகவதைத் தடுப்புச் சங்கத்தின் தலைவராக இருக்கக்கூடிய ஸார்ஜுன் என்பவர் மிருகக்காட்சிசாலைக்கு வந்துவிட்டார். ‘உங்களுக்கு மனக்குறைகள் இருக்கலாம், மனசிலே கவலைகள் இருக்கலாம், மனிதர்களைப் பற்றி முறைப்பாடுகள் இருக்கலாம். எதுவானாலும் ஒளிக்காமல் மனம்விட்டுச் சொல்லுங்கள்’ என்று மிருகக்காட்சிசாலை வாசிகளான எல்லா உயிரினங்களிடமும் அவர் அன்பாகக் கேட்டுக் கொள்ள இந்த அரிய சந்தர்ப்பத்தை நழுவவிட விரும்பாத ஜீவராசிகள் வரிசையிலே வந்து நின்று தாங்கள் படுகின்ற அவஸ்தைகளையெல்லாம் ஸார்ஜுனிடம் கொட்டித் தீர்த்தன. தங்களை மிருகக் காட்சிசாலையிலிருந்து விடுவித்து விடுமாறு பல மிருகங்கள் கேட்டுக் கொண்டாலும் அந்தக் கோரிகையை ஏற்றுக்கொள்ள ஸார்ஜுன் மறுத்துவிட்டார். ஒவ்வொரு கூண்டாக உலாவந்த ஸார்ஜுன் சிங்கக் கூண்டருகே வந்து நிற்க அவரைக் கண்ட மாத்திரத்திலேயே டொமி முகத்தைக் திருப்பிக் கொண்டது.

‘டொமி அந்தாளுடன் மரியாதையாக நடந்து கொள். அந்த மனிதர் கோபித்தால் நமக்கு நாளாந்தம் கிடைக்கும் இறைச்சித் துண்டிற்கும் வெட்டு விழுந்து விடும்’ என்று டொமியின் காதிற்குள் மற்றச் சிங்கம் கிசுகிசுக்க ‘இறைச்சித் துண்டைப் பற்றி நான் கவலைப்படவில்லை. அடிமையாக வாழ்வதை விட பட்டினி கிடந்து இறப்பதைப் பெருமையாகக் கருதுகிறேன்’ என்றது டொமி. ‘நான் வந்திருப்பதைக் கவனியாமல் என்ன குசுகுசுத்துக் கொண்டிருக்கிறீர்கள்?’ என்று எகிறிப் பாய்ந்தார் ஸார்ஜுன். ‘ஒன்றுமில்லை, திரு டொமி உங்களிடம் கேள்வி கேட்கலாமென்று ஆசைப்படுகிறார். நீங்கள் கோபித்து விடுவீர்களோ என்றுதான் யோசிக்கிறார்’ என்றது மற்றச் சிங்கம் அவசரஅவசரமாக. ‘ஐயோ, பயப்பட வேண்டாம். மிருகங்களின் சேமநலனைக் கவனிக்கவும், சுகதுக்கங்களை அறிந்து நிவர்த்தி செய்வான் வேண்டியும் தான் வந்திருக்கிறேன். என்ன கேள்வி வேண்டுமானாலும் தாராளமாக கேட்கலாம்’ என்றார் ஸார்ஜுன் கனிந்தகுரலில்.

‘இந்த சிறைக் கூடத்திலிருந்து எனக்கு எப்போது விடுதலை கிடைக்கும்?’ என்று டொமி ஏடாகூடமாகக் கேட்க ‘திரு டொமி அவர்களே, இதனை ஏன் சிறைக்கூடமென்று நினைக்கிறீர்கள்? உங்கள் சொந்தக் குகையாக நினைத்துக் கொள்ளுங்கள்’ என்றார் ஸார்ஜுன் அன்புடன். டொமி எதுவும் பேசாமல் இருந்தது.

‘நன்றாக யோசித்துப் பாருங்கள் டொமி, வனாந்தரத்தில் வாழ்வது எவ்வளவு கடினமான விஷயம் என்பது உங்களுக்குத் தெரியும் தானே. இரையைக் கண்டுபிடிப்பதானால் எவ்வளவு துாரம் நாயாக அலைய வேண்டும். நீங்கள் அதிர்ஷ்டசாலி, ராஜா மாதிரி வாழ்கிறீர்கள். மூன்று வேளைகளும் இறைச்சியை காலடிக்கே கொண்டு வந்து தருகிறோம்,

சொகுசு வாழ்க்கை. இரவில் இன்பமான தூக்கம்' என்று அடுக்கிக் கொண்டே போனார் ஸார்ஜூன். மற்றைய சிங்கங்களும் 'ஆம்.. ஆம்...' என்று தலையாட்டின.

வெளியே புதினம் பார்க்கும் சிறுவர்களைக் சுட்டிக்காட்டி, 'கொஞ்சம் இரக்கப்படுங்கள் டொமி. சின்னஞ் சிறிசுகள் உங்களைப் பார்ப்பதற்கென்றே ஆவலோடு வந்திருக்கிறார்கள். உங்களை அவர்களுக்கு நிரம்பவும் பிடிக்கும். முகத்தை உம்மென்று வைத்திருக்காமல் அவர்களுக்காக ஏதாவது வித்தை செய்து காட்டினால் அவர்கள் எவ்வளவு சந்தோஷப்படுவார்கள்' என்று கெஞ்சினார் ஸார்ஜூன். ஸார்ஜூன் தங்களைப்பற்றி தவறாக நினைத்துவிடக் கூடாதே என்ற எண்ணத்தில் மற்றைய சிங்கங்கள் அவசர அவசரமாக சிறுவர்கள் பக்கம் திரும்பி ஈஈ என்று பல்லைக் காட்டின, குத்துக்கரணம் அடித்தன, முன்னங்கால்களால் நின்று, வால்களை ஆட்டியாட்டி நடனம் ஆடின. எதற்குமே டொமி அசையாமல் இருப்பதை அவதானித்த ஸார்ஜூன் 'சுத்தக் கிறுக்கனாக இருப்பான் போலிருக்கிறதே' என்று புறுபுறுத்துக் கொண்டே அப்பால் நகர்ந்தார்.

மிருகவைத்தியரும் விஷேடமாக வந்திருந்தார். எல்லா ஜீவராசிகளுக்கும் மருத்துவப் பரிசோதனைகள் செய்யப்பட்டன. வயிற்றுநோவு, தலையிடி, மனவுளைச்சல், நெஞ்சுவலி, கால்கடுப்பு, தொண்டைக் கரகரப்பு, ஊளையிடுவதில் சிக்கல் என்று எந்தப் பிரச்சினையாக இருந்தாலும் மருந்துவரிடம் மனம் விட்டுச் சொல்லலாம் என்ற சுதந்திரம் அளிக்கப்பட்டது. அது மட்டுமல்லாமல் வெளிநாட்டிலிருந்து வந்த தொண்டர்கள் எல்லாக் கூண்டுகளையும் கழுவினார்கள், சுவர்களுக்கும், கம்பி கிராதிகளுக்கும் புதுவர்ணம் பூசினார்கள், ஷம்பு, மணச்சவர்க்காரங்களால் மிருகங்களைக் குளிப்பாட்டினார்கள், பறவைகளின் கேசங்களிலே வாசனைத் திரவியங்களை விசிறினார்கள், மயிற்கொண்டையிலே பூக்களைச் செருகினார்கள். குதூகலத்திற்குக் கேட்கவா வேண்டும்! எங்குமே குதூகலம்.

எல்லாக் கூண்டுகளும் திறந்து விடப்பட்டு பகலுணவிற்குப் பின் உற்சவம் ஆரம்பித்தது. 'நீங்கள் மனிதர்களுடன் அளவளாவலாம், ஆனந்தமாக மாலையைக் களிக்கலாம்' என்று அறிவித்தார் ஸார்ஜூன். கூண்டுகள் திறந்து விடப்பட்டிருந்தாலும் கடுமையான பாதுகாப்பு ஏற்பாடுகள் காணப்பட்டன. சாதாரண பட்டாம் பூச்சிகூட வெளியில் பறந்து போய்விட முடியாத அளவிற்கு வீரர்கள் கண்ணுக்குள் எண்ணெய் விட்டுக்கொண்டு நின்றார்கள். டொமியோ எந்த வைபத்திலும் கலந்து கொள்ளாது சுரத்தில்லாமல் அங்குமிங்கும் உலவியது. எப்படியோ இந்த இடத்தை விட்டுத் தப்பிச் சென்றுவிட வேண்டுமே என்ற எண்ணந்தான் அதன் உள்ளம் முழுவதிலும்

வியாபித்திருந்தது. அப்போதுதான் அல்ப்ஸ் மரத்திற்குக் கீழே ஒப்பாரி வைத்துக் கொண்டிருந்த பெண்ணொருத்தியைக் கண்டது சிங்கம்.

அவள் தலைவிரி கோலமாக இருந்தாள், ஆடைகள் அழுக்காக இருந்தன, கண்ணீர்ச் சொட்டுக்களால் அவள் நனைந்திருந்தாள். போவோமே, நமக்கென்ன தேவை என்று முதலில் நினைத்தாலும் மனசு தடுத்ததால் அவ்விடத்திலேயே நின்றது சிங்கம்.

‘பெண்ணே, எல்லோரும் கலகலப்பாக இருக்கும் இந்தச் சமயத்தில் நீங்கள் மட்டும் ஏன் அழுது கொண்டிருக்கிறீர்கள்?’ என்று அன்புடன் கேட்டது சிங்கம். பெண்ணோ சிங்கத்தின் பேச்சுக்கு காது கொடுக்காது தொடர்ந்து அழுது கொண்டிந்தாள். பொறுமையிழந்த சிங்கம் உரத்த தொனியில் மீண்டும் அதே கேள்வியைக் கேட்க ‘சிங்கத்தாரே, என்னுடைய பிரச்சினை உங்களுக்குப் புரியாது. நான் சொன்னாலும் உங்களுக்குப் விளங்காது’ என்றாள் பெண். ‘பெண்ணே, என்னை டொமி என்று கூப்பிடுங்கள். என் நண்பர்கள் அப்படித்தான் என்னைக் கூப்பிடுவார்கள்’ என்றது டொமி. பெண் அழுகையை நிறுத்தி ‘டொமி என் அழுகைக்கு கதை இருக்கிறது. ஆனால் அந்தக் கதை உங்களுக்கு விளங்காது’ என்றாள்.

‘பெண்ணே கதையைச் சொல்லுங்கள். கொஞ்சம் அறிவு எனக்கும் இருக்கிறது, விளங்கிவிடும்’ என்று டொமி பதிலளித்ததும் பெண் கதையை ஆரம்பித்தாள்.

‘நான் சொல்லப் போவது இரண்டு வருடங்களுக்கு முன் நடந்த சம்பவம். என் சிறிய மகள் ஊஞ்சலிலே ஆடிக்கொண்டிருந்தாள். நான் சமைத்துக் கொண்டிருந்தேன். கொஞ்ச நேரம் கழித்து தோட்டத்திற்கு வந்து பார்த்த பொழுது அவள் இல்லை. தேடினேன், எங்கோவெல்லாமோ தேடினேன், கிடைக்கவேயில்லை. அவள் காணாமல் போய் மூன்று மாதங்கள் கடந்தபின் ஒரு கனாக்கண்டேன். மந்திரவாதி என் மகளைத் தூக்கிக் கொண்டுபோய் ஒரு தீவிலே அடைத்து வைத்திருக்கிறான். அவள் அம்மா அம்மா என்று கதறி அழுது கொண்டிருக்கிறாள்’

‘கதை சுவாரஷியமாகத்தான் போகிறது. அது சரி, அந்தக் கனவுக்கும் இப்போதைய உங்கள் அழுகைக்கும் என்ன சம்பந்தம்? எனக்குப் புரியவில்லையே’

‘டொமி நான் சொல்வதை முழுமையாகக் கேட்டால் உங்களுக்குப் புரிந்துவிடும்’

‘சரி சொல்லுங்கள்’

‘அதற்குப் பிறகு என் மகளைப் பற்றிய எந்தத் தகவலும் எனக்குக் கிடைக்கவில்லை. கடந்த வாரம் மீண்டும் கனவு கண்டேன். இந்த மிருகக் காட்சிசாலையில் அவளை அடைத்து வைத்திருக்கிறார்கள்’

‘பெணணே என்ன சொல்லுகிறீர்கள்? மிருகக்காட்சிசாலையில் மிருகங்களையும், பறவைகளையும் மாத்திரம்தானே வைத்திருக் கிறார்கள்’

‘சிங்கத்தாரே, அங்குதான் விஷயமே இருக்கிறது. அந்த மந்திரவாதி லேசுப்பட்ட ஆளல்ல. அவன் என்ன செய்திருக்கிறானென்றால் என் மகளை Antelope ஆக மாற்றி இந்த மிருகக் காட்சிசாலைக்கு விற்றிருக்கிறான்’

‘இது எப்படி உங்களுக்குத் தெரியும்?’

‘இந்த விஷயங்களையெல்லாம் கனவின் மூலம்தான் அறிந்து கொண்டேன்’

‘ஓ! நம்பவே முடியவில்லையே. அது சரி Antelope தான் உங்கள் மகள் என்பதை எப்படிக் கண்டுபிடிப்பது?’

‘என் மகளுக்கு சங்கீதத்திலும், நடனத்திலும் நல்ல தேர்ச்சியுண்டு. நன்றாகப் பாடுவாள், நன்றாக ஆடுவாள்’

‘Antelope ஆடாதே, பாடாதே’

‘இப்போது என்மகளைச் சந்தித்தேன், அவள் ஆடினாள், பாடினாள்’

‘உண்மையில் அவள் உன் மகள் தானா?’

‘ஆமாம்’

‘அதாவது மந்திரத்தால் Antelope ஆக மாற்றப்பட்ட உன் மகள்’

’ஆமாம்’

பெண்ணின் கதையைக் கேட்கக்கேட்க டொமிக்கு தலைசுற்றியது. இவள் சொல்லுவதெல்லாம் உண்மையா? அல்லது கதை அளக்கிறாளா?

‘பெண்ணே, Antelope நீங்கள் சொன்ன கதையை எல்லாம் நம்பியதா?’

‘கொஞ்சங்கூட நம்பவில்லை. வீடு செல்லுவோம் என்று கெஞ்சினேன். இருக்கின்ற இடமும் போதும், கிடைக்கின்ற உணவும் போதும் என்று அகங்காரமாகச் சொல்லிவிட்டு என்னுடைய Antelope மகள் ஓடிப்போய் விட்டாள். அதை நினைத்துத் தான் இப்போது அழுகிறேன்’ என்றாள் பெண்.

அவளைப் பார்க்கப் பாவமாக இருந்தது. ‘பெண்ணே, நான் உங்களுக்கு உதவி செய்கிறேன். அன்டிலோப்பைச் சந்தித்து அவளோடு பேசி எப்படியாவது சம்மதிக்க வைக்கிறேன். இப்போது ஒன்றுகூடல் விழா நடக்க இருக்கிறது. முடிந்ததும் சுற்றுப்பயண ஏற்பாடுகள் நடக்கின்றன. நீங்கள் தப்பிச் செல்வதற்குரிய நடவடிக்கையை எடுங்கள். நான் உங்கள் மகளை உங்களோடு ஒன்று சேர்க்கிறேன்’ என்று டொமி சொன்னதும் பெண் சரியென்று தலையாட்டினாள். சிறிது நேரத்தில் மிருகக் காட்சிசாலை வண்ணக்கடதாசிகளால் சோடிக்கப்பட்டு விழா ஆரம்பமானது. நியோன் விளக்குகள் பளிச்பளிச் என்று மின்னின, எல்லா இடங்களிலும் தோரணங்கள். வெட்டுக்கிளிகள் அணிவகுக்க, பட்டாம்பூச்சிகள் சாரிசாரியாக ஆசனங்களில் வந்தமர்ந்தன. கரடியார் வரவேற்பு கீதம் பாடி நிகழ்ச்சிகளை ஆரம்பித்து வைத்தார். குயில்கள் பாட்டுப்பாடின,

காகங்களும், ஒட்டச் சிவிங்கிகளும் நாட்டியமாடின, முயல் புல்லாங்குழல் வாசித்தது, நிகழ்ச்சிகளின் இறுதியில் முத்தாய்ப் பாயமைந்ததொரு நிகழ்ச்சி Fashion Show நளின நடைப்போட்டி.

நளின நடைப்போட்டியில் மயில் தோகை விரித்தாடியது, அன்னம் அலங்காரப் பதுமையாக நடந்து வந்தது, மான் ஓரக்கண்களால் விழியசைத்தது, வரிக்குதிரைகள் ஒன்று சேர்ந்து ஓவியமாகின. என்றாலும் இவைகள் எல்லாவற்றையும் விஞ்சிவிடும் வகையில் அலங்கார ஆடைகள் புனைந்து போட்டியில் கலந்து கொண்டது அன்டிலோப். அன்டிலோப்பா, அழகென்ன! அதன் நளின நடையென்ன! என்று அரங்கமே மூக்கின் மேல் விரலை வைத்து அதிசயித்தது. நிகழ்ச்சிகளில் கலந்துகொள்ளும் அனைத்தும் தங்கள் பூர்வீகத்தைச் சொல்ல வேண்டும் என்பதற்கொப்ப Antelope கம்பீரப் பார்வையுடன் சபையைப் பார்த்து பெண் சொன்ன கதையோடு பொய்யும் கலந்து தன் பூர்வீகத்தைச் சொல்ல ஆரம்பித்தவுடன் அவலட்சணமே! உனக்கென்ன நளின நடை என்று கேலிசெய்த மிருகங்கள் கூட கப்சிப் என்று அடங்கிப் போயின. வரலாறு முடிந்த கையோடு வித்தியாசமான நளின அங்க அசைவுகளோடு அன்டிலோப் நடக்க ஆரம்பித்தவுடன் கரகோஷம் வனாந்தரத்தையே ஆடச் செய்தது. ஈற்றிலே முதலாம் இடத்தையும், ஓக்கிட் பூச்சிசெண்டையும் அன்டிலோப் தட்டிச் சென்றது. பெண் அழுதுகொண்டே சொன்ன மகள் காணாமல்போன கதையையும் அன்டிலோப்பாக மாறிய கதையையும் டொமி கொஞ்சங் கூட நம்பவில்லை. மனிதர்கள் எல்லோருமே முதற்றரமான ஏமாற்றுக்காரர்கள் என்பதுதான் டொமியின் அபிப்பிராயம். எனினும் அன்டிலோப்பின் இனிமையான குரல், நளினமான நடன அசைவுகள் என்பவற்றைப் பார்த்தவுடன் பெண் சொன்னபடி இந்த அன்டிலோப் அவளின் மகளாக இருக்கக் கூடுமோ என்ற ஐயம் முதற்றடவையாக டொமியின் உள்ளத்தில் உண்டாகிற்று.

நிகழ்ச்சிகள் நிறைவு பெற்றபின் டொமி அன்டிலோப்பைச் சந்தித்து ‘அன்டிலோப் அவர்களே, தாங்கள் மனித வர்க்கத்திலே ஒரு பெண் என்ற உங்களின் பூர்வீகத்தைக் கேட்டு நான் வியந்து போனேன்’ என்றது சிங்கம். அன்டிலோப் சிரித்துக்கொண்டே ‘சிங்கத்தாரே, அது சுத்தப்பொய். வழியிலே ஒரு பெண் என்னிடம் சொன்ன கதை அது, சுவாரஷியமாக இருக்கட்டுமே என்று அரங்கத்திலே சொல்லிவிட்டேன்’
‘அது ஏன் உண்மையாக இருக்கக் கூடாது?’
‘அது உண்மையே அல்ல. இந்த மிருகக்காட்சிசாலையிலே மூன்றாவது பரம்பரையில் நான் பிறந்தேன். அந்தப் பெண் சொல்லுகிற மந்திரவாதியை ஒருபோதுமே நான் பார்த்ததில்லை’
‘நீ மனிதர்களின் உலகத்தைப் பார்த்ததே இல்லையா?’
‘இந்த மிருகக்காட்சிசாலைதான் எனக்கு உலகம்’

'அன்டிலோப்பே, நீ சுத்தமான கிணற்றுத் தவளையாக இருக்கிறாய். மனிதர்களின் உலகம் விசாலமானது, காடுகள் அழகானவை, கடல் கவிதையாகும், வானம் என்றும் இளமையாகும், நாம் அன்பைப் பரிமாறலாம், சுற்றித் திரியலாம், அனுபவிக்கலாம்' என்று ஆசைகாட்டியது சிங்கம். 'சிங்கத்தாரே, நான் சொல்கிறேனென்று கோபித்துக் கொள்ளாதீர்கள். இங்கு மணியடித்தால் சாப்பாடு, மணியடித்தால் தாகம் தீர்க்கத் தண்ணீர், எல்லாம் இலவசம். எந்தச் சிரமமுமில்லை. ஞாயிற்றுக்கிழமை என்னைக் குளிப்பாட்டுகிறார்கள். நோய் வந்தால் வைத்தியர் ஓடோடிவருகிறார், சிறு பிள்ளைகள் எங்களோடு வினோதமாக விளையாடுகிறார்கள், இரவில் நிம்மதியான நித்திரை, இதனைவிட வேறென்ன வேண்டும்?' என்று கேட்டது அன்டிலோப். சுதந்திரம் எவ்வளவு சுகமானது என்று டொமி எத்தனையோ வழிகளில் விளக்கியும் அன்டிலோப்பின் காதுகளில் அது ஏறவேயில்லை.

பெரிய ட்ரக் வண்டிகளில் நகருயிர்கள், வண்ணாத்திப்பூச்சிகள், மலைப்பாம்புகள், மணிப் புறாக்கள், ஆபிரிக்கக் குரங்குகள், யானைகள் என்று எல்லாவற்றையும் ஏற்றி விழா முடிந்ததும் சுற்றுப்பயணம் ஆரம்பமானது. முன்னெச்சரிக்கையாக கூண்டுகள் அடைக்கப்பட்டு வெளியே பெரிய பூட்டுக்கள் தொங்கின. அன்றுதான் அவைகள் ஆடம்பரமான நகரங்களையும், நெடுஞ்சாலைகளையும் கண்டன, சொகுசான மோட்டார் வாகனங்களைக் கண்டு வியந்தன, வான்முட்டும் கட்டடங்களைக் கண்டு ஆரவாரித்தன, கூச்சலிட்டன, குதூகலத்துடன் ஆனந்தக் கூத்தாடின, கைகொட்டின, பேசின, பாடின. டொமியோ இந்தக் கூத்துகளிலொன்றிலும் கலந்து கொள்ளாது தகுந்த தருணத்துக்காகக் காத்திருந்தது. தருணமும் வந்தது. மலைப்பாங்கான ஓரிடம்.

டொமி 'ஐயோ வயிறு வலிக்கிறதே' என்று கதற ஆரம்பித்தது. 'ஏய் சிங்கமே, எதற்காகக் கூண்டுக்குள் இருந்து கொண்டு கூச்சல் போடுகிறாய்?' என்று கேட்டான் பணியாள். 'ஐயோ, வயிறு வலிக்கிறதே, இங்கேயே மலங் கழித்து விடவா?' என்று கேட்டது டொமி.

'என்ன சிங்கத்தாரே உண்மையாகவே வயிறு வலிக்கிறதா? அல்லது தப்பிக் செல்வதற்காக நீங்கள் போடும் நாடகமா?' என்று கேட்டான் பணியாள். இந்தக் கேள்வி சிங்கத்தின் இதயத்தை சுருக்கென்று தைத்தது. மனிதன் எவ்வளவு புத்திசாலியாக இருக்கிறான் என்று தனக்குள்ளே ஆச்சரியப்பட்டுக் கொண்ட டொமி சமாளித்துக் கொண்டே 'தப்பிப் போக முயற்சி செய்யவில்லை ஐயா. உண்மையாகவே வயிற்றுவலி. தாங்கமுடியவில்லை, அவதியுறுகிறேன். சந்தேக

மிருந்தால் என்னோடு இரண்டுபேரை மலங்கழிக்குமிடத்திற்கு அனுப்பி வையுங்கள்' என்று பௌயமாக வேண்டிக் கொண்டது. பணியாள் சிங்கத்தின் கழுத்திலே சங்கிலியை மாட்டி காட்டுப்பாதையை நோக்கிப் போனான். கொஞ்ச தூரம் போனதுதான் தாமதம் டொமி தன்னுடைய முழுப்பலத்தையும் பயன்படுத்தி எகிறிக் கொண்டு ஓடியது. பணியாள் டொமியின் பின்னால் இழுபட்டுக்கொண்டு போனான். என்றாலும் டொமியின் அசுரபலத்திற்கு தாக்கிப் பிடிக்க முடியாமல் அவன் சங்கிலியை அப்படியே கைவிட சிங்கம் அடர்ந்த காட்டிற்குள் ஓடித் தப்பியது.

டொமியின் சோதனைக் காலம் ஆரம்பித்தது. ஏனென்றால் சிங்கம் நினைத்த மாதிரி எந்தக் காட்டிற்கும் ராஜாவாக அதற்கு முடியவில்லை. எல்லாக் காடுகளிலும் ஏற்கனவே சிங்க ராஜாக்கள் இருந்தாரகள். சில இடங்களில் உதவி ராஜாக்களும் இருந்தார்கள். எந்தக் காட்டுக்குப் போனாலும் வேண்டாப் பிராணியாகவே டொமியை எல்லா மிருகங்களும் வெறுப்போடு பார்த்தன. டொமி பெருங் கவலையில் ஆழ்ந்தது. இரைகளைக் கௌவிப் பிடிப்பதில் கூட வனாந்தரத்தில் பயங்கர போட்டி நிலவியது. அற்பப் பிராணிகளும் டொமியை இலாக்கில்லாத செத்த ராஜா என்று குசுகுசுத்தன. மூன்று நாட்கள் முயற்சித்தும் முயல்குட்டி கூட அகப்படாததால் ஓடைக்குச் சென்று தண்ணீரினால் வயிற்றை நிரப்பிக் கொள்வதைத் தவிர டொமிக்கு வேறு வழி இருக்கவில்லை. பாதங்கள் புண்ணாகின, முகம் வாடிச் சுருங்கியது, உதடுகள் வெடித்தன, கண் பார்வை மங்கியது. நன்றாகக் களைத்துப்போன டொமி ஓரிடத்தில் சரிந்து, அயர்ந்து தூங்கியது. தண்ணீரை யாரோ முகத்தில் விசிறியடிக்கவே திடுக்கிட்டு கண்ணைத் திறந்தபோது மனிதன் முன்னால் நின்று கொண்டிருந்தான்.

'என்ன சிங்கத்தாரே, உலர்ந்து போயிருக்கிறீர்கள். வயிற்றுப்போக்கா?' என்று சிங்க மொழியில் கேட்டான் மனிதன். 'உனக்கு எங்கள் பாஷை தெரியுமா?' என்று டொமி ஆச்சரியத்தோடு கேட்க 'ஆமாம், அதை விடுங்கள். மூன்று நான்கு நாட்கள் இரையேதும் இல்லாமல் வாடிப்போய் விட்டீர்களே' என்றான் மனிதன்.

'நேரில் கண்டதைப் போல் சொல்கிறீர்களே, நீங்கள் என்ன கடவுளா?'

'நான் கடவுள் அல்ல, கடவுள் படைத்த சாதாரண மனிதன். என் பெயர் கோலிஜன். சுருக்கமாக என்னை கோலி என்று கூப்பிடுவார்கள்' என் பெயர் டொமி. அதுசரி சிங்கம் என்னைப் பார்த்ததும் உனக்கு உதறல் எடுக்கவில்லையா?' 'உன்னைப் பார்த்து உதறலா? சிரிப்புத்தான் வருகிறது. ஆஸ்பத்திரியிலிருந்து தப்பிவந்த தொழுநோயாளியைப் போல் அல்லவா உன் முகம் இருக்கிறது' என்றான் கோலி. 'நீ சரியான புத்திசாலி.

உண்மையில் மிருகக்காட்சிசாலையிலிருந்து நான் தப்பித்தான் வந்தேன்' என்று ஆரம்பித்த டொமி நடந்த சம்பவங்கள் அனைத்தையும் கோலியிடம் ஒப்புவித்தது கோலி டொமியைப் பரிதாபமாகப் பார்த்தான்.

'திரு டொமி அவர்களே, என்னுடன் வாருங்கள். நான் உங்களை ராஜாவாக்குகிறேன்' என்று அழைத்தான் மனிதன். 'ஐயோ, வேண்டவே வேண்டாம். மனிதர்களை நம்பவே முடியாது. ஏமாற்றி அழைத்துப் போய் என்னை மீண்டும் கூண்டில் அடைக்கவா திட்டம்?' என்று உடனடியாக மறுத்தது சிங்கம். 'டொமி, உங்களை நான் எந்தக் கூண்டிலுமே அடைக்க மாட்டேன். என்னை நம்புங்கள். நீங்கள் கேட்கிற நேரமெல்லாம் இறைச்சி தருகிறேன். என் முகத்தைப் பாருங்கள். நான் ஏமாற்றுக்காரன் போலவா இருக்கிறேன்?' என்று தன்முகத்தை சிங்கத்தின் முகத்திற்கருகே கோலிஜான் கொண்டு போகவே டொமி யோசித்தது. 'டொமி நீங்கள் யோசிப்பதற்கு ஒன்றுமில்லை. உங்களைக் கூண்டிலடைக்க மாட்டேன் என்று நான் சத்தியம் செய்கிறேன்' என்று கோலிஜான் மீண்டும் சத்தியம் செய்ததும் டோமி சிறிது யோசித்துவிட்டு அவனோடு சேர்ந்து நடக்க ஆரம்பித்தது.

கோலிஜான் முரட்டுத்தனத்திற்கும் அத்தனை நாசகாரச் செயல்களுக்கும் கிராமத்தில் ஏற்கனவே பெயரெடுத்தவன். அவனோடு சிங்கத்தையும் கண்டவுடன் இவன் இன்னும் என்னென்ன கொடுமைகள் இழைக்கப் போகிறானோ என்றவச்சத்தில் கிராமத்தவர் எதை எதிர்பார்த்தார்களோ அது நடந்தது. கோலிஜன் சிங்கத்தோடு போய் ஆட்களை மிரட்டினான், பணம்பறித்தான், திருடினான், சிங்கம் வனாந்தரத்தில நடத்துவதைவிட பயங்கரமான காட்டுத்தர்பார் நடத்தினான் கோலி.

கோலிஜான் எப்படிப்பட்டவனாக இருந்தாலும் சிங்கத்திற்கு அளித்த வாக்குறுதிகள் எவற்றையும் அவன் நிறைவேற்றாமலிருக்கவில்லை. தோட்டத்திலே டொமியை சுதந்திரமாக உலாவ அனுமதித்ததோடு டொமிக்கென்று தனியாக அறையொன்றும் கொடுத்திருந்தான். அந்த அறையிலே மிகவும் நிம்மதியாக ஓய்வெடுக்கலாம். ஆடம்பர மெத்தை, சொகுசான தலையணை, நுளம்புவலை, குளிரூட்டி என்று இத்தியாதி இத்தியாதி வசதிகள். சிங்கத்தின் பற்களை விளக்குவதெற்கென்றும், குளிப்பாட்டுவதெற்கென்றும், வாசனைத்திரவியம் தடவி ஆடைகள் அணிவிப்பதெற்கும் தனியான பணியாளையும் அமர்த்தியிருந்தான் கோலிஜான். டொமி கோலிஜானின் வீட்டில் ராஜா என்ற மிதப்பில் வாழ்ந்தது. காட்டுச் சிங்கத்திற்கு இவ்வளவு சௌகரியங்கள் செய்து கொடுத்தது கோலிஜானின் மனைவிக்கு பிடிக்கவில்லையாதலால் அடிக்கடி தொணதொணக்க ஆரம்பித்த அவள் சிங்கத்தை

விரட்டிவிடும்படி கோலிஜானை நச்சரித்தாள். சிங்கத்தின் முகத்திற்கு நேரேயே சாடினாள், காறித் துப்பின்னாள். சிங்கத்தின் கர்ஜனையையும் உறுமலையும் அவள் லட்சியம் செய்யவேயில்லை.

டொமி ஒருநாள் கிராமத்தின் ஒற்றையடிப் பாதையால் வந்தபோது Antelope மேடையொன்றிலே ஆடிக் கொண்டிருக்க சபையோர் ஆரவாரம் செய்யும் நம்பவே முடியாத காட்சியைக் கண்டது. அன்டிலோப்பும் டொமியைக் கண்டுவிட்டது. நிகழ்ச்சி முடிந்ததும் ஓடோடி வந்த அன்டிலோப் ஒப்பாரி வைத்து அழ ஆரம்பித்தது. 'அன்டிலோப் உனக்கென்ன நடந்தது? ஏன் அழுகிறாய்?' என்று கவலையுடன் கேட்டது டொமி. 'டொமி, சுதந்திர வாழ்க்கையைப் பற்றி நீங்கள் சொன்னீர்களல்லவா ஆசை வாரத்தைகள், அதனை நம்பி நானும் மிருகக் காட்சிசாலையிலிருந்து தப்பி வந்தேன். பெண்ணின் கதையை நம்பி அவளோடு சேர்ந்தேன். இப்போது நன்றாக அவஸ்தைப்படுகிறேன். அவள் என்னை வைத்து காசு சம்பாதிக்கிறாள். விடிந்ததிலிருந்து ஆடுவதும், பாடுவதும் தான் என் தொழில். தூங்குவதற்கு நேரம் கிடையாது, அசை போடுவதற்கு நேரம் கிடையாது, ஓய்வு கிடையாது, நரக வாழ்க்கை வாழ்கிறேன்' என்று ஆற்றாமையோடு சலித்துக்கொண்டது அன்டிலோப். 'நண்பனே என்னை மன்னித்துக் கொள். அந்தப் பெண் நன்றாக என்னை ஏமாற்றியிருக்கிறாள். நானும் ஏமாந்துவிட்டேன். ஆனால் என்னுடைய எஜமானன் உன் எஜமானியைப் போல் அல்லன், மிகவும் நல்லவன். நான் சந்தோஷமாக வாழ்கிறேன்' என்று சொன்ன டொமி தன்னுடைய கழுத்தை அசைத்து அசைத்துக் காட்டியது. கழுத்திலே மணிமாலை, கால் விரல்களிலே மோதிரம், தலை மேலே அரச கிரீடம். டொமியைச் சுற்றிச் சுற்றி வந்த அன்டிலோப் சிங்கத்தின் அழகைக் கண்டு வியந்தது.

சில நிமிடங்களில் தன்னைச் சுதாகரித்துக் கொண்ட அன்டிலோப் 'டொமி, அளவுக்கதிகமாக மனிதர்களை நம்பாதீரகள். பிடுங்க வேண்டியதையெல்லாம் பிடுங்கிக் கொண்டு உங்களையும் விரட்டி விடுவார்கள். பிறகு நடுத்தெருவில் செத்துமடிய வேண்டியதுதான்' என்றது. காடதிரும் வகையில் கர்ஜித்துச் சிரித்த சிங்கம் 'அன்டிலோப், நீ சொல்வது வாஸ்தவம்தான். என் எஜமான் அப்படிப் பட்ட ஏமாற்றுக்காரனேயல்ல. அவனை நான் நம்புகிறேன். அப்படி அவன் ஏடாகூடமாக நடந்து கொண்டானென்றால் அதற்கும் நான் மருந்து வைத்திருக்கிறேன்'

'என்ன மருந்து?' என்று ஆவலோடு கேட்டது அன்டிலோப். 'அவனையும் அவன் குடும்பத்திலுள்ள அத்தனை பேரையும் கொன்று சாப்பிட்டு விட்டுத்தான் நான் வெளியேறுவேன்' என்றது டொமி.

இதற்கிடையில் மனைவியின் தொடர்ச்சியான நச்சரிப்பைத் தாங்க முடியாமல் டொமிக்கு வழங்கப்பட்ட சௌகரியங்களை மெல்ல மெல்லக் குறைத்து வந்தான் கோலிஜான். டொமி இதைப்பற்றி முறைப்பாடு செய்யும்போதெல்லாம் ‘டொமி கொஞ்சம் பொறுத்துக் கொள். நிலைமை சரியானதும் உன்னை நன்றாகக் கவனித்துக் கொள்கிறேன்’ என்பான் கோலிஜான். ஆனாலும் நிலைமை நாளுக்கு நாள் மோசமடைந்து அதன் உச்சக்கட்டமாக சிங்கத்தை அதன் அறையிலிருந்து வெளியேற்றி மாட்டுத் தொழுவத்திற்கு அனுப்பி வைத்தான் கோலிஜான். அதுமட்டுமல்ல டொமிக்கு வழங்கப்பட்டு வந்த மாமிசவுணவு திடீரென்று நிறுத்தப்பட்டு மூன்று வேளைகளும் பிண்ணாக்கு வழங்கப்பட்டது. ‘நான் சிங்கம், பிண்ணாக்கு சாப்பிட முடியாது’ என்று டொமி அடம்பிடித்தாலும் சிங்கத்தின் பேச்சை யாருமே காதில் போட்டுக் கொள்ளவில்லை. பசி தாங்க முடியாது வேறு வழியில்லாததால் நாளடைவில் பிண்ணாக்கைக் சாப்பிட்டு பசியைத் தீர்த்துக் கொண்ட டொமி இப்போது பொறுமையிழந்து, ஓரிரவு நீண்டநேரம் யோசித்து முடிவுக்கு வந்து ‘நான் சிங்கம். பழைய ராஜா. என்னிடமா வேடிக்கை காட்டுகிறீர்கள்? உங்களுக்குப் புகட்டுகிறேன் நல்ல பாடம். நாளைக்கு உங்கள் உயிர் உங்களிடம் இருக்காது. எல்லோரையும் கொன்று விட்டு கண்காணாமல் ஓடிப்போய் விடுகிறேன்’ என்று தனக்குள் தானே கறுவியது.

அதிகாலையிலே கோலிஜானின் முன்னால் வந்து நின்றது டொமி. ‘என்ன சிங்கத்தாரே, இன்று அதிகாலையிலேயே எழுந்து விட்டீர்கள். முகம் சிவந்து போயிருக்கிறது. உங்கள் உடம்பிலிருந்தும் சூடு தெறிக்கிறதே, காய்ச்சலா?’ என்று கேட்டான் கோலிஜான். ‘இனிமேல் எனக்கும் உங்களுக்குமிடையில் பேச்சு எதுவும் கிடையாது. இன்று உன்னைக் கொல்லப் போகிறேன், உன் மனைவியைக் கொல்லப்போகிறேன், உன் பிள்ளைகளைக் கொல்லப்போகிறேன், அப்படியே காட்டுக்கு ஓடப்போகிறேன்’ என்று ஆக்ரோஷத்தோடு சொன்னது டொமி. கோலிஜான் சிரித்தான். கோலிஜான் சிரிப்பதைப் பார்த்தது அவனுடைய மனைவியும் சிரித்தாள். பிள்ளைகளும் கெக்கலியிட்டுச் சிரித்தார்கள். ‘உங்கள் உயிர்களைக் காவு கொள்ள வந்திருக்கிறேன். உங்களுக்கு சிரிப்பென்ன வேண்டிக் கிடக்கிறது, முட்டாள்களே!’ என்று சினந்தது டொமி.

‘நீ சிங்கம் தானே’

‘அதென்ன புதுச் சந்தேகம்?’

‘நீ சிங்கமாக இருந்தால் கர்ஜனை செய்து காட்டு, பார்ப்போம்’ என்று கோலிஜான் கேலியாகக் கேட்கவே சிங்கம் முயற்சித்தும் வாயிலிருந்து எந்தச் சப்தமும் வராமல் இருக்கவே முழுப் பலத்தையும் பாவித்து பிரயத்தனம் செய்தது டொமி. முனகல் ஒலி கூட வரவில்லை.

எல்லோரும் சிங்கத்தை ஏளனத்தோடு பார்த்தார்கள். 'இப்போது நீ சிங்கமில்லை என்பதை விளங்கிக் கொண்டாய் தானே' என்றான் கோலிஜான். 'ஐயோ, என்னை என்ன செய்து விட்டீர்கள்?' என்று டொமி அழாக்குறையாகக் கேட்க 'கண்ணாடிக்கு முன்னால் போய் நின்று வாயைத் திறந்து பார்' என்றான் கோலிஜான். டொமி ஓடோடிச் சென்று கண்ணாடிக்கு முன்னால் வாயை ஆவென்று திறந்து பார்க்க வாய்க்குள் பற்கள் எதுவுமே இல்லை. 'ஐயோ, எங்கே என் பற்கள்?' என்று அலறியது டொமி. 'இப்படியொரு நிலைமை வருமென்று நாங்கள் எப்போதோ எதிர்பார்த்தோம். அதனால் தான் நீ உறங்கிய ஒருநாளில் உன்னை மயக்கி பற்களைப் பிடுங்கி குரல் வளையையும் எடுத்து விட்டோம்' என்றான் கோலிஜான் மீண்டும் சிரித்துக் கொண்டே.



# இரு வீடுகள் உள்ள ஒரு கிராமம்

எம்.எம்.நௌஷாத்

கூவாநதியின் இருபுறங்களிலும் இருகிராமங்கள் இருந்தன. இரண்டு கிராமங்களிலும் எழில் கொட்டிக் கிடந்தது, பலா, வாழை, திராட்சை எல்லாம் எங்குமே விளைந்தன, கண்ணுக்குத் தெரிந்த எல்லா இடங்களிலும் வயல்வெளிகள் காணப்பட்டன. கமக்காரர்கள் தேனீக்களைப் போல் சுறுசுறுப்பாக உழைத்தார்கள். கன்னங் களில் வழிந்தோடும் வியர்வையையும் பொருப்படுத்தாது, களைப்பையும் பொ ருட்படுத்தாது, வெயிலில் நீண்டநேரம் நின்றால் தங்கள் மேனி கன்னங்கரியாக மாறிவிடுவோமே என்ற உள்ளச்சத்தினையும் பொருப்படுத்தாது அவர்கள் கடினமாக வேலை செய்தார்கள். சிலர் மாடுகளை ஓட்டிச் சென்றார்கள். சிலர் மாட்டு வண்டிகளை ஓட்டிச் சென்றார்கள். காலையானவுடன் காலைக் காட்சியும் மாலையானவுடன் மாலைக் காட்சியும் அங்கு நிகழும். நதியின் இருபுறங்களிலும் விடலைப்பையன்கள் காலைக் காட்சி கட்டுரைக்காக காலைக் காட்சியினை ரசித்து குறிப்பெழுதிக் கொள்வார்கள், மாலையானவுடன் மகளிர் குடங்களில் நீர் மொண்டுவதை வேடிக்கைப் பார்த்துக் கொண்டிருப்பார்கள். ஆற்றங்கரைக்கு இந்தப் பாகம் இருந்த கிராமம் சூரியனுக்கு அருகில் இருந்ததால் கிழக்குக் கிராமம் என்றும் ஆற்றங்கரைக்கு அந்தப் பக்கமிருந்த கிராமம் மேற்கு கிராமம் என்றும் அழைக்கப்பட்டு வந்தன. இரண்டு கிராமவாசிகளும் ஒரே வகையான தொழில்களையே செய்தார்கள், ஒரே வகையான ஆகாரங்களையே விரும்பிச் சாப்பாட்டார்கள், அதிகாலையில் விழுத்தெழுந்தார்கள், நேரங் கழிந்து நித்திரைக்கு சென்றார்கள், ஒரே மொழியை பேசினார்கள்.

இப்படிப் பார்ப்பதற்கு பரவசமாக இந்த இரு கிராமங்களும் காட்சியளித்தாலும் நீருக்கு கீழே நெருப்பு புகைந்து கொண்டிருப்பதைப் போல் ஒரு கசப்புணர்வு கிராமவாசிகளின் அடிமனதில் பதிந்து போயிருந்தது. காரணம் இரு கிராமங்களிலும் இரு வேறு மதங்கள் இருந்தன. **கிழக்கு மக்கள்** ஹுலபா மதத்தைச் சேர்ந்தவர்கள். அவர்கள் ஹுலபிகள் என்று அழைக்கப்பட்டார்கள். மேற்கு கிராம மக்கள் பாஷாரா மதத்தினைச் சேர்ந்தவர்கள். அவர்கள் பாஷாரிகள் என்று அழைக்கப்பட்டார்கள். ஹுலபிகள் தோற்றம் எப்படி இருக்குமென்றால் தலையை மொட்டையடித்து உச்சந்தலையிலே மட்டும் ஓர் உரோமக் கற்றையிருக்கும். இரு பிட்டங்களிலும் வேதாளத்தை பச்சை குத்தியிருப்பார்கள். பாஷாரிகள் தோற்றம் எப்படியிருக்குமென்றால் ஆண்கள், பெண்களின் தொப்புளைச் சுற்றி ஒரு பாம்பு கழுகை விழுங்குவதைப் போல் பச்சை குத்தப் பட்டிருக்கும். தங்கள் மதத்தை வெளிக்காட்டிக் கொள்வதற்காக பாஷாரி ஆண்,பெண் இருபாலாரும் எப்போதும் தொப்புள்களை வெளிக்காட்டித் திரிவார்கள். இப்போது நான் சொல்லப் போவது கிழக்கு கிராமத்திலே நடந்து முடிந்த ஓர் உண்மைக் கதை.

நதிக்கரையின் இந்தப் பக்கத்திலே கலங்கரை விளக்கம் போல் அழகாக நிர்மாணிக்கப் பட்டிருந்த உயர்ந்த கோபுரம் இருந்தது. அதன் உச்சியிலே ஒரு ஹுலபி எப்போதும் நின்று கொண்டிருப்பான். நதிக்கு குறுக்காக பாலம் இருந்தது. பாஷாரிகள் தொழில் துரவுகளுக்காக அந்தப் பாலத்தினூடாகத் தினசரி பயணம் செய்வார்கள். பாஷாரிகளில் யாராவது ஒருத்தன் ஹுலபிகளின் மதத்தலம் உள்ள சுற்றுவட்டாரத்து வீதிகளில் சிறுநீர் கழிக்கிறார்களா, துப்புகிறார்களா அல்லது அழுக்குகளை எறிகிறார்களா என்று அவதானிப்பதுதான் உச்சியில் வீற்றிருக்கும் ஹுலபியின் வேலை. அவன் ஒருபோதும் கண்களை மூடமாட்டான். இசகுபிசகாக அப்படி ஏதாவது நிகழ்வு நடந்து விட்டால் கிழக்கு கிராமமெங்கும் அந்தச் செய்தி காட்டுத் தீயாய் பரவும். இளைஞர்கள், பெண்கள், சிறுவர்கள் எல்லோரும் பொல்லு, கத்தி, வாள்களுடன் மதத் தலத்தைச் சுற்றிக்கூடிவிட மதக்கலவரம் வெடித்து கண்களுக்கு தெரியக்கூடிய எல்லாப் பாஷாரிகளையும் வெட்டிச் சாய்ப்பார்கள். தலைமுறை தலைமுறையாக கிழக்குக் கிராமத்தில் நடந்து வரும் சம்பிரதாயம் இது.

இந்த சம்பிரதாயங்கள் ஒன்றுக்குள்ளும் ஒட்டாது ஒண்டிக்கட்டையாக வாழ்ந்து வந்தான் ரஜபாசு. ரஜபாசு பிரமச்சாரி. அவனுடைய வீடு ஆற்றங்கரைக்குப் பக்கத்தில் இருந்தது. கிழக்கு கிராமத்தில் ஆங்கிலம் பேசவும் எழுதவும் தெரிந்தவன் அவன் மட்டும் தான். அதனால் அவனுடைய வீட்டிலே எப்போதும் கிழக்கு கிராமவாசிகள் ஆங்கில அரிச்சுவடி படிப்பார்கள். ரஜபாசு பெரிய மீசை வைத்திருந்தான். கண்கள் பந்துபோல் உருண்டையாக வெளியே துருத்திக் கொண்டு இருந்தன. சின்னக் குழந்தைகள் அவனைக் கண்டு பயந்தன. தாய்மார்களோ தங்கள் பிள்ளைகளைப் பார்த்து "பயப்படாதீர்கள் குழந்தைகாள், ரஜபாசு மாமா நல்லவர், நீங்கள் போய் அவரிடம் ஆங்கிலம் கற்று வாருங்கள்" என்று தங்கள் குழந்தைகளுக்கு சிபாரிசு செய்வார்கள். அதன் பிற்பாடு குழந்தை ரஜபாசு மாமாவைப் பார்த்து மெல்லச் சிரிக்கும். ரஜபாசுவும் பதிலுக்கு சிரிப்பான். ரஜபாசு குழந்தைகளுக்கு தின்பண்டங்கள் கொடுப்பான், அல்லது சொக்லேட் கொடுக்க அந்நியோன்னியமான நட்பு உண்டாகி விடும். தாய்மார்கள் கேட்கும் போதல்லாம் ஆபத்பாந்தவனாக கடன் கொடுத்து உதவுபவனும் அவனே.

ரஜபாசுக்குள் ஒருகதை இருந்தது. அதை அவன் யாருக்கும் சொல்லாவிட்டாலும் கிராமத்திலுள்ள கிழவர்களும், கிழவிகளும் அவனுடைய பூர்வீகத்தை அறிந்து வைத்திருந்தார்கள். ரஜபாசு மொட்டை அடிக்கவுமில்லை, பிட்டத்தில் வேதாளம் இருக்கவுமில்லை. ஏனென்றால் கிழக்கு கிராமத்தில் வாழ்ந்து வந்த ஒரே பாஷாரி

அவனே. பாஷாரி ஜன்ம விரோதிகளான ஹுலபிகளின் கிராமத்தில் தனித்து வாழ்ந்து வருகின்றானென்றால் அதுதான் அவனுடைய கதை. அச் சரித்திரத்துக்கு மூலகாரணமான ரஜபாசுவின் தந்தை இன்று உயிருடன் இல்லை. இருபது வருடங்களுக்கு முன்பிருந்த மேற்கு கிராமத்திற்கு சென்றீர்கள் என்றால் அங்குதான் பாஷாரியான ரஜபாசுவின் தந்தை வாழ்ந்தார். அது மாந்தோப்பு. வெள்ளிக்கிழமை அதிகாலை காலைக் கடன்களைத் கழிப்பதற்காக விழித்தெழுந்த ரஜபாசுவின் தந்தை ஆடுகள் கத்தும் சப்தமும், ஆளரவமும் கேட்கவே டோர்ச்லைட்டுடன் அந்தத் திசை நோக்கி பதுங்கிப் பதுங்கி நடந்து சென்றவர் அங்கு கண்ட காட்சியால் அப்படியே கதிகலங்கி போனார். ஒரு பையனை அடித்து குற்றுயிராக தூக்கிச்சென்றார்கள் நாலைந்து பேர். அத்தனை பேரும் நன்கு பரிச்சயமான கிராமத்து வாசிகள்.

'மிலேச்சத்தனமான காரியம் செய்துவிட்டீர்களே' என்று ரஜபாசுவின் தந்தை அவர்களைச் கடிந்துகொள்ள "உஷ்! சப்தம் போட வேண்டாம். இவன் ஹுலபிக் கழுதை, ஆட்டிடையன். எங்களிடம் மாட்டிவிட்டான்; சம்ஹாரம் செய்துவிட்டோம்" என்றான் ஒருத்தன். "எதற்காக இந்த அப்பாவியை அநியாயமாகக் கொலை செய்தீர்கள்?" என்று வைதார் ரஜபாசுவின் தந்தை.

"நீ பாஷாரி மதகுருவின் மீது சத்தியப்பிரமாணம் செய்தவன் தானே"
"ஆமாம்"
"ஹுலபியை எங்கு கண்டாலும் கொன்று விடு என்று மதகுரு செல்லியிருக்கிறார் தானே?
"ஆமாம்"
"அப்படியானால் என் இடக்குமுடக்காகக் கேள்வி கேட்கிறாய்? அவன் கொல்லப்பட வேண்டியவன். கொன்று விட்டோம்" என்று சொல்லிக் கொண்டே ஆட்டுமந்தையையும் ஓட்டிக்கொண்டு போனார்கள் வந்தவர்கள். அடுத்த நாள் கிழக்குக்கிராமம் பரபரப்போடு விடிந்தது. பதினைந்து வயது ஹுலபி ஆட்டிடையன் ஆட்டு மந்தையோடு மேற்கு கிராமம் நோக்கிப் போனவன் திரும்பி வரவில்லை என்பதுதான் பரபரப்புக்கு காரணம். பையனும் இல்லை, ஆட்டு மந்தையும் இல்லை என்றவுடன் ஆவேசத்தோடு ஆயதங்களையும் ஏந்திக்கொண்டு வன்முறைக்குத் தயாரானார்கள் கிழக்கு கிராமவாசிகள்.

தங்கள் கிராமத்துக்குள் பையன் நுழையவில்லை என்பது மேற்குகிராம மக்களின் வாதம். இரு கிராமங்களுக்கும் எல்லையான நதிக்கரையில் பதட்டம் உருவாகியது. காவல் துறையினர் விசாரணைக்காகப் போனார்கள். நம்பத் தகுந்த சாட்சிகள் அழைக்கப்பட எல்லாச் சாட்சிகளும் பையனையும், ஆட்டு மந்தைகளையும் தாங்கள் காணவில்லை என்று அடித்துச் சொன்னார்கள். அழையா

விருந்தாளியாக வந்து சேர்ந்த ரஜபாசுவின் தந்தை “நான் உண்மையைச் சொல்லப் போகிறேன்” என்று அடம்பிடிக்க காவல் துறையினர் ஆவலோடு அவன் சொல்லப் போவதைக் கேட்கத் தயாரானார்கள். “நான் மனச்சாட்சிக்குப் பயப்படுகிறவன். நான் கண்களால் கண்ட இந்தச் சம்பவத்தை மறைத்தேன் என்றால் வாழ்நாள் முழுவதும் நான் அழுந்த நேரிடும் ஐயா” என்று சொன்ன ரஜபாசு மாந்தோப்பில் தான் பார்த்த சம்பவத்தை அப்படியே ஒப்புவித்தான். ரஜபாசுவின் தந்தையின் இந்த ஈனச்செயலை மன்னித்துவிட மேற்கு கிராமமக்கள் தயாராக இருக்கவில்லை. ஊரார் கூடி அவனுக்கு மதத்துரோகி என்று பட்டம்சூடி அன்றிரவே அவனை ஊரை விட்டுத் துரத்தினார்கள். குடும்பத்தோடு கிழக்கு கிராமத்திற்கு வந்த ரஜபாசுவின் தந்தை நதிக்கரையிலே சிறிய குடிசையொன்றை கட்டி குடியேறினான். அப்போது ரஜபாசுவுக்கு வயது ஐந்து.ரஜபாசுவின் தாயார் தீவிரமாக மத சம்பிராதாயங்களைப் பின்பற்றும் பாஷாரி. தன் கணவனின் இச்செயலால் கடுமையாகத் துயருற்ற அவள் காய்ச்சலாலும், கபச் சுரத்தாலும் பீடிக்கப்பட்டாள். மரணம் அவளை நெருங்கியது. மரணப்படுக்கையிலிருந்த அவள் ராஜபாசுவை மடியில் வைத்துக் கொண்டு கண்ணீர் விட்டழுதாள். அவனுடைய முகத்திலும் கண்ணீர் திவலைகள் விழுந்தன.

“ஏனம்மா அழுகிறாய்?” என்று கேட்டான் ரஜபாசு.
“உன்னுடைய எதிர்காலத்தை நினைத்துத்தான் அழுகிறேன்”
“ஏனம்மா எனக்கென்ன நடந்தது?”
“உன்னுடைய தந்தை நம்முடைய மதத்திற்கு துரோகமிழைத்து விட்டார். நீயும் அப்படி மதத் துரோகியாக மாறிவிடக் கூடாது. நான் ஒரிரு நாட்களில் இறந்து விடுவேன். நீ பெரிய ஆளாக வளர்ந்தவுடன் எங்கள் கிராமத்திற்கு திரும்பிச் சென்று அங்கேயே வாழ்க்கையை அமைத்துக் கொள்ள வேண்டும்” என்று உபதேசித்த ரஜபாசுவின் தாய் பாஷாரி மதத்தின் அருமை பெருமைகளை எல்லாம் அவனிடம் விலாவாரியாக விளக்கி அத்தோடு மூன்று கட்டளைகளும் பிறப்பித்தாள். அதில் முதலாவது, நம்முடைய பாஷாரி மதத்தை ஸ்தாபித்தவர் பாஷாரி என்ற மதகுரு. கடவுள் அவரை நேரடியாக அழைத்து உயர்ந்த நற்குணங்கள் நிறைந்த ஸர்ப்பம் ஒன்றை அவரிடம் ஒப்படைத்து கழுகுகளையெல்லாம் நீ விழுங்கக் கடவது என்று கட்டளையிட்டார். அதன்படி அந்த சர்ப்பம் உலகிலுள்ள அனைத்துக் கழுகுகளையும் விழுங்கி தேவாம்சம் பொதிந்த பாம்பாக மாறியது. அந்தப் பாம்பு இறந்து போனபின் அதனை நிலத்திலே புதைத்து அதன்மீது கட்டியதுதான் பாஷாரி மதக்கோவில். அந்தக் கோவிலுக்கு நீ போய் தொப்புளைச் சுற்றி பாம்பு கழுகை விழுங்கும் சின்னத்தை பச்சை குத்திக் கொள்ள வேண்டும். இரண்டாவது கட்டளை, பாம்பு எப்போதாவது உன்னைத் தீண்டும் சந்தர்ப்பம்

வந்தாலும் நீ அதனை அடித்துக் கொல்லக் கூடாது. மூன்றாவது, ஹுலபிகள் யாராவது உன் வீட்டிற்கு வந்தால் அவர்களை நீ விஷம் வைத்துக் கொன்று விட வேண்டும். நடந்த சம்பவங்கள் அவனுக்குத் தெளிவாக விளங்கினாலும் சம்பவங்களின் தாற்பரியங்களை அவனால் புரிந்து கொள்ள முடியவில்லை. ஈற்றில் தாய் இறந்துபோனதும் அவன் அழுததும்தான் அவனுக்கு ஞாபகமிருந்தது. தாய் சொன்னவைகள் உட்பட அனைத்து உபதேசங்களையும் ரஜபாசு முற்றாக மறந்துவிட்டான். தாய் இறந்த நாளிலிருந்து பித்து பிடித்தவர் போல் காணப்பட்ட தந்தை பிதற்றி, அங்குமிங்கும் அலைந்து திரிந்து ஒருநாள் எங்கே போனாரென்று தெரியாமலேயே காணாமல் போய்விட்டார். தனித்து விடப்பட்ட ராஜபாசு எப்படியோ சின்னச் சின்ன எடுபிடி வேலைளைச் செய்து காலத்தை கடத்தினானலும் கல்வி கற்பதில் தீராத ஆர்வத்தின் காரணமாக சுயமாக முயற்சி செய்து இன்று ஆங்கில ஆசிரியராக வந்து விட்டான்.

வாட்டசாட்டமான வாலிபனாக இருந்த ரஜபாசு அழகாகத் தோற்றமளித்தான். அடர்த்தியான சுருண்ட கேசமும், பெரிய மீசையும் அவனுக்கு இருந்தது. மாலை வேளைகளில் பைசிக்கிளில் ஊரெல்லாம் சுற்றித் திரிந்தான். ஊரில் எதுவும் வைபவங்கள் நடந்தால் பங்கு கொண்டான். மரண வீடுகளில் துக்கம் கொண்டாடினான். அவன் ஊரின் எல்லைக்கப்பால் எங்கும் சென்றது கிடையாது. அவனுக்கு வேறு உறவினர்களும் கிடையாது. கிழக்குக் கிராம மக்களோடு இரண்டறக் கலந்து விட்டதால் பூப்புனித நீராட்டு விழாக்களுக்குக் கூட ரஜபாசுவை அழைத்தார்கள். பாஷாரி மதத்தைச் சேர்ந்த ஒருத்தனுடன் திருமண உறவு வைப்பதை ஐந்து மகா பாவங்களில் ஒன்றாக கிழக்கு ஹுலாபிகள் கருதியதால் ரஜபாசுக்கு பெண் கொடுக்க யாரும் முன்வரவில்லை. மற்றைய நன்கு பாவங்களாவன கொலை செய்தல், விபச்சாரம், மது அருந்துதல், கொள்ளையடித்தல். ரஜபாசு இதனைப் பற்றிக் கவலைப்பட்டானென்றால் அதுவும் இல்லை. வயது ஏறுவதையும் பொருட்படுத்தாது ஜாலியாக காலத்தைக் கழித்துக் கொண்டிருந்தான் அவன். ரஜபாசுவுக்கு பால்ய நண்பனொருத்தன் அக்கிராமத்தில் இருந்தான். ஒட்டிப் பிறந்த இரட்டையர்கள் போல் அவ்விருவரும் காணப்பட்டார்கள். இருவரும் சின்ன வயதிலிருந்தே மாங்காய் திருடித் தின்றார்கள், மழையில் நனைந்தார்கள், மண்வீடு கட்டினார்கள், நாணற் புதர்களுக்குள் ஒளிந்து விளையாடித் திரிந்தார்கள். கிராம வாசிகள் மூக்கின்மேல் விரலைவைத்து வியந்து போகுமளவுக்கு அவர்களுக்குள் ஒற்றுமை இருந்தது. பால்ய நண்பனின் பெயர் லாகிரி.

ஒருநாள் லாகிரியின் தங்கை நோயுற்றாள். அவளுடைய உதடுகளும், நாக்கும், நகங்களும் வெளிறின, முரசுகளில் இரத்தக் கசிவு

காணப்பட்டது. உள்ளூர் ஆஸ்பத்திரியில் சிகிச்சை பலனளிக்காததால் அவளை நகர ஆஸ்பத்திரிக்கு கொண்டுபோனார்கள். ரஜபாசுவும் லாகிரியுடன் போனான். லாகிரியின் தங்கைக்கு ALL என்ற நோயிருப்பதாக டாக்டர்கள் கண்டுபிடித்தார்கள். இளம் வயதினருக்கு ஏற்படக்கூடிய புற்றுநோய் இது. உடனடியாக அவளுக்கு இரத்தம் பாய்ச்ச வேண்டும் என்று டாக்டர்கள் சொன்னாலும் அவளுடைய இரத்த மாதிரி AB – VE எங்குமே இருக்கவில்லை. கடைசியில் ரஜபாசுவின் இரத்தப்பிரிவு அச்சொட்டாக அவளுக்குப் பொருந்திற்று. இரத்தம் பாய்ச்சி சில வாரங்களில் அவளுடைய உடல் நன்றாகத் தேறியது. வேறு மாத்திரைகளும் அவளுக்குத் கொடுக்கப்பட்டன. அதற்குப் பிறகுதான் இரத்தப் புற்றுநோயை விட அதி பயங்கரமான நோயொன்றால் அவள் பீடிக்கப்பட்டாள். அதுதான் காதல் நோய். அவள் ரஜபாசுவின் மேல் காதல் வயப்பட்டாள். அரசல்புரசலாக இந்தச் செய்தி ஊரெங்கும் அடிபட லாகிரி கடுஞ் சினமுற்றான்.

“நீ தானமாக கொடுத்த இரத்தத்திற்கு எவ்வளவு பணம் வேண்டுமானாலும் தருகிறேன், எடுத்துக் கொள். அதற்காக என் தங்கையை உனக்குத் திருமணம் செய்துவைப்பேன் என்று கனவிலும் நினைத்து விடாதே. நீ நண்பன் என்பதற்காக அந்த மகா பாவத்தை நான் ஒருபோதும் செய்ய மாட்டேன்” என்று ரஜபாசுவின் வீட்டிற்குப் போய் லாகிரி காட்டுக் கத்தலாக கத்த அன்றைய தினத்துடன் அவர்களுடைய பால்ய வயதுச் சிநேகம் முறிந்தது. உள்ளத்திலே சிறுவலி ஏற்பட்ட போதிலும் கொஞ்ச நாட்களில் ரஜபாசு எல்லாவற்றையும் மறந்து விட்டான். வழமையைப் போல் பாடசாலைக்குச் செல்வதும், மாலை நேரங்களில் குழந்தைகளுக்கு ஆங்கிலம் சொல்லித் தருவதும் என்று அவனுடைய காலம் கழிந்தது. இப்படியிருக்ககையில் ஓர் அரைநிஜார் பையன் செய்த வேலையால் மதக்கலவரம் வெடித்தது. கோபுரத்தில் இருந்த காவற்காரன் தான் அரை நிஜார்ப் பையனின் செயலை தற்செயலாகக் கண்டவன், அதுவும் எப்படியென்றால் காலை வேளையில் காவற்காரன் சிறுநீர் கழித்துக் கொண்டிருந்த போது இந்தப் பையனும் அருகில் சிறுநீர் கழித்துக் கொண்டிருந்தான். காவற்காரன் அதனைப் பெரிதாக எடுக்கவில்லை. என்றாலும் சடுதியாக அவனுடைய பார்வை சிறுவனின் தொப்புள்பக்கம் சென்றது. கழுகைப் பாம்பு விழுங்கும் பச்சை அங்கு இருந்தது.

“என்ன வேலை செய்து விட்டாய்?” என்று கடுங் கோபத்துடன் கேட்டான் காவற்காரன். “நீங்கள் தானே பார்த்துக் கொண்டிருந்தீர்கள். சிறுநீர் கழித்தேன்” என்றான் சிறுவன். “சிறுநீர் கழித்தது சரி. எங்கள் பெரிய கோயிலுக்கு முன்னால் அல்லவா சிறுநீர் கழித்தாய்” என்று எகிறினான் காவற்காரன்.

“நீங்களும் கழித்தீர்கள் தானே”

“நீ கோயில் திசை நோக்கி கழித்து புனிதத்தைக் கெடுத்து விட்டாய். நான் கோயிலுக்கு பிருஷ்டத்தைக் காட்டித்தான் சிறுநீர் கழித்தேன்” என்று பதிலளித்த காவற்காரன் சிறுவனைப் பிடிக்கத் தாவ புத்திசாலி சிறுவனோ அவனுடைய கைகளுக்குள் அகப்படாமல் தப்பி ஓடி விட்டான்.

ஹுலபிகளின் பிரதான மதஸ்தலத்திற்கு முன்னால் பாஷாரிச் சிறுவன் சிறுநீர் கழித்த விடயம் பரவி கிராமவாசிகள் கைகளில் ஆயுதங்கலோடு ஹுலபிகளைத் தாக்குவதற்குத் தயாராகி வந்தாலும் அன்றைக்குப் பார்த்து அவர்களின் கையில் ஒரு பாஷாரியும் அகப்படவில்லை. கிழக்குக் கிராமத்தில் புத்திசாலி ஹுலபிக் கிறுக்கர்கள் இருந்தார்கள். அவர்களில் ஒருத்தன் ரஜபாசுவின் முற்றத்திலே பெரிய குழியைத் தோண்டி அதற்குள் நீண்ட தடியை நட்டு அதில் ஒரு செத்த பாம்பைத் தொங்கவிட அந்த வழியால் செல்லக்கூடிய ஆண்கள், பெண்கள், முதியவர்கள் எல்லோரும் பாஷாரியான ரஜபாசுவின் மீது வெறுப்பைக் காட்டுமுகமாக அந்தக் குழிக்குள் சிறுநீர் கழித்து விட்டுச் சென்றார்கள். இந்த ஏற்பாடு காரணமாக வீட்டுக்குள் துர்வாடை அடிக்கவே ரஜபாசுவினால் வீட்டிற்குள்ளே நிம்மதியாக இருக்க முடியவில்லை. சிலர் வீட்டின் மீது கல்லெறிந்தும் சில்மிஷங்கள் செய்தார்கள்.

இப்படியிருக்கையில் பழைய நண்பனான லாகிரியின் உள்ளத்திலோ வேறொரு திட்டம் உருவாகிற்று. லாகிரியின் தங்கை பாஷாரியான ராஜபாசுவை விரும்பியிருந்ததன் காரணமாக ஒழுக்கமான முறையில் அவளை வளர்க்கவில்லை என்று ஊரார் பழித்துக் கொண்டிருந்தார்கள். அவள் மீது விழுந்த அந்த இழிசொல் இன்னமும் தீராமல் அப்படியே இருந்தது. அதற்கு பழி தீர்க்க மதக் கலவரத்தை பயன்படுத்திக் கொள்ள எண்ணினான் லாகிரி. கதவைத் தட்டாமல், அழைப்பு மணியை அழுத்தாமல் இரவு வேளையிலே ரஜபாசுவின் வீட்டிற்குள் அடாத்தாக நுழைந்து வீட்டின் எல்லா இடங்களையும் ஆக்கிரமித்துக் கொண்டது ஒரு கும்பல். அவ்வேளை சோற்றுக் கவளம் ரஜபாசுவின் வாய்க் குழிக்குள் இருந்தது. “பாஷாரிக் கழுதை, சிறுநீர் கழித்து எங்கள் கோயிலை நாசமாக்கி விட்டு சாவகாசமாக சாப்பிட்டா கொண்டிருக்கிறாய்?” என்று காட்டுக் கத்தலில் பேசினான் ஒருத்தன். கோபாவேசமாக நின்ற எல்லோருடைய கைகளிலும் வாள்களும், பிச்சுவா கத்திகளும் மின்னின. எல்லாம் தெரிந்த முகங்கள். ரஜபாசு இப்படியான சூழ்நிலையை தன் வாழ்வில் ஒருபோதும் அனுபவித்ததில்லை.
“நான் சிறுநீர் கழிக்கவில்லையே”

“நீ பாஷாரி தானே”
“நான் பாஷாரி என்பதுகூட உங்கள் பாட்டனார் பாட்டி சொல்லித்தான் எனக்குத் தெரியும். ஏனென்றால் அந்தச் சொல்லை நான் ஒருபோதும் பயன்படுத்தியது கிடையாது”

“நாங்கள் உன்னுடைய உபதேசத்தை கேட்க இங்கே வரவில்லை”
“அப்படியானால் எதற்காக வந்திருக்கிறிர்கள்?”
“உன்னைக் கொல்ல வந்திருக்கிறோம்”
“எதற்காக”
“நீ பாஷாரி என்பதற்காக”
“அதற்காக ஏன் என்னைக் கொல்ல வேண்டும்”
“நீ எங்கள் எதிரி” “அப்படியானால் இத்தனை வருடங்கள் ஏன் என்னை விட்டு வைத்தீர்கள்?” “விட்டு வைத்தோம். ஏனென்றால் நீ நல்ல மனிதன் என்று நம்பினோம். நீயோ எங்கள் புனிதமான ஹுலபி இனப் பெண்ணை மனதில் நினைத்துவிட்டாய்” என்று சொன்ன ஒருத்தன் ராஜபாசுவின் கழுத்திலே மின்னிக் கொண்டிருந்த வாளை வைக்க அங்கே நின்றவர்கள் ஹுலபிமதச் சுலோகங்களை கோஷித்து ஆரவாரித்தார்கள். அப்போது அங்கு வந்து சேர்ந்தான் லாகிரி. “நீயா இதற்கெல்லாம் காரணம்?” என்று ஜுலியஸ் ஸீஸர் புருட்டஸிடம் கேட்பதைப்போல் கேட்டான் ராஜபாசு.
“காதல் என்ற பெயரில் என் தங்கையின் மனதைக் கெடுத்த பாஷாரிக் கயவன் நீ”
“காதல் என்பது மனதைக்கெடுப்பது அல்ல. மனதை வசீகரிப்பது” என்றான் ரஜபாசு விட்டுக் கொடுக்காமல்.

வெறிபிடித்த லாகிரி “அவனுக்கு அடையாளமிடு” என்று கத்தினான். ஹுலபிகளின் பரிபாஷையிலே அடையாளமிடு என்றால் மதச்சின்னமான வேதாளத்தை கூர்வாளினால் மேனியிலே வரைவது. வாளோடு நின்றவன் முதலாவது புள்ளியை முக்கோண வடிவிலே பிடரியில் வரைந்தான். காயத்திலிருந்து இரத்தம் கசிய ஆரம்பித்ததும் ரஜபாசுவுக்கு உண்மையிலே பயம் பீடித்தது. “ரஜபாசு அறிந்துகொள். ஹுலபிமதம் கீர்த்தி வாய்ந்த மதம். அது கடவுளால் சீர்வதிக்கப்பட்டது” என்று ஆரம்பித்து ஏதேதோ சொல்லிக் கொண்டு போனான் லாகிரி. ராஜபாசுவுக்கு அவன் பேசுவது எதுவும் காதிலே ஏறவில்லை. உயிர்ப்பயம் மட்டுமே மிகைத்து நின்றது. அந்த உயிர்ப் பயத்தின் காரணமாக “ஆமாம்ஆமாம்” என்று லாகிரி சொல்வதற்கெல்லாம் ஓப்புக்கொண்டு தலையாட்டினான்.

“எங்களோடு இருபது வருடங்கள் நீ வாழ்ந்து விட்டாய் என்பதனால் ஒரு சலுகையை அறிவிக்கிறேன். நீ எங்கள் மதத்திற்கு வந்துவிடு. இதுதான் நான் உனக்கு அளிக்கும் இறுதி உயிர்ப்பிச்சை” என்றான்

லாகிரி. ரஜபாசு எதையோ பேச நினைத்தாலும் வார்த்தைகள் வெளியே வரவில்லை; நாக்குழறியது. கூர்வாள் கொஞ்சம் நேரத்தில் மேனியைப் பதம் பார்க்க காத்திருக்கிறது. உயிரைக் காப்பாற்றிக் கொள்வதற்காக எதையும் செய்யத் தயாராக இருந்த ரஜபாசு "நான் சம்மதிக்கிறேன்" என்று ஒவ்வொர் எழுத்தாக கோர்த்துச் சொன்னான். அப்படிச் சொன்னதுதான் தாமதம் அங்கிருந்த சூழ்நிலை அப்படியே தலைகீழாக மாறிற்று. வாளால் காயமிட்டவன் ராஜபாசுவின் காலடியே விழுந்து மன்னிப்புக் கேட்க லாகிரி ரஜபாசுவைப் பார்த்து நட்புறவுடன் புன்னகைத்தவாறே அருகில் வந்து பீங்கானில் எஞ்சியிருந்த சோற்றை அவனுக்கு ஊட்டினான். அழகிய ஆசனமும் எங்கோயிருந்து அவனுக்காக வந்தது. ரஜபாசு ராஜாவனான். எங்கிருந்தோ ஹூலபி மதகுருவும் வந்து சேர்ந்தார்.

மதகுரு ஹூலபி விதிமுறைப்படி ரஜபாசுக்கு மொட்டையடித்து, உச்சிக்குடுமி வைத்து, பிருஷ்டத்தில் வேதாளத்தை பச்சை குத்தினார். முற்றத்தில் தோண்டப்பட்ட சிறுநீர்க்குழியின் முடையை போக்குவதற்காக அங்கிருந்தவர்கள் ஐம்பதுகுடம் பால் கொண்டுவந்து ஊற்றினர், சிலர் அவன் மேனியில் கஸ்தூரி தடவினர். இப்போது ராஜபாசுவின் அருகில் சிங்கம் போல் ஆகி நின்ற லாகிரி "ரஜபாசு எதனைப் பற்றியும் கவலைப்படாதே, யாராவது உன்மீது தூசை எறிந்தாலும் என்வாள் அவன் சிரசைத் துண்டித்தவிடும்" என்று கர்ஜித்தான். இதனையும் விட வியப்பான கைங்கரியம் அடுத்தநாள் அரங்கேறிற்று. விடிந்ததும் விடியாததுமாக மேளதாளங்கள் முழங்க ஓர் அழகிய மணமகள் ரஜபாசுவின் வீட்டிற்கு வந்து சேர்ந்தாள். அவள் லாகிரியின் தங்கை. பூமாரிசொரிய அவர்களுடைய திருமணம் விமரிசையாக நிகழ்ந்து முடிந்தது. கிராமவாசிகள் அத்தோடு விட்டு விடவில்லை. புதுமணத் தம்பதிகள் வாழ்வதெற்கென்று அழகிய வீட்டைக் கட்டி இரு வீடுகளையும் சுற்றி சுவர் எழுப்பி *'ரஜபாசு கிராமம்'* என்றும் பெயரிட்டார்கள். அதன்பிறகு ரஜபாசு கிழக்குக் கிராமத்தின் இளவரசன் போலவும் லாகிரியின் தங்கை இளவரசி போலவும் சுகபோகங்களை அனுபவித்து பிள்ளை குட்டிகளைப் பெற்று பேரன் பேத்திகளுடன் நீண்ட காலம் வாழ்ந்தார்கள்.



# எலும்புக் கூடு சித்தாந்தம்

எம்.எம்.நௌஷாத்

மனிதர்களுக்கு செல்லப்பெயர் இருப்பதைப்போல் ஒருகாலத்தில் நாடுகளுக்கும் செல்லப் பெயர்கள் இருந்தன. சுறுசுறுப்பான மனிதர்களைக் கொண்ட ஜப்பானுக்கு 'தேனீ!, எல்லா மொழிகளையும் பேசும் இந்தியாவுக்கு வானவில், மற்ற மனிதர்களைக் கண்டால் எப்போதும் புன்னகைக்கும் ஸ்ரீலங்காவுக்கு புன்னகை, கடலையே கண் வாங்காது பார்த்துக் கொண்டிருப்பதால் மாலைதீவுக்கு நீல நயனம். இப்படியே இன்னுமொரு நாடு இருந் தது. அதன் செல்லப் பெயர் 'வெள்ளிக் குற்றி'. இந்தப் பெயர் வந்த காரணம் என்னவென்றால் அந்நாட்டு மக்களின் கைகளில் எப்போதும் பத்து வெள்ளி நாணயக் குற்றிகள் இருக்கும். வெள்ளி நாணயக் குற்றிகளைப் போடுவதெற் கென்று முச்சந்திகளிலும், நாற்சந்திகளிலும் *காசுப்பெட்டிகள்* இருந்தன. பெட்டிகள் என்று அழைத்தாலும் அவை முட்டை வடிவில், நட்சத்திர வடிவில் என்று எல்லா ரூபங்களிலும் காட்சியளித்தன. பெட்டிகளில் மின்விளக்குகள் மின்னிமின்னி ஒளிர்ந்தன, பாடல்கள் ஒலித்தன, சில இடங்களில் அரைநிர்வாண காணொளிகளில் நடனமாதர்கள் தோன்றினார்கள். இந்தப் பெட்டிகளைக் கடந்து யாரும் கண்டும்காணாத மாதிரி போக முடியாது. அந்தளவுக்கு உள்ளத்தை அவை ஈர்த்தன. காசுப்பெட்டித் துளைகளுக்குள் பத்து வெள்ளிக் காசுகளைப் போட போட்ட மாத்திரத்திலேயே வர்ண அட்டை வெளியேவரும்.

அதற்குப் பெயர் காசுஅட்டை. காசு அட்டை திங்கட்கிழமைகளில் பொன்னிறத்திலும், செவ்வாய்க்கிழமை ஒலிவ் பச்சையிலும், புதன்கிழமை கடல் நீலத்திலும், வியாழக்கிழமை கிறிம்சன் சிவப்பிலும், வெள்ளிக்கிழமை செம்மஞ்சல் நிறத்திலும் இருக்கும். இந்த அட்டைகளைப் பெற்றுக்கொள்வதற்காக மதகுருமாருகளும், பெண்களும், சிறார்களும், அரசாங்க உத்தியோகத்தர்களும், பேராசிரியர்களும் காலை ஏழு மணியிலிருந்து கால் கடுக்கக் கடுக்க நின்றார்கள். 'பத்துவெள்ளி ஒரு தூசு, அதைப் போடுங்கள், கோடியை வெல்லுங்கள்' என்ற வாசகங்கள் எல்லா இடங்களிலும் காணப்பட்டன. மாலை நான்குமணியானதும் காசுஅட்டையின் முடிவுகள் வெளிவரும். எண்பது இலட்சம் பேர் தொலைக்காட்சிகளை சூழ்ந்து நிற்கும் அவ்வேளை நாடு ஸ்தம்பித்துவிடும், இதயங்கள் படபடக்கும், காசு அட்டையின் எண்கள் மீது கண்கள் குத்திட்டு நிற்க அதிர்ஷ்டக் குலுக்கல் நடைபெற்று வெற்றியாளன் அறிவிக்கப்படுவான். வெற்றி பெற்றவன் அரசனாகிவிட அவனுக்கு அரசனுக்குரிய ஆடைகளை அணிவித்து அரியணையில் அமரவைத்து கிரீடம் சூடி பட்டாசு கொளுத்தி, கோடீஸ்வர மகான் என்று பிரகடனம் செய்து கோடி தங்க நாணயங்களை அவனுடைய கையிலே கொடுப்பார்கள். பரிசு கிடைக்காத 79,99999 குடிமக்களும் கோடீஸ்வர மகான் ஆவதற்கு ஆசைப்பட்டு மீண்டும் காசுப்பெட்டியை நோக்கி முண்டியடித்துக் கொண்டு ஓடுவார்கள்.

பிர்வா நப்லாவுக்கு வயது நாற்பது. அவனும் வெள்ளிக்குற்றி நாட்டில் பிறந்தான். அவன் பிறந்த திகதி ஏழு, பிறந்த மாதம் ஜூலை, ஏழாம் மாதம், பிறந்த ஆண்டின் கூட்டுத்தொகை ஏழு, பிறந்த நேரம் காலை ஏழு ஏழு என்று அத்தனையும் அதிர்ஷ்டமான ஏழாம் எண் என்பதால் அவன் பிறந்தபோது அவனுடைய பெற்றோர்கள் மிகவும் மகிழ்ச்சியடைந்ததோடு பிர்வா நப்லா என்றோ ஒருநாள் கோடீஸ்வரமகானாகி விடுவான் என்றும் திடமாக நம்பினார்கள். பிர்வா முண்டியடித்துக் கொண்டு காசுப்பெட்டியடியில் நிற்பதில்லை. அவன் வாழ்ந்த தெருக்கோடியிலே வசித்து வந்த மதகுரு அவனுடைய வீட்டுக்கே வந்து காசு அட்டைகளை கொடுத்துச்செல்வார். காலை ஆறுமணிக்கு அவர் கதவைத் தட்டும்போது கண்களைக் கசக்கிக்கொண்டு மதகுருவின் முகத்தில்தான் பிர்வா விழிப்பான். நேர்மை தவறாத பிர்வா சம்பளம் எடுத்த உடனேயே மதகுருவின் வீட்டிற்குச் சென்று மூவாயிரம் வெள்ளிக்காசுகளை ஒப்படைப்பான். கணக்குப் படி சம்பளத்தில் சரிபாதி.

பிள்ளைகள் பட்டினியாக இருக்கும் போதும், பாடசாலைக் கட்டணத்தைச் செலுத்த வழியில்லாமல் தவிக்கும் போதும், மழைக் காலத்தில் கூரை ஒழுகும் போதும் தினசரி பத்து காசு அட்டைகள் பிர்வா வாங்குவதைக் குறித்து மனைவி சண்டை பிடிக்கும்போது பிர்வா நப்லா “எனக்கு கோடி தங்க நாணயங்கள் கிடைத்து விட்டது என்று வைத்துக்கொள். நான் அரசனுக்குரிய சிம்மாசனத்தில் அமருகிறேன் என்று வைத்துக்கொள். நீ பகட்டான பட்டாடைகளை உடுத்திக்கொண்டு மோட்டார் காரில் பவனிவருகிறாய் என்று வைத்துக்கொள். அப்போது இந்த சண்டை சச்சரவுகளுக்கெல்லாம் நீ என்ன பதில் சொல்லுவாய்?” என்று கேட்பான். உடனே அவளுடைய வாய் ஓய்ந்துவிடும்.

பிர்வா நப்லாவின் மனைவியும் லேசுப்பட்ட ஆளல்ல. அவளுக்கு இங்கிலாந்தோடு நிறையத் தொடர்பு இருந்தது. *Epsom, Ffos Las, Ludlow, William, Ladbroke Racing Post, AtTheRaces, CheHenham, Jockey, Jehannedare, Red Avenger, Bantam, Eghnaa, Miyachiku* என்பன அவளுக்குப் பரிச்சயமான சில சொற்கள். அவள் ஆங்கில இலக்கணத்தைக் கரைத்துக் குடித்தவள் என்று நினைத்தால் அது தப்பு. அவளுக்கு அடித்தாலும் ஆங்கிலம் பேசவோ எழுதவோ வராது. ஆங்கில அரிச்சுவடியில் இருபத்தாறு எழுத்துக்கள் இருக்கின்றன என்ற விஷயம் கூட இதுவரை தெரியாவிட்டாலும் இங்கிலாந்து பந்தயத் திடல்களில் ஓடும் எல்லாக் குதிரைகளின் பெயர்களும் அவளுக்கு அத்துப்படி. காலை ஐந்து முப்பதுக்கே எழுந்து அருகிலுள்ள Book Makers நிலையத்திற்குப் போய் வெற்றி பெறப்போகும் குதிரைமீது பந்தயப்பணம் கட்டிவிட்டு வந்தபிறகு தான் அவளுக்குத் தொண்டையில் தேநீர் இறங்கும். அவளுக்கும் எல்லா இலக்கங்களும் ஏழில்

அமைந்திருந்ததால் கணவனா, மனைவியா அதிக அதிர்ஷ்டசாலி என்பதில் இருவருக்கும் போட்டி நிலவியது.

ஒரு வெள்ளிக்கிழமை மதகுரு நீண்ட நேரமாகக் கதவைத் தட்டியும் பிர்வா கதவைத் திறக்கவில்லை. கொஞ்ச நேரம் கழித்து மனைவிதான் கதவைத் திறந்தாள். பிர்வா கட்டிலில் தூங்கிக் கொண்டிருந்தான். பிர்வா நப்லாவின் நெற்றில் கைவைத்துப் பார்த்த மதகுரு அதிர்ச்சியடைந்து “ஐயோ காய்ச்சல்” என்க, கண்களைத் திறந்த பிர்வா “மதகுருவே, காய்ச்சல் இல்லை. கவலை” என்றான்.
“என்ன கவலை?”
“இருபத்தைந்து வருடங்களாக காசுஅட்டை வாங்கியும் இன்னமும் கோடிஸ்வர மகானாக மாறமுடியவில்லையே என்ற கவலைதான்” என்று பிர்வா புலம்ப பிர்வாவின் கரங்களை அன்புடன் பற்றிய மதகுரு “பிர்வா, இப்போது எதை நீ சொன்னாயோ அதே விஷயத்தைத் தான் நான் இரவு முழுவதும் யோசித்து ஒரு முடிவோடு வந்திருக்கிறேன்” என்று சொல்லியவாறே கையிலிருந்த பெரிய வரைபடத்தை அவன் முன்னால் விரித்தார்.
“இது என்ன?” என்று பிர்வா வியப்புடன் கேட்க “பிர்வா யாருக்கும் சொல்லிவிடாதே, அடுத்த வாரம் நாங்கள் புதையல் தேடப் போகிறோம். அதற்குரிய வரைபடம் தான் இது” என்றார் மதகுரு.
“புதையலா?”
“ஆமாம். புதையலென்றால் லேசுப்பட்ட புதையல் அல்ல இது. கோடானுகோடி தங்க நாணயங்களும், வைரங்களும், நகைகளும் நம் கைக்கு வரப்போகிறது” என்றார் மதகுரு. கவலைக் காய்ச்சல் பறந்தோட உற்சாகம் பீறிட எழுந்து உட்கார்ந்தான் பிர்வா நப்லா. இருவரும் நீண்ட நேரம் திட்டம் தயாரித்தார்கள், மந்திராலோசனை நடத்தினார்கள். புதையல் ஆராய்ச்சி மிகவும் இரகசியமாக இருக்கவேண்டுமென்று மதகுரு கட்டளையிட பிர்வாவும் அதனை ஏற்றுக் கொண்டான். நீண்டதூரப் பயணம் என்பதால் அதற்கேற்றவாறு பிரயாண ஏற்பாடுகளைப் செய்ய ஆரம்பித்தான் பிர்வா. பிர்வா நப்லாவின் மனைவி சுறுசுறுப்பாக ஆடியோடினாள், பட்சணங்களைத் தயார் செய்தாள், ஆடைகளைப் பொதிசெய்தாள், கண்ணாடி, சீப்பு, பற்பசை, பிரஸ் இவைகளை எல்லாம் சேகரித்தாள். இருவருமாக கடைத்தெருவுக்குச் சென்று மதகுரு கொடுத்த பட்டியலில் உள்ள சாமான்களை வாங்கினார்கள்.

பூட்ஸ் இரண்டு சோடிகள், சாதாரண சப்பாத்து ஒன்று, கென்வஸ் பை ஒன்று, டோர்ட் லைட் பெரியது ஒன்று, பற்றரிகள் பத்து, நீண்ட காக்கிச் சட்டை ஐந்து, குட்டை காற்சட்டை ஐந்து, உள்ளாடைகள் ஐந்து, வெயில் தொப்பி சிவப்பு ஒன்று, கறுப்பு ஒன்று, கொக்ள்ஸ் (Goggles) ஒன்று, நீர்புகா கைக்கடிகாரம் ஒன்று, முகமூடிகள் இரண்டு, மப்ளர் இரண்டு, காது சுத்தமாக்கி ஒன்று, இலவம் பஞ்சுரோல் ஒன்று

என்று நீண்டுகொண்டு போனது பட்டியல். கடைக்காரனுக்கு பிர்வா நப்லாவை நீண்டகாலமாகத் தெரியும். பிர்வா இப்படியான ஆடைகளை ஒருபோதும் வாங்கியது கிடையாது, சாமான்கள் வாங்கியதும் கிடையாது, அணிந்ததோ, பாவித்ததோ கிடையாது. எனவே ஆச்சரியமுற்றவனாக "பிர்வா, இவற்றையெல்லாம் எதற்காக வாங்குகிறாய்?" என்று கேட்டான். 'ஒன்றுமில்லை. வேட்டையாடப் போகிறேன். அதற்காகத்தான்' என்று சமாளித்தான் பிர்வா. 'வேட்டையாடுவதற்கா? உனக்கு விளையாட்டுத் துப்பாக்கியைக் கூட எப்படிப் பிடிப்பதென்று தெரியாதே. எப்படி வேட்டையாடப் போகிறாய்?' என்று கடைக்காரன் எகத்தாளமாகக் கேட்க பிர்வா திருதிருவென்று விழித்தான்.

மதகுரு எச்சரித்திருந்ததால் வாயைத் திறக்க அவனுக்குப் பயமாக இருந்தது. "உண்மையைச் சொல் பிர்வா, பெரிய காரியமொன்றில் நீ இறங்கப் போகிறாய் என்பதுதான் உண்மை. என்னிடம் மட்டும் சொல்லு. நான் யாரிடமும் சொல்லமாட்டேன்" என்று சத்தியமிட்டுச் சொன்னான் கடைக்காரன். மனைவி சும்மா இருக்க வேண்டுமே! அவள் ஒன்றையுமே யோசிக்காமல் புதையல் வேட்டைக்குப் போகின்ற உண்மையை உடைத்துப் போட்டாள். முகம் பூரித்துப் போன கடைக்காரன் தன்னையும் புதையல் வேட்டைக்கு கூட்டிப் போகும்படி கெஞ்சினான். "பிர்வா, நீ வாங்கிய எந்தப் பொருளுக்கும் பணம் வேண்டாம். எல்லாவற்றையும் என்னுடைய அன்பளிப்பாக எடுத்துக்கொண்டு என்னையும் கூட்டிப்போ" என்று மன்றாட ஆரம்பித்தான் கடைக்காரன். பிர்வா நப்லா தடுமாறினான். "கடைக்காரரே, நீங்கள் பணக்காரர். உங்களுக்கு பெரிய பங்களா இருக்கிறது, ஆடம்பர கார் இருக்கிறது. மிகவும் சௌகரியமாக வாழ்கிறீர்கள். உங்களுக்கேன் வீண்வம்பு? இருப்பதையும் இழந்து ஓட்டாண்டியாகப் போகிறீர்கள்" என்றான் பிர்வா.

கடைக்காரரோ அடம்பிடித்த குழந்தை போலக் காணப்பட்டார். சாக்குப்போக்குகள் சொல்லியும் அவர் அடங்குவதாகவேயில்லை. "பிர்வா எனது அந்தஸ்தைப் பற்றிக் கவலைப்படாதே, என்னை உனது வேலைக்காரனாக வைத்துக்கொள். எல்லா வேலைகளையும் மனங்கோணாது செய்து தருகிறேன், உன்னுடைய பூட்ஸ்களைத் துடைக்கிறேன், ஆடைகளைத் துவைத்துத் தருகிறேன், உன்னைக் குளிப்பாட்டி சோப்புப் போடுகிறேன், எது வேண்டுமானாலும் சொல்லு. நீ காலால் இட்ட வேலையை நான் என் தலையால் செய்கிறேன்" என்றார் கடைக்காரர். இதற்குமேல் எதைச் சொன்னாலும் கடைக்காரர் செவிமடுக்கமாட்டார் என்றபடியால் வேறுவழியின்றி கடைக்காரரையும் புதையல் வேட்டைக்குச் சேர்த்துக் கொண்டான் பிர்வா நப்லா.

பயணம் ஆரம்பமானது. பிர்வாவும் மதகுருவும் பகட்டான ஆடைகளை அணிந்து கொண்டு முன்னே நடக்க, கடைக்காரர் மூடைகளை

முதுகில் சுமந்துகொண்டு தலையைத் தொங்கப் போட்டவாறே அவர்களுக்கு பின்னே நடக்கலானார். நகர பேரூந்து நிலையத்திலிருந்து அவர்களை ஏற்றிக் கொண்டு பேரூந்து புறப்பட்டது. நானூற்றி எழுபத்தெட்டு மீற்றர்களுக்கப்பால் காடுகள் அடர்ந்த இடமொன்றில் சாரதி பஸ்ஸை நிறுத்தி, அவர்களை இறக்கி விட்டு “நீங்கள் குறிப்பிட்ட இடம் இதுதான்” என்றான். மதகுரு வரைபடத்தைப் பிரித்துப் பார்த்துவிட்டு சரியென்று தலையாட்டினார். வரைபடத்தின்படி புதையல் இருக்குமிடத்தைச் சென்றடைவதற்கு தேனிமலையூடாகப் பயணம் செய்யவேண்டும். அவர்கள் நடக்க ஆரம்பித்தார்கள்.

கொஞ்சதூரம் போனதும் தேய்ந்த எழுத்துக்களில் எழுதப்பட்ட துலக்கமில்லாத பழைய பெயர்ப்பலகை ஒன்று சுருண்டுபோய் அம்புக்குறி ஆலமரமொன்றின் உச்சியைப் பார்த்துக் கொண்டிருந்தது. ஒற்றையடிப் பாதையையும் விட கொஞ்சம் அகலமான பாதை. வாகனங்கள் போகமுடியாது. தோட்டமொன்றில் பையன் கத்தரிச் செடிகளுக்கு நீரூற்றிக் கொண்டிருக்க “தம்பி, தேனிமலைக்குச் செல்லும்பாதை இதுதானா?” என்று கேட்டான் பிர்வா நப்லா. பையன் அவர்களை நிமிர்ந்து பார்த்துவிட்டு “நீங்கள் என்ன புதையல் வேட்டைக்கா வந்திருக்கிறீர்கள்?” என்று கேட்டதும் பிர்வா கண்களில் ஆச்சரியக்குறியுடன் “எப்படியப்பா இலகுவாகக் கண்டு பிடித்தாய்?” என்று கேட்டான்.

“உங்கள் மூவரின் முகரக்கட்டையையும் பார்த்தால் யாரும் இலகுவாகக் கண்டு பிடித்து விடுவார்கள்” என்று இளக்காரமாகச் சொன்னான் பையன்.

“கோபிக்க வேண்டாம் பையனே, நாங்கள் தூரத்து ஊரிலிருந்து வருகிறோம். இரண்டு வெள்ளி நாணயங்கள் தருகிறேன். தயவு செய்து தேனீமலைக்குச் செல்லும் பாதையைக் காட்டிவிடு” என்று பணிவாகச் சொன்னார் மதகுரு.

“எங்கே உங்கள் உள்ளங்கைகளை விரித்துக் காட்டுங்கள்” என்று பையன் கட்டளையிட ஒன்றும் புரியாதவர்களாக வேறுவழியின்றி மூவரும் உள்ளங்கைகளை விரித்துக் காட்டினார்கள்.

“நான் நினைத்தது சரியாகி விட்டது” என்று தனக்குள் தானே முணுமுணுத்துக் கொண்ட பையன் “நீங்கள் பணம் தரவேண்டியதில்லை. கத்தரிச் செடிகளுக்கு நீரூற்ற எனக்கு உதவி செய்யுங்கள்” என்று பதிலளிக்க அவர்கள் மூவரும் சரியென்று தலையாட்டினார்கள். அவர்களுக்கு அது புது அனுபவம். வாழ்க்கையில் எந்தச் சந்தர்ப்பத்திலும் அவர்கள் வியர்வை வரும் வரைக்கும் உடலை வருத்தி வேலை செய்தது கிடையாது. இன்று வியர்வை வடிந்து மேனி வெள்ளமானது புது அனுபவம்தான். “உங்கள் உள்ளங்கைகளைப் பாருங்கள். ஷோரூம் பொம்மை மாதிரி வேலையே செய்யாமலிருக்க உங்களுக்கு வெட்கமாக இல்லையா?.... பரவாயில்லை. இப்போதைக்குப் போதும். இன்னும் கொஞ்சம் உடம்பை அசைத்தீர்களென்றால் கொழுப்பு கரைந்துவிடும்” என்று

சொன்ன பையன் நீரூற்றும் பணி முடிந்ததும் பாதை விளக்கத்தைச் சொன்னான்.
“நீங்கள் இரண்டரைக் கிலோமீற்றர் நடக்க வேண்டும். நீங்கள் நினைப்பதைப்போல் இது இலகுவான பாதையல்ல. சேறும், சகதியும், முட்பற்றைகளும் நிறைந்த கரடுமுரடான பாதை. பூட்ஸை மாட்டிக் கொள்ளுங்கள், நீளக் காற்சட்டையை மடித்துக் கொள்ளுங்கள், பயங்கரமான குளிர் தாக்கலாம். மப்ளரைச் சுற்றிக் கொள்ளுங்கள்” என்று பையன் உபதேசித்ததைப் போல் பாதை நடக்க முடியாதபடி கஷ்டமாகத் தான் இருந்தது. கடைக்காரரின் நிலைமையோ மிகவும் மோசமாகி அவர்களுக்குப் பின்னால் இழுபட்டுக் கொண்டுபோன அவருடைய மேனியிலிருந்து முட்கள் குத்தியதால் குருதி கசிந்து கொண்டிருந்தது.

பார்த்த பார்வையிலே தேனீமலை வித்தியாசமான ஊராகத் தான் இருந்தது. வழமையாக ஊர் ஆரம்பிக்குமிடத்தில் தேநீர்க்கடை இருக்கும். கடைக்கு முன்னால் இரண்டு வாங்குகள் போடப்பட்டு வாங்குகளில் நான்கைந்து பேர் எப்போதும் சீட்டாடிக் கொண்டிருப்பார்கள். சீட்டாடாத நாட்களில் ஒருவன் பழைய தினசரியொன்றை வாசித்துக் கொண்டிருப்பான், ஒருவன் சுருட்டு புகைத்துக் கொண்டிருப்பான், ஒருவன் சண்டை பிடித்துக் கொண்டிருப்பான், ஒருவன் அரட்டை அடித்துக் கொண்டிருப்பான். தேனீமலைக் கிராமத்திலும் தேநீர்க்கடை இருந்தது. ஆனால் வாங்கு இல்லை, அரட்டை அடிப்போர் இல்லை, சிறிசு முதல் கிழடுவரை ஏதோவொரு காரியத்தை செய்து கொண்டிருந்தார்கள். வீணாக சுற்றிக் கொண்டிருப்போர் எவரும் பாதையில் இல்லை. பிர்வா நப்லாவுக்கு பசி வயிற்றைப் புரட்டி எடுக்கவே, தேனீர்க்கடைக்குள் நுழைந்து பகலுணவுக்கு ஓடர் கொடுத்தான்.

களைத்திருந்த மூவரும் ஆவலோடு சோற்றைச் சாப்பிட்டார்கள். வயிறு நிறையாத படியால் பணியாளரை அழைத்து இன்னும் சோறு கொண்டு வரும்படி கட்டளையிட்டான் பிர்வா. பணியாளன் மேலதிக உணவு கொண்டுவர மறுக்கவே கோபமடைந்த பிர்வா நப்லா முகாமையாளரிடம் சென்று முறையிட்டான்.
“ஹோட்டல் சிப்பந்தி செய்த வேலையைப் பார்த்தீர்களா?”
“சொல்லுங்கள், என்ன பிரச்சனை?”
“வாடிக்கையாளர்களின் தேவைகளை அறிந்து அவர்களின் மனம் கோணாதபடி கவனிப்பதுதான் ஹோட்டல் ஊழியனின் கடமை. அவனோ கடமை தவறிவிட்டான். நான் மேலதிகமாக சோறு கொண்டுவரும்படி சொல்லியும் அவன் கொண்டுவர மறுத்து விட்டான்” என்று பொரிந்தான் பிர்வா.
“அவன் அப்படி மறுத்ததில் தவறேதும் இல்லையே”
“எங்களிடம் போதியளவு பணம் இருக்கிறது”

"நீங்கள் சொல்வது நியாயம்தான் என்றாலும் தேனிமலையில் இருக்கும் சட்டம் வேறு. இங்கு நாங்கள் பணத்தை முன்னிலைப் படுத்துவதில்லை. இரைப்பையை மூன்று பகுதியாகப் பிரித்து ஒரு பகுதி நிரம்பும் அளவில்தான் சாப்பிட வேண்டும். இரண்டாவது பகுதியை தண்ணீரால் நிரப்புதல் வேண்டும். எஞ்சிய பகுதியை வெறுமையாக விட்டு விடுதல் வேண்டும். இதுதான் இங்கே நடைமுறையில் இருக்கும் நியதி"
"நீங்கள் சொல்லும் சட்டம் வினோதமாக இருக்கிறதே"
"உங்களுக்கு அது வினோதமாகத் தோன்றினாலும் உடல் ஆரோக்கியத்தைப் பேணுவதற்கு இதுதான் அவசியமான சட்டம். இந்தக் கிராமத்தில் நீங்கள் இதய வியாதியால் பீடித்த ஒருவரைக் காண மாட்டீர்கள், இரத்தஅழுத்த நோயாளியைக் காணமாட்டீர்கள்" என்றார் முகாமையாளர்.

தேனிமலைக் கிராமம் சிறிய கிராமம். முதலில் நாற்சந்தி. வலதுபுறம் பாடசாலைக்குச் செல்லும் வீதி. நேராகச் செல்லும் வீதி பறங்கிமலைத் தோட்டம் என்ற பிரதேசத்தை ஊடறுத்துச் செல்லும். கைவசமிருந்த வரைபடத்தின் படி அந்தப் பாதையால் தான் புதையலிருக்குமிடத்திற்குச் செல்ல வேண்டும். கேட்டுத் தெரிந்து கொள்ளலாமென்றால் கிராமவாசிகளிடம் கேட்பதற்கே பயமாக இருந்தது. வருவது வரட்டும் என்ற அசட்டுத் தைரியத்தில் மூவரும் பாதையால் நடக்க ஆரம்பித்தார்கள். வீடுகள் குறைவாக இருந்த அந்தப் பாதையில் எங்கு பார்த்தாலும் பழத் தோட்டங்களாகவே காட்சியளித்தன. பழங்கள் காய்த்துத் தொங்கின. வாழைப்பழம், மாம்பழம், பப்பாசிப்பழம், மாதுளை, துாரியம் என்று எண்ணிலடங்காக் கனிகள். கைக்கெட்டும் துாரத்தில் அவை இருந்தன, வாயூறியது, ஏற்கனவே நிரம்பாத வயிற்றில் இன்னும் பசியெடுத்தது. மூவரும் ஒருவர் முகத்தை ஒருவர் பாரத்துக் கொண்டார்கள். பின்னர் கண்ஜாடை செய்தவர்களாக தோட்டத்திற்குள் நுழைந்த அவர்கள் பழங்களைப் பறித்து ஆசைதீருமட்டும் உண்டார்கள், களைப்பாறினார்கள், தேவைப்படலாம் என்று இரண்டுமூன்று பைகளில் பழங்களைச் சேகரித்துக் கொண்டபோது கிழவர் வந்தார். தோட்டத்துச் சொந்தக்காரர்.

"பிள்ளைகளே, நான் பழமரங்களை நட்டேன், நானே நீரூற்றினேன், நானே வியர்வை சிந்தினேன். நீங்கள் இப்படிப் பழங்களைப் பறித்ததும், உண்டதும் நியாயமாகுமா?" என்று கேட்டார் கிழவர். ஒன்றுமே பேசாமல் ஊமையாகி விட்ட அவர்கள் தலையைக் குனிய மதகுரு வாயைத் திறந்தார். "பெரியவரே, நீங்கள்தான் தோட்டத்திற்குச் சொந்தக்காரர் என்று எங்களுக்கு சத்தியமாகத் தெரியாது. உண்ட பழங்களை வாந்தியெடுக்க முடியுமா? முடியாது. பறித்த பழங்களை மீண்டும் ஒட்ட முடியுமா? முடியாது. ஆகவே பெரியவரே. பழங்களுக்குக் கிரயமாக வெள்ளிக் காசுகளைத் தருகிறேன். எவ்வளவு என்று சொல்லுங்கள்" என்றார் மதகுரு.

“நீங்கள் புதையல் வேட்டைக்கா வந்திருக்கிறீர்கள்?” என்று கேட்டார் கிழவர்.
“ஆமாம்”
“எனக்கு வெள்ளிக்காசுகள் வேண்டாம். கோடரி தருகிறேன். பட்டமரமொன்று இருக்கிறது. அதனைப் பிளந்து விறகாக்கி தந்தீர்களென்றால் எனக்குப் போதும்” என்று சொன்ன கிழவர் அவர்களுடைய பதிலுக்குக் காத்திராமல் மூன்று கோடரிகளைக் கொண்டு வந்து அவர்களின் கைகளிலே ஒப்படைக்க மூவரும் வேறு வழியின்றி மரத்தைப் பிளக்க ஆரம்பித்தார்கள்.

நடப்பதையெல்லாம் அவதானித்துக் கொண்டிருந்த ஓர் இளைஞன் அருகே வந்து “நீங்கள் எல்லாம் யார்?” என்று கேட்டான். “நான் பிர்வா நப்லா” என்றான் பிர்வா “நான் மதகுரு” என்றார் மதகுரு. “நான் வியாபாரி. இப்போது வேலைக்காரணாக இருக்கிறேன்” என்றார் வியாபாரி. “எதற்காக வந்திருக்கிறீர்கள்?”
“தேனிமலை என்ற இந்த ஊரிலிருந்து பதினாறு கிலோமீற்றர் கிழக்காகப் போனால் புதையல் இருக்கிறதாம். அதனைத் தேடி வந்திருக்கிறோம்”
“நான் நெடு நேரமாக உங்களை அவதானித்துக் கொண்டுதான் வருகிறேன். நீங்கள் படும் கஷ்டங்களைப் பார்க்க பரிதாபமாக இருக்கிறது. நான் என் தந்தையிடம் உங்களை அழைத்துச் செல்லுகிறேன். புதையல் பற்றிய எல்லா விபரங்களையும் அவர் விலாவாரியாக உங்களுக்கு சொல்லித் தருவார்” என்றான் இளைஞன்.

“இந்தக் கிராம மக்களுக்கு புதையலைப்பற்றிய இரகசியங்கள் தெரியுமா?”
“எல்லோருக்கும் தெரியும்”
“அப்படியானால் புதையலைத் தேடிச்செல்லாமல் ஏன் இப்படி சோம்பேறிகளாக இருக்கின்றார்கள்?” “இந்தக் கிராமத்துக்கு தேனீமலை என்ற பெயர் வந்தது எப்படியென்று தெரியுமா?”
“தெரியாது, எப்படி?”
“இந்தக் கிராமத்து மக்கள் தேனீக்களைப் போல் எப்போதும் சுறுசுறுப்பாக இருப்பார்கள். நீங்கள் நினைப்பது போல் அவர்கள் சோம்பேறிகள் அல்லர். அதிர்ஷ்டத்தை நம்பாமல் வியர்வை சிந்தும் தங்கள் தேகத்தை நம்புபவர்கள்” என்று காட்டமாகப் பதிலளித்தான் இளைஞன்.

இளைஞனின் தந்தை ஒரு மருத்துவர். பெயர் ரெட்டிராய். அவர் மருத்துவ நிலையம் நடத்தி வந்தார். பழைய கட்டடமொன்றிலே அது இயங்கி வந்தது. கட்டடத்திற்குள் நுழைந்ததுமே ஒரு புகைப்படத்தின் மேலே மூவரின் பார்வையும் விழுந்தது. ஆளுயர புகைப்படம். படத்திலே டாக்டர் ரெட்டிராய் நிற்கிறார். அவருக்குப் பக்கத்திலே கதிரையிலே எலும்புக்கூடு அமர்ந்திருக்கிறது. என்ன வினோதமான புகைப்படம்! பிர்வா அதனை ஆராய்ந்து கொண்டிருக்கும் போதே

டாக்டர் ரெட்டிராய் வர இளைஞன் அவர்களுக்கு தந்தையை அறிமுகப்படுத்தி வைத்தான்.
“டாக்டர், சுவரிலே மாட்டி வைத்திருக்கும் புகைப்படம் வினோதமாக இருக்கிறது. உங்களோடு அமர்ந்திருக்கும் எலும்புக்கூடு யாருடையது?” என்று கேட்டார் மதகுரு. டாக்டர் ரெட்டிராய் சிரித்தார்.
“புகைப்படத்திற்குக் கீழே தரப்பட்டுள்ள புகைப்பட விளக்கத்தைப் பார்க்கவில்லையா?”
“இல்லை”
“அந்த எலும்புக்கூடு இறப்பதற்கு முன் பேசிய வசனங்களை வாசித்துப் பாருங்கள்”
“*என்னுடைய முடிவு புதையலைத் தேடிவரும் ஒவ்வொரு ஆணுக்கும் பெண்ணுக்கும் பாடமாக அமையட்டும். நான் மரணித்தவுடன் என்னைப் புகைப்படமெடுத்து சுவரிலே மாட்டி வையுங்கள். இங்கே வரக்கூடியவர்கள் அதிலிருந்து படிப்பினை பெறட்டும்*” என்று வாசித்தான் பிர்வா.

“டாக்டர் நீங்கள் சொல்லும் இந்த விஷயம் ஒரு கட்டுக்கதை. ஏதோ நீங்கள் நாடகமொன்றிலே நடித்த காட்சியைப் புகைப்படமாக எடுத்து எங்களை ஏமாற்றுகிறீர்கள்” என்றார் மதகுரு. டாக்டர் அவர்களை வேறொரு விசாலமான மண்டபத்திற்கு அழைத்துச் செல்ல அங்கே ஏற்கனவே இருந்ததைப்போல் நூற்றுக்கணக்கான புகைப்படங்கள் இருந்தன. ஒவ்வொரு எலும்புக்கூட்டுடனும் டாக்டர் ரெட்டிராய் இருக்கும் புகைப்படங்கள். ஒவ்வொரு படத்திற்கும் கீழே அதேமாதிரியான வசனங்கள்.

“இத்தனை பேரும் உங்களைப் போல் புதையல் தேடி வந்தவர்கள்தான். நான் எவ்வளவோ எடுத்துச் சொல்லியும் எதையுமே அவர்கள் காதில் போட்டுக் கொள்ளவேயில்லை. ஐயோ பாவம்! கடைசியில் ஊருக்குத் திரும்பிச் செல்லாமல் இங்கேயே சமாதியாகி விட்டார்கள்” என்று டாக்டர் ரெட்டிராய் சூள்கொட்ட மூவரும் டாக்டரை ஏளனத்தோடு பார்த்தார்கள்.

“டாக்டர் நீங்கள் கவலைப்பட வேண்டாம். நாங்கள் அவர்களைப் போல் கோழைகள் அல்லர், பலசாலிகள். எதற்கும் தயாராக வந்திருக்கிறோம். நீங்கள் விவரங்ளைச் சொன்னால் போதும், கோடி தங்க நாணயங்களோடு நாங்கள் திரும்பிப் போவதை நீங்கள் பார்க்கத்தான் போகிறீர்கள்” என்றான் பிர்வா நப்லர்.

“நீங்கள் முடிவுடன் தான் வந்திருக்கிறீர்கள். புதையல் இருக்குமிடத்தைக் கண்டுபிடிப்பது ஒன்றும் கஷ்டமான விஷயமல்ல. ஆனால் ஒரு நிபந்தனை. ஒரு நேரத்தில் ஒருவர் மட்டுமே அங்கே போகலாம். யார் போகப் போகிறீர்கள்?” என்று கேட்டார் டாக்டர்.
“நான்.. நான்.. நான்..” என்று மூவரும் ஒரே நேரத்தில் கூவினார்கள்.

“டாக்டர் சொல்வதைப் பார்க்கும் போது போனவர்கள் எல்லோரும் உயிரற்ற ஜடமாக அல்லது குற்றுயிராகத்தான் திரும்பி வந்திருக்கிறார்கள். அதற்குக் காரணம் எனக்குத் தெரியும். அங்கு பிசாசுகளின் தொல்லை இருக்கிறது. பிசாசுகளை விரட்ட எனக்கு மட்டுமே தெரியும். ஆகவே நான் போவதுதான் நல்லது” என்றார் மதகுரு. வியாபாரி விருட்டென்று எழுந்தார். “மதகுருவே, நீங்கள் இப்படிப் பேசுவது நல்லதல்ல. இந்தப் புதையல் வேட்டைக்காக நான் எல்லாவற்றையும் இழந்து விட்டு வந்திருக்கிறேன். இங்கே வந்து உங்களுக்குப் பின்னால் நாயாய் பேயாய் அலைகிறேன். ஆகவே எனக்குத்தான் முன்னுரிமை வழங்க வேண்டும்” என்றார் வியாபாரி உரத்த தொனியில். பிர்வா நப்லா வாயைத் திறந்தான். “இருவரும் பேசி முடித்து விட்டீர்களா? என்னுடைய பெயர், பிறந்த திகதியுடன் கூட்டுத்தொகை எல்லாவற்றையும் சுத்தமாக மறந்துவிட்டீர்களா? எனக்குத்தான் அதிர்ஷ்ட இலக்கம் இருக்கிறது. நான் போனால்தான் புதையல் கைக்குக் கிடைக்கும். நான் போய் எடுத்துக்கொண்டு வருகிறேன். மூவரும் பிரித்துக் கொள்ளலாம்” என்றான் அவன். மூவரும் மாறிமாறி தங்களுக்குள் தர்க்கிக்க நிலைமை முற்றி கைகலப்பு ஏற்படுமளவுக்கு களேபரம் அங்கு உண்டாகிற்று.

நிலைமை விபரீதமடைந்து கொண்டு செல்வதை அவதானித்த டாக்டர் ரெட்டிராய் “நிறுத்துங்கள்” என்று சப்தமிட்டு “இது நோயாளிகள் வருமிடம். உங்கள் சண்டையை வேறெங்காவது வைத்துக் கொள்ளுங்கள். நான் வழி சொல்கிறேன். திருவுளச்சீட்டு போட்டுப் பார்ப்போம். யாருடைய பெயர் வருகிறதோ அவர் புதையலை எடுக்கச் செல்லட்டும்” என்று தீர்ப்பளித்தார். அது நல்ல முடிவாகத் தெரியவே அவர்களும் அதற்குச் சம்மதிக்க டாக்டர் மூன்று வெள்ளைக் கடதாசித் துண்டுகளிலே மூவரின் பெயரையும் தனித்தனயே எழுதி மடித்தபின் அங்கிருந்த சிறுமியைக் கூப்பிட்டு துண்டொன்றை எழுமாறாக எடுக்கச் சொன்னார். இந்த ஓரிரண்டு நிமிடங்களுக்கிடையில் பிர்வா நப்லா, மதகுரு, வியாபாரி ஆகிய மூவரும் வானத்தை அண்ணாந்து பார்த்து கடவுளை நூறு தடவையாவது கூப்பிட்டார்கள். பிர்வா நப்லாவின் பெயர் விழுந்திருக்கிறது என்று டாக்டர் அறிவித்ததும் பிர்வாவின் முகம் பிரகாசத்துடன் ஒளிர்ந்தது. சிறுபிள்ளையைப் போல் துள்ளிக் குதிக்க ஆரம்பித்தான் பிர்வா. மற்ற இருவரின் முகங்களைப் பார்க்க வேண்டுமே! இஞ்சி தின்ற குரங்குபோல் அவர்கள் இருந்தார்கள்.

டாக்டர் பிர்வாவை தனியறையொன்றுக்குள் அழைத்துச் சென்று வரைபடங்களை ஒப்படைத்து புதையலை எப்படி எடுக்கவேண்டும் என்ற விபரங்களை விலாவாரியாக எடுத்துச் சொன்னார். பிர்வா நப்லா புதுமாப்பிள்ளை தேனிலவுக்குச் செல்வதைப்போல் அங்கிருந்து புறப்பட்டுச் சென்றான். அன்றிரவு மதகுருவுக்கும், வியாபாரிக்கும் தூக்கம் வரவேயில்லை. பிர்வா தங்களுக்குத் தெரியாமல் புதையலையும் எடுத்துக் கொண்டு கம்பிநீட்டி விடுவானோ என்ற பயம்

காரணமாக இருவரும் விடியும்வரை கொட்டக் கொட்ட விழித்திருந்தார்கள். காலைக் கடன்களை முடித்துவிட்டு வெளியே வந்த மதகுருவும், வியாபாரியும் டாக்டரின் மருத்துவ நிலையத்தை நோக்கி வெண்ணிற ஆடை அணிந்த கிராம மக்கள் சாரிசாரியாக வந்து கொண்டிருக்கும் அதிசயத்தைக் கண்டார்கள். அவர்களின் முகங்களிலே அளவிட முடியாச் சோகம் அப்பிக் கிடந்தது. டாக்டர் சுறுசுறுப்பாக அங்குமிங்கும் ஓடியாடி இயங்கிக் கொண்டிருந்தார்.

“டாக்டர் உங்கள் உறவினர்கள் யாரும் இறந்து விட்டார்களா?” என்று கேட்டார் மதகுரு.

“மதகுரு அவர்களே, நான் சொல்வது உங்களுக்குப் புரியாது. எப்படிச் சொன்னாலும் புரியாது. புதையல் எடுக்கப் போனவர்கள் எவரும் உயிரோடு திரும்பியது கிடையாது. இப்போது உங்கள் நண்பர் குற்றுயிரும் குலையுயிருமாக திரும்பிவரும் நேரம். அவருடைய மரணச் சடங்கில் கலந்து கொள்ளத்தான் கிராமமக்கள் வந்து கொண்டிருக்கிறார்கள்” என்றார் டாக்டர் ரெட்டிராய் கோபத்துடன். அப்படிச் சொல்லிக் கொண்டிருக்கும் போதே தள்ளாடித் தள்ளாடி வந்து சேர்ந்தான் பிர்வா நப்லா. நாக்கு உலர்ந்து ஒட்டிப்போயிருந்தது, உதடுகள் வீங்கிப் புடைந்திருந்தன, அவனால் பேசமுடியவில்லை, மேனி திட்டுத்திட்டாக உரிந்து இரத்தம் கசிந்து கொண்டிருந்தது, சதைகள் பிய்ந்து தொங்கின, எலும்புகள் வெளியே தெரிந்தன.

கடதாசியொன்றையும் பேனையையும் கொண்டு வரும்படி சைகை காட்டிய பிர்வா மிகவும் சிரமப்பட்டு கடதாசியில் ஏதேதோ எழுதி டாக்டரிடம் நீட்டினான். டாக்டர் அதனை வாங்கி எல்லோரும் கேட்கக் கூடியதாக வாசித்தார்.

*‘அன்புள்ள டாக்டருக்கு, உங்கள் உபதேசத்தை அலட்சியம் செய்தமைக்கு என்னை மன்னியுங்கள். தயவுசெய்து என்னோடு சேர்ந்து புகைப்படமெடுத்து சுவரிலே தொங்கவிடுங்கள். என்னுடைய புதையல் பேராசையின் விபரீதம் எல்லோருக்கும் ஒரு பாடமாக அமையட்டும்’*

பிர்வா கேட்டுக் கொண்டபடி கதிரையிலே அவனை அமரவைத்து அருகில் நின்றுகொண்டார் டாக்டர் ரொட்டிராய். தயாராக இருந்த கெமராமேன் புகைப்படமொன்றை எடுத்ததும் பிர்வாவின் உயிர் பிரிந்தது.

பிர்வா நப்லாவின் மரணச்சடங்கில் ஊர்மக்கள் எல்லோரும் கலந்து கொண்டார்கள். டாக்டர் ரெட்டிராய் புகைப்படத்தைப் பிரேம் பண்ணி சுவரிலே தொங்கவிட்டார். எல்லாக் காரியங்களும் முடிந்து கிராமமக்கள் புறப்பட்டுச் சென்றபின் மதகுருவும், வியாபாரியும் டாக்டர்

ரெட்டிராயின் அருகே வந்தார்கள். மதகுரு சொன்னார், "டாக்டர் மீண்டும் சச்சரவில் ஈடுபட நாங்கள் விரும்பவில்லை. நாங்கள் உங்களைப் பரிபூரணமாக நம்புகிறோம். நீங்களே எங்கள் பெயரை எழுதுங்கள், நீங்களே திருவுளச்சீட்டைப் போடுங்கள், நீங்களே ஒரு பெயரைத் தெரிவு செய்யுங்கள். அது யாராயிருந்தாலும் பரவாயில்லை" டாக்டர் ரெட்டிராய் ஒன்றுமே பேசவில்லை. அவர் திருவுளச்சீட்டைப் போட்டு துண்டை எடுக்க மதகுருவின் பெயர் வந்தது. மதகுரு சகல ஆயத்தங்களோடும், வரைபடத்தோடும் புதையல் வேட்டைக்குப் புறப்பட்டார்.



# கசாப்புக் கடைக்காரனும் கணிதப் பேராசிரியரும், தத்துவஞானியும்

எம்.எம்.நௌஷாத்

கசாப்புக் கடைக்காரன், கணிதப் பேராசிரியர், தத்துவஞானி ஆகிய மூன்று பிரகிருதிகளும் ஒருமித்துத் தோன்றும் தோற்றப்பாடு பிரபஞ் சத்தில் எங்குமேயில்லையானா லும் இங்கே இருந்தது. மேலே குறிப்பிட்ட மூன்று நபர்களும் ஓரிடத்தில் குடியிருந்ததுதான் காரணம். நயம் மிளிரும் இவ் வீட்டைக் கட்டியவன் கற்பனைகளையெல்லாம் உள்ளத்திலே தேக்கி வைத்த ஒரு கலைஞன். மூன்று வீடுகளுக்கும் ஓரேயொரு பொதுமுற்ற மிருந்தது. முதலிரண்டு வீடுகளும் ஒன்று இடது நுரையீரல் வடிவத்திலும் மற்றது வலது நுரையீரல் வடிவத்திலும் அருகருகே இருந்தன. மூன்றாவது வீடு இருநுரையீரல்களையும் தொடுத்தபடி வாதனாளி வடிவத்தில் இருந்தது.

வீடுகளைக் கட்டிய கையோடு கலைஞன் நொடித்து விட்டான். செலவுக் கணக்கு அப்படி. எல்லாப் பத்திரிகைகளிலும் விளம்பரம் போட்டாலும் வீடுகள் நகரத்திலிருந்து மிகவும் தூரத்தில் அமைந்திருந்தபடியால் அந்த வீடுகளை யாருமே வாங்க முன்வரவில்லை.

வீடுகளை வாங்க யாரும் வரமாட்டார்களா என்று காத்துக் காத்து கண்கள் பூத்திருந்த வேளையிலே கம்பீரமான, ஆஜானுபாகுவான, அழகிய தோற்றமுடைய ஒரு நபர் வந்திறங்கினார். அவர் கணிதப்பேராசிரியர். மெத்தப் படித்தவரான அவரின் வருகையால் வீட்டுச் சொந்தக்காரன் களிப்புற்று அவரை அழகிய ஆசனத்திலே இருத்தி தேநீர் கொடுத்து உபசரித்து, அவரோடு குலாவி தன்னுடைய வீட்டின் மகிமையையும், வீடு கட்டிய வரலாற்றையும் விஸ்தாரமாகச் சொன்னான். எப்படித்தான் அழகாக வர்ணித்த போதிலும் அந்த வீட்டை வாங்க கணிதப் பேராசிரியருக்கு விருப்பமிருக்கவில்லை. வாழ்கைச்சுழி அவரை காவு கொண்டு விட்டதால் சடுதியாக அவருக்கு பணமுடைத்தது, வியாபாரங்கள் நஷ்டித்தன. நகர மத்தியிலிருந்த ஆடம்பர பங்களாவை விற்று விட்டு வீடு தேடிக்கொண்டிருந்தபோது தான் நுரையீரல் வீட்டு விளம்பரம் அவருடைய கண்களிலே பட்டது. அடுத்தநாட் காலை கணிதப் பேராசிரியர் வனப்பான பதுமையுடன் வந்திறங்கினார். அவள் அவருடைய மனைவி. அந்த வீட்டை வாங்க அவளுக்கும் இஷ்டமிருக்கவில்லை. இருவரும் வீட்டுக்கு முன்னால் நின்றபடி நீண்டநேரம் விவாதித்தார்கள், ஏதேதோ பேசினார்கள், காசோலைப் புத்தகத்தை அப்படியும் இப்படியும் புரட்டினார்கள், தங்களுடைய Smartபேசியில் பேசினார்கள், கடனட்டைகளை வெளியில் எடுப்பதும் வைப்பதுமாக இருந்தார்கள். வீட்டுச் சொந்தக்காரன் இத்தனை நிகழ்வுகளையும் கால்கடுக்க நின்றபடி இமைவெட்டாது பார்த்துக் கொண்டிருந்தான். எப்படியாவது வீட்டை விற்றுவிட வேண்டுமென்ற நப்பாசை அவனுக்கு. ஈற்றிலே கணிதப் பேராசிரியர் அவனருகே வந்து ‘இந்த வீட்டை வாங்குகிறோம். என்ன விலை சொல்கிறாய்?’ என்று கேட்டார். சந்தோஷ மிகுதியால் கலைஞனின்

வாயிலிருந்து பதிலே வரவில்லை. அவன் விலையைச் சொல்ல பணம் கைம்மாறியது. அன்று மாலை இரண்டு பெரிய லொறிகளில் வீட்டுச் சாமான்கள் வந்திறங்கின. வேலைப்பாட்டுடன் உருவாக்கப்பட்ட தளபாடங்கள், பெறுமதியான பாரசீகக் கம்பளங்கள், இறக்குமதி செய்யப்பட்ட சமையலறைப் பாத்திரங்கள், Digital மின்னுபகரணங்கள், பெல்ஜியம் திரைச்சீலைகள் என்று எல்லாமே உச்சப்பெறுமதியுடன் இருந்தன. பேராசிரியரும், மனைவியும் Mercedes Benz E Class காரிலே வந்திறங்க சுவர்க்கத்திலிருந்து வந்திறங்கினார்களோ இவர்கள் என்று வீட்டுக்காரனே பிரமித்துப் போனான்.

இரண்டாவது வீட்டை வாங்க வந்தவர் தத்துவஞானி. தாடிவைத்த ஒரு பரதேசி இரண்டாவது வீட்டைச் சுற்றிச் சுற்றி வலம் வருவதைப் பார்த்துக் கொண்டிருந்த கணிதப்பேராசிரியர் வீட்டுச் சொந்தக்காரனிடம் 'யார் இந்தப் பரதேசி?' என்று கேட்டார். வீட்டுக்காரன் பேராசிரியரிடம் கிசுகிசுத்த குரலில், 'ஐயா பேராசிரியரே, சத்தமாகச் சொல்லாதீர்கள், கோபிக்கப்போகிறான். அந்த ஆள் பரதேசி அல்லன், தத்துவஞானி. என்னுடைய இரண்டாவது வீட்டை அவன்தான் வாங்கப் போகிறான்' என்றான். "தத்துஞானியா? வீடுவாங்கும் பணம் அவனுக்கு எங்கிருந்து வந்தது? ஏதாவது போதைவஸ்து வியாபாரம் பண்ணுகிறானா?" என்று கேள்விகளை அடுக்கினார் பேராசிரியர். "எனக்கு அதைப் பற்றியெல்லாம் தெரியாது, ஐயா. ஆனால் மனிதர் மடியிலே நிறையப் பணக்கட்டுக்கள் வைத்திருப்பதை நான் பார்த்தேன்" என்றான் வீட்டுக்காரன். "நல்லதாகப் போயிற்று. அவன் பிச்சைக்காரனோ என்று நான் பயந்துவிட்டேன். ஆனால் தாடியை மழித்து, தலைக்கு எண்ணைய் போட்டு வாரி, அழகான ஆடைகளைப் புனைந்து மனிதனைப் போல் இருக்கச் சொல்லி அந்த ஆளிடம் போய்ச் சொல்லு. தோற்றத்தைப் பார்க்கவே அருவருப்பாக இருக்கிறது" என்றார் பேராசிரியர் முகத்தைச் சுளித்துக்கொண்டே.

வெள்ளிக்கிழமை கொடுக்கல் வாங்கல் முடிந்து அன்று மாலையே புதுவீட்டில் குடிபுகுந்தார் தத்துவஞானி. முச்சக்கரவண்டியில் வந்திறங்கிய தத்துவஞானியின் கழுத்திலே பழுப்பு நிறப்பை மாத்திரமே தொங்கியது. இரகசியமாக தத்துவஞானியின் வீட்டையே நோட்டமிட்டுக் கொண்டிருந்த கணிதப்பேராசிரியரும், மனைவியும் வீட்டுச்சாமான்கள் ஏற்றி வரும் லொறியை ஆவலோடு எதிர்பார்த்திருந்தார்கள். இரண்டுமூன்று மணித்தியாலயங்கள் கழிந்த பின்னரும் லொறி வரவேயில்லை. லொறி வருவதற்கான எந்தச் சமிக்ஞையும் இல்லை. இருவருடைய முகங்களிலும் ஏமாற்றம் விஞ்சியது. அடுத்த நாளும் கணிதப்பேராசிரியர் விரிவுரைக்கு லீவு போட்டுவிட்டு தத்துவஞானியின் லொறிக்காக காத்திருக்க மனைவியும் வீட்டில் முடங்கிக் கிடந்தாள். அன்றும் லொறி வரவில்லை. இப்படியே இரண்டுமூன்று நாட்களாகி,

ஒருவாரம் பொறுத்துப் பார்த்தும் ஊஹும், லொறி வருவதாகக் காணோம். கணிதப்பேராசிரியரும் மனைவியும் ஒரு முடிவுக்கு வந்தவர்களாக தத்துவஞானியின் புதிய வீட்டிற்கு திடீர் விஜயமொன்றை மேற்கொண்டார்கள்.

'நீங்கள் யார்?' என்று கேட்டார், தத்துவஞானி. பேராசிரியரும் மனைவியும் தங்களை அறிமுகப்படுத்திக் கொண்டதும், தத்துவஞானி புன்னகையுடன் அவர்களை வரவேற்றார். இருவரும் தத்துவஞானியின் வரவேற்பை பெரிதாக லட்சியம் செய்யாது சுற்றுமுற்றும் பார்க்க வீட்டின் உட்புறம் என்பதற்கான அறிகுறிகள் அங்கு இல்லை. அறைகளில் தளபாடங்களோ, அலங்காரப்பொருட்களோ, சுவர்ப்படங்களோ இருக்கவில்லை, மின்விசிறி கூட இல்லை, சுவர்க் கடிகாரம், அதுவும் இல்லை. வரவேற்பறையோ வெறிச்சோடிப் போய் இறந்து கிடந்தது, பிணம் தான் இல்லை. பேராசிரியரின் முகம் கறுத்துவிட்டது. அவர் மனைவியின் முகத்தைப் பார்த்தார். அவளுடைய முகமோ அவருடையதைக் காட்டிலும் இருமடங்கு இருண்டு போய் இருந்தது. தம்முடைய அண்டைவீட்டான் உண்மையிலேயே பிச்சைக்காரன் என்ற விஷயத்தை அவர்களால் ஜீரணிக்க முடியவில்லை.

மனதைத் தேற்றிக்கொண்டே அடுத்த அறைக்குள் நுழைய அந்த அறையும் வெறுமையாகவே இருந்தது. இப்படியே அடுத்தடுத்த அறைகள் எல்லாம் வெறும் கூடுகளாக இருந்தன. "திரும்பப் போவோமா?" என்று அவருடைய மனைவி காதிற்குள் கிசுகிசுத்தாள். "கொஞ்சம் பொறு, படுக்கையறையையும் பார்த்துவிட்டுச் செல்வோம்" என்று கணிதப் பேராசிரியர் பதிலுக்கு கிசுகிசுக்க படுக்கையறைக்குள் நுழைந்த அவர்களுக்கு பேராச்சரியம் காத்திருந்தது. நிலத்திலே கம்பளம் விரிக்கப்பட்டு அதன் மேலே பிரமாண்டமான புத்தகம் இருப்பதை அவர்கள் பார்த்தார்கள். பிரமாண்டமென்றால் அது உண்மையில் பிரமாண்டம்தான். அதன் அகலம் மூன்று அடியாகவும் நீளம் ஐந்தடி அளவிலும் இருந்தது. புத்தகத்தின் தடிப்பு எப்படியும் ஓரடிஈரடி இருக்கும்.

கணிதப் பேராசிரியர் தன் வாழ்நாளிலே போகாத நாடுகள் என்று எதுவுமேயில்லை. பிரசித்தமான பல்கலைக்கழகங்களுக்கு போயிருக்கிறார், நூலகங்களுக்கும், நூதனசாலைகளுக்கும் விஜயம் செய்தும் இப்படியொரு மகாஜானுவ புத்தகத்தை அவர் கண்டிருக்கவில்லை. "தத்துவஞானியே, இது என்ன புத்தகம்?" என்று கேட்டார் பேராசிரியர். "எண்ணிலடங்கா தத்துவங்கள் நிறைந்த வாழ்க்கைப் புத்தகம் இது. எல்லாம் வாழ்க்கையை அனுபவித்து நான் கண்டுபிடித்தவை. இருபத்திநான்கு மணிநேரமும் நான் தத்துவங்களை

எழுதிக் கொண்டிருப்பேன்” என்றார் தத்துவஞானி. “தத்துவங்களை எழுதியெழுதி புத்தகத்தை அடைத்து வைத்திருக்கிறீர்களே, தத்துவங்கள் வயிற்றுப் பசிக்கு தீனியாகுமா?” என்று கேட்டார் பேராசிரியர். “நீங்கள் கேட்ட கேள்விக்கும் தத்துவம் இருக்கிறது. 33ம் பக்கத்தில் மூன்றாம் பந்தியை வாசித்துப் பாருங்கள். ‘*தத்துவங்கள் ஆகாரத்தையே, ஆடையையோ கொண்டு வரமாட்டாது. ஆனால் தத்துவங்கள் உள்ளத்தை சுத்தப்படுத்தி வாழ்க்கைக்கு தீனியாக அமையும்*’ என்றார் தத்துவஞானி. கணிதப் பேராசிரியர் சிரமத்தோடு புத்தகத்தைப் புரட்டி மேலோட்டமாக வாசித்துப் பார்த்தார். தத்துவஞானி சொன்னதைப் போலவே ஆயிரக்கணக்கான வாழ்க்கைத் தத்துவங்களால் நிரம்பி வழிந்தது புத்தகம்.

அடுத்ததாக பேராசிரியரும் மனைவியும் சமையலறைக்குள் நுழைந்தார்கள்.

“இது தானா உங்கள் சமையலறை?” என்று ஆச்சரியத்துடன் கேட்டாள் பேராசிரியரின் மனைவி. சமையலறை என்ற பெயரில் அங்கே இருந்த பொருட்களெல்லாம் ஒரு பானை, ஓர் அடுப்பு, ஒரு குடம், ஒரு பீங்கான், ஒரு தேயிலைவடி, ஒரு தீப்பெட்டி, கொஞ்சம் விறகுகள் இவ்வளவே. “இதுதான் என் சமையலறை” என்று பதிலளித்தார் தத்துவஞானி.

“நீங்கள் சாப்பிடுவதே இல்லையா?”

“ஏன் அப்படிக் கேட்கிறீர்கள்?”

“இவ்வளவு பெரிய வீட்டில் இப்படியொரு சமையலறையா? ஒரு பிச்சைக்காரனின் சமையலறை இதனைவிட எவ்வளவோ நன்றாக இருக்கும்”

“நீங்கள் ஒருவேளை எவ்வளவு சாப்பிடுவீர்கள்?”

“பசி தீர்ந்து வயிறு நிரம்பும் வரை சாப்பிடுவோம்”

“நானும் வயிறு நிரம்பும் வரை சாப்பிடுகிறேன்”

“அதற்காக இப்படியா சமையலறையை வைத்திருப்பது? நிறையச் சமையல் உபகரணங்களை வாங்கி சமையலறையை அழகாக வைத்திருந்தால் என்ன?”

“நீங்கள் சமையல் பாத்திரங்களையும், உபகரணங்களையும் சாப்பிடுவீர்களா?”

“இல்லை”

“நானும் சாப்பிடுவதில்லை. ஆகவே அதற்காக நான் வீணாகப் பணத்தைச் செலவு செய்ய வேண்டும்?”

“தூக்கி எறியுங்கள் உங்கள் தத்துவங்களை. தத்துவங்களால் சம்பாதிக்க முடியாது” என்றார் பேராசிரியர். “உண்மை. தத்துவங்கள் பேசுவதால் சம்பாதிக்க முடியாததுதான். ஆனால் தத்துவங்களின் படி நடப்பதால் சம்பாதிக்க முடியும்” என்று பதிலிறுத்தார் தத்துவஞானி.

பேராசிரியருக்கு அன்றிரவு தூக்கமே வரவில்லை. அவருடைய மனைவிக்கும் தான். பேராசிரியரின் மனம் குழப்பத்தில் ஆழ்ந்து கிடந்தது. அவருடைய வீட்டிற்கு அடிக்கடி விருந்தினர்கள் வருவார்கள்.

அத்தனை பேரும் கௌரவமான விருந்தாளிகள், உயர் குடும்பங்களில் பிறந்தவர்கள், அவர்கள் நன்றாகப் படித்தவர்களாகவும், பணக்காரர்களாகவும் இருந்தார்கள். அவர்களிடம் இந்த தத்துவஞானியை எவ்வாறு அறிமுகஞ் செய்வது? ஒன்றுக்குமே வழியில்லாதவன் வாழும் பிச்சைக்காரத் தத்துவஞானி அண்டைவீட்டான் என்று சொன்னால் எவ்வளவு கேவலம்! அடுத்த நாட்காலை எழுந்த அதே வேகத்தில் கணிதப்பேராசிரியர் தத்துவஞானியை தன்னுடைய வீட்டுக்கு பலாத்காரமாக இழுத்துக்கொண்டு போனார். வீடு என்றால் எப்படியிருக்க வேண்டுமென்று இந்தப் பரதேசிக்கு காட்டினால் அவனுக்குக் கொஞ்சமேனும் ரோஷம் உண்டாக மாட்டாதா என்ற நப்பாசைதான் இந்த அதிரடி நடவடிக்கைக்குக் காரணம். வரவேற்பறையில் தொங்கிய பெறுமதியான திரைச்சீலைகள், விலையுயர்ந்த மெத்தென்ற ஆசனங்கள், தங்கமுலாம் பூசிய சுவர்க்கடிகாரம், பிரசித்திபெற்ற ஓவியர்கள் வரைந்த சுவரோவியங்கள், ரிமோட்டில் இயங்கும் ஏஸி, பிளாஸ்மா தொலைக்காட்சி, Home Theatre System, வெந்நீர்க்குளியல், இத்தியாதி, இத்தியாதி. பேராசிரியரின் மனைவி வாய்விடாமல் அலங்காரங்களை வர்ணித்துக் கொண்டே போக தத்துவஞானி இலேசாக முறுவலித்தார். அவள் களைத்துப்போய் பேச்சை நிறுத்தும் போதெல்லாம் இலேசாக முறுவலித்தார் தத்துவஞானி.

இறுதியிலே தத்துவஞானியை தங்களுடைய படுக்கையறையிலே கொண்டு வந்து நிறுத்தினார்கள் பேராசிரியர் தம்பதிகள். அந்த வீட்டிற்கு அதுவே இதயம் என்பதைப்போல் அதன் அலங்காரச் சிறப்பு அனைத்துக்கும் முத்தாய்ப்பு வைப்பதைப்போல் மிக நேர்த்தியாகவும், நுணுக்கமாகவும் இலட்சக் கணக்கில் செலவழித்தும் வடிவமைக்கப்பட்டிருந்தது. பேராசிரியர் அங்கிருந்த பிரமாண்டமான கட்டிலை தத்துவஞானியிடம் சுட்டிக்காட்டி “அழகான இந்த கட்டிலைப் பார்த்தீர்களா? இதனைத்தான் King Size Bed என்று சொல்வது. இந்தியாவிலிருந்து நான் வாங்கி வந்தேன். இந்தியாவை ஆண்ட சக்கரவர்த்திகள் இதனைத் தங்கள் அந்தப்புரங்களில் வைத்திருந்தார்கள் என்று நான் சொன்னால் நீங்கள் நம்பமாட்டீர்கள். ஆனால் அதுதான் உண்மை. இந்தக்கட்டிலில் காணப்படும் இழைகள் எல்லாம் தங்கத்தால் செய்யப்பட்டவை” என்றார் பேராசிரியர். தத்துவஞானி முறுவலித்தார்.

“ஆசையாக இருந்தால் இந்தக் கட்டிலிலே கொஞ்சநேரம் நித்திரை கொண்டு பாருங்கள். வானத்தில் பறப்பது போல் இருக்கும்” என்று சொன்ன பேராசிரியர் மனைவியின் முகத்தைப் பார்த்தார். நெருங்கிய உறவினர்களுக்குக் கூட இதுவரை படுக்கையறையைக் காட்டாதவர் பேராசிரியரின் மனைவி. ஆனால் தத்துவஞானியின் விடயத்தில் மனமிளகியவளாக சரியென்பதைப்போல் தலையசைத்தாள்.

தத்துவஞானி இலேசாக முறுவலித்தார். கணிதப்பேராசிரியருக்கு எரிச்சல் வந்துவிட்டது.
“தத்துவஞானி அவர்களே, எவ்வளவோ சொல்லிவிட்டோம், நீங்கள் எதையுமே பேசமாட்டேன் என்கிறீர்கள். சிம்பிளாக ஒரு புன்னகையோடு முடித்துக் கொள்கிறீர்கள். இதன் அர்த்தம் என்ன?”
“அதற்கும் ஒரு தத்துவம் இருக்கிறது”
“கட்டிலுக்கும் தத்துவமா?”
“சொல்லுகிறேன் கேளுங்கள். என்ன தத்துவமென்றால் கட்டிலின் பெறுமதியைத் தீர்மானிப்பது அது எந்தப் பொருளைக் கொண்டு செய்யப்பட்டது என்பதால் அல்ல அல்லது தங்கத்தால் இழைக்கப்பட்டதா, வைடூரியத்தால் இழைக்கப்பட்டதா என்பதைக் கொண்டல்ல”
“என்னதான் சொல்ல வருகிறீர்கள்?” என்று பொறுமையிழந்து கேட்டாள் பேராசிரியரின் மனைவி. “பொறுமையோடு கேள் மகளே, கட்டிலின் பெறுமதியை நிர்ணயிக்க வேண்டுமானால் அதிலே தூங்குபவர் யார் என்று பார்க்கவேண்டும். நீ விரும்பாதவன் அந்தக் கட்டிலின் மீது படுத்துறங்குகிறான் என்று வைத்துக்கொள். நீ அவனை அற்பப் புழுவைப் பார்ப்பது போல் பார்ப்பாய். அப்போது கட்டிலின் பெறுமதி பூச்சியத்துக்கு வந்து விடுகிறது. நீ மிகவும் நேசிக்கின்ற ஒருவன் அந்தக் கட்டிலின் மீது உறங்குகிறான் என்று வைத்துக்கொள். அந்தக் கட்டிலின் பெறுமதி நீங்கள் வாங்கிய விலையைக் காட்டிலும் பன்டமங்கு உயர்ந்துவிடுகிறது” என்றார் தத்துவஞானி. இருவரும் வாயடைத்துப்போய் நின்றார்கள்.

“இந்தஆள் வடிகட்டின உலோபி. தன்னுடைய கருமித்தனத்தை மறைக்கத்தான் தத்துவம் பேசுகிறார். இவர் எதுவுமே வாங்கமாட்டார், கதிரை, மேசை வாங்கமாட்டார், ஜன்னல்சீலை வாங்கமாட்டார், கட்டில் வாங்கமாட்டார், கால் தட்டியோ, கம்பளமோ வாங்கமாட்டார், வீட்டுக்கு வர்ணம் அடிக்கமாட்டார், எங்கள் தலைவிதி” என்று அலுத்துக் கொண்டாள் பேராசிரியரின் மனைவி.

“இவரை நாம் எப்படியாவது கோடீஸ்வரராக்க வேண்டும்” என்றார் பேராசிரியர்.
“இவர் எப்படி கோடீஸ்வரராக மாறப்போகிறார், வெறும் பகல்கனவுதான்” என்றாள் மனைவி.
“அவரைக் கோடீஸ்வரராக்க நான் சொல்வதைக் கேள்”
“சொல்லுங்கள்”
“தத்துவஞானி பரம ஏழையைப் போல் காட்சியளித்தாலும் அவர் பெரிய கோடீஸ்வரர். எப்படிப்பட்ட கோடீஸ்வரர் என்றால் விமானமொன்றை வாங்கக்கூடிய அளவுக்கு அவரிடம் செல்வம் குவிந்து கிடந்தது. பணம் கோடிகோடியாக கொட்டிக் கிடந்தும் என்ன? அவருடைய உள்ளத்திலே எந்த நேரமும் புயல் அடித்துக் கொண்டேயிருந்தது. அவர் ஏழைப் பெண்ணை விரும்பியதே இப்புயலுக்குக் காரணம். ஏழையென்றால்

பரமஏழை, விறகுவெட்டி மகள். தத்துவஞானியின் தந்தை பச்சைக்கொடி காட்டினாலும் தாயோ மூர்க்கத்தனமாக எதிர்த்தாள், வெறுத்தாள். வாழ்க்கைக்கு மனசு தேவை என்று தத்துவஞானி சொல்ல தாயோ மிதிவண்டியில் ஏறி களைக்கக் களைக்க மனதைத் தேடவேண்டிய அவசியமில்லை. ஆடம்பரமான இன்ரர்கூலர் ஒன்றில் போனால் வளையாத மனதையும் வளைத்து விடலாம் என்றாள். அவள் சொன்னதோடு நிற்காமல் அந்த உறவை வேரோடு வெட்டியெறிந்தாள். தத்துவஞானியோ அன்றிலிருந்து திருமணத்தையே வெறுக்கத் தொடங்கினார். அத்துயர நிகழ்வு அவரின் உள்ளத்திலே ஆழமான காயத்தை உண்டாக்கியது. இருபது வருடங்கள் கடந்து போனபின் ஒருநாள் தத்துவஞானியைத் தேடி ஓர் இருபது வயது இளைஞன் வந்தான். அவன் வேறுயாருமில்லை. விறகுவெட்டியின் மகளுக்கும் தத்துவஞானிக்கும் பிறந்த முறை தவறிய குழந்தை இப்போது வாலிபனாகி வந்திருந்தான். தாய்க் கிழவிக்கு பாடம் கற்பிக்க நினைத்த தத்துவஞானி சகல சொத்துக்களையும் வாலிபனின் பெயரில் எழுதி வைத்துவிட்டு இறுதிக் காலத்தை நிம்மதியாகக் கழிப்பதற்காக இங்கே வந்து சேர்ந்து விட்டார்" என்று கதையை முடித்தார் கணிதப் பேராசிரியர்.

"தத்துவஞானியைப் பற்றி இவ்வளவு விஸ்தாரமாகத் தெரிந்து வைத்திருக்கின்ற நீங்கள் எல்லாவற்றையும் என்னிடம் மறைத்து விட்டீர்களே. அவர் கோடீஸ்வரர் என்ற விஷயத்தை என்னிடம் சொல்லவேயில்லையே" என்று மனைவி அவரைக் கடிந்து கொள்ள கணிதப் பேராசிரியர் சிரித்துக்கொண்டே "எல்லாவற்றையும் உண்மையென்று நம்பி விட்டாயா? தத்துவஞானியை கோடீஸ்வரர் ஆக்குவதற்காக இது நான் உண்டாக்கிய கதை" என்றார். தங்கள் அந்தஸ்தைக் காப்பாற்றிக் கொள்வதற்காக அண்டைவீட்டான் தத்துவஞானியைப் பற்றி புளுகு மூட்டையை இட்டுக்கட்டி இப்படிப் பேராசிரியர் கொடுத்த பணக்கார அந்தஸ்து காரணமாக தத்துவஞானி அந்த வட்டாரத்திலேயே பிரசித்தமாகி "பணக்கார அறிவுஞானி" என்ற பட்டப்பெயரும் அவரோடு ஒட்டிக் கொண்டது.

இந்தக் கதைகளையெல்லாம் தூக்கிச் சாப்பிடக்கூடிய விதத்தில் மூன்றாவது வாதனாளி வீட்டை வாங்கிக்கொண்டு வந்து சேர்ந்தான் ஒரு கிராதகன், கசாப்பு கடைக்காரன். இந்தச் செய்தி வந்ததுமே கணிதப் பேராசிரியரும், மனைவியும் அதிர்ச்சியில் உறைந்து போனார்கள். பேராசிரியர் வீட்டுச் சொந்தக்காரனிடம் தன்னுடைய கடுமையான ஆட்சேபனையை வெளியிட்டார். "நாங்கள் கௌரவமான ஆட்கள். நான் பல்கலைக்கழகத்திலே பேராசிரியராக இருக்கிறேன். என் மனைவி ஆங்கில இலக்கியத்திலே பாண்டித்தியம் பெற்றவள். இப்படியிருக்கும் போது எங்களுக்கு அபகீர்த்தி ஏற்படுத்தும் விதத்தில் அழுக்குப் பிடித்த கசாப்புக் கடைக்காரனுக்கு அடுத்த வீட்டை

விற்றுள்ளாய். உனக்கு என்ன நெஞ்சழுத்தம்?” என்று பேராசிரியர் சண்டை பிடிக்க “ஐயா, கோபிக்க வேண்டாம். வீடு கட்டிய வகையில் எனக்கு நிறையக் கடன்கள். உங்களிடம் எத்தனையோ தடவை வாங்கும்படி சொல்லியும் நீங்கள் தற்போது பணவசதி இல்லையென்று மறுத்து விட்டீர்கள். எத்தனையோ பேர் வந்து போனாலும் யாரும் வாங்க முன்வரவில்லை. கசாப்புக் கடைக்காரனுக்கு விற்பதைத் தவிர எனக்கு வேறுவழி இருக்கவில்லை” என்று அழாக்குறையாகப் பதிலளித்தான் வீட்டுக்காரன்.

பெரிய லொறியொன்றை வீட்டு முற்றத்திலே நிறுத்தி, கன்னங்கறுப்பு, தடித்த மீசை, விகாரமான உதடுகள், கோபக்கனலைக் கக்கும் உருளைக் கண்களோடு தடாலென்று கீழே குதித்தான் கசாப்புக் கடைக்காரன். காலிலே காலணி இல்லை, ஆனால் நிலம் அதிர்ந்தது. கசாப்பு மேல்மூச்சு, கீழ்மூச்சு வாங்க ஒவ்வொரு பண்டமாக லொறியிலிருந்து இறக்கி தானே அதனை வீட்டிற்குள் கொண்டு போனான். எல்லாம் இறக்கி முடிந்தபின் இன்னொரு பண்டமும் தள்ளாடித் தள்ளாடி தானாக இறங்கி வந்தது, அது கசாப்புக் கடைக்காரனின் மனைவி. என்னே ஜோடிப் பொருத்தம்.! அவளும் தோற்றத்தில் அச்சொட்டாக அவனைப் போலவேயிருந்தாள். கரி முண்டம், யானை, நாகரீகம் தெரியாத அழுக்கு மூட்டை என்று ஒளித்துப் பார்த்துக் கொண்டிருந்த பேராசிரியரின் மனைவி தனக்குள் கறுவினாள்.

கணிதப்பேராசிரியர் எதிர்பார்த்ததைப் போலவே கசாப்பு வந்த வேகத்திலேயே கடிவாளமில்லாக் குதிரையைப் போல தறிகெட்டு ஓடினான். அதிகாலையிலிருந்து கசாப்புக் கடைக்காரனின் காட்டுத் தர்பார் ஆரம்பித்தது. எல்லா அதிகாலைகளிலும் முற்றத்திலே ஒரு காளை நின்றது, அல்லது ஓர் ஆட்டுக்கிடா நின்றது, அல்லது மானோ ஒட்டகமோ நின்றது. எல்லா விலங்குகளின் பக்கவாட்டிலும் ‘அகொபி’ என்ற லேபல் தொங்கியது. ‘அகொபி’ என்றால் *அறுக்கக் கொண்டு வரப்பட்ட பிராணி.* அகொபி சாப்பிடும், சப்தமிடும், திமிறும், அழும், மலங்கழிக்கும். எல்லாக் கைங்கரியங்களும் முற்றத்தில் நிகழ பேராசிரியர் தான் நரகத்தில் வாழ்வதாக எண்ணிக் கொண்டார். மனைவியோ பிடிசாபமிட்டாள். ’நரகப்படுகுழியிலே என்னைத் தள்ளிவிட்ட மாபாவியே, நீ அழிவதாக! உன்சிரசு அழுகக் கடவதாக! உன்விழிகள் குருடாகி விடுவதாக! என்ற சாபம். தத்துவஞானியின் நிலைமையோ அந்தோ பரிதாபம்! அவருடைய எல்லாத் தத்துவங்களும் தீர்ந்து போய் வசந்த காலங்களிலும் எருமைகள் முக்காரமிட்டன, யானைகள் பிளிறின, ஆடுகள் மேமே என்றன. கசாப்புக் கடைக்காரன் புதுமையான பேர்வழி, சும்மா இருக்கமாட்டான்.

அகொபியை நீராட்டிக் கழுவுவான், சோப்புப் போடுவான், கொம்புகளைத் தேய்த்து பளபளவாக்குவான், அகொபியின் உடம்பு முழுவதும் வாசனைத் திரவியங்களைத் தடவுவான். அவனைப் பற்றி அறியாதவர்கள் அகொபிக்கு திருமண ஏற்பாடுகள் நடப்பதாக எண்ணிக் கொள்ளுவார்கள். அகொபியும் அப்படித்தான் எண்ணிக்கொள்ளும். புளகாங்கிதத்தால் கழுத்துக்கயிறு செல்லக்கூடிய இடமெல்லாம் ஓடியோடி துள்ளிக் குதித்து விளையாடும். ஆனால் மாலையாகும் போது அந்த இடத்தில் அகொபி இருக்கமாட்டாது. ஒரு கயிற்றுத் துண்டுதான் இருக்கும். அகொபி கசாப்புக் கடைக்கு போயிருக்கும். இது காலையில் அரங்கேறும்விழா.

மாலையானதும் கசாப்பு களைத்து வீடு திரும்ப அதே கணத்தில் அவனுடைய மனைவி போர்க்களத்தில் இறங்குவாள். கசாப்புவும் பதிலுக்குச் சப்தமிடுவான். மனைவி குரலை உச்சஸ்தாயிக்கு கொண்டு செல்ல கசாப்புக் கடைக்காரனின் வீடும் கசாப்புக் கடையாக மாறும். பீங்கான் பறக்கும், கரண்டிகள் பறக்கும், விழுந்து உடையும். உடையும் ஒலிகள் தொடர்ந்து கேட்டுக் கொண்டேயிருக்கும். அதற்கு மாறு பேராசிரியர் தம்பதிகள். கசாப்புக் குடும்பத்தின் தெருக் கூத்துக்களைப் பார்த்த பிறகு சுற்றயலில் உள்ளோர் பேராசிரியர் தம்பதிகளை இன்னம் இன்னம் மரியாதையாகப் பார்க்க ஆரம்பித்தார்கள் என்றால் அவ்வளவு அந்நியோன்னியமாக அவரும் அவருடைய மனைவியும் வாழ்ந்தது தான் காரணம். பேராசிரியர் மனைவியைப் பார்த்து சப்தமாக ஒரு வார்த்தை பேசியதோ மனைவி கணவனை நோக்கி விரலை நீட்டியதோ கிடையாது. எல்லோரும் மூக்கின்மீது விரலை வைத்து பொறாமைப் படுமளவுக்கு அவர்களுடைய வாழ்க்கையிருந்தது. காலையில் இருவரும் ஒரே நேரத்தில புறப்பட்டு ஓரே காரிலேயே சென்று ஒரே காரிலேயே திரும்பி வருவார்கள். இருவருடைய முகங்களிலும் இலேசான முறுவல் எப்போதும் திகழ்ந்து கொண்டிருக்கும்.

எதிரும் புதிருமாக இருந்த தத்துவஞானியும், கணிதப் பேராசிரியரும் கசாப்பு குடியிருக்க வந்த நாளிலிருந்து நண்பர்களானார்கள். எப்படியாவது கசாப்புவை அங்கிருந்து விரட்டிவிட வேண்டும் என்ற இலட்சியத்தோடு எத்தனையோ வியூகங்கள் அமைத்து அவர்கள் திட்டங்கள் தீட்டினாலும் எல்லா வியூகங்களும் தவிடுபொடியாகி கசாப்புவின் காட்டுத் தர்பார் தொடர்ந்தும் நடந்து கொண்டு தானிருந்தது. தன்னுடைய பிழைத்துப்போன கணக்குகள் குறித்தும் பொய்த்துப்போன தேற்றங்கள் குறித்தும் பேராசிரியர் சஞ்சலத்தில் ஆழ்ந்து போயிருந்தார். கசாப்போ கணித அறிவே இல்லாதவன். வாழ்க்கை என்பதோ கணிதம் பின்னிப் பிணைந்த தரவுத்திரட்டு. கணிதச்

சூத்திரங்களுக்கு விடையளிக்கத் தெரியாத இவன் எப்படி வாழ்க்கைச் சூத்திரங்களுக்கு விடை காண்கிறான்? X-Y என்றால் என்னென்றறியாதவன் எப்படி பணக் கற்றைகளுடன் உல்லாசமாக உலவித்திரிகிறான்? என்று விடை காணமுடியாத, பாடசாலை மாணவன்போல் மண்டையைக் குழப்பிக் கொண்டார் பேராசிரியர்.

மறுபுறம் தத்துவஞானியும் துக்கசாகரத்தில் அமிழ்ந்தார். "என் தத்துவங்கள் வரண்டு போய் அழுந்திச் சாகிறேனே, கடவுளே எதற்காக இந்தக் கசாப்புக் காட்டுமிராண்டியை இங்கே கொண்டுவந்து சேர்த்தாய்?" என்று புலம்பித் தவித்தார் தத்துவஞானி.
'இரத்தத்தை ஒட்டுகிறவனே, நீ இரத்தம் ஒட்டப்பட்டு மரணம் அடைவாய்'
'கடற்பயணம் செய்கிறவன் நச்சுமீன்களைச் சாப்பிட்டு கடலிலே மடியக்கடவான்'
'மலை ஏறுகிறவன் மலையுச்சியிலே பிராணவாயு குறைந்து மூச்சுத்திணறி இறக்கக் கடவான்' 'விலங்குகளின் உயிரை ஓட்டி மாமிசத்தைப் புசிக்கிறவனே, கிருமிகள் உடலிலே பரவிப் புழுத்து புண்ணாகிப் போகக் கடவாய்' என்று புத்தகத்திலுள்ள தத்துவங்கள் எதுவும் கசாப்பை பீடிக்காமல் இவனோ புஷ்டியாக தாம்தாம் என்று திரிகிறானே! எங்கே பிழைத்தன என் தத்துவங்கள்?

கணிதப்பேராசிரியர் மெகரோனி சாப்பிட்டார், அதன்பிறகு பழக்கலவையுடன் கூடிய ஐஸ்கிறீம் அருந்தினார், அது அவருக்கு விருப்பமான ஆகாரம். தத்துவஞானி பட்டாணிக் கடலையை அவித்து, தேங்காய்ப்பூவும் சீனியும் கலந்து உருட்டிச் சாப்பிட்டார், அது அவருக்கு விருப்பமான ஆகாரம். அவர்கள் இருவரும் தீர்க்கமான முடிவை எடுத்து அந்த நினைப்போடு கசாப்பனின் வீட்டிற்குள் நுழைந்தார்கள். கசாப்புவை கழுத்திலே பிடித்து தரதரவென்று இழுத்துக்கொண்டு போய் வெளியே விரட்டிவிட வேண்டுமென்ற முடிவுதான் அது.

பெரிய மனிதர்கள் இருவர் தன் வீட்டிற்குள் நுழைந்ததும் கசாப்புவின் முகத்தில் பூத்த மகிழ்ச்சிப் பூரிப்பைப் பார்க்க வேண்டுமே! கறுத்த உதடுகளை விரித்து "வாருங்கள், வாருங்கள்" என்று வரவேற்றான் கசாப்பு. ஆனால் அவர்கள் சிரிக்கவோ புன்னகைக்கவோ இல்லை, மாறாக முகத்தை உர்ரென்று வைத்திருக்க படாதபாடு பட்டார்கள். மெகரோனியும், ஐஸ்கிறீமும், பழக்கலவையும் கொண்டுவந்து "சாப்பிடுங்கள், சாப்பிடுங்கள்'' என்று கணிதப் பேராசிரியரிடம் கெஞ்சினான் கசாப்பு. "இந்தச் சாப்பாடு எனக்கு ஆகவே ஆகாது, உப்புசம் உண்டாகும், வயிறு ஊதும், கண்கள் எரியும், வாந்திவரும். நான் சாப்பிடுவதே இல்லை" என்று மறுத்தார் கணிதப் பேராசிரியர். கசாப்பு அவித்த பட்டாணிக் கடலையை தேங்காய்ப்பூ சீனி

இவைகளைக் கலந்து உருண்டையாக்கி தத்துவஞானியிடம் நீட்டினான். வெடுக்கென்று கையை எடுத்தவாறே "என்னப்பா இது, குதிரைக்கு வைக்கும் கொள்ளா?" என்று தத்துவஞானி கேட்டதும் கசாப்புவின் முகம் வாடிப்போயிற்று.

"எங்கே உன் மனைவி?"
"அவள் சந்தைக்கு போயிருக்கிறாள்"
"உன் மனவையின் காட்டுக் கத்தல் எங்களுக்குப் பிடிக்கவில்லை. அவள் காட்டுக் கரடி, மதம்பிடித்த யானை. உன்னுடைய காட்டுக் கத்தலும் எங்களுக்குப் பிடிக்கவில்லை நீ காண்டா மிருகம்" என்றார் தத்துவஞானி. "நாங்கள் கௌரவமான ஆட்கள். கடைசியாக எச்சரிக்கிறோம். நீங்கள் இங்கேயிருந்து ஓடிப்போய் விடுங்கள்" என்று கர்ஜித்தார் பேராசிரியர். கசாப்பு அப்படியே ஒடுங்கிப்போனான்.

எங்கேயோ, எப்படியோ, என்னவாறோ அதிசயம் நிகழ்ந்ததைப் போல் அடுத்த நாளிலிருந்து கசாப்புவின் முற்றம் அமைதியாகிற்று. அகொபி முற்றத்திற்கு வரவில்லை, கசாப்பு கடைக்குப் போகவில்லை, மனைவியின் காட்டுக்கத்தல் இல்லை. இரண்டு மூன்று நாட்கள் இதே மயான அமைதி. தத்துவஞானிக்கு நம்பவே முடியவில்லை. ஆர்வமேலீட்டால் கசாப்புவின் கதவைத் தட்டினார் தத்துவஞானி. கதவைத் திறந்தவள் கசாப்புவின் மனைவி. அதாவது காட்டுக்கரடி, மதம்பிடித்த யானை. தத்துவஞானிக்கு அவளுடைய முகத்தைப் பார்க்கவே வெட்கமாக இருந்தது. 'வாருங்கள்' என்று முகம் மலர அவரை வரவேற்றாள் கசாப்புவின் மனைவி. தத்துவஞானி சுற்றுமுற்றம் பார்க்க "எங்கே கசாப்புக் கடைக்காரனையா தேடுகிறீர்கள்?" "ஆமாம்" அவள் தத்துவஞானியை அறையொன்றிற்குள் அழைத்துப் போனாள்.

கசாப்பு கட்டிலில் முனகிக் கொண்டிருந்தான். தத்துவஞானி அருகிலேபோய் அவனுடைய நெற்றியைத் தொட்டுப் பார்க்க அது அனலாகக் கொதித்தது. அவனால் வாய்திறந்து பேச முடியவில்லையாதலால் மனைவி அவனுக்கு கஞ்சியைப் பருக்கி ஈரத்துணியால் முகத்தை ஒத்தடமிட்டாள், கால்களை நீரால் துடைத்தாள், மாத்திரைகளை ஒவ்வொன்றாக அவனுடைய தொண்டைக்குள் போட்டு நீரைக் கொஞ்சமாக ஊற்றினாள். தத்துவஞானி தெருவிலே வேடிக்கை பார்க்கும் சிறுவனைப் போல் எல்லாவற்றையும் பார்த்துக் கொண்டிருந்தார்.

"என்ன நடந்தது?" என்று தத்துவஞானி கேட்க அவள் தத்துவஞானியை ஒதுக்குப்புறமாக அழைத்துக் கொண்டு போனாள்.
"நீங்கள் படித்தவர்தானே"
"ஆமாம்"

“என்னை காட்டுக்கரடி என்றும், மதம்பிடித்த யானை என்றும் சொன்னது நீங்கள்தானே” தத்துவஞானிக்கு சுருக்கென்று தைக்க பதிலளிக்க முடியாமல் வாய்குழறினார்.

“படித்தவரான நீங்களும் மெத்தப்படித்தவரான பேராசிரியரும் அப்படிப் பேசியிருக்கக் கூடாது. என் கணவரைப்பற்றி உங்களுக்கு எதுவுமே தெரியாது. அவர் என்னைக் காதலித்து கல்யாணம் செய்துகொண்டார். என்மீது கொள்ளைப் பிரியம் அவருக்கு, நீங்கள் என்னை வசைபாடியதால் மனமொடிந்துபோய் காய்ச்சலில் விழுந்து விட்டார்” என்று விசும்ப ஆரம்பித்தாள் கசாப்புவின் மனைவி.

தத்துஞானி இப்போது தத்துவங்களின் அஆஇ எதுவுமே அறியாத அன்று பிறந்த பாலகனைப்போல அவளுக்கு முன்னே கூனிக்குறுகி நின்றார். அவருடைய புண்ணாகிப்போன உள்ளத்திற்கு இப்போது ஆறுதல் சொல்ல பேராசிரியரைத் தவிர வேறு ஆபத்பாந்தவன் கிடையாது. தத்துவஞானி நேரடியாக கணிதப் பேராசிரியரின் வீட்டுக்குப்போக அது இருளில் மூழ்கியிருந்தது. கதவு திறந்திருக்கவே நுழைந்து மின்விளக்கின் சுவிட்சைப் போட்ட தத்துவஞானி பேராசிரியர் சாய்மனையிலே தலைகவிழ்ந்து போய் அமர்ந்திருப்பதை பார்த்து அதிர்ச்சியடைந்து போனார். இப்படிக் கவலை தோய்ந்த முகத்தோடு பேராசிரியரை ஒருபோதும் அவர் பார்த்ததில்லை.

“பேராசிரியர் ஐயா, என்ன நடந்துவிட்டது உங்களுக்கு? எங்கே உங்கள் மனைவி?” என்று கேட்டார் தத்துஞானி. தலையை நிமிர்த்தாமலேயே “நாங்கள் விவாகரத்து பெற்றுவிட்டோம்” என்று பதிலளித்தார் பேராசிரியர். “விவாகரத்தா?” தத்துவஞானியால் பேராசிரியர் சொல்வதை நம்பவே முடியவில்லை.

”உங்கள் வாழ்க்கையில் திடீரென்று அப்படி என்னதான் நடந்துவிட்டது?”

“எல்லாம் நடந்துவிட்டன. ஏற்கனவே எங்கள் விவாகரத்து வழக்கு நெடுங்காலமாக நடந்துவந்தது, இன்று தான் தீர்ப்பு கிடைத்தது”

“அப்படியானால் இவ்வளவுகாலமும் அந்நியோன்னியமாக உங்கள் மனைவியுடன் நடந்து கொண்டதெல்லாம்?”

சோகத்திலும் பேராசிரியர் இப்போது வெடிச்சிரிப்பு சிரித்தார்.

“தத்துஞானியே, உங்கள் தத்துவப் புத்தகத்தில் எங்காவது இருக்கலாம், தேடிப் பாருங்கள். எங்கள் வறட்டுக் கௌரவத்தைக் காப்பாற்றுவதங்காக நாங்கள் நடத்திய வெறும் நாடகம் அது” என்று மீண்டும் சிரித்தார் பேராசிரியர். தத்துவஞானியால் சிரிக்க முடியவில்லை.



# கடிகாரம் களவு போயிற்று

எம்.எம்.நெளஷாத்

திரு சுவாரிச் அவர்களின் டாம்பீக வாழ்க்கையைப் பற்றி நிறைய கேள்விப்பட்டிருந்தாலும் அன்றுதான் அந்த மனிதரை நேரில் கண்டேன். கேள்விப்பட்டது அனைத்தும் நிஜமே. தங்கமும் வைரமும் இழைக்கப்பட்ட ஆடைகளை அணிந்து அவர் தங்க மனிதராக தோற்றமளித்தார். அவர் வாழ்ந்து வந்த மாளிகையின் வனப்பினால் என் கண்கள் கூசின. அவருடைய கடிகாரச் சிற்றுண்டிக்கு சமூகமளித்திருந்த அனைத்துப் பிரகிருதிகளும் செல்வந்தர்களாக இருந்தார்கள். மாளிகைக்குள் நுழைந்த மாத்திரத்திலேயே நான் கூனிக்குறுகிப் போனேன்.உண்மையைச் சொல்லப் போனால் எனக்கு அழைப்பிதழே இல்லை. என்னுடைய Boss லிபாசு. அவருடன் ஒட்டிக்கொண்டு வந்தேன். அவருக்கு அழைப்பிதழ் இருந்தது. லிபாசு என்னையும் தன்னுடன் வைபவத்திற்கு வரும்படி அழைக்கவே நானும் மறுக்காமல் ஏற்றுக்கொண்டேன். அவ்வாறு அழையா விருந்தாளியாக போகக்காரணம் அடக்க முடியாத ஆர்வம்தான். எத்தனையோ சிற்றுண்டிகளுக்கு போயிருக்கிறேன். ஆனால் கடிகாரச்சிற்றுண்டிக்கான அழைப்பிதழ் என்ற சொற்றொடரே புதுமையானதாக இருந்தது. அது உண்மையில் சிற்றுண்டி வைபவமல்ல. பேருண்டி வைபவம். விலையுயர்ந்த மது அங்கு பரிமாறப்பட ஆடவரும், இளமங்கையரும் ஒன்றாகச் சேர்ந்து ஆடினார்கள்.

திரு சுவாரிச் அவர்கள் வினோத ஆசைகள் கொண்ட மனிதன் என்று அந்த வட்டாரத்தில் பிரசித்தமாகி இருந்தார். அவரின் வினோதமான சிற்றுண்டி வைபவங்களும் பிரசித்தமாகி இருந்தன. ஒருமுறை மூக்குச் சிற்றுண்டி நடந்தது. அமெரிக்காவிலே அழகுச் சிகிச்சை செய்து அழகாக்கப்பட்ட மனைவியின் புதிய மூக்கை காட்சிப்படுத்தவே இந்த வைபவம்.

அதன் பிறகு நடந்தது கட்டில் சிற்றுண்டி. தங்க இழைகளால் இழைக்கப்பட்டு, கட்டித் தங்கத்தால் உருவாக்கப்பட்ட கட்டிலை காண்பிக்கத் தான் அந்தச் சிற்றுண்டி. இப்படிக் காசை ஆற்றிலே கரைக்கும் வினோதமான பேர்வழி தான் சுவாரிச். போடப்பட்டிருந்த எல்லா ஆசனங்களும் சிம்மாசனம் போலக் காட்சியளித்ததால் எனக்கு அமர்வதற்கு கூச்சமாக இருந்தது. லிபோசுவுக்கு பின்னால் இருந்த ஒரு பழைய ஸ்டூலில் உட்கார்ந்து கொண்டேன். லிபோசுவின் அருகில்வந்த சுவாரிச் என்னை ஓரக் கண்ணால் பார்த்துக்கொண்டே "பையன் யார்? வேலைக்காரனா? தோட்டக்காரனா?" என்று போகிற போக்கில் கேட்க நான் வெட்கித்துப் போனேன். லிபோசு என் பக்கம் திரும்பி "பார்த்தாயா டீன்சி, நீ பொலிஸ்காரன் என்பதையே சுவாரிச்சால் கண்டு பிடிக்காமல் போய் விட்டது. வெட்கக்கேடு" என்று என் காதுக்குள் கிசுகசுத்தார். எனக்கு வேண்டாம் வேண்டாம் என்றாகி விட்டது.

லிபோசு தான் கிராமத்து பொலிஸ் நிலையப் பொறுப்பதிகாரி. மிடுக்கான ஆண்சிங்கம், முறுக்கான மீசை, உருண்ட, திரட்சியான புஜங்கள். குற்றவாளிகளை உற்றுப் பார்க்கும் போதே அவர்கள் நடுநடுங்கிப் போவார்கள். அப்படிக் கடினமாக சருமத்திலுள்ள நரம்புக்கலங்களை உசுப்பி, ஊடறுத்துச் செல்லும் பார்வை. *டீன்சி* என்று என்னைக் கூப்பிட்டார் லிபோசு.

"என்ன ஐயா?"
"டீன்சி, பொலிஸ்காரன் என்றால் அர்த்தம் தெரியுமா?"
"தெரியாது"
"பொலிஸ் என்றால் பிசாசு. நீ பிசாசைப்போல் உன்னை மாற்றிக்கொள்ள வேண்டும். யாருக்கும் பயப்படக் கூடாது. எல்லோரும் உன்னைக் கண்டு பயப்படவேண்டும்" என்று சொன்ன லிபோசு எனக்கொரு பரீட்சை வைத்தார். என்ன பரீட்சை என்றால் நான் வரவேற்பு மண்டபத்தைக் கடந்து, சமையலறைக்குப் பக்கத்தில் இருக்கின்ற கழிப்பறைக்குச் சென்று வரவேண்டும். நடை எப்படிஇருக்க வேண்டுமென்றால் கம்பீர நடை, நெஞ்சை நிமிர்த்தி, பந்துக் கண்கள் சுழலச் சுழல, சப்பாத்து எகிற எகிற, நிலம் நடுங்க நடுங்க நடை. "சரி ஐயா" என்றேன் நான். எனக்கும் மிடுக்கு வந்துவிட்டது. லிபோசு சொன்ன படியே அடிகளை எடுத்து நடந்தேன். பூட்ஸ் ஒலி டக்டக்கென்று ஒலித்தது, நிலம் கிடுகடுத்தது. எல்லா விருந்தினர்களும் என்னையே திரும்பித் திரும்பிப் பார்க்க லிபோசு 'வெல்டன் பையா' என்று என் முதுகிலே தட்டினார். அடுத்த ரவுண்டிலே திரும்பி வந்த சுவாரிச் "பையன் பொலிஸ்காரன் என்ற விஷயத்தை சொல்லவே இல்லையே, என்ன புதுசா?" என்று லிபோசுவைப் பார்த்துக் கேட்டார்.
"வேலையில் சேரந்து இரண்டு வாரங்கள்தான் ஆகின்றன"
"பரவாயில்லை. கம்பீரமாக நடக்கிறான், பையன் தேறிவிடுவான். முகத்தைப் பார்த்தாலேயே தெரிகிறது தேவாங்கு முகம்" என்றார் சுவாரிச். என் முகம் சுருண்டு விட்டது. நான் தேவாங்கை ஒருபோதும் கண்டதில்லை. ஆனால் தேவாங்கின் முகம் பார்ப்பதற்கு அசிங்கமாக இருக்கும் என்று சொல்லக் கேள்விப்பட்டிருக்கிறேன்.

திடீரென்று வைபவத்தில் பரபரப்பு உண்டாகிற்று. 'சீமான்களே சீமாட்டிகளே' என்று ஆரம்பித்து ஏதேதோவெல்லாம் சுவாரிச் பேசிக்கொண்டே போனாலும் யாரும் அவருடைய கதைக்கு காது கொடுக்காமல் அவருடைய கையில் இருந்த பெட்டியையே பார்த்துக் கொண்டிருந்தார்கள். தங்கமுலாம் பூசப்பட்ட பெட்டி. பேச்சு முடிந்ததும் சுவாரிச் தங்க முலாம் பூசப்பட்ட பெட்டியை கிடையாக உள்ளங்கையில் வைத்து மெல்லத் திறந்தார். திறந்ததுதான் தாமதம் பலூன்காரனை சிறுவர்கள் மொய்ப்பதுபோல் பிரசித்திபெற்ற கோடீஸ்வரர்கள் எல்லாம் சுவாரிச்சை சூழ்ந்து கொண்டார்கள். லிபோசுவும் விதிவிலக்கில்லாமல் முண்டியடித்துக்கொண்டு முன்னால்

போக சுவாரிச் கடிகாரத்தைக் கையால் தூக்கி எல்லோருக்கும் தெரியக்கூடியதாகக் காட்டி வரிசையில் இலக்கம் ஒன்றில் நிற்கும் டாக்டரிடம் கையளித்தார். அவர் அதனை அப்படியும் இப்படியும் புரட்டிப் பார்த்துவிட்டு இலக்கம் இரண்டிடம் ஒப்படைத்தார். இப்படியே கடிகாரம் ஒவ்வொருவர் கையாக கைம்மாறி கடைசியில் என்னிடம் வந்து சேரந்தது.

பொழுதைப் போக்குவதற்காக நகரங்களில் இருந்த பெரிய காட்சியறைகளுக்கெல்லாம் நான் பல தடவைகள் சென்றிருக்கிறேன். ஆனால் இத்துணை அழகான கைக்கடிகாரத்தை நான் வாழ்நாளிலே பார்த்ததில்லை. மனதைக் கொள்ளை கொள்ளும் அழகு. கடிகார முகப்பு வட்டவடிவமாகவும் இல்லாமல், செவ்வகமாகவும் இல்லாமல், சதுரமாகவும் இல்லாமல், நீள்வட்டவடிவமாகவும் இல்லாமல் நவீன ஓவியத்தைப் போல் இருந்தது. ஒவ்வொரு இலக்கங்களும் முப்பரிமாணமாக அமைக்கப்பட்டிருந்தன. இலக்கங்கள் தாமிருக்கு மிடத்தில் சுழன்றன. அவ்வாறே ஓர் ஒழுக்குப்பாதையில் எல்லா இலக்கங்களும் சுற்றிச்சுற்றி வந்தன. இதனையும்விட இக்கடிகாரம் விஷேசத்தன்மை வாய்ந்தது, ஏனென்றால் முப்பரிமாணத்தில் அமைக்கப்பட்டிருந்த இயற்கை காட்சிகள், உலக ஏழு அதிசயஙகள், திரைப்படக்காட்சிகள், நீர்வீழ்ச்சிகள் என்று மணித்தியாலத்திற்கு ஒரு காட்சியாக இருபத்திநான்கு மணித்தியாலங்களிற்கும் இருபத்திநான்கு காட்சிகள் சலனப்படமாக ஓடின. நாம் விரும்பிய காட்சிகளை சேர்த்துக்கொள்ளலாம், அல்லது தணிக்கையும் செய்யலாம். நிமிட, செக்கன், மணித்தியாலக் கம்பிகள் கிடையாது. எல்லாம் இலத்திரனியல் இயக்கம்தான்.

அற்புதமான இந்தக் கடிகாரத்தை வடிவமைத்தது யார் என்று கேட்டால் ஆச்சரியப்படுவீர்கள். தொண்ணூாறு வயதுக் கிழவர். சுவிட்சர்லாந்திலே மோர்கன் என் ஸ்மித் என்ற பெயரில் கீர்த்தி நிறைந்ததும், பழமை செறிந்ததுமான கடிகார நிறுவனம் இருக்கின்றது. உலகத் தலைவர்கள், நடிகர்கள், வீராங்கனைகள், பாடகிகள், விஜபிக்கள் எல்லோரும் இவர்கள் உற்பத்தி செய்த கடிகாரங்களை ஆசையோடு அணிந்தார்கள். ஸ்மித்தின் கொள்ளுப்பேரன் ஸ்மித் பாக்கர் முப்பது வருடங்கள் நிறுவனத்தின் தலைவராக இருந்து வந்தார். வயது தொண்ணூறு. தள்ளாத வயது. மரணப்படுக்கையில் வீழ்ந்து விட தனியார் ஆஸ்பத்திரிக்கு அவரைக் கொண்டு போனார்கள். எங்கே போன போதிலும் கிழவரின் ஆசைகள் குறையவில்லை. கற்பனை சிறகடித்து பறந்தது. உலகமே வியக்குமளவிற்கு ஒரு கடிகாரத்தை வடிவமைக்க வேண்டும். அது கிழவரின் மரணப்படுக்கை ஆசை. ஐடியா வந்த மறுகணமே அவருக்கிருந்த நோய் போக டாக்டர்களுக்கு டாட்டா காட்டி விட்டு கிராமத்திலிருந்த தன்னுடைய பண்ணை வீட்டிற்குப் பறந்து போனார். பொறியியலாளர்களும் அவரைப் பின்தொடர்ந்தார்கள்.

அவர்கள் கோல்ப் விளையாடினார்கள், ஆற்றிலே குளித்தார்கள், திராட்சைப் பழங்களைப் சாப்பிட்டார்கள். பண்ணை வீடு அவர்களுடைய சொந்த வீடாகியது. ஆனால் ஒருவருமே தூங்கவில்லை. அவர்கள் நுட்பமான ஐடியாக்களைக் குழைத்தார்கள், பதப்படுத்தினார்கள், சலவை செய்தார்கள். கிழவரின் உயிர் ஆறே ஆறு நாட்களில் பிரிந்துவிடும் என்ற டாக்டர்களின் முன்னறிவிப்புக்களை எல்லாம் பொய்யாக்கி ஸ்மித் பாக்கர் ஆறு மாதகாலம் உயிர்வாழ்ந்தார்.

எப்போது அவரது உயிர் பிரிந்தது என்றால் அதுவும் சுவையான கதை. தொழிநுட்ப வல்லுனர்கள் இரவுபகலாக கடிகாரத்தை வடிவமைத்து அதற்கு *எஸ்பாக்கர்* என்று பெயரிட்டார்கள். எஸ்பாக்கர்ஐ சந்தைப் படுத்துவதற்காக ஆறு சங்கீத ஜாம்பவான்களை வரவழைத்து ஆறு பிரபலஸ்தர்களும் எஸ் பாக்கர் என்று தொடங்கும் பாடலை ஆறு தடவை ராகமிசைத்து நடனமாடிப் பாடினார்கள். ஆறாந் திகதி மாலை ஆறுமணி ஆறு நிமிடம் ஆறு செக்கனில் பாட்டு ஆரம்பமானது. அவர்கள் முடித்ததும் ஆறு அழகிகள் அந்தப் பாட்டை ஆறு தடவைகள் மீண்டும் பாடினார்கள். அடுத்த படியாக கிழவர் அந்த ஆறு அழகிகளுக்கும் வரிசையாக ஆறு முத்தங்கள் கொடுக்க வேண்டும். கிழவருக்கு ஆறாம் இலக்கம் எப்போதும் அதிர்ஷ்டமாக அமைந்திருந்ததே இப்படி எல்லாமே ஆறாக வரக் காரணம். இம்முறையோ கதை வேறாகி ஆறாம் இலக்கம் கிழவருக்கு துரதிஷ்ட எண்ணாக மாறிற்று. கிழவர் ஆறாவது அழகிக்கு ஆறாவது முத்தத்தை கொடுக்கும்போது கிரிக்கட் பிரியரான் அவர் 'சிக்ஸர்' என்று கூவ அத்தோடு உயிர் அடங்கி விட்டது.

இந்த விருட்டாந்தங்கள் எல்லாம் உனக்கெப்படித் தெரியும் என்று கேட்காதீர்கள். எனக்கு இந்தக் கதையெல்லாம் நிஜமாகவே தெரியாது. சுவாரிச் ஒருபுத்தகம் தந்திருந்தார். *எஸ் பாக்கர் கடிகார பொற்சரிதம்* என்பது தலைப்பு. அந்தப் புத்தகத்தில் தான் இந்தக் கதை இருந்தது. "கனவான்களே, சீமாட்டிகளே" என்று சுவாரிச் மீண்டும் ஆரம்பித்தார். சுவாரிச் மகாநாயகனாக ஆகி அவர் தூஷண வார்த்தைகள் பேசினாலும் கைதட்ட ஆட்கள் இருந்தார்கள். எனவே அவர் பேச ஆரம்பித்ததுமே சபை அமைதியாகி வாயைப் பிளந்தது. பேசிமுடிந்த கையோடு யாரும் எதிர்பாராத வகையில் கைக்கடிகாரத்தை எடுத்து கொதிக்கின்ற நீரிற்குள் சுவாரிச் போட எல்லோரும் சூள் கொட்ட சுவாரிச் அமைதியாக "பயப்படாதீர்கள். கொதிக்கின்ற தண்ணீரில் போட்டாலும் எஸ் பாக்கர் ஒன்றும் ஆகாது" என்று சொல்லிக்கொண்டே, ஐந்து நிமிடங்கள் கழித்து கடிகாரத்தை இடுக்கியினால் வெளியே எடுத்தார். என்ன அதிசயம்! கடிகாரம் மிளிரும் அழகு மாறாமல் இருந்தது மட்டுமன்றி, அதன் முகப்பிலே

"சூடு என்னை ஒன்றும் செய்யாது" என்ற வசனமும் தோன்றி மறைந்தது.

இது மட்டுமல்ல Deep freezerஇல் வைத்தாலும் கடிகாரம் ஒன்றும் ஆகமாட்டாது என்று சொன்ன சுவாரிச் ஏற்கனவே நான் எஸ் பாக்கரை பற்றி வர்ணித்த எல்லா விஷயங்களையும் தூக்கிச் சாப்பிடக்கூடிய ஒரு காரியத்தைச் செய்தார். அதனைச் சொல்கிறேன், கேளுங்கள். சுவாரிச் அவர்களின் வீட்டுக்கு முன்னால் ஏற்கனவே ஹெலிகொப்டர் நிறுத்தப்பட்டிருந்தது. அவர் ஹெலிகொப்டரில் ஏறினார். கையிலே எஸ் பாக்கர். சுவாரிச் என்ன செய்யப் போகிறார் என்று எதிர்பார்த்த வண்ணம் விருந்தினர்கள் எல்லோரும் ஆவலோடு காத்திருந்தார்கள். ஹெலிகொப்டர் மேலே கிளம்பியதும் அவர்கள் வாயைப்பிளந்த வண்ணம் வானத்தைப் பார்ததவாறே பின்னால் ஓடினார்கள். ஆயிரம்அடி உயரத்திற்கு போனதும் சுவாரிச் அங்கிருந்தவாறே கடிகாரத்தை கீழே போட்டார். கடிகாரம் கற்பாறையை நோக்கி வந்து கற்பாறையின் மேல் விழ செல்வந்தப் பட்டாளம் எஸ் பாக்கர் விழுந்த திசையை நோக்கி பிடரி பின்னங்காலில் அடிபட ஓடியது. மீண்டும் ஆச்சரியம். கைக்கடிகாரத்தில் இருந்து இரண்டு சிறகுகள் வெளிப்பட்டு, எஸ் பாக்கரை அப்படியே தாங்கிப் பிடிக்க கடிகாரம் அப்படியே கற்பாறை மீது அசையாமல் நின்றது. எல்லா விருந்தினர்களும் கைதட்டி ஆரவாரம் செய்ய ஹெலிகொப்டரில் இருந்து கம்பீரமாக இறங்கி வந்த சுவாரிச் இப்போது தனது நாடகத்தின் கடைசிக் கட்டத்திற்கு வந்தார்.
"கனவான்களே, சீமாட்டிகளே, இப்போது நான் உங்கள் எல்லோரிடமும் கேள்வி கேட்கப் போகிறேன்" "கேளுங்கள் கேளுங்கள்" என்று ஒரே கோரஸாக கூவினார்கள் எல்லா விருந்தினர்களும்.
"நீங்களெல்லாம் கோடீஸ்வரர்கள் தானே"
"ஆம், அதிலென்ன சந்தேகம்?"
"ஆனால் இந்த உலகத்திலே கோடீஸ்வரர்களுக்கெல்லாம் கோடீஸ்வரர்கள் என்று சொல்லக்கூடிய கொள்ளை கொள்ளையாக செல்வத்தை குவித்து வைத்திருக்கும் நூறு பேர்கள் இருக்கின்றார்கள். அவர்களுடைய பெயரைச் சொல்லமுடியுமா, சொல்லுங்கள் பார்க்கலாம்" என்றார் சுவாரிச்.

ஒருவர் முகத்தை ஒருவர் பார்த்துக் கொண்டார்களேயொழிய ஒருவருக்கும் விடை தெரியவில்லை. "தெரியவில்லையா? சரி ஒருவரின் பெயரையாவது சொல்லுங்கள் பார்க்கலாம்" என்று சுவாரிச் கேட்க அதற்கும் விடை வராமலிருக்கவே "உலகத்திலேயே நூறாவது கோடீஸ்வரர் நான்தான்" என்று சுவாரிச் ஒரு போடு போட விருந்தாளிகள் பிரமித்துப் போனார்கள். "ஏன் தெரியுமா?"
"ஏன்?"
"ஏன்?"

“ஏன்?”
“உலகத்திலேயே நூறே நூறு எஸ்பாக்கர் கடிகாரங்கள் தான் இருக்கின்றன. அதை வைத்திருக்கும் நூறாவது கோடீஸ்வரன் நான்தான்” என்று முடித்தார் சுவாரிச். கடிகாரச் சிற்றுண்டியும் முடிந்தது.

இத்துடன் கதையும் முடிந்து விட்டது என்றுதான் நினைத்துக் கொண்டிருந்தேன். வீட்டிற்குப் போய் குளித்து, சிறிதுநேரம் ஓய்வெடுத்துக் கொண்டிருந்த வேளையில் லிபோசுவிடமிருந்து அவசரமாக தொலைபேசி அழைப்பு வந்தபோதுதான் கதை முடியவில்லை என்று எனக்கு தெரிந்தது. என்ன காரியமாக இருந்தாலும் லிபோசு என்னைத் தான் கூப்பிடுவார். நான் பதற்றத்துடன் பொலிஸ் நிலையம் நோக்கி வேகமாகச் சென்றேன். லிபோசு சீருடையுடன் இருந்தார். அவருக்கு முன் ஆசனத்தில் ஓர் ஆண் அமர்ந்திருந்தான். நான் அருகில் சென்று யார் என்று பார்த்தபோது திரு சுவாரிச். அவர் சுவாரிச்தான் என்று என்னால் நம்பவே முடியவில்லை. சிற்றுண்டி வைபவத்தில் இருந்த போது முகத்தில் ஜொலித்த தேஜஸ் எல்லாம் மறைந்து, அன்பளிப்பாகக் கிடைத்த சாப்பாட்டுப் பார்சலை பறிகொடுத்த பிச்சைக்காரன் போல் அவர் காணப்பட்டார். ஏதோ நடக்கக் கூடாத சம்பவம் நடந்திருக்க வேண்டும். சுவாரிச் பொலிஸ் நிலையத்திற்கு வந்ததை ஒருபோதும் நான் பார்த்ததில்லை. லிபோசுவுக்கும் சுவாரிச்சுக்குமிடையில் அளவிட முடியாத நட்புமுறை நிலவிவந்ததை நான் அவதானித்திருக்கிறேன். காலையில் அவர்கள் இருவரும் தொலைபேசியில் பேசிக்கொள்வார்கள். நான் வேலையிற் சேர்ந்த முதல் நாளன்றே சுவாரிச் என்ன சொன்னாலும் அதன்படி நடந்து கொள்ளவேண்டுமென்று லிபோசு எனக்கு கட்டளையிட்டிருந்தார்.

லிபோசு எனக்கு சைகை காட்ட நான் போனேன். “திரு சுவாரிச் அவர்களின் எஸ்பாக்கர் களவு போய்விட்டது” என்று லிபோசு சொல்ல நான் அதிர்ச்சியடைந்து போனேன். லிபோசு இந்தச் செய்தியை என்னிடம் சொன்ன விதம் மிகவும் கடுமையாக இருந்தது. குற்றவாளியை குரூரமாகச் சித்திரவதை செய்யும் லிபோசுவின் முரட்டுத்தனம் அந்த வட்டாரத்திற்கே தெரியும். அவரிடம் சிக்கி சித்திரவதைப் படப்போகும் கடிகாரத் திருடனை நினைத்தால் எனக்கு குலைநடுங்கியது.

பள்ளியில் படிக்கின்ற காலத்திலிருந்தே பொலிஸ்காரனாக வர வேண்டுமென்று துடியாய்த் துடித்துக் கொண்டிருந்த எனக்கு பொலிஸ் சீருடை மீது தாங்க முடியாத மோகம் இருந்தது. என் வீட்டிலோ துளிக்கூட விருப்பமில்லை. நான் பொலிஸ்காரன் படங்களை வெட்டி என் அறையிலே ஒளித்து வைத்திருந்தேன். பொலிஸ்காரனின் உருவப்படங்களை வரைந்து நிறந் தீட்டியிருக்கிறேன். மைக் டைசன்,

முகம்மது அலி இவர்களுடைய வாழ்க்கை சரிதநூல்களை வாங்கி எதிரியைத் தாக்குவதாக நினைத்துக்கொன்டு குத்துச்சண்டை பழகியிருக்கிறேன். பொலிஸ்காரர்களின் துணிகரச்செயல்களை படமாக்கி ஆங்கிலத்தில், ஜெர்மன் மொழியில், பிரஞ்சு மொழியில் வெளிவந்த அனேகமான எல்லாப் படங்களையும் பார்த்திருக்கிறேன். பொலிஸ்காரர்களின் நகைச்சுவை உணர்வை வெளிப்படுத்தக்கூடிய பொலிஸ் அகடமி போன்ற தொடர் படங்களையும் பார்த்திருக்கிறேன். பொலிஸ்காரன் போல மிடுக்காக நடந்து பழகியிருக்கிறேன்.

எனினும் உண்மையான பொலிஸ்காரனாக இருப்பது லேசுப்பட்ட விடயமல்ல என்று இப்போது புரிந்தது. எத்தனையோ விடயங்களை அனுசரித்துப்போக வேண்டி இருந்தது. அதனை விடவும் மோசம் என்னவென்றால் பொலிஸ்காரன் பிசாசுபோல் இருக்க வேண்டும் என்று லிபோசு சொல்கிறார். எனக்கு அப்படியெல்லாம் இருக்க முடியாது. லிபோசு பிசாசு போலத்தான் இருந்தார். அவருடைய பிள்ளைகளும் பிசாசு போல் இருந்ததை ஒரு திருமண வைபவத்தில் நான் நன்றாக அனுபவித்தேன். பிசாசுவின் பிள்ளைகள் சாப்பாட்டுப் பீங்கானை கீழே போட்டு உடைத்தார்கள், தண்ணீர்க் குவளையை மற்ற விருந்தினர்கள் மீது எறிந்து விளையாடினார்கள், என் புதிய ஆடைகள் மீது கறியைக் கொட்டினார்கள். இத்தனை காட்சிகளையும் சுவாரிச்சும் அவருடைய மனைவியும் வேடிக்கை பார்த்துக் கொண்டிருந்தார்கள். லிபோசுவிடம் எதுவும் கேட்க முடியாது; எகிறிவிடுவார். நான் அவருடைய மனைவியின் அருகில் சென்று மிக மெதுவான குரலில், “அம்மணி, பார்த்தீர்களா? உங்கள் பிள்ளைகள் எவ்வாறு நடந்து கொள்கிறார்கள்? மற்ற விருந்தினர்கள் உங்கள் பிள்ளைகளைப் பற்றி தவறாக நினைத்து விடுவார்கள். கொஞ்சம் அவர்களுக்கு அறிவுரை சொல்லக்கூடாதா?” என்று சொன்னேன். அம்மணி புன்னகைத்தாள். “டீன்ஸீ, மற்றவர்கள் என் பிள்ளைகளைப்பற்றி என்ன நினைத்தாலும் எனக்குக் கவலையில்லை. என் பிள்ளைகள் பிசாசுகள் என்று அவர்கள் நினைத்தால் தான் நல்லது. அப்போதுதான் அவர்கள் என் பிள்ளைகளைப் பார்த்துப் பயப்படுவார்கள்” என்று சர்வ சாதாரணமாகப் பதிலளித்தாள் அவள்.

லிபோசு என்னிடம் சுவாரிச் அவர்களின் முறைப்பாட்டை எழுதச்சொன்னார். நான் சுவாரிச் அவர்களின் முழுப்பெயர், வயது, முகவரி, தொழில் என்று ஆரம்பித்து எஸ்பாக்கரின் கதையையும், சுவாரிச் அவர்களின் கதையையும் திருஷ்டாந்தமாக எழுதி அடியிலிருந்து முடிவுவரை எல்லாவற்றையும் அவருக்கு வாசித்துக் காட்டி கையொப்பத்தையும் பெற்றுக் கொண்டேன். நாங்கள் ஜீப்பில் ஏறினோம். என்னோடு இன்னும் நான்கு பொலிஸ்காரர்கள் ஏறினார்கள். முன் ஆசனத்திலே லிபோசு அமர ஜீப் உறுமிக் கொண்டே புறப்பட்டது. என் கையிலே பட்டியல். கடிகார சிற்றுண்டிக்கு சமுகமளித்த பணக்காரப் பட்டாளத்தின் பட்டியல்.

“திரு சுவாரிச் அவர்களே கவலைப்படாதீர்கள். உங்கள் எஸ்பாக்கர்

உங்களுக்கு நிச்சயம் கிடைக்கும். நான் பொறுப்பெடுத்தால் அது நடக்காமல் இருக்காது” என்று சொல்லிட்டுத்தான் லிபோசு ஜீப்பில் ஏறினார். அந்த வார்த்தைகள் மிடுக்காகவும் சுவாரிச் அவர்களின் மனக் காயத்துக்கு ஒத்தடம் கொடுப்பது போலவும் இருந்தாலும் எங்கள் சஞ்சாரம் இறுதியில் ஏமாற்றத்தில் முடிந்தது. பட்டியலில் இருந்த எந்தெந்த வீடுகளுக்குப் போனோமோ அந்தந்த வீடுகளின் முகப்படலை வரை மட்டுமே எங்களால் போகமுடிந்தது; அல்லது பூந்தோட்டம் வரையுமே போக முடிந்தது; அல்லது நீச்சல் தடாகம் வரை மட்டுமே போக முடிந்தது; அல்லது கூர்க்காவிடம் மட்டுமே ஒருசில வார்த்தைகள் பேசமுடிந்தது. பட்டியலில் இருந்தவர்கள் டாக்டர்களாக, பொறியியலாளர்களாக, நகரசபை உறுப்பினர்களாக, தொழிலதிபர்களாக, நிறுவனத்தலைவர்களாக, கமிஷனர்களாக இருந்தார்கள்.

“இவர்களிடம் போய் கைக்கடிகாரத்தைத் திருடினீர்களா என்று கேட்க முடியுமா?” என்று என்னைப் பார்த்து லிபோசு கேட்க “முடியாது ஸேர்” என்றேன் நான். ’விசாரித்ததாக எழுதிக்கொள்’ என்றார் லிபோசு. “அது பொய்யாக மாட்டாதா ஸேர்?” என்று நான் கேட்க “நீ இன்னும் நிறையப் படிக்க வேண்டியிருக்கின்றது” என்ற லிபோசு “அது சரி யார் யாரை விசாரிக்கலாம்? ஐடியாச் சொல்லு, ஆனால் பிரச்சினை வரக்கூடாது” என்று என்னைப் பார்த்துச் சொன்னார். ஏற்கனவே நான் தயாரித்து வைத்திருந்த பட்டியலை அவரிடம் நீட்டினேன். நந்தவன கிராமம் 77ம் இலக்கத்தில் வசிக்கும் திரு சுவாரிச் ஸேம், வயது 49. அவர்களால் 23-05-2009 மாலை 4.30மணிக்குச் செய்த முறைப்பாடு தொடர்பாக சுவிட்சர்லாந்து நாட்டிலிருந்து இறக்குமதி செய்யப்பட்டு சுவாரிச் அவர்களால் பாவிக்கப்படும் எஸ்பாக்கர் என்றழைக்கப்படும் கடிகாரம் திருட்டுப் போய்விட்டது. இது 23-12-2008 இல் உற்பத்தி செய்யப்பட்டது. கடிகாரச் சிற்றுண்டி நடந்த தினத்திலிருந்து தான் இக்கடிகாரம் காணமல் போயுள்ளது.. இத்திருட்டு தொடர்பாக விருந்தினர்கள் அனைவரும் விசாரிக்கப்பட்டார்கள். விசாரிக்கப்பட வேண்டிய மற்றைய நபர்களின் பட்டியல். வேலைக்காரி, தோட்டக்காரி, சமையற்காரன், பால்காரன், பத்திரிகை கூவி விற்போன்... என்று நீண்டது என் பட்டியல். பட்டியலை வாங்கிப் பார்த்த லிபோசு “welldone. நன்றாக செய்துள்ளாய். உனக்கும் போலீஸ் வேலைகள் கொஞ்சம் கொஞ்சம் தெரிகிறது” என்று தோளில் தட்டி என்னைப் பாராட்டினார்.
எனக்கு இது புதிய அனுபவம். நான் என்ன காரணத்திற்காக இந்த பொலிஸ் துறையை தேர்ந்தெடுத்தேனோ அதற்கான காலம் இப்போது கனிந்திருக்கிறது. திருடன் அல்லது திருடியை கண்டுபிடிக்கப் போகிறோம் என்ற த்ரில் மனசுக்கு இதமாக இருந்தது. கண் துஞ்சாது, பசியை மறந்து, தாகம் மறந்து வாக்கு மூலங்களை எடுத்தேன் நான். கொஞ்சம் அசந்தாலும் கேடி தப்பி விடுவான் என்பதால் அற்பமான

விஷயங்களைக் கூட விட்டுவைக்காமல் ஒவ்வொருவரையும் துருவித்துருவி நான் கேள்விகள் கேட்டேன். அடிக்கடி பொலிஸ் நிலையம் வந்து போய்க் கொண்டிருந்த சுவாரிச் நாட்போகப்போக எரிச்சலடைந்து வெறுப்புணர்வுடன் காணப்பட்டார். “மலையைக் கெல்லி எலியைப் பிடிக்கப் போகிறீர்களா?” என்று ஒருநாள் வந்ததும் வராததுமாக மூர்க்கத்துடன் கேட்டார் சுவாரிச். அவர் கேட்ட விதம் லிபோசுவை அடிக்கப்போவது போல் இருந்தது.

“திரு லிபோசு, நீங்கள செய்து கொண்டிருக்கும் முட்டாள்தனமான வேலைகளால் திருடனைக் கண்டுபிடிக்க முடியாது. நீங்கள் பொலிஸ்காரர்கள் மூளையைப் பாவிக்கத் தெரியாத சோம்பேறிகள். நான் சொல்கிறேன் வழி, கேளுங்கள். இவர்கள் யாருமே திருடர்கள் அல்லர். என்னோடு வாருங்கள். திருடனைக் காட்டுகிறேன். விசாரிக்கிற மாதிரி விசாரித்தால் அவன் உண்மையைக் கக்கி விடுவான்” என்று பொரிந்து தள்ளினார் சுவாரிச். சுவாரிச் சுற்றிவளைத்து எங்களை கூட்டிச் சென்ற இடம் எதுவென்றால் அவருடைய பக்கத்து வீடு. அவருடைய பக்கத்து வீடு எப்படிப்பட்டதென்றால் சுவாரிச்சின் மாளிகைக்குப் பக்கத்தில் அதனை வைத்தால் டைனோசருக்குப் பக்கத்தில் காட்டு ஆமையை வைத்தது போலிருக்கும். “உங்கள் பக்கத்து வீட்டுக்காரனா உங்கள் கைக்கடிகாரத்தைத் திருடினான்?” என்று ஆச்சரியத்தோடு லிபோசு கேட்க “அப்படித்தான் நான் சந்தேகப்படுகிறேன். அவன் பொறாமைக்காரன், வாத்து, வெத்துவேட்டு, பிச்சைக்காரன், நான்கு தட்டு தட்டினீர்களென்றால் உண்மையைக் கக்கிவிடுவான். முதலில் கதையைச் சொல்கிறேன், கேளுங்கள்” என்று சுவாரிச் கதை சொல்ல ஆரம்பித்தார். அந்தக் கதையின் சுருக்கம் இதுதான். சுவாரிச், அவருக்கு கனவு இருந்தது. என்ன கனவு என்றால் மாளிகையை விசாலமாக்க வேண்டும், அது வானத்தை முட்ட வேண்டும்; மலைச்சாரலைத் தொட வேண்டும். கண்ணுக்கெட்டிய துாரமெல்லாம் பூந்தோட்டம். அங்கே எவ்வேளையிலும் இளநங்கையர் பூப்பறித்துக் கொண்டிருப்பர். பூந்தோட்ட மையத்திலே நீச்சல் தடாகம் இருக்கும். இளவரசிகளும், இளவரசர்களும், விஐபிகளும் அங்கே வந்து காற்று வாங்குவர், இயற்கையை ரசிப்பர், என்னைப் பார்ப்பர் ஒரு பார்வை. நான் பெருமிதத்தால் பூரித்துப் போவேன். இப்படியெல்லாம் விரிநத கற்பனை, ஏன் இருக்கக்கூடாது? நான் பணத்தில் குளிப்பவன். எதையும் செய்வேன். பக்கத்து வீட்டுக்காரன் இருக்கிறானே, அவன் குப்பை சாப்பிடும் பிசாசு. அவன் எனக்கு முட்டுக்கட்டையாக இருக்கிறhன்.

பக்கத்து வீட்டுக்காரனின் பெயர் கீஜால். அவனுடைய வீடு அவலட்சணமாகவும் அழுக்கடைந்தும் காணப்பட்டது. வீட்டு முற்றத்தில்

சாக்கடை நீர் தேங்கி நின்றது. கொல்லைப் புறத்தில் நுளம்புகளும், பெருச்சாளிகளும் வாழ்க்கை நடத்தின. அவனுக்கு நிரந்தரமாக எந்தத் தொழிலும் இருக்கவில்லை, மூன்றுபிள்ளைகள் வேறு. வீடு இருந்த இடம் தாத்தாவிடமிருந்து பிதுரார்ஜிதமாக கிடைத்த நிலம், அது விசாலமாக இருந்தது. கீஜாலின் வீட்டைப் பார்த்து அருவருத்த சுவாரிச் வீட்டுக்கு வரக்கூடிய விருந்தினர்கள் "அசிங்கமான அண்டை வீட்டுக்காரனை ஏன் வைத்திருக்கிறாய்?" என்று சுவாரிச்சைக் குடைந்தெடுத்ததால் சினமுற்ற சுவாரிச் ஒருநாள் கீஜாலின் வீட்டிற்குள் நுழைந்தான்.

"ஹலோ வீட்டுக்காரரே, நான்தான் சுவாரிச். உன்பெயர் என்ன?"
"கீஜால்"
"கீஜால், நான் என் பங்களாவை பெருப்பித்துக் கட்டப்போகிறேன். உன்வீடு இருக்கும் நிலத்தை எனக்குத் தந்தாய் என்றால் நன்றாயிருக்கும்"
"எனக்கு அதனை விற்கும் நோக்கமில்லை"
"எவ்வளவு பணம் வேண்டுமானாலும் தருகிறேன்"
"நீங்கள் எவ்வளவு பணம் தந்தாலும் நான் இந்த இடத்தை விற்கமாட்டேன்"
"கீஜால், முரண்டு பிடிக்காதே. வாழ்க்கை முழுவதும் நீ காலாட்டிச் சாப்பிடுகிற அளவுக்கு பணத்தை நான் வங்கி வைப்பில் இடுகிறேன். வலியவரும் அதிர்ஷ்டத்தை உதைத்துத் தள்ளாதே" "இது என் பாட்டனார் வழியில் வந்த சொத்து. நான் யாருக்கும் விட்டுக்கொடுக்க மாட்டேன்"
"என் பணபலத்தை பற்றி உனக்குத் தெரியாது"
"நீங்கள் செய்யக் கூடியதைச் செய்யுங்கள்"
"உன்னால் தாங்க முடியாது"
"பார்க்கலாம்"
இதன்பின் முறுகல் நிலை ஆரம்பித்தது. சில்லறை விஷயங்களுக்கும் இருவரும் சண்டை பிடித்தார்கள். குப்பை கொட்டினாலும் பிரச்சினை; கழிவுக்கானில் பிரச்சினை; காணொளியைச் சத்தமாகப் போட்டால் பிரச்சினை; லொள்லொள் என்று இருமினால் பிரச்சினை என்று பிரச்சினை முற்றிக்கொண்டே போயிற்று என்று முடித்தார் சுவாரிச்.

லிபோசு தடாலடியாக கீஜாலின் வீட்டிற்குள் நுழைந்தார். நாங்களும் பின்தொடர்ந்தோம். மடிப்புக் குலையாத மேற்சட்டையும், கீழாடையும். முகத்தில் பவுடர், நறுமணம் அறையெங்கும் பரவியிருக்க கீஜால் திருமணம் ஒன்றிற்காக புறப்பட்டுக் கொண்டிருந்தான். புகுந்த அதே வேகத்தில் லிபோசு கீஜாலின் சேர்ட் கொலரைப் பிடித்து "திருடிய கைக்கடிகாரத்தை எங்கேயடா ஒளித்து வைத்திருக்கிறாய்?" என்று கடுந்தொனியில் உறுமினார். லிபோசுவின் இந்த அடாவடிச் செயலையும், வாக்குமூலம் எடுக்காத நிலையிலும், அவன் அதைத் திருடியதற்கான

எந்தத் தடயமும் இல்லாத நிலையிலும் சுவாரிச் சொன்ன வாய் வார்த்தையை மட்டும் நம்பி கீஜாலை குற்றவாளியாக்க முனையும் போலீஸ் சம்பிரதாயத்தையும் நான் முற்றாக வெறுத்தேன். பொலிஸ்காரர்கள் வீட்டின் மூலைமுடுக்கெல்லாம் கடிகாரத்தை தேடினார்கள்; சந்தேகம் வந்த இடங்களிலெல்லாம் நிலத்தைத் தோண்டி சுவர்களை இடித்தார்கள்; கூரையைப் பிரித்தார்கள்; கொல்லைப்புறத்தில் இருந்த பாழடைந்த கிணற்றைக்கூட விட்டு வைக்கவில்லை லிபாசு. வீட்டைக் கிட்டத்தட்டத் தலைகீழாகப் புரட்டி எடுத்தார்கள் என்றே சொல்வேன்.

நடக்கும் கூத்துக்களை சிகரட்டையும் புகைத்தவாறே சுவாரஷ்யமாக பார்த்துக் கொண்டிருந்தார் சுவாரிச். எங்கு தேடியும் கைக்கடிகாரம் இருக்காததால் சுவாரிச் கேட்டுக் கொண்டபடி முதுகிலே நாலு தட்டுதட்டி கீஜாலை ஜீப்பிலே ஏற்றினார்கள். பொலிஸ் நிலையத்தில் வைத்து கீஜால் இதனையும் விட அதிகமான சித்திரவதைகளை அனுபவித்தான். அவனைத் தலைகீழாகக் கட்டித் தொங்கவிட்டு எல்லாப் போலிஸ்காரர்களும் நான் நீ என்று போட்டி போட்டுக் கொண்டு குண்டாந்தடியால் அவனை அடித்தார்கள். பெருவிரல்கள் காயங்களாகின, குதிகால் வீங்கி வெடித்தது, முதுகு ரத்த விளாறாகியது, நச்சுப்புகையால் முகம் வெந்துபோயிற்று. என்னைக் கூப்பிட்ட லிபோசு குண்டாந் தடியை என் கையிலே தந்து “அவனது நெஞ்சழுத்தத்தை பார்த்தாயா? உண்மையைச் சொல்லாமல் இருக்கிறான். நீயும் இரண்டு ஓங்கிப்போடு, அப்போது தான் வாயைத் திறப்பான்” என்று என்னிடம் சொல்ல கதிரையில் ஹாயாக அமர்ந்திருந்த சுவாரிச்சும் தலையாட்டினார். நான் அசையவில்லை.

“டீன்ஸி, நீ பொலிசுக்குப் புதிது. இப்படியெல்லாம் செய்யாவிட்டால் குற்றவாளி வாயைத் திறக்க மாட்டான். குற்றவாளி மேல் இரக்கப்படக் கூடாது” என்றார் லிபோசு. வாயில் எதனையோ மென்றபடி சுவாரிச் மீண்டும் தலையை ஆட்டினார். நான் முற்றாக மறுக்க சுவாரிச் அற்பப் புழுவைப் பார்ப்பதுபோல் என்னை பார்த்தார். கீஜால் இரண்டு மூன்று நாட்கள் பொலிஸ் நிலையத்தில் தடுத்து வைக்கப்பட்டான். மூன்றாவது நாள் லிபோசு என்னைக் கூப்பிட்டு “இவன் திருடியிருக்க மாட்டான். இவ்வளவு சித்திரைவதைகளுக்குப் பிறகும் அவன் வாயைத் திறக்காமல் இருக்கிறான் என்றால் அவன் திருடவில்லை என்று அர்த்தம். ஜீப்பிலே ஏற்றி அவனை வீட்டிலே விட்டுவிட்டு வா” என்றார். கீஜாலினால் ஓர் அடிகூட எடுத்துவைக்க முடியாததால் நான் அவனைத் தாங்கிக் கொண்டுபோய் ஜீப்பிலே ஏற்றினேன். நான் ஜீப்பை ஸ்ரார்ட் செய்யும்போது லிபோசு அருகில் வந்து, கீஜாலின் கையைப்பிடித்து “I am sorry” என்றார்.

திரும்பிவந்த நான் உடனடியே லிபோசுவிடம் போய் “ஏன் ஸேர் இப்படி நடந்து கொண்டீர்கள்?” என்று கேட்டேன். “அவனிடம் மன்னிப்பு கேட்டதில் என்ன தப்பு. அவன்தான் கடிகாரத்தைத் திருடவில்லையே” என்றார் லிபோசு. “எப்படி ஸேர் இப்படி உறுதியாகச் சொல்கிறீர்கள்? உறுதியாத் தெரிந்திருந்தால் இப்படி வீணாக அவனை கொடுமைப்படுத்தியிருக்கத் தேவையில்லையே” என்றேன் நான் சற்றுக் கோபத்துடன்.

“சுவாரிச் எப்படிப்பட்ட பணக்காரன்! இப்போது நிம்மதியாகத் தூங்குவான். பணக்காரர்களின் அற்ப ஆசைகளுக்கெல்லாம் சில வேளை நாம் விட்டுக் கொடுத்து போக வேண்டியிருக்கிறது. பொலிஸ்காரனின் தலைவிதி அது” என்றார் லிபோசு. “அப்படியானால் யார் ஸேர் கடிகாரத்தைத் திருடினார்கள்?” என்று கேட்டேன் நான். “நீ அணிந்த சீருடையைக் கொண்டுவா” என்று லிபோசு கட்டளையிட ஒன்றுமே புரியாத நான் அறையில் தொங்கிக்கொண்டிருந்த என்னுடைய சீருடையைக் கொண்டு வந்து அவரிடம் கொடுத்தேன். லிபோசு பொக்கற்றில் கையை விட்டு எதையோ எடுக்க அது எஸ்பாக்கர், திருட்டுப்போன கடிகாரம். “ஸேர் நான் ஒருபோதும் திருடவில்லை. நான் நேர்மையான பொலிஸ்காரன்” என்று நாக்குழறினேன் நான்.

“நீ எடுத்தேன் என்று நான் சொன்னேனா? நன்றாக ஒரு விஷயத்தை விளங்கிக்கொள். திருடனின் கையில் இருந்தாலும் அவன்தான் திருடினான் என்ற முடிவுக்கு நாம் வந்துவிடக் கூடாது. அதுதான் நம்முடைய பொலிஸ் நீதி” என்றார் லிபோசு.

“அது எனக்கு நன்றாக தெரியும் ஸேர்”

“அப்படியானால் ஏன் பதறுகிறாய்?”

“என் பொக்கற்றுக்குள் கடிகாரத்தைப் போட்டது யார் என்று தெரியவில்லையே”

“நான்தான் போட்டேன்”

நான் ஆச்சரியமுற்றவனாக “உங்கள் கைகளுக்கு எப்படி ஸேர் அது வந்தது?” என்று கேட்டேன். “நான் திருடினேன்”

“நீங்கள் திருடினீர்களா? எதற்காக ஸேர் அப்படிச் செய்தீர்கள்?”

“திமிர் பிடித்த பணக்காரக் கிறுக்கன் சாதாரண கடிகாரத்திற்காக இப்படி ஊரைக் கூட்டி டம்பமடிக்க வேண்டிய அவசியம் இல்லையே. பொலிஸ்காரர்களாகிய நாங்கள் பணக்காரர்களின் பேராசைகளுக்கு சிலவேளைகளில் பாடம் கற்பிக்கவும் வேண்டி இருக்கிறது” என்று அமைதியாகச் சொன்னார் லிபோசு.



# இருபதாம் நூற்றாண்டுக் கணவன்மார்கள்

எம்.எம்.நௌஷாத்

இருபதாம் நூற்றாண்டின் அதிகாலையொன்றில் இந்தச் சம்பவம் நிகழ்ந்தது. காட்டை ஊடறுத்துச் செல்லும் ஒற்றையடிப் பாதையில் கம்பீரமான ஓர் ஆண்மகன் கையிலே டோர்ச்லைட்டோடு நடந்து வந்து ஆற்றங்கரையிலே நின்ற நாவல் மரத்திலே ஏறினான். இருள் இன்னும் முழுமையாக விலகாத நேரம். ஓரிளமங்கை தோழியருடன் வர ஆண்மகன் மரக்கொப்புகளுக்கிடையில் ஒளிந்தபடியே உச்சியிலிருந்து உள்ளங்கால் வரை இளமங்கையை ஆராய்ச்சி செய்தான். இளமங்கையின் பெயர் அஸித்ரா.

அஸித்ராவின் வீடு அன்றைய நாளை இதயப் படபடப்போடு ஆரம்பித்தது. அஸித்ராவின் தந்தையும் அந்த நாளை இதயப் படபடப்போடு ஆரம்பித்தார். அஸித்ராவின் தாயும் இந்த நாளை இதயப் படபடப்போடு ஆரம்பித்தாள். கிடுகால் வேயப்பட்ட கூரையும் படபடத்து காற்றில் ஆடியது. எல்லோரும் தொந்தி மாமியாரை எதிர்பார்த்திருந்தார்கள். முதற் சடங்கு முடிந்தது. முதற்சடங்கின் முடிவைச் சொல்லப் போகிறவள் தான் தொந்திமாமியார். முதற்சடங்கு என்னவென்றால் ‘மரத்தின் மீதேறி மணமகன் மணமகள் பார்க்கும் படலம்’ அஸித்ரா வழமையைப் போலவே ஆற்றங்கரைக்கு நீராடப் போனாள். ஆற்றங்கரையிலே வழமையைப் போலவே நாவல் மரம் நின்றது. ஆற்றங்கரைக்கு நீராடப்போகும் எல்லா நாட்களிலும் அவள் நாவற்பழங்கள் பொறுக்குவாள். அன்று மரக்கொப்புகளுக்கிடையில் சாட்சாத் மணமகன் பதுங்கியிருந்த விடயம் அவளுக்குத் தெரியாது. அதுதான் இன்று அதிகாலை நடந்தேறிய *மரத்தின் மீதேறி மணமகன் மணமகள் பார்க்கும் படலம்*.

காலை ஒன்பது மணியளவில் அஸித்ராவின் தாய் பூரித்த முகத்தோடு செய்தியைப் போட்டுடைத்ததும் வீடு கலகலப்பாக மாறிற்று. நாவல் மரத்திலிருந்து அஸித்ராவின் அழகைப் பார்த்த மணமகன் அஸித்ராவை மணமுடிக்கச் சம்மதித்து விட்டான் என்பதுதான் அந்தச்செய்தி. அஸித்ரா கொல்லைப் புறத்தில் நாவற்பழத்தை கோதிக் கொண்டிருந்தவள் சங்கதியை நம்பமுடியாமல் முற்றத்திற்கு ஓடோடிவந்து ‘எப்படியம்மா இது நடந்தது?’ என்று நாணத்தோடு கேட்டாள். அவளுடைய முகத்திலே மணமகள்களை ததும்பியது.

‘நீ அதிகாலையில் நீராடச் சென்றாயல்லவா?’
ஆமாம்’
அங்கு நாவற்பழங்கள் பொறுக்கினாயல்லவா?’
‘ஆமாம்’
தோழிகளுடன் கலகலத்துச் சிரித்தாயல்லவா?’
ஆமாம்’ ‘நீ நாவற்பழம் பொறுக்கிய நளினத்தையும், தோழிகளுடன் குலாவிய அழகையும் மணமகன் பார்த்துவிட்டான்’

‘நான் அவனைக் காணவில்லையே’
‘நீ அவனைக் கண்டிருக்கமாட்டாய், அவன் நாவல் மரஉச்சியிலே பதுங்கியிருந்தான்’
‘அவன் என்ன குரங்குவம்சமா?’
‘உனக்கு கணவனாக வாய்க்கப்போகும் ஆளைப்பற்றி நீ அப்படியெல்லாம் பேசக்கூடாது’

‘நான் பார்க்காமல், பேசாமல், பழகாமல் எப்படி ஓர் ஆண்மகனைத் திருமணம் செய்துகொள்வது?’ ‘நீ அதைப்பற்றியெல்லாம் கவலைப் படாதே, அவன் கம்பீரமான ஆணழகன். நம்முடைய வீட்டிற்கு அவன் வரஇருக்கிறான். நீ வேண்டியளவு அவனைப் பார்த்துக்கொள்ளலாம், பேசிக்கொள்ளலாம், எதைவேண்டுமானால் கேட்டுக்கொள்ளலாம்’ என்று பதிலளித்தாள் அஸித்ராவின் தாய்.

இரண்டாம் நாள் அஸித்ராவின் வீட்டு முற்றத்திலே முச்சக்கர வண்டி வந்து நிற்க பளிச்சிடும் வண்ணமயமான ஆடைகளின் களஞ்சியமாக தோற்றமளிக்கும் பருத்த பெண்மணி வாகனத்திலிருந்து இறங்கினாள். ஆபரணங்கள் கோலாட்டமாடி ஜொலித்தன, காதிலே, கையிலே, மூக்கிலே, கண் இமையிலே, தொப்புளிலே எல்லாம் நகைகள். நிறமோ கன்னங்கறுப்பு, உதடுகள் தடித்துத்தொங்கின, கால்கள் யானைக்கால்கள், தாம்தூம் என்ற நடை. ‘தும்புத்தடிக்கு பட்டுக் குஞ்சம் கட்டிய இந்தப் பெண்மணி யாரம்மா?’ என்று அஸித்ரா அப்பாவித்தனமாகக் கேட்க ‘இப்படி ஏடாகூடமாகப் பேசுவதை நிறுத்திக் கொள்ள மாட்டியா? அவள் வேறுயாருமல்ல, உன்மாமியார். உனக்கு கணவனாக வரப்போகிறவனின் தாயார்’ என்று கிசுகிசுத்தாள் அஸித்ராவின் தாய். ‘என் மாமியார் நகைக்கடையா வைத்திருக்கிறாள்?’ என்று அஸித்ரா மீண்டும் கேட்க ‘இப்படியெல்லாம் மாமியாரை கிண்டல் பண்ணக்கூடாது. அவளுடைய காதிலே விழுந்தால் திருமணம் முறிந்துவிடும். மாமியார்களின் சுபாவமே அப்படித்தான். அதிகமாக நகை அணிவார்கள், டாம்பீகமாக நடப்பார்கள். ஆனால் உள்ளமோ வெள்ளை’ என்றார் தாயார். ‘நீங்கள் அடிக்கடி சொல்லுவீர்களே, தொந்திமாமியார் இவள்தானா?’ என்று அஸித்ரா மீண்டும் கேட்க அஸித்ராவின் தாயார் அவளின் வாயை கைகளால் இறுக்கிப் பிடித்துக் கொண்டாள். தொந்திமாமியார் அருகிலே வரவும் அஸித்ராவின் தாய் எல்லாப் பற்களையும் வெளிக்காட்டி ‘வாருங்கள் வாருங்கள்’ என்று தொந்தி மாமியாரை வரவேற்க தொந்தி மாமியாரும் பந்தாவோடு வரவேற்பறைக்குள் நுழைந்து ஆடம்பரமான ஆசனமொன்றில் அமர்ந்து கொண்டாள்.

அஸித்ராவைப் பார்த்து புன்னகைத்த மாமியார் ‘மகளே, நீயா அஸித்ரா?’ என்று பௌயமாகக் கேட்டாள். கற்பனை செய்திருந்த

அளவுக்கு மாமியார் மோசமானவள் அல்லள், அம்மா சொன்ன மாதிரி வெள்ளையுள்ளம் என்று நினைத்துக் கொண்டாள் அஸித்ரா. 'ஆம், நான்தான் அஸித்ரா' என்று பதிலுக்குப் புன்னகைத்துக் கொண்டே பதிலளித்த அஸித்ரா 'அதுசரி நான் தான் அஸித்ரா என்று எப்படிக் கண்டு பிடித்தீர்கள்?' என்று ஆர்வத்தோடு கேட்டாள். 'என் மருமகளைப்பற்றி எனக்குத் தெரியாதா? இலட்சணமாக இருப்பாள், வதனம் சந்திரனைப் போலிருக்கும், கூந்தலில் நறுமணம் வீசும், நளினமாக நடந்து கொள்வாள். உனக்கு அதுவெல்லாம் இருக்கிறதுதானே! அதனைக் கொண்டு தான் கண்டு பிடித்தேன்' என்று அஸித்ராவை ஓரேயடியாகப் புகழ்ந்து தள்ளினாள் தொந்திமாமியார். அண்டை வீட்டுப் பெண்கள் மாமியாரைப் பற்றி எப்படியெல்லாம் தப்புக் கணக்கு போட்டார்கள்! தோழியர்கள் மாமியாரைப் பற்றி எப்படியெல்லாம் தப்புக்கணக்கு போட்டார்கள்!!. குளிக்குமிடத்தில் ஊரார் மாமியாரைப் பற்றி எப்படியெல்லாம் தப்புக்கணக்குப் போட்டார்கள்!!! அத்தனையும் தப்பு, தப்பு, தப்பு.

மாமியார் தான் கொண்டுவந்த அழுக்குமூட்டையை அஸித்ராவின் கையில் திணித்ததும் தாயார் அஸித்ராவை அறையின் மூலைக்கு அழைத்துக் கொண்டுபோய் 'அஸித்ரா, உனக்குரிய பரீட்சை ஆரம்பமாகிவிட்டது. இந்த அழுக்குத் துணிகளை நன்றாக சவர்க்காரம் போட்டு, தேய்த்து, கழுவிக் கொண்டுவா' என்று உத்தரவிட அஸித்ரா ஒன்றும் பேசாமல் கிணற்றடிக்குப் போய் துணி மூட்டையை அவிழ்த்து கிணற்றிலிருந்து தண்ணீரை வாளியால் அள்ளி ஒவ்வொரு ஆடையாகத் துவைக்க ஆரம்பித்தாள். மாமியார் கதிரையில் கால்மேல் கால்போட்டுக்கொண்டு அஸித்ராவுக்கு புள்ளிகள் போட்டுக் கொண்டிருந்தாள். கையிலே புள்ளிகள் போட குறிப்புப் புத்தகம், அத்தோடு பேனை. ஆடைகளைத் தண்ணீரில் நனைப்பது எப்படி? சவர்க்காரம் போடுவது எப்படி? நுரை இல்லாமல் ஆடைகளைக் கழுவுவது எப்படி? பிழிவது எப்படி? ஆடைகளை சரியான முறையில் வெயிலில் காயப்போடுவது எப்படி? என்று எல்லாப் படிமுறைகளுக்கும் புள்ளிகள் உண்டு. முதலாவது பரீட்சை முடிந்த கையோடு அடுத்த பரீட்சை ஆரம்பமானது. ஆடைகளை மினுக்குவது, மடிப்பது, அலுமாரிக்குள் நேர்த்தியான முறையில் அடுக்கி வைப்பது சம்பந்தமான பரீட்சை. அதுவும் முடிய இனி ஆரம்பமாகப் போவதுதான் மிகவும் முக்கியமான பரீட்சை அதாவது அஸித்ராவின் சமையல் செய்யும் ஆற்றலை எடைபோடும் பரீட்சை. சமையலறையைச் சுத்தமாக வைத்திருக்கிறாளா? தரையிலே தண்ணீர் சிந்தியிருக்கிறதா? மிளகாய்த்தூளையும், சீனியையும் பக்குவமாக எடுக்கத் தெரியுமா? என்று ஒவ்வொரு விஷயத்தையும் நுணுக்கமாகப் பார்த்து புள்ளிகள் வழங்கப்படும். அஸித்ராவின் உள்ளத்திலே இலேசாக எரிச்சல் தலைகாட்டினாலும் தாயாருக்காகப் பொறுத்துக் கொண்டாள். வீட்டைப் பெருக்குதல், உரலில் மாஇடித்தல், மிளகாய் அரைத்தல்,

பூக்கன்றுக்கு நீரூற்றுதல், ஸ்நான அறையைச் சுத்தம்செய்தல், தேநீர் தயாரித்தல் என்று சில்லறைப் பாட நெறிகளிலும் பரீட்சை நடத்தப்பட்டு புள்ளிகள் வழங்கப்பட்டன. கிரியைகள் சுறுசுறுப்பாக இப்படி நிகழ்ந்து கொண்டிருக்க அஸித்ராவின் தாயும் தந்தையும் நிலைகொள்ளாமல் தவித்துக் கொண்டிருந்தார்கள். அவர்களின் உள்ளத்திலே இரண்டு கவலைகள் இருந்தன. தொந்தி மாமியாரின் அருமை வாயிலிருந்து கெட்ட வார்த்தைகள் வந்துவிடக் கூடாதே என்ற அச்சம் ஒன்று. அஸித்ரா எதையாவது ஏடாகூடமாக செய்து கல்யாணத்தைக் குழப்பிவிடக் கூடாதே என்ற அச்சம் இரண்டாவது. அஸித்ரா குறித்து கவலைப்படுவதற்கு காரணம் அவள் வித்தியாசமான பெண். அவர்களுக்கு அவள் மட்டும் என்பதால் அவள் செல்லமாக வளர்ந்தாள். அவள் கண்கள் துறுதுறுப்பாக இருந்தன. அவள் பாடுகிற நேரம் பாடினாள், ஆற்றங்கரைகளில் ஆடினாள், காடு மேடுகளில் உல்லாசமாக சுற்றித் திரிந்தாள். சாதாரண பெண்கள் போல் மாங்காய் பறித்துச் சாப்பிட்டவள், விளையாடியவள், நளினமாக இருந்தவள் திருமண விஷயத்தில் வினோதமாக நடந்து கொண்டாள்; ஏடாகூடமாகப் பேசினாள். ஏற்கனவே மூன்று திருமணங்கள் ஒடிந்து போயிருந்தன. இது நான்காவது திருமணப் பேச்சு. இதுவும் குலைந்து போனால் ஊரார் பழிப்பார்கள். அஸித்ரா அடங்காப்பிடாரி என்று வசைபாட ஆரம்பித்தால் அதன்பின் அஸித்ரா கனவிலும் திருமணத்தை நினைத்துப் பார்க்கமுடியாது.

அஸித்ராவின் தகப்பனாரின் நிலைமையும் மோசமாக இருந்தது. அவருடைய மனசு பூராவும் அஸித்ராவைப் பற்றிய சஞ்சலம். அவர் ஏற்கனவே சிகிச்சை பூரணமாகி விட்ட காசநோயாளி. இருபத்தைந்து வருடங்களாக சிகரட்டை சுருள்சுருளாக ஊதித் தள்ளியதற்கு கிடைத்த பரிசு என்று கிராமத்தவர் பேசிக்கொண்டார்கள். அடிக்கொரு தடவை மூச்சிழுப்பு வந்து தலைகாட்டும் போதெல்லாம் மரணிக்கப் போகிறோம் என்று உள்மனம் சொல்லும். என்றாலும் அதைப்பற்றிய கவலையை விட அஸித்ராவைப் பற்றிய கவலைதான் அவர்மனதை அரித்துக் கொண்டிருந்தது.

தொந்திமாமியார் அஸித்ராவை விடாமல் துரத்திக் கொண்டிருந்தாள். வரவேற்பறையை அழகுபடுத்துவது எப்படி? விருந்தினரை உபசரிப்பது எப்படி? தளபாடங்களை ஒழுங்குபடுத்துவது எப்படி? மேசைச் சீலையை விரிப்பது எப்படி? ஜன்னலை மூடுவது எப்படி? தூசிதட்டுவது எப்படி? படுக்கையறைச் சுவரை அலங்காரமாக்குவது எப்படி? என்று நூற்றுக்கணக்கான வினாக்களைக் கேட்டு அஸித்ராவை திக்குமுக்காடச் செய்துவிட்டாள் மாமியார். இத்தோடு முடிந்ததென்றால் அதுவும் இல்லை. மாமியார் அஸித்ராவைக் கூப்பிட்டு 'மகள் அஸித்ரா, என் கூந்தலைக் கொஞ்சம் அலங்காரமாகப் பின்னிவிட

மாட்டாயா?' என்று கேட்டாள். வாரக்கணக்கில் எண்ணெய் போடாமல் பரட்டையாகிப் போயிருந்தது மாமியாரின் கூந்தல். கிழவிக்கு வேண்டுமாம் அலங்காரக் கோபுரம் என்று மனதுக்குள் கறுவியவளாக மாமியாரின் சிக்குகளைப் பிரித்து, எண்ணெய் தடவி, வாரி அஸித்ரா அழகாகப் பின்னிவிட இப்போது மாமியார் தேவதையாகக் காட்சியளித்தாள். மாமியார் போட்ட புள்ளிகள் கூடலாம், குறையலாம். ஆனால் யாரும் கேள்வி கேட்கமுடியாது, மீள்பார்வையோ மேன்முறையீடோ இல்லை. இறுதியாக தொந்திமாமியார் புள்ளி போடும் புத்தகத்தை மூட தொந்தி மாமியாரின் வாயிலிருந்து வரக்கூடிய தீர்ப்புக்காக எல்லோரும் வாயைப் பிளந்தவர்களாக காத்திருந்தார்கள். ஊசி விழுந்தாலும் கேட்கும் அவ்வளவு அமைதி. தொந்தி மாமியார் தன் அமுதவாயைத் திறந்து 'எனக்கு அஸித்ராவை பிடித்துவிட்டது. நாளை மாப்பிள்ளையோடு வருகிறேன்' என்று சொன்னதும் மகிழ்ச்சிப் பெருக்கால் வீடு கலகலப்பாகிற்று. எங்கும் ஆரவாரம், நடனமும், பாட்டும். அஸித்ராவின் தாய் சந்தோஷமடைந்தாள்.

அடுத்தநாள் சொன்னபடி தொந்திமாமியார் மாப்பிள்ளை மிடுக்கோடு காணப்பட்ட மாப்பிள்ளையோடு வந்திறங்கினாள். எண்ணெய் பூசிவாரி இருபக்கமும் வகிடு இழுக்கப்பட்ட கேசம், பளிச்சென்று பேஷியல் செய்யப்பட்ட முகம், கழுத்திலே நீலநிற கழுத்துப் பட்டி, கண்ணைக் கூச வைக்கும் மினுக்கப்பட்ட சப்பாத்து, எல்லாவற்றுக்கும் மேலாக சுற்றிப் புடைசூழ பரிவாரங்கள். சாப்பிடவே தயாராக வந்தவர்கள்போல் அவர்கள் வாயை ஆவெனப் பிளந்தபடி காணப்பட்டார்கள். மாப்பிள்ளையின் சீடர்களுக்கென்று பதினெட்டு வகையான தின்பண்டங்கள் இருந்தன. நெய்பூந்தி, pastries, வாழைப்பழம், Cookies, நேந்திரம்பழம், தேன்குழல், அப்பிள் பழம், செர்ரி, பாதாம்பருப்பு, பலகாரம், வட்டிலப்பம், லட்டு, பாயாசம், பழப்பாகு, கஜூப்பாகு, முறுக்கு, இத்தியாதி, இத்தியாதி. கேட்கவா வேண்டும்? போஷணபாகம் களைகட்டியது. மாப்பிள்ளைக்கு நல்ல உபசரிப்பு. அவருக்கு வாயெல்லாம் சிரிப்பு. பரிவாரங்களின் வாய்கள் தினுசாகவும் ஒரு ரிதத்தோடும் அசைந்தன. தொந்திமாமியார் அடிக்கடி சிரித்தார். பதிலுக்கு மணமகள் கட்சியாரும் அர்த்தமின்றி சிரித்தார்கள். மாப்பிள்ளையின் தாயார் கண்ஜாடை காட்டியதும் மலராசனத்தில் அமர்ந்தவாறு மாப்பிள்ளை கேள்விகளைக் கேட்க ஆரம்பித்தார். அஸித்ராவோ நின்று கொண்டிருந்தாள்.

'பச்சை நிறமானது எது?'
'மரகதம்'
'நீல நிறமானது எது?'
'கரப்பானின் இரத்தம்'
'சிவப்பு நிறமானது எது?'
'செங்கம்பளம்'
'மஞ்சல் நிறமானது எது?'

'முட்டையின் மஞ்சட்கரு'
'வெள்ளை நிறமானது எது?'
'வெண்சங்கு' என்று அஸித்ரா மாப்பிள்ளையின் ஒவ்வொரு கேள்விக்கும் பதிலளித்துக் கொண்டே போக மாப்பிள்ளையின் முகம் சுருண்டு கொண்டே போனது. மாப்பிள்ளை அவசர அவசரமாக தொந்திமாமியாரோடு ஏதோ கசமுசத்தார். தொந்திமாமியார் அஸித்ராவின் தாயாரோடு ஏதோ கசமுசத்தார். தாயார் அஸித்ராவின் தந்தையாரோடு ஏதோ கசமுசத்தார். அஸித்ராவின் முகத்தைப் பார்த்து முறைத்தவாறே 'அஸித்ரா, உனக்கு கிடைத்திருக்கும் மாமியாரைப் பார்த்தாயா? வெள்ளை உள்ளம் கொண்ட அன்பான மாமியார். மாப்பிள்ளையைப் பார்த்தாயா? எத்தனை அழகு, எத்தனை கம்பீரம். கோடி கொடுத்தாலும் உனக்கு கிடைக்காது. ஏன் நீ கேள்விகளுக்கெல்லாம் தாறுமாறாகப் பதிலளித்து வாழ்கையை கெடுத்துக் கொள்ளப் பார்க்கிறாய்?' என்று கேட்டார் தந்தை.
'தந்தையே, நான் தாறுமாறாக எதுவும் பேசவில்லையே'
'பேசாதே வாய்மூடு' என்று தந்தை அதட்ட, மாப்பிள்ளை ஆசனத்தை விட்டு எழுந்து 'நான் பதிலளிக்கிறேன் மாமா' என்றார் கடுகடுப்பாக.
'சொல்லுங்கள் மருமகன்'
'பச்சை நிறமானது பச்சைக்கிளி. அஸித்ரா மரகதம் என்கிறாள். நீல நிறமானது வானம். அஸித்ரா ஏதோ கரப்பான் என்கிறாள். சிவப்பு நிறமானது இரத்தம். அவள் செங்கம்பளம் என்கிறாள். மஞ்சள் நிறமானது மஞ்சல். அவள் முட்டையைச் சொல்கிறாள். வெள்ளை நிறமானது பால். அஸித்ராவோ ஏதோ சங்கு என்கிறாள். ஒரு கேள்விக்குக் கூட சரியான பதில் இல்லை. இதன் அர்த்தம் என்ன? நான் வேண்டுமா? வேண்டாதா?' என்று வெஞ்சினத்துடன் முகம் சிவக்கக் கேட்டார் மாப்பிள்ளை.

அஸித்ராவின் தகப்பனாரோ கெஞ்சும் தொனியில் 'அவளை மன்னித்து விடுங்கள் மாப்பிள்ளை ஐயா. அவள் குழந்தை, அவளுக்கு அறிவும் போதாது, உங்களைப் போல் ஞானமும் இல்லை. அதுதான் முட்டாள்தனமாகப் பதிலளிக்கிறாள்' என்றார். தகப்பனாரின் பேச்சால் சமாதானமடைந்த மாப்பிள்ளை ஆசனத்தில் அமர்ந்து ஹி...ஹி.. என்று இளித்தவாறே மற்றைய கேள்விகளைக் கேட்க ஆரம்பித்தார்.
'உனக்கு பாடத் தெரியுமா?'
'தெரியாதே'
'பரவாயில்லை, பரவாயில்லை' என்று கர்ணகடூரமாகச் சிரித்தார் மாப்பிள்ளை. அஸித்ராவின் தாய் மறித்து 'இல்லையில்லை. அஸித்ராவால் நன்றாகப் பாடமுடியும்' என்றாள். 'அம்மா, எனக்கா? பாட்டா?' எனக்கு மருந்துக்கும் பாட்டு வராதே?' என்று சிணுங்கினாள் அஸித்ரா. 'எதையும் தெரியாது என்று சொல்லக்கூடாது. கோபித்துக் கொள்வார்கள். தெரிந்தவரை பாடு' என்று கிசுகிசுத்தாள் தாயார்.

'கொஞ்சங்கூட பாடத்தெரியாதே'
'அரிச்சுவடி எழுத்துக்கள் உனக்குத் தெரியும்தானே'
'ஆமாம்'
'அந்த எழுத்துக்களை கோர்த்து சொல்லிக் கொண்டே போனால் பாட்டாக ஆகிவிடும்' என்றாள் தாய். தாயின் கட்டளைப்படியே அரிச்சுவடியின் முதலெழுத்திலிருந்தாரம்பித்து ஒவ்வொரு எழுத்தாகக் கோர்வை செய்து பாடி முடித்தாள் அஸித்ரா.

மாப்பிள்ளை அசடுவழிந்து கொண்டே 'பிரமாதம்.. பிரமாதம்' என்று பாராட்டினார். அனேகமாக எல்லாத் தடைக்கற்களையும் தாண்டியாகிற்று. இப்போது தொந்திமாமியார் எல்லாப் பற்களும் வெளித்தெரிய சிரிக்க பரிவாரங்களும் சிரித்தார்கள். அதாவது இறுதிக் கட்டம். மாப்பிள்ளை எல்லோரையும் கம்பீரமாகப் பார்த்து தொண்டையைச் சரிசெய்து கொண்டே ஆரம்பித்தார்.
'எனக்கு மோட்டார் பைசிக்கிள் வாங்கித் தரவேண்டும். பறக்கும் வாகனம் 225cc'
'நீங்கள் கடைக்குப் போய் வாங்கிக் கொள்ளலாமே' என்று அப்பாவித்தனமாகக் கேட்டாள் அஸித்ரா. மாப்பிள்ளையின் முகம், பரிவாரங்களின் முகங்களும் கோணிப் போயின. 'அஸித்ரா, வாயை மூடிப் பேசாமலிரு. நாங்கள் மாப்பிள்ளைக்கு மோட்டார் சைக்கிள் வாங்கிக் கொடுப்பதுதான் சரியான முறை' என்று அதட்டினார் அஸித்ராவின் தந்தை.
சம்பாஷனை மீண்டும் ஆரம்பமானது.

*மாப்பிள்ளை*: அஸித்ராவுக்கு வங்கிக் கணக்கு இருக்கிறதுதானே.
*தந்தை*: ஆம், தொடர்ந்து பணம் போட்டுக் கொண்டு வருகிறோம்.
*மாப்பிள்ளை*: நிலையான வைப்புக் கணக்குத் தானே வைத்திருக்கிறீர்கள்.
*தந்தை*: ஆமாம்.
*மாப்பிள்ளை*: அஸித்ராவின் பெயரிலுள்ள நிலையான வைப்புத்தொகை எல்லாவற்றையும் என் பெயரில் எழுதி வைத்து விடவேண்டும்.
*தந்தை*: அதற்கென்ன? செய்து விடலாம், சின்னவேலை.
*அஸித்ரா*: வங்கிக்கணக்கு பதினைந்து வருடங்களாக என் பெயரில் இருக்கிறது. எதற்காக அதனை உங்கள் பெயருக்கு மாற்றவேண்டும்?.
*தந்தை*: மாப்பிள்ளை அவள் பேச்சை பெரிதாக எடுக்காதீர்கள், அவள் சின்னக் குழந்தை. *மாப்பிள்ளை*: உங்களுக்கு மூன்றேக்கரில் தென்னந் தோப்பு ஒன்று இருக்கிறதே, அதனையும் என் பெயரில் எழுதிவிடவேண்டும்.
*தந்தை*: ஆகட்டும். ஆகட்டும், ஆகட்டும் என்று அஸித்ராவின் தாயும் தந்தையும் தலையாட்டி முடித்ததும் மாப்பிள்ளையும் தொந்திமாமியாரும், பரிவாரங்களும் வீட்டைச் சுற்றிப் பார்க்க கிளம்பினார்கள்.

பரிவாரங்கள் வீட்டின் வெளிப்புற அழகை வியந்து வியந்து புகழ்ந்தார்கள்; சுற்றியுள்ள பூந்தோட்டத்தில் மெய்ம்மறந்து போனார்கள்; ஜன்னல் திரைச் சீலையை ஆஹா, ஓஹோ என்றார்கள்; சமையலறை அற்புதமே அற்புதம் என்றார்கள்; சுவர்ப்படங்கள், தளபாடங்கள், கலைப்பொருட்கள் பிரமாதம் பிரமாதம் என்று வாயார வர்ணித்துக் கொண்டே போனார்கள். அஸித்ரா உச்சி குளிர்ந்தாள். வீட்டின் கலாநுட்பத்தையும், நிர்மாணச் சிறப்புக்களையும் இவர்கள் ரசித்துப் புகழ்ந்து தள்ளுகிறார்கள் என்று அவள் நினைத்தாள். ஏனென்றால் இத்தனை மேன்மைக்கும் அவளும் காரணமாக அமைந்தாள். வரவேற்பறையிலே தொங்கும் 'காற்றில் சுழலும் புறா' என்ற ஓவியமாகமட்டும், கருங்கற்களைக் கோர்த்து முற்றத்திலே காணப்படும் 'ஒக்டோபசு' கலைப் படைப்பாகட்டும், ஒரு சதுர அடிக்குள் நூறு ரோஜாச் செடிகளை செறித்து உருவாக்கப்பட்ட 'ரோஜா ஜாலம்' என்ற மலர்ப் பாத்தியாகட்டும் எல்லாம் அஸித்ராவின் கைவண்ணமே. ஆசையுடன் கற்பனையும் குழையும்போது உன்னத வடிவங்களாக அவை மிளர்ந்தன. அவள் அவர்களை நன்றியறிதலுடன் நோக்கினாள். எவ்வளவு பூரிப்புடன் என்னைப் பாராட்டுகிறார்கள்!

வாய் நிறைய வெற்றிலையைக் குதப்பிக் கொண்டிருந்த தொந்திமாமியார் வாயைத் திறந்து 'அஸித்ரா நல்ல பெண், அவள் நற்குணங்கள் நிறைந்த நங்கை, அவளுக்கு வாய்க்கப்போகும் கணவனும் நற்குணவான். அவர்கள் இருவரும் சந்தோஷமாக ஜீவியம் நடத்தப்போகிறார்கள். இந்தவீடு மிகவும் அதிர்ஷ்டமான வீடு, மரணபரியந்தம் வரை தம்பதிகள் இவ்வீட்டில் வாழக்கடவது' என்று சொன்னதும், பெண்வீட்டார் 'ஆகட்டும், ஆகட்டும்' என்றார்கள். 'ஆகவே இந்த வீட்டை மாப்பிள்ளையின் பெயருக்கே உரிமம் செய்துவிடுங்கள்' என்று முடித்தாள் தொந்திமாமியார். அவ்வளவுதான் நட்சத்திரப் பூந்தொட்டிகளில் தேவதைகளோடு சஞ்சரித்துக் கொண்டிருந்த அஸித்ரா சுழன்று சுழன்று கீழே விழஆரம்பித்தாள். மண்டை உச்சியில் உன்மத்தம் பீடித்தவளாக 'நோயாளியான என் தந்தை உழைப்பை ஊட்டி வளர்த்த வீடு, பத்துவருட உழைப்பு. இரத்தத்தை விற்று ஒவ்வொரு கற்களாக கட்டிய வீடு. நான் இதற்கு ஒருபோதும் ஒத்துக்கொள்ள மாட்டேன்.' என்று உச்சஸ்தாயியில் தாண்டவமாடினாள் அவள், தவிரவும் அவள் கற்களை வீசியெறிய மாப்பிள்ளை வீட்டார்கள் தப்பினோம் பிழைத்தோம் என்று அவ்விடத்தை விட்டு ஓட்டம் பிடித்தார்கள். அஸித்ராவின் தகப்பன் எதை எதிர்பார்த்தாரோ அது ஆரம்பித்தது. கிராமத்தின் ஒவ்வொரு மூலையிலுள்ள குடும்பஸ்தர்களும், அவர்களுடைய மனைவிமாரும் அஸித்ராவை மிகக்கேவலமாக வசைபாடினார்கள். அஸித்ரா முற்றிய கருங்குரங்கு அவளுக்கு இனிக் கல்யாணமென்பதே கிடையாது என்ற

வாக்குமூலமும் இறுதியாக வந்தது. அஸித்ராவின் தாய் குசினி மூலையொன்றிலே முடங்கிப்போனாள். இப்படியிருக்கும்போது தான் வனாந்தரக்குகையிலே குடியிருக்கும் முனிவர்பற்றிய செய்தியொன்று வந்தது. அவருடைய தவவலிமையைப் பற்றி எல்லோரும் பேசிக்கொண்டார்கள். அவருடைய கீர்த்தி எங்குமே வியாபித்து பரவியிருந்தது. கடைசி மார்க்கமாக அஸித்ராவையும் அழைத்துக்கொண்டு முனிவரைச் சந்திக்கப் போனார்கள் அஸித்ராவின் பெற்றோர். முனிவர் ஒரு கற்பாறைக்கருகில் ரம்மியமான சூழலில் அமர்ந்திருந்தார். ஓமர்கைய்யாமின் ரோஜாப்பூக்கள் அங்கே நிறையப் பூத்திருந்தன. சுற்றிவர பஞ்சவர்ணக் கிளிகள் புகழ்பாடின, புல்புல்பறவைகள் சங்கீதம் இசைத்தன, மான்கள் அணிவகுத்து அலங்காரப்பவனி போயின, முயல்கள் பலேஆடின, தென்றலிலே சுகந்தமனம் பரவி நாசியை வசீகரித்தது. நீண்ட தாடி வளர்த்த, நரைத்த, சுருக்கம் புரையோடிய, தளர்ந்த மேனியுள்ள, வயதான ஒரு கிழவரைத்தான் முனிவராக இருக்கக்கூடுமென்று அவர்கள் எதிர்பார்த்து வந்தார்கள். ஆனால் அங்கே இருந்தவனோ அழகான வாலிபன். முனிவருக்கு வயது இருபத்தைந்து இருக்கும். அஸித்ரா, தாய், தந்தை மூவரும் முனிவருக்கு முன்னால் போய் நின்றதும் நிஷ்டையிலிருந்த முனிவர் கண்களைத் திறந்தார்.

முனிவர்களுக்கேயுரித்தான தீட்சண்யமான பார்வை, கம்பீரம், முகப்பொலிவு, முனிவர்களால் சுட்டெரிக்கவும் முடியுமென்கிறார்களே, அப்படியொரு தோற்றம். ‘நீங்களெல்லாம் அமரலாமே’ என்றார் முனிவர். தரையில் விரிக்கப்பட்டிருந்த கம்பளத்தின் மேலே மூவரும் பௌயமாக அமர்ந்து கொண்டார்கள். ‘ஸ்திரீக்கு என்னவாம் பிரச்சினை?’ என்று கேட்டார் முனிவர். அஸித்ராவின் தகப்பனார் அஸித்ரா பிறந்தநாளிலிருந்து ஆரமபித்து மற்றப் பெண்களைப் போலல்லாது அவள் தாறுமாறாக நடந்து கொள்வதையும், அதனால் பேசப்பட்ட திருமணங்கள் முறிந்துபோன விஷயங்களையும் முனிவருக்கு விலாவாரியாக எடுத்துச் சொல்ல, அஸித்ரா ஒன்றும் பேசாமல் அனைத்தையும் கேட்டுக் கொண்டிருந்தாள். ‘அஸித்ராவோடு நான் தனியாகப் பேச வேண்டும்’ என்றார் முனிவர். அஸித்ராவின் தந்தை சரியென்று தலையாட்டினார். ‘குழந்தாய், ஏன் இசகுபிசகாக நடந்து கொள்கிறாய்?’ என்று கனிவுடன் கேட்டார் முனிவர். ‘எனக்கு இருபத்துமூன்று வயது. உங்களுக்கு எத்தனை வயது முனிவரே?’ என்று கேட்டாள் அஸித்ரா. ‘இருபத்தி ஏழு’ ‘அப்படியென்றால் என்னுடைய பெயரைச் சொல்லியே அழைக்கலாமே. நான் உங்கள்குழந்தை இல்லையே’ என்ற அவளுடைய பதிலைக் கேட்டதும் முனிவர் கடகடவென்று சிரித்தார்.

‘சரி உங்களுடைய பெயர் என்ன?’

'அஸித்ரா'
'சரி, இனிமேல் அஸித்ரா என்றே அழைக்கிறேன். உங்கள் பேச்சு நளினமாகத்தானிருக்கிறது. அப்படியிருக்கும் போது ஏன் தாறுமாறாக நடந்து கொள்கிறீர்கள்?'
'நான் எப்படி தோற்றமளிக்கிறேன்?'
'வசீகரமான அழகியாக இருக்கிறீர்கள்'
'முனிவரே, உள்ளத்தைத் திறந்து இப்படிப் பாராட்டும் உங்களுக்கு நான் நன்றி சொல்கிறேன்.என்னைப் பெண் பார்க்க வந்த யாருமே என்னுடைய அழகைப் பற்றி ஒரு வார்த்தையேனும் புகழ்ந்து பேசியது கிடையாது'
'கவலைப்பட வேண்டிய விஷயம்தான்'
'முனிவரே, திருமணம் என்பதன் அர்த்தம் என்ன?'
'இரண்டு உள்ளங்களின் இணைப்பைத் தான் திருமணம் என்கிறோம்'
'ஆனால் வந்தவர்கள் என் உள்ளத்தைப் பற்றி கிஞ்சித்தேனும் கவலைப்பட்டது கிடையாது. குறைந்த பட்சம் என்னை விரும்புகிறீர்களா என்று கூடக் கேட்டது கிடையாது'
'கேட்பதற்கே ஆச்சரியமாகத்தான் இருக்கிறது'
'வந்த மணமக்கள் எல்லோரும் கேள்விக் கொத்தோடு வந்து என்னை என்னவெல்லாமோ கேட்டு துளைத்து எடுத்தார்கள். எதுவுமே வாழ்க்கைக்கு சம்பந்தமில்லாத கேள்விகள். நான் பண்டமாகி நின்றேன், அவர்கள் என்னை வாங்கத் துடித்தார்கள். நான் பெண் கேள்வி கேட்க முடியாது. கேட்டால் அடங்காப் பிடாரி என்றும் ஏடாகூடமாகப் பேசுகிறேன் என்றும் என்மீது பழியைப் போட்டார்கள்'
'அடப்பாவமே, நீங்கள் சொல்வதெல்லாம் வாஸ்தவம்தான்' என்றார் முனிவர்.

'பெண்பார்க்க வந்தவர்கள் என் பொருட்களையும் என் சொத்துக்களையும் காதலித்தார்கள், என் வீட்டைக் காதலித்தார்கள்'
'நீங்கள் சொல்வதெல்லாம் புதுமையான வாய்ப்பாடுகள். ஏன் அப்படிச் சொல்கிறீர்கள் அஸித்ரா?' அஸித்ரா தந்தையை அருகில் வரும்படி அழைக்க அவர் நொண்டி நொண்டி வந்தார். 'முனிவரே, என் தந்தையைப் பாரத்தீர்களா? நொண்டி வருகிறார். வேலை செய்யும் போது சறுக்கி விழுந்து கால்களை உடைத்துக் கொண்டார். இந்த நொண்டிக் காலை வைத்துக் கொண்டு கொஞ்சம் கொஞ்சமாக சம்பாதித்து கட்டிய வீட்டை எழுதித் தரும்படி நாக்கூசாமல் கேட்டால் நான் எப்படிச் சம்மதிப்பேன்?' என்று கேட்டு நிறுத்தினாள் அஸித்ரா.
'நீங்கள் சொல்வது வாஸ்தவம் தான்'
'நீங்கள் முனிவர். நாலும் உணர்ந்தவர். உங்களுக்குத் தெரிகிறது. மற்றவர்கள் புரியாமல் நடந்து கொள்கிறார்களே?' என்று அங்கலாய்த்தாள் அஸித்ரா. முனிவர் தலையை ஆட்டிக் கொண்டே அஸித்ராவின் தந்தையைப் பார்த்தார். 'உங்கள் மகள்

அஸித்ராவைபற்றி நீங்கள் கவலைப்பட வேண்டிய அவசியமே இல்லை. அவள் நல்ல பெண், குணவதி. திருமணம் என்பதன் உண்மையான அர்த்தத்தை அவள் நன்றாகவே அறிந்து வைத்திருக்கிறாள். அவளுடைய உள்ளத்தைப் புரிந்து கொண்ட உண்மையான ஆண் மகனைத் தேடி அவளுக்குத் திருமணம் செய்து வையுங்கள். அவள் எவ்விதக் குறையுமின்றி சந்தேஷமாக வாழ்வாள்' என்றுமுடித்தார் முனிவர்.

'நீங்கள் சொல்வது உண்மையாக இருக்கலாம் முனிவரே. ஆனால் அப்படிப்படட ஆண்மகனை எங்கே நான் தேடிக் கண்டுபிடிப்பது?' என்று அங்கலாய்த்தார் அஸித்ராவின் தந்தை. 'அப்படிப்பட்ட ஆண்மகனை நான் ஏற்கனவே கண்டுபிடித்து விட்டேன்' என்று குறுக்கிட்டாள் அஸித்ரா. 'அந்த அளவுக்கு நீ கெட்டுப் போய் விட்டாயா?' என்று அஸிதராவை அடிப்பதற்கு அஸித்ராவின் தந்தை கையை ஓங்க முனிவர் அவரின் கையைப் பிடித்து தடுத்து நிறுத்தி 'அவசரப்படாதீர்கள், அஸித்ரா புத்திசாலிப் பெண். அவள் பிழையான முடிவை எடுக்க மாட்டாள். அந்த ஆண்மகன் யாரென்று அவளிடமே கேட்டுப் பார்ப்போம்' என்று முனிவர் சொன்னதும் அஸித்ராவின் தந்தை சமாதானமடைந்தார்.

'அஸித்ரா கவலைப்பட வேண்டாம். நீங்கள் விரும்பும் ஆண்மகன் யாரென்று தைரியமாகச் சொல்லுங்கள். நானே முன்னின்று அந்தத் திருமணத்தை நடத்தி வைக்கிறேன்' என்று அஸித்ராவைப் பார்த்து முனிவர் கூற அஸித்ரா நாணத்துடன் 'அது நீங்கள் தான்' என்றாள். இந்த வார்த்தைகளைக் கேட்டதும் விண்கல் மோதிய முயற்குட்டிபோல் அதிர்ச்சியில் உறைந்து போன முனிவர் சுதாகரித்தவராக 'என்ன நானா? அஸித்ரா, விளையாடுகிறீர்களா? நான் பிரமச்சாரி. உலக சாகரங்களில் மூழ்கி நம்முடைய தவ வாழ்க்கையைக் கெடுத்துக் கொள்ள நாம் ஒருபோதும் சம்மதியோம்' என்று மறுக்கும் குரலில் அடித்துக் கூற அஸித்ரா ஓவென்று அழ ஆரம்பித்தாள். முனிவரை ஓதுக்குப்புறமாக அழைத்துக்சென்ற அஸித்ராவின் தந்தை 'முனிவரே, சொல்கிறேனென்று கோபிக்க வேண்டாம். அஸித்ராவை எத்தனையோ பேர் பெண் பார்க்க வந்தார்கள். அவர்களைக் கண்ட மாத்திரத்திலேயே வேண்டாமென்று சொல்லி விடுவாள் அஸித்ரா. வாழ்க்கையில் அவள் வாயார விரும்பிய ஒரே ஆண்மகன் நீங்கள்தான். அதுமட்டுமல்ல ஆண் மகனுக்கு முன்னால் நாணத்துடன் நின்றதை இப்போது தான் நான் முதல் முறையாகப் பார்க்கிறேன். நீங்கள் மறுத்ததும் அழுகிறாளே, எத்துணை பெரிய அதிசயம் இது. தயவுசெய்து இந்த சம்பந்தத்தை நீங்கள் மறுக்கவே கூடாது' என்று அழாக்குறையாகக் கெஞ்சினார்.

முனிவர் இப்போது வாயைத் திறந்தார். ‘பெரியவரே, நீங்கள் எண்ணுவதைப் போல் நானில்லை. நான் பெரிய கோடீஸ்வரன். பெண்ணொருத்தி மூலமாக ஏற்பட்ட சோதனை காரணமாகத்தான் இந்தப் பற்றற்ற வாழ்க்கைக்கு வந்தேன். கடவுள் சித்தத்தால் மிகத் தவவலிமை பெற்ற ஒருவராக நான் இருக்கிறேன். மீண்டும் உலக வாழ்க்கையை கற்பனை பண்ணிக்கூடப் பார்க்க முடியாது’ என்றார் முனிவர். அஸித்ராவின் தகப்பனாரேர் முனிவரை வளைப்பதற்காக தன்னிடமுள்ள அத்தனை அஸ்திரங்களையும் பாவிக்க அவர் கடைசியாக எறிந்த கணைகளிலொன்று எப்படியோ முனிவரின் எஃகு உள்ளத்தை தாக்கி இளக்க உள்ளம் நெகிழ்ந்து நெளிய சரியென்றார் முனிவர். கிராம வழக்கப்படி மணமகன் அராபியக் குதிரையில் வரவேண்டும் என்பதால் முனிவரும் குதிரை மீதேறிவந்தார். மணமகன் வந்து சேரும்வரை அஸித்ராவுக்கு இருப்புக் கொள்ளவில்லை, தவியாய் தவித்தாள். மணமகன் குதிரையை விட்டிறங்கியதும் அரிவையர் குரவையொலி எழுப்பி மகிழ்ச்சியை வெளிப்படுத்தினார்கள். இருவரும் மாலை மாற்றிக் கொள்ள திருமணம் இனிதே நடந்தேறியது. ‘நான் உங்கள் மீது அன்பு செலுத்துகிறேன்’ என்றாள் அஸித்ரா. முனிவர் ‘நானும்தான்’ என்றதும் அவர்களுடைய வாழ்க்கை ஆரம்பமானது.

அஸித்ரா ஆரம்பித்தாள். ‘அன்புக் கணவரே, கோபிக்கக் கூடாது. கேள்வியொன்று கேட்கட்டுமா?’ ‘பீடிகை பலமாகத்தானிருக்கிறது. பரவாயில்லை கேளுங்கள் ’

‘நீங்கள் எவ்வளவு காலமாகத் தவம் செய்துவருகிறீர்கள்? ’

‘சுமார் பத்துவருடங்கள் இருக்கும்’

‘எதற்காகத் தவம் செய்ய வேண்டும்?’

‘தவம் பலித்துவிட்டால் எனக்கு பூரண தவ வலிமை வந்துவிடும்’

‘தவவலிமை பெற்றுவிட்டால் கிடைக்கக் கூடிய பிரயோசனம் என்ன?’

‘பேதையே, ஒன்றுமறியாத சிறு குழந்தையாய் இருக்கிறாயே. விதம் விதமாக உணவுப் பண்டங்கள் கண்முன்னே வந்து நிற்கும், ஆடம்பரமான அழகாக ஆடையணிகளைப் பெறலாம், வெயிலில் நடக்கும்போது நம்முடைய சிரசிற்கு நேரே நிழற்குடை தோன்றும். இன்னும் ஐந்து வருடங்கள் பொறுத்துக் கொள். நாம் ராஜாராணி மாதிரி வாழலாம்’ என்றார் முனிவர். அடுத்த நாட்காலை முனிவர் படுக்கையை விட்டு எழுந்த போது, சமையலின் மணம் நாசியை ஊடுருவிச் சென்றது. அஸித்ரா அழகாக ஆடையணிந்து ராணியைப்போல் எழிலாகத் தோற்றமளித்தாள். மேசையிலே விதம் விதமாக தின்பண்டங்கள் வைக்கப் பட்டிருந்தன. அஸித்ரா முனிவரை அமர வைத்து சாப்பாடு பரிமாறினாள். ‘கைம்மணம் என்று கேள்விப் பட்டிருக்கிறீர்களா? நான் அதிகாலையில் எழுந்து உங்களுக்காகச் சமைத்தேன். நன்றாகச் சாப்பிடுங்கள், வயிறாரச் சாப்பிடுங்கள்’ என்றாள் அஸித்ரா. ஆகாரம் மிகவும் உருசியாக இருக்கவே வயிறு

நிரம்பும் வரை சாப்பிட்டு முடித்தார் முனிவர். அவர் காலையாகாரத்தை முடித்த கையோடு 'தயாராகுங்கள், நாங்கள் வெளியே பயணமொன்று போகப்போகிறோம் ' என்றாள் அஸித்ரா. அவள் கையில் குடையொன்றை எடுத்துக் கொண்டாள். 'எதற்காக குடை? ' என்று கேட்டார் முனிவர். அஸித்ரா கலகலவென்று சிரித்தாள். 'நான் ராணியாவதற்கு ஐந்து வருடங்கள் காத்திருக்க முடியாது. சுட்டெரிக்கும் வெயிலில் காய்ந்து, கிழங்குகளையும், புற்களையும் உண்டு, தவம் செய்து ஐந்து வருடங்கள் கழித்து என்னை நீங்கள் ராணியாக்கும் போது நான் கிழவியாகி விடுவேன். தவம் தேவையில்லை. இதோ உருசியான உணவுப் பண்டங்களைச் சமைத்து விட்டேன். அழகான ஆடைகளையும் அணிந்திருக்கிறேன். வெயிலுக்குப் பிடிக்க குடையும் இருக்கிறது. இனி தவம் எதற்கு?' என்று கேட்டாள் அஸித்ரா. முனிவரின் முகம் தொட்டாற் சுருங்கிபோல் சட்டென்று ஒடுங்கிற்று.

அன்றிரவே அஸித்ராவின் தந்தையிடம் முறையிட்டார் முனிவர். 'உங்கள் மகளை எவ்வளவு சந்தோஷமாக வைக்க முடியுமோ அவ்வளவு சந்தோஷமாக வைத்திருக்கத் தான் நான் முயற்சி செய்கிறேன். அவளோ என்னுடைய தவவலிமையைக் கிண்டல் செய்யக் கூடிய அளவுக்கு வந்துவிட்டாள். அவளுடைய வாய் கொஞ்சம் நீளம்' என்றார் முனிவர். தந்தை கொஞ்சநேரம் யோசித்தார். 'நான் சொன்னேன் அல்லவா? அவளுடைய வாய் நீளம்தான். கேட்கிறெனென்று என்னைத் தவறாக நினைத்து விடாதீர்கள். உங்களுடைய தவவலிமையைப் பயன்படுத்தி அவளை ஊமையாக்கி விட முடியாதா?' என்று கேட்டார் தந்தை. 'அந்தளவுக்கு என்னுடைய தவவலிமை இன்னும் வளரவில்லையே' என்று ஆற்றாமையோடு முனிவர் சொல்ல 'கவலைப்படாதீர்கள். இன்னும் தவம் செய்துகொண்டே இருங்கள். அந்த நல்லநாள் நிச்சயம் வரும்' என்று நம்பிக்கையோடு கூறினார் அஸித்ராவின் தந்தை.

அன்றைய தினத்திலிருந்து காட்டுக்குச் சென்று தீவிரமாக தவம் செய்ய ஆரம்பித்தார் முனிவர். அதற்காக முனிவர் அஸித்ராவை துக்கத்துடன் இருக்க ஒருபோதும் அனுமதிக்கவில்லை. அவள் மீது அளவற்ற அன்பு கொண்டிருந்த முனிவர். நகரத்திற்குப் போய் விதம்விதமான திண் பண்டங்களை அவளுக்கென்று வாங்கி வந்தார், அலங்காரப் பட்டாடைகளால் அவளை அசர வைத்தார், நீ அலங்காரப் பதுமையாக உட்கார்ந்து கொள், வேறெதுவும் நீ செய்ய வேண்டியதில்லை என்பதுபோல் முனிவரின் செய்கைகள் அமைந்தன. தேனிலவுக் காலம் முடிந்ததும் அஸித்ரா மீண்டும் பூந்தோட்டம் செய்ய ஆரம்பித்தாள். தினசரி காலையிலே பாத்தி மேடைகள் தயார் செய்து பதியங்கள் போட்டு நிறைய பூச்செடிகளை உண்டாக்கினாள். பூச்செடிகள் ஓரளவு வளர்ந்ததும் வீட்டுவளவு முழுவதும் அவைகளை நட்டாள். பூச்செடிகளில் மலர்கள் புஷ்பிக்க ஆரம்பித்தன. அவள் பூச்செடிகளுக்கருகில் போய் அவற்றை வருடிவிடுவாள். பூக்களோடு

நெடுநேரம் பேசிக் கொண்டிருப்பாள். அவள்பேசுவது பூச்செடிகளுக்கு மட்டுமே கேட்கும். அதைப்போலவே பூச்செடிகள் பேசுவது அவளுக்கு மட்டுமே கேட்கும்.

எப்படியிருந்தாலும் அஸித்ரா புது மணமகள், அவள் சேற்றுடனும், மண் துணிக்கைகளுடனும் அல்லாடுவது முனிவருக்குப் பிடிக்கவேயில்லை. அவளுடைய மேனியெல்லாம் அழுக்குப் படிந்திருக்கும், வியர்வை திட்டு திட்டாகப் படிந்து அவளுடைய வதனம் அழுக்காகிப் போயிருக்கும், ஆடைகளும் அழுக்காகி அந்தத் தோற்றத்தில் அஸித்ராவைப் பார்ப்பது அருவருப்பாக இருக்கும். 'நீங்கள் ஏன் இவ்வளவு கஷ்டப்படுகிறீர்கள்? என்னிடம் கேட்டிருந்தால் பூங்காவனத்தையே இங்கே கொண்டு வந்திருப்பேனே. ஏன் இப்படி காலையிலும், மாலையிலும் இடுப்பை ஒடித்து கஷ்டப்படுகிறீர்கள்? நான் உங்கள் மீது அன்பாக இல்லையென்றா நினைத்துக் கொண்டீர்கள்?' என்று அஸித்ராவைக் கடிந்து கொண்ட முனிவர் சொன்னதோடு நிற்காமல் மாலையாகும்போது பூந்தோட்டமே முற்றத்தில் வந்திறங்கியது. எத்தனையோ வகையறாக்களில் பூக்களும், பூக் கன்றுகளும், தோட்டக்காரனையும் கூடவே அழைத்துக் கொண்டு வந்துவிட்டார் முனிவர். ஓரிரண்டு மணித்தியாலங்களில் அஸித்ராவின் வீட்டைச் சுற்றி எழில் கொஞ்சும் பூஞ்சோலை தயாராகி விட்டது. அண்டைவீட்டாரும் வேடிக்கை பார்க்குமளவுக்கு அது அற்புதமாக அமைந்திருந்தது.

அடுத்த நாட்காலை படுக்கையில் அஸித்ராவை காணாததால் பதறிய முனிவர் வெளியே போய்ப் பார்த்தபோது அவள் பாத்தியைக் கோதிக்கொண்டிருக்கவே உள்ளத்தின் மூலையிலே எரிச்சல் தலை காட்டியது.

'நான் இவ்வளவு சொல்லியும் கேட்காமல் என்ன செய்து கொண்டிருக்கிறீர்கள்?' 'பதியம் போடுவதற்காக பாத்தியை தயார் செய்து கொண்டிருக்கிறேன்' 'அது நன்றாகத் தெரிகிறது. பூந்தோட்டம் எவ்வளவு அற்புதமாகத் தோற்றமளிக்கிறது. இன்னும் பூங்கன்றுகள் வேண்டுமானாலும் கொண்டு வந்து தருகிறேன். எதற்காக இப்படி கஷ்டப்படுகிறீர்கள்?' என்று சற்று குரலை உயர்த்தி முனிவர் கேட்கவே தலையை உயர்த்தி முனிவரைப் பார்த்த அஸித்ரா 'நானே பாத்தியைக் கோதவேண்டும், நானே பதியம் போடவேண்டும், நானே பூங்கன்றுகளை நடவேண்டும், நானே நீரூற்ற வேண்டும். அந்த பூச்செடி நாளொரு மேனியும் பொழுதொரு வண்ணமுமாக வளரும். அதிகாலையில் எழுவேன். மஞ்சள் நிறத்திலே அழகாக பூத்திருக்கும் செடியைக் காண்பேன். இலைகளிலே பனித்துளி படிந்திருக்கும். நிறையக் கஷ்டங்களுக்குப் பின் அந்தப் பூவைக் காணும் போது ஏற்படும்

இன்பம் இருக்கிறதே, அதை உங்களுக்குச் சொன்னால் விளங்காது' என்று சாவதானமாகப் பதிலளிக்க முனிவரின் முகம் வாடிவிட்டது.

அன்றிரவே அஸித்ராவின் தந்தையிடம் தன்னுடைய கவலையை முனிவர் முறையிட மிகக் கவனமாக எல்லாவற்றையும் கேட்ட அஸித்ராவின் தந்தை நீண்ட நேரமாக யோசனையில் ஆழ்ந்துவிட்டு பேச ஆரம்பித்தார்.
'முனிவரே, நான் உங்களுக்கு சொல்லப்போகும் விஷயம் சங்கடமாகத்தான் இருக்கும். ஆனால் அதைவிட வேறுவழி எனக்குத் தெரியவில்லை. இப்படி சம்சார சாகரத்தில் மூழ்கித் தவம் செய்தால் அது பலிக்காது. தனியாக காட்டுக்குப் போய் ஒற்றைக் காலில் நின்று நாற்பது நாட்கள் தவம் செய்தீர்களென்றால் நீங்கள் நினைப்பது எல்லாம் நடந்தேறிவிடும். நாற்பது நாட்கள் பிரிந்திருந்தால் அஸித்ராவும் பிரிவின் கொடுமையை அறிந்து கொள்வாள். அது மட்டுமல்ல உங்கள் தவவலிமை காரணமாக அவள் பேசாமடந்தையாகி கைகால்களும் முடமாகிவிடும்' என்றார் அஸித்ராவின் தந்தை. முனிவருக்கும் அவர் சொல்வது சரியென்றே பட்டது. என்ன அதிசயம் நடந்ததோ, எப்படி நடந்ததோ யாருக்கும் தெரியாது. நாற்பது நாட்கள் கழித்து முனிவர் திரும்பி வந்தபோது அஸித்ராவால் எழவோ, நடக்கவோ, கைகளால் சுயமாக எதையும் செய்யவோ முடியாமல் முடமாகிக் கிடந்தாள், வாயிலிருந்து பேச்சு வரவில்லை, ஊமையாகிவிட்டாள்.

ஆனாலும் அஸித்திராவின் மேல் அளவற்ற பிரியம் கொண்ட முனிவர் அவளைக் கைவிட்டு விடவில்லை. அதிகாலை எழுந்ததும் அவளுக்கு 'I Love you' சொன்னார்; சக்கரவண்டியிலே அஸித்ராவை பூந்தோட்டத்திற்கு அடைத்துச் சென்று அவளோடு மௌன மொழியில் சல்லாபித்தார்; இரவில் கூடினார்; சகல ஐசுவரியங்களையும் அவளுக்காகக் கொண்டு வந்து குவித்தார். பிள்ளைகளும் பிறந்தன, அண்டைவீட்டார்கள், முனிவரும் அஸித்ராவும் ஆனந்தமாக வாழ்க்கை நடத்துவதைப் பார்த்து மூக்கின்மேல் விரலை வைத்து அதிசயித்தார்கள். அஸித்ராவின் தந்தையும் தன்னுடைய புத்திரி சகல சௌபாக்கியங்களும் பெற்று தன்னுடைய கணவனுடன் இன்பமான குடும்பவாழ்க்கை நடத்துவதைப் பார்த்தபடியே நிம்மதியாகக் கண்ணை மூடினார்.



# காணாமற் போகக் கடவாய்!

எம்.எம்.நௌஷாத்

(அகாலமாகக் காணாமற் போன முகம் தெரியாத அத்துணை ஆன்மாக் களுக்கும் இக்கதை சமர்ப்பணம்)

தடதடவென்று கதவைத் தட்டினார்கள். நிறையப் பேச்சுக் குரல்களும், பூட்ஸ் ஒலிகளும். ஸைமினா கண்களைக் கசக்கிக் கொண்டே சுவர்க்கடிகாரத்தைப் பார்த்தாள். அதிகாலை 3.30. அகாலவேளை யில் யாராக இருக்கக்கூடும் என்று யோசித்துக் கொண்டிருக்கும் போதே தகரக் கதவை உடைத்துக் கொண்டு உள்ளே நுழைந்த சிப்பாய்கள் 'எங்கே அவன்?' என்று கேட்டுக் கொண்டே ஸைமினாவின் முகத்திற்கு நேரே டோர்ச்லைட்டைப் பாய்ச்சவே அவள் கண்கள் கூசின. சுதாகரித்துப் பதிலளிப்பதற்கு முன்பாகவே அவளைத் தள்ளிக் கொண்டே படுக்கையறைக்குள் சிப்பாய் போக அவர்கள் தேடிவந்த அவன் கட்டிலிலே உறங்கிக் கொண்டிருந்தான். கொண்டுவந்த புகைப்படத்தையும் படுத்திருந்தவனின் முகத்தையும் ஒப்பிட்டுப் பார்த்துவிட்டு 'இவன்தான் ஆள்' என்றான் சிப்பாய். 'ஐயோ, இவரை என்ன செய்யப் போகிறீர்கள்?' என்று ஸைமினாவின் வாய் தடுமாற்றத்தால் குழற 'இவன் உனக்கு யார்?' என்று கேட்டான் சிப்பாய். 'என் கணவன்' என்றாள் ஸைமினா.
'

உன் கணவனா? படுபாவி, கொலையொன்று செய்து விட்டான்' 'என் கணவரா கொலை செய்தாரா? ஒருபோதும் அது நடந்திருக்க மாட்டாது. நீங்கள் தவறான இடததிற்கு வந்திருக்கிறீர்கள்' என்றாள் ஸைமினா. சிப்பாய் கையிலிருந்த புகைப்படத்தை அவளிடம் நீட்டி 'இந்தப் புகைப்படத்தில் இருப்பவன் உன் கணவன்தானே' என்று கேட்க ஸைமினா குழப்படைந்தவளாக 'ஆமாம்' என்று தலையாட்டினாள். 'அப்படியானால் என்ன சந்தேகம்? உன் கணவன் கொலைகாரன் தான். சாதாரண கொலைகாரனல்ல. எங்கள் கட்டளைத் தளபதியின் மனைவி யையே கொலை செய்து விட்டான்' என்று ஆக்ரோஷத்துடன் கொக்கரித்தான் சிப்பாய்.

'தப்பு நடந்திருக்கிறது. பாதையில் நடந்து போகும் போது சிற்றெறும்புகளை மிதிக்காமல் நடப்பவர் என் கணவர். கரப்பான் பூச்சிகளைக் கண்டு அலறுவார்; இரவில் சிறுநீர் கழிப்பது என்றாலும் பயம் காரணமாக ஜன்னலைத் திறந்து அதற்கூடாகத்தான் கழிப்பார்' என்று ஸைமினா சொல்லிக் கொண்டே போனாலும் அவளுடைய புலம்பலுக்கு காது கொடுக்காத சிப்பாய்கள் படுக்கையிலிருப்பவனை தட்டியெழுப்பும் கைங்கரியத்தில் மூழ்கிப்போயிருந்தார்கள். அவனுடைய கால்களையும் கைளையும் மடக்கினார்கள்; நீட்டினார்கள்; முகத்திலே கிள்ளினார்கள். காதிற்குள் இரைந்தார்கள்; தலையில் குட்டினார்கள்; செவிச்சோணைகளை முறுக்கினார்கள். அவன் எழும்பவேயில்லை.

'இரவு எத்தனை பிள்ளைகளும் ஒப்பாரி வைத்துக் கொண்டே பின்னால் ஓடினார்கள்; ஒரு கைக்குழந்தையின் அழுகுரலும் கேட்டது. இவர்களத்தனைபேரும் வெளியே வந்து சேர்வதற்கிடையில் ஜீப் வேகமாக அவ்விடத்தை விட்டு ஓடி மறைநதது.

நகரத்திலிருந்து சற்றுத் தள்ளி *பிசாசு மையம்* என்றழைக்கப்படும் ஒதுக்குப்புறமான இடம் இருந்தது. அந்த காட்டைச் சுற்றி எண்ணிலடங்கா பிசாசுக் கதைகள் உலவிக் கொண்டிருந்தமையால் தான் இந்தப் பெயர். பெயருக்கு ஏற்றாற்போல் அடர்ந்த வனாந்தரத்திற்கு மத்தியிலே பழைய கோட்டையும், கோட்டையைச் சுற்றி துார்ந்து போன மதிற்சுவரும் இருந்தது. நடுநிசியிலே கோட்டைக்குள்ளிருந்து அலறல் சத்தங்கள் கேட்டுக் கொண்டே இருக்கும். பாழடைந்த கோட்டைக்குள் குடியிருக்கும் பிசாசுகளின் அட்டகாசமென்று நகர மாந்தர்கள் நம்பியதால் பிசாசு மையத்திற்குள் நுழைந்து பார்க்க யாருமே துணியவில்லை. தவிரவும் காட்டிற்குள் போன யாருமே இதுவரை உயிரோடு திரும்பி வந்தது கிடையாது. கியுவான் அவருக்கென்றே ஆக்கப்பட்ட இருக்கையிலே வந்தமர்ந்தார். கியுவான் நகரத்தின் சிரேஷ்ட பொலிஸ் அத்தியட்சகர். இன்ஸ்பெக்டர் கியுவான் என்றுதான் எல்லோரும் அவரை அழைத்தார்கள். இன்ஸ்பக்டர் கியுவான் என்ற பெயரைக் கேட்டால் அழுத பிள்ளையும் வாயை மூடிவிடும்; தயவுதாட்சண்யமில்லாதவர்; கொடுங்கோலன். மடிப்புக்குலையாத சீருடையோடு அவர் வந்திருந்தார். தலை எண்ணெய் தேய்த்து வாரிவிடப்பட்டிருந்தது. சப்பாத்தும் புத்தம் புதிதாகப் பளபளத்தன. சூடப்பட்டிருந்த நட்சத்திரங்கள் பொலிசுப் பெருங் கனவானென்று அவரைச் சொல்லின. முகத்திலே தேஜஸ் ஜொலித்தது. மொத்தத்தில் இந்த அகால வேளையிலும் துாக்கக் கலக்கமோ, சோர்வோ இல்லாமல் அப்பழுக்கற்ற ஆணழகனாக மிடுக்குடன் காட்சியளித்தார் அவர்.

உள்ளே நுழைந்த சிப்பாய்கள் கொண்டுவந்த அவனை சீமெந்தினால் வார்க்கப்பட்டிருந்த மேடை மீது கிடத்திவிட்டு இன்ஸ்பக்டர் கியுவானுக்கு சல்யூட் அடிக்க 'ஏன் அவனை மல்லாக்காக போட்டிருக்கிறீர்கள்?' என்று கர்ஜித்தார் கியுவான். 'பலதடவை முயற்சி செய்தும் அவன் எழும்புகிறான் இல்லை ஐயா. மூக்கு முட்டக் குடித்திருப்பான் போலிருக்கின்றது' என்று பௌயமாகச் பதிலளித்தான் சிப்பாய். தொண்ணூறு பாகையில் எழுந்து கம்பீரமாக நெஞ்சை நிமிர்த்தி நிர்மலமான அந்த நடுநிசியிலே சப்பாத்தொலி டக்டக்கென்று ஒலிக்க நடந்துவந்த கியுவான் குண்டாந்தடியைக் கையில் எடுத்து அவனுடைய அச்சிலிசு (Achilles) தசைநாரிலே வேகமாக அடிததார்;

உயிர் போகிற அடி. ஊஹூம்! அவன் அசையவேயில்லை. குனிந்து அவனுடைய வாயை முகர்ந்து பார்த்தவர் 'இவன் குடிக்கவில்லை' என்று சொன்னவாறே கைப்பேசியை எடுத்து 'டாக்டர் டினோல், நான் பிசாசு மையத்திலிருந்து பேசுகிறேன். மிகவும் அவசரமான கேஸ். உடனடியாக வர முடியுமா?' என்று பேச பதினைந்து நிமிடங்களுக்குள்ளேயே வந்து சேர்ந்தார் டாக்டர் டினோல்.

'டாக்டர் டினோல், நீங்கள் எனக்கு உதவி செய்ய வேண்டும். சீமேந்து மேடையில் மல்லாக்காகப் போடப்பட்டிருக்கும் கொலைக் கைதி மயக்க நிலையிலே இருக்கிறான். அவனுடைய இறந்து போன உடலை காலை ஏழுமணிக்குள் கட்டளைத் தளபதியிடம் காட்டவேண்டும். பத்திரிகைகளுக்கு செய்தி கொடுத்தாகி விட்டது. இவனுடைய மரணச்செய்தி கொட்டை எழுத்துக்களில் இன்றைய பத்திரிகைகளிலும் தொலைக்காட்சியிலும் வரும். ஆனால் ஆளோ படுத்த படுக்கை. மயக்க நிலையிலே இருக்கும் குற்றவாளி மீது விசாரணை நடத்தமுடியாது. அவனை உடனடியாக உயிர்ப்பிக்க வேண்டும்' என்று ஒரே மூச்சில் சொல்லி முடித்தார் கியுவான்.

பழுத்த அனுபவசாலியான டாக்டர் டினோல் ஓரிரண்டு நிமிடங்களிலேயே நோயைக் கண்டுபிடித்து விட்டார். நோய் நிருணயத்தை நிச்சயப்படுத்துவதற்காக குளுக்கோமீற்றரால் டாக்டர் டினோல் ஆள்காட்டி விரல் மெத்தையை குத்த அது 465ஐயைக் காட்டியது. 'இவன் நீரிழிவு நோயாளி. இரத்தத்தில் குளுக்கோசு எகிறிவிட்டதால் மயக்கத்தில் கிடக்கிறான். உடனடியாக இன்சுலின் கொடுத்தால் மயக்கம் தெளியும்' என்றார் டாக்டர்.
'இன்சுலின் கைவசம் இல்லையா டாக்டர்?'
'போய் எடுத்துக்கொண்டு வருகிறேன்'
'அதற்கெல்லாம் என்னால் காத்திருக்க முடியாது. நேரம் ஓடுகிறது. கட்டளைத்தளபதி சீறி விழுவார்' என்றுசொன்ன கியுவான் வெளியே போய் ஜீப்புக்குள்ளிருந்த இன்சுலின் குப்பியுடன் உள்ளேவந்தார்.
'நான் பாவிக்கும் குப்பி. பரவாயில்லை, ஏற்றுங்கள் டாக்டர்' என்றார் அவர். இன்சுலின் ஏற்றி பதினைந்து இருபது நிமிடங்கள் கழிந்து எழுந்து உட்கார்ந்த குற்றவாளி மிரட்சியுடன் அங்குமிங்கும் பார்த்தான். சரியாக தலைக்கு மேல் நேரே தூக்குக் கயிறு தொங்கியது. முன்னால் காலுக்கு மேல் கால் போட்டவாறு பொலிஸ் சீருடையணிந்த இராட்சத மனிதர். இடது புறத்தில் கசாப்புக்கடை. வெட்டும் கருவிகள், சீவும்கருவிகள், பளபளக்கும் கத்திகள், இரத்தச் சிவப்பான சுவர்கள், நிலமெங்கும் காய்ந்துபோன இரத்தக் கறைத் திட்டுகள், சுற்றிவர கும்மிருட்டு, எங்கோ தூரத்தில் ஊளையிடும் ஓநாய்கள். 'ஐயோ, நான்

எங்கிருக்கிறேன்?' என்று பிதற்றவாரம்பித்தான் குற்றவாளி. குற்றவாளியின் குரலைக் கேட்டதும் கியுவான் தன்னுடைய மீசையை விரல்களால கோதியவாறு 'கொலையாளி எழுந்துவிட்டான்' என்று மகிழ்ச்சியுடன் கூவினார்.

கொலையாளி எழுந்துவிட கௌரவமான பெரிய மனிதர் அவசரஅவசரமாக கோட்டைக்குள் நுழைந்தார், வயது ஐம்பத்தைந்து இருக்கலாம், தொந்தி முன்னே தொங்கியது, தலைக்கேசம் அத்தனையும் வெள்ளிக்கம்பிகள், தூய்மையான வெண்ணிற ஆடை, சோடாப்புட்டிக் கண்ணாடி. அவசரமாக வந்ததால் அவருக்கு மேல்மூச்சு, கீழ்மூச்சு வாங்கியது. அதே அவசரத்துடன் தன்னுடைய இருக்கையில் அமர்ந்து கொண்ட அவர்தான் இன்று தீர்ப்பளிக்கப் போகும் நீதிபதி. நீதிபதிக்கென விஷேட மேசையிருந்தது. மேசைமீது தேய்ந்த மடிக்கணணி. வலதுபுறத்தில் இருந்த முகம் வதங்கிப்போன பெண் தான் தட்டெழுத்தாளியும், சுருக்கெழுத்தாளியும். 'தீர்ப்பளிக்கலாமா?' என்று நீதிபதி கேட்க கியுவானுக்கு கோபம் வந்தது. 'வந்ததும் வராததுமாக தீர்ப்பா? குற்றச்சாட்டுக்களை வாசித்துப் பார்த்தீர்களா?' என்று கடுகடுத்தார் கியுவான். எளிதில் புரிந்துகொள்ள முடியாத எமகாதகப் பேர்வழி கியுவான் என்பது அவருக்கு நன்றாகத் தெரிந்தாலும் எதிர்த்துப் பேச முடியாது. எதிர்த்துப் பேசினால் அவரும் இதே மாதிரி நிற்கவேண்டி வரலாம்.

'மேலோட்டமாக வாசித்தேன். வழமையான கேஸ்தானே' என்று மன்னிப்புக் கேட்கும் தோரணையில் பேசினார் நீதிபதி. சட்டென்று உஷ்ணமான கியுவான் 'பொறுப்புள்ள நீதிபதியான நீங்கள் இப்படியெல்லாம் பதில் சொல்லக்கூடாது. பேசக் கற்றுக்கொள்ளுங்கள், சில்லறைச் சமாச்சாரமாக இதனை எடுக்காதீர்கள். இது உயிருடன் விளையாடும் கொலை வழக்கு' என்றதும் நீதிபதி கூனிக்குறுகிப் போனார். நல்லவேளையாக குற்றவாளியின் மூளை பிசகி புத்தி சுவாதீனமிலலாமல் உளறிக்கொண்டிருக்கிறான். அல்லாவிடில் அவனுக்கு முன்னால் நீதிபதியான நான் அவமானப்பட நேர்ந்திருக்கும்.

நீதிபதி தீர்ப்பை வாசித்த அதேவேளை சிப்பாய் பதினாறு பக்கங்கள் கொண்ட கடதாசிக் கற்றையொன்றை குற்றவாளியின் கையில் திணித்தான். 'என்ன இது?' என்று குற்றவாளி புரியாதவனாகக் கேட்க சிப்பாயோ பதில் சொல்லாமல் குற்றவாளியின் கையில் பேனாவைக் கொடுத்து ஓரிடத்தைக் காட்டி கையொப்பமிடச் சொன்னான். 'நான் கையொப்பமிட மாட்டேன். இதற்குள் என்ன எழுதப் பட்டிருக்கின்றது என்று எனக்கு தெரியாது. நீங்கள் என்னை மோசடியான முறையில்

குற்றவாளியாக்கப் பார்க்கிறீர்கள்' என்று மறுதளித்தான் குற்றவாளி. 'ம்...... சரியாகப் புரிந்து கொண்டாய், புத்திசாலி. இது குற்ற ஒப்புதல் வாக்குமூலம் தான். நீ செய்த கொலையின் விபரங்களை விஸ்தாரமாக எழுதியிருக்கிறோம். பதினாறு பக்கங்களை வாசித்துப் பார்க்க இப்போது சாத்தியமாகாது. வாசித்துப் பார்ப்பதால் எந்தப் பிரயோஜனமும் கிடைக்கப் போவதுமில்லை. கையொப்பத்தைப் போட்டாய் என்றால் வந்த வேலை முடிந்து விடும்' என்று அமைதியாகச் சொன்னார் கியுவான். 'நான் கொலை செய்தேனா? என்ன விளையாடுகிறீர்களா? எக்காரணங் கொண்டும் நான் கையெப்பமிட மாட்டேன்' என்று குற்றவாளி சற்று உரக்கப் பேச கியுவான் இருக்கையை விட்டு எழுந்து அவனை நெருங்கினார். இருவருக்கும் இப்போது துாரவித்தியாசம் ஓரடிதான்.

'என்னோடு முட்டாள் தனமாக தர்க்கம் செய்யாதே. கட்டளைத் தளபதி உன்மீது கடுங் கோபத்தில் இருக்கிறார். சந்தைக்கு பொருட்கள் வாங்கச் சென்ற அவருடைய மனைவியை நீ சுழல் துப்பாக்கியால் சுட்டுக் கொன்றாய். இது மிகவும் பாரதுாரமான குற்றம். ஒப்புதல் வாக்குமூலத்தில் கையெழுத்திட்டாயென்றால் உனக்கு நியாயமான தண்டனை கிடைக்கும். மறுத்தாயென்றால் உன்னைக் கட்டளைத் தளபதியிடம் அழைத்துச் செல்கிறேன். அவருக்கு இப்படியெல்லாம் நான் பேசுவதுபோல் பேசவராது. நாயைக்கொல்வது போல் உன்னை அடித்துக் கொன்றுவிடுவார்' என்று உச்சித் தொனியில் கியுவான் கூற 'என்னை நீங்கள் மிரட்டவா பார்க்கின்றீர்கள்? இப்படியெல்லாம் பேசும் நீங்கள் யார்? முதலில் அதனைச் சொல்லுங்கள்' என்று தைரியம் வந்தவனாக பதிலுக்கு இரைந்தான் குற்றவாளி. 'இன்ஸ்பெக்டர் கியுவான்' என்று பதில் சொன்னார் கியுவான். கியுவான் என்ற பெயரைக் கேட்டதும் குற்றவாளி பதகளித்துப் போய் அதிர்ச்சி காரணமாக அவனுக்கு வார்த்தைகள் வரவில்லை. இன்ஸ்பெக்டர் கியுவானைப்பற்றி அவன் கேள்விப்பட்டிருக்கிறான். மக்கள் *பிசாசுக்கோட்டை அலுகோசு* என்று அவரைச் செல்லமாக அழைத்தார்கள்.. நகரத்திலே யாராவது காணாமற் போனால் முதலில் அவருடைய பெயர்தான் அடிபடும். இதயம் பதற்றத்துடன் துடிதுடிக்க குற்றவாளி சுற்றுமுற்றும் பார்த்தான். ஆட்கள் அரசல்புரசலாகக் கதைக்கும் பிசாசுக்கோட்டை சந்தேகமே இல்லாமல் இதுதான். அதே கோட்டைக்குள் தான் இருக்கிறோம் என்று உணர்ந்ததும் எல்லா உயிர்க் கலங்களும் வெடித்துச் சிதறுவதுபோல் சிதைந்து போன குற்றவாளி அவசர அவசரமாக வாக்குமூலத்திலே கையெழுத்திட கியுவான் குபுக்கென்று சிரித்துவிட்டார்

'எங்கே பிணச்சோதனை அறிக்கை?' என்று கேட்டார் நீதிபதி. சிப்பாய் பிணச்சோதனை அறிக்கையை கொடுத்ததும் நீதிபதி அதனை மேலோட்டமாகப் பார்த்துவிட்டு தீர்ப்பை வாசித்தார். 'எனவே சந்தேகத்துக்கு இடமின்றி கொலைக் குற்றச்சாட்டு நிரூபிக்கப்பட்டுள்ளது. குற்றவாளி தெளிந்த உள்ளத்தோடு கையெழுத்திட்டுத் தந்த ஒப்புதல் வாக்குமூலமும் என் கைவசம் உள்ளது. எனவே குற்றவாளியை சாகும்வரை தூக்கிலிடுமாறு தீர்ப்பளிக்கிறேன்' என்று முடித்த நீதிபதி குற்றவாளியைப் பார்த்து 'நீ ஏதாவது சொல்ல விரும்புகிறாயா?' என்று சம்பிரதாயமாகக் கேட்டார். 'நான் கொலை செய்யவில்லை' என்று ஓலமிட்டு அலறினான் குற்றவாளி. 'எந்தக் கொலைஞன் தன் குற்றத்தை ஒப்புக் கொண்டிருக்கிறான்? இதனைத்தவிர வேறு ஏதாவது சொல்ல விரும்புகிறாயா?'

நீதிபதி கேட்ட எதுவும் அவன் காதுகளுக்குள் ஏறவில்லை, அவன் ஓலமிட்டுக்கொண்டே இருந்தான். சிப்பாய் கறுப்புத்துணியால் அவன் முகத்தை மூடிக்கட்ட அவன் திமிறினான், அழுதான், கதறினான், கெஞ்சினான், பிய்த்துக்கொண்டோட பிரயத்தனம் பண்ணினான். எதுவுமே பலனளிக்காத நிலையில் குற்றவாளி சோர்ந்து போக 'கொலையாளியை அடையாளம் காட்டியவன் யார்?' என்று கேட்டார் கியுவான். கரியநிறமாகத் தோற்றமளித்த சிப்பாய் அவர் முன்னால் வந்து சல்யூட்அடித்ததும் 'நீதான் இன்றைக்கு அலுகோசு' என்று கியுவான் சொல்ல சிப்பாய் உத்தரவை ஏற்றுக் கொண்டவனாக தூக்குக் கயிற்றை குற்றவாளியின் கழுத்திலே மாட்டவும் மற்ற சிப்பாய் கீழேயிருந்த பலகைத்திண்டை அப்பால் இழுக்கவும் அவ்வளவுதான், ஒருகணத் துடிப்புடன் உயிர் பிரிய குற்றவாளியின் தலை கீழே தொங்கியது.

**பத்து வருடங்களுக்குப் பிறகு-**

இன்ஸ்பெக்டர் கியுவானிடம் பிரமாண்டமான அல்பமொன்று இருந்தது. இரகசிய நிலவறையிலே அதனை ஒளித்துவைத்து திறப்பை தன்னிடம் பத்திரமாக வைத்திருந்தார் அவர். முன்பெல்லாம் ஒவ்வோர் இரவிலும் அந்த அல்பத்தை வெளியே எடுப்பார் கியுவான். ஒவ்வொரு பக்கத்தையும் புரட்டப் புரட்ட அவருடைய மகிழ்ச்சி கரைபுரண்டோடும். ஹஹ்ஹஹ்ஹா என்று கெக்கலியிட்டுச் சிரிப்பார். வீட்டின் ஒவ்வொரு மூலைமுடுக் குகளிலும் அவருடைய சிரிப்பு எதிரொலிக்க நிலம் அதிர்ந்து எங்கும் ஆணவம் பரவும், மேசையிலே மதுக்கிண்ணங்கள் குவியும், எல்லா அலுகோசுகளும் அங்கே சேர்ந்துகொள்வார்கள். செம்பனை ஊற்றி இரசித்து இரசித்து பருகுவார் அவர்.

இந்த நாட்களிலோ சிரிப்பு அருகிவிட்டது, நண்பர்கள் குறைந்து விட்டார்கள், தனிமையிலே இருப்பார், உடைந்தும், அழுக்கடைந்தும் கிண்ணங்கள் எங்கும் சிதறிக் கிடக்கும், மது இல்லை, பெண்டிர் இல்லை, போதையும் இல்லை. குளிராயிருக்கும் சிலநாட்களில் கோப்பி அருந்துவார், நிலத்திலே உறங்குவார், ஆணவவாட்டம் இல்லை. மாதங்கள் ஏழெட்டு கழிந்து இன்று முதல் தடவையாக அல்பத்தை வெளியே எடுத்தார் கியுவான். அவ்வளவுதான் தும்ம ஆரம்பித்தார், அவ்வளவு தூசு. அல்பத்தின் முகப்பிலே ஆறுமாதக்குழந்தை ஒன்று தூக்கிலே தொங்குவதுபோல் ஒருகாட்சி. கீழே *அல்பட் மேவா கியுவான் என்பவரின் வீரச்சாகசங்கள்* என்ற கொட்டை எழுத்துக்களில் வரையப்பட்ட தலைப்பு. முன்பெல்லாம் எடுத்த கையோடு அல்பத்தின் முகப்பை முத்தமிடுவார், இன்று இல்லை, கொஞ்சுவார், இன்று இல்லை, பெருமிதத்தோடும், அகங்காரத்தொடும் தன்னைத்தானே பார்த்துக் கொள்வார், இன்று இல்லை. இன்று சுற்றிலும் விவரிக்கமுடியாத அமைதி, மௌனம், உள்ளம் எப்படியெப்படியோ எல்லாம் உடைந்து தொலைந்து போய்விட்டது.

அல்பத்தை திறந்தார், முதல்பக்கத்திலே சிறுகதையொன்றின் கட்டிங் இருந்தது. பத்திரிகையில் வந்ததை நறுக்கி ஒட்டியிருந்தார் கியுவான். அதுதான் அவருடைய முதல் கேஸ். திகதிகூட நன்றாக ஞாபகமிருக்கிறது, டிசெம்பர் 25, கிறிஸ்மஸ்தினம். தலைப்பு, *'மனிதப் பூக்களின் நரகம்'* கியுவானிடம் ஒருபழக்கமிருந்தது, பத்திரிகை வாசிக்கும் வழக்கம். முதல்பக்க முதல்வரியிலிருந்து இறுதிப்பக்க இறுதிவரி வரை வாசிப்பார், விளம்பரங்களையும் விட்டு வைக்க மாட்டார், நடிகை கிசுகிசுக்களையும் விட்டுவைக்க மாட்டார். அப்படி வாசிக்க ஆரம்பித்த கதைதான் 'மனிதப் பூக்களின் நரகம்'. வாசிக்க வாசிக்க அவருடைய இரத்தநாளங்களில் கரியமில வாயு ஏறி, இரத்தவழுத்தம் எகிறியது, விழிகள் கொதித்து கபாலம் தீப்பிழம்பாய் எரிந்தது.

'............வெறிச்சோடிப்போன வீதிகளிலே இரும்புக் குப்பாயம் போட்ட மயில்களின் வெறியாட்டம் காரணமாக மனிதப்பூக்கள் சிதறிக் கிடந்தன, புல்லிகள் பிடுங்கப்பட்ட பூக்கள், அல்லிகள் சிதைக்கப்பட்ட பூக்கள், இதழ்கள் கசக்கப்பட்டு நறுக்கப்பட்ட பூக்கள். வெண்மல்லிகைப் பூக்கள் இரத்தநிறம் தோய்ந்து மாலைக்கதிரவனாய் மயங்கிக் கிடந்தன, இம்மென்ற ரோஜாக்கள் கூடைகளிலே திணிக்கப்பட்டு சமுத்திரத்திலே வீசி எறியப்பட்டன, ஏனென்று ராகமிசைத்த பட்டாம்பூச்சிகளின் இறகுகளிலே செருகப்பட்ட மூங்கில் விற்களிலிருந்து தொடுக்கப்பட்ட

முள்ளம்புகள்.' என்று கதை தொடர்ந்து கொண்டேபோக வாசிப்பதை நிறுத்தி கட்டளைத் தளபதியிடம் ஓடோடிப் போனார் கியுவான். 'இன்ஸ்பெக்டர் கியுவான் அவர்களே, எதற்காக பத்திரிகை நறுக்கை கொண்டு வந்து என் நேரத்தை வீணாக்குகிறீர்கள்? எழுத்தாளன் பூக்களைப் பற்றி எழுதியிருக்கிறான், பட்டாம்பூச்சியைப் பற்றி எழுதியிருக்கிறான். வேறு ஒன்றையும் காணவில்லையே' என்று சிடுசிடுத்தார் கட்டளைத் தளபதி. 'கட்டளைத் தளபதி ஐயா அவர்களே, எழுத்தாளன் பூக்களைப் பற்றியோ, பட்டாம்பூச்சியைப் பற்றியோ எழுதவில்லை. அவன் நம்முடைய ஆட்சி அராஜகம் என்று சொல்கிறான் அடக்குமுறை ஆட்சி என்று வர்ணிக்கிறான். கீழே வாசித்துப் பாருங்கள். என்னவெல்லாமோ கீழ்த்தரமாக எங்களைச் சாடியிருக்கிறான்'

'உண்மையாகவா சொல்கிறீர்கள்? எனக்கு ஒன்றும் புரியவில்லையே'

'அர்த்தம் சொல்கிறேன் கேளுங்கள். சிப்பாய்கள் வெறியாட்டம் ஆடி மக்களை கொன்று குவிக்கிறார்கள், கொல்லப்பட்ட மனிதர்களின் சடலங்கள் வீதிகளிலே சிதறிக் காணப்படுகின்றன, அவர்களின் உறுப்புகள் வேறாக்கப்பட்டுள்ளன, மேனிகள் சிதைக்கப்பட்டுள்ளன, சிரசுகள் நொறுக்கப்பட்டுள்ளன, யாரும் ஆட்சியாளர்களைப் பற்றி மூச்சுவிட முடியாது, மூச்சுவிட்டால் கடலுக்குள் தள்ளிவிடுவார்கள், ஏனென்று கேள்வி கேட்பவர்களை துப்பாக்கிச்சன்னங்களால் சல்லடையாக்கி விடுவார்கள்' என்று விவரித்து கொண்டே போனார் கியுவான்.

'இந்த விசயங்களையெல்லாம் மக்கள் விளங்கிக்கொள்வார்களா?'

'ஆம் கட்டளைத் தளபதி ஐயாவே' என்று கியுவான் சொன்னதும் ருத்ராகாரத்தால் அவதிப்பட ஆரம்பித்த கட்டளைத் தளபதியின் புயத்தசைகள் நடுநடுங்கித் துடித்தன. இதயம் அங்குமிங்கும் ஓட அவரும் அங்குமிங்கும் ஓடி தாம்தூம் என்று குதித்தார், துப்பாக்கியால் தொடையில் ஓங்கி அடித்தார். யாரும் அருகில் நிற்கக் கூடாது. கைத்துப்பாக்கியால் தாறுமாறாக சுட்டுவிடுவார். அன்றைய தினமே எழுத்தாளனை கட்டளைத் தளபதியின் முன்கொண்டு வந்துநிறுத்தினார் கியூவான்.

'என் காலிலே விழுந்து, மண்டியிட்டு மன்னிப்புக் கேள். உயிர்ப் பிச்சை தருகிறேன்' என்று கட்டளைத் தளபதி உத்தரவிட 'நாங்கள் எழுத்தாளர்கள், மனிதர்களிடம் மண்டியிடுவதில்லை' என்று பதிலளித்தான் எழுத்தாளன். அதுதான் எழுத்தாளன் பேசிய இறுதி வார்த்தைகள். அதற்கு மேல் பேசவிடாமல் ஷேர்ட்கொலரைப் பிடித்து அவனைத் தரதரவென்று இழுத்துக் கொண்டு போனார் இன்ஸ்பெக்டர் கியூவான். பிசாசுக் கோட்டைக்குள் தூக்கிலிடப்பட்ட முதல் ஆள் அவன் தான். தன் கையால் தூக்கிலிடப்படும் முதல் ஆள் என்பதால் கியூவானுக்கு பெருமிதமாகவும், திரில் ஆகவும் இருந்தது. எழுத்தாளன்

அலறவோ, திமிறவோ, தப்பியோட பிரயத்தனம் பண்ணவோ இல்லை. உண்மையைச் சொல்லப்போனால் கியுவான் எழுத்தாளனின் நடத்தையைப் பார்த்து வியந்துபோனார்.
"உனக்கு ஏதாவது கடைசிஆசை உண்டா?" என்று அவனைப் பார்த்து கியூவான் கேட்டார். எழுத்தாளன் முறுவலித்தான். 'ஆசைகள் எதுவும் கிடையாது. எனக்குள் இருக்கும் ஆச்சரியம் என்னவென்றால் நீங்கள் போட்டிருக்கக் கூடிய தூக்குக் கயிற்றின் முடிச்சு. அழகாகவும், அற்புதமாகவும், நேர்த்தியாகவும் அது இருக்கிறது' என்றான் எழுத்தாளன். அத்தோடு அவன் உயிர் பிரிந்தது.

இன்ஸ்பெக்டர் கியுவானுக்கு எழுத்தாளன் அபூர்வ மனிதனாக தோன்றினான். அதனால் தான் பெரிய அல்பமொன்றை வாங்கி முதல் பக்கத்திலே அவனுடைய சிறுகதை நறுக்கையும் இரண்டாவது பக்கத்திலே எழுத்தாளனின் புகைப்படத்தையும் ஒட்டி அவனுடைய பூர்வீகத்தை எழுதினார். அல்பம் தயாராகி விட்டது. அன்று ஆரம்பித்த பழக்கம், கியுவான் பெருமூச்செறிந்தார், இன்று 3088 புகைப்படங்களோடு நிற்கிறது. தூக்க முடியாதளவு சுமையுடைய மிகப் பெரிய அல்பம். எத்துணை வித்தியாசமான மனிதர்கள்! கேசம் சுருண்டவர்கள்; நீண்ட கூந்தலைக் கொண்டவர்கள்; கறுப்பர்கள்; குருதிச்சோகையால் வெளிறிப்போனவர்கள்; அழகான பெண்கள்; இளம் பராயத்தார்; கோலிக்குண்டு விளையாடிய சிறுவர்கள்; வெற்றிலை போடும் கிழவிகள் என்று எத்தனை பேர் அலறியும் கூப்பாடு போட்டும் பிசாசுக் காட்டை அதிர வைத்தார்கள்! முகப்பிலிருக்கும் ஆறு மாதக் குழந்தையின் புகைப்படம். அந்தக் குழந்தையால் கூட தூக்குக் கயிற்றில் இருந்து தப்ப முடியவில்லை. ஒவ்வொரு அலறலும் உள்ளத்திற்குள்ளே இன்று கொதித்து குமிழியிட ஆரம்பித்துவிட்டது.

அல்பத்தின் கடைசிப் பக்கத்திலே குண்டு குண்டான அழகான எழுத்துக்களால் எழுதினார் இன்ஸ்பெக்டர்.
*பூரண விருப்பத்தோடும், சுய உணர்வோடும், தெளிவான சிந்தனையுடனும் நான் எழுதும் வாக்குமூலம். இந்த அல்பத்தில் காணப்படும் மனிதர்கள் அத்தனை பேருடைய சாவுக்கும் காரணமான பிரகிருதி நான்தான். இவர்கள் எவரும் எவ்விதமான குற்றச்செயலிலும் ஈடுபட்டதில்லை. எங்களை எதிர்த்து ஓரிரு வார்த்தைகள் பேசியதற்காகவோ, கிண்டல் செய்ததற்காகவோ அல்லது கண்டித்ததற்காகவோ பிசாசுக் காட்டுக்கு அழைத்துச் சென்று, போலி விசாரணை நடத்தி இவர்களையெல்லாம் தூக்கிலிட்டேன். காணமற்போனவர்களின் உறவினர்கள் அனைவரும் என்னைத் தண்டிக்க முடியாமல் போனது குறித்து வருத்தப்படுவீர்களென்று எனக்குத்தெரியும். என்னால் இதைத் தவிர வேறொன்றும் செய்ய*

*இயலாமல் இருப்பது குறித்து நான் வருந்துகிறேன். இந்தக் கணத்திலேயே நான் செத்துவிட வேண்டியுள்ளது. மரணமடைந்தவர்களின் ஓலம் என்னை துரத்திக்கொண்டிருக்கிறது. நான் சாக்காட்டை நோக்கி ஓடிக்கொண்டிருக்கிறேன். இப்போதே நான் இறந்து போகாவிட்டால் என்னுடைய மூளை வெடித்துச் சிதறிவிடும் என்று யாரோ என்னைப் பயமுறுத்துகிறார்கள். யாரும் என்னைத் தேட வேண்டாம். ஓடுகிறேன், ஓடுகிறேன், ஓடிக்கொண்டேயிருக்கிறேன்.*

இப்படிக்கு
(கையொப்பம்)
அல்பட் மேவா கியூவான்
(சிரேஷ்ட பொலிஸ் அத்தியட்சகர்)

பொலிஸுக்கென வழங்கப்பட்ட கித்தான் பையிலே எல்லா பொருட்களையும் திணித்த கியூவான் ஆடைகளை சரிசெய்து சப்பாத்தை அணிந்தார், முகத்திற்கு கிறீம் தடவினார், பயணம் ஆரம்பமானது. பிசாசுமையத்தைப் போல கியூவானுக்கு பரிச்சயமான இன்னொரு இடம் இருந்தது. நரிக்காடு. நரிக்காட்டை நோக்கித்தான் அவர் தன்னுடைய பயணத்தை ஆரம்பித்தார். அது பாழடைந்த நீண்ட மண்வீதி; இரு மருங்கிலும் மூங்கிற் புதர்களும், நாணற்புற்களும்; குடிசைகள் கூட கிடையாது. வீதி மொட்டையாக முடியுமிடம் அடர்ந்த வனமாக இருந்தது. அடர்ந்த வனத்துக்கு நடுவிலேயிருந்த வெளியொன்றுக்குத்தான் கியுவான் வந்துசேர்ந்தார். அங்கே புளியமரம் நின்றது. புளியமரத்துக்கருகில் கற்பாறை. அதன்மீது அமர்ந்துகொண்டார் கியுவான். நீண்ட நேரம், மிகமிக நீண்ட நேரம்; நேரம் போனதே தெரியவில்லை.

'வணக்கம் ஐயா' நரிக்காடென்று இதற்கு பெயரிட்டாலும் யானைகள் கூட்டம் கூட்டமாக வரும் இடமாக இருந்த மனித சஞ்சாரமற்ற இக் காட்டுக்குள் மனிதக்குரலா? கியூவான் திரும்பிப் பார்த்தார். ஒரு பெண் நின்றுகொண்டிருந்தாள். 'வணக்கம் ஐயா, நெடு நேரமாக நான் உங்களை அவதானித்து கொண்டு இருக்கிறேன். கைத்துப்பாக்கியை நெற்றிப் பொட்டில் வைக்கிறீர்கள்; எடுக்கிறீர்கள்; பிறகு ஆழ்ந்த யோசனையில் மூழ்கி விடுகிறீர்கள். இப்படி நூறு தடவையாவது செய்திருப்பீர்கள். உங்களுக்கு என்னதான் நேர்ந்துவிட்டது?" என்று இரக்கத்துடன் கேட்டாள் பெண்மணி.
'நான் தற்கொலை செய்துகொள்வதற்காக வந்திருக்கிறேன்'
'தற்கொலை செய்வது கோழைகள் செயல் என்று நான் கேள்விப்பட்டிருக்கிறேன்'

'பெண்ணே, நான் அந்த வகையறாவைச் சேர்ந்தவன் என்றா நினைத்து விட்டாய்? நான் கோழையல்ல, வீரன். அகன்ற தோள்களை உடைய கம்பீரமான வீரன்' என்று மார்தட்டினார் கியுவான்.

'அப்படியானால் ஏன் தற்கொலை செய்யத் தயங்குகிறீர்கள்? இறுதி நேரத்தில் மரண பயம் வந்து விட்டதாக்கும்' என்று கேலி கலந்த தொனியில் பெண்மணி கேட்க கியுவானுக்கு கோபம் வந்தது. முன்னைய காலத்து கியுவானாக இருந்திருந்தால் இப்போது அவளுடைய உயிர் பிரிந்து விட்டிருக்கும். இப்போதோ இற்றுப்போன வேங்கை. தன்னுடைய முகத்தை அவளுடைய முகத்துக்கு நெருக்கமாக கொண்டுபோன கியூவான் 'பெண்மணியே என் கண்களை நன்றாக உற்றுப்பார், அந்தக் கண்களிலே மரண பயம் இருப்பதை நீ காண்கிறாயா?" என்று கியூவான் முழங்க திக்குமுக்காடிப் போன பெண்மணி தயக்கத்துடன் இல்லையென்று தலையாட்டினாள்.

கியூவான் தலையை இழுத்துக் கொண்டே 'மன்னித்துக்கொள், பெண்மணியே, ஏன் நூறு தடவை யோசிக்கிறேனென்று கேட்டாயல்லவா, சொல்கிறேன். துப்பாக்கிச் சன்னம் என் உயிரை ஒரு கணத்துக்குள் குடித்துவிடும். ஒரு செக்கனுக்குள் என் உயிர் பிரிந்துவிடுவதென்பது ஒருபோதும் நடக்கக்கூடாது' "ஏன்?" என்று ஆச்சரியத்துடன் கேட்டாள் பெண்மணி. "பெண்மணியே, நீங்கள் நினைப்பது போல் நான் கோழையோ, மரணபயம் கொண்டவனோ அல்லன். நான் வருந்தி வருந்திச் சாக வேண்டும்; அழுந்தி அழுந்திச் சாக வேண்டும்; புழுத்துப் புழுத்துச் சாக வேண்டும். அதுதான் என் ஆசை" என்றார் கியுவான். 'அதுதான் ஏனென்று கேட்கிறேன். அப்படி என்ன பாரதூரமான குற்றத்தை நீங்கள் இழைத்தீர்கள்?' என்று ஆவலுடன் கேட்டாள் பெண்மணி. "பெண்ணே, நான் ஒரு இராட்சஷன், கொடுமைக்காரன், நரமாமிசம் சாப்பிடும் மனிதர்களைப் பற்றிக் கேள்விப்பட்டிருப்பாய் அல்லவா? அவர்களை விடவும் மோசமானவன் நான். பத்து வருடங்களாக ஆயிரக்கணக்கான அப்பாவிகளின் உயிரைக் காவு கொண்டுவிட்டு இப்போது மகாகனவான் போல் போல் பேசிக் கொண்டிருக்கிறேன்" என்றார் கியுவான்.

வியப்புடன் அவரை நோக்கி 'உங்களைப் பார்த்தால் அப்படிப்பட்ட ஆளாக தெரியவில்லையே. பெரிய இடத்து குடும்பப் பாங்கு உங்களிடத்தில் இருக்கிறது. அப்பாவியான முகம், கண்களில் வசீகரம், கம்பீரமாக வேறு ஆடை அணிந்திருக்கிறீர்கள்' என்று பெண்மணி அடுக்கிக் கொண்டே போக "பெண்மணியே தோற்றத்தை பார்த்து எவரையும் எடைபோடக்கூடாது. என் முகத்திற்கு நேரெதிரே நின்று பேசும் முதல் ஆள் நீங்கள் தான். நான் எப்படிப்பட்ட கொடியவன்

என்றால் என் விழிகளை தலை நிமிர்ந்து நேரடியாகப் பார்த்தவர்கள் அதற்கப்புறம் உயிர் பிழைத்ததே கிடையாது. நானொரு நெருப்புக் கிடங்கு" என்றார் கியுவான். அச்சத்தால் நிலைகுலைந்த பெண்மணி ஏகாந்தமான அவ்விடத்தை விட்டு வேகமாக நடக்க ஆரம்பித்தாள்.

'பெண்மணியே நில்லுங்கள்' என்று கட்டளையிட்டார் கியுவான். அவருடைய குரல் கணீரென்றும் அதட்டல் போலவும் தோன்றிற்று. அவள் நின்றாள். "பெண்மணியே பயப்படாதீர்கள். நான் உங்களுக்கு எத்தீங்கும் இழைக்கமாட்டேன். என் கதையை நீங்கள் கட்டாயம் கேட்க வேண்டும். ஏனென்றால் என் கதையை கேட்க இனிமேல் யாருமே வரமாட்டார்கள். யாருக்குமே தெரியாத இந்த அடர்ந்த காட்டுக்கு நான் வந்ததன் காரணம் கடைசி வேளையில் கூட யாருமே என்னைக் காப்பாற்றி விடக் கூடாது என்று தான். திடுதிடுப்பென்று நீங்கள் வந்து நிற்கிறீர்கள். நீங்கள் யார்? இந்த யானைக் காட்டிற்குள் தன்னந்தனியே என்ன செய்து கொண்டிருக்கிறீர்கள்?" என்று கேட்டார் கியுவான். சட்டென்று அவளுடைய கண்களில் இருந்து கண்ணீர்த்துளிகள் பொலபொலவென்று உதிர ஆரம்பிக்க கண்களைக் கைலேஞ்சியால் துடைத்துக் கொண்டே 'என்னோடு வாருங்கள்' என்றாள் பெண்மணி. கியுவான் அவளைப் பின்தொடர்ந்து போனார். வெளியின் அடுத்த முனையில் தூர்ந்து போன கல்லறை இருந்தது. அவள் அதற்கருகில் அமர்ந்து தலையை குனிந்தவாறு மெலிதாக விசும்பினாள். கியுவான் எதுவுமே பேசாமல் அவள் அமைதியடையும் வரை அவள் அருகிலேயே நின்று கொண்டிருந்தார்.

"இது என் கணவரின் கல்லறை. அவர் பத்துவருடங்களுக்கு முன் இறந்துபோனார். நான் ஓர் ஆசிரியை. என் கணவன் எழுதுவினைஞன். எங்களுக்கு இரண்டு பிள்ளைகள். நான் அப்போது கர்ப்பிணியாக இருந்தேன். என் கணவர் தானுண்டு தன் வேலையுண்டு என்று இருந்த அப்பாவி. வருமானம் போதவில்லை என்றாலும் நாங்கள் நிம்மதியாக வாழ்ந்து வந்தோம். ஒருநாள் அதிகாலை மூன்று மணியிருக்கும். வீட்டுக்குள் அத்துமீறி நுழைந்த மூன்று சிப்பாய்கள் என் கணவரின் மீது கொலைக் குற்றஞ்சாட்டி கடத்திச் சென்றார்கள். நான் எவ்வளவோ கெஞ்சியும் அவர்கள் நான் சொன்ன எதனையும் கேட்கவில்லை. அவர் நீரிழிவு நோயாளி. அந்த வேளையில் இரத்தத்தில் சீனி கூடி மயக்கத்தில் இருக்க நோயாளி என்றுகூடப் பார்க்காமல் இழுத்துக் கொண்டு போனார்கள். நான் அவரைத் தேடி எல்லா இராணுவ முகாம்களுக்கும் சென்றேன்; எல்லா பொலிஸ் நிலயங்களுக்கும் போனேன்; எல்லாப் பெரிய மனிதர்களையும் சந்தித்தேன். எல்லோருமே கையை விரித்து விட சடலமாவது கிடைக்கட்டுமே என்ற நப்பாசையில் மயானங்களுக்கும் போனேன்;

புதர்களுக் கிடையில் தேடினேன்; ஆற்றங் கரைகளில் தேடினேன்; மதகுகளுக்கு கீழே தேடினேன். எங்குமே கிடைக்கவில்லை.

“மூன்று மாதங்கள் கழித்து கெட்ட செய்தி வர கைக்குழந்தையையும் தூக்கிக் கொண்டு இந்த இடத்துக்கு வந்தபோது சிதைந்து நாராய்ப்போன என் கணவரின் சடலம் இருந்தது. வீட்டுக்கு கொண்டுபோகும் நிலையில் இருக்காததால் இங்கேயே அடக்கஞ் செய்து விட்டுடோம்” என்று சொல்லிக் கொண்டே வந்தவள் மீண்டும் தேம்பினாள். கியுவான் அவளைத் தேற்ற நினைத்தாலும் அதற்கான சக்தி அவரிடம் இருக்கவில்லை. தன்னுடைய வலது கையிலிருந்த கைத்துப்பாக்கியை பெண்மணியிடம் நீட்டினார் கியுவான்.
’எதற்காக துப்பாக்கியை என்னிடம் தருகிறீர்கள்?’
’முதலில் துப்பாக்கியை பெற்றுக் கொள்ளுங்கள். காரணத்தைப் பிறகு சொல்கிறேன்’
’ஐயா வேண்டாம் ஐயா. துப்பாக்கியைத் தொடுவதே பாவம் என்று எண்ணி வாழும் சாதி நாங்கள். ஒருபோதும் நான் அதனைத் தொடமாட்டேன்’ என்று மறுத்தாள் பெண்மணி. கியூவான் பலதடவை கெஞ்சியும் அவள் மசிந்து கொடுக்காமலிருக்கவே கியுவான் மண்டியிட்டு நிலத்தில் அமர்ந்து அவளுக்கு முன்னால் கைத்துப்பாக்கியை வைத்தார்.
’பெண்மணியே, என்னை மன்னித்து விடு. உன் கணவனைக் கொன்றது நான்தான்’
பெண்மணி நிமிர்ந்து அவரை வெறித்து பார்த்து ’இன்ஸ்பெக்டர் கியூவான் என்பது நீங்கள்தானா?’ என்று கேட்க அவர் ஆமாம் என்பது போல தலையை ஆட்டியதும் பெண்மணி ஆவேசமுற்றவளாக எழுந்து ஓடிவந்து சுள்ளிகளால் கியுவானுடைய முகம் விளாறாகமட்டும் அடித்தாள். கியுவான் அத்தனை அடிகளையும் தாங்கிக் கொண்டு பேசாமல் இருந்தார். அவருடைய நெற்றியில் இருந்தும், கன்னங்களிலிருந்தும் இரத்தம் கசிந்தது. சற்று நேரத்தில் பெண்மணி அமைதியாகி நிலத்திலே தலையைக் கவிழ்த்தவளாக அமர்ந்தாள்; நெடுநேரம் இருந்தாள்; அழுதாள்; நிமிர்ந்தாள்; நிமிர்ந்து அவரைப் பார்த்தாள்.
’சொல்லுங்கள் ஐயா, யாரோ செய்த கொலைக்காக எதற்காக அப்பாவியான என் கணவருக்கு இப்படி அநியாய தண்டனை கொடுத்தீர்கள்?’
கியுவான் சற்றுநேரம் அமைதியாக இருந்துவிட்டு பேச ஆரம்பித்தார்.
’பெண்மணியே, அது பெரிய கதை. நானும் கட்டளைத் தளபதியும் சேர்ந்து மரணதண்டனை கொடுக்கும் வேலையை ஆரம்பித்தோம். இம்மென்றாலும் மரணதண்டனை, ஏனென்றாலும் மரணதண்டனை. ஆரம்பத்தில் கொஞ்சம் கஷ்டமாகத்தான் இருந்தது. சிப்பாய்களும் தயங்கினார்கள். ஆனால் போகப் போக நாங்கள் சுவாரஷ்யமாக

எடுத்துக்கொண்டு மரண தண்டனையை நியாயப்படுத்த மிகவும் நுட்பமான முறையை கையாண்டோம். யாருக்கு மரணதண்டனை கொடுக்க இருக்கிறோமோ அவனுக்கு எதிராக கற்பனையான சாட்சியங்களை உருவாக்கி போலியாக குற்ற ஒப்புதல் வாக்கு மூலத்தை சோடித்து பலாத்காரமாக கையெழுத்தையும் பெற்றுக் கொள்வோம். எங்களுக்கு தோதான நீதிபதிகள் இருந்தார்கள். தஸ்தா வேஜுகளைத் தயார்செய்து வழக்கு நீண்ட காலமாக நடைபெற்றது போல் ஒரு தோற்றப்பாட்டை ஏற்படுத்துவோம். அந்த கட்டுக் கதைகளை பத்திரிகைகள், தொலைக்காட்சி மூலமாக ஒளிபரப்பினோம். பொதுமக்களும் எங்களை நம்பினார்கள். அதனால் மிகவும் ஆர்வத்தோடு எங்கள் கைங்கரியத்தை மேற்கொண்டு வந்தோம்...” என்று நிறுத்தினார் கியூவான்.

'எல்லாம் சரிதான், எந்த விதத்திலும் இவைகளில் சம்பந்தப்படாத என் கணவருக்கு ஏன் மரணதண்டனை வழங்கினீர்கள்?' என்று கேட்டாள் பெண்மணி.

'உன் கணவன் விஷயத்தில் சிறு தவறு நிகழ்ந்துவிட்டது' என்று நிறுத்தினார் கியூவான்.

'தவறா?'

'ஆமாம். கட்டளைத் தளபதியின் வேலைக்காரி ஒவ்வொரு ஞாயிற்றுக் கிழமையும் சந்தைக்கு மளிகைச் சாமான்களும், மரக்கறிகளும் வாங்கப் போவாள். ஒருநாள் அப்படிச் சென்ற போது உன் கணவரின் சகோதரன் தவறுதலாக அவள் மீது சைக்கிளால் மோத அவள் கீழே விழுந்திருக்கிறாள். அவள் மேனியில் நிறைய உராய்வுக் காயங்கள். கட்டளைத் தளபதி என்ன நடந்தது என்று வினவ அவள் கையும்வாயும் வைத்து அவன் மீது பொய் புனைந்து அபாண்டமாக குற்றஞ்சாட்டியிருக்கிறாள். தன்னைக் கெடுக்க வந்ததாக வேறு பொய் சொல்லியிருக்கிறாள். கடுஞ் சினத்தோடு காணப்பட்ட கட்டளைத் தளபதி இருபத்திநான்கு மணித்தியாலத்திற்குள் சம்பந்தப்பட்டவனைச் சடலமாக கொண்டு வரும்படி எனக்கு கட்டளை பிறப்பித்ததால் உன் கணவரின் சகோதரனுக்கு உடனடியாக மரணதண்டனை கொடுக்க நாங்கள் முடிவெடுத்தோம். உன் கணவரும், அவரின் சகோதரரும் இரட்டையர்கள் என்ற விடயம் களேபரத்தில் எங்களுக்கு தெரியாமல் போயிற்று. சிப்பாய்களுக்கும் அந்த விடயம் தெரியாது. புகைப்படத்தோடு முகத்தை ஒப்பிட்டு பார்த்து விட்டு உன் கணவனை கொண்டு வந்து விட்டார்கள்' என்றார் கியூவான்.

'ஆனால் அன்றைக்கு வந்த சிப்பாய்கள் கட்டளைத் தளபதியின் மனைவியைக் கொலை செய்ததற்காக கைது செய்வதாக என்னிடம் சொன்னார்கள்'

'அது சுத்தப்பொய். மரண தண்டனையை நியாயப்படுத்துவதற்காக நாங்கள் உண்டாக்கிய கட்டுக்கதை தான் அது. அவருடைய மனைவி பல வருடங்களுக்கு முன்பே டெங்கு வந்து இறந்து போய்விட்டாள்'
'அடக்கடவுளே!'
"இரண்டு மூன்று நாட்கள் கழிந்தபின் ஆள்மாறாட்டம் நடந்திருப்பதை அறிந்து கொண்டோம். இந்த விஷயம் எப்படியோ வெளியில் கசிய உன்கணவருக்கு எதிராகவும், புதிதாகவும் வழக்கொன்றை சோடித்து பத்திரிகைகளுக்கு அனுப்பியதுடன் உன் கணவரின் சகோதரனையும் கண்டுபிடித்து மரணதண்டனை நிறைவேற்றினோம். நாங்கள் எதிர்பார்த்தபடியே எல்லாம் நடந்தபடியால் மிகவும் மகிழ்ச்சிக் களிப்பில் பெரிய மதுபான விருந்தொன்றை ஏற்பாடு செய்தோம்" என்று கூறி நிறுத்தினார் கியுவான். ஆடாமல் அசையாமல் கியூவான் சொன்ன கதையைக் கேட்டுக் கொண்டிருந்த பெண்மணி உள்ளத்தில் முள்ளாய்ச் சித்திரவதைப் படுத்தும் தன்னுடைய துயரத்தை பகிர ஆட்கள் இல்லாமலும், வார்த்தைகள் இல்லாமலும் தடுமாறினாள்.

'பெண்மணியே இப்போது நான் சந்தோசமாக இருக்கிறேன். நான் எங்கு மரணமடையப் போகிறேனோ அது நல்ல இடமாக இருக்கிறது, உன் கணவரின் கல்லறை. நான் எப்போது மரணமடையப் போகிறேனோ அதுவும் நல்ல நாளாக இருக்கிறது, உன் கணவரின் நினைவு நாள். என்னுடைய கடைசி ஆசையையும் நிறைவேற்றினாயென்றால் என்னுடைய மரணமும் நல்ல மரணமாக இருக்கும்' என்றார் கியூவான்.
'என்ன பிதற்றுகிறீர்கள்?' என்று கேட்டாள் பெண்மணி.
'பிதற்றவில்லை. உண்மையைத் தான் சொல்கிறேன். என்னால் அழிந்துபோனவர்கள் ஏராளம். அவர்களின் உறவினர்கள் எவரையும் நான் கண்டதேயில்லை. உன்னுடைய கையால் செத்துப் போனால் ஒரு மரணத்திற்காவது பிராயச்சித்தம் செய்த திருப்தி கிடைக்கும்'
'நான் சொன்னேன் அல்லவா? நாங்கள் துப்பாக்கியைத் தொடுவதே பாவம் என்று நினைக்கிற சாதி'
'நீங்கள் சொல்வது சரியென்றாலும் என்னைப் போன்ற அநியாயக்காரர்களை அழிப்பதற்கு அதனைப் பயன்படுத்துவதில் தவறில்லை. நீயொரு ஆசிரியை புரிந்து கொள்வாய் என்று நம்புகிறேன்' என்றார் கியுவான். சற்று நேரம் சிந்தனையில் ஆழ்ந்தவள் அவர் சொல்வது சரி போலத்தான் அவளுக்குப் பட்டது.
'என்ன யோசிக்கிறீர்கள்?'
'எனக்கு சுடத்தெரியாதே'
'நான் சொல்லித் தருகிறேன்'

கியுவான் பயிற்சியை ஆரம்பித்தார். இங்கே என்ன நடக்கிறது? ஒன்றுமே புரியவில்லை. என் கணவனை கொன்றவனை பழிதீர்ப்பது என் கணவனின் சித்தமா? கடவுளின் சித்தமா? நடப்பதைப் பார்ப்போம்.

ஸைமினா வாழ்க்கையில் முதன்முதலாக துப்பாக்கியைத் தொடுகிறாள். கியுவான் அவளுக்கு சொல்லிக்கொடுக்க ஸைமினாவும் கீழ்ப் படிந்த மாணவியாக துப்பாக்கியால் சுடுவது சம்பந்தமான எல்லா நுட்பங்களையும் கற்றுக் கொண்டதும் கியூவான் அங்கிருந்த கற்பாறை மீது ஏறியமர்ந்து ஆடைக்கு மேலாக இதயமிருக்கும் இடத்திற்கு நேராக சிவப்பு வட்டமொன்றை வரைந்தவர் கைத்துப்பாக்கியை லோட் பண்ணி ஸைமினாவிடம் நீட்டி 'நேரம் வந்து விட்டது, தயாரா?' என்று கேட்டார். அவள் ஆம் என்பது போல தலையசைக்க 'சிவப்பு வளையத்திற்கு நேராக கைத்துப்பாக்கியை நீட்டு' என்று உத்தரவிட்டார் கியூவான். அவள் அப்படியே செய்தாள். 'நான் பத்துவரை எண்ணுகிறேன். பத்து என்று சொன்னதும் Triggerஐ அழுத்த வேண்டும்' என்று கியுவான் சொல்ல அவளும் சரியென்றாள்.

'1,2,3,........,10' கியுவான் கண்களை மூடிக்கொண்டார்.

'சுடு....'

'.........'

'சுடு.....'

'.........'

'என்ன யோசிக்கிறீர்கள்? சுடுங்கள்'

'சுட முடியவில்லை ஐயா' 'நேரம் போய்க் கொண்டிருக்கிறது, யோசிக்க வேண்டாம். உங்களின் கணவனின் ஆத்மா சாந்தியடைய வேண்டுமென்றால் நீங்கள் இதனைச் செய்துதான் ஆகவேண்டும். சுடுங்கள்' ஊஹும்..ஸைமினா எவ்வளவோ முயற்சித்தும் விரல்கள் மரத்துப் போனது போல் இருந்ததால் Triggerஐ அழுத்தவே முடியவில்லை. கையிலிருந்த துப்பாக்கி அவளை அறியாமலேயே கீழே விழ கியூவான் கித்தான் பையைத் திறந்து ஏதோவொன்றை உள்ளேயிருந்து எடுத்தார், தூக்குக்கயிறு. அந்த அமானுஷ்ய வேளையிலும் ஸைமினாவுக்கு சிரிப்பு வந்தது. கியூவான் சிரிக்கவில்லை. "எல்லாவற்றுக்கும் தயாராகத்தான் வந்திருக்கிறேன்" என்று சொல்லிக் கொண்டே உள்ளேயிருந்து நஞ்சுப் போத்தலையும் எடுத்துக் காட்டினார். 'நீங்கள் கொலைகாரர் என்று என்னால் நம்பவே முடியவில்லை. உங்களைப் பார்த்தால் கோமாளியைப் போல் தோற்றமளிக்கிறீர்கள்' என்றாள் ஸைமினா.

மிகவும் ஸீரியஸாக இருந்த கியுவான் கற்பாறைக்கு மேல் ஏறிநின்று புளியங்கொப்பொன்றைப் பிடித்து தான் கொண்டுவந்த தூக்குக் கயிற்றைக் கட்டினார். முடிச்சுக்களைப் போட்டு கழுத்துக்கு நேராக வளையமொன்றை உருவாக்கி பலகைத்திண்டை கீழே வைத்தவர் ஒவ்வொரு கோணங்களிலும் தூக்குமேடையை பார்வையிட்டார். எப்படி என் தூக்குமேடை என்பது போல ஸைமினாவை நோக்கினார் கியூவான்.

'பெயர் கேட்க மறந்துவிட்டேன். பெயரென்ன?'
'ஸைமினா'
'ஸைமினா, யாராவது தூக்குமேடையில் மரணிப்பதை நீங்கள் பார்த்திருக்கிறீர்களா?' ஸைமினா இல்லையென்று தலையாட்டினாள்.
'நான் ஆயிரக்கணக்கில் பார்த்திருக்கிறேன். நான் போட்ட தூக்குக்கயிற்றின் முடிச்சைப் பார்த்தாயா? எவ்வளவு அழகாக இருக்கிறது. அதிலிருந்தே நான் எவ்வளவு அனுபவசாலி என்று விளங்குகிறது அல்லவா?' என்றார் கியுவான். அவர் சொல்வது உண்மை. தூக்குக்கயிற்றின் முடிச்சு எவ்வளவு நேர்த்தியாக இருக்கிறது என்று எண்ணிக்கொண்டாள் ஸைமினா.

திண்டின் மீதேறினார் கியுவான். சுற்றுப்புறம் அமைதியாக இருந்தது; பறவைகள் இல்லை; யானைகள் இல்லை; வெயிலும் இல்லை; மழையும் இல்லை; வானத்தை அண்ணாந்து பார்க்க அது நீலநிறத்தில் நிர்மலமாக காணப்பட்டது. கியூவான் கயிற்றின் சுருக்கை தலைக்கு மேலாக கழுத்துக்கு மாட்டினார். அவருடைய கண்களிலிருந்து கண்ணீர் வழிந்து ஓடியது. எதுவும் பேசாமல் விறைத்துப் பார்த்தபடி இருந்த ஸைமினா கணவனின் ஞாபகம் வந்து விட்டதால் கண்கலங்கினாள். என் கணவனும் இப்படித் தானே இறந்துபோனார்.
'பெண்மணியே, நீங்கள் எதுவும் பேசமாட்டீர்கள் என்று எனக்குத் தெரியும். என்னை முடியுமானால் மன்னித்துவிடுங்கள். வாழ்க்கையில் அழாதவன் மிருகத்திற்கு சமம் என்று என் தாய் அடிக்கடி சொல்வாள். இப்போது முதல் தடவையாக அழுகிறேன். என் தாயை எப்போதாவது சந்தித்தால் நான் அழுதுகொண்டு தான் உயிரை விட்டேன் என்று சொல்லுங்கள்' என்று நிறுத்தினார் கியுவான்.

ஸைமினா பதில் சொல்லவில்லை. அவள் கணவனோடு பழங்காலத்திற்குச் சென்றுவிட்ட அதேவேளை கியுவான் தூக்குக் கயிற்றின் முடிச்சை இறுக்கிக் கொண்டே போனார். இப்போது கழுத்திற்கும், கயிற்றுக்கும் இடையில் எந்த இடைவெளியும் இல்லை. திண்டைக் காலால் உதைத்து தள்ளிவிட்டால் அடுத்தது மரணம்தான். அவருடைய இறுதிக் கணங்கள் நெருங்கிவிட்டன. இன்னும் இருப்பது ஒரேயொரு கணம்தான். கடைசியான ஒரேயொரு கணம்! நிமிர்ந்து அவரைப் பார்த்து ஸைமினா கேட்டாள், 'ஐயா, நீங்கள் தற்கொலை செய்து கொள்ளத்தான் வேண்டுமா?'



# காலத்தைத் தொலைத்தவர்கள் செல்லுமிடம்

எம்.எம்.நௌஷாத்

என்கண்கள் கூர்மையானவை. பளிச்சென்று பிரகாசித்தன, மூக்குக்கண்ணாடி அணியமாட்டேன், விழித்திரையில் பிம்பங்கள் துலக்கமாக விழுந் தன, பார்வை நரம்புகள் நன்றாக இயங்கின. மஞ்சள் பொட்டிடம், கதிராளி, பிசிர்தசைகள், வில்லைகள் எல்லாம் சரியே. என்றாலும் எப்படிப் பட்ட முட்டாள்தனம்! பெயர்ப் பலகை யைப் பார்க்காமல் பேரூந்தில் ஏறிவிட்டேன். சாமான்ய மனிதர்களின் ஆயிரக் கணக்கான எண்ணங்களைப் போலவே எனக்கும் கற்பனைகள் ஜாஸ்தி. கற்பனையிலேயே லயித்து நின்றதால் பெயர்ப்பலகையை வாசிக்காமல் பேரூந்தில் ஏறிவிட்டேன். பேரூந்தினுள் ஆண் பயணிகள், பெண் பயணிகள், சிறுவர்கள், குழந்தைகள் என்று எல்லாப் பயணி களும் முரட்டுத்தனமான முகத்தோற்றத்தோடு காட்சியளித்ததால் நான் திடுக்கிட்டேன். அவர்களைப் பார்த்ததும் உள்ளத்தில் அச்சஉணர்வு உண்டாகிற்று. விகாரத் தோற்றத்திலிருந்த என் பக்கத்து ஆசனப்பயணி என்னைப் பார்த்தானே பார்வை! என் சர்வாங்கமும் ஒடுங்கி, உடல் நடுங்கியது, முகம் வியர்த்தது, அதிரனலின் அதிகரித்தது, இதயம் வெகுவேகமாகத் துடித்தது. நான் டிக்கட் வாங்குவதற்காகக் கண்டக்டரைத் தேடினேன்.

“எத்தனையாம் வருடம் நீ பிறந்தாய்?” என்று என்னைப் பார்த்துக் கேட்டான் ஆசனப்பயணி. இதென்ன கேள்வி, பேரூந்து பயணம் போகிறது, என்னிடம் கேள்வி கேட்கவே உரிமையில்லாத அவன் என்னைப் பார்த்து கேள்வியைத் தொடுக்கிறான். பதில் சொல்ல விருப்பமில்லை என்றாலும் பதில் சொல் என்று என் இதயத்திற்குள் குந்திக் கொண்டு யாரோ கூவினார்கள், என்சிரசை அழுத்தினார்கள், நான் விதிர்விதிர்த்தவனாக ’1963’ என்றேன். “பிறந்த திகதியைச் சொல்லு”
“பெப்ரவரி பன்னிரெண்டு”

“ஓகே. நீ ஏன் பிறந்தாய்?” நான் மிரளமிரள விழித்தேன். என்ன நினைத்தானோ தெரியாது, கேள்வியைக் கேட்ட பயணி கைகுலுக்கும் தோரணையில் தன்னுடைய வலதுகரத்தை நீட்ட நானும் வலது கரத்தை நீட்டினேன். இருவரும் கைகுலுக்கிக் கொண்டோம். வயதாகத் தோற்றமளித்த பயணி என்னைப் பார்த்து “மனிதனே அஞ்சவேண்டாம். நாங்களும் உன்னைப் போல் மனிதர்களே, நாங்கள் கேட்பது இலகுவான வினாக்கள் என்று சொல்ல எல்வோரும் விழுந்து விழுந்து சிரிக்க ஆரம்பித்தார்கள்.

“எதற்காக விழுந்து விழுந்து சிரிக்கிறீர்கள்? நான் பிழையாகப் பேசவில்லையே” “நீ பயணத்திற்குத் தயாராகத் தான் வந்திருக்கிறாயா?” என்று எகத்தாளமாகக் கேட்டான் ஒருவன். “அதிலென்ன சந்தேகம்?

என்னிடம் போதியளவு பணம் இருக்கிறது. தேநீர் அருந்தலாம், பகலுணவு சாப்பிடலாம், உனக்குப் பணமுடை இருக்குமானால் சொல். உனக்கும் பயணச் செலவு தருகிறேன்" என்றேன் நான். "பணத்தை நம்பியா இந்தப் பயணத்தை ஆரம்பித்திருக்கிறாய்? வேறு ஒன்றுமில்லையா? நற்காரியங்கள் செய்யவில்லையா? மனிதகுலத்தின் உயர்ச்சிக்காக ஏதாவது செய்திருக்கிறாயா? பாதையோரத்தில் பசியோடு கெஞ்சிய மனிதனுக்காக ஓர் உணவுப் பார்சலையாவது வாங்கிக் கொடுத்திருக்கிறாயா?" என்று கேட்டான் கிழவன். "பெரியவரே, நீங்கள் புதிர் போட்டுப் பேசுகிறீர்கள். பேரூந்திலே பயணம் செய்வதற்கு நல்லவனா கெட்டவனா என்ற ஆராய்ச்சி தேவையே இல்லை. டிக்கட் வாங்க காசு வைத்திருந்தால் அதுவே போதும்" என்றேன் நானும் விட்டுக் கொடுக்காமல்.

"நீ சரியான பேரூந்தில் தான் ஏறியிருக்கிறாயா?"

"ஆமாம்"

"அதெப்படி நிச்சயமாகச் சொல்லுகிறாய்?"

"நான் இந்த வழியாக வருடக்கணக்கில் பயணஞ் செய்து கொண்டிருக்கின்றேன். வழிகள், கிராமங்கள், பேரூந்துகள் எல்லாம் எனக்கு அத்துப்படி. இந்தப் பேரூந்து இந்த வழியாக ஒவ்வொரு நாளும் வரும், நானும் ஒவ்வொரு நாளும் ஏறிக் கொள்வேன்"

"பேரூந்தின் இலக்கத் தகட்டையாவது அவதானித்தாயா?"

"நீங்கள் என்னை பொலிஸ்காரன் என்றா நினைத்துக் கொண்டிருக்கின்றீர்கள்?" என்று சற்றுக் காரமாகவே கேட்டேன் நான்.

"ஆகவே, நீ பேரூந்தின் பெயர்ப்பலகையைப் பார்க்கவில்லை, பேரூந்தின் இலக்கமும் தெரியாது, கையிலே நிறையப் பணம் வைத்திருக்கிறாய். எந்தக் குறிக்கோளும் இல்லாமல் பணத்தை மட்டுமே நம்பி பேரூந்தில் ஏறியிருக்கிறாய், நல்ல வேடிக்கை. பரவாயில்லை உன்னுடைய பணத்தைக் கொண்டு என்ன செய்யலாம் என்று ஒரு பரீட்சை வைத்துப் பார்ப்போம்" என்று சொன்ன கிழவன் என்னிடம் ஒரு குப்பியை நீட்டி "குடித்துவிடு, சொட்டுக்கூட மிச்சம் வைக்காமல் எல்லாவற்றையும் குடித்துவிடு" என்றான். கிழவன் பேசிய தோரணை இராணுவ அதிகாரி பயமுறுத்தி கட்டளையிடுவதுபோல் இருந்தது. நான் அச்சத்துடன் குப்பியை வாங்கி கண்ணுக்கு நேராகப் பிடித்துப் பார்த்தேன். ஒரு மஞ்சளான திரவம் குப்பிக்குள் இருக்க ஒட்டப்பட்டிருந்த லேபலில் நஞ்சு என்று எழுதப்பட்டிருந்தது. அதற்கு கீழே மண்டையோட்டின் படம். பயத்தினால் என் உதடுகள் உலர்ந்து ஒட்டிக்கொள்ள "ஐயோ, இது நஞ்சு, குடித்தேனென்றால் செத்துவிடுவேன்" என்றேன் பயத்துடன். "ஒரு நோக்கமும் இல்லாமல் பயணித்துக் கொண்டிருக்கிற நீ இருந்தாலென்ன இறந்தாலென்ன எல்லாம் ஒன்றுதான்" என்றார் கிழவர்.

தெரியாத்தனமாக கொடிய அரக்கர்களிடம் மாட்டிக் கொண்டிருக்கிறேன். இவர்கள் ஒன்றில் பைத்தியக்காரர்களாக இருக்க வேண்டும். அல்லது பேரூந்தைக் கடத்தி நரகத்திற்குப் போய்க் கொண்டிருக்கிறவர்களாக இருக்க வேண்டும். "ம்...துரிதமாகக் குடிகுடி" என்று கிழவர் அதட்ட மற்றப் பயணிகளும் "குடிகுடி" என்று கூச்சலிட்டார்கள். நான் அவசர அவசரமாக பிரயாணப் பையைத் திறந்து இரண்டு பணக்கற்றைகளை எடுத்து கிழவரிடம் நீட்டி "பெரியவரே, இந்தப் பணத்தை வைத்துக் கொண்டு எனக்கு உயிர்ப்பிச்சை கொடுங்கள்" என்று அழாக்குறையாகக் கெஞ்சினேன். "ஏன் இரண்டு பணக்கற்றைகளை மட்டும் தந்தாய்? மீதியை எதற்காக வைத்திருக்கிறாய்?" என்றுகேட்டான் கிழவன். "வீட்டுச் செலவிற்கு வைத்திருக்கிறேன்" "உயிரே போனபிறகு அந்தப் பணத்தை வைத்துக் கொண்டு என்ன செய்யப்போகிறாய்?" என்று கிண்டலடித்தார் கிழவர். எனக்கு பளிச்சென்று ஒரு யோசனை தோன்றவே எதிர்பாராாத விதத்தில் பேரூந்தின் ஜன்னலிற்கூடாக நஞ்சுக் குப்பியை மிக வேகமாக எறிந்தேன். கிழவர் புன்னகைத்தவாறே "புத்திசாலித்தனமும் உன்னிடம் இருக்கிறது. ஒரு கண்டத்திலிருந்து எப்படியோ தப்பி விட்டாய். மறு கண்டத்திலிருந்து எப்படித் தப்புவாய் என்று பார்ப்போம்" என்று சொன்னவர் பஸ்ஸை நிறுத்தும்படி பேரூந்தின் சாரதிக்கு சைகை செய்ய பேரூந்து நின்றது.

கிழவர் "இதற்குமேல் நீதான் பேரூந்தைச் செலுத்திக் கொண்டு போகிறாய். போய்ச் சாரதியின் ஆசனத்தில் அமர்ந்துகொள்" என்று எனக்கு உத்தரவிட "பேரூந்தையா ஓட்டிச் செல்லச் சொல்லுகிறீர்கள்? பைத்தியக்காரர்கள் நீங்கள் எல்லோரும் சேர்ந்து தற்கொலையா செய்து கொள்ளப்போகிறீர்கள்? பேரூந்தை விடுங்கள். சாதாரண பைசிக்கிள் ஓடக்கூட எனக்குத்தெரியாது" என்றேன் நான். என்னுடைய பதிலைக் கேட்டதும் இருவர் என்னை அலாக்காகத் தூக்கிக் கொண்டு போய் சாரதியின் ஆசனத்திலே அமரச்செய்ய நான் வேறுவழியின்றி கடவுளைப் பிரார்த்தித்துக் கொண்டே பேரூந்தை ஸ்ராட்செய்தேன். எங்கயோ எப்போதோ படித்த "முப்பது நாட்களில் சாரதியாவது எப்படி?" என்ற புத்தகத்தை ஞாபகப்படுத்திக்கொண்டு பேரூந்தைச் செலுத்த ஆரம்பித்தேன். பேரூந்தைக் கட்டுப்பாட்டிற்குள் வைத்திருக்க நான் பகீரதப்பிரயத்தனம் எடுக்க வேண்டியிருந்தது. ஏதும் ஆகிவிட்டால் முதலில் உயிர் இழக்கப் போவது நான் என்ற பயம் காரணமாக எவ்வளவுதான் பேரூந்தைக் கவனமாக ஓட்டிச் சென்றபோதிலும் ஓரிடத்தில் வைத்து நான் நிலைகுலைந்து போக பேரூந்து மிக வேகமாக பாதை ஓரமாக நடப்பட்டிருந்த மின் கம்பத்தை நோக்கி தறிகெட்டுஓடியது. நான் கண்களை இறுக்கி மூடிக் கொள்ள இதயம் அப்படியே நிற்க சடுதியாக வாகனமும் நின்றது. நான் கண்களைத்

திறந்து பார்க்க Handbrakeஐப் போட்டு பேரூந்தை நிறுத்தியிருந்தார் கிழவர்.

“எங்களையெல்லாம் கொல்லவா பாரக்கிறாய்?” என்று நமட்டுச்சிரிப்பு சிரித்தபடி கிழவர் என்னைப் பார்த்துக் கேட்டார். உண்மையில் நான் பேரூந்துக்குள் இருக்கிறேனா? வெளியில் பார்த்தால் எல்லாம் நிஜமே. நீலநிற ஆகாயம், காட்சிகள், மரங்கள், பூஞ்சட்டிகள், நீரோடை எல்லாம் அப்படி அப்படியே இருக்கின்றன. கனவா? அல்லது எங்யோ பொறியில் மாட்டிக்கொண்டு விழிக்கிறேனா? கடவுளே, இந்தக் காதகர்களிடமிருந்து எண்னைக் காப்பாற்ற மாட்டாயா? நான் ஆழ்ந்த யோசனையில் இருந்தவேளை என்னை தட்டிஎழுப்பினார் கிழவர்.
“நன்றாகத் துாங்கிக் கொண்டிருக்கிறாய்”
“கொஞ்சம் கண்ணயர்ந்து விட்டேன்”
“நீ வாழ்க்கையில் எவ்வளவு காலம் துாங்கியிருக்கிறாய்?”
“இரவு வந்தால் அல்லது துாக்கம் வருவதாக இருந்தால் எந்ந மனிதனும் நித்திரை கொள்ளத்தான் செய்வான். முண்ணான் ஊடாக மூளைக்குச் செல்லும் Reticular Fibres ஊடாகச் செல்லும் துாண்டல்கள் குறைவடையும் போது மனிதனுக்கு நித்திரை வரும்” என்று நான் விளக்கமளிக்க “அற்புதமான விளக்கம், உனக்கு விஞ்ஞான அறிவும் இருக்கத்தான் செய்கிறது. என்றாலும் வாழ்க்கையின் மூன்றிலொரு பகுதியை நீ வீணடித்து விட்டாய்” என்றார் கிழவர்.

“இப்போது என்ன செய்யச் சொல்லுகிறீர்கள்? உங்கள் பேரூந்தில் ஏறி நான் சொல்லொண்ணாத் துன்பங்களை அனுபவிக்கீறேன். இன்னும் ஏதாவது இருந்தால் சொல்லுங்கள்”
“இப்போது தான் வாழ்க்கை ஆரம்பமாகியிருக்கிறது. இதற்குள் அலுத்துக்கொண்டால் எப்படி? பேரூந்து நிறுத்தியாகிற்று, இறங்கு” என்று கிழவர் சொல்ல நான் நிம்மதிப் பெருமூச்சுடன் இறங்கினேன். பேரூந்து நிறுத்தப்பட்ட இடம் பெரிய மிளகாய்த் தோட்டம். சிவப்புச் சிவப்பாய் மிளகாய் காய்த்து கண்ணுக்கு ரம்மியமாக இருக்கும் தோட்டத்தின் அழகை அனுபவித்துக் கொண்டிருந்த வேளை கிழவர் என்தோளில் கைவைத்து “தோட்டத்தை ரசிக்கிறாய், அழகாகவா இருக்கிறது?” என்று கேட்க நான் “ஆம் மிக அழகாக இருக்கிறது” என்றேன்.
“தோட்டத்திலுள்ள சில மிளகாய்ச் செடிகள் வாடிப்போயிருக்கின்றன, பார்த்தாயா? நீதான் தண்ணீர் ஊற்ற வேண்டும்”
“நானா?”
“நீதான்”
“இந்தத் தோட்டத்தின் சொந்தக்காரன் எங்கே? நீர் பாய்ச்சுவது அவனுக்குரிய வேலை”

“அதனைக் குறித்து நீ கவலைப்பட வேண்டிய அவசியம் இல்லை, செய்யச் சொல்லும் போது செய்வதுதான் உன்னுடைய வேலை”

“எனக்கு பழக்கமில்லை. நான் பல்கலைக்கழகத்திலே விரிவுரையாளராகக் கடமையாற்றுகிறேன். கற்பிப்பது தான் என்தொழில்”

“ஓ! மிகப் படித்தவனாக இருக்கிறாய், நீ ஒருபோதும் ஆகாரம் உட்கொண்டதில்லையா?” “பெரியவரே ஏன் முட்டாள்தனமாகப் பேசுகிறீர்கள்? ஆகாரம் உண்ணாமல் மனிதன் உயிர்வாழ முடியுமா? நான் அரிசிச் சோறு சாப்பிடுவேன், கோதுமையால் உரொட்டி செய்து உண்ணுவேன்” “நன்றாகப் புரிகிறது. உடம்பு இப்படி கொழுகொழு என்று ஊதிப்போய் இருக்கும்போதே நான் நினைத்தேன். அரிசியைத் தரக்கூடிய நெல்மணியையும் கோதுமை மாவைத்தரும் கோதுமைச் செடிகளையும் எந்தத் தொழிற்சாலையிலே செய்கிறார்கள்?”

“நீங்கள் பேசுவதெல்லாம் முட்டாள்தனமான பேச்சு. கோதுமை, நெல், சோளம், பார்லி இவைகளெல்லாம் நாம் தொழிற்சாலைகளில் உற்பத்தி செய்யமுடியாது. அவை நிலத்தில் விளைகின்றன”

“ம்... புரிந்து விட்டதுதானே, சேற்றுக்குள் இறங்குங்கள்” என்று கிழவர் என்னை அவசரப்படுத்த நான் வேறு வழியின்றி இறங்கினேன்.

கிழவர் என் கையில் நீர்க்குழாயைத் தர “செடிகளுக்கு நீர் பாய்ச்சுவதற்கு எத்தனையோ நவீன தொழிநுட்பங்கள் இருக்கும்போது எதற்காக இப்படி புராதன காலத்து முறையைப் பின்பற்றுகிறீர்கள்?” என்று கேட்டேன் நான். கிழவர் என்னை முறைத்துப் பார்க்க நானும் மிளகாயச் செடிகளுக்கு நீரை விசிற ஆரம்பித்தேன். பெரிய தோட்டமென்பதால் நான் களைத்துப்போக வியர்வையால் ஆடைகள் நனைந்தன. பேரூந்திலிருந்த அனைத்துப் பயணிகளும் வேடிக்கை பார்த்துக்கொண்டிருந்ததால் எனக்கு வெட்கமாயிற்று. கிழவர் என் தோளிலே தட்டி ”நன்றாகச் செய்தீர்கள்” என்று சொல்ல எனக்கு எரிச்சலாக இருந்தது. “மனிதனே, ஏன் பேசாமல் நிற்கிறாய்? நீ அழகை ரசிப்பதில்லையா? கலையுணர்வு கிடையாதா? உள்ளம் என்பது கிடையாதா?” என்று கேட்டார் கிழவர். நான் சிரித்து விட்டேன்.

“மனிதனே, ஏன் சிரிக்கிறாய்?”

“சிரிக்காமல் வேறென்ன செய்வது? கழுத்திலே கத்தியை வைத்தவாறே அழகான வெள்ளை ரோஜாவை கண்ணுக்கு முன்னாலே காட்டி அழகாக இருக்கிறதா என்று கேட்டால் அழகாக இருக்கிறது என்று சொல்வேனா அல்லது உயிரைப் பற்றிக் கவலைப்படுவேனா?” என்று கேட்டேன் நான்.

“இன்னமும் அதைப் பற்றித்தான் யோசித்துக் கொண்டிருக்கிறாயா? வாழ்க்கையின் அர்த்தத்தை நீ புரிந்து கொள்ளவேயில்லையே. எல்லோருடைய கழுத்துக்கு மேலாகவும் தூக்குக் கயிறு தொங்கிக்

கொண்டிருக்கிறது. அதற்குப் பயந்து நாம் வாளாவிருக்க முடியாது. வாழ்க்கையை அனுபவிக்க வேண்டும், ரசிக்கவும் வேண்டும்"
"எதற்காக இதனை எனக்குச் சொல்லுகிறீர்கள்? நான் நல்ல சுகதேகியாக இருக்கிறேன். எனக்கு எந்த நோய்களுமில்லை, பிரஷர் இல்லை, நீரிழிவு வியாதி இல்லை, அழகான வீடு கட்டியிருக்கின்றேன். மனைவி, பிள்ளை குட்டிகள் இருக்கின்றார்கள். சந்தோஷமாக வாழ்கிறோம். தூக்குக்கயிற்றைப் பற்றிய சிந்தனை எனக்கெதற்கு?" என்று நான் கடுப்புடன் கேட்டேன். "பேரூந்துக்கு வெளியே பார்த்தாயா? பாதாளம். உன்னை அப்படியே அலாக்காகத் தூக்கி அந்த அதலபாதாளத்திலே எறிந்துவிட்டால் என்ன நடக்கும்? இந்தக் கணத்திலேயே இறந்து போய் விடுவாயல்லவா?" என்று கேட்டார் கிழவர். நான் பயந்து விட்டேன். இந்தக் கயவர்கள் அப்படிச் செய்யக்கூடியவர்கள் தான். இவர்கள் உண்மையிலேயே யார்? மனிதர்களா? முட்டாள்களா? பைத்தியக்காரர்களா? கவிஞர்களா? கொலைகாரப் பயல்களா? வேற்றுகிரக வாசிகளா? என்னைப் புசிப்பதற்கென வந்துள்ள நரமாமிசபட்சணிகளா? என்னை ஏமாற்றுவதற்காக நடித்துக் கொண்டிருக்கிறார்களா?

"இப்போது கேட்கிறேன். எந்த ஊருக்குப் போவதற்காகஇந்தப் பேரூந்தில் நீ ஏறினாய்?" என்று கேட்டார் கிழவர். "எப்போதோ கேட்டிருக்க வேண்டிய கேள்வி" என்றேன் நான்.
"பரவாயில்லை சொல்லு"
"என்னுடைய ஊர் குரங்குமலை. குரங்குமலை பேரூந்தில் ஏறுவதாக நினைத்துக் கொண்டு முட்டாள்தனமாக உங்களிடம் வந்து மாட்டிக்கொண்டேன். இதுதான் நடந்தது"
"என்னுடைய உண்மை அபிப்பிராயத்தைச் சொல்வதாக இருந்தால் நீ எங்களிடம் நல்ல பெயரை வாங்கிவிட்டாய். குரங்குமலைக்குச் செல்ல இன்னும் கொஞ்சநேரந்தான் இருக்கிறது. அதற்குமுன் கடைசியாக ஒரு பரீட்சை இருக்கிறது"
"இத்தனை பரீட்சைகள் வைத்தது போதாதென்று இன்னமுமா வைக்கப்போகிறீர்கள்? நீங்கள் சுவர்க்கத்தீவு பரீட்சைத் திணைக்களத்திலிருந்தா வருகிறீர்கள்?"
"என்ன ஜோக்கடிக்கிறாயா?"
"இல்லை உங்களுக்கு வேறு வேலையே இல்லையா? குடும்பம் இல்லயா? மனைவிமக்கள் இல்லயா? தாய் தகப்பன் இல்லயா? தொழில் செய்வதில்லையா? சம்பாதிப்பதில்லையா? சோலிகளே இல்லையா?" என்றேன் நான் கடுப்பாக. "நீ இப்போது நன்றாகப் பேசக் கற்றுவிட்டாய். இனி எல்லாம் முடிந்தது. இறங்கு இறங்கு" என்று துரிதப்படுத்தினார் கிழவர்.

எப்படியோ துணிச்சல் வர அளவு மீறிப்போகும் இந்தப் பரதேசிக் கூட்டத்திற்கு நல்ல பாடமொன்று கற்பிக்க வேண்டும் என்று மனதில் தீர்மானம் எடுத்தேன். நாம் இறங்கிய இடத்தில் முரட்டுக் காளை

அடக்கும் போட்டி நடைபெற்றுக் கொண்டிருக்க ரசிகர்கள் ஆரவாரித்துக் கொண்டிருந்தார்கள். நான் கிழவரைப் பார்க்க கிழவர் என்னைப் பார்த்தார். "பெரியவரே நீங்கள் என்ன சொல்லப் போகிறீர்கள் என்று எனக்கு தெரியும். அந்தக் காளையை அடக்கச் சொல்லி எனக்கு உத்தரவிடப் போகிறீர்கள். ஏன் எனக்கு மட்டுமே உத்தரவுகளைப் பிறப்பித்துக் கொண்டிருக்கிறீர்கள்? நீங்கள் போய் அந்தக் காளை மாட்டை அடக்கினால் என்ன?" என்று நான் சொல்ல கிழவர் நம்ப முடியாமல் என்னைப் பார்த்தார்.
"என்னைப் பார்த்தா இப்படிச் சொல்லுகிறாய்?"
"உங்களைப் பார்த்துத் தான் சொல்கிறேன். உங்களால் முடியாவிட்டால் உங்கள் கோஷ்டியைச் சேர்ந்த எவரையாவது அனுப்புங்கள்"

யாராவது காளைச் சண்டைக்கு முன்வருகிறார்களா என்று கிழவர் வேறுவழியின்றி சுற்றுமுற்றும் பார்த்தார். ஒருத்தன் மதுவருந்தி போதையில் பாடிக் கொண்டிருக்க, இன்னொருத்தி தன் ஆண் தோழனுடன் சல்லாபித்துக் கொண்டிருக்க, மூன்றாவது ஆள் பத்திரிகை வாசித்துக் கொண்டிருக்க, இரண்டு சிறுவர்கள் சண்டைபிடித்துக் கொண்டிருக்க, மற்றவர்கள் எங்கோ பார்ப்பதுபோல் வானத்தை அண்ணாந்து பார்த்து பாவ்லா பண்ணிக்கொண்டிருக்க கிழவர் சோர்ந்து போனார். "பேரூந்தில் ஏறலாமா?" என்று நான் உரத்துக் கேட்க கிழவர் தலையாட்டினார். கிழவருடைய ஆட்களும் முகங்கள் கறுத்துப் போய் ஒருவர்பின் ஒருவராக பேரூந்திற்குள் ஏறினார்கள். வாழ்க்கையில் எதிர்நீச்சல் போட வேண்டுமென்று என் தாய் அடிக்கடி சொல்லுவாள். இன்று அந்தத் தத்துவத்தைப் பிரயோகித்துப் பார்த்திருக்கின்றேன். வெற்றிக்கான சங்கேதம் அதுதான் என்பது தெளிவாகப் புரிந்ததால் மனதிற்குள் தைரியம் வந்துவிட்டது. வானத்திற்கு ஏணி வைத்து ஏறவும் தயாராக இருந்தேன். அவ்வளவு உற்சாகம்.

நான் பயணிகள் அனைவரையும் ஒருபார்வை பார்த்து 'வெட்டுக்கிளியைப் பற்றி பத்து வாக்கியங்கள் ஒவ்வொருவராகக் கூறுங்கள்' என்று உத்தரவிட
"எனக்குத் தெரியாதே"
"எனக்குத்தெரியாதே" என்று வாயைப் பிதுக்கியவர்கள் "வெட்டுக்கிளியைக் கண்டிருக்கிறீர்களா?" என்று நான் கேட்க "ஆம் ஆம்" என்று ஒரே கோரஸாகக் கத்தினார்கள்.
"வெட்டுக்கிளியின் நிறம் என்ன?"
"பச்சை" என்று மீண்டும் ஒரே கோரஸாகக் கத்தினார்கள். "அற்பமான வெட்டுக்கிளியைப் பற்றி உங்கள் எவருக்கும் தெரியாதா?" என்று நான் கடுமையாகக் கேட்க எல்லோரும் மௌனமாகத் தலைகுனிந்து நிற்க

கிழவர் தப்பித்து ஓடத் தயாரானவர் போலக் காணப்பட்டார். "நீலஅல்லி மலரைப்பற்றி தெரியுமா?" திடுக்கிட்டுப் போய் எல்லோரும் என்னைப் பார்த்தார்கள். "எரிமலைகளைப் பற்றித் தெரியுமா?" "நரக நுழைவாயில் என்றொரு இடம் இருக்கிறது. கேள்விப்பட்டிருக்கிறீர்களா?"
"கொம்பேறிமூக்கன் என்றால் தெரியுமா?" நான் அடுக்கிக் கொண்டே போக எங்கும் நிசப்தம் நிலவியது. கிழவருடைய ஆட்கள் மூச்சு விடக்கூடப் பயந்து காணப்பட்டார்கள். "இதோ குரங்குமலை வந்து விட்டது" என்று கூவினாள் சிறுமியொருத்தி. பேரூந்து சடாரென்று பிரேக் போட்டு நின்றது. "குரங்குமலை உங்களை அன்புடன் வரவேற்கிறது" என்ற பெயர்ப்பலகை கம்பீரமாக வரவேற்க பயணிகள் எனக்கு கைலாகு கொடுத்துவிட்டு தப்பினோம் பிழைத்தோம் என்று ஏறிக்கொண்டார்கள்.

முதன்முறையாக பேரூந்தின் பெயர்ப்பலகையை நான் படித்தேன். குரங்குமலைக்குப் பதிலாக வாழ்க்கைப் பேரூந்து என்று அங்கு இருந்தது. மனைவி நின்று கொண்டிருந்தாள். நான் அவளைப் பார்த்து மெலிதாகப் புன்னகைக்க அவள் முறைத்தவாறே முகத்தைத் திருப்பிக் கொண்டாள். "உனக்கு என்ன நேர்ந்தது? வாழ்க்கை என்ற பேரூந்தில் தெரியாத்தனமாக ஏறி மூடர்களுடன் சகவாசம் வைத்து களைத்துப்போய் வந்திருக்கிறேன். நீயோ என்றால் இங்கு பிகுபண்ணுகிறாய்" என்று ஆதங்கத்துடன் கேட்ட நான் மனைவியின் கையைப் பிடித்து "பேசுபேசு" என்று கூவினேன். அதற்கிடையில் ஆட்கள் கூடி "இந்தக் கிழவன் உனக்குத் தொந்தரவு தருகிறானா?" என்று கேட்டான் அங்கிருந்த இளைஞன். நான் நறநறவென்று பற்களைக் கடித்துக் கொண்டே "நான் கிழவனில்லை இளைஞன், இவள் என் மனைவி" என்றேன். கூட்டத்திலிருந்த எல்லோரும் வெடிச்சிரிப்பு சிரிக்க நான் அவமானத்தால் கூனிக்குறுகி நின்றேன்.

"ஆப்பிள்பழம் போன்ற அழகிய பெண்ணுக்கு நீ கணவனா?" என்று கேட்டான் அங்கிருந்தவன். "நான் ஏன் இருக்கக்கூடாது? நான் கம்பீரமான ஆண்மகன்" என்று பதிலளித்ததும் "இவர் என் கணவனில்லை, பைத்தியக்காரன்" என்று மனைவி முகத்திலறைந்தாற் போல் சொன்னாள். கூட்டத்திலிருந்தவர்கள் என்னைத் தரதரவென்று இழுத்துக்கொண்டு போய் மல்லாக்காகத் தூக்கி எறிந்தார்கள். பேரூந்தில் பயணஞ் செய்த களைப்பு, மனைவியின் சுடுசொற்கள், கூட்டத்தாரின் அடாவடித்தனம் இவையெல்லாம் ஒன்றுசேர நான் மயங்கி விழுந்தேன். விழித்துப் பார்த்த போது ஆஸ்பத்திரிக் கட்டிலில் கிடந்தேன். பக்கத்திலிருந்த தாதி நான் விழிப்பதற்காகவே காத்திருந்தவள் போல் "டாக்டர் கிழவன் விழித்துவிட்டான்" என்று கூவினாள். எல்லாவற்றையும் பொறுத்துக் கொள்ள முடிந்த எனக்கு

ஏதோ பேசிவைத்தாற்போல் எல்லோரும் என்னைக் *கிழவர்* என்று அழைப்பதைப் பொறுத்துக்கொள்ள முடியவில்லை.

தலைமாட்டுச் சீட்டை ஏந்தியபடி டாக்டர் என்னருகில் வந்தார்.
“உங்கள் பெயர் என்ன?”
“அஜாத்”
“வயது என்ன?“
“இருபத்தைந்து.......” நான் என்வயதைச் சொன்னதும் நோயாளர் விடுதியில் சிரிப்பு சிதறிப் பரவியது. டாக்டர் போன மறுகணமே நொண்டிநொண்டிப் போய் குளியலறைக் கண்ணாடியில் என்முகத்தைப் பார்த்த நான் அப்படியே ஸ்தம்பித்து விட்டேன். வாஸ்தவமாகவே நான் கிழவன்தான். தாடிவளர்ந்து அது நரைத்துப் போயிருக்க முகத்தில் சுருக்கம், பற்களில் அரைவாசி இல்லை. நான் ஆத்திரம் தாளாது பொருட்களைத் தூக்கி தாறுமாறாக எறிந்தேன், நிலைக்கண்ணாடியை உடைத்தேன். வாழ்க்கையில் இதுவரை எதுவுமே சாதிக்காத நான் எப்படித் திடீரென்று கிழவனானேன்? தாதி ஓடோடி வந்தாள். ஆட்கள் என்னைக் கெட்டியாகப் பிடித்துக்கொண்டார்கள், உடும்புப்புடி. “என்ன பெயர்ப்பலகை பார்க்காமல் உள்ளே நுழைந்துவிட்டீர்களா?” என்று தாதி கருணையுடன் கேட்டாள்.

பேருந்தில் பயணிகள் கேட்ட அதே கேள்வி இவளும் தொடுக்கிறாள். “பெயர்ப்பலகையை யார் பார்க்கவிட்டார்கள்? நானாகவா இங்கே வந்தேன்? இல்லையே... அதுசரி.. நீங்களெல்லாம் ஏன் இப்படி சம்பந்தா சம்பந்தமில்லாமல் கேள்விகேட்கிறீர்கள்?” என்று என்னை ஆசுவாசப் படுத்திக் கொண்டே. நான் கேட்க “காலத்தைத் தொலைத்தவர்கள் தான் இப்படித் தாறுமாறாக நடந்துகொள்வார்கள். என்னுடைய அனுமானம் என்னவென்றால் நீங்களும் காலத்தைத் தொலைத்து விட்டுத்தான் இங்குவந்து சேர்ந்திருக்க வேண்டும்” என்றாள் தாதி. “நீங்கள் சொல்வது எதுவும் எனக்குப் புரியவேயில்லையே” அங்கலாய்ப்புடன் கேட்டேன் நான். அவள் என்னை அழைத்துக் கொண்டுபோய் ஆஸ்பத்திரிக்கு முன்னால் அழகாகச் செதுக்கப்பட்டிருந்த பெயர்ப்பலகையைக் காட்டினாள், அதிலே *மயானம்* என்று எழுதப்பட்டிருந்தது. நான் பதில் சொன்னேன், “நான் இன்னமும் காலத்தைத் தொலைக்கவில்லை, பேருந்தில் இருந்தபோது நிறைய விஷயங்களை கற்றுக்கொண்டேன், என்னால் வாழ்க்கையை எதிர்கொள்ள முடியும், நான் வாழப்போகிறேன். முடியுமானால் சொல், உன்னை திருமணம் முடிக்கவும் நான் தயாராக இருக்கிறேன், உனக்கு விருப்பமா?”

என்ன நிறத்தில் இருந்தாலும் சரியே, எப்படி அழகாக இருந்தாலும் சரியே பலூன்களை எனக்குப் பிடிக்காது. ஏனென்றால் பலூன்களை பிசாசுகள் விரும்பி விளையாடுகின்றன. பிசாசுகள் யாரென்றால் குழந்தைகள். குழந்தைகள் எப்படிப்பட்டவை என்றால் யாருடைய சொற் கேட்பதுமில்லை; அடிபணிவதுமில்லை. குழந்தைகள் குழந்தைகளாக நடக்கமாட்டார்கள், பிசாசுகள். நான் குடியிருந்த தெருவின் கோடியிலே பலூன்வியாபாரியும் குடியிருந்தான். அவனைக் கண்டாலே நான் முகத்தைத் திருப்பிக் கொள்வேன். அவனிடம் எல்லா வகையான பலூன்களும் இருந்தன. யானை பலூன், தேவாங்கு பலூன், ஒட்டகச்சிவிங்கி பலூன், மரங்கொத்தி பலூன், பாம்பு பலூன், காண்டாமிருக பலூன் இப்படி எத்தனையோ வடிவங்கள். ஊதா, ஒலிவ்பச்சை, செம்மஞ்சள், கபிலம், கருநீலம், ஆகாய நீலம் இப்படி எல்லா நிறங்களிலும். பலூன் வியாபாரி பாட்டுப் பாடித்தான் தினசரி பலூன்களை விற்பான். அந்தப் பாட்டு இப்படி இருக்கும்.

*பலூன்கள் சும்மா பறப்பதில்லை,*

*மண்ணில் பூக்கும், இறக்கைகள் முளைக்கும், நிலவு நோக்கிப் பறக்கும்,*

*பலூன்கள் சும்மா பறப்பதில்லை,*

*நிறமாய் இருக்கும், அழகாய் சிறகடிக்கும். பச்சை என்றால் பசுமை இருக்கும்,*
*சிவப்பு என்றால் சூரியன் உதிக்கும்.*
*மஞ்சள் பலூனில் மனசும் பறக்கும்.*
*பாடசாலைச் சிறுமியர் வெள்ளை பலூன்கள்.*
*நீல பலூன்கள் கடலில் பயணம் செய்யும். பலூன்கள் சும்மா பறப்பதில்லை.*
*பலூன்கள் என் குழந்தையின் கவிதை. குழந்தையும் கவிதை.*

எனக்கு இது இனிமையான பாடல் அல்ல என்றாலும் பிசாசுகள் இந்தப் பாடலைப் பாடும். சிறுவர்கள் பலூன் வியாபாரியைச் சூழ்ந்து கொண்டு பலூன் வாங்குவார்கள். குழந்தைகளைக் கண்டிப்புடன் வளர்க்கத் தெரியாத தந்தைமார்களும், தாய்மார்களும் இவர்களோடு சேர்ந்து பலூன் வாங்குவார்கள், குதூகலிப்பார்கள், கைகொட்டிச் சிரிப்பார்கள், பலூன் நடனம் ஆடுவார்கள். என்னுடைய கிராமத்தில் வசந்த காலம் வந்துவிட்டால் சின்னஞ் சிறுசுகளுக்குக் கொண்டாட்டம் தான். வசந்தகாலத்தில் குழந்தைகள் பலூன்விழா ஆரம்பமாகிவிடும். உடம்பு முழுவதும் சிவப்பு ஆடை என்றால் சிவப்பு பலூன்கள், பச்சை என்றால் பச்சை பலூன்கள், மஞ்சள் என்றால் மஞ்சள் பலூன்கள் என்று குழந்தைகள் ஆயிரக்கணக்கில் பலூன்களை சுமந்து கொண்டு

வீதிகளில் ஊர்வலம் போவார்கள். யானைகளும், குதிரைகளும் செல்லும், கழுதைகளும் செல்லும், கிளி புறாக்களும் பறந்துசெல்லும்.

இந்த வருடமும் பலூன் விழா நடந்தது. ஆண்களும், பெண்களும் வீதியோரத்தில் நின்று கைகளை அசைத்து குதூகலத்தில் ஆழ்ந்திருந்தார்கள். ஊர்வலத்திலே நான்கு அனகொண்டா பலூன்கள் மீது எல்லோருடைய கண்களும் போயிருந்தன. பிரமாண்டமான உயரத்தில் வாய்களை ஆவென்று பிளந்து சிவப்பு தீப்பிளம்புகளைக் கக்க சிறுமிகளும், சிறுவர்களும் சூழ்ந்து கொண்டு ஆரவாரித்தார்கள். நான் பிள்ளைகளை தேடினேன். பிசாசுகள் வீட்டில் இல்லை, பலூன் விழாவைப் பார்க்கப் போய் விட்டன. மனைவியை தேட மனைவியும் இல்லை. நான் ஊர்வலத்தில் என் பிள்ளைகளைத் தேடினேன். மனைவி கைதட்டி உற்சாகப்படுத்திக் கொண்டிருக்க நான்கு அனகொண்டாக்கள் வேறு யாருமில்லை, என் மூன்று ஆண்களும், ஒரு பெண்ணும். நான் மனைவியை கடிந்து கொண்டேன்.
“நீ தானா இவர்களுக்கு பலூன்கள் வாங்கிக் கொடுத்தாய்”
“ஆம்”
“ஏன்?”
“குழந்தைகள் ஆசைப்பட்டார்கள்”
“நீ குழந்தைகளை கெடுத்துக் கொண்டிருக்கிறாய்” நான் கோபத்தில் ஊசியைக் கையிலெடுத்து நான்கு பலூன்களிலும் சொருக பிரமாண்டமான அனகொண்டா பலூன்கள் வெடித்துச் சுருங்கின.

மூத்த பையன் வயது பன்னிரண்டு. புதிய பைசிக்கள் வாங்கித் தரவேண்டும் என மனைவியிடம் நச்சரித்துக் கொண்டிருந்தான். செல்லப் பிராணிகளை செல்லமாகத் தட்டிக்கொடுக்கலாம். சிறு பிள்ளைகளுக்கு செல்லம் கொடுக்கக்கூடாது என்று என் தந்தை நல்லுபதேசம் செய்திருந்ததால் நான் இதற்கெல்லாம் இடம் கொடுக்காமல் இருந்தேன். ஆனாலும் மனைவியின் தொல்லை தாங்க முடியாமல் புதிய பைசிக்கிள் வாங்க ஒத்துக்கொண்ட நான் பையனுக்கு நிபந்தனைப் புத்தகம் கையளித்தேன். பைசிக்களை ஒவ்வொரு நாளும் பளிச்சென்று வைத்திருக்க வேண்டுமென்பது தான் முதல் நிபந்தனை. மற்றைய நிபந்தனைகள், வீணான பயணங்கள் கூடாது, நண்பர்களுக்கு பைசிக்களை ஓடக் கொடுக்கக் கூடாது, பாடசாலையிலிருந்து திரும்பி வரும்போது பாடசாலைச் சீருடையில் சிறிதளவேனும் அழுக்குப் படிந்திருக்கக் கூடாது, பரீட்சையில் எல்லாப் பாடங்களிலும் நூறு புள்ளிகள் எடுக்கவேண்டும். இப்படி நீண்ட பட்டியல்.

பைசிக்கிள் வந்த மறுகணமே பைசிக்கிளைச் சுற்றி அரை நிஜார்ப் பையன்கள் குழுமி விட்டார்கள். நான் அவர்களையெல்லாம் அதட்டி விரட்டினேன். “இனிமேல் யாரும் இந்தப்பக்கம் வரக்கூடாது, பைசிக்கிளைப் பார்க்கக் கூடாது. தொடக் கூடாது” என்று

இன்னுமொரு நிபந்தனையைச் சேர்க்க பையன் சரியென்று தலையாட்டினான். சற்றுநேரம் கழித்து திரும்பி வந்து பார்த்த போது பைசிக்கிளும் இல்லை, பையனும் இல்லை. "நீ கொடுக்கும் செல்லத்தால் விளைந்த விளைவு. பையன் கெட்டு குட்டிச்சுவராகி விட்டான். இப்போது அந்தப் பிசாசு புதிய பைசிக்கிளோடு எங்கே சுற்றிக் கொண்டிருக்கிறதோ தெரியாது" என்று மனைவியை ஏசினேன் நான். "இன்று மட்டும்தானே, புதிய பைசிக்கிள். பிள்ளை ஆசையோடு நண்பர்களின் வீடுகளுக்கு பைசிக்கிளை காட்டப் போயிருப்பான்" என்று பதிலளித்தாள் மனைவி.

சரியாக மூன்று மணித்தியாலங்கள் கழித்து பையன் திரும்பிவந்த விதத்தை வர்ணிக்கிறேன் கேளுங்கள். பைசிக்கிள் சேறு படிந்திருந்தது, நிறம் மாறியிருந்தது, கீறல் விழுந்திருந்தது, பெடல் கிழிந்து தொங்கியது. பையனும் பைசிக்கிள் போலத்தான் இருந்தான். முகம் கறுத்துப் போயிருந்தான், வியர்வை திட்டுத்திட்டாக உருண்டு திரண்டு கிடந்தது, உடைகள் அழுக்காகி இருந்தன. பைசிக்கிள் உடைந்து எங்கிருந்தோ கடாமுடா என்று சப்தம் எழுந்தது. மொத்தத்தில் பையன் எழுதப்பட்ட ஒப்பந்தத்தை அப்பட்டமாக மீறிவிட்டான். நான் பையனை கொல்லைப் புறத்திலிருந்த மரத்தில் கட்டிப் போட்டேன். இப்போது நான் கொடுக்கக் கூடிய தண்டனையை வாழ்க்கை முழுவதும் அவன் மறக்கமாட்டான். அவனது முதுகில் பிரம்பினால் விளாசினேன். மனைவி இயன்றமட்டும் என்னை தடுத்தாள். நான் களைத்துப் போன பிறகுதான் பிரம்படியை நிறுத்தினேன். நான் எடுத்த முடிவு நூறுவீதம் சரியானது. இந்தத் தண்டனைக்குப் பிறகு பையன் அடங்கவே நான் மனைவியை பார்த்து "பார்த்தாயல்லவா, தண்டனை வேண்டவே வேண்டாம் என்று நீ சொன்னாய். பிரம்புக்கு பிறகு பையன் முற்றாகத் திருந்தி விட்டான்" என்றேன்.

அடுத்து வந்த பரீட்சையில் எந்தப் பாடத்திலும் அவன் நூறு புள்ளி எடுக்காததால் இதற்குப் பகரமாக நான் என்ன செய்தேனென்றால் அவனுடைய பைசிக்கிளை பூட்டி திறப்பை என்னுடைய அலுமாரிக்குள் ஒளித்து வைத்தேன். இரண்டுவாரங்கள் அவன் நடந்து பாடசாலைக்கும் மாலை வகுப்புகளுக்கும் போனான், ஐந்து கிலோமீற்றர் தள்ளி இருந்த ஆற்றுக்கு நடந்து போனான். பையனின் முகம் இந்த இரண்டு வாரங்களும் வாடிக் கறுத்திருந்தது. அதாவது கவலைப்படுகிறான். நன்றாக கவலைப்படட்டும். அவன் இந்த பதினான்கு நாட்களிலும் நிறையப் பாடம் கற்றிருப்பான் என்று நான் முடிவுசெய்தேன். இதற்கு பிறகு பையன் சின்னச்சின்ன தவறுகளைப்புரியும் போதெல்லாம் நான் பைசிக்கிளைப் பூட்டி திறப்பை எடுத்துக் கொள்ள அவன் உடனடியாக அடிபணிந்து விடுவான்.

இரண்டாவது உறுப்பினரான ஸெகானி ஒரு முக்கியமான சிறுவன். அதிர்ச்சியூட்டும் சகோதரர்கள் (Shocking siblers) குழுவுக்கு

இவன்தான் தலைவன். பாடங்களில் நல்ல புள்ளிகள் பெற்றுக் கொண்டுவரும் அவனிடம் கெட்டித்தனம் இருக்கிறது என்று பாட ஆசிரியர்கள் என்னிடம் சொன்னாலும் எல்லா விதமான குறும்புத்தனமான காரியங்களுக்கும் யோசனை சொல்லிக் கொடுப்பவன் இவன் தான். இந்தப் பையனை அடி, உதை எதனாலும் திருத்தமுடியவில்லை. பிரம்பினால் ஓங்கி அடித்தாலும் கண்களில் சொட்டுக்கண்ணீர் வராதபடிக்கு கம்பீரமாக நிற்கும் அவன் எனக்கு களைப்பு ஏற்பட்டதை தெரிந்து கொண்டபின் “தந்தையே தண்டனை முடிந்து விட்டதா? இன்னும் இருக்கிறதா?” என்று கேட்பான். எனக்கு கோபம் இன்னுமின்னும் எகிறி பிரம்பு துண்டாகி, துண்டாகி, தும்பாகியும் போகும். அப்போதும் அவன் கம்பீரமாக நிற்பான்.

இவனுக்காக வேண்டியே நான் பிரம்பை பதப்படுத்தினேன். குழந்தை வளர்ப்பவர்கள் பிரம்பை பதப்படுத்துவது எப்படி என்பதை அவசியம் கற்றுக்கொள்ள வேண்டும். பெரிய அகன்ற பாத்திரத்திலே தண்ணீரை எடுத்து, அதற்குள் உப்பு இரண்டு பங்கும், மிளகுத் தூள் ஒரு பங்கும் சேர்த்துக் கரைத்து அந்தக் கரைசலுக்குள் கடுகுத்தூள், வினாகிரி என்பவற்றைக் கலக்கி நன்றாக அடிக்கவேண்டும். அந்தக் கரைசலுக்குள் பத்துப் பதினைந்து பிரம்புகளைப் போட்டு இரண்டு வாரங்களுக்கு ஊறப்போட்டு, பிறகு பிரம்பை வெயிலில் வைத்து நன்றாக உலர்த்தி, மீண்டும் இரண்டு நாட்களுக்கு ஊறவைத்து மீண்டும் இரண்டு நாட்களுக்கு வெயிலில் உலர்த்த வேண்டும். பதப்படுத்திய இந்தப் பிரம்பால் பிட்டத்தில் அடிக்கும் போது பிட்டம் வீங்கிச் சிவந்து இரத்தம் கசியும். எனது பையனா? அவன் இறுகிப் போன எ.ஃ.கு. அதற்கும் கப்சிப். இதற்குப் பிறகு அடிப்பதை விட்டு விட்டு அவனை அடிக்கடி திட்ட ஆரம்பித்தேன். திட்டுவதில் நல்ல சுகம் இருக்கிறது, எப்படியும் திட்டலாம். எனக்குத் தெரிந்த எல்லா மிருகங்களினதும் பெயராலும் ஸெகானியைத் திட்டினேன். கோவேறு கழுதை, அன்டிலோப், மரஅணில், கீரிப்பிள்ளை, சீட்டா, சிங்கம், Rapier, காண்டா மிருகம், நீர்யானை, திமிங்கிலம், நீர்நாய், வாலில்லாக் குரங்கு, சிம்பன்ஸி- இப்படிப் பட்டியல் நீண்டுகொண்டே போனது. ஸெகானியைத் திட்ட வேண்டாமென்று மனைவி என்னை கெஞ்சிப் பார்த்தாலும் என்றாலும் திட்டுவது பழகிவிட்டது.

ஸெகானி முதலில் சுவிட்சர்லாந்திலிருந்து என் நண்பன் பரிசாக அளித்த கைக்கடிகாரத்தில் ஆரம்பித்தான். அக்குவேறு ஆணிவேராகப் அந்தக் கடிகாரத்தைப் பிரித்திருந்தான் ஸெகானி. பிறகு மின் உபகரணங்கள், கணனி, கைத்தொலைபேசி, மடிக்கணனி, குளிர்சாதனப்பெட்டி என்று அவனுடைய கைவரிசையைக் காட்ட வயதுக்கு மீறிய ஸெகானியின் அதிகப் பிரசங்கித்தனம் எனக்குப் பிடிக்கவில்லை. நான் அவனோடு தாண்டவமாடும் போதெல்லாம் மனைவி பில்கேட்டை ஞாபகப்படுத்தினாள். “யார் அந்த பில்கேட்?”

என்று கேட்டேன் நான். "அவனும் இப்படித்தான் தறுதலையாகத் திரிந்தான். இவனுக்குப் படிப்பு ஏறவே ஏறாது என்று ஆசிரியர் சொல்லி விட்டார். கடைசியில் என்னவென்றால் மென்பொருட்களைத் தயாரித்து கணனித் துறையிலே முன்னேறி இன்று உச்சத்திலே இருக்கிறார்" என்றாள் மனைவி. "சரி அப்படியே வைத்துக் கொள்வோம். பில்கேட்டுக்கு அவருடைய தந்தை அடித்த விஷயம் உனக்குத் தெரியாதா? அடிதாங்க முடியாமல் வீட்டை விட்டு ஓடிப்போன சங்கதி உனக்குத் தெரியாதா?" என்று புளுகு மூட்டையை நான் அவிழ்த்து விட்டதும் மனைவி திருதிருவென்று விழித்தாள்.

மூன்றாவது உறுப்பினர் பெண்பிள்ளை, பெயர் தேடினா (Thirdina), அவளுக்கு பொம்மைகள் என்றால் பிடிக்கும். வீட்டில் விதவிதமான பொம்மைகள் வைத்திருந்தாள். ஆனால் நானோ தேடினாவின் விஷயத்தில் மிகவும் கண்டிப்பாக இருந்தேன். பெண் பிள்ளைகளை அவர்களது சுதந்திரத்திற்கு விட்டுவிட்டால் பெரியவளானதும் விரும்பும் முடிவுகளை தான்தோன்றித் தனமாக எடுப்பார்கள் என்று நான் உறுதியாக நம்பினேன். நான் எல்லா விளையாட்டுப் பொருட்களையும் கண்ணாடி அலுமாரிக்குள் அழகாக அடுக்கி, அலுமாரியை மூடி திறப்பை என்னிடம் வைத்துக் கொண்டேன். அவளுடைய ஒவ்வொரு பிறந்தநாளையும் நாங்கள் வீட்டிலே மகிழ்ச்சியாக கொண்டாடுவோம். விருந்தினர்கள் பொம்மைகள், கரடி, பாடசாலைப்பை, தேவதை பொம்மைகள், குடை, செருப்பு, அலங்காரத் தொப்பி, நிறைய பரிசுப் பொருட்களை அவளுக்கு கொடுப்பார்கள். தேடினாவும் ஆசையுடன் அவைகளை வாங்கிக் கொண்டு 'நன்றி உங்களுக்கு' என்று சொல்லுவாள்.

நான் அந்தப் பரிசுப் பொருட்களையெல்லாம் கமராவினால் படம் பிடித்து அடுத்த பிறந்த தினத்துக்கு அதே விருந்தினர் வருகின்றபோது அவர்கள் ஏற்கனவே அன்பளிப்புச் செய்த விளையாட்டுச் சாமான்களையும் புகைப்படத்தையும் அவர்களிடம் காட்டுவேன். அவர்கள் வியந்து போய் "உங்களுக்கு இருப்பதைப் போல் பொறுப்புணர்ச்சியுள்ள பிள்ளைகள் எனக்கு இல்லையே. "என்னுடைய பிள்ளைகள் விளையாட்டுச் சாமான்களை இரண்டே நாட்களில் உடைத்துத் தள்ளி விடுவார்கள். நீங்கள் அதிஷ்டசாலி. உங்கள் குழந்தைகள் விளையாட்டுப் பொருட்களை புத்தம் புதியனவாக வைத்திருக்கின்றன" என்று அங்கலாய்த்துக் கொள்வார்கள். எனக்கென்றால் பெருமை தலைக்கு மேல் ஏறி, நட்சத்திரங்களாகி, என் முன்னால் பூமாரி பொழிவது போல் உதிர்ந்து, விழுந்து சிரிக்கும். நான் தேடினாவைப் பார்த்து "மீண்டும் அவருக்கு நன்றி சொல்லு" என்பேன். அவள் "நன்றி அங்கிள்" என்பாள். பிறந்தநாள் விழாவிற்கு வந்திருக்கும் எல்லாத் தாய்மார்களும் தங்கள் குழந்தைகளை கூட்டிக்கொண்டு வந்து அலுமாரியில் அடுக்கி வைக்கப்பட்டிருக்கும் விளையாட்டுப் பொருட்களை காட்டி என்மகள் தேடினாவை புகழ்ந்து

பாடி பிறந்தநாள் வாழ்த்துச் சொல்வார்கள். பிறந்தநாள் முடிந்த கையோடு வந்த அன்பளிப்புப் பொருட்கள் எல்லாம் சேர்ந்து மீண்டுமொரு அலுமாரி அங்கே தோன்றிவிடும். திறப்பு வழமையைப் போலவே என்னிடம் இருக்கும்.

நான்காவது மேற்பார்வை சாஸ்திரியார், நீ படித்தாயா நீ சாப்பிட்டாயா என்று எல்லொரையும் கேட்டுவிட்டு பைசிக்களோடு கம்பி நீட்டிவிடும் எமகாதகப்பயல் பைசிக்கள் இல்லாமல் திரும்பி வருவான், கேட்டால் அந்த மரத்திலென்பான், இந்த குளத்திலென்பான், யாரோ பறித்துக்கொண்டு ஓடிவிட்டார்கள் என்று புளுகு மூட்டையை அவிழ்த்துவிடும் அவன் கெட்டிக்காரன் எப்போதும் எல்லா பாடங்களிலும் நல்ல புள்ளிகலோடுதான் திரும்பி வருவான். ஆனாலும் பைசிக்கள் நீரோடைக்குள் விழுந்து நான்காக முறிந்து போயிருக்கும். பேய் வந்து உதைத்தது என்று காரணமும் சொல்வான்.

திடீரென்று வாழ்க்கையில் பொருளாதார நெருக்கடி வரவே, மனைவி, பிள்ளைகளும் சம்மதம் தந்துவிட உடனடியாக வெளிநாடு செல்லத் தீர்மானித்தேன். வெளிநாட்டு வேலைவாய்ப்பின் ஆரம்பமே எனக்கு எரிச்சலை உண்டாக்கியது. நேர்முகத் தேர்வுக்கு வரும்படி என்னை அழைக்க நான் புதிய ஆடைகள் புனைந்து, மடிப்புக் குலையாத நீளக்காற்சட்டை அணிந்து, அழகான கழுத்துப் பட்டியோடு “காலை வணக்கம், ஐயா” என்று சொல்லிக் கொண்டே நேர்முகத் தேர்வு நடைபெறும் அறைக்குள் நுழைந்தேன். கண்ணாடி இழை மேசையைச் சுற்றி அமர்ந்திருந்த இரண்டு வெளிநாட்டவர்களும், வேலைவாய்ப்பு முகவரும் பதிலுக்கு “காலை வணக்கம், அமரவும்” என்று சொன்னவுடன் நான் கதிரையை அமர்ந்தேன். என் கையில் தடித்த பைல் இருந்தது. கல்விச் சான்றிதழ்கள், விளையாட்டுச் சான்றிதழ்கள், நற் சான்றிதழ்கள், பிறப்பு அத்தாட்சிப் பத்திரம், வாக்காளர் இடாப்பு உறுதிப் பத்திரம், வேலைத் தகைமைச் சான்றிதழ்கள் இப்படி ஒன்று இரண்டு என இலக்கமிட்டு அனைத்தையும் கோர்வை செய்து வைத்திருந்தேன். மஞ்சள் நிற அட்டை போட்ட பைல். அதனை மேசை மீது வைத்தேன்.

வெள்ளைக்காரன் பைலைத் தொட்டுக் கூட பார்க்காமல் “உங்களுக்கு பலூன் ஊதத் தெரியுமா?” என்று கேட்க எனக்கு எரிச்சலாக இருந்தது. இது சிறுபிள்ளைத்தனமான கேள்வி. நான் காது கேட்காதவன் மாதிரி சும்மா வாளாவிருந்தேன். வெள்ளைக்காரர் உதவியாளரைக் கூப்பிட்டு “பலூன்களை கொண்டு வா” என்றார். எல்லா நிறங்களையும் சேர்ந்த நூற்றுக்கணக்கான பலூன்களை அள்ளிக் கொண்டு வந்து மேசை மீது போட்ட உதவியாளன் நேரக் கணிப்புக் கடிகாரத்தையும் மேசைமீது வைத்தான். வெள்ளைக்காரன் என்னைப் பார்த்து “நான் இந்தக் கடிகாரத்தின் பொத்தானை அழுத்தியவுடன் நீங்கள் பலூன்களை ஊத

ஆரம்பித்து நிறுத்தச் சொல்லும் வரை ஒவ்வொரு பலூனாக ஊதி நூலினால் கட்டவேண்டும்" என்று சொல்லியவாறே கடிகாரத்தின் பொத்தானை அழுத்த நானும் வேறு வழியின்றி பலூன்களை ஊத ஆரம்பித்தேன். நல்லவேளையாக உதவியாளன் என்னிடமிருந்து ஒவ்வொரு பலூனாக வாங்கி நூலால் கட்டினான். சமிக்ஞை ஒலிக்கவும் நான் ஊதுவதை நிறுத்த வெள்ளைக்காரன் ஊதப்பட்ட பலூன்களை எண்ணிக் கணக்கிட்டான். அவனுடைய முகம் மலர்ந்தது. "ஓ! மிகவும் நன்றாகச் செய்துள்ளீர்கள். என்னுடைய வாழ்த்துக்கள்! நீங்கள் தெரிவு செய்யப்பட்டிருக்கிறீர்கள். அடுத்த வாரமே கனடாவுக்குப் போகத் தயாராக இருங்கள்" என்று என்கையை வலிந்து இழுத்து கைகுலுக்கினார் வெள்ளைக்காரன். எனக்கென்றால் வாலும் தெரியவில்லை, தலையும் புரியவில்லை. நான் தெரிவுசெய்யப்பட்டமை குறித்து மனைவி மிகவும் சந்தோஷப்பட்டாள். ஆனால் அவளிடம் நான் பலூன் விவகாரத்தைச் சொல்லவேயில்லை.

கனடாவில் இறங்கிய மறுகணமே ஏன் எதற்கு என்று எதுவும் பேசவே விடாமல் என்னை இழுத்துக் கொண்டு போய், முழு நிர்வாணமாக்கி, தண்ணீரைப் பீச்சியடித்து, தொழுவத்தில் குதிரையைக் கழுவுவதுபோல் கழுவி, ஒருவகை நுரையை என் மீது பீய்ச்சியடித்து மீண்டும் கழுவினார்கள். எல்லாக் கிரியைகளும் முடிந்த கையோடு தண்ணீரைப் பீய்ச்சியடித்தவன் துவாயை என்னிடம் தந்து உடம்பைத் துவட்டச் சொல்லி எனக்கு புதிய ஆடைகளை அணிவித்தான். என்னை ஆசுவாசப்படுத்தியபின் "எதற்கப்பா என்னை இப்படிக் கொடுமைப் படுத்தினாய்?" என்று நான் அவனைப் பார்த்துக் கேட்க "அழுக்குப் படிந்த உன் நாட்டிலிருந்து எத்தனை கிருமிகளைச் சுமந்து கொண்டு வந்திருக்கிறாயோ யாருக்குத் தெரியும்? இப்போது நீ நூற்றுக்கு நூறு தூய்மையடைந்து விட்டாய்" என்று பதிலளித்தான் அவன்.

காலை வந்ததும் இரண்டு ஆட்கள் அதிகாலையிலேயே என்னை எழுப்பி, பல்துலக்கி நீராட்டி, பச்சை, மஞ்சள், சிவப்பு, நீலம், கபில நிறத் துணிகள் தொங்கும் கோமாளி உடையையும், தலைக்கு கோணங்கித் தொப்பியையும் எனக்கு அணிவித்தார்கள், பிறகு உதட்டுக்கும், வாயையும் சுற்றி ஸ்ரிகர் ஒட்டி கன்னத்திலே கழுதைப் படத்தை வரைந்தார்கள், கழுத்திலும், கைகளிலும் வண்ணவண்ண மணிமாலைகளைக் கோர்த்து தொங்க விட்டார்கள், பூக்கடதாசியால் உடம்பு முழுவதையும் மறைத்தார்கள், வலதுபாதத்திற்கு மஞ்சள்நிற பூட்ஸூம் இடதுபாதத்திற்கு கறுப்புநிற பூட்ஸூம் போட்டார்கள். எல்லாம் முடிந்ததும் கோமாளி வாகனத்தில் என்னைக் கொண்டு போய் சிறுவர் பூங்காவிலே இறக்கினார்கள். வாகனத்தை விட்டு இறங்கிய மறுகணமே சிறுவர்கள் ஆரவாரஞ் செய்து என்னை மொய்த்துக்கொள்ள இப்போதுதான் எனக்கு எல்லாம் கொஞ்சம் கொஞ்சமாக புரிய ஆரம்பித்தது. சிறுவர்களுக்கு விதம்விதமாக பலூன்களை ஊதிக்

கொடுப்பது தான் எனக்குத் தரப்பட்ட வேலை. முதல் நாளன்றே பலூனை ஊதி ஊதி என் வாய் புண்ணாகி போய், வாழ்க்கை வேண்டாம் வேண்டாம் என்று ஆகிற்று. எனக்கு அவர்கள் நாட்டு மொழியில் தரப்பட்ட பெயர் *பலூன் கோமாளி.*

உடனடியாக ஊர் திரும்ப வேண்டுமென்று முதல்நாளிலேயே தீர்மானம் எடுத்தேன். வீட்டிலே என்றால் குழந்தைகளைத் தொடுவதே எனக்கு அலர்ஜியான விஷயமாக இருந்தது. அவர்கள் சிறுநீர் கழிப்பதை கண்டால் எனக்கு வாந்தி வந்துவிடும். இங்கே ஒரே நாளில் நூறு குழந்தைகளின் கொட்டத்தை பார்க்க வேண்டியிருக்கிறது. ஐயோ வேண்டாம்! பிசாசுகளோடு நான்கு வருடங்கள் இங்கே இருப்பதைப் பற்றி என்னால் நினைத்துக் கூட பார்க்க முடியாது. தொலைபேசிக் கூண்டுக்குப் போய், என் ஆற்றாமையை எல்லாம் மனைவியிடம் பொரிந்து தள்ளினேன். பின்னால் ஏதோ நிழலாடுவது போல எனக்குத் தெரியவே திரும்பிப் பார்த்தேன்.

*சுவையான பிக்ஸா. குளிர்பானம். ஒரு சுவையான கவிதை. பாடலுடன் சேர்ந்து பருகுங்கள் உண்ணுங்கள். நேரம் மாலை 4.30* இது முன் பக்கம் உள்ள பெயர்ப் பலகை. பின் பக்கம் pizza வின் படம் பெரிதாகப் போட்ட பெயர்ப் பலகை. கீழே ஹோட்டலின் முகவரியும் தொலைபேசி இலக்கமும். ஒரு மனிதனின் கழுத்திலே முன்னும் பின்னும் தொங்க விடப்பட்டிருந்த பெயர்ப் பலகைகள் இவை. நான் நிமிர்ந்து அந்த பரிதாபத்துக்குரிய ஜீவனின் முகத்தைப் பார்த்தேன். அவன் என்னைப் பார்த்து “நீ, நீயா?” என்று கேட்க “ஆமாம் நான், நான்தான்” என்ற நான் அவனை அடையாளம் கண்டுகொண்டேன். ஐந்து வருடங்களுக்கு முன்பு இங்கே வேலை தேடி வந்த என் வகுப்புத்தோழன். இருவரும் பழைய இளமைக்கால ஞாபகங்களை மீட்டிக் கொண்டோம்.

நான் என்னுடைய தீர்மானத்தை அவனிடம் சொன்னதும் அவன் விகடமாகச் சிரித்தான். “நான் சொல்கிறேன் உன்னுடைய தொழில் மிகவும் மேன்மையானது. என்னைப் பார், தினசரி இந்தப் பெயர்ப் பலகைகளை சுமந்து கொண்டு நகரத்தின் மூலைமுடுக்குகளில் எல்லாம் திரிய வேண்டும். நீ அதிர்ஷ்டசாலி. சிறுவர்கள் நல்லவர்கள். அவர்களோடு வாழப் பழகிக் கொண்டாயென்றால் இந்த வாழ்க்கை சுவர்க்க வாழ்க்கையாகும்” என்று உபதேசம் பண்ணினான் நண்பன். முன்பெல்லாம் பழமொழிகளை அர்த்தமில்லாதவை என்று கர்வத்துடன் ஒதுக்கிவிடுவேன். இப்போது அந்தப் பழமொழிகளின் அர்த்தத்தை நான் அனுபவபூர்வமாக உணர்ந்துகொண்டேன். முக்கியமாக இரண்டு பழமொழிகள் - ஒன்று, நாய் வேஷம் போட்டால் குரைத்துத் தான் ஆகவேண்டும் - இரண்டு, நாய் விற்ற காசு குரைக்காது.

அந்த நாட்டில் சிறுவர்களுடன் பழகுவதும் கத்தி மேல் நடக்கும் விஷயமாக இருந்தது. சிறுவர்களை முறைத்துப் பார்க்க முடியாது;

கடுந் தொனியிலே பேசமுடியாது; அடிக்க முடியாது. ஒருமுறை சிறுமியை *குறும்புச்சிறுமி* என்று செல்லமாக முதுகில் தட்ட அன்று ஆரம்பித்தது என்னுடைய கெட்ட காலம். சட்டத் திணைக்களத்திலிருந்து என்னை விசாரிப்பதற்காக நான்கு பேர் வந்தார்கள். ஒருவர் கோட்டும் சூட்டும் அணிந்த சிறுவர்நல அதிகாரி. மரியாதையாக என்னை ஆசனத்திலே அமரச் சொன்ன அவர் "நல்ல குழந்தையை ஏன் கெட்ட சொற்களைக் கொண்டு அழைத்தாய்?" என்று என்னைக் கேட்டார்.

"என்ன சொற்கள்?"

"குறும்புக்காரசிறுமி"

"குறும்புக்காரச் சிறுமி என்பது கெட்ட வார்த்தையா?"

"அதுகூட உனக்குத் தெரியாதா?"

"நான் செல்லத்தில் அழைத்தேன்"

"செல்லத்தில் அவளைக் கூப்பிடுவதற்கு அவள் உன்னுடைய செல்லப்பிராணியா?"

"இல்லை, ஒரு சிறுமி. அவளுடைய குறும்புச்செயலைப் பார்த்து, அன்பு மேலிட்டால் குறும்புக்காரி என்று அழைத்தேன்"

"அன்பு மேலிட்டதாகச் சொல்கிறாய். அவள் என்ன உன்மகளா?"

"இல்லை"

"சகோதரியா?"

"இல்லை"

"உறவினர் மகளா?"

"இல்லை"

"அப்போ குறும்புச்சிறுமி என்று அவளைக் கூப்பிட்டது தவறுதானே"

"தவறுதான்"

"குழந்தை மீது கைவைத்தாய், அது பாரதூரமான தவறுதானே"

"தவறுதான்"

"உனக்கு என்ன தண்டனை வழங்கலாம்?" "தெரியாமல் தவறு செய்தேன். என்னை மன்னித்துக் கொள்ளுங்கள்"

"சரி இந்தத் தடவை மன்னித்துக் கொள்கிறோம். இனிமேல் ஒரு சின்னத் தவறு நிகழ்ந்தாலும் உன் நாட்டிற்கு திருப்பி அனுப்பி விடுவோம்"

"சரி"

"இப்போது தாயிடம் மன்னிப்புக் கேள்"

"மன்னித்துக்கொள்ளுங்கள், அம்மணி"

"சிறுமியிடம் மன்னிப்புக் கேள்"

"மன்னித்துக்கொள்ளுங்கள், சிறுமியே"

நான் ஓர் உண்மைக் கதையை சொல்லப் போகிறேன். பசுபிக் சமுத்திரத்தில் விண்டாலோ என்ற தீவு இருக்கிறது. இயற்கைவளங்கள் நிறைந்த அந்தத் தீவில் வாழ்ந்தவர்கள் ஒருபோதும் அந்தத் தீவை விட்டு வெளியே சென்றது கிடையாது. அந்தத் தீவிற்குள் யாரும் உள்நுழைந்ததும் கிடையாது. குரங்குமலைக்காடு என்ற வனாந்தரம் இருக்கிறது. அங்குள்ள விசித்திரம் என்னவென்றால் வாலில்லாக் குரங்கிலிருந்து தான் மனிதர்கள் பிறந்தார்கள். மலையிலிருந்து

ஊற்றெடுத்த நீருற்றுக்கள் ஒன்று சேர்ந்து மலைச்சாரலிலே அழகிய நதியாக ஓடிக்கொண்டிருந்தது. ஞானநிலை அடையும் குரங்குகள் சுகவீனமுற்றதைப் போல் தள்ளாடும். மூன்றுநாட்கள் எதையும் உண்ண மாட்டாது, நீர் அருந்த மாட்டாது. ஞானநிலை குரங்குகளை அடையாளம் கண்டு கொள்ளும் மற்றைய முட்டாள் குரங்குகள் குரங்குகளை துரத்திக் கொண்டு போய் நதியில் தள்ளிவிடும். இவ்வாறு ஆற்றிலே தள்ளிவிடப்பட்ட குரங்குகள் அடுத்தநாள் காலையில் ஆகாயத்தில் இருந்து விழுந்த குரங்குகளைப்போல் கண்விழித்து, ஆடிப்பாடும் மனிதர்களாக மாறிவிடும். இப்படித்தான் அந்தத்தீவில் மனிதர்கள் உற்பத்தியாகிக் கொண்டிருந்தார்கள். அவர்கள் எல்லோரும் பிறக்கும் போதே வளர்ச்சியடைந்த மனிதர்களாக வாழ்க்கையை ஆரம்பிப்பார்கள்.

ஒருகாலை விடிந்த போது தீவு மனிதர்கள் அதிசயமொன்றைக் கண்டார்கள். நதிக்கரையிலே புதிதாக உற்பத்தியான பெரிய மனிதர்களோடு இரண்டு சின்ன மனிதர்களும் நின்று கொண்டிருந்தார்கள். அவர்களது உயரம் மூன்று தொடக்கம் நான்கு அடிகள். சின்ன கைகள், சின்ன கால்கள், சின்ன முகம், சின்ன செவிகள், சின்ன உதடுகள். முகங்களில் முரட்டுத்தனம் இருக்கவில்லை, அப்பாவித்தனம் இருந்தது, தோல்கள் மிருதுவாக இருந்தன, மீசை, தாடி எதுவும் இல்லை. தீவு மனிதர்கள் சின்ன மனிதர்களைப் பார்த்து “நீங்கள் யார்?” என்று அவர்களுடைய மொழியிலே கேட்க சின்ன மனிதர்கள் மிரளமிரள விழித்தார்கள். “நீங்கள் வாலில்லாக் குரங்குகள் ஞானநிலை அடைந்து வந்தவர்களா?” என்று மீண்டும் கேட்க சின்ன மனிதர்கள் அதற்கும் பதில் சொல்லவில்லை. தாகமும் பசியாகவும் இருக்கவே “சாப்பாடு தாருங்கள்” என்று கேட்டார்கள் சின்ன மனிதர்கள். தீவு மனிதர்கள் அதனை காதில் வாங்கிக் கொள்ளாமல் சம்பிரதாயப்படி புதிதாக உற்பத்தியான மனிதர்களை வலியச் சண்டைக்கு அழைத்தார்கள். சண்டைப் போட்டிக்கு வந்த தீவுமனிதன் சின்ன மனிதர்களின் முகத்திலே ஓங்கிக் குத்து விட நிலை குலைந்து போன சின்ன மனிதர்களின் மூக்கிலிருந்து இரத்தம் கசிந்து இருவரும் அழ ஆரம்பித்தார்கள்.

மனிதர்கள் அழுவதை தீவு மனிதர்கள் கண்டதில்லையாதலால் சின்னமனிதர்கள் அழுவதை அவர்கள் வேடிக்கை பார்த்து “கோழையான சின்னமனிதர்கள்” என்று கூச்சலிட்டார்கள். பல தடவைகள் கூப்பிட்டும் சின்னமனிதர்கள் வேட்டைக்குச் செல்ல மறுத்துவிடவே தீவு மனிதர்களின் தலைவனுக்கு சினம் வர “சின்ன மனிதர்கள் கோழைகள் மட்டுமல்ல சோம்பேறிகளும் தான்” என்று திட்டினான். இப்படி ஒன்றுக்கும் உதவாத, வேட்டையாடத் தெரியாத, விவசாயம் தெரியாத இரண்டு சின்னமனிதர்கள் உதித்திருக்கிறார்கள் என்று கேள்விப்பட்டு நாட்டின் நாலா பாகங்களிலிருந்தும் தீவுமனிதர்கள் அவர்களைப் பார்ப்பதற்காக முண்டியடித்துக் கொண்டு வந்தார்கள்.

பசி தாங்கமுடியாத இரண்டு சின்னமனிதர்களும் வேறு வழியின்றி அலைந்து திரிந்து பழங்களைப் பறித்துச் சாப்பிட்டபின் கிட்டிப்புள்ளும், கோலிக்குண்டும் விளையாடினார்கள், மாலையானதும் மரங்களைச் சுற்றிச் சுற்றி கண்ணாமூச்சியாட்டம் ஆடினார்கள், இரவு நேரங்களில் கைவிடப்பட்ட குடிசை ஒன்றிற்குள் நித்திரை கொண்டார்கள்.

சின்னமனிதர்களின் குழந்தைத் தனமான வேடிக்கை வினோதங்களை சகிக்க முடியாத தீவு மனிதர்கள் சின்ன மனிதர்களை தீவைவிட்டு எப்படியாவது விரட்டி அடித்து விடவேண்டும் என்று முடிவு செய்ததும் சின்னமனிதர்களுக்கு பெரியமனிதர்கள் எதுவும் செய்யலாம் என்ற நிலைமை வர அவர்களுக்கு எவ்வளவு இம்சை செய்யமுடியுமோ அந்தளவுக்கு பெரிய மனிதர்கள் இம்சை செய்தார்கள். சிலர் கைகளை நீட்டச்சொல்லி தடிகளினால் உள்ளங்கையில் அடித்தார்கள், சிலர் சூட்டுக்கோலால் மேனியெங்கும் சுட்டார்கள், சிலர் கழுத்திலே கயிற்றைக் கட்டி நாய்களைப் போல் இழுத்துச் சென்றார்கள். சின்ன மனிதர்கள் அழுதார்கள், கதறினார்கள், கெஞ்சினார்கள். வேதனை தாங்காமல் சின்னமனிதர்கள் கதறுவதைப் பார்த்த பெரியமனிதர்களோ கைகொட்டி மகிழ்ந்தார்கள். அவர்களைத் தடுத்து நிறுத்துவோ ஏன் என்று கேட்கவோ யாருமே முன்வரவில்லை.

சின்ன மனிதர்கள் சிரட்டைகளில் சமையல் செய்தார்கள்; மூங்கிற் குழாயினால் துப்பாக்கி செய்து சுட்டுத் திரிந்தார்கள்; கவண்கற்களால் மாங்காய்களை வீழ்த்தினார்கள். பெரியமனிதர்களின் நாட்டில் இப்படியான வினோதமான காரியங்கள் நடந்ததே இல்லையாதலால் சின்னமனிதர்கள் தமது கலாசாரத்துக்கு ஆபத்து என்று எண்ணிய தீவு மனிதர்கள் அவர்கள் இருவரையும் காவல்துறையிடம் ஒப்படைக்க வழக்காடு மன்றத்தில் வழக்கு ஆரம்பமானது. காவலர்கள் சின்னமனிதர்கள் இருவரையும் சங்கிலிகளால் பிணைத்து கூண்டிலே கொண்டுவந்து நிறுத்தினார்கள். அவர்களுடைய வாய்களும், கைகளும் கறுப்புத் துணிகளால் கட்டப்பட்டிருந்தன. சின்ன மனிதர்களை உற்றுப் பார்த்த நீதிபதி “ஏன் இவர்களின் கைகளையும், வாய்களையும் கறுப்புத்துணியால் கட்டிவைத்திருக்கிறீர்கள்?” என்று கேட்க வழக்குத் தாக்கல் செய்தவன் நீதிபதிக்கு முன்னால் பௌயமாக வந்து நின்று “கனம் நீதிபதி அவர்களே, இந்தச் சின்னமனிதர்கள் நாங்கள் பேசுவது போல் பேசுவதில்லை. அவர்கள் விரும்பியதை பேசுகிறார்கள். இவர்களுடைய பேச்சில் இலக்கணச் சுத்தம் இல்லை; பிதற்றல் இருக்கிறது. சொற்களை உச்சரிப்பதிலும் தவறு இருக்கிறது. இவர்கள் பேசுவதை கேட்டீர்களென்றால் உங்கள் மூளையும் குழம்பிப் போய்விடும்” என்றான்.

“எதற்கு கைகளை கட்டி வைத்திருக்கிறீர்கள்?” என்று கேட்டார் நீதிபதி. “நீதிபதி அவர்களே, இந்த சின்ன மனிதர்கள் நாங்கள் எங்கள்

கலாசாரத்தில் என்றுமே பார்த்திராத சில்லறைத் தனமான வேலைகளைச் செய்கிறார்கள்; சிரட்டைகளில் மண்சோறு சமையல் செய்கிறார்கள்; மூங்கிற் குழாயினால் துப்பாக்கி செய்கிறார்கள்; மரத்தை சுற்றி விளையாடி நேரத்தை வீணாக்குகிரார்கள். இந்தச் செய்கைகளை இனிமேலும் எங்களால் சகிக்க முடியாது, தண்டனை கொடுங்கள்" என்று பதிலளித்தான் வழக்காளி. கூடிநின்ற பெரிய மனிதர்களும் குற்றச்சாட்டுக்களை அடுக்கிக்கொண்டே போனார்கள். அவைகளை மௌனமாக கேட்டுக் கொண்டிருந்த நீதிபதி கொஞ்ச நேரம் யோசித்து விட்டு நீதிபதி "சின்ன மனிதர்களின் கட்டுக்களை அவிழ்த்து விடுங்கள். இவர்கள் என்ன சொல்கிறார்கள் என்று கேட்டுப் பார்ப்போம்" என்றார்.

நீதிமன்ற ஊழியர்கள் சின்னமனிதர்களின் கட்டுக்களை அவிழ்த்தபின் நீதிபதி அவர்களைப் பார்த்து "சின்னமனிதர்களே, இவர்களின் குற்றச்சாட்டுக்களை எல்லாம் நீங்கள் கேட்டீர்கள். இந்தக் குற்றச்சாட்டுக்களுக்கெல்லாம் நீங்கள் என்ன பதில் கூறப் போகிறீர்கள்?" என்று கேட்டார். சின்ன மனிதர்களில் ஒருவன் வாய்திறந்து "ஐயா நீதிபதி அவர்களே, எங்களைச் சின்ன மனிதர்கள் என்று அழைப்பது பெரும்தவறாகும். நாங்கள் சிறுவர்கள்" என்றான்.
"சிறுவர்களா? நான் கேள்விப்படாத சொல்லாக இருக்கிறதே. கொஞ்சம் விளக்கமாய்ச் சொல்லுங்கள்" என்றார் நீதிபதி.
"ஒருத்தனுக்கு சிறுவன் என்றழைப்போம். இருவருக்கு மேற்பட்டால் சிறுவர்கள் என்றழைப்போம். நாங்கள் தாய், தந்தையர்களுக்கு பிறந்தவுடன் எங்களை பாலகன் என்றழைப்பார்கள். பிறகு குழந்தை, பிறகு பிள்ளை, பிறகு சிறுவன், பிறகு வாலிபன் என்று இப்படிச் சொல்லிக்கொண்டே போகலாம்"
"ஆச்சரியமான கதை. உங்களுடைய தாய், தந்தையர்கள் எந்த குரங்கு வம்சத்தை சேர்ந்தவர்கள்?"
"எங்கள் தாய், தந்தையர்கள் குரங்குகள் அல்ல. மனிதர்கள்"
"ஓ! இதுவும் ஆச்சரியமான செய்தி. அதுசரி, நீங்கள் சொன்னீர்கள் பாலகன், அவன் எப்படியிருப்பான்?"
"பாலகன் 2-4 கிலோவுக்குள் இருப்பான். அவனால் நடக்கவோ ஓடவோ முடியாது, பேசமுடியாது, அழமட்டும்தான் முடியும். தாயின் மார்பிலிருந்து சுரக்கும் பால்தான் அவனுடைய ஆகாரம்" என்றான் சிறுவன். நீதிமன்றம் அவன் சொல்லும் கதையை நிசப்தத்துடன் கேட்டுக் கொண்டிருந்தது.

இப்பொது வழக்காளி பேசினான். "ஐயா நீதிபதி அவர்களே, நாங்கள் பிறந்த நிமிடத்திலிருந்து வேட்டையாட ஆரம்பிக்கிறோம், விவசாயம் செய்கிறோம், கால்நடைகளை ஓட்டிக்கொண்டு தூர இடங்களுக்கெல்லாம் போகிறோம். இந்தச் சின்ன மனிதன் சொல்லுகிற விடயம் அது எங்கள் புத்திக்கு எட்டாத விதண்டாவாதம். 18 வயதை அடையும் வரை இவர்கள் சோம்பேறிகள். இவர்களை விட்டு வைத்தால்

எங்கள்நாடும் சோம்பேறி நாடாக மாறிவிடும். இந்தச் சின்ன மனிதர்கள் இறந்து போகும்வரை இவர்களை சிறையில் அடைக்க வேண்டும்" என்று முடித்தான். வழக்காளி வாதாடியதற்கு ஆதரவு தெரிவிக்கும் வகையில் அங்கிருந்த மற்றைய தீவுவாசிகளும் கூச்சலிட்டார்கள். அப்போது எதிர்பாராத விதமாக பொன்னிற வண்ணத்துப்பூச்சி நீதிமன்றத்தினுள் நுழைந்து சுதந்திரமாக பறந்து திரிய ஆரம்பித்தது. "வண்ணத்துப்பூச்சி, வண்ணத்துப்பூச்சி" என்று கூவிக்கொண்டே இளையவன் அதன்பின்னால் ஓட ஆரம்பிக்க "இந்தப் பைத்தியக்காரத்தனத்தை பார்த்தீர்களா நீதிபதி அவர்களே, மானை வேட்டையாடுவதை விட்டுவிட்டு, வண்ணத்துப் பூச்சிகளுக்குப் பின்னால் ஓடுகிறார்கள் இந்த பைத்தியக்கார சின்னமனிதர்கள்" என்று கோபத்துடன் சொன்ன வழக்காளி வண்ணத்துப்பூச்சியைப் பிடித்து அதன் இறகுகளை பிய்த்து எறிய வண்ணத்துப்பூச்சி துடிதுடித்து கீழே விழுந்து மடிந்தது. சின்ன மனிதனின் முகம் அப்படியே வாடிவிட்டது.
கதை சொல்லிக் கொண்டிருக்கும் போதே என்கண்களில் தூக்கம் வருகிறமாதிரி இருந்தது. அப்போது எங்கிருந்தோ அசரீரி கேட்டது.
"ஏ மனிதனே, அந்த சின்னமனிதர்கள் வேறு யாருமல்ல, உன்னுடைய குழந்தைகள் தான். நீதான் வண்ணத்துப்பூச்சிகளின் இறகுகளை பிய்த்து எறிந்த அந்த கொடிய மனிதன்"

அசரீரி சொல்லி முடித்ததும் திடுக்கிட்டு எழுந்த நான், நிறைய பலூன்களோடும், விளையாட்டுச் சாமான்களோடும், கார்ட்டுன் இறுவட்டுக்களோடும், தேவதைக்கதைப் புத்தகங்களோடும்.அன்றிரவே நாடு திரும்பினேன். நான் சாவிக்கொத்தை மேசைமீது போட்டேன். "இதோ எல்லா அலுமாரிகளையும் திறந்து நீங்கள் விரும்பியவாறு விளையாடுங்கள், இந்த பலூன்களை பறக்க விடுங்கள், இந்தக் கதைப் புத்தகங்களை படியுங்கள், படிக்க முடியாவிட்டால் கிழித்தெறிந்து விடுங்கள். நீங்கள் என்னசெய்தாலும் பரவாயில்லை. நான் உங்கள் தந்தை. நீங்கள் என் குழந்தைகள்" என்று குதூகலத்துடன் கூவினேன் நான். மூன்று வாலிபர்களும், ஓரிளம் மங்கையும் தந்தையைப் பார்த்து சிரித்தார்கள், அதாவது என்னைப் பார்த்து சிரித்தார்கள். "தந்தையே, நாங்கள் இப்போது சின்ன மனிதர்கள் அல்ல, பெரிய மனிதர்கள்" என்றான் மூத்த பையன். கனவில் கேட்ட அதேகுரல். அப்படியென்றால் அசரீரி சொன்னது உண்மையா? அவன். கையிலே சிறகுகள் பிடுங்கப்பட்ட வண்ணத்துப்பூச்சியை வைத்திருந்தான்.



# மரப்பாச்சியின் செல்லக் குழந்தை

எம்.எம்.நௌஷாத்

மில்லியன் டொலர் செயற்றிட்டம் என்ற பெயர்ப்பலகை இந்த இடத்தில் முளைத்த பொழுது அதனை நடந்து முடியும் திட்டம் என்று யாரும் நம்பாவிட்டாலும் விஷமிகள் அதனை உடைத்தெறிய முயற்சி செய்தும், ஆறு மாதங்கள் நிறைவடையும் முன்பாகவே *டைகன்சுற்று வட்டம்* எழில் கொஞ்சும், தேஜஸ் பொருந்திய இடமாக மாறிவிட்டது. மையத்தில் நிர்மாணிக்கப்பட்டிருந்த நீர் விசிறியடிக்கும் நுட்பம் உலகில் எங்குமே இருக்கவில்லை. எப்படியென்றால் இராட்சத டைனோஸர் மிருகமொன்று ஆடிஅசைந்து வருவது போலவும், அது கோபமடையும் ஒவ்வொரு சந்தர்ப்பத்திலும் நீரை விசிறி அடிப்பது போலவும் அமைத்திருந்தார்கள்.

அவ்வேளை டைனோசரின் கண்களிலிருந்து தீப்பிழம்பு கிளம்பியது; கர்ணகடூரமான சப்தத்துடன் பிழம்பு வெளிப்பட்டது. சுற்றுவட்டத்தை தரிசிப்பதற்கென்றே உல்லாசப் பிரயாணிகள் வந்தார்கள். இரவில் பார்த்தால் சுற்றுவட்டத்தின் அழகு விசேஷமாக இருக்கும். நீர் விசிறியடிக்கும் குழாய்களின் உட்புறத்தில் அதிநவீன தொழினுட்பத்தைப் பயன்படுத்தி, விசிறப்படும் நீர் தங்கநிறத்தில் பாய்வதைப் போல் ஓர் ஏற்பாட்டை செய்திருந்தார்கள். அழகென்றால் அழகோ அழகு.

சுற்று வட்டம் திறந்து வைக்கப்பட்டு இரண்டு நாட்களில் மில்லியன் டொலரைப் பற்றித் தெரியாத, அழகை இரசிக்கத் தெரியாத ஒரு பெண்மணி டைகன் சுற்றுவட்டத்தடிக்கு வந்தாள். அவள் அவலட்சண மாக இருந்தாள்; அலங்கோலமாக ஆடை அணிந்திருந் தாள்; கூந்தலைப் பரட்டையாக பறக்கவிட்டிருந்தாள். கையிலே குழந்தை. வந்தவள் சுற்றுவட்டத்தின் காவல் வேலியைக் கடந்து உள்ளே இறங்க பார்த்துக் கொண்டிருந்த ஓர் இளைஞன் “உள்ளே போகாதே, உன்னைக் கொன்று விடுவார்கள்” என்று கத்தினான். அவனுடைய வார்த்தைகளை லட்சியம் செய்யாத பெண்மணி குழந்தையை விசிறியடிக்கும் நீர்த்திவலைக்குள் வைத்து நீராட்ட ஆரம்பித்தாள். டைனோஸர் நகர்வதற்கு ஏற்ப அவளும் நகர்ந்தாள். டைனோஸரின் கண்களிலிருந்து வெளிப்பட்ட தீப்பிழம்பை பார்த்து ஆரம்பத்தில் அழுத குழந்தை பிறகு அது பழக்கமாகி விட்டதோ என்னவோ தீப்பிழம்பு வெளிப்பட்ட போதெல்லாம் கைகொட்டி நகைத்தது.

சுற்றுவட்ட விசிறலில் குழந்தையை குளிப்பாட்டிய உலகிலே நடைபெற்ற முதற் சம்பவம் இதுவென்பதால் நகரமாந்தர் அதனை வேடிக்கை பார்த்தனர். அவள் பாட்டை முணுமுணுத்தபடி குழந்தைக்கு சவர்க்காரம் போட்டதையும் நகரமாந்தர் வேடிக்கை பார்த்தார்கள். குளிப்பாட்டி முடிந்தவுடன் அவள் பழைய துணியால் குழந்தையைச் சுற்ற அதனையும் நகரமாந்தர் வேடிக்கை பார்த்தார்கள். பெண்மணி குழந்தையின் தலையிலே ஓடிக்லோன் தடவினாள், உடம்பு முழுவதும் கிறீம் பூசினாள், முகத்திற்கு பவுடர் போட்டாள். இத்தனை

கைங்கரியங்களும் முடிந்தபின் குழந்தைக்கு பாலூட்ட ஆரம்பித்தாள். நடுச்சந்தி என்பதால் நகரமாந்தர் அதனையும் வேடிக்கை பார்த்தனர். எல்லோருடைய கண்களிலும் மண்ணைத்தூவினாலும் பொலிஸ்காரனை ஏமாற்ற முடியுமா? ரோந்து போய்க்கொண்டிருந்த பொலிஸ்காரனின் கண்கள் சிவப்பேறி மீசை துடித்தது ஓடோடிவந்து ‘‘பெண்மணியே நிறுத்து’’ என்று உரத்த தொனியில் கட்டளையிட்டான் பொலிஸ்காரன்.

“எதை நிறுத்தச் சொல்கிறாய்?”
“குழந்தையைக் குளிப்பாட்டுவதை”
“ஏன் நிறுத்தச் சொல்கிறாய்?
“நீ குளித்துக் கொண்டிருக்கும் இடம் எதுவென்று தெரியுமா?”
“டைகன்சுற்று வட்டம்”
“டைகன் சுற்றுவட்டத்தை அமைத்தவர்கள் யாரென்று தெரியுமா?”
“அமெரிக்கக்காரர்கள்”
“எவ்வளவு செலவானதென்று தெரியுமா?”
“ஒரு மில்லியன் டொலர்கள்”
“ஓ! எல்லா விஷயங்ளையும் நன்றாகத் தெரிந்து வைத்திருக்கிறாய். தெரிந்து வைத்துக்கொண்டா இந்த அசிங்கமான வேலையை செய்து கொண்டிருக்கிறாய்?”
“எது அசிங்கமான வேலை?”
“குழந்தையை நிர்வாணமாக குளிப்பாட்டுகிறாய், அபத்திற்கு சோப்பு போடுகிறாய், பிட்டத்தை தேய்க்கிறாய், நாசித் துவாரங்களை சுத்தம் பண்ணுகிறாய், பிரபலஸ்தர்களின் வாகனங்கள் சுற்றிச் சுற்றி வரும் இந்த இடத்தில் இப்படிச் செய்ய உனக்கு அசிங்கமாக இல்லையா?” என்று கடுகடுத்தான் பொலிஸ்காரன்.

“பொலிஸ்காரரே மன்னிக்க வேண்டும். உங்களுடைய வார்த்தைகள் தான் அசிங்கமாக வருகின்றன. குழந்தையை நீராட்டுவதென்றால் இப்படித்தான். யாருமே மேற்சட்டை கீழ்ச் சட்டையோடு குழந்தையை குளிப்பாட்டுவதில்லை” என்று பதிலுக்குச் சொன்னாள் பெண்மணி. வேடிக்கை பார்த்துக் கொண்டிருந்தவர்கள் அவளுடைய பதிலைக் கேட்டதும் சிரிக்கவே பொலிஸ்காரனுக்குக் கோபம் தலைக்கேறி பிரம்பால் பெண்மணியின் முதுகில் தாறுமாறாக ஓங்கி அடித்தான். அவள் வேதனையால் அலற அவன் மீண்டும் அடித்தான். அவள் வேண்டாம் வேண்டாம் என்று கூச்சலிட பொலிஸ்காரன் இடைவிடாமல் அடித்துக் கொண்டேயிருந்தான். நகரமாந்தர்கள் வழமை போலவே இந்தக் காட்சியையும் வேடிக்கை பார்த்தார்கள்.

ஒருநாள் ஒல்லியாக, மினுமினுப்பாக தோற்றமளித்த அழகிய மங்கை காரைவிட்டு இறங்கினாள். கார் கெடிலாக். புத்தம்புதிய அது பளிச்சென்று இருந்தது, மங்கை உச்சிக் கொண்டை வைத்திருந்தாள். கழுத்திலே வைரமாலை இருந்தது, கையிலே இரத்தினங்கள் பொறிக்கப்பட்ட வளையல்கள் குலுங்கின, வதனம் மெத்தென்று

மிருதுவாக இருந்தது, விலையுயர்ந்த சிவப்புக் குதிகாலணி அணிந்திருந்தாள் அவள் நடக்கும்போது டக்டக்கென்று ஒலி கேட்டது. கைப்பை ஆடைக்கு ஒத்த கிறிம்சன் வர்ணத்தில் இருந்தது. செல்வச் செழுமை மிக்கவள். ஆனால் முகத்தில் சாந்தம் தவழ்ந்தது, கண்களிலே கனிவு மின்னியது. அந்தச் சாந்த சொரூபம்தான் அவளுக்கு பேரழகைக் கொண்டுவந்தது. அணிகலனான அவளுடைய பொன் நகைகளோ வைடூரியங்களோ அல்ல.

பொலிஸ்காரன் குழந்தையையும், தாயையும் மோசமாகத் திட்டிக் கொண்டிருந்த வேளை அவள் வந்திறங்கினாள். வந்திறங்கியவள் பொலிஸ்காரனுக்கு அருகில் சென்று “67389 அவர்களே, ’ஏன் அப்பாவிப் பெண்ணை தூஷண வார்த்தைகளால் ஏசிக் கொண்டிருக்கிறீர்கள்?’ என்று கேட்டாள். “இதனைக் கேட்பதற்கு நீ யார்?” என்று கடுப்புடன் பொலிஸ்காரன் கேட்க “நான் யாராயிருந்தால் என்ன? இதயத்தில் இரக்கமுள்ள மனிதப்பிறவி என்று வைத்துக்கொள். மனிதாபிமானம் உள்ள எவரும் இந்தக் கேள்வியைக் கேட்கத்தான் செய்வார்கள்” என்றாள் அழகிய பெண்மணி.

“அதுசரி, அது என்ன 67389?”

“உன்னுடைய பெயர் எனக்குத் தெரியாதே, உன் சீருடையிலுள்ள இலக்கத்தை வாசித்தேன்”

“ஓ அப்படியா? என்னைத் தொடாதே அவர்களே, இந்தப் பெண்மணி செய்து கொண்டிருக்கும் காரியம் என்னவென்று உங்களுக்குத் தெரியுமா? பெறுமதி மிக்க இந்த டைகன் சுற்றுவட்டத்தை இவள் நாசம் செய்துகொண்டிருந்தாள்”

“என்னைத் தொடாதே என்று ஏன் அழைத்தாய்?”

“டீசேட்டில் பொறிக்கப்பட்டிருப்பது உங்கள் பெயர் என்று நினைத்தேன்”

அழகிய பெண்மணி க்ளுக் என்று சிரிக்க அழகிய பெண்மணியின் சிரிப்பு பொலிஸ்காரனின் உள்ளத்தை ஆகர்ஷித்து விட்டதோ என்னவோ அவனும் சிரித்துவிட்டான்.

“என் பெயர் என்னைத் தொடாதே அல்ல, டீவானி. குழந்தைத் தொழிற்சாலை என்ற தொண்டு நிறுவனத்தின் தலைவியாக இருக்கிறேன். குழந்தைகள் எங்காவது துன்பப்படுவது கண்டால் என் மனம் சகித்துக் கொள்ளாது” என்றாள் அழகிய பெண்மணி. “மன்னித்துக் கொள்ளுங்கள் அம்மணி, உங்களுக்காக விட்டு விடுகிறேன்” என்றான் பொலிஸ்காரன். டீவானி பொலிஸ்காரன் இருவரும் கைகுலுக்கிக் கொண்டார்கள். டீவானி வீடியோ கமரா ஒன்றை எடுத்து தாயிடம் குழந்தையை நீராட்டச் சொல்லி அக்காட்சி முழுவதையும் படம்பிடித்தாள். தாயின் கண்களில் நன்றியுணர்வு நிரம்பி வழிந்தது. “அம்மணி எனக்காக நீங்கள் வீணாக ஏன் பொலிஸ்காரனுடன் சண்டை பிடித்தீர்கள்? அவர்கள் மிகவும் பொல்லாதவர்கள். கைகுலுக்கிக் கொண்டு போனாலும் உங்கள் காருக்கு கல்லெறியவும் தயங்கமாட்டார்கள்” என்றாள் தாய். “என்ன

நடந்தாலும் பரவாயில்லை, இப்படி நான் வாதாடியதெல்லாம் உண்மையைச் சொல்லப்போனால் உனக்காக அல்ல, உன் குழந்தைக்காக. உன் குழந்தையின் அழகு என்மனதைக் கொள்ளை கொண்டுவிட்டது" என்றாள் டீவானி.

"நாங்கள் ஏழைகள்" என்றாள் தாய். "ஏழைகளை எனக்கு ரொம்பப் பிடிக்கும்" என்றாள் டீவானி. "நீங்கள் பெருந்தன்மையுள்ள பெண்மணி" என்றாள் தாய். "அதை விடு. கேட்கிறேன் விடையைச் சொல்லு. ஏன் இந்த இடத்தில் குழந்தையை நீராட்டுகிறாய்? இந்த சுற்றுவட்டம் எவ்வளவு அழகாகக் காட்சியளிக்கிறது. நீங்கள் இங்கே வாழ்ந்து கொண்டிருப்பவர்கள். சுற்றுவட்டம் அழகாக இருந்தால் உங்களுக்குத்தானே பெருமை" என்றாள் டீவானி. "நீங்கள் சொல்வது நூற்றுக்கு நூறு உண்மைதான் அம்மணி. எனக்கும் விளங்குகிறது. நான் பக்கத்துச் சேரியிலே குடியிருக்கிறேன். அங்கே தண்ணீர்க் குழாய் போட்டுத் தந்தார்கள், தண்ணீர் இல்லை. அருகிலே உள்ள பெரிய தொழிற்சாலைக்கு முதலில் தண்ணீர் போகும். அதற்கடுத்து பணக்காரர்கள் வாழும் வீட்டுத் தொகுதிக்கு தண்ணீர்போகும். கடைசியிலே எங்களுடைய குழாயில் சொட்டு சொட்டாகத் தண்ணீர் வரும். அதுவும் எப்போது வருமென்றால் இரவு நடுச்சாமத்தில்" என்றாள் தாய். "நீங்கள் ஒன்று செய்யலாமே. எல்லாக் குடியிருப்பாளர்களும் ஒன்று சேர்ந்து அரசாங்கத்திற்கு மனு ஒன்று எழுதிக் கொடுத்தீர்கள் என்றால் உங்களுக்கும் விடிவு காலம் வரும் அல்லவா?" என்றாள் டீவானி. தாய் சிரித்தாள்.

"ஏன் சிரிக்கிறாய்?"

"அம்மணி நாங்கள் மனுக் கொடுக்காத இடமுமில்லை, போகாத இடமுமில்லை. எதுவுமே நடக்கவில்லை. இது இன்றைய நேற்றைய கதையல்ல. இருபத்தி ஐந்து வருடங்களாக நடக்கும் கதை" என்றாள் தாய்.

"Oh! My God, அப்படியா கதை? எனக்கு உங்கள் துயரம் புரிகிறது. என்னை உங்கள் சேரிக்கு கூட்டிப் போக முடியுமா?" என்று கேட்டாள் டீவானி.

"நீங்கள் அங்கே வர வேண்டாம் அம்மணி"

"ஏன் அப்படிச் சொல்கிறாய்?"

"அது மிகமோசமான இடம். குப்பைகூளமாகவும், குன்றும் குழியுமாகவும் இருக்கும், உங்கள் ஆடைகள் அழுக்காகி விடும், காலணிகள் கிழிந்து போய்விடும், அங்கு வீசும் துர்நாற்றத்தால் உங்களுக்கு நோய்கள் வந்துவிடும்" என்றாள் தாய். டீவானி பிடிவாதமாக இருக்கவே தாய் வேறுவழியின்றி டீவானியை சேரிப்புறத்திற்கு கூட்டிப்போனாள். ஆடம்பரமான வாகனத்தையும், செல்வச் செழுமைமிக்க பெண்மணியையம் கண்டிராத சேரிப்புற வாசிகள் டீவானியைச் சூழ்ந்துகொண்டார்கள். தாய் ஏற்கனவே வர்ணித்ததை விட சேரிப்புறம்

மோசமாக இருந்தது. எல்லா இடங்களிலும் குப்பைகூளங்கள் பரவிக்கிடந்தன, சாக்கடைநீர் ஓடியது, நுளம்புகள் மொய்த்தன, கொசுக்கள் பறந்தன, மேனிகளும், முகங்களும் அழுக்காகி கறுத்துப் போய் இருந்த அரைநிஜார் பையன்கள் விளையாடினார்கள், இவைகளெல்லாம் டீவானி வாழ்க்கையில் காணாத காட்சிகள். "அடக்கடவுளே, இப்படி மோசமான இடத்திலா நீங்களெல்லாம் வாழ்கிறீர்கள்?" என்று டீவானி கேட்க தாய் ஆமென்று தலையாட்டினார்.

நிர்வாணச் சிறுவர்கள், பாதையில் சிறுநீர் கழிக்கும் குழந்தைகள், அழுக்கான தாய்மார்கள், வானத்தைப் பார்த்துப் பேசும் துருப்பிடித்த தகரக் கூரைகள், தண்ணீர்வராத நீர்க்குழாய், சாக்கடைநீர், ஓட்டைக் குடிசைகள், நாய்களின் நடமாட்டம், இளசுகளின் ஆதங்கம் என்று டீவானி எல்லாக் காட்சிகளையும் வீடியோவில் படம்பிடித்தாள். சேரிப்புறவாசிகள் அவளுக்கு குளிர்பானம், சிற்றுண்டிகள் தங்கள் சொந்தச்செலவில் வாங்கிக் கொடுத்தார்கள். சேரிப்புறத்திற்கு ஸீலியம்(Zeeleum) என்று அழகான பெயர் இருந்தது. டீவானி ரம்மியமான அந்தப் பெயரையும் சேர்த்து ஒரு விவரணப்படம் தயாரித்தாள். 'ஸீலியம் வாழ்க்கைக்காக ஏங்குகிறது' (Zeeleum longing for life) என்பதுதான் விவரணப்படத்தின் தலைப்பு.

தலைப்பு அற்புதம் என்று சபையோர் டீவானியைப் பாராட்டினர். டைகன் சுற்றுவட்டத்தின் நீர்த் திவலைகளில் தாய் குழந்தையை நீராட்டும் காட்சியோடு படம் ஆரம்பமானது. பின்னணியில் மெல்லிய சோக இசை ஒலித்தது. நீராடிக் கொண்டிருக்கும் வேளையிலே டீவானி பேச ஆரம்பித்தாள். நீராடுவது கூட துயர நிகழ்வாக இருக்கும் குழந்தை யினதும் தாயினதும் சோகக்கதை இது. இந்தக் குழந்தையை நீங்கள் எங்கு போனால் தரிசிக்கலாம்? என்ற கேள்வியோடு முதல் காட்சி முடியவும் வீடியோ கமரா குப்பைகூளங்கள் நிறைந்த அடுத்த காட்சிக்குத் தாவியது.

கற்பனையா? நிஜமா? டைகன் சுற்றுவட்டத்தில் நீராடிக் கொண்டிருக்கும் இந்தக் குழந்தை கற்பனையா? குழந்தையை நீராட்டிக் கொண்டிருக்கும் இந்த ஏழைத்தாய் கற்பனையா? இல்லவே இல்லை. பரிதாபமான ஓர் ஏழையின் கதை மட்டுமல்ல நகரத்தின் மத்தியிலே அமைந்திருக்கும் சேரிப்புறத்திலே வாழ்வதற்காகத் திண்டாடிக் கொண்டிருக்கும் எண்பத்து மூன்று குடும்பங்களின் கதை. நகரத்தின் இதயமான டைகன்சுற்றுவட்டம் மிக அருகிலே இருக்கிறது; ஜனநெரிசல் மிக்க பாதை மிக அருகிலே இருக்கிறது; இந்தப் பாதையில் பெரும் புள்ளிகள், ராஜதந்திரிகள், அமைச்சர்கள் பயணஞ்செய்கிறார்கள். பாவப்பட்ட இந்த ஏழைகளின் துயரத்தை துடைக்கப் போவது யார்?

இவர்களின் வசதியை மேம்படுத்தப் போவதுயார்? என்ற கேள்விக் குறியோடு முடித்தாள் டீவானி.

சபையிலே ‘செய்யுங்கள் மழலைகள்’ (Do Kids) என்ற ஜேர்மனியைச் சேர்ந்த தொண்டு நிறுவனத்தின் தலைவரும் இருந்தார். ‘ஸீலியம் வாழ்க்கைக்கு ஏங்குகின்றது’ என்ற விவரணப்படம் அவருடைய உள்ளத்தை வெகுவாகப் பாதித்துவிட்டது. உடனடியாக டீவானியைப் பார்த்து உங்களுக்கு என்ன வேண்டுமென்று கேட்க அவள் தன்னுடைய கனவைச் சொல்ல நீர்ப்பூங்கா உருவாகிவிட்டது. அது மில்லியன் டொலர் திட்டம். ஸீலியம் சேரிப்புற வாசிகளுக்கு கனவுலகம் கிடைத்தது. நீர்ப்பூங்கா திறந்து வைக்கப்பட்ட தினத்தில் டீவானி அழகாக நடனமாட அவளுடன் சேர்ந்து சேரிப்புறக் குழந்தைகளும் நடனமாடினார்கள்; பாட்டுப் பாடினார்கள். நீர் வழங்கல் மந்திரி நீர்ப்பூங்காவை திறந்து வைத்தார். “ஸீலியம்வாசிகளே, நீங்கள் சொர்க்கவாசிகள், உங்கள் குழந்தைகள் சொர்க்கலோகக் குழந்தைகள், குழந்தைகள் ஆடலாம், பாடலாம், நீராடலாம், விளையாடலாம்” என்று டீவானி பேச ஸீலியம்வாசிகளின் முகங்கள் பூரித்துப் போயின. டீவானி சொன்னதோடு நிற்காமல் குழந்தைகளையும் அழைத்துக் கொண்டு நீருக்குள் பாய்ந்தாள். இடுப்பில் நீர் மிதப்புகளைச் சுற்றிக் கொண்டு ஆனந்தமாய் எல்லோரும் நீராடினார்கள்.

கைவில்லையால் நுணுக்கமாக ஏதோவொன்றைத் தேடினாள் டீவானி. முதலில் குதிகால், பாதம், விரல் இடுக்குகள், வலது, இடது, குதப்பகுதி, பிட்டம், ஜனனி உறுப்புக்கள், அதன்பிறகு தொப்புள், கழுத்து, மூக்கு, நாசித்துவாரம், வாய்க்குழி, என்று ஆராய்ந்து இறுதியில் பெருவிரல் நுனியில் வந்து நின்ற டீவானி கேசத்தைக் கோதி அங்கும் ஆராய்ந்தாள். டீவானி பாசமுள்ள தாய். குழந்தையின் உடலிலே மண் துணிக்கை படிந்திருந்தாலும் அவளுக்கு கோபம் தலைக்கேறிவிடும். ஆயா பதட்டத்துடன் காணப்பட்டாள். டீவானி குழந்தையைக் கொஞ்சினாள்; உச்சி மோந்தாள்; மழலை மொழி பேசினாள். பிறகு ஆயாவைப் பார்த்து “நீ இன்று குழந்தையை நன்றாகவே பராமரித்திருக்கிறாய். குழந்தையின் மேனியிலே மண்துணிக்கைகளும் இல்லை; அழுக்குகளும் இல்லை” என்று பாராட்ட ஆயாவிற்கு போன உயிர் திரும்பிவந்து நிம்மதிப் பெருமூச்சுவிட்டாள். இது தினசரி நடக்கும் சடங்கு.

ஆறுமாதமேயான குழந்தை, அதன்பாதங்கூட நிலத்தில் பட்டுவிடக்கூடாது என்பதுதான் டீவானியின் கொள்கை. அந்தக் கொள்கையில் அவள் பிடிவாதமாக இருந்தாள். வேலைக்காரிகளை அவள் நம்புவதில்லை. வீடு வந்து சேர்ந்ததும் முதற்காரியமாக குழந்தையின் மேனி முழுவதையும் கைவில்லையால் சல்லடை போட்டு

ஆராய்ச்சி செய்வாள் டீவானி. குழந்தையை யாரும் கைகளால் தூக்க முடியாது. அவசரமாக குழந்தையை தூக்க வேண்டி வந்தாலும் தொற்று நீக்கப்பட்ட கையுறைகள் பாவிப்பது கட்டாயச் சட்டம். “ஆயா, நீ கிருமிகளால் சூழப்பட்ட பெண்ணாக இருக்கிறாய். நாசி, வாய், முன்துவாரம், பின் துவாரங்களில் கோடிக் கணக்கில் பக்டீரியாக் கிருமிகள் வாழ்கின்றன. என்னுடைய குழந்தைக்கு எந்த நோயும் வந்துவிடக் கூடாது. நோய் தொற்றிவிட்டதென்றால் அதற்கு நீதான் காரணமாக இருப்பாய். அப்படி ஒரு நிலைமை வந்துவிட்டதென்றால் உன் எலும்புகளை முறிக்கக்கூட தயங்கமாட்டேன்” என்று கடுமையாக எச்சரிக்கை செய்திருந்தாள் டீவானி.

அதன் காரணமாக ஆயா எப்போதும் துணிகளால் சுற்றப்பட்ட பொம்மை போல நடமாடினாள். கால்களை மூடியிருந்தாள்; தலையை மூடியிருந்தாள்; வாயை மூடியிருந்தாள்; கழுத்தை மூடியிருந்தாள்; கண்களை உற்று நோக்கினால் மாத்திரமே அவளை ஆயா என்று கண்டுபிடிக்க முடியும். டீவானியின் படுக்கையறையிலே *குழந்தையின் மைல் கற்கள்* என்றொரு புத்தகம் இருந்தது. அந்தப் புத்தகத்துக்கு பக்கத்தில் இருந்த குறிப்புப் புத்தகத்திலே குழந்தையின் நாளாந்த நடவடிக்கைகளை எழுதி வந்தாள் டீவானி. புன்னகைப்பது, மூக்கை சிமிட்டுவது, காதைச் சொறிவது, கைகளை ஆட்டுவது, புரளுவது, தவழுவது, தாவுவது, வாயைத்திறப்பது, மூடுவது, விரல்களை மடக்கிவது, சிறுநீர் கழிப்பது, குந்தி எழுவது, நாக்கை நீட்டுவது, நீட்டி அழுவது என்று பிரமாண்டமான ஏடு போல காட்சியளித்தது குழந்தையின் புத்தகம்.

டீவானி குழந்தை விஷயத்திலே கண்டிப்பானவளாக காணப்பட்டாலும் ஆயா விஷயத்தில் மிகவும் இரக்கம் காட்டினாள். ஆயாவுக்கென்று தனியறையை ஒதுக்கிக் கொடுத்தாள், தனிக்கட்டில் கொடுத்தாள், தனியான மின்விசிறி, தனியான சவர்க்காரம், தனியான நிலைக் கண்ணாடி, தனியான சீப்பு, தனியான மேசை, தனியான கதிரை என்று ஆயாவுக்கென்று அனைத்தும் தனியாக இருந்தன. டீவானி ஆயாவிடம் மிகவும் மென்மையாகப் பேசுவாள்; தவறுகளை நாசூக்காக சொல்லுவாள். மற்றைய எஜமானிகளைப் போல் அவள் தன்னுடைய பங்களாவிலே சூட்டுகோல் வைத்திருக்கவில்லை. ஆயா தனக்கு கிடைத்ததை பெரும் பேறாகக் கருதினாள் டீவானி. குக்கிராமம் சென்று இரண்டு நாட்கள் அங்கேயே தங்கி தேடிக்கொண்டு வரப்பட்டவள் தான் இந்த ஆயா. ஆயாவின் வயது பதினான்கு, பெயர் ஆணி. ஆணி ஆறு பெண் பிள்ளைகளில் மூத்தவளான ஆணியை டீவானியிடம் ஒப்படைக்க அவள் தாய் விரும்பவில்லை. அவளுடைய கண்களிலும் ஆணியின் சகோதரிகளின் கண்களிலும் கண்ணீர் தழும்பி இருந்தது. ஆணியின் தந்தை மாத்திரம் மனத்தைரியத்துடன் “மகளே, இந்த அம்மாளுடன் செல், இவள் இரக்கமுள்ளவள், நற்குணங்கள்

நிறைந்தவள் உன்னைக் கண்களின் மணிபோல் பாதுகாப்பாள்" என்று சொன்னார்.

"அம்மா அழாதீர்கள், எனக்கு குழந்தைகள் என்றால் உயிர். ஆணி குழந்தை. அவளின் முகத்தைப் பாருங்கள், இன்னமும் பால்வடிந்து கொண்டிருக்கிறது, அவளுக்காக நான் எதை வேண்டுமானாலும் செய்வதற்கு தயாராக இருக்கிறேன்" என்றொரு வாக்கியத்தை டீவானி பயன்படுத்த அந்த வசனம் எல்லாப் பாறாங்கற்களையும் உடைத்தெறிந்தது. "அவள் படித்துக் கொண்டிருக்கிறாள். அவளைப் படிப்பிக்க முடியுமா?" "இதற்காகவா கவலைப்படுகிறீர்கள்? இது எனக்கு சுலபமான காரியம். என்னிடம் நிறையப் புத்தகங்கள் இருக்கின்றன. நானே அவளுக்கு படிப்பிக்கிறேன். ஆணி புத்திசாலி, எதையும் இலகுவாக கற்றுக்கொள்வாள்" என்று பதிலளித்தாள் டீவானி. அதன்பிறகு ஆணியை டீவானியோடு அனுப்பி வைத்தார்கள். ஓரிரு தடவைகள் டீவானியின் வீட்டிற்கு வந்த ஆணியின் பெற்றோர்களுக்கு டீவானி கொடுத்த வாக்கை காப்பாற்றும் நாணயமான பெண்மணி என்பதை தெளிவாகத் தெரிந்து கொண்டார்கள். ஆணிக்கு செய்து கொடுக்கப்பட்டிருந்த வசதிவாய்ப்புகள் அப்படி, பார்த்ததும் உச்சிகுளிர்ந்து போனார்கள். டீவானி சொன்னதைப் போலவே அவளிடம் நிறையப் புத்தகங்கள் இருந்தன. அவள் இளமைக் காலத்தில் கல்லூரியிலே படித்தவை. *"எண்பது நாட்களில் உலகைச்சுற்றி வருதல்" "பெரும் எதிர்பார்ப்புகள்" "வெனிஸின் வர்த்தகன்" "இரு நகரங்களின் கதைகள்" "மிகப் பெருந்துயரம்"* என்று இப்படி நிறைய நேரங் கிடைக்கும் போதெல்லாம் அந்தக் கதைகளை ஆணிக்குச் சொல்லி வந்தாள் டீவானி. பகல் வேளைகளில் தாயாகவும் இரவு வேளைகளில் டீவானியின் குழந்தையாகவும் வாழ்க்கை நடத்திவந்தாள் ஆணி.

இருபது வருடங்கள் கழித்து ஸீலியம் சேரிப்புறத்திற்கு இரண்டு பெண்மணிகள் வந்து இறங்கினார்கள். ஒருத்தி வெள்ளைக்காரி, மற்றவள் கறுப்பு நிறமுடையவள். வெள்ளைக்காரி அழகாக இருந்தாள், கறுப்புக்காரி அவலட்சணமாக இருந்தாள். வெள்ளைக்காரியின் முகம் பளிச்சென்று இருந்தது. கறுப்புக்காரியின் முகம் வறண்டுபோய் இருந்தது. வெள்ளைக்காரி களிப்புடன் இருந்தாள், கறுப்புக்காரி கவலையுடன் இருந்தாள். வெள்ளைக்காரியின் முகத்தில் சாந்தம் தவழ்ந்தது, கையிலே டம்பப்பை இருந்தது. அவள் கம்பீரமாக கையை ஆட்டிஆட்டி நடந்துவந்தாள். நாசியை துளைக்கும் சுகந்தம் அவளுடைய மேனியிலிருந்து காற்றிலே கலந்து வந்தது. கறுப்புக்காரி தளர்ந்த நடையுடன் வெள்ளைக்காரியின் பின்னாலே தயங்கித் தயங்கி வந்தாள். அவளுடைய ஒரு கரத்திலே நாய்ச்சங்கிலி இருந்தது, நாய்ச்சங்கிலியின் மற்ற முனையிலே நாய் இருந்தது. வெள்ளைக்காரியின் ஆகர்ஷண அழகில் மயங்கி ஆண்கள், பெண்கள்,

சிறுவர்கள், குழந்தைகள், வயோதிபர்கள் அவளைச் சுற்றி கூடிட, சிலர் அவளைத் தொட முயற்சித்தவாறே முண்டியடித்தார்கள். அவள் இரக்க சிந்தை உள்ளவள்; ஒவ்வொரு சிறுமியையும், ஒவ்வொரு சிறுவனையும் கூப்பிட்டு பார்சலொன்று கொடுத்தாள். ஒவ்வொரு பார்சலிலும் ஒரு டீஷேர்ட், ஒரு சினிமா இறுவட்டு, ஒரு வீடியோ கேம், ஒரு கதைப்புத்தகம், ஒரு பேனா, ஒரு கைக்குட்டை, ஓர் இனிப்புப் பொட்டலம் என்பன இருந்தன. வெள்ளைக்காரியுடன் வந்த தாடிக்காரன் எல்லா நிகழ்ச்சிகளையும் படம்பிடித்துக் கொண்டிருந்தான்.

'குழந்தைகளே' என்று வெள்ளைக்காரி விளிக்கவும் அத்தனை பேரும் அவளை அதிசயத்துடன் திரும்பிப் பார்த்தார்கள். அவர்கள் நினைத்தபடி அவள் வெள்ளைக்காரி அல்லாமல் உள்ளூர் மொழியிலே பேசினாள். “நீங்கள் வெள்ளைக்காரி இல்லையா?” என்று கூட்டத்திலிருந்த ஒரு தாய் கேட்க வெள்ளைக்காரி சிரித்தாள். “நான் வெள்ளைக்காரி இல்லை. நானும் சுவர்க்கத்தீவு வாசிதான். என்தாய் என்னை அலுங்காமல் குலுங்காமல் வளர்த்ததால் வெள்ளைக்காரி போல் தோற்றமளிக்கிறேன்” என்றாள் வெள்ளைக்காரி. “எதற்காக இந்தக் குப்பைகூடத்திற்கு வந்தீர்கள்?” என்று கேட்டாள் ஒருத்தி. “எனக்கு குழந்தைகள் என்றால் உயிர்” என்று பதிலளித்தாள் வெள்ளைக்காரி. “குழந்தைகளே, உங்களுக்கு வேறென்ன வேண்டும்?” குழந்தைகள் “ஐஸ்கிறீம்” என்று கத்தினார்கள். வெள்ளைக்காரி எல்லோருக்கும் ஐஸ்கிறீம் வாங்கிக் கொடுத்தாள். “வேறென்ன வேண்டும் குழந்தைகளே?” “கரடி பொம்மை” என்று குழந்தைகள் கத்தவே வெள்ளைக்காரி எல்லோருக்கும் கரடிப் பொம்மை வாங்கிக் கொடுத்தாள்.

பால்வடியும் குழந்தை முகங்களில் பிரதிபலித்த பூரிப்பைப் பார்க்கவேண்டுமே! தாடிக்காரன் ஓடியோடி எல்லாக் காட்சிகளையும் படமெடுக்க எதனையும் பொருட்படுத்தாது ஒரு குழந்தை வேறு உலகத்தில் சஞ்சரித்துக் கொண்டு இருந்தது. விநோதமான குழந்தை, தாய் சிரித்தால் அந்தக் குழந்தையும் சிரிக்கும். தாய் அழுதால் அதுவும் அழும். தாய் உம்மென்று இருந்தால், அந்தக் குழந்தையும் உம்மென்றிருக்கும். கன்னங்கரியது என்றாலும் குழந்தை கொழுகொழுவென்று அழகாக இருந்தது, சிரித்தபோது அதன் கன்னத்தில் குழிவிழுந்தது, வித்தியாசமான இந்தக் குழந்தையை அவதானித்து விட்ட வெள்ளைக்காரி மனசுக்குள் மெலிதாகக் கோபித்தாள். பார்த்துப் பார்த்து பொறுக்காதவளாக குழந்தையின் அருகே வந்த வெள்ளைக்காரி “அம்மா குழந்தையை என்னிடம் தாருங்கள்” என்று கேட்க தாயும் குழந்தையை வெள்ளைக்காரியிடம் கொடுத்தாள்.

குழந்தை ஜட்டியோடு இருக்க வெள்ளைக்காரி குழந்தையின் தாயைப் பார்த்து "அம்மா குழந்தையின் ஜட்டியை கொஞ்சம் கழற்றட்டுமா?" என்று கேட்டாள். தாயும் வெள்ளைக்காரியின் கோரிக்கையை மறுக்க முடியாதவளாய் சரி என்று தலையாட்டினாள். "ஏன் அம்மணி இப்படிச் செய்கிறீர்கள்?" என்று தாடிக்காரன் இரகசித்தான். "உன்னாலும் புரிந்துகொள்ள முடியவில்லையா? இப்படியான நிர்வாணப் படங்களை அனுப்பினால்தான் வெளிநாட்டுக்காரனின் உள்ளம் கசிந்துருகும், உள்ளம் கசிந்துருகினால் நம்முடைய வேலை இலகுவாகும், நிதியுதவி தாராளமாகக் கிடைக்கும்" என்று பதிலுக்கு இரகசித்த அவள் கன்னங்கரிய நிர்வாணக் குழந்தையை தலைக்கு மேலே தூக்கி "சிரி சிரி" என்று கட்டளையிட்டாள். குழந்தை சிரிக்கவில்லை, உம்மென்று வெள்ளைக் காரியை முறைத்துப் பார்த்தது. வெள்ளைக்காரி குழந்தையைப் பார்த்து கலகலவென்று சிரித்து, பதிலுக்கு அதே சிரிப்பை எதிர்பார்த்தாள். ஆனால் குழந்தை சிரிக்காமல் முகத்தை உர்ரென்று வைத்திருந்தது. எரிச்சல் வந்த வெள்ளைக்காரி மழலை மொழி பேசினாள்; குழைந்து குழைந்து பேசினாள்; குழந்தை மாதிரி பேசினாள். அப்போதும் குழந்தை சிரிக்கவில்லை. வெள்ளைக்காரி கொஞ்சம் வைத்துக் கொள் என்று தாடிக்காரனிடம் குழந்தையை ஒப்படைத்துவிட்டு கோணங்கித்தனமாக முகத்தை, வாயை, உதடுகளை பிதுக்கியும், உருட்டியும் குரங்கு போலவும் நடித்துக் காட்டினாள். அப்போதும் குழந்தை சிரிக்காமல் இருந்தது.

வெள்ளைக்காரி காரைத் திறந்து சொக்லேட் ஒன்று கொண்டு வந்து கொடுத்தாள். குழந்தை சொக்லேட்டை வாங்கி கொஞ்சம் கொஞ்சமாகச் சாப்பிட்டு முடிந்ததும் வெள்ளைக்காரி குழந்தையைப் பார்த்து 'சிரிடா கண்ணா' என்று நயமாகச் சொல்லியும் குழந்தை சிரிக்காமல் முகத்தை உம்மென்று வைத்துக்கொண்டது. வெள்ளைக்காரி தாடிக்காரனின் காதுக்குள் ஏதேதோ கிசுகிசுத்தாள். தாடிக்காரன் போய் விளையாட்டுச் சாமான்கள் அடங்கிய பெரிய மூட்டையொன்றுடன் திரும்பிவர வெள்ளைக்காரி காரை ஓட்டிக்காட்டினாள்; வயலின் வாசித்துக் காட்டினாள்; பாவைப் பிள்ளையை கொஞ்சிக் காட்டினாள். குழந்தை அவைகளை வேண்டா வெறுப்போடு பார்த்தது. தாடிக்காரன் வெள்ளைக்காரியிடம் இரகசியமாக "கைத்துப்பாக்கியை கொண்டு வரட்டுமா? துப்பாக்கியை காட்டி மிரட்டினால் குழந்தை சிரித்து விடும்" என்று சொல்ல வெள்ளைக்காரி கொஞ்சநேரம் யோசித்துவிட்டு வேண்டாமென்று மறுத்துவிட்டாள். அலுத்துப்போன வீடியோ எடுத்துக் கொண்டிருந்த தாடிக்காரன் "அம்மணி இத்தோடு நிறுத்திக் கொள்வோமா?" என்று கேட்க வெள்ளைக்காரி இறுக்கமான குரலில் "இல்லையில்லை, குழந்தை சிரிக்க வேண்டும்" என்று காட்டமாகப் பதிலளித்தாள்.

குழந்தையைக் கழுத்திலே மாலையாகப் போட்டு சுற்றிச் சுற்றி நடனமாடிய வெள்ளைக்காரியின் முகம் திடீரென்று மாறியது. எப்படியென்றால் இஞ்சி தின்ற குரங்கு போல. அதாவது குழந்தை வெள்ளைக்காரியின் உடம்பில் மலங்கழித்துவிட்டது.

“தண்ணீர் கொண்டு வாருங்கள்” என்று அலறினாள் வெள்ளைக்காரி. கூட்டத்தில் நின்ற எவரும் அசையவில்லை. “நான் சொல்வது உங்கள் காதுகளில் விழவில்லையா? தண்ணீர் கொண்டு வாருங்கள் நாற்றம் தாங்கமுடியவில்லை” என்று மீண்டும் அலறினாள் வெள்ளைக்காரி. ஒரு பரட்டைத் தலையன் முன்னாலே வந்து “அம்மணி இங்கு குடிப்பதற்கே தண்ணீர் இல்லை. தண்ணீர் வேண்டுமாயின் தூரத்திற்கு போய் எடுத்துவர வேண்டும்” என்று ஆங்கிலத்தில் சொன்னான். “ஆணி வேடிக்கை பார்த்துக் கொண்டிருக்காமல் வந்து குழந்தையை வாங்கிக்கொள்” என்று வெள்ளைக்காரி கூப்பாடு போட நாயைப் பிடித்துக் கொண்டிருந்த கறுப்புக்காரி ஓடிவந்து குழந்தையை வாங்கிக்கொண்டாள். அவளின் கைபட்டதும்தான் தாமதம் குழந்தை சிரிக்க ஆரம்பித்து யாராலும் தடுத்து நிறுத்த முடியாதளவுக்கு குழந்தையின் சிரிப்பு இருந்தது. வெள்ளைக்காரி கடுஞ்சினத்துடன் காரில் ஏறி கதவை வேகமாக அடைத்தாள். கார் டைகன் சுற்று வட்டத்தில் வந்து நின்றது. அங்கு தாயொருத்தி குழந்தையைக் குளிப்பாட்டிக் கொண்டிருந்தாள். வெள்ளைக்காரியும் குளிக்க ஆரம்பித்தாள். வீதியில் நின்ற எல்லோரும் இக்காட்சியை வேடிக்கை பார்த்தனர்.

வெள்ளைக்காரி அந்தத் தாயைப் பார்த்து “உங்கள் ஆட்கள் நன்றி மறந்தவர்கள். நான் யார் தெரியுமா? உங்கள் ஆட்களுக்காக பிரமாண்டமான நீர்ப் பூங்காவை அமைத்த பெண்மணியைத் தெரியுமா? அவளுடைய பெயர் டீவானி, அவளின் மகள் நான்” என்றாள். தாய் அவளுக்கு கைகொடுத்து கைகுலுக்கினாள். “ஏன் என்னுடன் கைகுலுக்குகிறாய்?” என்று கேட்டாள் வெள்ளைக்காரி. “அதற்குக் காரணமான குழந்தை நான்தான்” என்று தாய் விகசிப்புடன் சொல்ல வெள்ளைக்காரி வெடுக்கென்று கையை இழுத்துக் கொண்டாள்.



# சொர்க்க மயானத்திலே நாட்டுப்புறத்தான்

எம்.எம்.நௌஷாத்

டோல்டமேன் ஒரு நாட்டுப்புற த்தான். நாட்டுப்புறத்தான் என்ற படியால் டோல்டமேனின் காலில் சப்பாத்து இருக்கவில்லை, கோட்டு ஷூட்டு அணியவில்லை, ரை[tie] கட்ட வில்லை, சட்டைப்பையிலே கடனட்டை இருக்கவில்லை. ஆசைகளோடு படைக் கப்பட்ட மனிதப்பிண்டமான டோல்ட மேனுக்கும் ஆசை இருந்தது. சுவர்க்க லோகம் போன்ற பட்டணத்திற்குப் போய் அந்தப் பட்டணத்தைச் சுற்றிப் பார்க்க வேண்டுமென்ற சின்னஆசை. பட்டணம் போகப்போகிறாயா? அது மிகத்தூரத்தில் அல்லவா இருக்கிறது. பட்டணம் போகப்போகிறாயா? உன்னிடமுள்ள எல்லாப் பணத்தையும் பட்டணம் சாப்பிட்டு ஏப்பமிட்டு விடும். பட்டணம் போகப் போகிறாயா? பட்டணத்து வாசிகள் உன்னை ஏமாற்றி உன்தலையிலே மொட்டையும் அடித்து விடுவார்கள் என்றெல்லாம் டோல்டமேனின் அயலவர்கள் பயமுறுத்தியும் டோல்டமேன் யாருடைய அறிவுரையையும் கேட்காமல் பிடிவாதமாகப் பட்டணம் வந்து சேர்ந்து விட்டான். நினைத்தது போல் பட்டணம் சுவர்க்கலோகம் தான். கடைகண்ணிகளையும், வானளாவ உயர்ந்த கட்டடங்களையும், அலங்காரமாகப் பவனிவந்த பதுமைகளையும் கண்டு அவன் பிரமித்துப் போனான். பட்டண வாசிகளைக் காணும்போதெல்லாம் அவன் பையை இறுகப்பிடித்துக் கொள்வான். ஏனென்றால் பை நிறையப் பணம். ஏமாற்றுக்காரப் பட்டணத்து ஆட்களை நம்பவில்லையாதலால் பார்க்க வேண்டிய எல்லா இடங்களையும் கால்நடையாகப் போய் சுற்றிப்பார்த்தான் டோல்டமேன். குதிகால்கள் வீங்கும் போது மாத்திரம் முச்சக்கரவண்டியில் ஏறிக்கொள்வான், அவ்வளவுதான்.

நடந்து களைத்த டோல்டமேன் அழகிய இருக்கையில் அமர்ந்து குறட்டை விட்டுத் தூங்கினான். வசதியான இருக்கையான அது சாமான்யர்கள் அமரக்கூடாத இடம். நாட்டுப்புறத்தான் டோல்ட மேனுக்கு எங்கே இது தெரிந்தது? அந்த இடம்தான் *“சொர்க்கமயானம்”.* செத்துப்போன பிரதம மந்திரியாகவோ, அங்கே இருந்த மந்திரியாகவோ, நம்பர் வண் கோடீஸ்வரனாகவோ, ஆயுத வியாபாரியாகவோ இருந்தால்தான் சொர்க்கமயான இருக்கையிலே நீட்டி நிமிர்ந்து உறங்கமுடியும். அந்த இருக்கையில் குப்பைகூளச் சாமான்யர்கள் அமர்வதை அசிங்கமாக நினைத்தார்கள் பெரிய கனவான்கள். நாட்டுப்புறத்தான் டோல்டமேன் இவை எதையுமே அறியாத முட்டாளாக இருந்தான். எட்டுப் பிள்ளைகளையும், ஒரு மனைவியையும் காப்பாற்றுவதிலேயே அவனுடைய முழு வாழ்க்கைக் காலமும் கழிந்து போயிருந்தது.

பெல்ஜியநாட்டு இருக்கை மிக அழகாகவும் வசதியாகவும் இருந்தது. அமர்ந்த மாத்திரத்திலேயே நகரக் காவலாளர்கள் பிடித்துக்

கொண்டுபொய் பாதாளச் சிறையிலே அடைத்து விடுவார்கள் என்ற சங்கதியை அறியாமல் கனவுகளில் மிதந்து கொண்டிருந்த டோல்டமேன் கனவிலே காண்டா மிருகம் வந்து கழுத்திலே ஏறி மிதித்ததும் மூச்சுத் திணறியது, கண்கள் பிதுங்கின, நாக்கு வரண்டது. ஒருவாறு கஷ்டப்பட்டு கண்களைத் திறந்த போது அவனுடைய கழுத்தைக் கெட்டியாக பிடித்தவாறு ஒரு முரட்டு மனிதன் நின்று கொண்டிருந்தான். டோல்டமேன் நாக்குழறியவாறு 'என்னை விடு' என்று கெஞ்சினான். 'நான் மயானகாவற்காரன்' என்று மிடுக்குடன் சொன்ன அந்த மனிதன் கடிந்த சொற்களாலும், இழிவாகவும் டோல்டமேனை வைதவாறே கன்னத்தில் ஓங்கி அறைந்தான். டோல்டமேன் நிலைகுலைந்து போனான்.

பட்டணம் என்பது விஷேடங்கள் நிறைந்த இடம். மனிதர்களும் வித்தியாசமான பிறவிகள். கவனம். எப்போதாவது இக்கட்டான நிலைமை ஏற்பட்டால் பணத்தாளை விட்டெறிந்தால் சுமுகநிலையை உண்டாக்கி விடலாம் என்று டோல்டமேனுக்கு நல்லுபதேசம் செய்திருந்தார் ஒரு நல்ல மனிதர். அந்த உபதேசம் ஞாபகம் வரவே இடுப்புப் பட்டியிலிருந்து நாணயத் தாளை எடுத்து டோல்டமேன் வீசியெறிய காவற்காரன் ஓடோடிப்போய் அதனைப் பொறுக்கியெடுத்தான். என்ன ஆச்சரியம்! டோல்டமேனைப் பார்த்து மன்னித்துக் கொள் என்பது போல் முகத்தை பார்த்த காவற்காரன் அவனுடைய உதடுகளிலிருந்து வடிந்த இரத்தத்தைப் தன்னுடைய கைலேஞ்சியால் துடைத்து 'மன்னித்துக் கொள்ளுங்கள் பெரியவரே, நீங்கள் யார்?' என்று வசனம் பேச அடுத்து டோல்டமேன் பேச ஆரம்பித்தான்.

'ஐயா நான் கடற்கரைக்குப் போய் கடலைப் பார்த்தேன், மிருகக் காட்சிசாலை போய் மிருகங்களைப் பார்த்தேன்; நகர வீதிகளிலே உயர்ந்த கட்டடங்களைப் பார்த்தேன்; ஜோடிகளையும், அலங்காரப் பெண்டிர்களையும் பார்த்தேன். இந்தப் பெரிய பூந்தோட்டத்தினைப் பற்றியும் இங்கே காணப்படும் பளிங்கு மாளிகைகளைப் பற்றியும் யாரும் சொல்லவில்லையே. இந்த ஏழைக்கு இரங்கி இந்த இடத்தை எனக்கு சுற்றிக்காட்டு' என்று பேசி முடித்தான் டோல்டமேன். கிராமப் புறத்தானின் உருக்கமான பேச்சு காவற்காரனின் இதயத்தை இளக்கிப் பிழிந்துவிட்டதோ என்னவோ காவற்காரன் கருணை விழிகளுடன் அவனை நோக்கி 'பெரியவரே உங்கள் பெயரென்ன? நீங்கள் யார்?' என்று கேட்டான். டோல்டமேன் தன்னுடைய பட்டணத்துப் பயணத்தைப் பற்றி விஸ்தாரமாகச் சொன்னான். "திரு டோல்டமேன் அவர்களே, நீங்கள் நினைப்பதுபோல் பூஞ்சோலையல்ல, இது பிணங்களைப் புதைக்கும் மயானம். பெயர் சொர்க்கமயானம்" என்று விளக்கமளித்தான் காவற்காரன்.

டோல்டமேனால் நம்பவே முடியவில்லை. “அப்படியானால் இங்கே காணப்படும் பளிங்கு மாளிகைகளில் யார் குடியிருக்கிறார்கள்?” என்று டோல்டமேன் கேட்டதும் சிரிப்பு மயானமெங்கும் வியாபித்து எதிரொலிக்க வாய்விட்டுச் சிரித்தான் காவற்காரன். “பெரியவரே, அவை மாளிகைகள் அல்ல, அங்கே யாரும் குடியிருக்கவுமில்லை. அங்கே செத்தவர்கள் புதைக்கப்பட்டிருக்கிறார்கள். வருடாவருடம் சொந்தக்காரர்கள் வந்து குடித்துக் கும்மாளமடிப்பார்கள்” என்றான் காவற்காரன். பிறகு ஒவ்வொரு கல்லறையையும் டோல்டமேனுக்கு காட்டிக்கொண்டே இது இன்னமந்திரி இது இன்ன பிரதமமந்திரி இது இன்ன கோடீஸ்வரனின் இடம் என்று விளக்கமளித்துக் கொண்டே போனான் காவற்காரன்.

ஒவ்வொரு கல்லறையைச் சுற்றியும் பளிங்கினால் கட்டப்பட்ட சின்னமாளிகை இருந்தது. மாளிகை வாசலிலே தங்கத் தகட்டிலோ, வெள்ளித் தகட்டிலோ, பளிங்குக் கற்களிலோ இறந்துபோனவன் பெயர், பதவிப்பெயர், பிறந்ததிகதி, இறந்ததிகதி, அவர் நாட்டு மக்களுக்காக செய்த நல்ல காரியங்கள் என்று விலாவாரியாகப் பொறிக்கப்பட்டிருந்தன. டோல்டமேனுக்கு எழுதப் படிக்கத் தெரியாது என்பதால் மயானகாவற்காரன் கல்லறைகளிலே எழுதப்பட்டிருந்த வாசகங்களை அவனுக்கு வாசித்துக் காட்ட எல்லாவற்றையும் கேட்டுக் கொண்டு வந்த டோல்டமேனின் கண்களிலிருந்து கண்ணீர் பொலபொலவென்று உதிர ஆரம்பித்தது.

“ஏன் பெரியவரே அழுகிறீர்கள்?” என்று கேட்டான் மயானகாவற்காரன். “இங்கே எழுதியிருக்கிற விஷயங்களைப் பார்த்தால் நல்ல மனிதர்கள் எல்லோரும் செத்துவிட்டார்கள் போல் அல்லவா இருக்கிறது” என்றான் டோல்டமேன்.
“கல்லறையில் செதுக்கப்பட்டுள்ள வாசகங்களை எல்லாம் நீங்கள் அப்படியே நம்பிவிட்டீர்களா?” “ஆம்”
“பெரியவரே, நீங்கள் அப்பாவியாக இருக்கிறீர்கள். நகர மாந்தர்களைப் பற்றி உங்களுக்கு தெரியாது. அவர்கள் இப்படித்தான், மரணிக்கும் வரை கயவர்களாக இருந்தாலும் கவலைப்படாத அவர்கள் மரணித்தபின் அந்த மனிதர்களை மகா புருஷர்களாக்கி விடுவார்கள். அதன் பிரதிபலிப்புத்தான் இங்கே செதுக்கப்பட்டுள்ள வாசகங்கள்” என்று மயான காவற்காரன் சொன்னதும் டோல்டமேன் அதிசயித்தான். கயவர்களாக வாழ்ந்தாலும் இறந்தபின் அவர்கள் இன்பத்தை அனுபவிக்கிறார்கள். மூக்கையும் மனதையும் ஆகர்ஷிக்கும் நறுமண மலர்களின் உல்லாசப்புரியில் அவர்கள் வாழ்கிறார்கள். எவ்வளவு பெரிய அதிஷ்டசாலிகள் என்றெல்லாம் அவனுடைய கற்பனை எங்கோவெல்லாம் அலைந்தது.

அவன் கண்களை மூடி நிஷ்டையில் ஆழ்ந்தான்; மென்மையாக வருடிச் செல்லும் தென்றலை நுகர்ந்தான்; அனுபவித்தான்; கற்பனைவெளியின் வர்ணங்களால் ஆகர்ஷிக்கப்பட்டான். புற்களின் மெல்லிய அசைவுகளையும், பூக்களின் பேச்சுக்களையும், நறுமணத்தையும் ரசித்தான். ஏதோ அற்புத சக்தியொன்று தன்னுடலுக்குள் புகுந்து கொண்டதுபோல் அவன் உணர்ந்தான். கண்களைத் திறந்தவுடன் புதுமனிதனாகி விட்டான் டோல்டமேன். அவன் கூர்மையாக மயான காவற்காரனை நோக்கினான். அவனுடைய பார்வையிலே பீடிகை தெரிந்தது. "என்ன பெரியவரே, நன்றாக அனுபவித்தீர்களா? எதையோ கேட்க நினைக்கிறீர்கள். எதுவாக இருந்தாலும் பரவாயில்லை, கேளுங்கள்" என்றான் காவற்காரன்.

"காவற்காரரே, இங்கே இருந்த கொஞ்ச நேரமும் நான் என்னையே மறந்து, இந்த இன்பம் என்னை ஆட்கொண்டு ஆட்டுகிறது. போதாது போதாது இன்னமும் இன்னமும் இந்த இன்பங்களை நான் அனுபவித்துக் கொண்டே இருக்க வேண்டும்" என்று பித்துப் பிடித்தவன் போல் புலம்பிக் கொண்டே போன டோல்டமேன் தன்னுடைய குரலைச் சிறிது தாழ்த்தி "மயானகாவற்காரரே, நான் இறந்த பின்னர் இந்த மயானத்திலே என் உடல் அடக்கப்படுவதை விரும்புகிறேன். அதற்கு நான் என்னசெய்ய வேண்டும்?" என்று கேட்க மயான காவற்காரன் நிலைகுலைந்து போனான். உதடுகள் அப்படியே உலர்ந்துவிட இதயம் இதயத்துடிப்பை நிறுத்தி விட்டது போல் உணர்ந்தான் அவன்.

'நாட்டுப்புறத்தானே, உனக்குப் பைத்தியம் பிடித்துவிட்டது' என்று கோபமாகச் சொன்னான் மயான காவற்காரன்.
"ஏன் அப்படிச் சொல்கிறீர்கள் காவற்காரரே?"
"நீ இங்கே நிற்பதைக் கண்டாலே என்னை டிஸ்மிஸ் பண்ணி விடுவார்கள். நிலைமை இப்படி இருக்க நீ உளறுவதை அறிந்து கொண்டால் உன்னுடைய எலும்புகளைக் கூட கணக்கெடுக்க முடியாமல் போய்விடும். பச்சைப் பைத்தியக்காரன்"
"இந்த நாட்டின் பிரஜை நான். எனக்கும் உரிமைகள் இருக்கின்றன"
"முட்டாள்தனமாகக் கதைக்க வேண்டாம் பெரியவரே, இறந்த பின்பு சொர்க்க மயானத்திலே இடம் கிடைக்குமென்று கனவில் கூட நினைக்கத் தேவையில்லை. உன்னைப் போன்ற ஏழைகளுக்கு இங்கே அங்குல நிலம் கூடக் கிடைக்காது"
"நீ இறந்து விட்டால் உனக்கு கிடைக்காதா?"
"எனக்கும் இடமில்லை. நானும் உன்னைப்போல் சாமான்யன்தான். என்னுடைய தந்தை இங்கே முப்பது வருடங்களாக வேலை செய்தார். அவருக்கு கூடக் கிடைக்கவில்லை. என்னுடைய பாட்டன் முப்பாட்டன் இவர்களை எடுத்துக் கொண்டால் அவர்களுக்கும் இதே கதிதான்" என்று பதிலளித்தான் மயான காவற்காரன்.

மயானகாவற்காரன் சொன்னவை எதனையும் காதில் போட்டுக் கொள்ளாத டோல்டமேனுக்கு சொர்க்கமயானம் காதலாக மாறிவிட்டது. காதல் பிரேமையாகி பைத்தியம் பிடித்தவன் போல் ஆகிவிட்டான். மயான காவற்காரனுக்கு அப்பாவியான டோல்டமேன் மீது இரக்கம் உண்டாகி எவ்வளவோ உபதேசங்கள் அவனுக்குச் சொல்லிப் பார்த்தும் எதனையும் ஏற்றுக்கொள்ளும் நிலைமையில் டோல்டமேன் இருக்கவில்லை. நாட்டுப்புறத்தான் அலைந்து திரிந்து விசாரித்து எப்படியோ சொர்க்கமயானப் பணிப்பாளரின் வீட்டைக் கண்டுபிடித்தான். அது விசாலமான மாளிகை என்று சொல்லும் பெரியவீடு. மதிற்சுவர் எட்டிப்பாாக்கவே முடியாத உயரமாக இருந்தது. முன்புறம் இரும்புக்கிராதிகளால் சட்டம் போட்ட பதினாறடி கேட்டு. கேட்டை மூடி வரிசையாக ஆறு பூட்டுக்கள், பூட்டுக்களுக்கு பின்னால் இரண்டு அல்ஷேன்நாய்கள். நாய்களுக்குப் பின்னால் கறுப்புக் கைத்தடியுடன் கூர்க்கா.

“பிச்சைக்காரனே, நாங்கள் பிச்சை கொடுப்பதில்லை” என்று கேற்றுக்கு அப்பாலிருந்து கர்ணகடூரமான குரலிலே அதட்டினான் கூர்க்கா. “நான் பிச்சையெடுக்க வரவில்லை. என்னுடைய மரணத்தைப் பற்றி பேசவந்திருக்கிறேன்” என்றான் டோல்டமேன் பதிலுக்கு. “என்ன பேசுவதாக இருந்தாலும் இறந்த பிறகு வா” என்றான் கூர்க்கா. “இறந்த பிறகு வருவதா? ஏனிப்படி முட்டாள்தனமாய் பேசுகிறாய்?” என்று கேட்டான் டோல்டமேன். “அதைப் பற்றி எனக்குத் தெரியாது. இது எனது ஐயாவின் கட்டளை, அவர் எனக்குச் சம்பளம் தருவதால் அவர் சொல்வதை நான் செய்கிறேன். இரண்டு பேர்களிடம் சொல்லி வைத்தாயென்றால் நீ மரணித்த பிறகு உன்னைச் சவப்பெட்டியில் வைத்து இங்கே தூக்கி வரலாம்” என்று யோசனையும் சொன்னான் கூர்க்கா. இவ்வாறு இருவரும் தர்க்கித்துக் கொண்டிருக்கும் போதே பணிப்பாளரும் வந்து சேர்ந்தார்.

“என்னப்பா பிச்சைக்காரனுடன் பேச்சு? நாணயக் குற்றியைக் கொடுத்து அனுப்ப வேண்டியது தானே. அவனுடைய நாற்றம் தாங்கமுடியவில்லை, குமட்டல் வருகிறது” என்றார் பணிப்பாளர். “இவன் எவ்வளவு சொல்லியும் போகிறான் இல்லை ஐயா”

“அதற்காக அவனுடன் பேசிக் கொண்டிருப்பதா? நாய்களை அவிழ்த்துவிட வேண்டியதுதானே. அவைகள் அவனைக் குதறி எடுத்துவிடும் என்பது உனக்கு தெரியாதா?”

“அவன் உங்களுடன் பேசவந்திருக்கிறான் ஐயா, அவனுடைய மரணத்தைப் பற்றி உங்களுடன் பேச வேண்டுமாம்”

“மரணத்தைப் பற்றி பேச வேண்டுமானால் மரணமடைந்த பிறகே வர வேண்டுமென்று அவனிடம் எடுத்துச் சொன்னாயா?”

“அவன் கேட்கிறான் இல்லை ஐயா, பிடிவாதமாக இருக்கிறான்”. இதற்கிடையில் டோல்டமேன் பணிப்பாளருக்கு அருகில் வந்து சலாம்போட்டான்.

“கோபிக்க வேண்டாம் ஐயா, நான் உங்கள் வீட்டைக் கண்டுபிடிப்பதற்காக அலைந்து திரிந்து வந்தேன், எனக்கு கருணை காட்டுங்கள் ஐயா”
“சரிசரி எதுவானாலும் விரைவாக சொல்லித் தொலை. எனக்கு நிறைய வேலைகள் இருக்கின்றன” “ஐயா நான் ஏழைவிவசாயி, அப்பாவி, நாட்டுப் புறத்திலிருந்து வருகிற எனக்கும் ஆசை உண்டாகி விட்டது, நான் மரணமடைந்த பிறகு என்னைச் சொர்க்க மயானத்தில் அடக்கஞ் செய்வதற்கு உதவுங்கள் ஐயா’, என்று டோல்டமேன் பௌயமாகச் சொல்ல கடுஞ் சினமுற்ற பணிப்பாளர் “கூர்க்கா நாயை அவிழ்த்து விடு” என்று மூர்க்கத்துடன் கூச்சலிட்டார். கூர்க்காவும் அவருடைய உத்தரவுக்காகவே காத்திருந்தவன் போல் இரண்டு அல்சேஷன் நாய்களையும் அவிழ்த்து விடவே இப்படியொரு கொடூர நிகழ்வை எதிர்பார்த்திராத டோல்டமேன் தன் உடலிலே தேக்கி வைக்கப்பட்டிருந்த சக்தி அனைத்தையும் திரட்டியவனாக பிடரி அடிபட விழுந்தும் எழுந்தும் எழுந்தும் விழுந்தும் ஓடினான். அவனுடன் போட்டிபோட முடியாமல் அல்ஷேஸன் இறுதியிலே தோற்று நின்றாலும் அவனுடைய மேனி முழுவதும் காயங்கள். நடக்கமுடியாமல் மூச்சுத்திணற கீழேவிழுந்த டோல்டமேன் கண் விழித்தபொழுது ஒரு நல்ல மனிதருக்குப் பக்கத்திலே கட்டிலிலே படுத்திருந்தான்.

அதிஷ்டவசமாக நகர்ப் புறமாந்தர்கள் மத்தியிலே வாழ்ந்த அந்த நல்ல மனிதரிடம் நடந்த காரியங்கள் அனைத்தையும் அப்படியே ஒப்புவித்தான் டோல்டமேன். “திரு டோல்டமேன் நீங்கள் ஆசைப்பட்டதில் எந்தத் தப்புமில்லை. மனிதன் ஆசைகளோடு பிறந்து ஆசைளோடு வாழ்ந்து ஆசைளோடு மரணிக்கின்றான். உங்களுக்கோ இறந்துபோன பிறகும் ஆசை, பரவாயில்லை. ஆனால் திரு டோல்டமேன் …….” என்று பீடிகை போட்டார் நல்ல மனிதர்.
“சொல்லுங்கள், நல்ல மனிதரே”
“இது நகரம், நகரத்திலே பிச்சைக்காரர்களுக்கும், ஏழைகளுக்கும் எந்தக் கண்ணியமும் கிடைக்காது. சொர்க்க மயானத்திலே நீங்கள் மரணித்தபின் வாழ வேண்டுமென விரும்பினால் நீங்கள் கோடீஸ்வரராக மாறவேண்டும்”
“ஏழை விவசாயி நான் கோடீஸ்வரனாக மாறுவதா? அது நடக்கப் போவதில்லை” என்றான் டோல்டமேன் ஏமாற்றத்துடன்.

"நித்திய காலமும் சொர்க்க மயானத்திலே வாழ வேண்டுமென்று விரும்புகிறாய் அல்லவா?" "அதிலும் சந்தேகமா? அதற்காகத் தானே இத்தனை கைங்கரியங்கள்" என்றான் டோல்டமேன்.

நாட்டுப்புறத்தானை அமைதியான இடத்திற்கு அழைத்துச் சென்ற நல்ல மனிதர் வெற்றுக் கடதாசியையும் பேனாவையும் கையிலெடுத்தார்.
"உனக்கு வீடு இருக்கிறதா?"
"ஆம்" நல்ல மனிதர் கடதாசியிலே குறித்துக் கொண்டார். "வயற்காணிகள்...." டோல்டமேன் பதில் சொல்ல அதனையும் கடதாசியிலே குறித்துக் கொண்டார்.
"உன்னுடைய வயது?"
"எத்தனை பிள்ளைகள்?"
"எட்டு"
"எத்தனை மனைவியர்?"
"ஒன்றுதான்"
நல்லமனிதர். வானத்தை நோக்குவதும் சிந்தனையிலே ஆழ்வதும் பிறகு கடைசியிலே கணக்குப் போடுவதுமாக இருந்தார் டோல்டமேனும் ஆவெனப் பிளந்த வாயுடன் அவருடைய வாயிலிருந்து வரக்கூடிய வார்த்தைகளுக்காக ஆவலுடன் காத்து இருந்தான். திடீரென்று நல்ல மனிதரின் கண்களில் பிரகாச ஒளி மின்ன "நீ கோடிஸ்வரனாகி விட்டாய்" என்று கூவினார் நல்ல மனிதர்.

"என்ன ஐயா சொல்கிறீர்கள்? தயவுசெய்து ஏழையான என்னுடன் விளையாடவேண்டாம்" என்றான் டோல்டமேன். "நீ எழுபத்தைந்து வயதிலே செத்துப் போகிறாய் என்று வைத்துக்கொள்வோம்" டோல்டமேன் துணுக்குற்றவாறே "எழுபத்தைந்து வயதிலா?" என்று கேட்டான். "பயப்படாதே, கணக்குப் பார்க்க வசதியாக வயதைச் சொன்னேன். விவசாயி என்றபடியால் உன்னால் தொண்ணூறு, ஏன் நூறுவயது வரை வாழ முடியும்" என்றார் நல்ல மனிதர். டோல்டமேன் முகம் மலர்ந்தவாறே "மேலே சொல்லுங்கள்" என்றான். நல்ல மனிதர் கணக்குப் பார்த்த கடதாசியை டோல்டமேனிடம் காட்ட நிறைய இலக்கங்களும் நிறையக் கிறுக்குகளும். எட்டுப் பிள்ளைகளின் சாப்பாட்டுக் கணக்கு, ஆடைக் கணக்கு, சவர்க்காரச் செலவு, சுகவீனமுற்றால் டாக்டரிடம் போகும் செலவு, மனைவியின் செலவுக் கணக்கு, மின்சாரக் கணக்கு என்று எல்லாக் கணக்குகளும் போட்டு கடதாசியின் கீழ் மூலையிலே ஓரிலக்கத்தை நல்ல மனிதர் எழுதிக் காட்ட அந்தத் தொகையைப் பார்த்தவுடன் டோல்டமேன் மலைத்துப் போனான். "பார்த்தாய் தானே கணக்கு, இருபத்தைந்து வருடங்களுக்கு பிறகு பெருந்தொகைப் பணத்திற்கு நீ சொந்தக்காரனாகப் போகிறாய் என்று சொன்ன நல்லமனிதர் அவனுடைய காதிற்குள் கிசுகிசுக்க

டோல்டமேன் தலையாட்டிப் பொம்மை போல் தலையை ஆட்டிக் கொண்டேயிருந்தான். தனக்கு எல்லாமே விளங்கி விட்டது என்று காட்ட கடைசியாக ஒரு தடவை தலையை ஆட்டினான் டோல்டமேன்.

அன்றே கிராமத்திற்கு திரும்பிப்போன டோல்டமேன் முதல் வேலையாக தன்னுடைய வீட்டை விற்று பணத்தை வங்கியிலே வைப்புச் செய்தான்; மனைவியை விவாகரத்துப் பண்ணினான். மனைவி கெஞ்சிக் கூத்தாடியும் அழுதும் எதனையுமே லட்சியம் பண்ணத் தயாராக இருக்காத அவன் அத்தோடு விடாமல் எட்டுப் பிள்ளைகளையும் அநாதரவாக தவிக்க விட்டுவிட்டு இரவோடு இரவாக தப்பியோடினான். அதன்பின் அவனுக்கு உழைப்பது மாத்திரமே வாழ்வாகிற்று. தான் தங்குவதற்கு என்று சிறிய கொட்டில் ஒன்றை அமைத்துக்கொண்டான் டோல்டமேன். அது மாட்டுத் தொழுவத்தை விட மோசமானதாக இருந்தது. எழுந்து நின்றால் கூரை தலையிலே தட்டும். நீட்டிப் படுத்தால் கால் கதவைத் தட்டும். ஜன்னல் கிடையாது; சமையலறை கிடையாது; குளியலறை கிடையாது. அண்டை அயலாரைப் பகைத்துக் கொண்டான்; நண்பர்களுடன் உரையாடுவதை நிறுத்தினான். தலையிலே எண்ணெய் தேய்க்க மாட்டான்; குளிக்கமாட்டான்; தாடிமீசையை மழித்துக் கொள்ள மாட்டான். ஓரேயொரு ஆடையை அணிந்துகொண்டான். பார்ப்பதற்கு அசல் வேடன் போலவே காட்சியளித்தான் டோல்டமேன்.

அவனுடைய ஆகாரம் மிக மோசமாக இருந்தது. ஒரு வாழைப்பழம், ஒரு பாண்துண்டு அல்லது ஒரு கோப்பை அரிசிக் கஞ்சியோடு மட்டுப்படுத்திக் கொண்டான் டோல்டமேன். சில நாட்களில் மிடறு தண்ணீர் குடிப்பதோடு ஆகாரம் முடிநதுவிடும். இப்படிச் சேமித்த பணத்தையெல்லாம் நாளாந்தம் வங்கியிலே வைப்புச்செய்தான் டோல்டமேன். நல்ல மனிதர் விதித்த காலக் கெடுவான இருபத்தைந்து வருடங்கள் கழிந்தபின் பட்டணத்துக்கு பயணமானான் டோல்டமேன். அவனை வரவேற்பதற்காக ரயில்வே நிலையத்தில் காத்திருந்த நல்ல மனிதர் நேரத்தை வீணாக்காமல் அவனுக்கு அழகிய ஆடம்பரமான ஆடைகள் அணிவித்தார், மீசை தாடியை மழித்தார், அழகு நிலையத்துக்கு அழைத்துக் கொண்டு போய் பேஸியல் செய்தார்; தலைக்கு தொப்பி வாங்கினார்; எப்படி சுக்காணைப் பாவிப்பது என்று கற்றுக் கொடுத்தார். டோல்டமேனை அதிகாரிகளுக்கு அறிமுகப்படுத்தியபோது அசல் கோடீஸ்வரன் போலவே தோற்றமளித்த டோல்டமேன் இனி இறக்கப் போகும் கோடீஸ்வரர் பட்டியிலிலே கடைசி ஆளாகச் சேர்ந்து கொண்டதும் அவனுடைய நடையிலே மேன்மை தங்கிய கோடீஸ்வர மிடுக்கு தெரிந்தது.

இப்போது மயானகாவற்காரன் ஞாபகம் வந்தான். தான் கோடீஸ்வரனாகி விட்ட நல்ல செய்தியைச் சொல்வதற்காக இருபத்தைந்து வருடங்களுக்குப் பிறகு மயானகாவற்காரனை தேடிப் போனான் டோல்டமேன். அங்கே புதியவன் இருந்தான். புதிய மயானகாவற்காரன் சொன்ன அடையாளங்களை வைத்து ஒருவழியாக இடத்தைக் கண்டுபிடித்து போனபோது அது சேரிப்புறம். குடிசைகள் தகட்டுக் கொட்டில்களாகவும், அலங்கோலமாகவும் இருந்தன. சிறுவர்கள் மேற்சட்டை இல்லாதவர்களாகவும், சிலர் சிறுநீர் கழித்தவாறும் இருந்தார்கள். சேரிக்கூடாக கழிவுவாய்க்கால் ஓடியது. டோல்டமேனுக்கு வயிற்றைக் குமட்டியது. மயக்கம் வருவது போல் இருந்தது. மயானகாவற்காரன் வயதால் தள்ளாடிப் போயிருந்தாலும் கண்ட மாத்திரத்திலேயே டோல்டமேனை அடையாளங்கண்டு விட்டான். ஒருவருக்கொருவர் தழுவிக்கொண்டார்கள்; குசலம் விசாரித்தார்கள். "பட்டணத்தில் வாழ்வதாகச் சொன்னாய். நீயிருக்கும் இடம் நரகம்போல் அல்லவா இருக்கிறது" என்றான் டோல்டமேன். "இதுவும் பட்டணந்தான். நீ எண்ணுவதைப்போல் பட்டணம் ஏகவும் மாயாஜலம் இல்லை. இந்த நாற்றத்திலே நாங்கள் மூன்று தலைமுறைகள் வாழ்ந்து விட்டோம்" என்று பதிலளித்தான் மயானகாவற்காரன்.

மயான காவற்காரனுடைய வீடும் சேரிக்குடிசைதான் என்றாலும் மகிழ்ச்சியோடிருந்தான். அவனைச் சுற்றி நிறையக் குழந்தைகள். குடிசை ஆட்களால் நிரம்பி வழிந்தது. டோல்டமேனை "என்னுடைய பால்யநண்பன்" என்று மயானகாவற்காரன் அறிமுகப்படுத்தியதுடன் எல்லோரும் வந்து அவனுக்குத் கைலாகு கொடுத்தார்கள், குழந்தைகள் அவனைச் சூழ்ந்துகொள்ள டோல்டமேன் மனதிற்குள் ஏதோ உணர்வு நெருடிச் சென்றது. "இந்த குழந்தைகள் என் பேரக்குழந்தைகள். இன்று என் திருமணநாள் என்றபடியால் எல்லாப் பிள்ளைகளும் வந்திருக் கிறார்கள். சாப்பாடு தயாராகிவிட்டது, சாப்பிடுவோமா?" என்று மயானகாவற்காரன் கேட்க டோல்டமேன் பாயிலே அமர்ந்து கொண்டான். ஆண்களும், பெண்களும், குழந்தைகளும் அவனைச் சுற்றி அமர்ந்து கொண்டார்கள். "வந்த விஷயம் என்ன? சொல்லவேயில்லையே" "ஒன்றும் விஷேசமில்லை. உன்னைப் பார்த்துவிட்டு போகலா மென்றுதான் வந்தேன்" என்று பொய் சொன்னான் டோல்டமேன். "மனைவி, குழந்தைகள் சுகமாக இருக்கிறார்களா? எத்தனை பேரக் குழந்தைகள்?" என்று கேட்டான் மயானகாவற்காரன். டோல்டமேன் இருபத்தைந்து வருடங்களுக்கு பிறகு முதற்தடவையாக மனைவி யையும், பிள்ளைகளையும் நினைத்துப் பார்த்தான். எதனையோ இழந்து விட்டது போல் அவனுக்குத் தெரிந்தது.



# ஞவர்களும் ஙவர்களும்

எம்.எம்.நௌஷாத்

கிழவர் ஒருகாலத்தில் மாதுளங்கனிகள் சாப்பிட்டார்; மலையுச்சிக் காட்டில் தேன் சேகரித்தார். பாம்புப் புற்றுக்குள் படமெடுத்தார்; யானைக்குக் கண்வைத்தார்; ஈருருளியில் ஆலமரத் தையும், நகரப் பூங்காக்களையும், நீர் வீழ்ச்சிகளையும் வலம்வந்தார். அது கட்டிளைமைப்பருவம். இன்று உடல் வாடிவதங்கி விட்டது; நடை தளர்ந்து விட்டது; வார்த்தைகள் தொண்டைக்குழிக்குள் தடுமாறின; விழிநரம்புகள் ஜீவனிழந்து போவதுபோல் குத்துக்கரணம் அடித்தன. யாரும் அருகில் இல்லை. ஒரு குவளை நீர் மொண்டுதர பெண்டிர் இல்லை. எல்லோரும் மடிந்து போய்விட்டார்கள். குழந்தையின் அழுகுரல் கேட்டது. குழந்தையா? தலையுயர்த்திப் பார்த்தார்.பிரமையா? மாதக் கணக்காக அடிக்கடி கேட்டுக்கொண்டிருக்கும் குரல். ஈனஸ்வரத்தில் அழும்குரல். தொலைந்து போன பேரக்குழந்தையின் ஞாபகம் வந்துவிடும். ஓடிப்போய்ப் பார்ப்பார். குழந்தை இருக்காது, பிரமையின் நிழல் மட்டுமே இருக்கும். அப்பால் கிழவர் அழ ஆரம்பிப்பார்.

பிஞ்சுக்குழந்தையான பேரக்குழந்தை பாற்போத்தலோடும், பலூனோடும் காணாமல்போக மூன்று நாட்களில் குழந்தையின் புகைப்படம் தபாலில் வந்தது. குழந்தையின் சிரசைக் குறிபார்த்தபடி மூன்று துப்பாக்கிச் சனியன்கள் இருந்தன. துப்பாக்கிகளை முகமூடி மனிதர்கள் ஏந்தியிருந்தார்கள். ‘நாங்கள் ஙாக்கள். குழந்தையைக் கொல்லுவோம்’ என்றவசனங்கள் அருகில். எழுத வாசிக்கத் தெரியாத குழந்தையோ மழலைச் சிரிப்பில் மூழ்கிப்போயிருந்தது. அந்த இரவு எல்லோரும் அழுதார்கள். அண்ணன், அக்கா, மைத்துனன், மைத்துனி, மாமா, மாமி, சித்தப்பா, பெரியம்மா, அம்மா, அப்பா, வீட்டிலிருந்த பூனைக்குட்டி, ஓர்கிட்செடி, வெட்டுக்கிளி, பலூன்வியாபாரி, பூரணநிலவு, பனித்துளிகள் எல்லோரும் விடியவிடிய அழுதார்கள்; விடிந்த பிறகும் அழுதார்கள். நிறைய விடியற்பொழுதுகள் போயின, இரவுகள் போயின, இளவேனில், முதுவேனில் காலங்கள் போயின, குழந்தை திரும்பி வரவேயில்லை.

திடீரென்று அசரீரி கேட்டது. *உன் இனத்தவன் மடிந்து கொண்டிருக்கும் போது* ***உனக்கேன் உறக்கம்? ஞ இனவீரனே! துடித்தெழு! கீர்த்திமிகு*** *வம்சத்தில் ஜனித்தவனே! நீதான் மேன்மையான மனிதன், ங இனமக்கள் பீடைகள். ஙவின் முகத்தில் உமிழ்ந்து, காணுமிடங்களில் எல்லாம் அவனைச் சங்காரம் செய்துவிடு!* கிழவர் உற்சாகம் பீறிட படுக்கையை விட்டு ஆர்த்தெழுந்தார் இராணுவச்சீருடை அணிந்தார் கம்பீரமானார் முள்ளுச்சப்பாத்துக்கள் பளபளத்தன தலையிலே இரும்புக் கவசம் தோளிலே இயந்திரத் துப்பாக்கி முகத்திலே ஞானத்தோற்றம் உடையிலே

வீரத்தோற்றம். கண்ணிலே காண்கின்ற ஒவ்வொரு ஙஇனத்து ஆட்களையும் சங்காரம் செய் என்ற உத்தரவு. துவம்சம் செய்ய ஆரம்பித்தார் கிழவர் பெருமிதமுற்றார். துப்பாக்கிரவைகள் தீர்ந்துவிட்டன. ஒன்றே ஒன்றுதான் பாக்கி. உள்ளம் மகிழ்ச்சியால் பூத்தது. ஒன்றே ஒன்று பாக்கி உள்ளது. இன்னுமொருவன் உயிர் வாழ்கிறான். அந்த விஷக்கிருமியும் நாசமாகிவிட வேண்டும். அவனைக் கண்டுபிடிக்க வேண்டும் இவ்வருட ஆரம்பத்தில் சுவர்க்கத்தீவு என்றுமில்லாதவாறு களியாட்டங்களில் மூழ்கியிருந்தது. ஙஇனத்தவருக்கும் ஞஇனத்த வருக்கும் இடையில் போர் ஆரம்பமான நூற்றாண்டு விழாவைக் கொண்டாடினார்கள். ஙக்கள் வீராவேசத்துடன் ஆடிப்பாட, ஞக்களும் வீரவேசப் பாடல்களுடன் விழா எடுத்தார்கள். எங்கேயும் இளம்குமரி களோ, இளம்குமரர்களோ இல்லை. அனைவரும் மடிந்து போனார்கள் என்றாலும் கவலை கிடையாது. கிழவிகள் பொக்கை வாய்களைத் திறந்தும், தத்திதத்தி நடக்கும் குழந்தைகள் மழலை மொழியிலும் கீதங்களை இசைத்தார்கள். ஞ இராணுவக் கட்டளைத் தளபதி நெஞ்சுரமிக்க நெடிதுயர்ந்த மனிதர். ஞஇனத்து கிழவர்களை எல்லாம் ஒன்றுதிரட்டி ‘கிழச் சங்காரப் படை’ ஒன்றை உருவாக்க கிழவரும் மூன்று மாதங்களுக்கு முன்படையில் சேர்ந்தார். இன்று எல்லா ஆயுதங் களையும் லாவகமாக கையாளும் தேர்ச்சியைப் பெற்றுவிட்டதால் கிழவர் புளகாங்கிதத்துடன் நடமாடினார்.

ஙவைக் கொல் என்பதுதான் அவருடைய சொல், தாரகமந்திரம். என்றாலும் ஙக்களை அடையாளம் காண்பதில் சின்ன பிரச்சினை இருந்தது. ஞஇனத்தவர்களும் ஙஇனத்தவர்களும் முகச்சாயலில் ஒரே மாதிரியாக கபிலம் கலந்த கறுப்பாக இருந்தார்கள், விழிகள் நீலநிறம்; கேசம் சுருள்சுருளாக தோற்றியது; உரோமங்கள் வெளுப்பு கலந்த காப்பி நிறம், பேச்சு ஒரே பாணியிலான பேச்சு. ஆகவே ஞ அரசாங்கத்து புத்திமான்கள் ஒன்று சேர்ந்து சூடுபோடுதல் சட்டத்தைக் கொண்டு வந்தார்கள். எப்படியென்றால் ஙஇனக் குழந்தையொன்று பிறந்துவிட்டால் இடது உள்ளங்கையிலே ஙஎன்ற அட்சரத்தை சூடுபோடுவார்கள். இதுவொரு கடும் உத்தரவாக இருந்தது. சட்டத்தை மீறிய மகப்பேற்று நிபுணர்களையும், மருத்துவிச்சிகளையும் ஈவுஇரக்கமின்றி பணிநீக்கம் செய்தது அரசு. கிழவரும் வீதியிலே யாரையாவது கண்டால் ‘எங்கே உன் உள்ளங்கையைக் காட்டு’ என்று இராணுவத் தோரணையில் கட்டளையிடுவார். இடது கையிலே ங அட்சரமிருந்தால் அவன் முடிந்தான், அல்லது அவள் முடிந்தாள். நெற்றிப்பொட்டில் ஒருசூடு.

கிழவர் நாள் முழுவதும் அலைந்தும் அந்த மீதியான ரவைக்கு மீதியான ஒருவன் கிடைக்க மாட்டேன் என்கிறான். இப்படியே மூன்று நாட்கள். கிழவருக்கு மூச்சுத் திணறியது; வியர்வை வீசியது; கால்கள் தள்ளாடின, பாதம் வீங்கியது, தாங்க முடியாதளவிற்கு தாகமும், பசியும். தேவை ஒரு மிடறு தண்ணீர். கேட்பதற்கோ யாருமில்லை, நீர்க்குழாய்கள் காற்றை மட்டுமே விசிறின. சுற்றுமுற்றும் பார்த்தார். கடைகண்ணிகள் திறந்தபடி கிடந்தன, கடைகளுக்குள் இருள், மின்சாரமில்லை, குளிர்பானம் இல்லை, தீப்பெட்டி இல்லை, ஆகாரங்கள் இல்லை, அரிசி, சீனி எதுவுமேயில்லை. இறந்துபோன சடலங்கள் ஆங்காங்கே சிதறிக் கிடக்க, எல்லாம் ஸ்தம்பித்துப் போயிருந்தன. வீடுகள் இருந்தன, பேச்சுக்குரல் இல்லை, ஜன்னல்கள் மூடிக்கிடந்தன, கதவுகள் திறந்து கிடந்தன, சிறுவர்கள் விளையாடவில்லை, கலகலப்பு இல்லை, உயிர்வாடை இல்லை, எல்லோருமே செத்தொழிந்து போய்விட்டார்கள் என்ற உண்மை கிழவருக்கு இப்போதுதான் உறைத்தது. எல்லோருமே! அதுதான் இப்போது உண்மை. கிழவர் அச்சத்தில் விதிர்விதிர்க்க ஆரம்பித்தார். நான் மரணமடையப் போகிறேன். கடவுளே, அந்த ஙஒருத்தனைக் காட்டு, மிஞ்சியிருக்கும் ஒற்றை ரவையால் அந்த ஒருவனைக் கொன்றுவிட வேண்டும். அப்பால் நான் செத்தாலும் பரவாயில்லை. அந்த ஒருவனைக் காணும்வரை கடவுளே, என்னைக் கைவிட்டுவிடாதே. கண்கள் இருண்டு கொண்டே போயின. இயந்திரத்துப்பாக்கியின் சுமை அவரை ஒருபக்கம் இழுத்தது. அவரை சுற்றியிருந்த உலகம் இப்போ அவரறியச் சுற்றியது. என்னுடைய கடைசி மூச்சுக்களை விட்டுக் கொண்டிருக்கிறேன். தாகத்தோடும், பசியோடும், மீதியான ஒரு சன்னத்தோடும் சாகப்போகிறேன். மரணம்! மரணம்! மரணம்!

இது என்ன? இப்போ இங்கே தெரிவது என்ன? கிழவரின் விழிகளிலே விவரிக்கமுடியாத ஒளிக்கீற்று. பால் நிரப்பப்பட்ட பால் போத்தல். கண்களை நன்றாக அகலத்திறந்து பார்த்தார், கசக்கிப்பார்த்தார். சந்தேகமேயில்லை, பால்போத்தலே தான். கிழவர் சிரமத்துடன் அமர்ந்தார், போத்தலைக் கையிலெடுத்தார், மூடியைத் திறந்தார், வாய்க்கருகில் கொண்டு போனார். திடீரென்று அழுகுரல். எங்கோயோ இருந்துவந்த அழுகுரல், அதே அழுகுரல், கிழவரின் கைகள் நின்றன, அடிக்கடி கேட்கும் அதே அழுகுரல். இதுவும் பிரமையா, அல்லது உண்மையா? சற்றுநேரம் அமைதி. கிழவர் மீண்டும் போத்தலை வாய்க்கருகில் கொண்டுபோனார். குழந்தை மீண்டும் அழஆரம்பித்தது. சுற்றுமுற்றும் பார்த்தார் கிழவர், இது பிரமையல்ல, உண்மையான குழந்தைதான் அழுகிறது. அது வீட்டின் முற்றம். அருகிலே வீடு.

அழுகுரல் வீட்டுக்குள்ளிருந்து வருகிறது. கிழவர் அழுகுரல் வந்த திசையை நோக்கி தள்ளாடித் தள்ளாடி நடக்கத் தொடங்கினார்.

குழந்தைதான் அது, மிக அழகான குழந்தை. பசியால் வீரிட்டு அலறிக் கொண்டிருந்த குழந்தை கிழவரைக் கண்டதும் அச்சம் காரணமாக அழுகையை நிறுத்தியது. இராணுவச் சீருடை, திட்டுதிட்டாக மேனியெங்கும் இரத்தம், கையிலே கரியநிறமான கர்ணகடூர ஆயுதம். கிழவர் ஏதோ நினைவுக்கு வந்தவராக குழந்தையின் உள்ளங்கையைப் பார்த்தார். உள்ளங்கையில் ஙஅடையாளம் இருந்தது. ஙஅடையாளமே தான். யோசித்தார், ஒருசில கணங்கள் தான்! கிழவர் துப்பாக்கியை தோளிலிருந்து எடுத்து அருகிலிருந்த சாக்கடைக்குள் போட்டார். அழுத குழந்தையை மடியில் எடுத்து பால்போத்தலை குழந்தையின் வாயிலே வைத்தார். குழந்தை வேகமாக பாலை உறிஞ்சியவாறே கிழவரைப் பார்த்து இலேசாக முறுவலித்தது. கிழவர் இப்போது பசியை முற்றாக மறந்துவிட்டார், கண்களை மூடினார், கண்களுக்குள் பேரன் வந்தான், சிரித்தான், கண்களைத் திறந்தார். சாக்கடையில் வீசப்பட்ட துப்பாக்கியின் பக்கம் அவருடைய கண்கள் போயின, அற்பப் புழுவைப் பார்ப்பது போல் அதனைப் பார்த்தார். எத்துணை வெட்கக்கேடான வஸ்து, துப்பாக்கி!

நள்ளிரவில் பிரகாசம் பளிச்சிடும் ஆடைகளைப் புனைந்து கொண்டு நடமாடும் சிப்பாய்களைக் கண்டால் அவனுக்கு உடம்பு வெடவெடுக்கும், உள்ளம் பதைபதைக்கும், வியர்க்கும், நாடித்துடிப்பு நூற்றியிருபதிற்கு மேல் எகிறிவிடும். சிப்பாய்களின் ஆடைகளின் நிறம் ஓளிரும் ஒலிவ்பச்சை. இரவு ஏழுமணியானதும் விளக்கை அணைத் துவிடுவான், கதவுகளின் எல்லாத் தாழ்ப்பாள்களையும் போட்டுவிடு வான், மின்விசிறிகளை அணைத்துவிடுவான், ஜன்னல் திரைச் சீலைகளை இழுத்து விடுவான், ஊசிவிழக்கூடாது, பல்லி சொல்லக் கூடாது, மின்மினிப்பூச்சிகள் பறக்கக்கூடாது. இவை அவனுடைய பிரார்த்தனைகள். காதுகளை சுவரோடு அணைத்தவாறே ஆடாமல் அசையாமல் அமர்ந்திருப்பான். இரண்டுமூன்று மணித்தியாலயங்கள் இப்படியே இருப்பான். திடீரென்று பூட்ஸ்களின் ஒலி மெதுவாகக் கேட்க ஆரம்பிக்கும். அவன் உஷாராகிவிடுவான். பூட்ஸ்களின் ஒலி இப்போது விஸ்வரூபமெடுக்கும், நெஞ்சு எரியும், தொண்டைகாயும் , கண்ணிமைகள் உலரும். சிப்பாய்கள் கதவிற்கருகே வந்துவிடுவார்கள். ஐயகோ! மூச்சு விடுவது கூட இவ்வேளையில் சுமையாகஇருக்கும். சில கணங்களே, பூட்ஸ்களின் ஒலி தேய்ந்துகொண்டு போகும். இப்போதுதான் அவனுக்கு வரும் நிம்மதிப்பெருமூச்சு. சிப்பாய்கள் வீட்டைக் கடந்து போய் விட்டார்கள் என்ற நிம்மதிப்பெருமூச்சு.

ஓரிரவு, ஏழுமுப்பதுக்கு அலாரம் அடிக்கவும் அவன் அதிர்ந்து மனதிற்குள் அலறினான். சனியனே! இந்த நேரத்திற்கு அலாரத்தில் நேரம் குறித்தது யார்? பழைய சீனக்கடிகாரத்தின் அலாரத்தை நிறுத்துவதற்கு எத்தனையோ வித்தைகள் செய்துபார்த்தும் அது தன்பாட்டில் அடித்துக் கொண்டேயிருந்தது. கடவுளே என்னசெய்வது? பழைய தகரப்பெட்டி கண்ணில் படவே தகரப்பெட்டியை நோக்கி அடிமேல் அடிவைத்து அங்குலம் அங்குலமாக நகர்ந்தான். அது மூன்றடி அகலம், மூன்றடி உயரம், மூன்றடி நீளமான பழைய துணிகள் அடைக்கப்பட்ட தகரப்பெட்டி. அவன் அவசரஅவசரமாக துணிகளை விலத்தி பெட்டியின் அடித்தளத்திலே கடிகாரத்தை வைத்து துணிகளால் மூடி அதன்மேல் ஏறி அமர்ந்துகொண்டான். அப்பாடா! சப்தம் ஓய வானத்தை நோக்கிய அவன் ‘கடவுளே, நன்றி!’ என்றான்.

அவன் பழங்குடி இனத்தவன். வாழுமிடமும் பழங்குடிமக்களின் பிரதேசம். சென்று போன ஐம்பது வருடங்களும் பழங்குடிமக்கள் அவஸ்தையோடு வாழ்ந்தார்கள். எல்லாச் சர்க்காரும் பழங்குடியினரின் பயிர்செய்யும் காணிகளைச் சூறையாடி அவர்களை வாழவிடாமல் சித்திரவதை செய்தார்கள். ஏனிந்த அடாவடித்தனமென்று கேட்கின்ற பழங்குடி ஆட்களைக் கண்டுபிடித்து மூர்க்கத்தனத்துடன் ஒழிப்பதுதான் நடுநிசிச் சிப்பாய்களின் வேலை. நகர்ந்து கொண்டிருந்த நடுநிசிச்

சிப்பாய்களின் பூட்ஸ் ஒலி ஓர் இரவு கதவிற்கப்பால் நகராமல் அப்படியே நின்றது. டொக்.. டொக். என்று கதவு தட்டப்படும் சப்தம் கேட்க அர்த்த ராத்திரியிலும் உடம்பு வியர்த்து ஆடைகள் நனைந்தவனாக அவ்விடத்திலேயே சிறுநீர் கழித்தான் அவன்.

“நாங்கள் சிப்பாய்கள் வந்துள்ளோம், கதவைத் திற” என்று சொல்லிக்கொண்டே சிப்பாய்கள் மீண்டும் தடதடவென்று கதவைத் தட்டினார்கள். தப்புவதற்கு வழியேயில்லை. நான் மரணவாசலில் நிற்கிறேன். சிப்பாய்கள் மீண்டும் தடதடவென்று தட்ட அவன் வருவது வரட்டும் என்று பேசாமலிருந்தான். சற்றுநேரம் அமைதி நிலவி பூட்ஸ் ஒலிகள் தேய்ந்து கொண்டே போவது போல் தோன்றவே அப்பாடா என்று மூச்சை விட்டவனாக கதவைத் திறந்த அவனை சிப்பாய்கள் லபக்கென்று பிடித்துக் கொண்டார்கள். அவனைக் குறிபார்த்தபடி துப்பாக்கிகள்.

“நீ தீவிரவாதி தானே”

“இல்லை ஐயா!..”

“நீ தீவிரவாதி இல்லையென்றால் தீவிரவாதியை எங்கே ஒளித்து வைத்திருக்கிறாய்?”

“எனக்கு தீவிரவாதியைத் தெரியாது ஐயா!”

“தெரியாது என்றால் ஏன் கதவைத் திறக்காமல் இருந்தாய்?”

“பயத்தினால் ஐயா!”

“யாருக்கு நீ பயப்படுகிறாய்?” அவன் பதில் பேசாமல் மௌனமாக நிற்கவே “யாருக்கு நீ பயப்படுகிறாய், கடவுளுக்கா எனக்கா?” என்று கேட்டான் சிப்பாய்.

“கடவுளுக்கு ஐயா”

“அப்படியானால் நீ எங்களுக்குப் பயப்படாமல் கடவுளுக்குப் பயப்படுகிறாய்” சிப்பாய் துப்பாக்கிச் சனியனை முகத்திற்கு நேரே நீட்டி “இப்போது சொல். யாருக்குப் பயப்படுகிறாய்?” “உங்களுக்கு” என்று நாக்குழறினான் அவன்.

“கடவுளுக்குப் பயப்படுகிறேன் என்று பொய் சொன்னாய்? .......... இதிலிருந்து நீ பொய் சொல்லக்கூடிய ஆள் என்று விளங்குகிறது அல்லவா? அப்படியானால் தீவிரவாதியைத் தெரியாது என்று நீ சொன்னது சுத்தப்பொய் அல்லவா?”

“இல்லை ஐயா, உண்மையைத் தான் நான் சொன்னேன்”

“மீண்டும் பொய் சொல்லி எங்களை ஏமாற்றவா பார்க்கிறாய்?” என்று கோபாவேசத்துடன் கேட்ட சிப்பாய் பளாரென்று அவனுடைய கன்னத்திலே அறைந்தான். பற்களிலிருந்து இரத்தம் கசிகிற அளவிற்கு வலிமையான அடி.

தடதடவென வீட்டிற்குள் நுழைந்த சிப்பாய்கள் வீட்டைச் சல்லடை போட்டுத் தேட ஆரம்பித்தபோது சமையலறையின் மூலையிலே கிடந்த பழைய இரும்புப்பெட்டியின் உள்ளே அம்பும், வில்லும் இருக்க அம்பையும், வில்லையும் கையிலெடுத்தான் சிப்பாய்.
“இது என்ன?”
“அம்பும் வில்லும்”
“அது எனக்கும் தெரியும், எதற்காக இந்த அம்பையும், வில்லையும் வைத்திருக்கிறாய்?”
“எங்கள் பழங்குடிப் பரம்பரையின் கலாசாரத்தைக் குறிக்கும் சின்னங்கள் அவை. ஒவ்வொரு வீட்டிலும் நாங்கள் வைத்திருப்போம்”
“எதற்காக அம்பையும், வில்லையும் பயன்படுத்துவீர்கள்?”
“வேட்டையாடுவதற்கு”
“எங்கே வேட்டையாடு, பார்க்கலாம்”
“நாங்கள் இப்போது வேட்டையாடுவதில்லை, விவசாயம் செய்கிறோம். இந்த அம்பும், வில்லும் என் முப்பாட்டனாருக்குச் சொந்தமானவை”
“அப்படியானால் உனக்கு வேட்டையாடத் தெரியாது”
“தெரியாது”
“வேட்டையாடத் தெரியவில்லையானால் அம்பையும், வில்லையும் வீசியெறிய வேண்டியது தானே” “கலாசாரத்தை எடுப்பார் கைபிள்ளை போல் வீசியெறிய முடியாது”
“ஓ! அப்படியா விஷயம்? எங்கள் கலாசார சின்னம் என்னவென்று தெரியுமா?”
“தெரியாது”
“துப்பாக்கியும், சன்னமும்”
“.............”
“துப்பாக்கி என்னசெய்யும்?”
“சுடும்”
“துப்பாக்கி சுடும் என்பதை நீ உறுதியாக நம்புகிறாயா?”
“ஆமாம்” சிப்பாய் அவனுடைய பிட்டத்திலே துப்பாக்கிச் சனியனை வைத்து அழுத்தினான். “இப்போது விசையை அழுத்துகிறேன். துப்பாக்கி சுடுகிறதா என்று பார்ப்போம்”
“ஐயோ, என்னைக் கொன்றுவிடாதீர்கள்”
சிப்பாய்கள் சிரித்தார்கள். “நீ ஒர் அற்பப் புழு, உன்னைக் கொல்வதால் எங்களுக்கென்ன இலாபம்? எங்கே, உன் அடையாள அட்டையைக் கொண்டுவா”

தயக்கத்துடன் அவன் அடையாள அட்டையை நீட்ட அடையாள அட்டையை பார்த்த சிப்பாய் மற்றச் சிப்பாய்களைக் கூவியழைத்தான். அவன் எதைப் பயந்தானோ அது நடந்துவிட்டது. அடையாள அட்டை காரணமாக அவன் அனுபவித்த சித்திரவதைகள் அனந்தம். “அடோய், உன்னுடைய பெயரென்ன?” “பேயோட்டி” என்று அவன் சொல்ல எல்லாச் சிப்பாய்களும் சிரித்தார்கள். “அப்படியானால் பேய், பிசாசுகளைக்

கண்டால் எங்களைப் போல் மிரண்டு ஓடாமல் அவைகளை நீ ஓட்டிவிடுவாய்”
“பிசாசு எப்படி வருமென்று எங்களுக்குக் கொஞ்சம் நடித்துக் காட்டு பார்ப்போம்”
“நான் பிசாசைக் கண்டதில்லை”
“பிசாசைக் கண்ணால் காணாமல் எப்படி ஓட்டுவாய்?”
“நான் உண்மையான பேயோட்டி அல்ல, அது பெயர் வைக்கும்போது ஏற்பட்ட சின்னத் தவறு, பிறப்பைப் பதிவு செய்தவனுக்கு எங்களுடைய பாஷை தெரியாது. பெயரை மாற்றி எழுதிவிட்டான்” “மீண்டும் மீண்டும் பொய் சொல்லாதே”
“உண்மையைத் தான் சொல்லுகிறேன்”
“உனக்குப் பெயர் வைத்தது யார்?”
“என் தகப்பனார்”
“தந்தைக்குப் பேயோட்டத் தெரியுமா?”
“தெரியாது”
“தந்தைக்குப் பேயோட்டத் தெரியாது. உனக்கும் தெரியாது. நாங்கள் சொல்லித் தர பேயை ஓட்டு என்று சொன்ன சிப்பாய் வில்லையும், அம்பையும் அவனுடைய கைகளிலே கொடுத்தான். என்ன நடக்கப் போகிறதென்று தெரியமால் மிரளமிரள விழித்தான் பேயோட்டி.

சிப்பாய் பழைய துணிகளை பெற்றோலில் நனைத்து அம்பின் நுனியிலே கட்டி தீக்குச்சியால் துணியுருண்டையைக் கொளுத்தினான். “ம், பேயோட்டியே, இப்போது உன்னுடைய குடிசைக்குள் பிசாசுகள் நிறைந்து தொல்லை கொடுக்கின்றன என்று நினைத்து வில்லால் இந்த அம்பை எய்துவிடு” என்றான் சிப்பாய். “ஐயோ முடியாது, என் குடிசை எரிந்து சாம்பலாகிவிடும்” என்று மறுத்தான் பேயோட்டி. சிப்பாய்க்கு கோபம் வர “பேயோட்டியே, நீ அம்பை எய்து பேயை ஓட்டப்போகிறாயா? அல்லது உலகத்தை விட்டு உன்னை ஓட்டிவிடவா?” என்று துப்பாக்கியை உயர்த்தினான் சிப்பாய். “வேண்டாம், வேண்டாம். என்னைக் கொல்லவேண்டாம்” என்று கதறிய பேயோட்டி கண்களை மூடிக்கொண்டே நெருப்புப்பந்தம் எரிந்து கொண்டிருந்த அம்பை குடிசையை நோக்கி எய்த பந்தம் குடிசைமீது விழுந்து குடிசை கொழுந்து விட்டெரிய ஆரம்பித்தது. “ம், ஓடிவிடு..என்ன பார்த்துக் கொண்டிருக்கிறாய்?” என்று சிப்பாய் கத்தினான். பேயோட்டி தலைதெறிக்க ஓடினான். ஓடி ஓடி அகதிமுகாமை நோக்கி ஓடிய அவன் அன்று முதல் அகதியாகிவிட்டான்.

பேயோட்டி எப்போதும் ஆகாயத்திலே எதனையோ தேடினான். தாகித்தால் தண்ணீர் அருந்துவான் யாராவது எதையாவது கொடுத்தால் சாப்பிடுவான். மற்றவர்கள் அவனுடைய பெயரைக் கேட்டால் அவன் சொல்லமாட்டான். அதிகாலையில் சேவல் கூவுகையில் பேயோட்டி கியூவில் சேர்ந்து கொள்வான், கியூவில் நிற்காவிட்டால்

Toilet Token கிடைக்காது. இரண்டயிரம் அகதிகளுக்கும் இருந்த மலசலகூடங்களின் எண்ணிக்கை ஐந்து என்பதால் அது இன்றேல் இயற்கைக் கடன் கழிக்க அட்டைக்கடி நிறைந்த வனாந்தரத்திற்குச் செல்ல வேண்டும். இயற்கைக் கடன் முடிந்த கையோடு காலைத் தேனீருக்கு Token வாங்க வேண்டும். பிறகு குளியறை Token, காலையுணவு Token, மதிய உணவு என்று பொழுதில் பெரும்பகுதி Token கியூவில் நிற்பதிலேயே கழிந்துவிடும். இரவுப்பொழுது நுளம்போடு போராட்டம், இரவின் இறுதிப்பகுதி பயங்கரக்கனாக் கண்டு, வியர்த்து, திடுக்கிட்டு எழுந்திருத்தல் என்று கழியும்.

பகலுணவை அகதிகளுக்கு விநியோகிப்பதெற்கென்று சிப்பாய்களின் பட்டாளம் வரும். பகலுணவு என்றால் வாயூறக்கூடிய, கமகம என்று மணம் கமழும் ஆகாரப்பொதி அல்ல. புழுத்துப்போன அரிசியை அவித்து, பழுதாகிப்போன மரக்கறிகளுடன் சேர்த்து வெந்தும், வேகாமலும் அடுப்பிலிருந்து இறக்கப்பட்ட பண்டம் தான் பகலுணவு. அகதிகள் கியூவில் நிற்பார்கள். சிப்பாய் அகதியின் கண்களை உற்றுப் பார்ப்பான், முறைத்துக் கொண்டே கறியை ஊற்றுவான். அகதி என்ற நாமத்தைச் சூடிக்கொண்டு மறைந்திருக்கும் தீவிரவாதி சிப்பாயின் முறைப்பைத் தாங்கிக்கொள்ள முடியாமல் மிரண்டு சிரசை அப்பால் இப்பால் திருப்ப சிப்பாய் லபக்கென்று அவனைப் பிடித்துக் கொண்டுபோய், சித்திரவதை முகாமிலே சேர்த்து வதைப்பான். சிப்பாயைப் பார்த்து மனதிற்குள் விதிர்விதிர்த்துப் போனாலும் நாட்கள் போகப்போக இந்தக் கிரியைகள் எல்லாம் அவனுக்குப் பழக்கமாகிப் போயிற்று.

எங்கிருந்தோ வந்த புதுச்சிப்பாய் ஒருநாள் பேயோட்டியை அருகேயழைக்க பேயோட்டிக்கு ஞாபகம் வந்தது. அவனுடைய குடிசையை எரித்த கயவன். எதற்காக வந்திருக்கிறானோ? என்று நினைத்தவனாக சர்வாங்கமும் ஒடுங்கிப்போய் நின்றான் பேயோட்டி. “அடேய், உன்னுடைய பெயர்என்ன?” என்று சிப்பாய் அதட்ட அவ்வளவுதான், அந்தக் கேள்வியோடு பேயோட்டி மயங்கிவிட்டான். சிப்பாய் அவனுடைய முகத்திலே தண்ணீரை விசிறியடிக்க பேயோட்டி விழிகளைத் திறந்து மிரட்சியுடன் சுற்றுமுற்றும் பாரத்தான்.

“உன்னுடைய பெயர் என்ன?”

“..............”

“உன்னுடைய பெயர் என்ன?”

“........” சுற்றிச் சுற்றி கேள்விகள், என்ன விடை? தலை அடிபட்டு விட்டதோ என்னவோ பேயோட்டிக்கு பெயர் முற்றாக மறந்து போயிற்று. தன்னுடைய பெயரை ஞாபகத்திற்கு கொண்டுவர அவன் எவ்வளவோ பிரயத்தனம் பண்ணியும் முதலெழுத்து, நடுஎழுத்து ஈற்றெழுத்து எதுவுமே நினைவுக்கு வரவில்லை.

பொறுமையிழந்த சிப்பாய் பேயோட்டியை நிலத்திலே விழுத்தி தாறுமாறாக உதைத்து "சொல்லடா, உன்னுடைய பெயர் என்ன?" என்று கேட்டான். "என்னுடைய பெயரை மறந்துவிட்டேன் ஐயா" என்றான் பேயோட்டி ஈனக்குரலில். வெடிச்சிரிப்பு சிரித்த சிப்பாய்கள் ஒவ்வொருவராக அவனுடைய பெயரைக் கேட்க எல்லோருக்கும் ஒரே பதில் கிடைக்கவே பேயோட்டி உண்மையிலேயே தன்னுடைய பெயரை மறந்து விட்டான் என்ற விஷயம் இப்போது அவர்களுக்கு உறைத்தது. அடையாள அட்டையைத் தேடினார்கள். அது ஏற்கனவே குடிசையோடு சாம்பலாகிவிட்டது. மற்ற அகதிகளை விசாரித்தால் அவன் யாரென்றே அவர்களுக்குத் தெரியவில்லை. சிப்பாய்கள் பேயோட்டியை இராணுவ ட்ரக்வண்டியிலே ஏற்றினார்கள். 'ஐயோ, என்னை எங்கே கொண்டுபோகிறீர்கள்?" என்று பேயோட்டி நாக்குழற "பயப்படாதே, எதுவும் பேசாமல் எங்களோடு வா" என்று முதுகிலே தட்டிக் கொடுத்தான் சிப்பாய். உண்மையிலே பேயோட்டி அதிஷ்டசாலிதான். அன்று அவனுக்கு புது வாழ்க்கை ஆரம்பித்தது. இராணுவ முகாம் வாழ்க்கை. எடுபிடிவேலைகள் செய்வதுதான் அவனுடைய தொழில். சிப்பாய்கள் இப்போது அவனுடைய நல்ல நண்பர்களாக மாறிவிட்டார்கள். அவர்கள் பேயோட்டிக்கு வைத்த பெயர் காகமுண்டம். அவன் கன்னங்கரேலென்று கரித்துண்டுபோல் காட்சியளித்த காரணத்தால் தான் இந்தப்பெயர் அவனுக்குண்டாயிற்று.

நாட்கள் போகப்போக காகமுண்டம் என்று கூப்பிடுவது அவனுக்கு என்னவோ போலிருக்க பேயோட்டி சிப்பாய்களிடம், 'ஐயா, நீங்களெல்லோரும் காகமுண்டமே என்று கூப்பிடுவது என்னை கவலைக்குள்ளாக்குகிறது. தயவுசெய்து நல்ல பெயராகப் பார்த்துச் சூடினால் நான் சந்தோஷப்படுவேன்" என்று மன்றாடினான். சிப்பாய்களுக்கும் பேயோட்டிமீது இரக்கமுண்டாயிற்று. கிளி, மரம், ஆகாயம், இமயமலை, கறிவேப்பிலை, மண்புழு- இப்படி எத்தனையோ பெயர்களைச் சூடி அவனைக் கூப்பிட அவன் வேண்டாம் வேண்டாம் என்று தலையாட்டினான். பெயர்களைத் துண்டுகளில் எழுதி திருவுளச்சீட்டு போட்டுப் பார்ப்போம் என்றான் ஒருசிப்பாய். அப்படிப் போட்டுப் பார்த்ததில் வந்த பெயர்தான் *தங்கக்கட்டி*.

"உன்னை தங்கக்கட்டி என்று கூப்பிடுகிறோம். சம்மதமா?' என்று கேட்டான் சிப்பாய். தங்கக்கட்டி என்ற பெயர் பேயோட்டிக்கு மிகவும் பிடித்துவிடவே சந்தோஷத்துடன் ஆமாம் ஆமாம் என்று தலையாட்ட பின் வந்த நாட்களில் மந்திரசக்தியாய் அந்தப் பெயர் அவனை ஆட்டுவித்தது. கொஞ்சநாட்கள் அகதிமுகாமில் தங்கும் அவன் அதிக நாட்களில் இராணுவ முகாமில் தான் அவன் காலம் போகும்.

அகதிமுகாமுக்கு வருகின்ற சந்தர்ப்பங்களில் எல்லாம் தலைகால் புரியாமல் தங்கத்தால் வார்க்கப்பட்ட மனிதன்போல் அவன் நடந்து கொண்டான்; அதிகாரிபோல் நடிப்பான்; தனியான மலசலகூடம், தனியாக குளியலறை, தனியாக பற்பசை, தனியாக தலையணை, தனியாக பாய், தனியாக படுக்கை விரிப்பு என்று ராஜாவின் அந்தஸ்தில் அவன் இருந்தான். எடுபிடி வேலைகளுக்கு நம்பிக்கையான ஆள் தேவைப்படும் பட்சத்தில் சிப்பாய்கள் பேயோட்டிக்கு தான் செய்தி அனுப்புவார்கள். பேயோட்டியும் நூறுவீத விசுவாசத்துடன் அதனைச் செய்துமுடிப்பான். சிப்பாய்கள் அவனை மரியாதையாக நடத்திய அதேவேளை அகதிகளும் மரியாதையாக அவனை ‘தங்கக்கட்டி ஐயா’ என்று அழைத்தார்கள். பேயோட்டி இப்போது வயிறுமுட்டச் சாப்பிடுவதால் தளதள என்று காட்சியளித்தான்; சிலவேளை கோட்சூட் அணிந்து கனவான் மாதிரியும் நடந்து கொள்வான். அகதிமுகாமுக்கு வருகின்ற பிரமுகர்கள் பேயோட்டியைச் சந்திக்காமல் செல்ல மாட்டார்கள். அப்படி மவுசு.

மூன்றுவருடங்கள் இப்படியே ஓடி ஓரிதமான மாலையொன்றில் ஈஸி இருக்கையில் அமர்ந்து பேயோட்டி பத்திரிகை வாசித்துக் கொண்டிருக்கும் போது ஒரு கட்டிளமைப் பையன் தயங்கித் தயங்கி அவனருகில் வந்து நின்றான். எங்கேயோ பார்த்தமுகம். “என்ன?” என்பது போல் அவனை அண்ணாந்து பார்த்தான் பேயோட்டி. “தந்தையே என்னைத் தெரியவில்லையா? காணாமல் போன உங்கள் மகன் பிறாண்டி. என்னைக் கைதுசெய்து போன சிப்பாய்கள் என்னை அடைத்து வைத்து எல்லாச் சித்திரவதைகளும் செய்து விட்டு இப்போதுதான் விடுவித்துள்ளார்கள்” என்று சொன்ன பையன் தன் வெற்றுமேனியை பேயோட்டியிடம் காட்டினான். எல்லா இடங்களிலும் ஆறா வடுக்களும், தழும்புகளும், குணமடைந்த காயங்களும். எப்போதோ நடநத எல்லாக் கொடுமைகளும் இப்போது அவனுக்கு கொஞ்சம் கொஞ்சமாக ஞாபகத்திற்கு வர ஆரம்பித்தன. முதலில் ஞாபகம் வந்தது அவனுடைய பெயர்.. பேயோட்டி.. சீ! பேயோட்டி எத்துணை அசிங்கமான பெயர். மனைவியை வல்லுறவுக்குட்படுத்தி கொன்றது, மகனைக் கதறக் கதற இழுத்துக் கொண்டு போனது, வீதிகளில் பைத்தியக்காரன் மாதிரி அலைந்து திரிந்தது, குடிசையை எரித்தது இப்படி எல்லா விஷயங்களும்.

“எதற்காக என்னை இங்கே தேடிவந்தாய்?” என்று பதற்றத்துடன் கேட்டான் பேயோட்டி. “தந்தையே, எங்கோவெல்லாம் தேடியலைந்து பல வருடங்கள் கழித்து உங்களைக் காண வந்திருக்கிறேன். நீங்களோ ஏடாகூடமாகப் பேசுகிறீர்கள்? என்னை போபோ என்று விரட்டுகிறீர்கள். உங்களுக்கு என்னதான் நேர்ந்தது?” என்று ஆற்றாமையோடு கேட்டான் பையன். “முட்டாள்தனமாகக் கதைக்காதே, உனக்கு எதுவுமே புரியாது.

எக்காரணங் கொண்டும் என்னைத் தந்தை என்று சொந்தம் கொண்டாடிக் கொண்டு வராதே” என்று கடுமையாக எச்சரித்தான் பேயோட்டி. “தங்கக் கட்டியே, யாரிந்தப் பையன்?” என்று கேட்டவாறே அங்கு வந்தான் சிப்பாய். “சிப்பாய் அவர்களே, இவன் எனக்கு நன்றாகத் தெரிந்த பையன். நல்ல பையன். உங்கள் முகாமிலே இவனுக்கு ஒரு வேலை போட்டுக் கொடுத்தீர்களென்றால் நன்றாக இருக்கும்” என்றான் பேயோட்டி, “பையனின் பெயர் என்ன?” “வெள்ளிக்கட்டி”



# தீர்க்கதரிசியின் புதிய முகவரி

எம்.எம்.நௌஷாத்

தீர்க்கதரிசி தபோவனத்திலே வாழ்ந்துவந்தார். மரங்கள் அடர்ந்த வனாந்தரத்திலே தபோவனம் இருந்தது. தீர்க்கதரிசி அதிகாலை 4.30 மணிக்கெல்லாம் எழுந்துவிடுவார்; ஆலங்குச்சியால் பல்துலக்குவார்; பொய்கையிலே நீராடுவார்; புதிய ஆடைகள் புனைவார்; நறுமணம் பூசுவார்; பிறகு தியானத்திலே ஆழ்ந்துவிடுவார். தீர்க்கதரிசி என்றால் எதிர்காலத்தில் இடம்பெறக்கூடிய நிகழ்வுகளை முன்கூட்டியே சொல்லக்கூடிய ஆற்றல் கொண்டவர் என்று ஆராதனை மண்டபத்தின் சுவரிலே எழுதப் பட்டிருந்தது. தீர்க்கதரிசி என்பதால் வெடவெடவென நடுங்கும் குளிரையும் பசியையும் அவர் பொருட்படுத் துவதில்லை.

தீர்க்கதரிசிக்கு பதினாறு சீடர்கள் இருந்தார்கள். காலை ஆறுமணி யானதும் பதினாறு சீடர்களும் அவரைச்சுற்றி குழுமிவிடுவார்கள். தீர்க்கதரிசி திண்டுக்குமேலே சாய்ந்துகொள்வார்; கண்களை மூடிக் கொள்வார்; சீடர்கள் பாரசீகக்கம்பளத்தின் மேலே அமர்ந்து கொள்வார்கள். காலை நீராகாரம் அருந்தியபின் தீர்க்கதரிசி சீடர்களுக்கு உபதேசம்பண்ண ஆரம்பிப்பார். சீடர்கள் காது தாழ்த்திக் கேட்டுக்கொண்டிருப்பார்கள். ஞானம், துறவு, உலகம், பற்று, பற்றின்மை, குடும்ப சங்கடங்கள், மரணம், வாழ்க்கை, சூனியம் இப்படியெல்லாம் அவர் பேசிக்கொண்டே போவார். உபந்நியாசம் முடிந்ததும் சந்தேகங் கொண்ட சீடர்கள் கேள்வி கேட்க ஆரம்பிப்பார்கள். இப்படித்தான் ஒருநாள் கேள்வி நேரத்தின் போது கிறுக்குச்சீடன் எழுந்து நின்றான். அவனுடைய உண்மையான பெயர் முறுக்குவிருட்சம். அந்தப் பெயரை உச்சரித்துப் பார்த்ததில் நாக்கு நெளிந்து வளைந்து போனதுதான் மிச்சம். எனவே எப்போதும் கிறுக்குத்தனமாகவும் ஏடாகூடமாகவும் அவன் நடந்து கொள்வதால் அவனுக்குக் கிறுக்குச்சீடன் என்று செல்லமாக வைத்த பெயர் அப்படியே நிலைத்து விட்டது. கிறுக்குச்சீடன் எழுந்து நின்றதும் எல்லாச் சீடர்களும் பதகளித்துப் போனார்கள். ஏனென்றால் அவன் எழுந்துநின்றால் அன்று பிரளயம் நிகழப்போகின்றது என்று அர்த்தம்.

“குருவே நீங்கள் தீர்க்கதரிசித்துவம் பெற்றது என்று சொல்வதெல்லாம் உண்மைதானா?அல்லது பேச்சுக்கு சும்மா டம்பமாகப் பேசுகிறீர்களா?” என்று கேட்டான் கிறுக்குச்சீடன். கிறுக்குச்சீடனின் இக்கேள்வியால் அதிர்ச்சியடைந்த எல்லாச் சீடர்களும் அவனை அமரும்படி வற்புறுத்த தீரக்கதரிசியோ புன்முறுவல் பூத்தவராக “பரவாயில்லை, எதை வேண்டுமானால் அவன் கேட்கட்டும், நம்முடைய ஞானம் அள்ள அள்ளக் குறையாத குறைவற்ற ஞானம்” என்று அமைதியாகச் சொன்னார். “கிறுக்குச்சீடனே கேள்வியை மீண்டும் கேள்” என்று உற்சாகப்படுத்தினார் தீர்க்கதரிசி. “நீங்கள் ஞானம் பெற்றுக் கொண்டதாக அடிக்கடி சொல்லுகிறீர்கள், நீங்கள் சொல்லுவது

உண்மையானால் எங்கே யாரிடமிருந்து அந்த ஞானத்தைப் பெற்றுக் கொண்டீர்கள்" என்று கேட்டான் கிறுக்குச்சீடன்.
"அதில் என்னப்பா உனக்குச் சந்தேகம்?"

"குருவே சந்தேகம் வந்து கேட்கிறேன். பதிலைச் சொல்லுங்கள்"
"இமயமலைச் சாரலிலே வாழ்ந்து வந்த மகரிஷி எனக்கு ஞானோபதேசம் செய்தார். ஒருநாள் என் உடம்பிலே வித்தியாசமான உணர்வை உணர்ந்தேன். என் உள்ளத்திலே படிந்து போயிருந்த கறள் விலகிப்போய் தெளிவும், ஞானமும் நிறைந்தது. மகரிஷி எண்னை அழைத்து தலையைத் தடவி மகனே நீ இன்று தீர்க்கதரிசித்துவம் பெற்றுவிட்டாய் என்று ஆசீர்வாதித்தார்" என்றார் குரு.

சீடர்கள் பக்திப் பரவசத்தோடு அவர் சொல்வதை கேட்டுக் கொண்ருக்க கிறுக்குச் சீடனோ நம்பாமலிருந்தான். அவன் நம்பவில்லை என்பது அவனுடைய முகத்தில் தெரிந்தது.
"குருவே இமயமலைச் சாரலிலே எத்தனை வருடங்கள் நீங்கள் ஜீவித்தீர்கள்?"
"சுமார் பத்து வருடங்கள்"
"இமயமலை நேபாளநாட்டிலே இருக்கிறது. சுவரக்கத்தீவிலிருந்து நீங்கள் எப்படி அங்கே போனீர்கள்?" என்று கேட்டான் கிறுக்குச்சீடன். கிறுக்குச்சீடனின் அறியாமை நிறைந்த கேள்விகளைப் பார்த்து மற்றச்சீடர்கள் சிரிக்க தீர்க்கதரிசி அவர்களைச் சிரிக்க வேண்டா மென்று சைகை காட்டிவிட்டு "எல்லோரையும் போல விமான மார்க்க மாகத்தான் போனேன்" என்று அமைதியாகப் பதிலளித்தார். "விமான மார்க்கமாகப் போய்வந்தீர்கள், போய்வந்தீர்கள்" என்று தனக்குத் தானே முணுமுணுத்துக் கொண்ட கிறுக்குச்சீடன் "குருவே, விமான மார்க்கமாகத்தானே போய்வந்தீர்கள்?" என்று மீண்டும் கேட்டான்.
"ஆம். இன்னமும் சந்தேகமா?"
"இல்லை குருவே, மன்னித்துக் கொள்ளுங்கள், சின்னச்சந்தேகம்"
"பயப்படாமல் கேள்"
"குருவே, விமான மார்க்கமாகப் போய் வந்தீர்ளென்றால் உங்களிடம் பாஸ்போட் இருக்கவேண்டுமே. கொஞ்சம் பாஸ்போட்டைக் காட்ட முடியுமா?" என்று கேட்டான் கிறுக்குச்சீடன். மற்றச் சீடர்கள் அடக்க முடியாத கோபத்துடன் கிறுக்குச்சீடனை சூழ்ந்து அடிப்பதற்குக் கையோங்க தீர்க்கதரிசியோ அவர்களைச் சமாதானப்படுத்திவிட்டு பாஸ்போட்டைக் கொண்டுவந்து கிறுக்குச்சீடனின் கையிலே திணித்தார். கிறுக்குச்சீடன் பாஸ்போட்டின் பக்கங்களைப் புரட்டிப்பார்த்துவிட்டு "எல்லாம் சரியாகத்தான் இருக்கிறது குருவே" என்று மகிழ்ச்சியுடன் சொன்னான்.

சம்பவம் அத்தோடு முடிந்தாலும் தீர்க்கதரிசியின் மனதிலே அந்தச் சம்பவம் முள்ளாய்க் குத்தி வேதனை செய்துகொண்டே இருந்தது. எல்லாச் சீடர்களும் அவனைக் கிறுக்குச்சீடன் என்று அழைத்தாலும் அவனிடம் புத்திசாலித்தனம் இருப்பதுபோல் அவருக்குத் தோன்றியது. நகரத்திலிருந்து பதினைந்து கிலோமீற்றர் தள்ளி அமைந்திருந்த தீர்க்கதரிசியின் ஆச்சிரமத்திற்குச் செல்ல நல்ல பாதைகள் இருக்கவில்லை. குன்றுங் குழியுமாக ஒரேயொரு பாதை இருந்தது. மழைக்காலத்தில் தண்ணீர் தேங்கி நின்று பாதை சேறாகக் காட்சியளித்தாலும் மக்கள் வந்து கொண்டிருந்தார்கள்; சிலர் நடந்தும் சிலர் மோட்டார் சைக்கிள்களிலும், கார்களிலும், வேன்களிலும் ஏறிவந்தார்கள். ஆச்சிரமத்தின் சுவரோ வெறும் களிமண், கூரை நாணற் புற்களால் வேயப்பட்ட கூரை, கரடுமுரடனான தரை. தீர்க்கதரிசி கம்புகளால் வரிச்சுக்கட்டிய கட்டிலில்தான் படுத்துறங்கினார். காலையில் விழித்தெழும்போது அவருடைய முதுகிலே வரிச்சுக் கம்புகளின் அச்சு இருக்கும், அச்சுகளுக்கு தைலம் தேய்ப்பதற்கென்றே ஒருசீடன் இருந்தான். தீர்க்கதரிசியின் அறையில் எந்த விதமான வசதிகளும் கிடையாது. மின்விசிறிகூட இல்லை, ஏஸிகிடையாது, தொலைக்காட்சி இல்லை, சீடி பிளேயர் இல்லை, மடிக்கணினி இல்லை, குளியலறையும் இல்லை, நீராடுவதென்றால் ஆற்றுக்குப் போய்த்தான் குளிக்க வேண்டும்.

தீர்க்கதரிசி இவ்வளவு சிரமமான வாழ்க்கையை அனுபவித்து வந்தபோதிலும் அவரைத் தரிசிக்கவரும் பக்தர்களின் எண்ணிக்கையில் எவ்விதக் குறைவும் ஏற்படவில்லை. அவர்கள் தீர்க்கதரிசியின் உபதேசங்களைக் கேட்க ஆவலோடு காத்திருந்தார்கள். பக்தர்கள் படித்தவர்களாக இருந்தார்கள், பத்திரிகையாளர்களாக இருந்தார்கள், புத்திஜீவிகளாக இருந்தார்கள், அரசியல்வாதிகளாக இருந்தார்கள். பக்தர்கள் தீர்க்கதரிசியிடம் வந்து தங்கள் மன உளைச்சல்களை முறையாடுவார்கள், தீர்க்கதரிசி அவற்றையெல்லாம் கண்களை மூடிக்கொண்டு கடவுளிடம் ஒப்புவிப்பார். கடவுளிடமிருந்து பதில் கிடைத்ததும் பிரச்சினைகளுக்குரிய பரிகாரங்களை அவர் பக்தர் களுக்கு சொல்லுவார், பக்தர்கள் உள்ளம் பூரித்துப்போய் பக்திப் பரவசத்துடன் பௌயமாக தீர்க்கதரிசிக்கு நன்றி சொல்லிவிட்டுப் போவார்கள். அவருடைய முகம் எப்போதும் பிரகாசம் மிக்கதாகவும், அருள் பொதிந்தும் காணப்படும். தீர்க்கதரிசியின் கூரிய பார்வை பார்த்திருப்பவரை மண்டியிடச்செய்யும். ஆஜானுபாகுவான தோற்றம், அழகான முகம், சுண்டியிழுக்கும் தாடி, முக்காலமும் அறிந்த தீர்க்க தரிசிக்கு கடவுள் ஆற்றல்களை அள்ளிக் கொடுத்திருக்கிறார் என்று சுற்றுவட்டாரத்திலுள்ளவர்கள் அதிசயத்துடன் பேசிக் கொண்டார்கள்.

காலை பத்து முப்பதுக்கு தேநீர் இடைவேளை வழங்கப்படும். அவ்வேளையில் குரக்கன் மாவைக் குழைத்துச் சுடப்பட்ட

உரொட்டியோடு இலைக் கஞ்சியைச் சேர்த்து தீர்க்கதரிசி சாப்பிடுவார். தீர்க்கதரிசி சிகரட் புகைப்பதில்லை, மது அருந்துவதில்லை, வேறு எந்தக் கெட்ட பழக்கங்களும் கிடையாது. சாமான்யர்கள் எடுக்கும் பகலுணவுதான் தீர்க்கதரிசிக்கும். பகல் ஆகாரம் முடிந்தவுடன் நித்திரைக்குப் போய்விடுவார். அதனை அவர் சிறுதூக்கம் என்று அழைப்பார். பனையோலையால் இழைக்கப்பட்ட பாயில்தான் படுத்துறங்குவார். ஆச்சிரமத்திற்குப் பின்னால் பழவர்க்கங்களால் நிரம்பிய ஒருதோட்டம் இருந்தது. மாலையானதும் தீர்க்கதரிசி அங்கே ஆஜராகி கனிகளைப் புசிப்பார், இயற்கைக் காற்றைச் சுவாசிப்பார், சுகானுபவமான கற்பனையில் ஆழந்துவிடுவார். அவர் தோட்டத்திற்குள் நடமாடும்போது பாதணி அணியமாட்டார். ஏனென்று கேட்டால் இப்படிச் சொல்லுவார் “என் பாதத்தால் நசிபட்டு ஒரு சிற்றெறும்பு கூட உயிரிழந்து விடக்கூடாது” என்று சொல்லிவிட்டு “எல்லா உயிர் களுக்கும் கருணை காட்ட வேண்டும்” என்று சொல்லுவார். அவர் ஒரு புத்தகத்தைப் புரட்டிப் பார்த்துத் தான் இந்த விஷயங்களை யெல்லாம் சொல்லுவார். மிகவும் தடித்த கனமான அந்தப் புத்தகம் தீர்க்கதரிசியின் மேசை மீது இருந்தது. தடித்த நீலநிற அட்டை. பதினெட்டாம் நூற்றாண்டைச் சேர்ந்த புத்தகம். புத்தகத்தின் பெயர் “தீர்க்கதரிசியின் குணாம்சங்கள்” புத்தகத்திற்கென்று பெட்டி தயாரித்து அதற்குப் பூட்டுப் போட்டு தன்னுடைய உயிரையும் விட மேலாகப் புத்தகத்தைப் பாதுகாத்து வந்தார் தீர்க்கதரிசி. யாரையும் தொடுவதற்குக்கூட அவர் அனுமதிக்கவில்லை. சீடர்களுக்கும் அந்த அனுமதி கிடையாது.

இப்படித்தான் ஒரு வெள்ளிக்கிழமை தோட்டத்தில் உலவிக் கொண்டிருக்கையில் தீர்க்கதரிசியை விரியன் பாம்பு தீண்ட தீர்க்கதரிசி அந்த இடத்திலேயே மயங்கி விழுந்தார். விரியன் பாம்பை அடித்துக் கொன்ற சீடர்கள் பாம்புப் புற்றிற்குள் மண்எண்ணெய் தேய்க்கப்பட்ட தீப்பந்தத்தைச் செருகி தீ வைத்துக் கொளுத்தினார்கள். தீர்க்கதரிசி அருகிலுள்ள நவீன வைத்திசாலைக்கு எடுத்துச்செல்லப்பட்டார். தீர்க்கதரிசி மேல் அபிமானம் வைத்திருந்த நிறையப் பக்தர்கள் ஆஸ்பத்திரியில் பணிபுரிந்து வந்தமையால் தீர்க்கதரிசிக்குத் தடல்புட லாகச் சிகிச்சை அளிக்கப்பட்டதுடன் சீடர்களும் பக்தர்களும் தீர்க்க தரிசிக்கு அருகிலேயே இருந்து அவருக்குப் பணிவிடை செய்தார்கள். தீர்க்கதரிசியைப் பாம்பு தீண்டிய அடுத்த நாள் கிறுக்குச்சீடன் இளைக்க இளைக்க ஆஸ்பத்திரிக்கு வந்தான். ஏற்கனவே எல்லாச் சீடர்களும் தீர்க்கதரிசியைப் பலமுறைச் சுகம் விசாரித்து, தரிசித்துப் போயிருக்க கிறுக்குச்சீடனுக்கு இப்போதுதான் ஞானம் வெளித்திருந்தது.

வந்தவன் குருவின் நிலையை விசாரித்தான் என்றால் அதுவுமில்லை. தீர்க்கதரிசியின் உடல் நிலையைப் பற்றி எந்தக் கவலையும் இல்லாத கிறுக்குச்சீடன் தீர்க்கதரிசியின் அருகில் வந்து “குருவே, சந்தேகங்கள் கொஞ்சம் உண்டு, தெளிவுபெற வேண்டும். கேட்கலாமா?” என்று

கேட்டான். சினத்தை அடக்கிக் கொண்டு “சீடனே, தாராளமாகக் கேள்?, விடையளிக்கிறேன்” என்றார் தீர்க்கதரிசி.

“முக்காலம் என்றால் என்ன?”

“கடந்த காலமாகிய இறந்தகாலம், தற்போது நடந்து கொண்டிருக்கின்ற காலமாகிய நிகழ்காலம், இனி வரப்போகும் காலமாகிய எதிர்காலம் இந்த மூன்று காலங்களையுமே முக்காலங்கள் என்கிறோம். அதிலென்ன உனக்குச் சந்தேகம்?” என்று பதிலுக்குக் கேட்டார் தீர்க்கதரிசி. “குருவே இறந்த காலத்தை அறிந்து கொள்ள ஞானம் தேவையில்லையே, நடந்து முடிந்த காரியங்களைக் குழந்தை கூடச் சொல்லிவிடுமல்லவா?” என்றான் கிறுக்குச்சீடன்.

“நீ சொல்வது வாஸ்தவம் தான்”

“கண்கள் இருந்தால் பார்க்கலாம், காதுகள் இருந்தால் செவியுறலாம், சருமத்தால் தொட்டுணரலாம். எனவே நிகழ்காலத்தில் நடப்பவற்றை எங்களால் புரிந்து அறிந்து கொள்ளமுடியும்”

“நீ சொல்லுவது வாஸ்தவம் தான்”

“ஆனால் எதிர்காலத்தை எங்களால் அறிந்துகொள்ள முடியாது”

“நீ சொல்வது வாஸ்தவம் தான்”

“நீங்கள் முக்காலமும் அறிந்த தீர்க்கதரிசி தானே”

“அதிலென்ன சந்தேகம்?”

“எதிர்காலத்தில் நடக்க இருக்கும் நிகழ்வுகளை நீங்கள் எப்படி அறிந்து கொள்கிறீர்கள்?” வாய்விட்டுச் சிரித்த தீர்க்கதரிசி “நீ கேட்ட கேள்வி அர்த்தமுள்ள கேள்விதான். ஆனால் அதற்குரிய விடையை உன்னால் புரிந்துகொள்ள முடியாது. கடவுள் எனக்கு கொடுத்த அருட்கொடை அது” என்று பதிலளித்தார்.

“அப்படியென்றால் நடந்தவைகளும் உங்களுக்குத் தெரியும், நடப்பவைகளும் தெரியும், நடக்கப் போகின்ற விஷயங்களும் தெரியும்”

“ஆமாம்”

“பாம்பு தீண்டாமலிருக்க அந்தப் பாதையில் செல்லாமல் வேறு பாதையால் சென்றிருந்தால் இப்படி ஒரு துயரமான சம்பவம் உங்களுக்கு வந்திருக்காதல்லவா! குருநாதரே”

“அது எப்படியப்பா? அந்தப் புதருக்குள் பாம்பு ஒளிந்து கொண்டிருப்பது எனக்கெப்படித் தெரியும்? நான் என்ன கிளி ஜோதிடமா பார்க்கிறேன்” கொஞ்சம் கோபமாகப் பதிலளித்தார் தீர்க்கதரிசி. இப்போது கிறுக்குச் சீடன் அட்டகாசமாகச் சிரித்தான். அவனுடைய சிரிப்பால் ஆஸ்பத்திரி அதிர துாங்கிக் கொண்டிருந்த நோயாளிகள் திடுக்கிட்டு விழித்தெழுந் தார்கள். டாக்டர்கள்,தாதிய உத்தியோகத்தர்கள், சிற்றூழியர்கள் அனைவரும் அந்த இடத்தை நோக்கி ஓடி வந்தார்கள்.

“ஏனப்பா இப்படி முட்டாள்தனமாகச் சிரிக்கிறாய்? பக்தர்களுக்கு ஞானோபதேசம் செய்யும் நாம் ஒருபோதும் அட்டகாசமாகச் சிரிக்கக்கூடாது, நமக்கது அழகல்ல” என்று உபதேசம் பண்ணினார் தீர்க்கதரிசி. “சிரிக்காமல் வேறு என்ன செய்வது குருநாதரே,

முக்காலமும் உணர்ந்த உங்களுக்கு இந்த அற்ப விஷயம் தெரியாமல் போனதென்றால் உங்களை எப்படி தீர்க்கதரிசி என்று ஏற்றுக்கொள்வது?" என்று கேட்டான் கிறுக்குச்சீடன். இந்தக் கேள்வி தீர்க்கதரிசியை திக்குமுக்காடச் செய்ய கோபத்தின் உச்சிக்கே சென்ற அவர் ஒன்றையுமே யோசிக்காமல் கிறுக்குச்சீடனின் கன்னம் சிவக்க விட்டாரே பளாரென்று ஓர் அறை. அந்தச் சப்தம் ஆஸ்பத்திரி எங்குமே எதிரொலித்தது. "சீடன் ஒருவனுக்கு இருக்கவேண்டிய எந்தக் குணாம்சங்களும் உன்னிடம் இல்லை என் முன்னாலே நிற்காதே, எங்காவது ஓடிவிடு" என்று தீர்க்கதரிசி இரைய கிறுக்குச்சீடன் கெஞ்சினான். தீர்க்கதரிசி கொஞ்சங்கூட விட்டுக் கொடுக்காமல் முகத்தை மறுபக்கம் திருப்பிக் கொண்டார். தீர்க்கதரிசியின் மனமிரங்காதா என்று கிறுக்குச்சீடன் நெடுநேரம் நின்று பார்த்தும் தீர்க்கதரிசி அவனிடம் பேசவேயில்லை.

தீர்க்கதரிசி ஆச்சிரமத்திற்கு திரும்பி வந்த உடனேயே தன்னுடைய அறைக்கு ஓடோடிச்சென்று புத்தகப்பெட்டியைத் திறந்து. *தீர்க்கதரிசியின் குணாம்சங்கள்* புத்தகம் இருக்கிறதா என்று பார்க்க நல்லவேளையாக அது அப்படியே இருக்க அதற்குப் பிறகுதான் நிம்மதிப் பெருமூச்சுவிட்டார் தீரக்கதரிசி. கிறுக்குச்சீடன் ஆசிரமத்தை விட்டுச் சென்றபின் இப்போது சுமுகமான சூழ்நிலை நிலவியது. கிறுக்குச்சீடனின் குறுக்குமறுக்கான கேள்விகளால் தீர்க்கதரிசி மனக்குழப்பத்திற்கு ஆளாகியிருந்தார். அந்தத் தலையிடி இப்போது முற்றாக நீங்கி விட்டது. சீடர்கள் அதிகாலையில் எழுந்தார்கள், பல்துலக்கினார்கள், குளித்தார்கள், தீர்க்கதரிசியின் உபதேசங்களைக் கேட்டார்கள், எழுந்து சென்றார்கள், அந்த உபதேசங்களை அப்படியே கிளிப்பிள்ளைபோல பக்தர்களிடம் ஒப்புவித்தார்கள். எனவே தீர்க்கதரிசி மகிழ்ச்சிக் கதகதப்பில் மூழ்கியிருந்தார்.

ஆசீர்வாதங்கள், போதனைகள், கடவுளிடம் பிரார்த்தனை, ஜெபித்தல் என்று அமைதியாகப் போய்க் கொண்டிருந்த தீர்க்கதரிசிக்கு ஆறு மாதங்கழித்து மீண்டுமொரு சோதனைக் காலம் வந்தது. நாற்பத்திரண்டு கிலோமீற்றர்களுக்கப்பால் புதியதொரு தீர்க்கதரிசி தோன்றியிருக்கிறார் என்ற செய்தியை சீடன் ஒருத்தன் அவரிடம் வந்து சொன்னபோது அதனை அவர் பொருட்டாகவே எடுக்கவில்லை. "போலித் தீர்க்கதரிசிகள் தோன்றுவார்கள், மறைவார்கள், அருமைச்சீடனே, நீ கவலைப்படாதே. கடவுள் என்னுடன் மட்டுமே பேசச் சித்தமா யிருக்கிறார்" என்று தன்னுடைய சீடனைத் தேற்றினார் தீர்க்கதரிசி. என்றாலும் நாட்கள் செல்லச் செல்ல புதிய தீர்க்கதரசியின் புகழ் எங்குமே பரவி தன்னைத் தரிசிக்கவரும பக்தர்கள் எண்ணிக்கையில் தேக்கநிலை தென்படுவதை தீர்க்கதரிசி அவதானித்தார். திடீரென்று

ஒருநாள் புதிய தீர்க்கதரிசியைப் பற்றிச் செய்திகொண்டு வந்த சீடன் தீர்க்கதரிசியை விட்டு விலகிப்போய் புதிய தீர்க்கதரிசியின் சீடனாக மாறவே தீர்க்கதரிசி தொண்டையில் முள்சிக்கி அவஸ்தைப்படுவதைப் போல் வேதனையை அன்று உணர்ந்தார்.

கதை அத்தோடு முடியவில்லை. தீர்க்கதரிசியைத் தரிசிக்க வரும் பக்தர்களின் எண்ணிக்கை குறைவடைந்து கொண்டுவந்த அதே சமயம் சீடர்களும் ஒவ்வொருவராக அவரைவிட்டு விலகிச் சென்று கொண்டிருந்தார்கள். எஞ்சியிருந்த ஒருசில சீடர்களும் புதிய தீர்க்கதரசியோடு கலந்துபேசி நல்ல முடிவுக்கு வரலாம் என்று ஒருநாள் தீர்க்கதரிசியிடம் ஜாடைமாடையாகச் சொன்னாலும் தீர்க்கதரிசி விட்டுக் கொடுக்கத் தயாராக இருக்கவில்லை. எஞ்சியிருந்த சீடர்களுக்கு "தீர்க்கதரிசியின் குணாம்சங்கள்" என்ற புத்தகத்தில் எழுதப்பட்டிருந்தவைகளை ஒவ்வொரு நாளும் படித்துக் காட்டிய அவர் தான் உண்மையான தீர்க்கதரசி என்பதை நிரூபிக்க மிகவும் சிரமம் எடுத்ததுடன் போலித் தீர்க்கதரிசியுடன் எந்தவிதமான சமரசத்திற்கும் இடமில்லை என்று திட்டவட்டமாகத் தெரிவித்து விட்டார்.

காலப்போக்கில் தீர்க்கதரிசி நோய்வாய்ப்பட ஆச்சிரமம் சோபையிழந்தது. தீரக்கதரிசியின் போதனையைக் கேட்க இருந்தாற்போல் பக்தர்கள் ஓரிருவர் வந்ததுடன் சீடனென்று சொல்லிக் கொள்ளவும் இறுதியில் ஒருத்தன் தான் எஞ்சியிருந்தான். அவனுக்கும் ஆச்சிரமத்தில் சொல்லிகொள்ளும் படியாக அதிக வேலையிருக்கவில்லை. அவன் காலையில் விழித்தெழுவான், பல்துலக்குவான், உதிர்ந்த மாம்பழங்களைப் பொறுக்குவான், குப்பைகளைப் பெருக்கி எரிப்பான், வீட்டின் உட்புறங்களைக் கழுவித்துடைப்பான், பிறகு தீர்க்கதரிசிக்கு தேனீர் ஊற்றிக் கொடுத்து விட்டு காலைச் சாப்பாடு தயார்பண்ணுவான். தீர்க்கதரிசியின் போதனைகளைக் கேட்க அவ்வளவு ஆர்வம் காட்டாத அவன் ஏதாவது சாக்குப்போக்குச் சொல்லி நழுவிவிடுவான்.

ஓர் அதிகாலை தீர்க்கதரிசி தன்னுடைய ஒற்றைச் சீடனை அவன் படுத்த இடத்திலே தட்டி எழுப்பினார். அவன் வாரிச்சுருட்டிக் கொண்டுஎழுந்தான். "சீடனே புறப்படு, இன்று நாம் புதிய தீர்க்கதரிசியைப் பார்க்கப்போகிறோம்" என்றார் தீர்க்கதரிசி. "போலியாக நாடகமாடிக் கொண்டிருக்கும் தீர்க்கதரிசியை நாம் பார்க்கவேண்டிய தேவை என்ன குருநாதரே?" என்று ஆச்சரியத்துடன் கேட்டான் சீடன்.

"தீர்க்கதரிசியைக் நாம் காணப்போவது அவனைக் காணவேண்டும் என்ற ஆசையினால் அல்ல. அந்தப் போலித் தீர்க்கதரிசிக்கு நாம் நல்லபாடம் படிப்பிக்கப் போகிறோம்"

“நான் அஞ்சுகிறேன் குருநாதரே”
“ஏன் அப்படிச் சொல்கிறாய்?”
“அந்தப் போலித் தீர்க்கதரிசி உங்களை மரியாதைக் குறைவாக நடத்தி விட்டால் என்னால் தாங்க முடியாது”
“அதனைப்பற்றி நானே கவலைப்படவில்லை. நீயேன் கவலைப்படுகிறாய்? ஞானசூன்யமான அவனின் ஞானத்தை நாம் பரீட்சிக்கப் போகிறோம். எங்கேயிருந்து கடவுளின் தூதைப்பெற்றுக் கொண்டாய் என்று அவனைக் கேட்கப் போகிறேன். என்னுடைய கேள்விகளால் அவன் திக்குமுக்காடப்போகிறான்” என்றார் தீர்க்கதரிசி.

எல்லோருக்கும் தெரிந்த பிரசித்தமான இடமாக இருந்ததால் புதிய தீர்க்கதரிசியின் இடத்தைக் கண்டுபிடிப்பது சிரமமான காரியமாக இல்லாமலிருந்த அதேவேளை அவ்விடத்தை அடைந்தபோது தான் நினைத்ததுபோல் தீர்க்கதரிசி லேசுப்பட்ட ஆளல்ல என்பது தீர்க்கதரிசிக்குப் புரிந்தது. புதிய தீர்க்கதரிசியின் சொகுசு பங்களா இருந்த இடம் சுகண்டிப் பிரியர்களும், ஆடம்பரப் பிரகிருதிகளும், கோடீஸ்வரர்களும் மட்டுமே வாழும் நகரமையம் அது. பங்களாவைச் சுற்றிவர பாதுகாப்பு அதிகாரிகள் இருந்தார்கள். அவர்களுடைய அனுமதி இல்லாமல் சிற்றெறும்புகூட உள்ளே நுழையமுடியாது என்ற நிலைமை. தீர்க்கதரிசியைச் சந்திப்பதற்கு முன்கூட்டியே Appointment எடுக்கவேண்டும். தனவந்தர்களும், அரசியல்வாதிகளும் புதிய தீர்க்கதரிசியைச் சந்திப்பதற்காக குளிரூட்டப்பட்ட வாகனங்களிலே வந்திறங்கினார்கள். தீர்க்கதரிசி தன்னுடைய சீடனைப்பார்த்து “நாம் வந்த இடம் சரிதானா?” என்று கேட்க அவனும் ஆமென்று தலையாட்டினான்.

தீர்க்கதரிசியைக் கண்ட நுழைவாயில் பாதுகாப்பு அதிகாரி இங்கு பிச்சை கொடுப்பதில்லை. போபோ என்று அவர்களை விரட்டினார். “நாங்கள் பிச்சை எடுக்க வரவில்லை, வனாந்திரத்திலிருந்து மிக நீண்ட தூரம் நடந்து வருகிறோம். உங்கள் தீர்க்கதரிசியைச் சந்திக்கவேண்டும். நானும் தீர்க்கதரிசிதான்” என்று பதிலளித்தார் தீர்க்கதரிசி. பாதுகாப்பு அதிகாரி நம்ப முடியாமல் அவரைப் பார்த்து “எந்த ஊருக்கு நீங்கள் தீர்க்கதரிசி?” என்று கேட்டான்.
“எல்லா ஊர்களுக்கும் நான் தான் தீர்க்கதரிசி”
“உங்கள் வாகனம் எங்கே?”
“எனக்கென்று வாகனம் இல்லை”
“நீங்கள் சொல்வதை நம்பமுடியவில்லை. அவரைச் சந்திப்பதற்கு Appoinment எடுத்திருக்கிறீர்களா?” என்று கேட்டான் பாதுகாப்பு அதிகாரி. “அப்படியும் இருக்கின்றதா? இந்த விஷயங்கள் எனக்குத்

தெரியாதே” என்று தீர்க்கதரிசி அழாக்குறையாகச் சொல்ல பாதுகாப்பு அதிகாரிக்கு தீர்க்கதரிசி மேல் பச்சாதாபம் உண்டாகிற்று.

“உங்கள் பெயரென்ன?”
“என்னை எல்லோரும் தீர்க்கதரிசி என்று அழைப்பார்கள்”
“கொஞ்சம் இருங்கள்” என்று சொன்ன பாதுகாப்பு அதிகாரி தொலைபேசியை எடுத்து எங்கெல்லாமோ இலக்கங்களைச் சுழற்றினார். “தீர்க்கதரிசி ஐயா அவர்களே, தீர்க்கதரிசி என்று சொல்லிக் கொண்டு வயதான ஓர் ஆள் உங்களைச் சந்திக்க வேண்டுமென்று நச்சரித்துக் கொண்டிருக்கிறார். நான் என்ன செய்வது?” என்று பாதுகாப்பு அதிகாரி கேட்க மறுமுனையிலிருந்து என்ன பதில் வந்ததோ தெரியாது பாதுகாப்பு அதிகாரி எழுந்து நின்று மிகவும் தாழ்மையான குரலில் ”ஆம் அப்படியே செய்கிறேன், ஐயா” என்றான். “என்னை மன்னித்துக் கொள்ளுங்கள் பெரியவரே, நீங்கள் யாரென்று தெரியாமல் தவறாகப் பேசிவிட்டேன்” என்று சொன்ன பாதுகாப்பு அதிகாரி தீர்க்கதரிசியின் கைகளைப் பிடித்து “வாருங்கள் ஐயா!” என்று மரியாதையாக அழைத்துக் கொண்டு போனான்.

பாதுகாப்பு அதிகாரி கதவைத் தட்டியதும் கதவைத் திறந்த புதிய தீர்க்கதரிசி எதிர்பாராத விதத்தில் தீர்க்கதரிசியின் கழுத்திலே ஆளுயர பூமாலையொன்றைப் போட நடப்பதெல்லாம் கனவிலே நடப்பது போல் இருந்தது. மாலையின் பாரந்தாங்காமல் தலையைக் குனிந்த தீர்க்கதரிசி நிமிர்ந்து புதிய தீர்க்கதரிசியின் முகத்தைப் பார்க்க அவருக்கு துாக்கிவாரிப் போட்டது. நடுவிலே வகிடு எடுத்து, எண்ணெய் போட்டுத் தலைசீவி, நறுமணங்கமழ கம்பீரமான வாலிபனாக நின்றான் கிறுக்குச்சீடன். அவனிடம் பணக்கார தேஜஸ் இருந்தது. என்ன பேசுவதென்றே தெரியாமல் கொஞ்சநேரம் மலைத்துப்போய் அவனையே பார்த்துக் கொண்டிருந்தார் தீர்க்கதரிசி.

“குருவே, நீங்கள் எப்போதாவது இங்கே வருவீர்கள் என்று எனக்குத் தெரியும். ஒவ்வொரு நாளும் வழிமேல்விழி வைத்து பார்த்துக் கொண்டிருப்பேன். கடவுள் உங்களை இங்கே கொண்டு வந்து சேர்த்து விட்டார்” என்று சொன்னான் கிறுக்குச்சீடன். அதன் பிறகு தீர்க்கதரிசி அழகிய அறையொன்றிக்கு அழைத்துச் செல்லப்பட்டு அவருக்கு ராஜமரியாதை நடந்து, இளம்பெண்கள் அவருக்குப் பானம் பரிமாறனார்கள்; பாரசீகக் கம்பளத்தை விரித்தார்கள்; புதிய ஆடைகள் கொடுத்தார்கள். காட்டுமணம் என்பதே அங்கு இருக்கவில்லை, எங்கும் கஸ்துாரி நறுமணம் கமழ்ந்து, அது நாசியை ஊடுருவிப் பாய்ந்தது. கேட்க வேண்டிய எல்லாக் கேள்விகளையும் மறந்த தீர்க்கதரிசி திடுதிடுத்துப் போனார். கிறுக்குச்சீடன் ராஜகம்பீரமிக்க தலைவனாக அவருக்குத் தோற்றமளித்தான். அவனைச் சுற்றி பெரிய மனிதர்கள்

வலம் வந்தார்கள். அவர்கள் நாணயத்தாள்களையும், ஜொலிக்கும் ஆபரணங்களையும் அவனுக்கு அர்ப்பணிக்கத் தயாராக இருந்தார்கள். கிறுக்குச்சீடன் அவர்களை ஆசிர்வதித்தான். ஆசிர்வதிப்பதில் கூட ஓர் அழகும் நளினமும் மிளிர்ந்தது.

“குருவே, சிஷ்யனாக தங்களுக்குப் பணிவிடை செய்த அவ்வளவு காலமும் நான் உங்களுக்காக எதுவும் செய்யவில்லை. இப்போது ஒரு கைம்மாறு செய்ய விரும்புகிறேன். நீங்கள் அதற்குச் சம்மதிக்க வேண்டும்” என்று பீடிகையோடு ஆரம்பித்தான் கிறுக்குச்சீடன்.

“என்னப்பா சொல்கிறாய்? நீ சொல்வது எதுவும் எனக்குப் புரியவில்லையே”

கிறுக்குச்சீடன் கண்களை அசைத்ததும் இரண்டு இளம்பெண்கள் அரசர்கள் அமரக்கூடிய சிம்மாசனமொன்றை அறைக்குக் கொண்டு வந்தார்கள். அழகிய வேலைப்பாடுகளுடன் செதுக்கப்பட்ட பொன்னிறத்தில் பளபளத்து மின்னும் ஆடம்பர ஆசனம் அது. “குருவே, இந்தக் கதிரையில் நீங்கள் நிரந்தரமாக அமரவேண்டும். நாம் இருவரும் சேர்ந்து மக்களுக்கு அருளும் ஆசீர்வாதமும் வழங்கலாம்” என்றான் கிறுக்குச்சீடன். “நீ இப்போது பெரிய ஆள். யாராலும் எட்டமுடியாத உச்சத்திற்குப் போய்விட்டாய், உன்னுடைய வாயிலிருந்து உதிரக்கூடிய சொற்கள் ஒவ்வொன்றிற்காகவும் பணநோட்டுக்களை வீசியெறிய பணக்காரப் பிரபுக்கள் காத்துக் கொண்டிருக்கிறார்கள். அப்படிபட்ட உனக்கு என்னால் என்ன உதவிதான் செய்திட முடியும்?” என்று அங்கலாய்ப்புடன் சொன்னார் தீர்க்கதரிசி.

“நீங்கள் ஒன்றுமே செய்யவேண்டியதில்லை. உங்களுக்கு ஏஸிபோட்ட அறை ஏற்பாடு செய்து தருகிறேன். மடிக்கணணி, கைக்தொலைபேசி எல்லாம் தருகிறேன். தொலைக்காட்சி, சிடிபிளயர் தருகிறேன். வெந்நீர்குளிப்பு ஏற்பாடு செய்து தருகிறேன். வாசிப்பதற்கு பத்திரிகை, அணிய ஆடைகள் வழங்குகிறேன்“ என்று அடுக்கிக் கொண்டே போனான் கிறுக்குச்சீடன். “இவ்வளவும் எனக்கா? என்று திகைப்பில் ஆழ்ந்த தீர்க்கதரிசி “அதுசரி நான் என்ன செய்ய வேண்டும்?” என்று கேட்டார்.

“நீங்கள்தான் என்னுடைய PRO”

“PRO” என்றால் என்ன?”

“பொதுசனத் தொடர்பு அதிகாரி. என்னைச் சந்திக்க பெரிய பெரிய ஜாம்பவான்கள் எல்லாம் வருவார்கள். அவர்கள் உங்களைத் தான் முதன்முதலில் சந்திப்பார்கள். நீங்கள் அவர்களுக்கான சந்திப்பு நேரத்தை ஒதுக்க வேண்டும். அவர்களுக்குத் தேவையான் தகவல்களையும் விளக்கங்களையும் சொல்ல வேண்டும், அவ்வளவுதான்” என்றான் கிறுக்குச்சீடன். தீர்க்கதரிசி கண்ணீர் மல்க அவனைப் பார்த்தார். குருவுக்கு இப்படிக் கைம்மாறு செய்த சிஷ்யனை

அவர் எந்த வரலாற்றிலும் கேட்டதுமில்லை, கண்டதுமில்லை. “நீ ஒரு தங்கக்கட்டி” என்றார் தீர்க்கதரிசி நன்றியறிதலுடன். அவர் கிறுக்குச்சீடனின் காலில் விழுந்து நன்றி சொல்லியிருப்பார், ஆனால் வெட்கம் வந்து அவரைத் தடுத்தது. இப்போது நேர்த்தியாக கேசத்தை கத்தரித்து, முகத்தில் பவுடர் தடவி, மடிப்புக் குலையாத ஆடைகள் அணிந்து, Polishபண்ணி பளபளக்கும் சப்பாத்துடன், செல்போனும் கையுமாக ஜாலியாக அமர்ந்திருக்கிறார் தீர்க்கதரிசி; சுழலும் கதிரையில் சுழல்கிறார். இப்போது அவரைச் சந்திக்கக்கூட Appointment எடுக்கவேண்டும். பழைய ஆச்சிரமத்தை நல்லதொரு விலைக்கு விற்று அந்தப் பணத்தையும் வங்கி நிரந்தர வைப்பில் போட்டு வைத்திருக்கிறார் தீர்க்கதரிசி.



# நாகபாம்பு மனைவி

எம்.எம்.நௌஷாத்

மனித நடமாட்டமில்லாத ஒற்றையடிப் பாதையில் நான் தனியாக நடந்து போனேன். நிறைய பிசாசுப் பூக்கள் இருந்தன. பிசாசுப்பூக்கள் காற்றில் சலசலத்ததும், பூமணம் நாசியைத் துளைத்ததும் நான் ஆடிப்போனேன். சிறுவயதில் பிசாசுக் குப் பயந்து ஓடியதைப்போல் வேகமாக நடந்தேன். முடியவில்லை, தள்ளாடி னேன். நூறுக்கு மேல் துடிப்பு ஏறி யிருக்கும், இதயமடித்திடும் ஒலி கேட் டது. இருமருங்கிலும் அடர்ந்த காட்டு மரங்கள். காற்றோடு பேசுவதும், பாம்புகள் கிசுகிசுப்பதும், படர்ந்த கொடிகள் நளினத்துடன் ஆடுவதும், ஐயகோ! கதை கேட்பவளே, ஒளியிலும் கடிதாக என்விழிகளுக்கு தென்படு! நான் அச்சத்தால் விதிர்விதிர்த்துப் போயிருக்கிறேன் என்று கூவினேன். எவ்வளவு கூவிடினும் கதை கேட்பவள் கண்களுக்குத் தென்படாள். அவள் குடியிருப்பதோ தொலைதூரம், வனாந்தரத்தின் அந்தக் கோடி, நான் நடந்தேன். கடவுளே நான் களைக்கக்கூடாது. கதை கேட்கும் பெண்மணியை நான் கண்டே ஆகவேண்டும். என் காயப்பட்ட உள்ளத்திலே புதைந்து போயிருக்கும் துயரங்களையெல்லாம் அவளிடம் கொட்டித்தீர்த்து விடவேண்டும். உன் பாதங்கள் வீங்கினாலும் நட! நட! நட!

“கௌரவ பெண்மணி அவர்களே, கதை கேட்பவள் என்று சொல்வது உங்களைத்தானே” “நிச்சயம் நான்தான், இந்த வனாந்தரத்திலே என்னைத் தவிர வேறு யாருமே வாழவில்லை” “என் கதையை விடத் துயரம் தான். கதையை நான் சொல்லாமல் விடுகிறேன்” “இவ்வளவு வந்து விட்டு வெறும் கையோடு செல்லவா போகிறீர்கள்? அப்படியல்ல, சொல்லுங்கள். உங்கள் மனப்பாரம் குறைந்தால் நான் மிகப் பெரிய சந்தோஷத்தை அடைவேன்.”

“ம்..” என்று ஆரம்பித்தேன் நான்.

“ஆனால் ஒரு நிபந்தனை...”

“சொல்லுங்கள்”

“இங்கே பொய் பேசக்கூடாது. எப்படிப்பட்ட வாழ்க்கையாக இருந்தாலும் உண்மையை மட்டுமே சொல்ல வேண்டும்”

“தங்கள் நிபந்தனையை ஏற்றுக்கொள்கிறேன். என்னுடைய கதை நெடுங்கதை. உங்களுக்கு முழுசாகக் கேட்க நேரமிருக்குமோ தெரியாது”

“உங்கள் கதையை முழுமையாகச் சொல்லலாம். என் தொழிலே கதைகேட்பது தான்”

“நான் சொல்லப்போகும் கதை என் மனைவியைப் பற்றிய கதை. அவள் கெட்டவள்” என்று பீடிகையுடன் ஆரம்பித்தேன் நான். “பயப்பட வேண்டாம். நான் கதை கேட்பவள் மட்டுமே. நீங்கள் எதையும் வெளிப்படையாகப் பேசலாம். மனிதர்கள் என்றாலே அப்படித்தான். நான் யாரையும் தவறாக எண்ணுவதில்லை” என்றாள் பெண்மணி.

“கல்யாணமென்றால் நட்சத்திரம் உதிர்க்கும் பூவிதழ்கள் என்று நண்பர்கள் சொன்னார்கள். நானும் திருமணம் செய்தேன். கடைசியில்

என் வாழ்க்கை வானம் தூக்கி எறிந்த எரிகற்கள் போல ஆகிவிட்டது" என்றேன் நான்.

"என்ன நடந்தது?"

"என் மனைவி என்னைப் புரிந்து கொள்ளவில்லை. என் ஆசைகளை, விருப்பங்களை அறிந்து கொள்ளாமல் அவள் நடந்தாள். கனவானாக அவள் என்னை நடத்தாவிட்டால் பரவாயில்லை. கணவனாகக் கூட அவள் என்னை மதிக்கவில்லை. சந்தோஷமேயில்லாமல் வாழ்க்கை நடத்தினேன் நான்"

"அப்படி மோசமானவளா அவள்?"

"அவளைப்பற்றி உங்களுக்குத் தெரியாது. அவள் பாம்புப்பேய் பிடித்து அலைந்தாள்"

"பாம்புப் பேயா?"

"நடந்ததைச் சொல்கிறேன் கேளுங்கள், நீங்கள் நம்பவே மாட்டீர்கள். திருமணம் முடித்து மூன்று மாதங்களில் ஆரம்பமானது. ஒருநாள் அதிகாலையில் வீட்டுக்கு வெளியே சப்தம் கேட்டது. படுக்கையைப் பார்க்க மனைவியைக் காணவில்லை. வெளியே சென்று பார்த்தபோது முற்றத்தில் பாம்பாட்டி மகுடி ஊதிக் கொண்டிருக்க பாம்பு படமெடுத்து ஆடியது. மனைவியைப் பார்த்தேன். அவளும் பாம்பைப்போல நளினமெடுத்து ஆடிக் கொண்டிருந்தாள்"

"அற்புதம்.. அற்புதம்.."

"அற்புதமில்லை, அசிங்கம். நான் கூனிக்குறுகிப் போய் இது என்ன கேவலமான நடனம் என்று கோபமாகக் கேட்க பாம்பு படமெடுத்தாடுவதைப் பார்த்தீர்களா? எவ்வளவு நளினம்! எத்துணை அழகு நீங்களும் ரசியுங்களேன்" என்று செல்லமாக விகசித்தாள் மனைவி. "சுற்றிப் பார்த்தாயா? உன்னை எத்தனை பேர் வேடிக்கை பார்த்துக் கொண்டிருக்கிறார்கள் தெரியுமா? பாம்பு படமெடுத்தாடுவது அழகான விஷயமா? என்னையும் ரசிக்கச் சொல்கிறாயா? எனக்கும் மூளை பிசகிவிட்டது என்று நினைத்தாயா?" என்று வெஞ்சினத்துடன் பேசிக் கொண்டே போனேன் நான். "ஆத்திரப்படுவதற்கு இதிலே என்ன இருக்கிறது? இயற்கையிலுள்ள எல்லா விஷயங்களும் அழகானவை, பிரமிக்கத்தக்க அளவுக்கு அற்புதமானவை. அவற்றை நாம் ரசிக்கக் கற்றுக்கொள்ள வேண்டும்" என்று பதிலளித்தாள் அவள்.

'பாம்புகள் மீது இத்துணை அதீத பிரமை வைத்திருக்கிறாயே. பாம்பை சமைத்துத் தந்தால் சாப்பிடுவாயா?' என்று நான் கோபத்தை அடக்கவொண்ணாமல் கேட்டேன். அவ்வளவு தான், வெறுப்புமிழ என்னைப் பார்த்தாளே பார்வை. சிலகணங்கள் தான், வாந்தி எடுக்க ஆரம்பித்து விட்டாள் அவள். நிற்கவே நிற்காத, நிறுத்தவே முடியாத வாந்தி. குடல் குலைகுலையாக வெளியே வந்துவிடுமோ என்ற அளவிற்கு வாந்தி. நான் நன்றாகப் பயந்து போய் வாந்தியை நிறுத்திவிடு நிறுத்திவிடு என்று பதட்டத்துடன் கூச்சலிட்டேன். அவளால் பேசமுடியவில்லை. வாந்தி வந்து கொண்டேயிருந்தது. நான்

டாக்டரிடம் ஓட 'உங்கள் மனைவி கர்ப்பமாயிருக்கிறாள்' என்று டாக்டர் சொல்லவும் நான் அளவற்ற மகிழ்சியடைந்தேன். என்றாலும் மனதிற்குள் மெல்லிய கோபமிருந்தது. நான் நடந்த சம்பவங்கள் அனைத்தையும் டாக்டரிடம் ஒப்புவித்தேன். 'இந்த விஷயத்தை ஏன் குழந்தைத்தனமாக எடுத்துக் கொள்ளக் கூடாது?' என்று என்னிடம் கேள்வியைத் திருப்பிப் போட்டார் டாக்டர்.

தினங்கள் அமைதியாகக் கழிந்தன என்றாலும் அலுமாரியை அவள் அடிக்கடி திறந்து மூடுவதை அவதானித்த எனக்கு சுருக்கென்றது. ஏதோ பார்க்கக் கூடாத ஒன்று உள்ளேயிருப்பதாக உள்ளுணர்வு கூறவே மனைவி இல்லாத நேரம் அலுமாரியைத் திறந்த நான் அதிர்ச்சியடைந்தேன். உள்ளே நிறையப் புகைப்படங்கள், ஓவியங்கள், குறிப்புகள், பட விளக்கங்கள், கட்டுரைகள், விஞ்ஞானக் குறியீடுகள். அத்தனையும் சர்ப்பங்கள் சம்பந்தமான விவரத் திரட்டுகள். கருநீலம், கபிலம், பச்சை, செம்மஞ்சள் என்று வர்ணக்கலவையில் தோய்த்த பாம்புகளின் தலையோவியங்கள். எனக்கு மயக்கம் வந்துவிடும் போலிருந்தது. பொறுக்க முடியாமல் அத்தனையையும் குவித்து தீயிட்டுப் பொசுக்கிய நான் நண்பனிடம் மனைவியைத் தண்டிக்க ஆலோசனை கேட்க மனைவியைத் தண்டிக்க வேண்டிய காரணம் எதுவுமில்லை. கர்ப்ப காலத்திலே உண்டாகக் கூடிய Puerberal Psychosis என்றொரு நோய் இருக்கிறது. அந்த நோய் காரணமாக அவள் இப்படி நடந்து கொண்டிருக்கலாம். எனவே மனைவியை உளநோய் வைத்திய நிபுணரிடம் அழைத்துச் செல்லுமாறு உபதேசித்தான் நண்பன்.

அவளைப் பரிசோதித்த உளவியல் நிபுணர் 'உங்கள் மனைவி எந்தவித உளநோயாலும் பீடிக்கப்படவில்லை. அவள் சாதாரண பெண்ணாகத் தான் இருக்கிறாள். அவளுக்கு பாம்புகளை நிறையப் பிடிக்கிறது. அவ்வளவுதான்' என்றார்.

'டாக்டர் அவள் சாதாரண பெண் என்று நீங்கள் சொல்வதை நான் ஒப்புக் கொள்ளமாட்டேன். என் மனைவியை ஆழ்நிலைத் தூக்கத்திற்கு உட்படுத்தி சிறு பிராயத்தில் பாம்பு சம்பந்தப்பட்ட அசம்பாவிதங்கள் எதுவும் நடந்திருக்கலாமோ என்று பார்க்க முடியாதா டாக்டர்?'

'நீங்கள் அபாரமான கற்பனைவாதி, அனாவசியமாக சந்தேகப்படுகிறீர்கள். உங்கள் மனைவியை ஆழ்நிலைத் தூக்கத்திற்கு உட்படுத்த வேண்டிய எந்தத் தேவையும் இப்போதைக்கில்லை. கர்ப்பிணியான அவளுக்கு அது நல்லதுமல்ல. நீங்கள் கவலைப்படாமல் வீடு செல்லுங்கள்' என்று என் தோளில் தட்டியவாறே சொன்ன டாக்டர் 'அது சரி வேதாளம் என்றால் உங்களுக்கு நல்ல விருப்பம் போல' என்று போனாம்போக்கில் சொன்னார்.

'எப்படி டாக்டர் கண்டுபிடித்தீர்கள்?'

'உங்கள் ரீஷேர்ட்டைப் பார்த்துத்தான். அதிலே வேதாளம் ஒன்று பறந்து செல்கிறது. அதற்குக் கீழே சுலோகம்- *என் இதயத்தைக் தொட்ட வேதாளமே.* நான் சிரித்தேன்.
'அது என்னவென்றால் நான் சீனத் தூதரகத்தில் கொஞ்சநாள் பணியாற்றியதால் வேதாளம் எனக்கு பிடித்தது'
'நீங்கள் வேதாளத்தை விரும்பும்போது உங்கள் மனைவி ஏன் சர்ப்பத்தை விரும்பக்கூடாது?' என்று கேட்டுவிட்டு டாக்டர் என்னைப் பார்தது புன்னகைத்தார். அவர் ஏதோவொன்றை மறைக்க முயல்வது போல் எனக்குத் தோன்றிற்று.

என்னுடைய மனைவி சூனியக்காரியாக இருப்பாளோ? பாம்புகளை வசியப்படுத்தி எதிரிகளை கொல்வதற்காக ஏவிவிடும் சூனியக்காரிகளைப் பற்றி நிறைய நான் கேள்விப் பட்டிருந்தேன். இவளும் அப்படியான ஒருத்தியாக இருப்பாளோ? என்னைக் கொல்ல முயற்சிக்கிறாளோ? என்று எல்லாக் கேள்விகளும் என்மனதைக் குடைந்து ஆட்டிப்படைத்தன. ஓன்பது மாதங்கள் கழித்து என் மனைவிக்கு ஆண்மகவு ஒன்று பிறந்தது. நான் பயந்ததுபோல் பாம்பாகவோ வேதாளமாகவோ இல்லாமல் குழந்தை இலட்சணமாக கொழுகொழுவென்று இருந்தது. என் மனைவி குழந்தையுடன் ஒன்றிவிட்டாள். நானும் ஒன்றிவிட்டேன். அவள் பாம்பு காண்டத்திலிருந்து மீண்டு விட்டாள் என்ற மகிழ்சித் திளைப்பில் நானிருந்தாலும் அந்த மகிழ்ச்சி நீண்டநாள் நீடிக்கவில்லை. குழந்தையின் பிறந்ததினத்திற்கு என்னுடைய நண்பனையும் அழைத்திருந்தேன். அவன் பல்கலைக்கழகத்திலே விலங்கியல் விரிவுரையாளராகக் கடமையாற்றிக் கொண்டிருந்தான். வண்ணவணணமாகச் செய்யப்பட்ட பிறந்தநாள் கேக்கை சுற்றிச் சுற்றி அவன் வலம் வந்து கொண்டிருக்கவே 'நீ குட்டிபோட்ட பூனையா?' என்று கேட்டேன் நான்.
"கேக் மிகமிக அழகாத்தான் இருக்கிறது"
"நன்றி"
"கேக்கை நீ நன்றாக அவதானித்தாயா?"
'குழந்தையின் பெயர் பொறிக்கப்பட்டிருக்கிறது. நஜாநஜா வேறென்ன?'
'சொல்கிறேனென்று கோபித்துக் கொள்ளாதே, எந்தக் கோணத்திலிருந்து பார்த்தாலும் கேக்கின் வடிவம் நாகப்பாம்பின் தலையைப் போலிருக்கிறது. அதுதான் சுற்றிச் சுற்றிப் பார்த்தேன்' என்றான் நண்பன். என் முகம் போனபோக்கைக் பார்க்கவேண்டுமே எட்டுக்கோணலாக.

'குழந்தையின் பெயர் நஜாநஜா தானே'
"அதுதான் கேக்மீது அழகாகப் போடப்பட்டிருந்ததே?"
"யார் இந்தப் பெயரை வைத்தது?" "மனைவி தான் இந்தப் பெயரைத் தெரிவுசெய்து தந்தாள். அழகாக இருந்தது. நானும் ஒத்துக்கொண்டேன்" என்றேன் நான். என்னை ஒதுக்குப்புறத்திற்கு

அழைத்துச் சென்ற நண்பன், 'என்னைத் தவறாக நினைத்துக் கொள்ளாதே உன் மனைவியிடம் ஏதோவொரு கோளாறு இருக்கிறது. நல்ல டாக்டர் ஒருவரிடம் காட்டி சரி செய்துகொள்வது நல்லது' என்றான் கிசுகிசுத்த குரலில். நான் முகம் கறுத்துப் போனவனாக அவனைப் பார்த்தேன்.
'ஏன் அவள் ஏதும் தவறு செய்துவிட்டாளா? உன்னை நன்றாக உபசரிக்கவில்லையா?' "அப்படியொன்றுமல்ல, நஜாநஜா என்பது நாகபாம்பின் விஞ்ஞானப்பெயர். கேக்குக்கூட நாகபாம்பு வடிவத்தில் இருக்கிறது. எனக்கென்றால் இந்த இரண்டிற்கும் ஏதோ தொடர்பு இருப்பதுபோல் தோன்றுகிறது" என்றான் அவன்.

அன்றிரவு எனக்கு தூக்கமே வரவில்லை. நடுநசியில் படுக்கையை விட்டெழுந்து வீட்டுச் சாமான்களைத் தாறுமாறாக அங்குமிங்கும் வீசியெறிந்த நான் அலங்கார பூச்சாடிகளையெல்லாம் கீழேபோட்டு உடைத்தேன்; கதவுகள் மீது முஷ்டிகளால் தாக்கினேன். தூக்கக் கலக்கத்தில் எழுந்த மனைவி, 'இங்கே என்ன நடக்கிறது? உங்களுக்கு பைத்தியமா பிடித்துவிட்டது?' என்று கேட்டாள். உன்னைப் பாம்புப் பிசாசு பிடித்து ஆட்டுகிறது, என்னைப் பைத்தியம் பிடித்து ஆட்டுகிறது' என்றேன் நான் கோபத்துடன்.
'எனக்கென்றால் நீங்கள்பேசுவது ஒன்றும் புரியவேயில்லை'
"எதற்காக பிறந்தநாள் கேக்கை நாகபாம்பு வடிவத்தில் செய்தாய்? என்று என் நண்பன் கேட்கிறான். நான் எப்படி **கூனிக்குறுகி** அவமானப்போட்டு போனேன் தெரியுமா?"
"நீங்கள் ஏதேதோ வீணான கற்பனையில் பிதற்றுகிறீர்கள். நன்றாகப் பார்த்தீர்களா? அது ஓர்கிட்மலர் வடிவத்தில் இருக்கிறது. என்னுடைய தோழிகள் எல்லோரும் பெருமையாக என்னைப் பாராட்டினார்கள். உங்கள் நண்பருக்கு அப்படித் தோன்றியதற்கு நான் என்ன செய்யமுடியும்?"
"சரி அப்படியே இருந்து விட்டுப்போகட்டும், குழந்தைக்கு ஏன் நாகப்பாம்பின் பெயரைத் தெரிவு செய்துகொண்டு வந்தாய்?"
"என்ன உளறுகிறீர்கள்?" "நான் உளறுகிறேனா? என்னிடம் நாடகமாடாதே, நஜாநஜா என்றால் என்ன அர்த்தம் தெரியுமா? நாகபாம்பு''
"எனக்கு இந்த அர்த்தமெல்லாம் நிச்சயமாகத் தெரியாது. இந்தப் பெயரை வைக்கச்சொன்னதே எங்கள் வீட்டிற்கு வந்த உங்கள் அரேபியநண்பர் தான். நீங்களும் அதற்குச் சரியென்று தலையாட்டினீர்கள். இப்பொது என்னவென்றால் நடந்தது எல்லாவற்றையும் சுத்தமாக மறந்துவீட்டீர்கள்'' என்றாள் மனைவி. அவள் எவ்வளவுதான் சொன்னாலும் இவளின் சாக்குப் போக்கை ஏற்றுக்கொள்ள நான் முட்டாள் அல்ல. அன்றைய இரவு எங்கள் இருவருக்குமிடையில் ஏற்பட்ட விரிசல் வாழ்க்கை அத்திவாரத்தையே தகர்ப்பதற்காக போடப்பட்ட அடித்தளம் என்று நான் திடமாக

நம்பினேன். இன்னும் அவிழ்க்க முடியாத என்னென்ன முடிச்சுக்களை இவள் புதைத்து வைத்திருக்கிறாளோ? குழந்தை வளரவளர விளையாட்டுச் சாமான்கள் என்ற தோரணையில் பாம்புப் பொம்மைகளை வாங்கிக் கொடுக்க ஆரம்பித்தாள் மனைவி. நான் வாங்கிக்கொடுத்த கரடிப் பொம்மைகளையும், பார்பிப் பொம்மைகளையும் குப்பைக்கூடைக்குள் தூக்கியெறிந்த சிறுமி பாம்புப் பொம்மை என்றால் விரும்பி விளையாடினாள். என் குழந்தையையும் நீ கெடுத்துவிட்டாய் என்று மனைவியை கடிந்தேன். எல்லாம் ஒருநாள் முடிவுக்கு வரும் என்று சொல்வதைப்போல் எல்லாம் ஒருநாள் முடிவுக்கு வந்தது. நான் கதையை நிறுத்திவிட்டு பெண்மணியைப் பார்த்தேன். அவள் கண்களை மூடியிருந்தாள். தூங்கிவிட்டாளா?

“பெண்மணி” என்று நான் மெதுவாக அழைக்க “நான் தூங்கவில்லை. உங்கள் கதையை அட்சரம் பிசகாமல் கேட்டுக்கொண்டு தான் இருக்கிறேன். அலுப்பாக இருந்தால் பக்கத்தில் நீரோடை இருக்கிறது. போய் நீராடிவிட்டு வாருங்கள்” என்றாள் பெண்மணி. ‘நீங்கள் சொல்வதும் நல்ல யோசனைதான். உடம்பிற்கும் மனதிற்கும் உற்சாகமாகவும் இருக்கும்...’ என்று நான் சொல்ல ஆமாம் ஆமாம் என்று தலையாட்டியவள் ‘உடம்பில் புத்துணர்ச்சி ஏற்பட்டால் எல்லாக் கவலைகளும் பறந்துவிடும்’ என்றாள். ‘நீரோடை எந்தப் பக்கம் இருக்கிறது?’ “சூரியனின் திசையைப் பார்த்துக் கொண்டே செல்லுங்கள். இருநூறுமீற்றர் தூரம் போனால் கற்பாறை வரும். அந்தக் கற்பாறைக்கு பாம்புக்கற்பாறை என்று பெயர். அந்தக் கற்பாறையோடு ஒட்டினாற்போல் நீரோடையைக் காணலாம்’ என்றாள் பெண்மணி. இது என்னடா, மீண்டும் பாம்பா? காலைச் சுற்றிய பாம்பு உன்னைக் கடிக்காமல் செல்ல மாட்டேன் என்று அடம்பிடிப்பது போல் எனக்குத் தோன்றிற்று. பாம்புக் கற்பாறைக்கருகில் இருந்த நாகமரத்திற்குக் கீழே நாவற் பழங்கள் சிதறிக் கிடந்தன. பாடசாலைப் பிராயத்தில் நண்பர்களோடு சேர்ந்து நாவற்பழங்கள் சாப்பிட்ட ஞாபகத்தோடு நாவற்பழங்களைப் பொறுக்க ஆரம்பித்தேன். பெண்மணிக்காகவும் கொஞ்சம் பழங்களைச் சேகரித்துக் கொண்டேன்.

நான் கொடுத்த நாவற்பழங்களை பெண்மணி மறுக்காமல் வாங்கிக் கொண்டாள். ‘எனக்கு நாவற்பழங்கள் மீது அவ்வளவாக விருப்பம் கிடையாது. நீங்கள் அன்புடன் தருவதால் நான் சாப்பிடுகிறேன்’ என்றாள் பெண்மணி. ‘நீங்கள் சொல்வதன் அர்த்தம் எனக்குப் புரியவில்லை’ ‘வாழ்க்கை மகிழ்ச்சியாக அமைய வேண்டுமென்றால் எல்லாச் சின்ன விஷயங்களுக்கும் அர்த்தம் தேடிக்கொண்டிருக்கக் கூடாது. சின்னச்சின்ன முட்டாள்தனங்களையும் செய்யவேண்டும். அவைகளை ரசிக்கக் கற்றுக்கொள்ளவும் வேண்டும்’
‘முட்டாள் என்று சொல்லமாட்டார்களா?’

‘இப்போது நான் உங்கள் வாழ்க்கைக் கதைக்கு காதுகொடுத்துக் கொண்டிருக்கிறேனே. அது எவ்வளவு பெரிய முட்டாள்தனம் என்று யோசித்துப் பார்த்தீர்களா? உங்கள் கதையை என்னிடம் சொல்வதன் மூலம் நீங்கள் சந்தோஷமடைகிறீர்கள் என்றால் அந்த முட்டாள்தனத்தை நான் மனசார செய்ய விரும்புகிறேன்’ என்றாள் பெண்மணி.

“அப்படியென்றால் கதை சொல்வதை நிறுத்திவிடவா?”

‘இல்லையில்லை. அப்படி அர்த்தப்படுத்திக் கொள்ளவேண்டாம். நீங்கள் சொல்லுங்கள். நான் ஆர்வத்தோடு கேட்டுக் கொண்டிருக்கிறேன்’

“நன்றி, எங்கே நிறுத்தினேன்? திருப்பத்தில்... அந்தத் திருப்பம் என்னவென்றால் நான் வீட்டுக்கு பேயோட்டியை அழைத்துவந்தேன்”

“ஓ! நல்லதொரு திருப்பம் தான். அதுசரி எதற்காகப் பேயோட்டி?”

“நான் டாக்டர்களை மலைபோல் நம்பினாலும் அவர்களால் என் மனைவியின் நோயைக் கண்டுபிடிக்கத் தெரியவில்லை. அதனால்தான் பேயோட்டியை கூட்டிக்கொண்டு வந்து மனைவியைப் பீடித்துள்ள பாம்புப் பேயை ஓட்டநினைத்தேன்”

“ம்.. மேலே சொல்லுங்கள்”

“பேயோட்டி சரியான கெட்டிக்காரன். என் மனைவிக்கு என்ன நடந்தது என்பதை அவன்தான் சரியாக கண்டுபிடித்துச் சொன்னான்”

“என்ன நடந்தது?”

“என் மனைவி அவளுடைய தாயாரின் வயிற்றில் குழந்தையாக இருக்கும்போது தாயார் விறகு வெட்ட காட்டிற்கு தனியாகப் போயிருக்கிறாள். போகின்ற வழியிலே தற்செயலாக அவள் ஒருநாகத்தை மிதிக்க அது அவளைத் தீண்டியிருக்கிறது. அவள் உயிர்பிழைத்து விட்டாள். நாகப்பாம்பை ஊரார் அடித்துக் கொன்றிருக்கிறார்கள். இறந்த நாகத்தின் ஆவிதான் என் மனைவியின் உடலில் புகுந்து படாதபாடுபடுத்தியது”

“மிகவும் சுவையான கதை”

“பேயோட்டி மந்திரங்களை உச்சாடனம் செய்து மனைவியின் உடம்பில் புகுந்திருந்த நாக பாம்புப்பேயை எப்படியோ ஓட்டிவிட்டான். அதற்குப் பிறகு மனவை பாம்பைப் பற்றி பேசாததால் நானும் மகிழ்சியாக இருந்தேன்; மனைவியும் சந்தோஷமாக இருந்தாள்; என்மகளும் சந்தோஷமாக இருந்தாள்”

நான் கதையைச் சற்றுநேரம் நிறுத்தினேன். காரணம் பெண்மணி எனக்கு கோப்பி போட்டுக்கொண்டு வந்தாள். நறுமணத்துடன் சூடாக ஆவிபறக்கும் கோப்பி. கொஞ்சம் கசப்பு கலந்திருத்தாலும் அது கமகமவென்று சுவையாக இருந்தது. எனக்குப் பிடித்தமான பானம்.

“ஆஹா கமகமவென்று இருக்கிறது. என்னுடைய விருப்பங்களை

அறிந்துகொண்ட மிகச்சிறந்த பெண்மணி நீங்கள்" என்றேன். அவள் பதில் பேசவில்லை. நான் கொண்டுவந்த பெட்டியைத் திறந்தேன்.

'இது என்ன பெட்டி?' என்று பெண்மணி ஆச்சரியத்துடன் கேட்க நான் காட்டினேன். கடிதங்கள், தஸ்தாவேஜுகள், ஓவியங்கள், ஆவணங்கள், புகைப்படங்கள், பொம்மைகள் என்று பெட்டி நிறையைச் சாமான்கள்.
"இவையெல்லாம் என்ன?"
"என்னுடைய மனைவியின் நடத்தையை நிரூபிப்பதற்காகக் கொண்டுவந்த ஆதாரங்கள் தான் இவைகள்"
"அடக் கடவுளே, உங்கள் மனைவி தந்த பரிசுப் பொருட்கள் என்றல்லவா நான் நினைத்தேன்" "அவற்றையெல்லாம் தூக்கியெறிந்து விட்டேன்"
"ஏன்?"
"என் மனைவியின் ஞாபகங்கள் அத்தனையையும் என் உள்ளத்திலிருந்து முற்றாகத் துடைத்து விட்டேன். அதன்பிறகு எதற்கு பரிசுப்பொருட்கள்?"
' திருமண போட்டோ கூடவா இல்லை?'
'அதனையும் எரித்து விட்டேன்'
'கணவன் என்பதற்கு அச்சொட்டான வரைவிலக்கணம் நீங்கள்' என்று பெண்மணி. சிரிக்க நானும் சிரித்துக் கொண்டே பெட்டிக்குள்ளிலிருந்த கடதாசியை அவளிடம் நீட்டினேன். ஓர் அழகான பூரண நிலவு. அந்த நிலவுக்குள் சிரித்தவாறே நான். நிலவை விழுங்குவதற்காக ஆவென வாயைப் பிளந்தவாறு கர்ணகடூர முகமுள்ள சர்ப்பம் காத்திருக்கிறது. அது என் மனைவி. முப்பது வருடங்களுக்கு முன் நான் வரைந்த ஓவியம். 'பெண்மணியே, இந்த ஓவியத்தைப் பார்த்தீர்களா? இப்படித் தான் அப்போது என் நிலைமை இருந்தது' பெண்மணி இமைவெட்டாமல் பார்த்துக் கொண்டேயிருந்தாள். ஆழமான அமைதி. கதை, பேச்சு எதுவுமே இல்லை. நான் கதையைத் தொடர்ந்தேன்.

'எல்லாவற்றிக்கும் முத்தாய்ப்பு வைப்பதைப் போல் ஜனவரி முதலாந் திகதி புத்தாண்டு தினத்தில் ஒரு சம்பவம் நிகழ்ந்தது. அப்போது இரண்டாவது குழந்தை பிறந்து சரியாக ஆறுமாதம். நான் தின்பண்டப் பொதிகளைச் சுமந்து கொண்டு வீட்டிற்குள் நுழைந்தவேளை மனைவி டிவியில் சினிமா பார்த்துக் கொண்டிருந்தாள். 'என்ன படம்?' என்று நான் கேட்டேன். 'புரபஷர் அனகொண்டா. அற்புதமான திரைக்கதை, பேராசிரியரால் கொல்லப்பட்ட மலைப் பாம்பு ஆவியாகி பேராசிரியரின் உடலிற்குள் புகுந்து கொண்டு ஆட்டிப் படைக்கும் கதை'
'இந்த நல்ல நாளில் இப்படியொரு சினிமா தேவைதானா?'
'உங்களுக்கு விருப்பமில்லையென்றால் பார்க்காதீர்கள்'
'மூத்தவன் எங்கே?'
'விளையாடப் போய்விட்டான்'

'குழந்தை?'
'படுக்கையறைக்குள் பொம்மைகளொடு விளையாடுகிறது' என்றாள் மனைவி.

நான் படுக்கையறைக்குள் நுழைந்தபோது கண்டேன் காட்சி, குழந்தை மூர்ச்சையாகிக் கிடந்தது. பொம்மை ஒருபுறம் கிடக்க, மூலையிலே பாம்பு சுருண்டு படுத்திருந்தது. குழந்தை உயிர் பிழைக்கவும் முடியும், இறந்துபோகவும் முடியும், ஐம்பதுக்கு ஐம்பது என்று டாக்டர் பயமுறுத்தி குழந்தை எப்படியோ உயிர் பிழைத்தாலும் என் ரௌங்காரம் கட்டுமீறியது. டீவிடி பிளேயர், தொலைக்காட்சிப் பெட்டி, வரவேற்பறை அலங்காரச் சாமான்கள் என்று எல்லாவற்றையும் நிலத்திலே தூக்கி அடித்த நான் 'பாம்புபாம்பு என்று பாலூட்டி வளர்த்தாயே, பார்த்தாயா பாம்பினால் நேர்ந்த கொடுமை....' என்று ஏதோதோ பேசிக்கொண்டே போனேன். அவளும் ஏதோ பேசிக்கொண்டே போனாள். அவள் சொல்வதையெல்லாம் கேட்கின்ற நிலைமையில் இருக்காமல் நிதானமிழந்த நான் அவளுடைய கன்னத்திலே பளாரென்று அறைந்தேன், அடித்தேன், அவள் கீழே விழுந்தாள். அப்போதும் கைகள் வலிக்கும்வரை அடித்துக் கொண்டேயிருந்தேன். மனைவியின் உதடுகள், கன்னங்கள் வீங்கின, முரசிலிருந்து இரத்தம் கசிந்தது, மேனிமுழுவதும் கண்டல்காயங்கள். அவள் கதறினாள், கதறினாள், கதறிக்கொண்டேயிருந்தாள். அப்போதும் என் சினம் தணியவேயில்லை.

கதையை நிறுத்தி 'கதை முடிந்துவிட்டது' என்றேன் நான். 'என்ன திடுதிடுப்பென்று கதையை முடித்துவிட்டீர்கள். இன்னும் எவ்வளவோ சொல்ல வேண்டியிருக்கிறதே' என்றாள் பெண்மணி. 'இல்லை கதை இவ்வளவுதான். இதற்குமேலே வரும் சரிதம் வெறும் விவாகரத்துப் படலம் தான். எந்தச் சுவையும் இருக்காது'
'.......'
'நான் அவளை அடித்தது நூற்றுக்கு நூறு சரிதானே'
'கதை கேட்பதுதான் என் தொழில், தீர்ப்புச் சொல்லுவதல்ல. ஆனால் நியாயம் சொல்லுவேன். அதற்கு இயற்கை நீதிக் கோட்பாடொன்று இருக்கிறது. அதன் படி மற்றப் பக்கத்து நியாயங்களையும் கேட்க வேண்டும். அது பிசாசாக இருந்தாலும் சரியே'
'அவள் தான் இங்கு இல்லையே'
'உங்கள் மனைவி சார்பாக நான் உங்களிடம் கொஞ்சம் கேள்விகள் கேட்கிறேன். பதில் சொல்லுங்கள், ஒரு நிபந்தனை. ஒளிவுமறைவு இல்லாமல் பதில்கூறவேண்டும்'
'கேளுங்கள்'
'உங்கள் மனைவி எப்போதாவது பாம்பு வளர்த்திருக்கிறாளா?'
'இல்லை'

‘பாம்புக்கு பாலூட்டியிருக்கிறாளா?’
‘இல்லை’
‘அவள் பாம்புடன் குழந்தையை விளையாடச் சொன்னாளா?’
‘இல்லை’
‘உங்கள் வீட்டுக்கு எப்போதாவது பாம்பு வந்திருக்கிறதா?’
‘இல்லை’
‘அப்படியானால் பாம்பு குழந்தையைத் தீண்டியதற்கும் உங்கள் மனைவிக்கும் எந்தச் சம்பந்தமும் இல்லை’
‘ஆமாம்’
‘உங்கள் மனைவி விரும்பி அருந்தும் பானம் எது என்று தெரியுமா?’
‘தெரியாது’
‘உங்கள் மனைவிக்கு விருப்பான ஆடை எது என்று தெரியுமா?’
‘தெரியாது’
‘உங்கள் மனைவி எந்தக் கடையில் காலணி வாங்குவாள் என்று தெரியுமா?’
‘தெரியாது’
‘சரி போகட்டும். உங்கள் மனைவி காலை எத்தனை மணிக்கு படுக்கையை விட்டு எழுவாள் என்ற விஷயம் தெரியுமா?’
‘தெரியாது’
‘எத்தனை வருடங்கள் அவளோடு வாழ்ந்தீர்கள்?’
‘பத்து வருடங்கள்’
‘இத்தனை வருடங்களும் நீங்கள் உங்கள் மனைவியைப் புரிந்துகொள்ள, அவளுடைய விருப்பங்களை, ஆசைகளைப் புரிந்துகொள்ள ஏன் முயற்சி செய்யவில்லை?’
‘மனைவி என்பவள்தான் கணவனுடைய விருப்பங்களைப் புரிந்துகொண்டு அவருக்குப் பணிவிடை செய்ய வேண்டும்’
‘இப்படி யார் சொன்னது?’
‘பரம்பரை பரம்பரையாக நாங்கள் பின்பற்றி வருகின்ற வாழ்கைநெறி’
‘சரி நீங்கள் சொல்வது சரியென்றே வைத்துக் கொள்வோம். அவள் அப்படி உங்கள் விருப்பங்களைப் புரிந்து கொண்டு நடந்தாளா?’
‘நிச்சயமாக நீங்கள் போட்டுத் தந்தீர்களே சுவையான காப்பி. அது மாதிரி போட்டுத் தருவாள். எந்தெந்த நாட்களில் என்னென்ன ஆடைகளை நான் அணிவேன் என்று அவளுக்குத் தெரியும். அதன்படியே ஆடைகளைத் தயார் செய்வாள். காலை ஆகாரம் சமைப்பாள். சப்பாத்துக்கு பொலிஷ் போட்டுத் தருவாள்..’ என்று அடுக்கிக் கொண்டே போனேன் நான்.
‘அவள் உங்கள் வேலைக்காரி மாதிரி இருந்தாள். ‘ஓரளவுக்கு அப்படியென்றும் சொல்லலாம். மற்ற மனைவிமார்களுக்கு ஆதர்ஷமாக அவள் நடந்து கொண்டாள்’ ‘எஜமானாகிய நீங்கள் வேலைக்காரிக்கு கூலி கொடுப்பதைப்பற்றி எப்போதாவது சிந்தித்துப் பார்த்திருக் கிறீர்களா?’

'விகடமாகப் பேசாதீர்கள். கணவன் மரணமடைந்தபின் எல்லாச் சொத்துக்களும் மனைவிக்குத் தானே போய்ச் சேரப்போகிறது'
'நீங்கள் மரணமடையும் வரை அவள் கூலிக்காகக் காத்திருந்து அதற்குப் பிறகுதான் அவள் வாழ்க்கையே ஆரம்பமாகப் போகிறது'
'அவள் ஜாலியாக வாழட்டுமே யார் கேட்கப் போகிறார்கள்?'
'ஓஹோ..கிழவியான பின் ஜாலியான வாழ்க்கை?'
'....'
'உங்கள் மனைவி பைத்தியக்காரியா?'
'இல்லையில்லை'
'பைத்தியக்காரி மாதிரி நடந்து கொண்டிருக்கிறாளா?'
'உங்கள் கேள்வியின் அர்த்தம் எனக்குப் புரியவில்லை'
'அதாவது வீட்டுச் சாமான்களை வீசிஎறிந்திருக்கிறாளா? உடைத்திருக்கிறாளா? முகம் பார்க்கும் கண்ணாடியை நிலத்தில் போட்டு அடித்திருக்கிறாளா? வீட்டுக் கதவுகளை ஓங்கி உதைத்திருக்கிறாளா? சாப்பாட்டுப் பீங்கானை நாய்க்குப் போட்டிருக்கிறாளா?'
'இல்லை, இல்லவேயில்லை'
'நீங்கள் அத்தனை கைங்கரியங்களையும் செய்திருக்கிறீர்கள்'
'..........'
'சரி.. அடுத்த வினா. நீங்கள் செய்த தவறுக்காக மனைவி உங்கள் கன்னத்தில் அறைந்தால் அச்செயலை நீங்கள் எவ்வாறு எடுத்துக் கொள்வீர்கள்?'
'மனைவி கணவனை அடிப்பதா? எவ்வளவு பாரதூரமான குற்றம்! அன்றைக்கே அவளை நீதிமன்றக் கூண்டிலேற்றி விவாகரத்து கேட்டிருப்பேன்'
'முரட்டுத்தனமாக நீங்கள் மனைவியைத் தாக்குவது மட்டும் எவ்வாறு நீதியாகும்? அவளுடைய பல்லையும் உடைத்திருக்கிறீர்கள். குற்றவியல் கோவையின் படி இது குற்றம், உங்கள் மனைவி உங்களுக்கெதிராக பொலிஸில் முறைப்பாடு செய்தாளா?'
'இப்படி இடக்கு முடக்காகக் கேட்டால் என்னபதில் சொல்வது? மனைவிமார்களைத் திருத்துவதற்காக கணவன்மார்கள் பின்பற்றி வந்த வழிமுறைதான் இது. நான் அவளை அடித்துவிட்டு சும்மா இருந்தேன் என்றா நினைக்கிறீர்கள்? டாக்டரிடம் அவளை அழைத்துச் சென்றேன். காயங்களுக்கு மருந்திட்டேன். அவளுடைய மேனிக்கு ஒத்தடம் போட்டேன்' 'காயங்களுக்கு மருந்திட்டீர்கள் சரி. உள்ளத்தில் ஏற்பட்ட காயத்திற்கு உங்களால் சிகிச்சையளிக்க முடிந்ததா?'
பெண்மணி பைண்டு செய்யப்பட்ட பைலை என் முன்னாலே போட்டாள். 'முடியுமானால் படித்துப் பாருங்கள். உங்களுடைய வியாதி சம்பந்தமான தஸ்தாவேஜ்கள். எப்போதும் மனைவியை சந்தேகப்பட்டுக் கொண்டே இருக்கும் வியாதி. மனைவிக்கு பாடம் கற்பிக்க வேண்டும் என்ற எண்ணக் கருவிலேயே உங்கள் வாழ்க்கை முழுவதும் கழிந்தது. உங்கள் மனவைி உங்களைப் பல தடவை உளவியல் நிபுணரிடம் கொண்டு போயிருக்கிறாள். ஆனால் கடைசிவரை உங்களைக்

குணமாக்க முடியாமலேயே போய்விட்டது' பெண்மணி உண்மைதான் பேசினாள். நான் பேசாமல் இருந்தேன்.
'நீங்கள் வாழ்க்கையில் ஒருதடவையாவது அவளை மனுஷியாக நடத்தியிருக்கிறீர்களா?'
'..........'
'இல்லை என்பதுதானே பதில்'
'ஆமாம், என் மனைவி நல்ல பெண்மணி. அவள் அன்பைச் சொரிந்தாள். நான்தான் முரண்டு பிடிக்கும் முரட்டுக் கணவனாக நடந்திருக்கிறேன். இப்போதே செல்கிறேன். நடந்தவை எல்லாவற்றிக்குமாக நான் அவளிடம் மன்னிப்புக் கேட்கவேண்டும்' என்றேன் நான் தழுததழுத்த குரலில்.

'இன்று எத்தனை தடவை உங்கள் மனைவி நல்ல பெண்மணி என்று சொல்லியிருக்கிறீர்கள். வாழ்கையில் ஒரு தடவையாவது இதனை உங்கள் மனைவியிடம் சொல்லியிருந்தால் அவள் எவ்வளவு சந்தோஷப்பட்டிருப்பாள்' என்று சொன்ன பெண்மணி ஆரஞ்சுநிறமான ஒரு பெட்டியைத் திறந்தாள். பெட்டி நிறைய பரிசுப் பொருட்கள். அத்தனை பரிசுப்பொருட்களையும் அவள் மேசை மீது கொட்டினாள். Titan கைக்கடிகாரம், மெஜண்டாநிற குதிக்காலணி, இரட்டை ரோஜா பதித்த மோதிரம், முயல் வடிவத்திலமைந்த கொண்டைஊசி, இரட்டைவட்ட வளையல், இத்தியாதி, இத்தியாதி.
'இந்தப் பரிசுப் பொருட்கள் உங்களுக்கு ஞாபகம் இருக்கிறதா?'
'நன்றாக ஞாபகம் இருக்கிறது. நான் மகிழ்ச்சியாக இருந்த நாட்களில் மனைவிக்குப் பரிசாகக் கொடுத்த அன்பளிப்புப் பொருட்கள்'
'நீங்கள் இலகுவாக அவளுடைய ஞாபகங்களை உங்கள் உள்ளத்திலிருந்து துடைத்தெறிந்து விட்டீர்கள். அவள் அன்பளிப்பாகத் தந்தவைகளையும் எரித்துப் பொசுக்கி விட்டீர்கள். உங்கள் மனைவியோ இத்தனை வருடங்கள் கழிந்தபின்னரும் உங்கள் ஞாபகமாகவே வாழ்கிறாள். உங்களுக்காகவே வாழ்கிறாள்' என்றாள் பெண்மணி.
'நான் இப்போதே பார்க்க வேண்டும், கதறிக்கதறி அழவேண்டும், அவளிடம் மன்னிப்புக் கேட்க வேண்டும்' என்று தழுதழுத்த குரலில் கூறினேன் நான். 'எல்லாமே முடிந்து விட்டது. நீங்கள் அவளை விவாகரத்துச் செய்து முப்பது வருடங்களாகி விட்டன. அவள் எப்போதோ உள்ளத்தால் செத்துவிட்டாள்' என்று சொன்ன பெண்மணி விசும்பினாள் 'அதற்காக நீங்கள் ஏன் அழுகிறீர்கள்?' என்று நான் ஆச்சரியத்துடன் கேட்க “நான்தான் உங்கள் மனைவி' என்று பதிலளித்தாள் பெண்மணி.

பின்னாலிருந்து யாரோ கூப்பிடுவது போலிருந்தது. திரும்பிப்பார்த்தேன், யாருமில்லை. முன்னால் பார்த்தேன், இடப்பக்கமாக பார்த்தேன், வலப்பக்கமாக பார்த்தேன், எண்திசைகளிலும் யாருமில்லை. யாருமில்லையா? யாரும் என்னை கூப்பிடவில்லையா? கூப்பிட்டது பிரமையா? பிரமையைத்தான் உண்மை என்று நம்பினேனா? குரல் மிகத்தெளிவாக என் காதுகளில் விழுந்ததே. அப்படியென்றால் கூப்பிட்ட குரல் யாருடையது? அது உண்மையிலேயே பிரமையா? பிரமை என்றால் என்மூளை பிசகி விட்டதா? இந்தச் சம்பவம் நிகழும் போது நேரம் அதிகாலை ஐந்து முப்பது. கொஞ்சநேரம் இந்தக் குரல என்னை அலைக்கழித்தது.

வேலைப்பளு காரணமாக மாலையாகும் போது சம்பவத்தை அடியோடு மறந்துவிட்டேன். யாரிடமும் சொல்லவும் இல்லை. அடுத்த நாள் அர்த்தஜாமத்தில் என்னுடைய அறைக்குள் யாரோ நடமாடுவது போல் இருக்கவே சட்டென எழுந்து மின்விளக்கைப் போட்டேன். யாருமில்லை. மனைவி குறட்டைவிட்டு தூங்கிக் கொண்டிருந்தாள். ஜன்னலை திறந்து பார்த்தேன், யாருமில்லை. டோர்ச்லைட்டை எடுத்துக் கொண்டு வீடு முழுவதும் அலசிப்பார்த்தேன். யாரும் வந்ததற்கான அறிகுறிகள் எதுவுமில்லை. வீட்டின் வெளிப்புறத்தையும் தோட்டத்தையும் பார்க்க நினைத்தேன். டோர்ச் ஒலி மங்கலாக இருந்ததால் அது சாத்தியமாகவில்லை. யாரோ என்னை பின் தொடர்கிறார்கள், போக்குக்காட்டுகிறார்கள். யார்அது? எனக்கு தெரிந்து என்னை வேவு பார்க்குமளவு யாருமில்லை. அப்படியானால் அதுயார்? இலேசாக அச்சத்தின் சாயல் கவிய ஆரம்பித்தது மனதில்.

எனக்கு பயம் என்பது இதுவரை கிடையாது. உளநோயியல் பேராசிரியரான நான் பயப்பீதியில் இறுகிய முகம், இருளடைந்த கண்களில் கவிந்த பயம், அச்சம் பீடித்த உதடுகள், வெளிறிய மேனியோடு வார்த்தைகள் தொண்டைக்குள் சிக்கிய என்று எத்தனையோ மனநோயாளிகளை சந்தித்திருக்கிறேன். தனியே நடந்து சென்றால் பயம், ஏகாந்தம் பயம், மக்கள் மத்தியில் இருக்கப் பயம், இரவுக்குப் பயம், கூரையைப் பார்த்தால் பயம், நட்சத்திரங்களுக்கு பயம், பூனைக்குப் பயம், காற்றுக்குப் பயம், மயானப்பயம், பல்லியை பார்த்தால் பயம், சாக்குருவிக்குப் பயம், பிளிரும் யானைக்குப் பயம். இப்படியெல்லாம் பயப்பிராந்தியோடு வரும் அவர்களைப்போல் எனக்கு எந்தப் பயமும் கிடையாது.

சிறுவயதிலே நகரப் பாடசாலையில் படித்துக் கொண்டிருந்த போது வாரம் ஒரு தடவை கிராமத்துக்கு இரவிலே தனியாக வருவேன். காட்டுப்பாதை தூரம் சுமார் பத்து கி.மீ இருக்கும் நாய்களின் கூட்டம் என் பின்னால் குரைத்து வரும், நான் பயப்படமாட்டேன். பகலில்

வனப்புமிக்க நீர் வீழ்ச்சியாக இருப்பது இரவில் அச்சத்தை உண்டுபண்ணும் பிசாசாக மாறும், நான் பயப்பட மாட்டேன். எங்கேயோ நரிகள் ஊளையிடும் ஒலி கேட்கும், நான் பயப்படமாட்டேன்; மயானத்தை கடப்பேன். அந்த மயானத்தை சுற்றி கிராமத்திலே நூற்றுக்கணக்கான பேய்பிசாசு, ஆவிக்கதைகள் உலவி வந்தன. நான் பயப்படமாட்டேன். ஆலமரம். இந்த ஆலமரம் ஐநூறு வருடங்கள் பழமை வாய்ந்தது. இரவு நேரத்தில் ஆலமரத்தில் குடியிருக்கும் மோகினி அந்த வழியாகச் செல்லும் ஆண்களை அழைத்து கழுத்து நரம்புகளை கடித்து இரத்தம் உறுஞ்சுவதாக ஐதீகம் உலவி வந்தது. நான் பயப்படவில்லை. மின் விளக்குகள் எதுவுமேயில்லாத தெரு, நான் பயப்படவில்லை.

அப்படியென்றால் எதுவுமே இல்லாத ஒரு விஷயத்துகாக உள்ளத்தில் ஏன் இப்போது மெல்லிய பயம்? நகரத்திலே டோர்ச்லைட் வாங்குவதற்கு என்று வீட்டிலிருந்து கூப்பிடு தொலைவில் ஒரு கடை இருந்தது. நான் நுழைந்தேன். வாழ்க்கையில் முதல் தடவையாக அந்தக் கடைக்குள் வந்த நான் ஆச்சரியப்பட்டுப் போனேன். அத்தனை வகையறாக்களில், அத்தனை அளவுகளில், அத்தனை நிறங்களில், சிறுவர்களின் பொம்மைத் தொழிற்சாலை போல அது தோற்றமளித்தது. நானும் சிறுவர்களைப் போல் பராக்குப் பார்த்தேன். எதையெடுப்பதென்றே தெரியாமல் திக்கு முக்காடிப்போய் மஞ்சள் நிறத்திலே இருந்த அளவிலே பெரிய டோர்ச்சை எடுத்தேன். “ஐயா நீங்கள் வேட்டைக்காரரா?” என்று கடைக்காரன் கேட்க “இல்லை, ஏன் கேட்கிறாய்?” என்று கேட்டேன்.
“இரவில் காட்டிற்கு வேட்டைக்குப் போகிறவர்கள் தான் இந்த டோர்ச்சை வாங்குவார்கள்” “கடைக்காரரே, அப்படி என்ன விஷேசம் இந்த டோர்ச்சிலே இருக்கிறது?”
“ஐயா அதிசக்தி வாய்ந்த இந்த டோர்ச் இருளை ஊடறுத்து நீண்டதூரம் ஒளியை பாய்ச்சக் கூடியது”
“ஓ! அப்படியா, நீ சொன்னது நல்லதாகிற்று. அப்படி டோர்ச் தான் எனக்குத் தேவை” என்ற நான் பணத்தைக் கொடுத்து வாங்கினேன்.

இரவு எப்போது வரும் என்று காத்திருந்து மேல்மாடியிலுள்ள பின்பக்க சாளரத்தினூடாக டோர்ச்ஒளியை பாய்ச்சினேன். கடைக்காரன் சொன்னது உண்மை. வேட்டைக்காரனுக்கு ஏற்ற விவகாரமான டோர்ச்தான். அதன் வெளிச்சம் இருளை ஊடறுத்து வீட்டுப் பின்புற மதிலுக்கு அருகிலிருந்த புளியமரத்தின் மீது பாய்ந்தது. மரக்கொப்பிலே ஒரு அணிலிருந்தது; ஓர் கிளியுமிருந்தது; புளியம் பழமிருந்தது, அபாயகரமான ஆளும் அதற்குள் ஒளிந்து கொள்ளலாம். இந்த மரம் இங்கே இருப்பது ஆபத்தானது என்ற யதார்த்தமும் சட்டென்று மனதிலே உறைத்தது. காலை எழுந்ததும்

முதல்வேலையாக ஏணியை வைத்து புளியமரத்தின் மீது ஏறி பைனாகுலர் மூலமாக வீட்டில் நடப்பதை அவதானித்த நான் திடுக்குற்றேன். மனைவி சமைப்பது, பூனை மியாவ் மியாவ் என்று கத்துவது, தொலைக்காட்சியில் ஒளிபரப்பாகும் சினிமா, கராஜில் நிறுத்தப்பட்டிருக்கும் காரின் இலக்கம், ரோஜாமலர் பூத்திருப்பது, Ipadயின் நிறம் என்று என் வீட்டிற்கேயுரித்தான எல்லா விஷயங்களும் இங்கே துலாம்பரமாக தெரிந்தன. நான் நினைத்தது சரி. இந்த மரம் மிகவும் ஆபத்தானது. இந்த மரத்தில் ஒளிந்துகொண்டு என் எதிரி என்னை எப்போது தாக்குவான் என்று தெரியாது. இந்த மரத்தை உடனடியாகவே வெட்டி அகற்றிவிட வேண்டுமென்று முடிவு செய்த நான் மரம் வெட்டும் நிறுவனத்தோடு தொலைபேசி மூலம் தொடர்பு கொள்ள அவர்கள் உடனடியாகவே மரம் தறிக்கும் வேலையை ஆரம்பித்தார்கள்.

மனைவி அருகில் வந்து “உங்களுக்கு பைத்தியம் ஏதாவது பிடித்து விட்டதா?” என்று கேட்டாள். நான் ஏன் என்பதைப் போல் அவளை ஏறெடுத்துப் பார்க்க “நேற்று என்னவென்றால் நமக்கு கொஞ்சமும் உதவாத டோர்ச்லைட்டை அதிகவிலை கொடுத்து வாங்கி வந்தீர்கள். இன்று குரங்கு மாதிரி மரத்தின் மீதேறி விடுப்புப் பார்த்தீர்கள். இப்போது என்னவென்றால் ஆட்கள் வந்து மரத்தை வெட்டிக் கொண்டிருக்கிறார்கள். நமக்கு இவ்வளவு காலமும் நிழல்தந்த மரம். உங்களுக்கு என்னதான் நடந்து விட்டது?” என்று ஆற்றாமையுடன் கேட்டாள் மனைவி. நான் பதிலேதும் சொல்லாமல் அவளையே பார்த்துக கொண்டிருந்தேன். “என் கண்களைப் பார்த்தாயா?” “எதற்காக கேட்கிறீர்கள்?” அவள் கண்களை பார்த்துவிட்டுச் சொன்னாள்.
“ஒன்றுமே தெரியவில்லையே”
“ஒன்றுமே தெரியவில்லையா? நன்றாகப் பார்”
“ஒன்றுமே தெரியவில்லையே”
“ஒன்றுமே தெரியவில்லையா?” கேட்டுக்கொண்டே நான் அவளுக்கு மிக அருகில்போனேன். “நன்றாக என் கண்களைப் பார்” அவள் வியப்புடன் என்கண்களையே பார்த்துக் கொண்டிருந்தாள். “ஒன்றும் தெரியவில்லையே”
“என் கண்களிலே பயமும் கவலையும் உறைந்து கிடப்பது உனக்கு தெரியவில்லையா?” அவள் என்னை குழப்பகரமாக பார்த்தாள். “நீங்கள் புரியாத மொழியில் பேசிக் கொண்டிருக்கிறீர்கள். உங்களுக்கு பேய் பிசாசு ஏதாவது பிடித்து விட்டதா? நீங்கள் தான் அவைகளை நம்பாதவராச்சே. டாக்டரை கூப்பிடட்டுமா?” என்று கவலையுடன் கேட்டாள் மனைவி. இதற்கு மேலும் மனைவியிடம் எதையும் மறைப்பது பயனில்லை என்று முடிவுசெய்த நான் நிழல்போல் யாரோ என்னைப் பின்தொடரும் சங்கதியை சொன்னேன். அவள் நம்ப முடியாதவளாக என்னைப் பார்த்தாள்.
“யார் அது என்று உங்களுக்குத் தெரியுமா?”
“தெரியாது”

“உங்களுக்கு எதிரிகள் யாருமிருக்கிறார்களா?”
“உனக்குத் தெரியாமலா? எனக்குத்தான் எதிரிகள் என்று எவரும் இல்லையே”
“மனப் பிரமையாக இருக்கும்”
“ஊஹூம், இல்லை”
“யாரென்றும் தெரியாது”
“தெரியாது”
“தெரியாது என்றால் ஏன் கவலைப்படுகிறீர்கள்?”
‘யாரென்று தெரியாது என்பதால் தான் கவலைப்படுகிறேன். தெரிந்துவிட்டால் கவலை தீர்ந்துவிடும்”
“நீங்கள் கவலைப்படுவதைப் பார்த்தால் எனக்கும் பயமாக இருக்கிறது. பொலிஸுக்கு அறிவிப்போமா?”என்று கேட்டாள் மனைவி. எனக்கும் அது நல்ல யோசனையாகத் தெரிந்தது. என்னுடைய கதையைக் கேட்டு விழுந்து விழுந்து சிரித்த பொலிஸ் அதிகாரி நான் வற்புறுத்தவே இரண்டு பொலிஸ்காரர்களை அனுப்பி வைத்தார். என்னுடைய வாகனம், செல்லும் பாதை, நான் போகுமிடங்கள், வீட்டின் முன்புறம், பின்புறம் என்று என்னோடு சம்பந்தப்பட்ட இடங்களை எல்லாம் சல்லடை போட்டு ஆராய்ந்த பொலிஸ்காரர்கள் “ஐயா, நீங்கள் சந்தேகப்படுகிற மாதிரி தடயங்கள் எதுவும் இல்லை” என்று இறுதி வாக்கு மூலமும் தந்தார்கள்.

பொலிஸாருக்குப் பயந்து என்னைத் தொடரும் நிழல் நின்று விட்டாதா என்றால் அதுதான் இல்லை. நிழல் அதி தீவிரத்துடன் என்னைத் தொடர ஆரம்பித்தது. இருந்தாற்போல் வந்தது என்ற நிலைமை போய் எப்போதும் தொடர ஆரம்பித்தது நிழல். அலுமாரியைத் திறக்கும்போது, ஆடை மாற்றும்போது, ஸ்தான அறைக்கு செல்லும்போது, கழிப்பறையில், சிற்றுண்டிச்சாலையில் என்று நிழல் என்னை அலைக்கழித்து படாதபாடு படுத்தியது. என்னால் தேநீர் அருந்த முடியவில்லை; பல்துலக்க முடியவில்லை; யாருடனும் சுதந்திரமாக பேச முடியவில்லை; பத்திரிகை வாசிக்க முடியவில்லை. எதிரில் வருபவர் புன்னகைக்கும் போது என்னால் பதிலுக்கு புன்னகைக்க முடியவில்லை; தொலைக்காட்சி செய்தி கேட்க முடியவில்லை; மனைவியோடு பேச முடியவில்லை.

தாடி வளர்த்து பித்துப் பிடித்தவன் போல் அலைந்து திரிந்த நான் இறுதியாக எங்காவது வெளிநாட்டில் எனக்கு ஓய்வு தேவை என்று முடிவு செய்தேன். மனைவியும் என் முடிவை ஆமோதிக்கவே வங்கியிலுள்ள எல்லாப் பணத்தையும் எடுத்து வங்கிக் கணக்கை மூடிவிட்டு பாடசாலை விடுமுறை என்பதால் மனைவி, பிள்ளைகளையும் அழைத்துக் கொண்டு வெளிநாட்டு சுற்றுப்பயணத்தை ஆரம்பித்தேன். நீண்டதொரு சுற்றுப் பயணம். நிறையப் பணமும் செலவானது. Union station, வாஷிங்டன் டிசி, தங்கவாயில் பூங்கா, விஞ்ஞான

கைத்தொழில் நூதனசாலை, யூனிவர்சல் ஸ்டுடியோ, வேர்ல்ட்டிஸ்னி உலகம், வைரத்தலை, ஹுஸ்டன் நூதனசாலை, லண்டன் ஹோக்ஸ்டன் மண்டப சேர்க்கஸ், மொஸ்கோவின் பூனை சேர்க்கஸ், நயகரா நீர்வீழ்ச்சி, ஸ்தான்புல் கடைத்தொகுதி, பீஜிங் தடுக்கப்பட்ட நகரம், ஹொங்கொங் விக்டோரியா உச்சி என்று சென்ற இடங்கள் நீண்ட பட்டியல். பிள்ளைகள் மிகவும் மகிழ்ச்சியாக இருந்தார்கள். இத்தனை வருடகாலம் இவர்களை இப்படியான இடங்களுக்கெல்லாம் அழைத்துச் சென்றிருக்கவேயில்லை. வேலைப்பளு என்று சொல்லிச் சொல்லியே அவர்களின் வேண்டுகோளைத் தொடர்ந்து தட்டிக் கழித்து வந்திருந்தேன். அந்தக் காரணத்தால் இந்தச் சந்தர்ப்பத்தை நான் நன்றாக பயன்படுத்திக் கொண்டேன். ஆடினேன்; பாடினேன்; பிள்ளைகளுடன் குதூகலமாக இருந்தேன். அவர்களும் உலகின் பிரசித்தமான நீர்ப்பூங்காக்களில் நீந்தி விளையாடினார்கள்; Pop corn சாப்பிட்டார்கள; யானைச் சவாரி செய்தார்கள்.

என்மனது தெளிவாக இருக்க மனைவியோ அச்சத்துடன் காணப்பட்டாள். பதினைந்து வருடகால திருமண வாழ்க்கையிலே இந்தளவு நான் குதூகலத்திலிருந்ததை அவள் பார்த்திருக்கவேயில்லை என்பதுதான் அச்சத்திற்கு காரணம். “வாருங்கள் வீடு திரும்புவோம்” என்றாள் மனைவி.

“ஏன் குதூகலமாக வாழ்க்கையை அனுபவிப்பது உனக்குப் பிடிக்கவில்லையா?”

“எந்த மனைவியும் சந்தோஷத்தை வேண்டாமென்று சொல்லமாட்டாள்”

“அப்படியானால் வீணாக ஏன் கவலைப் படுகின்றாய்?”

“உங்களைப் பற்றி எனக்கு நன்றாகத் தெரியம். நீங்கள் இப்போது செய்கின்ற காரியங்கள் எல்லாம் உங்கள் இயல்புக்கு முற்றிலும் மாறானது. நீங்கள் ஒரு moody டைப். இப்படியெல்லாம் உங்களுக்கு ஆடவோ பாடவோ வராது. எனக்குப் பயமாக இருக்கிறது” என்றாள் மனைவி. அவள் அப்படிச் சொன்ன பிறகு எனக்கும் உறைத்தது. பிள்ளைகள் ஏற்கனவே படகில் ஏறி விட்டார்கள், படகுச்சவாரி. “ஓகே. இந்த படகுச் சவாரியோடு பயணத்தை முடித்துக் கொள்வோம்” என்று நான் சொல்ல அவளும் ஒத்துக் கொண்டாள். படகில் வலது காலை எடுத்து வைத்தேன். “இதோ நான் உன் நிழல் வந்திருக்கிறேன்” என்று யாரோ என் காதிற்குள் சொல்வதுபோல் இருக்கவே திரும்பிப் பார்த்தேன். அச்சமூட்டும் தோற்றத்துடன் என் மரண நிழல். ஒருகணம் தான் நான் அதனைக் கண்டேன். அத்தோடு என் உயிர் பிரிந்து விட்டது.

நைல்நதிக் குழந்தை என்பது பிரசித்தமான ஒரு கதையின் தலைப்பு. அந்த கதையிலே அபூர்வமான ஒரு குழந்தை வந்தது. வாசித்த மாத்திரத்திலேயே என் மனதை ஆகர்ஷித்துவிட்டது அந்தக் குழந்தை. நான் குழந்தையுடன் ஒன்றிவிட்டேன். குழந்தையுடன் ரொம்பவும் பிரியமாக இருந்தேன். எண்ணற்ற இரகசியங் களையும் அற்புதங்களையும் தன்னுள் புதைத்து வைத்துக்கொண்டு நைல்நதி எப்படி எழிலாக ஓடிக்கொண்டு இருக் கிறதோ அதுபோல குழந்தையும் துருதுருவென்று எழிலாக இருந்தது. நைல்நதிக் குழந்யை யார் எழுதினார்கள் என்பது எனக்குத் தெரியாது. என்றாலும் நான் குழந்தை யுடன் உயிர்வாழ்ந்தேன்.

இரத்தம் ஒட்டப்படுவதை வெறுக்கின்ற சாதாரண மக்களின் குறியீடாக அந்தக் குழந்தையை நான் கண்டேன். குழந்தையும் அப்படித்தான் கதையிலே சுற்றிச்சுற்றி வந்தது. புராணங்களுடன் ஓரளவு ஈடுபாடு கொண்டவன் நான். புராதன கதைமாந்தர்களை நான் உள்ளன்போடு நேசித்தேன். என்கனவிலும் நனவிலும் அவர்கள் வந்தார்கள். எனினும் ஒருமனக்குறை என்மனதிற்குள் எப்போதும் இருந்துகொண்டே இருந்தது. குருதி சிந்தப்படுவது வேண்டாம் என்று சொல்கின்ற மாவீரரையோ, வீராங்கனையையோ கடலாக விரிந்திருக்கின்ற இந்தக்காவியங்களில் ஏதாவது ஒருமூலையிலே கண்டுபிடித்துவிடலாம் என்ற ஆதங்கத்திலே தேடியும், சலித்தும் களைத்துப்போனேன் நான். ஊஹூம்! எங்குமே அப்படிப்பட்ட பாத்திரம் இல்லை. எல்லா இதிகாசக் கதைமாந்தர்களும் வீரபராக்கிரமம் பேசினார்கள்; கூரியவாட்களையும், கேடயங்களையும் ஏந்திக்கொண்டு யுத்தகளங்களுக்குச் சென்றார்கள்; எதிரிகளை வெட்டிச் சாய்த்தார்கள்; அழகிய அராபியக் குதிரைகளும், யானைகளும் மடிந்துபோயின. இரத்தந்தோய்ந்த வாட்களுடன் வீரர்கள் திரும்பிவந்தவுடன் எங்குமே ஜயபேரிகை முழங்கியது. அழகிய ஆரணங்குகள் அவர்களைச் சுற்றிநின்று பாடல்கள் இசைந்தும், நடனமாடியும், முத்தமிட்டும் வீரர்களை களிப்பில் ஆழ்த்தினார்கள்.

அதி பாராக்கிரமசாலியான மாவீரனின் முன்னால் குறுக்காகப் படுத்துக் கொள்ளும் இந்த அபூர்வக் குழந்தை திமிரும் முரட்டுக் குதிரையை லட்சியம் பண்ணாது கெஞ்சிக் கெஞ்சிப் பேசும். “மாவீரனே நீ கம்பீரமானவன், உன் புஜங்கள் அழகாக இருக்கின்றன. என்றாலும் யுத்தம் வேண்டாம். என்னைப் போன்ற குழந்தைகளை நீ கொன்றுவிடுவாய், பெண்கள் மடிந்து போவார்கள், புற்பூண்டுகள் கருகிவிடும்”. மாவீரனோ இரத்தத்தால் நஞ்சூட்டப்பட்ட கடினமான சொற்களால் “மண்ணின் கௌரவத்தைக் காப்பாற்றுவதற்கும், மண்ணைக் காப்பாற்றுவதற்கும் நான் இரத்தத்தை ஓட்டப்போகிறேன்” என்று திமிராகப் பதிலளிப்பான்.
‘மண் என்றால் என்ன?”

“மண் என்றால் அது என் தாய்நாடு”
“தாய் நாட்டைக் காப்பாற்றி என்ன செய்யப்போகிறீர்கள்?”
“எங்கள் மக்கள் சந்தோஷமாக ஜீவிப்பார்கள்?”
“எங்கள் மக்கள் என்றால் யார்?”
“எங்கள் இனத்து மக்கள். எங்கள் மொழி பேசுபவர்கள்”
“எங்கள் மொழி என்றால் ..........”
“எங்கள் மூதாதையர் பேசிய மொழி”
“ஆகவே எங்கள் மொழியைப் பேசுபவர்கள் சந்தோஷமாக வாழ வேண்டும்”
“அதிலும் சந்தேகமா?”
“வேற்று மொழி பேசுபவர்கள் மடிந்து போய் விட வேண்டும்”
“அதில் தவறேதும் இல்லையே, எங்கள் மொழி வையகத்தையே ஆண்டமொழி; உயர்ந்த மொழி” “இப்படித்தான் அவர்களும் அவர்களுடைய மொழியைப் பற்றி உயர்வாகப் பேசுவார்கள். அதுவும் உண்மைதானே”
“அவர்களைப் பற்றிப் பெருமையாகப் பேசும் இனத் துரோகியே விலகிவிடு. இன்றேல் உன்னை என் வாளால் துண்டங்களாக்கி விடுவேன்”
“உன்னால் செய்யக் கூடியது அதுதானே, பரவாயில்லை. என்னை அப்படியே இரு கூறாகப் பிளந்துவிடு. ஏனென்றால் உன் சொற்களை நான் வெறுக்கிறேன்”
“ஏய் பேயின் குழந்தையே, உன்னோடு விளையாட எனக்கு நேரமில்லை. எனக்கு வழிவிடு, எதிரியின் சிரசைக் கொய்துவிட என் கரங்கள் துடிக்கின்றன”
“உன்னைச் செல்லவிட மாட்டேன்” என்று அடம்பிடிக்கும் குழந்தை குதிரையின் காலைக்கெட்டியாகப் பிடித்துக்கொள்ளும். உன்னைப்போல் நான் முட்டாள் அல்ல என்று கோபாவேசத்தோடு கர்ஜிக்கும் மாவீரன் நைல்நதிக் குழந்தையை அலாக்காகத் தூக்கி அப்பாலே எறிவான்.

ஞானக்கிழவி, வேடிக்கைப் பார்த்து கைகொட்டிச் சிரித்தவள் குழந்தையை தரதரவென்று புத்தகக் களஞ்சியத்திற்கு இழுத்துக்கொண்டு போனாள். புத்தகக் களஞ்சியத்தின் உட்புறம் கைவிடப்பட்ட பழைய தொழிற்சாலை போலக் காட்சியளித்தது. எங்குமே தூசும் குப்பைகூளமும். தாங்க முடியாத குழந்தை தும்ம ஆரம்பித்ததும் “தும்மாதே, புத்தகங்கள் உதிர்ந்துவிடும்” என்று அதட்டினாள் ஞானக்கிழவி. சிரமத்துடன் தும்மலை அடக்கிக்கொண்ட குழந்தை அடுக்கி வைக்கப்பட்டிருந்த எண்ணிலடங்காகப் புத்தகங் களைக் கண்டதும் ஆச்சரியமடைந்தது. தடித்த அட்டைபோட்ட புத்தகங்கள், வீரச்சிலைகள் பதித்த புத்தங்கள், புலித்தோலால் பைண்டிங் செய்யப்பட்ட புத்தகங்கள், காவியங்கள், கதைகள், வரலாற்று ஆவணங்கள் என்று ஆயிரமாயிரம் நூல்களின் களஞ்சியம்

“எதற்காக என்னை இந்தக் குப்பைத்தொட்டிக்கு கூட்டி வந்தீர்கள்?” என்று கேட்டது குழந்தை. “இது குப்பைத் தொட்டியல்ல, எங்கள் மூதாதையர்களின் ஞானம் குவித்து வைக்கப்பட்டிருக்கும் அறிவுக் களஞ்சியம், ஞானசூனியமே” என்று திட்டிய ஞானக் கிழவி மெரூன் வர்ணத்தில் பைண்டு செய்யப்பட்ட கனமான புத்தகமொன்றைத் தூக்கி குழந்தையின் முன்னால் போட்டு “இந்தப் புத்தகத்தைத் திறந்து பார், எங்கள் ஸோரி இனத்தின் மகிமைகளை விலாவாரியாக எடுத்துச் சொல்லும் பிரமாண்டமான திருஷ்டாந்தம்” என்று கர்ஜித்தாள். குழந்தை காது கேட்காததுபோல் ”எதற்காக என்னை இந்தக் குப்பைத்தொட்டிக்குள் அழைத்து வந்தீர்கள்?” என்று மீண்டும் கேட்டதும் ஞானக்கிழவி சினமுற்றாள். ஞானக் கிழவி என்பவள் லேசுப்பட்ட ஆளல்ல. ‘ஸோரி’ இனத்தின் ஞானகுரு அவள். ஸோரி இனத்தின் வரலாற்று திருஷ்டாந்தங்களை மூளைக்குள் ஏற்றிக்கொண்டு திரிபவள். யாராகிலும் ‘ஸோரி’ இனத்தை வைதாலோ இழித்துரைத்தாலோ அவள் சிங்கம்போல் கர்ஜிப்பாள்; கடிவாள்; தீயால் எரிக்கவும் தயங்கமாட்டாள். அப்படிப்பட்ட கிழவிக்கு நைல்நதிக்குழந்தை எப்படியிருந்தது என்றால் கூறுகூறாக வெட்டி புலிகளுக்கு இரையாகப் போட வேண்டுமென்று துடிப்பாள். அப்படியான சந்தர்ப்பத்துக்காகத் தான் காத்திருக்கிறாள்.

“குழந்தையே நீ முட்டாளாக இருக்கிறாயே. குழந்தையாக இருந்தாலும் உன் உடலிலே ஓடிக்கொண்டிருப்பது ‘ஸோரி’ இன இரத்தமே, நீயோ உன்னையே அறியாமல் இருக்கிறாய்; வீரர்களுக்கு குறுக்காகப் படுத்துக்கொள்கிறாய்; அற்பமாகப் பேசுகிறாய். இந்தப் புத்தகத்தை வாசித்துப்பார். உன் மேனி சிலிர்த்துவிடும்” என்றாள் ஞானக் கிழவி. “எனக்கு எழுதப் படிக்கத் தெரியாதே” என்றது குழந்தை. “அப்படியா சங்கதி? நன்றாகப் பேசுகிறாய். ஆனால் எழுதப்படிக்கத் தெரியாது என்று சொல்கிறாய். பரவாயில்லை உன்னை மன்னித்து நான் கதையைச் சொல்லுகிறேன், நன்றாகக் காதுகொடு” என்று சொன்ன ஞானக்கிழவி கதை சொல்ல ஆரம்பித்தாள். ஞானக்கிழவிக்கு கதை சொல்வதென்பது கைவந்தகலை. அவள் கதைசொல்வதை ஆசையோடு கேட்பார்கள்; அலுப்படிக்கவே மாட்டாது. சொற்றொடர்களை ஏற்றி இறக்குவாள்; சோகமான இடங்களில் அவளுடைய கண்களிலிருந்து கண்ணீர் பொலபொலவென்று கொட்டும். வீரர்கள் வருமிடங்களில் செந்தழல் எறிக்கும் விழிகளால் அவளும் போர் செய்வாள்; கால்கள் உதறவும், நடுங்கவும் வீரப்பிரதாபங்களை அளப்பாள். கதை சொல்லிக்கொண்டு வந்த ஞானக்கிழவி களைத்துப்போய் குழந்தையை திரும்பிப் பார்க்க குழந்தை அயர்ந்து தூங்கிக் கொண்டிருந்தது.

அடுத்த நாள் புத்தகக் களஞ்சியம் தீப்பற்றி எரிந்தது. புத்தகக் களஞ்சியத்திலிருந்து புகை மண்டலம் வருவதை அவதானித்த ஞானக்கிழவி ஓடோடிப் பார்த்தபொழுது புத்தகக் களஞ்சியத்திற்கு தீவைத்து விட்டு நைல்நதிக் குழந்தை வேடிக்கை பார்த்துக் கொண்டிருந்தது. ஞானக்கிழவி குழந்தையின் தந்தையிடம் ஓடோடிப்போனாள். குழந்தையின் தந்தையோ மிகவும் நல்லவர், யுத்தத்திற்கு போகக்கூடிய 'ஸோரி' இனத்து வீரர்களுக்கு இரவுபகல் கண் துஞ்சாது போர்வாள்கள் செய்துகொடுப்பவர். வாட்கள் என்றால் ஸமுராய்களின் கூரியவாட்கள் போல் வெயிலிலே பளபளவென்று மின்னும் அவை சிரசை ஒரே வீச்சில் துண்டித்துவிடும். அப்படிப்பட்ட மகாமனிதருக்கு இப்படியொரு சாத்தான் குழந்தையா என்று ஞானக்கிழவி மனம் வருந்தினாள்; தந்தையோ அதைவிட மனம் வருந்தினார். கொல்லைப் புறத்திலிருந்த கிணற்றடிக்கு ஞானக் கிழவியை அழைத்துச் சென்ற தந்தை கிணற்றை எட்டிப்பார்க்குமாறு கிழவிக்கு சைகை காட்ட ஞானக்கிழவி எட்டிப் பார்த்தாள்; ஆட்களும் அங்கே கூடி அவர்களும் கிணற்றை எட்டிப் பார்த்தார்கள். என்ன ஆச்சரியம்! கிணற்றிலே தண்ணீர் தெரியவில்லை. கிணறு நிறையுமளவிற்கு வாட்கள் இருந்தன. அத்தனையும் துருப்பிடித்த வாட்கள். "என் குழந்தை உங்களுக்கு அதிசயமாகத் தெரிந்தாலும் எனக்கு என்றுமே பெருந்தொல்லை ஆகும். பாருங்கள், நான் சிரமப்பட்டு வார்த்த வாட்களை இந்தச் சாத்தான் எனக்குத் தெரியாமல் கிணற்றுக்குள் போட்டு வந்திருக்கிறது. ஒருநாள் சந்தேகப்பட்டு கிணற்றை எட்டிப்பார்த்த பொழுதுதான் எனக்கே தெரிந்தது" என்று பெருமூச்செறிந்தார் தந்தை. "இந்தச் சிறு குழந்தையால் வாளைத் தூக்கமுடியுமா?" என்று சந்தேகத்துடன் கேட்டாள் ஞானக்கிழவி. "அதுதான் எனக்கும் புரியவில்லை. யாரோ இனத்துரோகி எங்களுக்குள் இருக்கிறான். அவன் இந்தக்குழந்தைக்கு உதவுகிறான் என்று நினைக்கிறேன்" என்றார் குழந்தையின் தந்தை. அங்கிருந்த எல்லோரும் ஒருமித்த குரலில் "ஆமாம்.. ஆமாம்" என்றார்கள்.

இந்தக்கதையை நான் அடிக்கடி வாசித்தேன், அனுபவித்து வாசித்தேன். மீண்டும் மீண்டும் வாசிக்கின்ற அளவிற்கு நான் குழந்தையை நேசித்தேன். சிறு குழந்தையால் இப்படியெல்லாம் அதிகப் பிரசங்கித்தனமாகப் பேசமுடியுமா, இப்படியெல்லாம் விஷமத்தனம் பண்ணமுடியுமா என்ற ஐயம் எனக்குள் இருந்து கொண்டேயிருந்து பிறகு நீண்டநாட்கள் நன்றாக ஆராய்ந்து ஒரு முடிவுக்கு வந்தேன். நைல்நதிக்குழந்தை குழந்தையே அல்ல, கற்பனைப் பாத்திரம். போரை வெறுக்கின்ற ஓர் எழுத்தாளன் உருவாக்கிய குறியீடு. எழுத்தாளர் நைல் நதிக் குழந்தைக்கு அந்தப் பெயர் எப்படி வந்தது என்ற வரலாற்றை பிற்பகுதியிலே அலாதியாக விபரித்தார். அவருடைய வருணனை மிகமிக அற்புதமாக இருந்தது.

நைல்நதி என்பது ஆயிரக்கணக்கான காவியங்களின் சேர்க்கைச் சுரங்கம் என்றால் அது மிகையல்ல. கதாநாயகர்களும், வீரபுருஷர் களும், மகாராணிகளும் உருவாகிய இடமும் உருத் தெரியாமல் அழிந்துபோன இடமும் அதுதான். நைல்நதிக் கரையில்தான் நைல்நதிக் குழந்தையின் தாயும் தகப்பனும் குடிசைகட்டி வந்தார்கள். மகிழ்ச்சியான வாழ்க்கை என்றாலும் ஒரு மனக்குறை, திருமணம் முடித்து பத்து வருடங்கள் கடந்த பின்னரும் அவர்களுக்கு குழந்தைப்பேறு கிட்டவில்லை. குகைக்குள் வாழும் ரிஷி, மரத்தடி வைத்தியர், மலையுச்சி மந்திரவாதி என்ற மாமனிதர்களெல்லாம் கொடுத்த மூலிகைகளாலும் கஷாயங்களாலும், சூரணங்களாலும் அவர்களுடைய தலைவிதியை மாற்ற முடியவில்லை. இப்படியிருக்கும் போது ஓரிரவு குழந்தையின் தாய் அலறியடித்துக் கொண்டு படுக்கையை விட்டு எழுந்தாள். நேரம் நடுநிசி. பயங்கரமான அலறல். அலறல் எப்படிப்பட்டதென்றால் சுற்றியிருந்த வீடுகளில் வாழ்ந்தவர்க ளெல்லாம் என்ன நடந்துவிட்டதோ என்ற ஆவலோடும், பதட்டத்தோடும் அங்கே வந்து விட்டார்கள். அவளுடைய முகத்திலே தண்ணீரை வீசியடிக்க அவள் திடுக்கிட்டு ஒன்றும்புரியாமல் அங்குமிங்கும் பார்த்தாள். அவளுடைய இதயம் படபடத்தது, முகத்திலே வியர்வைத்துளிகள் அரும்பின. கைகால்கள் குளிர்ந்து போயின.

“நான் நைல்நதியில் மூழ்கிக் கொண்டிருக்கிறேன்” என்று கேவினாள் அவள். கணவன் அவளை ஆசுவாசப்படுத்தினான். “நீ நினைப்பது போல் ஒன்றுமே நடக்கவில்லை. நீ நம்முடைய படுக்கையறையிலே உறங்கிக் கொண்டிருக்கிறாய்” என்று சொன்னான் கணவன். தன்னைத்தானே சுதாகரித்துக்கொண்ட மனைவி தன் மனதிலே நீண்ட காலமாகப் புதைத்து வைத்திருந்த இரகசியத்தைக் கணவனிடம் சொன்னாள். அவளுடைய தந்தை சின்ன வயதாக இருக்கும் போதே மரணித்தார். இறப்பு என்பது சாதாரணமாகத் தெரிந்தாலும் அவளுடைய தந்தை மரணித்த விதம் குரூரமானது ஆனதால் அவளுக்கு அது மிகவும் கொடுமையாக இருந்தது. யுத்தம் நடந்து கொண்டிருந்த நேரம் எதிரிகள் அவரைத் துரத்திவந்து வாட்களால் கோரமாகக் கொலை செய்து நைல்நதியில் தூக்கி எறிய தந்தை கொஞ்சம் கொஞ்சமாக தண்ணீருக்குள் மூழ்கி இறந்து போனார். நீர் இரத்தச் சிவப்பாக மாறும் ஒவ்வொரு கணங்களையும் அவள் பார்த்துக் கொண்டிருந்தாள்; கூக்குரலிட்டாள்; கதறினாள், ஆனால் அவளுக்கு உதவ யாருமே முன்வரவில்லை. அவள் மிகவும் கொடூரமான முறையில் அனாதையானாள். தந்தையின் மரணத்தை மறக்க அவள் எண்ணினாலும் அதற்கு முடியாமல் இருந்தது. அன்றிலிருந்து அடிக்கடி அவளுடைய கனவிலே நைல்நதி தோன்றும், அது இரத்தச் சிவப்பாக இருக்கும், அவள் இரத்தச் சிகப்புக்குள் மூழ்குவாள்; பதறியடித்து

எழுந்து வியர்வையால் நனைவாள். சிறுவயதில் அடிமனதிலே ஏற்பட்ட இந்தப் பெருங்காயம் அழிக்க முடியாத வடுவாகமாறி அவளைச் சித்திரவதை செய்து கொண்டேயிருந்தது. நைல் நதியை அவள் அடியோடு வெறுத்தாள். நைல்நதியில் நீராடுவதையும் எப்போதோ அவள் கைவிட்டாள். நைல்நதிக் கரையோரம் நின்று நதியின் எழிலை இரசிப்பதையும் அவள் மறந்து போனாள். என் உள்ளத்தை ரணமாக்கிய நைல்நதியே நீ வரண்டு நாசமாகிப் போ! என்று சாபமிட்டாள். இயற்கை அவளை வஞ்சிப்பதற்குக் காரணம் அவள் நைல்நதியை வஞ்சிப்பது தான் என்று திடமாக நம்பிய கணவன் அவளை அறிவுக்கூர்மை நிரம்பிய வைத்தியர் ஒருவரிடம் அழைத்துப் போக குழந்தையொன்று மனைவியின் வயிற்றிலே உருவாக வேண்டுமாயின் நைல் நதியை வெறுப்பதை அவள் உடனடியாகக் கைவிட வேண்டுமென்றும், காலையிலும் மாலையிலும் நைல்நதியில் நீராட வேண்டுமென்றும், குழந்தை பிறந்தவுடன் அதற்கு நைல் நதிக் குழந்தை என்று பெயரிட வேண்டுமென்றும் வைத்தியர் உபதேசித்தார்.

வைத்தியர் கூறியபடியே அவளுக்கு ஓர் அழகிய ஆண்மகவு பிறந்தது. அவள் அதற்கு நைல் நதிக்குழந்தை என்று பெயரிட்டு சீராட்டி வளர்த்து வந்தாள். மூர்க்கக் குணமும், பழிவாங்கும் மனோபாவமும், எப்போதும் சண்டை பிடித்துக்கொண்டிருக்க வேண்டுமென்றும் வாழ்க்கையை ஓட்டிக் கொண்டிருந்த ஸோரி இனத்தாருக்கு குழந்தையின் பேச்சும் நடவடிக்கைகளும் பிடிக்கவில்லை. நல்ல தருண மொன்று வாய்த்தால் குழந்தையைக் கொன்று விட வேண்டுமென்ற வெறியில் அவர்கள் அலைந்து கொண்டிருந்தார்கள். ஒருநாள் அதிகாலை இரண்டுமணிக்கு ஸோரி கோத்திரத்தார் எதிரி இனத்தாரின் வீடுகளிற்குள் சடுதியாகப் புகுந்து பெண்களையும், குழந்தைகளையும் வெட்டி, சொத்துக்களையும் துவம்சம்செய்ய ஆரம்பித்தார்கள். விழித்துக்கொண்ட நைல்நதிக்குழந்தை வேண்டாம், இம்மாபாதகச செயலில் ஈடுபடாதீர்கள் என்று கெஞ்சியது. குதிரைமீது சாய்ந்தவாறு இந்த உபதேசத்தை நிகழ்த்திக் கொண்டிருந்தது குழந்தை.

நைல்நதிக்குழந்தையைக் கொல்வதற்கு தருணம் பார்த்திருந்த ஸோரி இனவீரர்களுக்கு நல்ல சந்தர்ப்பம் கிடைத்தது. நான்கு வீரர்கள் குதிரையின் நான்கு கால்களை வெட்டுவதென்றும், ஐந்தாவதுவீரன் குழந்தையின் தலையை சிரச்சேதம் செய்வதென்றும் அவர்களுக்குப் பாதுகாப்பாக மேலும் ஐந்துவீரர்கள் அராபியக்குதிரைகள் மீதேறிச் செல்வதென்றும் தங்களுக்குள் ஒருமுடிவு எடுத்துக்கொண்டே அவர்கள் இரத்தஞ் சொட்டும் கூரியவாள்களை தலைக்குமேலே ஏந்தி கடுகதிவேகத்திலே குழந்தை இருக்குமிடத்தை நோக்கிப் பறந்தார்கள். இதற்குப் பிறகு என்ன நடந்தது தெரியுமா? தெரியாது. குழந்தையை 'ஸோரி' இனத்துவீரர்கள் கொன்றார்களா? இந்தக் கேள்விக்கு விடை அதுவும் எனக்குத் தெரியாது. ஏனெனில் கதை திடுதிடுப்பென்று

முடிந்திருந்தது. கதையின் மீதிப்பகுதி இல்லை. கடவுளே, இந்தக்குழந்தை உயிரோடிக்க வேண்டுமே என்று தொடர்ந்து பிரார்த்தனை செய்தவாறே கதையின் முடிவைத் தேடினேன். ஊஹூம் எங்குமில்லை.

கதையின் முடிவைத் தெரிந்து கொள்ளாமல் எனக்கு தூக்கமே வரமாட்டேன் என்றது. எகிப்திலுள்ள பிரபலமான வரலாற்றாசிரியர் களிடம் சென்று நைல்நதிக் குழந்தையைப் பற்றி தெரியுமா என்று கேட்டேன். அவர்களெல்லோரும் தெரியாது என்று ஒற்றையாகக் கையை விரித்தார்கள். அல்லது அலட்சியமாகப் பதில் சொன்னார்கள். பல்கலைக்கழக சிரேஷ்ட பேராசிரியர் கொஞ்சம் வாயைத் திறந்து "எங்கள் மூதாதையர்களின் வரலாற்றில் இப்படி கோழைத்தனமான கதாபாத்திரத்தை நாங்கள் ஒருபோதும் சந்தித்தது கிடையாது. இந்தக் கதையை எழுதிய எழுத்தாளர் ஒன்றில் சோம்பேறியாக இருக்க வேண்டும். அல்லது எங்கள் ஸோரி இனத்தைக் கொச்சைப்படுத்துவ தற்காக ஒரு கற்பனைப் பாத்திரத்தை உருவாக்கி இருக்க வேண்டும் என்று பதிலளித்தார். எல்லா நாடுகளிலும் வரலாற்று திருஷ்டாந் தங்களை ஆராய்ந்து பார்த்தால் அதிசயிக்கத்தக்க விதத்தில் வீரம் என்ற கருதுகோள் ஒருமித்த அர்த்தத்தைத் தருவதைக் காணலாம். எதிரியை மண்கவ்வ வைத்தல் என்பதே அந்தக் கருதுகோள். எதிரி நல்லவனா, கெட்டவனா என்பதைப்பற்றி வரலாறு ஒருபோதும் பேசுவதில்லை. எதிரிநாட்டின் எதிரிகளை அழித்த யுத்தவீரனின் சிலைகளை எல்லா நாட்டுத் தலைநகரங்களிலும் நாம் பார்க்கலாம்.

வரலாற்றுச் சிறப்புமிக்க இடங்களைத் தரிசிப்பதில் எனக்கு அடங்கா ஆர்வம் இருந்தாலும் உள்ளத்தில் துயரவலி எப்போதும் இருந்து கொண்டேயிருந்தது. சரித்திரம் உன்னதமானது. மனிதனின் தேடலையும் மனிதன் எனப்படும் மகோன்னதமான தத்துவத்தையும் சரித்திரத்தின் பின்புலத்தில் உணர்ந்து கொண்டாலும் வரலாற்றுச் சிறப்புமிக்க பிரமிக்க வைக்கும் சின்னங்களின் பின்னால் கண்களால் காணமுடியாத சோகம் எப்போதும் படிந்திருக்கும். சீனப்பெருஞ்சுவரை நிர்மாணிப்பதற்காக ஆகாரமின்றி மடிந்துபோன இலட்சக்கணக்கான மனிதர்களின் கண்ணீர், தாஜ்மஹாலை நிர்மாணிப்பதற்காக அழிந்துபோன எண்ணற்ற உயிர்கள், பிரமிட்டுக்களிற்குள் புதைந்துபோன உண்மைக்கதைகள் இப்படி அடுக்கிக் கொண்டே போகலாம். எவ்வாறாயினும் நைல்நதிக் குழந்தை வாழ்ந்தது என்பதை நிரூபிக்க சான்றுகள் தேடி நாடு நகரங்களாக அலைந்து திரிந்தாலும் இறுதியிலே ஏமாற்றமே விஞ்சியது. சுவடுகளோ, கல்வெட்டுக்களோ, ஓலைச்சுவடியோ ஆவணங்களோ, நூல்களோ என்று எதுவுமே எனக்குக் கிடைக்கவில்லை.

கவலையிலே இப்படி கூடுவிட்டுக் கூடுபாய்ந்து திரிந்து கொண்டிருந்தபோது தான் எதிர்பாராமல் உயிருக்கே ஆபத்தான

யுத்தத்திலே சிக்கிக்கொண்டேன் நான். நான் சென்றடைந்த நகரம் யுத்தநகரம். நகரத்தின் பெயரும் அதுதான். வருடத்தில் எந்தநாளிலும் அங்கொரு யுத்தம் நிகழ்ந்து கொண்டேயிருக்கும். அந்த நகரத்திற்குள் நுழையவே வேண்டாம் என்று எல்லோரும் என்னை மிரட்டினார்கள். உல்லாசப் பயணவழிகாட்டி என்னோடு நகர எல்லைக்குக் கூட வர மறுத்துவிட்டான். என்னுடைய உள்ளுணர்வு உள்ளே போ நீ தேடிக்கொண்டிருக்கும் கதையின் முடிவு உனக்கு இங்கே கிடைக்கும் என்று சொல்லிக் கொண்டேயிருந்ததால் வருவது வரட்டும் என்ற அசட்டுத் தைரியத்திலே நகரத்திற்குள் நுழைந்தேன். அதிர்ஷ்டமோ துரதிர்ஷ்டமோ தெரியாது நான் நுழைந்த கணத்திலேயே யுத்தமும் ஆரம்பித்தது. நான் யுத்தத்தை வெறுப்பவன் என்று எந்தக் குண்டும் அறியாதாகையால் எல்லாச் சன்னங்களும், சிதல்களும் என்னை உரசிக் கொண்டு போயின. நான் நிலத்திலே படுத்துக் கொண்டேன். இடைக்கிடை சற்றுத் தலையை உயர்த்திப் பார்க்கும் போதல்லாம் புகைமூட்டமே எங்கும் தெரிந்தது. எரிவாசனை நாசியை ஊடறுத்துப் போயிற்று. இரைச்சல் தாங்கமுடியாமல் காதுகளைப் பொத்திக் கொண்டேன். கதையின் முடிவை அறியுமுன் என் வாழ்க்கையின் முடிவு எப்படியாகுமோ என்ற அச்சவுணர்வு எனக்குள்ளே உண்டாயிற்று.

யுத்தத்தை எவ்வாறு நடத்துகிறார்கள் என்றால் இருபுறங்களிலும் இலட்சக்கணக்கான சிப்பாய்கள் அணிவகுத்து நிற்பார்கள். ட்ரக் வண்டிகள், எறிகணைகள், ஊர்திகள். நடுவிலே எல்லைக்கோடு இந்தப்புறத்துச் சிப்பாய்கள் அவர்களின் கொடியை ஏந்தி நிற்பார்கள். பிரமாண்டமான கொடி, அழகான சீருடை. விடியற்காலையிலும், அந்திமாலையிலும் தேசியகீதம் இசைப்பார்கள். மறு புறத்திலும் அதேகாட்சி, அவர்களின் தேசியகீதம். சீருடையின் நிறம் கொஞ்சம் வித்தியாசமாக இருக்கும். இவர்களின் கொடியில் யானையும் அவர்களின் கொடியில் பூனையும் இருக்கும். கட்டளைத்தளபதி கட்டளையிடுவார். கட்டளைகள் இந்தப் புறத்து ஆட்களுக்கு இந்த மொழியிலும் அந்தப் புறத்து ஆட்களுக்கு அந்த மொழியிலும் வழங்கப்படும். கட்டளைகள் எந்த மொழியில் வழங்கப்பட்டாலும் குறிக்கோள் ஒன்றுதான். கட்டளைகள் வழங்கப்பட்டவுடன் எல்லா ஆயதக்குழல்களும் குறிபாக்கும், யாரைக் குறிபார்க்குமென்றால் இங்கேயுள்ள குழல்கள் அங்கேயுள்ள மனிதர்களையும் அங்கேயுள்ள குழல்கள் இங்கேயுள்ள மனிதர்களையும். வேடிக்கை தான். சிறுவர்களின் கண்ணாமூச்சி விளையாட்டும் இப்படித்தான். யுத்தம் முடிந்து யுத்தகளத்திற்கு சென்று பார்த்தோமென்றால் யுத்தமென்பது வேடிக்கையல்ல என்பது புரிந்துவிடும். நாக்குகள் துண்டாடப்படும், குடல்கள் வெளியே தொங்கும், முகங்கள் கருகிப்போகும், கண்கள் பிடுங்கப்படும், சதைகள் பிய்ந்துவிழும், நுரையீரல்கள் பிண்டமாகும், இதயம் வெளியில் விழுந்து துடிதுடிக்கும், என்புகள் பிசையப்படும், பிற்புறம் முற்புறமாகவும், முற்புறம் பிற்புறமாகவும் முறுக்கப்படும்.

அங்கே கவிதைகள் இல்லை, கவிஞர்களும் இல்லை, இதமாக வருடிப்போகும் மந்தமாருதம் இல்லை, மயில்கள் ஆடுவதுமில்லை, பூக்களும் இல்லை, வசந்தமும் இல்லை, பனித்துளிகள் இல்லை, ஊற்றுக்கள் இல்லை, உள்ளங்கள் இல்லை, குமிழ் சிரிப்பு இல்லை, மானுடமே இல்லை.

அதே காட்சிகளை இந்தக் களத்திலும் நான் கண்டேன். எல்லா மாவீரர்களும் பித்துப் பிடித்தவர்கள் போல் இரத்தம் பீறிடுவதைப் பார்ப்பதற்காக அங்குமிங்கும் ஓடினார்கள். மாற்றானின் மேனியிலிருந்த இரத்தச் செஞ்சிவப்பைப் பார்த்தவுடன் அவர்களின் விழிகளில் பளிச்சிடும் மகிழ்ச்சியைப் பார்க்க வேண்டுமே! எத்துணை கண்கள் வேண்டும்? எனக்கோ வேறு கவலை. கோட்டான்களும், ஓநாய்களும், நரமாமிசபட்சிகளும் குடியிருக்கும் இந்த இடத்திலிருந்து எவ்வளவு விரைவாக முடியுமோ அவ்வளவு விரைவாக ஓடித் தப்பிவிட வேண்டும் என்ற கவலை. இப்படிச் சஞ்சலத்திலே நான் ஆழ்ந்திருக்கும்போது திடுதிடுப்பென்று கண்முன்னே தோன்றினாள் ஓர் இளம்பெண். அவளுடைய கையிலே கைக்குழந்தை. முகத்திலே ஓடிக் களைத்த களை தெரிந்தது. கண்களிலோ விவரிக்க முடியாத பயம் இருந்தது.

“பெரியவரே இந்தக் குழந்தையை கொஞ்சம் பிடித்துக் கொள்ளுங்கள்” என்றாள் அவள் வந்ததும் வராததுமாக. “யாருடைய குழந்தை இது? எதற்காக அதனை என்னிடம் கொடுக்கிறாய்?” என்று புரியாமல் கேட்டேன் நான். “ஐயா பெரியவரே, கொடியவர்கள் இந்தக் குழந்தையைக் கொன்றுவிடுவதற்காக வருகிறார்கள், நீங்கள்தான் காப்பாற்ற வேண்டும்” என்றாள் இளம்பெண் கெஞ்சலுடன்.

“எதற்காக இந்தப் பச்சிளம் பாலகனைக் கொல்ல வேண்டும்?”

“ஐயா, இதைப் பற்றியெல்லாம் விளக்கஞ் சொல்லிக் கொண்டிருக்க எனக்கு அவகாசமில்லை. நான் விரைவில் திரும்பி வந்து எல்லா விபரங்களையும் சொல்லுகிறேன். அதுவரை இந்தக் குழந்தையை வாங்கிக் கொள்ளுங்கள்” என்று மீண்டும் கெஞ்சினாள் அவள். “என்னை உனக்குத் தெரியாது. கொஞ்சமேனும் அறிமுகமில்லாத என்னிடம் எப்படி குழந்தையை நம்பி ஒப்படைக்கிறாய். நான் குழந்தையை ஒன்றுமே செய்துவிட மாட்டேன் என்பது என்ன நிச்சயம்?” என்று கேட்டேன் நான். இக்கட்டான அந்த வேளையிலும் மெலிதாகப் புன்னகைத்தவள் “இங்கே பாருங்கள் ஐயா, இதற்கெல்லாம் பெரிய கணக்குப் போடவேண்டிய தேவையில்லை. இந்த வெறிபிடித்த யுத்த களத்திலே நீங்களும் நானும் மாத்திரம்தான் ஆயதங்கள் எதுவுமில்லாமல் நிற்கிறோம். அதுவே எனக்குப் போதும்” என்றாள் அவள். எனக்கும் வேறுவழியில்லை நான் குழந்தையைக் கையில் வாங்கிக் கொள்ள அவள் வந்த வழியே திரும்பி ஓடினாள்.

“குழந்தையின் பெயர் என்ன? சொல்லி விட்டுப்போ பெண்ணே” என்று கூவினேன் நான். “நைல் நதிக்குழந்தை” என்றாள் அவள்.
“நைல்நதிக் குழந்தையா?”
“ஆமாம்”
நான் பெண்ணை நிற்கும்படி அவசர அவசரமாக சைகை காட்ட அவள் வேகத்தைக் குறைத்துக் கொண்டாள். “பெண்மணியே, நீ சொல்கிற இந்தப் பெயரிலே ஒரு குழந்தைதான் உலகத்தில் வாழ்ந்தது. அந்தக் குழந்தையும் வாழ்ந்தது கதையில். இன்று நிஜமாகப் பார்க்கிறேன். அந்தக் குழந்தையைப் பற்றி உனக்கு ஏதாவது தெரியுமா?” என்று ஆவலோடு கேட்டேன் நான். “மிக நன்றாகவே தெரியும். அந்தக் குழந்தைக்கு இறுதியில் என்ன நடந்தது என்பது கூட எனக்குத் தெரியும்..” என்றாள் அவள் கீழ்மூச்சு மேல்மூச்சு வாங்க. “விரைவாகச் சொல். அந்தக் குழந்தையைக் கொல்வதற்காக எதிரிகள் கூரிய வாட்களுடன் விரைந்து வருகிறார்கள் அல்லவா? அதற்குப் பிறகு என்ன நடந்தது?” நான் அவளை அவசரப்படுத்தினேன். ஆனால் அவள் பதிலேதும் சொல்லாமலேயே ஓடிமறைந்தாள். நான் ஏமாற்றத்துடன் திரும்பிய அதே கணம் அவளைத் துரத்திவந்தவர்கள் அருகே வரவே நான் அவசரமாக குழந்தையைப் பற்றையொன்றுக்குள் மறைத்தேன்.

“கைக்குழந்தையோடு இவ்வழியாக இளம் பெண்ணொருத்தி வந்தாளா?” என்று கேட்டான் வந்தவர்களில் ஒருத்தன். இல்லையென்று நான் பொய் சொன்னேன். குழந்தையின் உடலில் சிறுசிறு காயங்கள் இருந்தன. நெற்றி வெடித்திருந்தது. வலது கண்இமையைச் சுற்றி இரத்தம் உறைந்து போயிருந்தது. முழங்காற் சில்லுக்கு நேராக உராய்வுக்காயங்கள் இருந்தன. குழந்தையின் கண்களில் பயப்பிராந்தி அப்பட்டமாகத் தெரிந்தது. குழந்தையின் அரைஞாண் கயிற்றிலே செருகப்பட்டிருந்த ஒரு கடதாசியை நான் எடுத்துப்பார்த்தேன். அது குழந்தையின் பிறப்பு அத்தாட்சிப்பத்திரம். அத்தோடு ஒருகுறிப்பும் காணப்பட்டது. “பெரியவரே இந்தக் குழந்தை யுத்தத்தை அறவே வெறுக்கின்ற குழந்தை. தயவுசெய்து எப்படியாவது காப்பாற்றுங்கள்” என்பதே அந்தக் குறிப்பு. நான் இப்போது குழப்பமடைந்து காணப்பட்டேன். கதையில் வந்த நைல்நதிக்குழந்தைக்கும் இந்தக் குழந்தைக்கும் என்ன தொடர்பு என்பதே அந்தக் குழப்பம். அந்தக் குழந்தைதான் இதுவா? எங்கயோ எப்போதோ வாழ்ந்த குழந்தை இப்போது இங்கே திரும்பி வரமுடியுமா? நான் குழந்தை கிடைத்த கையோடு என்னுடைய சொந்த நாடான சுவர்க்கத்தீவிற்குப் பயணமானேன்.

இரண்டு கிலோமீற்றருக்கு ஒன்று வீதம் சோதனைச் சாவடிகள் காணப் பட்டதால் ‘ஆசியாவின் சோதனைச் சாவடி’ என்று என் நாட்டைச் செல்லமாக அழைப்பார்கள். சிப்பாய் குழந்தையை முறைத்துப் பார்த்தவாறே “இது யாருடைய குழந்தை?” என்று கேட்டான்.

"என் தங்கையின் குழந்தை"
"ஏன் உன்தங்கை வரவில்லை?"
"அவள் லெபனானில் பணிப்பெண்ணாக வேலை பார்க்கிறாள்" நாக்கூசாமல் பொய் சொல்வதைத் தவிர எனக்கு வேறுவழி தெரியவில்லை. "எங்கே குழந்தையின் பிறப்பு அத்தாட்சிப் பத்திரம்?" நான் காட்டினேன். சிப்பாய் அப்படியும் இப்படியும் புரட்டிப் பார்த்துவிட்டு அதனை மேலதிகாரியிடம் எடுத்துச்சென்றான். அரபு மொழியில் இருந்ததே அதற்குக் காரணம்.
"ஏன் பிறப்பு அத்தாட்சிப்பத்திரம் அரபியில் இருக்கிறது?"
"குழந்தை லெபனானில் பிறந்தது" மேலதிகாரி நம்பாதவன்போல் என் முகத்தைப் பார்த்துவிட்டு குழந்தையின் வயிற்றை நசிக்க குழந்தை அழ ஆரம்பித்தது. மேலதிகாரி குழந்தையை ஸ்கேனிங் இயந்திரத்திற்குள் வைத்தான். அதாவது குழந்தையின் வயிற்றுக்குள், நெஞ்சிற்குள் வெடிபொருட்கள் ஏதும் மறைத்து வைக்கப்பட்டிருக்கிறதா என்று பரிசோதிக்கிறார்கள்.

"சின்னஞ்சிறு குழந்தையை எதற்காக இப்படியெல்லாம் புரட்டி எடுக்கிறீர்கள்? அது என்ன பாவம் செய்தது?" நான் ஆற்றாமை தாங்காமல் கேட்க "கோபிக்க வேண்டாம் பெரியவரே, சந்தேகம் வந்துவிட்டால் நாங்கள் யாரையும் விட்டுவைக்க மாட்டோம் அது குழந்தையானாலும் சரியே" என்றான் மேலதிகாரி. எப்படியோ கண்டத்திலிருந்து தப்பி எனக்குரிய பேரூந்தில் ஏறினேன். பேரூந்து காட்டு வழியே போய்க்கொண்டிருக்கும் போது திடுதிடுப்பென்று நான்கு பேர் பேரூந்திற்குள் ஏறி என்னை நோக்கி வந்தார்கள். அவர்களுடைய கைகளிலே நவீன ஆயுதங்கள் இருந்தன. "குழந்தையின் பெயர் என்ன நைல்நதிக் குழந்தையா?" என்று கேட்டான் ஒருத்தன். நான் தயக்கத்துடன் "ஆம்" என்றேன். அவன் பலவந்தமாக என் கையிலிருந்த குழந்தையைப் பிடுங்கியெடுத்தான். "ஐயோ குழந்தையை ஒன்றும் செய்துவிடாதீர்கள்" என்று மன்றாடினேன் நான். வந்தவர்கள் நால்வரும் குழந்தையை எடுத்துக் கொண்டு கீழே இறங்கினார்கள். "ஐயோ, குழந்தையை எங்கே கொண்டு போகிறீர்கள்? தந்துவிட்டுச் சொல்லுங்கள்" என்று கதறினேன் நான். அவர்கள் என் கதறலைக் காதில் போட்டுக் கொள்ளவேயில்லை. கடைசியாகப் போனவன் என்னைத் திரும்பிப் பார்த்து "பெரியவரே, "தங்கள் குழந்தையை துார்ந்துபோன குளத்திலோ அல்லது மயானத்திலோ நாளை தேடிப்பாருங்கள்" என்று சொல்லி கடுகதி வேகத்தில் போய்விட்டான். ஆனால் குழந்தை அப்படிக் கூட எனக்குக் கிடைக்கவில்லை.



# நோயாளியும் பஞ்சு மிட்டாயும்

எம்.எம்.நௌஷாத்

நூலிழையாக ஜனித்து ஈரற்பக்கம் நகர்ந்து, நெஞ்சக்குழிக்குள் செருகி, பூதாகாரமாகி, எஃகாகி, இதயத்தைப் பிளந்து, நரம்புமண் டலத்தையே அதிரச்செய்வதுபோல் உணர்வை உண்டாக்கியது வலி. எவ்வித உணர்வுமற்று நெஞ்சைப் பிடித்துக்கொண்டு கயிற்றுப் பாலத்தின் மீது சாய்ந்து விட்டான் சரிபாஸு. என்ன கிராமத்தவனே என்பது போல்தான் அரசாங்க ஆஸ்பத்திரியிலே கவனிப்பு நடந்தது. நோயாளியை அழைத்துக்கொண்டு போன எனக்கு போதும் போதும் என்றாகிவிட்டது. வரவேற்புத்தாதி தனக்குள்தானே பாடிக் கொண்டே கரடிப்பொம்மைக்கு கண் வைத்துக் கொண்டிருக்க, சிற்றூழியன் தொலைக்காட்சியிலே கிரிக்கட் ஆடிக்கொண்டிருந்தான். டாக்டரின் மேசையொ சுவாரஷியமான சம்பாஷணை மேடை. குத்தல் பேச்சுக்கள், கிண்டலும் கேலியும், மலர்ச் செண்டுகளும், மலர்ச்சிரிப்புகளும். வண்ண பிளாஸ்ரிக் பெயர்ப்பலகைகள, காலணிகளைக் கழற்றிவிட்டு உள்ளேவரவும், உஷ்.... அமைதி, நோயாளியே எங்கள் அரசன், இப்படிப் பல சுலோகங்கள்.

'ஈஸிஜி இல்லாமல் எதுவும் செய்யமுடியாது' செல்லிடப்பேசியை காதில் வைத்துக்கொண்டே டாக்டர் முத்தை உதிர்த்தாலும் ஈஸிஜி அறையிலோ வேறு கதை இருந்தது. நீண்ட கியூவுக்கும் ஒரே ஆள் சாவகாசாமாக ஈஸிஜி எடுத்துக் கொண்டிருந்தார். ஒருவருக்குவயிற்றுப் போக்காம். செத்துப்போன பாட்டி வீட்டிற்குப்போன மற்ற ஈஸிஜி பெண்மணியைப் பற்றி தகவல் எதுவும் இல்லையாம். மூன்றாமவர் தள்ளாடித் தள்ளாடித் வெற்றிலையைக் வாயில் குதப்பிக் கொண்டு வந்தபோது நேரம் ஒன்பதுமணி. ஒன்பதிலிருந்து பத்துவரை உதவியாளர் இல்லை என்ற கதையும் பத்திலிருந்து பதினொன்றுவரை மின்சாரம் இல்லை என்ற நொண்டிச் சாட்டும் பன்னிரண்டு மணிக்கு மதிய உணவுக்கு போகவேண்டுமாம் என்ற கதைச் சுருக்கம்.

பூரணநிலவு நாட்களில் சிறுகற்பாறையின் மீதமர்ந்து நிலவையே வெறித்துப் பார்த்துக் கொண்டிருப்பான் சரிபாஸு. சனிக்கிழமை நாட்களில் உச்சிமலைக் காட்டுக்கு மலைத்தேன் சேகரிக்கப் போய்விடுவான், பகற் பொழுதுகள் மாந்தோப்புக்குள் கழியும். மாந்தோப்புக்குப் பின்னால் குடியிருக்கும் எனக்கு சரிபாஸுவின் வாழ்கையின் ஒருசில பக்கங்கள் மட்டுமே தெரியும். இருபந்தைந்து வருடங்களாக சரிபாஸு ஒருபையனை வளர்த்தான்; உயிரைக் கொடுத்து வளர்த்தான். இருபத்தைந்து வருடங்களுக்கு முன்னால் பூரணநிலவு நாளொன்றில் ஓடிப்போன அந்தப் பையன் சரிபாஸுவை மறக்காமல் பெரிய பார்சலும் பெரிய காசோலையும் ஒவ்வொரு வருடமும் அனுப்பிக்கொண்டே இருக்கிறான். பார்சலைப் பிரித்துப்பார்க்கும் எவரும் கொடுப்புக்குள் சிரித்துக்கொள்வார்கள்.

சரிபாஸூம் சிரிப்பான்; சிலவேளை கண்களைத் துடைத்துக் கொள்வான். பார்சலில் ஆடைகள், டூத்பேஸ்ட், கம்பாயம், சவர்க்காரம், காலணி, தலைப்பாகைத்துணி, இடுப்புப்பட்டி எல்லாம் இருக்கும். எல்லாம் விலைஉயர்ந்த துணிகள். சரிபாஸூ ஒருபோதும் அவைகளை உடுத்து அழகுபார்த்தது கிடையாது. அவற்றையெல்லாம் ஓர் அறையிலே அடைத்து வைத்திருக்கிறான். காசோலைகள் மாற்றப் படாமல் பூட்டுப்போட்ட பழைய இரும்புப்பெட்டிக்குள்ளே நிறம்மங்கி, உலர்ந்து பத்திரமாக இருக்கின்றன. சரிபாஸூக்கு மூளைக் கோளாறோ தெரியாது. காசோலைகளை மாற்றி ராஜாமாதிரி சொகுசாக வாழ்வதை விடுத்து இப்படி வெயிலிலும் மழையிலும் அடிப்பட்டு மதிபட்டு ஏன் இப்படி வாழ்கிறான் என்று தெரிந்து கொள்ள முயற்சித்து நான் தோல்வியைத்தான் அடைந்தேன். ஓடிப்போன பையன் யார்? என்ற என்புதிருக்கு இன்னும் விடையில்லை.

“பெரியவரே ஈஸிஜியில் ஒன்றுமில்லை; இதயத்திலும் ஒன்றுமில்லை. பயப்பட வேண்டாம்” என்று சோடாப்புட்டி டாக்டர் பிரகடனம் செய்ததால் சரிபாஸூ ஆறுதலடைந்து டாக்டர் எழுதித்தந்த மாத்திரைகளை வேளை தவறாமல் சாப்பிட்டு வந்தாலும் இரண்டு வாரங்களிலேயே நெஞ்சுவலி மீண்டும் ஆரம்பித்து விட்டது. அவ்வேளை ஆபத்பாந்தவனாக வந்து சேர்ந்தான் அலுவலக நண்பன். “நகர மத்தியிலே உள்ள தனியார் நேஸிங்ஹோமுக்கு டாக்டர் சுமங்கலி என்றொரு விஷேட நிபுணர் வருகிறார். ராசிக்கார டாக்டர். கைமேல் பலன் தரும் மருந்துகள். அவரிடம் போ. அல்லாவிட்டால் நீ இந்த ஆளை பிரேத அறைக்குத்தான் கொண்டுபோய்ச் சேர்ப்பாய்” என்று அவன் என்னைப் பயமுறுத்தினாலும் சாந்த சொரூபியான டாக்டர் சுமங்கலியைப் பற்றி நண்பன் சொன்னதெல்லாம் நூற்றுக்கு நூறு உண்மையே. சனக்கூட்டம் திமுதிமுவென்று அவருக்காகக் காத்திருந்தது. சரிபாஸூக்கு கிடைத்த இலக்கம் ஐம்பத்தி நான்கு.

“நெஞ்சுவலி எப்போதெல்லாம் வரும்? இருந்தாற்போல வருமா? தொடரந்து வருமா?”
“இருந்தாற் போல்”
“கடினமான வேலைகள் செய்யும் போது நெஞ்சுவலி அதிகரித்துக் கொண்டே போகுமா?”
“நோயாளி செய்வதெல்லாம் கடினமான வேலைதான் டாக்டர்” என்றேன் நான். டாக்டர் சுமங்கலி சற்றுச் சினந்தது போல் தோன்றிற்று என்றாலும் புன்முறுவலை வலிந்து வரவழைத்துக் கொண்டே “மாடிப் படிகளில் ஏறும்போது இளைப்பு அல்லது மூச்சு திணறல் ஏற்படுவது போல் உணர்வு வருகிறதா?” என்று கேட்டார். “ஐயா நான் மாடிப்படிகளில் ஏறியதே கிடையாது” என்றான் சரிபாஸூ. “சரி சரி உங்களுக்குரிய

நேரம் முடிவடைந்து விட்டது” என்று கோபத்துடன் சொன்ன டாக்டர் சுமங்கலி மளமளவென்று சிட்டையை எழுதி என்னிடம் நீட்டினார். “டாக்டர் என் மார்பைப் பரிசோதிக்க மறந்து விட்டாரே” என்று என் காதுக்குள் கிசுகிசுத்தான் சரிபாஸு. என்ன சொல்வதேன்றெ தெரியாமல் “டாக்டர் சுமங்கலி கெட்டிக்கார டாக்டர். கேட்டாரே மூன்று கேள்விகள், அந்தக் கேள்விகள் மிக முக்கியமான கேள்விகள். அதற்கான விடைகளையும் முகக்குறிகளையும் வைத்தே நோயைக் கண்டுபிடித்திருப்பார் டாக்டர்” என்று நான் சமாளிக்க சரிபாஸு சரியென்று தலையாட்டினான். சிட்டையை அருகிலிருந்த பார்மஸியில் நீட்டினேன். பார்மஸி இளம்பெண் உதட்டைப் பிதுக்கிக் கொண்டே “ஐயா, நான் இங்கு வேலைக்குச் சேர்ந்து ஒரு வாரம்தான் ஆகிறது. எழுதியிருப்பது என்னவென்று புரியவில்லை” என்று அழாக்குறையாகக் கூறினாள். மருந்துச் சிட்டையை வாங்கிப்பார்த்த அடுத்த பார்மஸிப் பையன் புரியாத விதத்தில் மருந்துச் சிட்டைகள் வந்தால் எப்படி நடந்துகொள்ள வேண்டுமென்று முதலாளி சொல்லிக் கொடுத்ததிற்கு இணங்க “ஐயா, இந்த மாத்திரை இன்றைக்கு காலையில்தான் விற்று முடிந்தன. இரண்டு நாட்கள் கழித்து வாருங்கள்” என்று சிட்டையைத் திருப்பிக் கொடுத்தான்.

நல்ல வேளையாக சோடாப்புட்டி டாக்டர் அந்த வழியே வந்து கொண்டிருந்தார். சிட்டையைப் பார்த்தவுடன் சோடாப்புட்டி சிரிக்க ஆரம்பித்துவிட்டது. “இது மருந்துச்சிட்டை அல்ல. நீங்கள் Exercise ECG எடுக்க வேண்டும், உங்கள் இரத்தத்தில் கொழுப்பு அதிகமிருக்கிறதா என்று Lipid Profile பார்க்க வேண்டும், FBS, இரத்தத்தில் சீனி இருக்கிறதா என்று பார்க்க வேண்டும் அதைத் தான் டாக்டர் சுமங்கலி எழுதியிருக்கிறார்” என்றார் சோடாபுட்டிக்காரர். பரிசோதனை அறிக்கைகளோடு டாக்டர் சுமங்கலியிடம் மீண்டும் போனோம். இந்தமுறை எந்த இடக்குமுடக்கும் இருக்காமல் டாக்டர் சுமங்கலி எதுவும் கேட்காமல் சினந்து கொள்ளாமல் புன்முறுவல் செய்யாமல் பரிசோதனை அறிக்கைகளை ஒரு பார்வையால் பார்த்துவிட்டு மருந்துச்சிட்டையை கடகடவென்று எழுதி சரிபாஸுவின் வலதுகையில் திணித்தார். எல்லாம் 165 விநாடிகளில் முடிந்து விட்டன. பாமஸிக்காரன் கூட இந்தத் தினத்தில் நல்லவனாகத்தான் தெரிந்தான். மிகப் பவ்வியமாக மருந்துப் பார்சலைப் பொதிசெய்து தந்து பில்லையும் நீட்டினான்.

மூன்று பாணிமருந்துகள் சிவப்பு, மஞ்சள், கபில நிறங்களில். மூன்று கப்சூல்கள். வெள்ளைமூடி, சாம்பல்மூடி, நீலமூடிகளில். மூன்று மாத்திரைகள் சிறியது மஞ்சல், மத்திமம் இளம்பச்சை, பெரியது வெள்ளை. வர்ணவர்ணக் கலவைகளைப் பார்த்தமாத்திரத்தில் பூரண

திருப்தியடைந்த சரிபாஸு வேளை தவறாமல் மருந்தை உட்கொண்டு அவனுடைய நெஞ்சுவருத்தமும் மிகவேகமாக் குறைந்துகொண்டு வந்தது என்றாலும் இந்த மகிழ்ச்சி இரண்டுவாரங்களுக்கு மேல் நீடிக்கவில்லை. மீண்டும் நெஞ்சுநோவு தொல்லை கொடுக்கவே இதயத்திற்கென்று இருக்கின்ற விஷேட வைத்திய நிபுணரிடம் காட்டினால் இதயத்தின் உண்மையான நிலைமையை அறிந்து கொள்ளலாம் என்று எல்லோரும் அறிவுரை சொன்னதால் Cardiologistஐ சந்தித்தோம். Cardiologist இரண்டே இரண்டு நிமிடங்கள் சரிபாஸுவைப் பரிசோதித்து மளமளவென்று மருந்துச்சிட்டையை முழுவதுமாக மூடுமளவுக்கு செய்ய வேண்டிய பரிசோதனைகளை எழுதிக்கொடுத்தார்.

மூன்றுநாட்களில் மீண்டும் வந்தபோது மூக்குக் கண்ணாடியை உயர்த்தியும், தாழ்த்தியும், சிந்தனைவயப்பட்டும் பரிசோதனை அறிக்கைகளைப் படித்த Cardiologist சரிபாஸுவை ஒருதரம் பார்த்துவிட்டு “Mr. சரிபாஸு இதயத்தில் உங்களுக்கு எந்தக் கோளாறுமில்லை என்று இந்த அறிக்கைகள் சொல்லுகின்றன. எனவே Mr.சரிபாஸு உங்கள் இதயம் ஆரோக்கியமான இதயம் என்று சந்தோஷத்துடன் சொல்ல நான் ஆசைப்படுகிறேன். என் வேலையும் முடிந்தது, நீங்கள் இனி எந்த டாக்டருக்குப் பின்னாலும் செல்ல வேண்டிய தேவையுமில்லை” என்று சுதந்திரப் பிரகடனம் போல் அறிவித்த அவர் சரிபாஸுவின் கையை வலிந்து பிடித்து கை குலுக்கினார். ஆலோசனை அறையை விட்டு வெளியே வந்த சரிபாஸுவின் முகத்தில் துளிக்கூட சந்தோஷம் இல்லை. வீட்டை அடகு வைத்தாயிற்று, டாக்டரின் இந்தப் பிரகடனத்திற்கு கொடுத்த விலை சொந்தவீடு என்பதால் வீட்டை எப்படி மீட்டெடுப்பது என்ற கவலை அவனைச் சூழ்ந்துகொண்டதுபோல் நான் உணர்ந்தேன்.

இப்போது புதிதாக வயிற்றுநோவும் அவனை ஆட்கொண்டது. சாப்பிடாமல் இருப்பான். ஏனென்று கேட்டால் சாப்பிட முடியவில்லை, வயிறு ஊதிப்பருப்பதுபோல் பிரமை உண்டாவதாகக் கூறுவான், அடிக்கடி ஒருக்களிப்பான், கட்டிலில் புரண்டு அழுவான், வேதனையால் துடிப்பான் என்று இப்படியாக சரிபாஸுவின் நிலை மோசமாகி வந்தது. அவன் அடிக்கடி மேல்வயிறு எரிகிறது என்றும் கீழ்வயிறு எரிகிறது என்றும் சொல்லுவான். பூச்சி மருந்து கொடுத்துப் பார்த்தேன். புழுக்களும் விழவில்லை. தானுண்டு தன் வேலையுண்டு என்று சந்தோசமாக நடமாடிய சரிபாஸுவின் வாழ்க்கை அடிக்கடி படுத்த படுக்கையாக இருப்பது வாழ்க்கையாகி விட்டது. இதற்கிடையில் மந்திரவாதிகளும், பில்லி, சூனியம் வெட்டுபவர்களும், தாயத்துக்

கட்டுபவர்களும் சரிபாஸூவின் வீட்டுக்கு அடிக்கடி வந்து போனார்கள். கவலை என்னையும் ஆட்டிப் படைத்து நான் என்ன செய்வததெறியாமல் கையைப் பிசைந்து கொண்டிருந்த வேளை அலுவலக நண்பன் வந்தான்.

'வயிற்றுள் புண்கள் இருந்தாலும் இப்படித்தான் நெஞ்சுவலி வருவது போல் இருக்கும், வயிறு உப்புவது, அடிக்கடி வாந்தி வருவது போல் இருப்பது, எரிவு எல்லாமே இதற்குரிய அறிகுறிகள் தான். அறுவைச் சிகிச்சை நிபுணரிடம் காட்டுவது நல்லது. குடற்புற்று நோயாகக் கூட இருக்கலாம். கைம்மருந்துகளைச் செய்து கொண்ருப்பது நல்லதல்ல" என்றான் அவன். அவன் சொல்லுவதிலும் நியாயமிருக்கவே மீண்டும் கைராசியான டாக்டரைத் தேடும் படலத்தை நான் ஆரம்பித்தேன். நண்பனே டாக்டர் ரைலாபாக்கைப் பற்றி என்னிடம் சொன்னான். Gastroenterologist டாக்டர் ரைலோபாக்கிற்கு இப்போது 50 வயதாகிறது. அவருக்கு வயிற்று உபாதைகள் எல்லாம் அத்துப்படி. நோயாளியின் வயிற்றை ஒரு பார்வையிலே அளந்து மலச்சிக்கல், குடற்புற்று, இரைப்பை அழற்சி, குடற்புண், வயிறு உப்புதல் இப்படி எதையெடுத்தாலும் கண்டுபிடித்து விலாவாரியாக ஒப்புவிப்பார், மருந்தும் சொல்வார், எல்லாம் ஓரிரு கணத்துக்குள் நடந்து முடிந்துவிடும் என்று நண்பன் சொல்லச் சொல்ல என்னே கெட்டித்தனம்! என்று நான் வியந்துபோனேன்.

தாதி சரிபாஸூவை கட்டிலில் படுக்கவைத்தாள். சரிபாஸூவுக்கு கண் திறக்கக் கூட திராணியிருக்கவில்லை. ஏற்கனவே மறு கட்டிலில் இன்னுமொரு நோயாளியும் படுத்திருந்தார். நிமிடத்திற்கு ஒரு தடவை நோயாளிகளை மாற்றிக் கொண்டிருந்தாள் தாதி. இதுதான் டாக்டர் ரைலாபாக் style என்று அங்கிருந்தவர்கள் சொன்னார்கள். பார்த்தால் அப்படித்தான் தெரிந்தது. டாக்டர் ரைலாபாக் பம்பரமாகச் சுழன்று சுழன்று நோயாளிகளின் வயிற்றுப் பகுதியை பரிசோதித்துக் கொண்டிருந்தார். கதை, பேச்சு, உரையாடல் எதுவும் கிடையாது. நோயாளியின் முகத்தை அண்ணாந்து பார்க்கக்கூட அவருக்கு நேரமிருக்கவில்லை. கண்ட காட்சி தட்டாமாலை பூ சுற்றுவதுபோல காட்சியளித்தது. டாக்டர் ரைலோபாக் திருமணம் முடித்த நாளிலிருந்து மனைவியின் முகத்தை ஏறெடுத்தும் பார்த்ததில்லை என்று அவரைக் கிண்டல் செய்யும் விதத்தில் பரவலாக உலவி வந்த கட்டுக்கதையின் தாற்பரியத்தை இப்பொழுது நான் தெளிவாகப் புரிந்துகொண்டேன்.

டாக்டர் ரைலோபாக் Ba enema செய்தார்; Ultrasonagraphy செய்தார்; Colonoscopy செய்தார்; Endosoopy செய்தார். இன்னும் என்னவெல்லாமொ நிறைய பரிசோதனைகள். "நோயாளியின் வயிற்றிலே

எந்தக் கோளாறுமில்லை. நான் தருகின்ற மாத்திரைகளை ஒரு மாதம் பாவியுங்கள், எனக்குத் தெரிந்த சிறுநீரக விஷேட நிபுணருக்கு கடிதம் எழுதியிருக்கிறேன். அவரிடம் காட்டிப் பார்த்தீர்களென்றால் மனசுக்குத் திருப்தியாக இருக்கும்" என்று டாக்டர் ரைலாபாக் கடைசியிலே சொல்லச் சொல்ல நான் ம்ம் என்றேன்.

நோய் நன்றாக முற்றிவிட்டது. சரிபாஸு அடிக்கடி பிதற்ற ஆரம்பித்தான். நான் இனிமேல் எந்ந டாக்டரையும் சந்திக்கப் போவதில்லை. என் மரணம் சமீபித்து விட்டது. கனவுகளில் பிசாசுகள் என்னைக் கூவி அழைக்கின்றன. நான் அவைகளுடன் போகவேண்டும் என்று ஓரிரவு ஏதோதோ உளறிக்கொட்டினான் சரிபாஸு. மரங்கள் சடசடத்தன, எங்கோ ஓநாய் ஊளையிட்டது, அதி பயங்கரமான இரவு அது. நான் நன்றாகப் பயந்துபோனேன். விடிவதற்கு முன் சரிபாஸு இறந்து விடுவானோ என்று அஞ்சினேன்.

அடுத்த நாட்காலை என் வீட்டுக் கதவை யாரோ தடதடவென்று வேகத்துடன் தட்ட சரிபாஸுவின் மரணச்செய்திதான் வருகிறது என்று உள்ளுணர்வு சொல்ல மனத் திடுக்கத்துடன் கதவைத் திறந்தேன் நான். வலது கையில் பெரியதொரு பஞ்சுமிட்டாய்ப் பொதியுடன் ஓர் ஆள். எங்கேயோ பார்த்த முகம். இடது கன்னத்தில் செம்பிறைக் கருமச்சம், தடித்த உதடுகள். கடவுளே! இவர் டாக்டர் ரைலாபாக். சந்தேகமேயில்லை டாக்டர் ரைலாபாக் தான். நான் ஆச்சரியத்தில் திக்குமுக்காடிப் போனேன். நகரமாந்தர்களின் கதாநாயகன் கோமாளி வேஷத்துடன் இந்தக் கிராமத்திற்கு என்னசெய்ய வந்திருக்கிறார்?
"நீங்கள் திரு ஹரிபாலா தானே.....?"
"ம்......ம்.."
"என்னை உங்களுக்குத் தெரிந்திருக்க காரணமில்லை. நான்தான் Dr ரைலாபாக். சரிபாஸுவின் சுகதுக்கங்கள் எல்லாவற்றிற்கும் நீங்கள்தான் மூலகாரணம் என்று எனக்குக்தெரியும். Glad to Meet You" என்று சொன்ன டாக்டர் ரைலாபாக் கையை நீட்டினார். நானும் மறுவழியின்றி கையை நீட்டினேன். அவர் கேட்காமலேயே அமர்ந்துகொண்டு உரையாட ஆரம்பித்தார். டாக்டர் ரைலாபாக்குடன் அமர்ந்து உரையாடிய பின் ஆச்சரியம் என்னை சூழ்ந்துகொண்டது. இருபத்தைந்து வருடங்களாக காசோலையும் பண்டங்களும் அனுப்பும் பிரகிருதி. இருபத்தைந்து வருடங்களுக்கு முன் ஓடிப்போன சரிபாஸுவின் பையன் தான் இந்த ஆள்.

"என் உயிர், உடல் எல்லாம் அவர்தான். மருத்துவப் படிப்பை முடித்துவிட்டு வந்த பிறகு குக்கிராமத்திலேயே தங்கியிருக்கும்படி

கூறியதை என்னால் ஏற்றுக்கொள்ள முடியவில்லை. இதுதான் என் தந்தையிடமிருந்த பிடிவாதம். இந்தப் பிரச்சினையே ஒருநாள் பூதாகரமாகி, சண்டையாக வெடித்து, அன்று பூரணநிலவுநாள்...” டாக்டரின் வார்த்தைகளில் தளர்வு இருப்பதை நான் அவதானித்தேன். “....நான் உடுத்த உடுப்போடு வெளியேறினேன்” டாக்டர் அழுதுவிடுவார் போல் எனக்குத் தோன்றியது. “காலவோட்டத்தில் எல்லாம் சரியாகி விடும் என்று நான் நினைத்தேன். ஆனால் அவர் மாறவே இல்லை. அற்ப பணம் காசுகளுக்காக ஓடும் எலிகளுக்கு மத்தியில் அவர் சிங்கமாக இருக்க ஆசைப்பட்டார். நான் ஆடம்பர வாழ்க்கையை தேர்ந்தேடுத்தேன், எனக்கு பணம் தேவைப்பட்டது” டாக்டர் சற்று நிறுத்திவிட்டு கண்களைத் துடைத்துக் கொண்டார். டாக்டரை சரிபாஸு அருகில் கொண்டுபோய் விட்டுவிட்டு நான் வெளியேறினேன்.

இரண்டு மூன்று மணித்தியாலங்களாக டாக்டர் அறையிலிருந்து வெளிவரவேயில்லை. நான் மெதுவாக சாவித்துவாரத்தினூடாக பார்த்தேன். டாக்டரும் சரிபாஸுவும் அள்ளியள்ளி பஞ்சு மிட்டாய் சாப்பிட்டுக் கொண்டிருந்தார்கள். நிச்சயமாக இது நான் Nursing Home இலே பார்த்த Gastroenterologist டாக்டர் ரைலாபாக் இல்லை. “என் பையன் முசுப்பாத்தியான ஆள், பஞ்சு மிட்டாய் என்றால் உயிரையே விட்டுவிடுவான்” என்று சரிபாசு அடிக்கடி சொல்லும் ரைலாபாக் தான் அங்கே நின்றார். 78 வயது கிழவருக்கு இளமை திரும்பிவிட்டது போல் கொஞ்ச நேரம் கழித்து சரிபாஸு கம்பீரமாக நடந்துவர என்னால் நம்பவே முடியவில்லை. இங்கே என்ன நடக்கிறது? ஆறு மாதங்கள் கழித்து இப்படி அளவு கடந்த சந்தோசத்தை சரிபாஸுவின் முகத்தில் இன்றுதான் பார்க்கின்றேன்.

“டாக்டர் உங்கள் தகப்பனாருக்கு என்ன நோயென்று எந்த டாக்டரும் இதுவரை கண்டுபிடிக்கவே இல்லை, உங்களையும் சேர்த்துத் தான் சொல்லுகிறேன். நீங்கள் எப்படி இவ்வளவு விரைவாகக் குணப்படுத்தி விட்டீர்கள்?” நான் ஆச்சரியத்துடன் கேட்க டாக்டர் ரைலாபாக் கலகலவென்று சிரிக்க ஆரம்பித்தார். “பஞ்சுமிட்டாய் சாப்பிட்டோம். எல்லா உபாதைகளும் அடியோடு பறந்து போய்விட்டன” என்றார் டாக்டர்.

“பஞ்சுமிட்டாயா, நோய்க்கும் அதற்கும் என்ன சம்பந்தம்?”

“திரு. ஹரிபாலா சின்னவயதிலே இப்படித்தான் நாங்கள் இருவரும் அடிக்கடி பஞ்சுமிட்டாய் சாப்பிடுவோம். அப்போது எல்லாக் கவலைகளும் மறந்துவிடும், மனசும் ஆறுதலாக இருக்கும். அவருக்கு நோயிருந்தால் தானே குணமடைவதற்கு. எல்லாம் என்னைப் பிரிந்த கவலை தான், அந்தக் கவலை அவர் மனதையும் அரித்தது, உடம்பையும் அரித்து அரித்து அவரை நோயாளியாக்கியது”

டாக்டர் சொல்லி முடிக்கவில்லை, டாக்டரின் செல்லிடப்பேசியில் சமிக்ஞை, அதாவது எலிப்பந்தய சக்கரம் சுழல ஆரம்பித்து விட்டது. “திரு ஹரிபாலா எனக்கு அவசர எஸ்எம்எஸ் மெஸேஜ் வந்திருக்கிறது. என்னுடைய நோயாளிகள் எனக்காகக் காத்துக் கொண்டிருக்கிறார்கள். நான் உடனடியாகப் போக வேண்டும்” டாக்டர் ரைலாபாக் கைகுலுக்கினார். “நேரம் முடிந்துவிட்டது” என்று சொல்லியபடியே கைக்குட்டையால் மூக்குக் கண்ணாடியைத் துடைத்துக் கொண்ட டாக்டர் ரைலாபாக் ‘என்னுடைய தந்தைக்கு நீங்கள் எவ்வளவோ உதவிகள் செய்திருக்கிறீர்கள். அதற்கு பிரதி உபகாரமாக நன்றி மட்டும் சொல்லி என் கடமையை முடித்துக் கொள்ளமுடியாது” என்றவாறே பணத்தாள் கட்டொன்றை என் கையில் திணித்துவிட்டு விறுவிறென்று நடந்து போய் காருக்குள் ஏறினார். சுதாகரித்துக்கொண்டு பணம் வேண்டாம் என்று பதில் சொல்வதற்குள் கார் வேகமாகப் பறந்து புள்ளியாக மறைந்துவிட்டது. மனைவி குதூகலித்துக் கொண்டே “டாக்டர் ஒரு மகாகனவான்” என்று ஆங்கிலத்திலே சொன்னாள். நானும் ஆமென்று தலையாட்டினேன். *மீலாத் மலர் 2005*



# மலையுச்சி பங்களாவாசிகள்

எம்.எம்.நௌஷாத்

மலையுச்சியில் இருந்தது பங்களா. சூரியஸ்தமன வேளைகளில் சூரியன் அவ்வழியாகச் செல்லும் போதெல்லாம் பொற்கதிர்கள் பங்களா வில் பட்டுப் பிரதிபலித்து சொர்க்கமாளிகையோ என்று வியக்கு மளவுக்கு அது தகதகவென்று மின்னும். எக் கோணத்திலிருந்து நோக்கினாலும் பங்களாவுக்கு இருபத்தினான்கு ஜன்னல்கள் இருந்தன, அத்தோடு பர்மா தேக்கால் செய்யப்பட்ட ஏழுகதவுகள், கதவுகள் ஓர்க்கிட் மலர் வடிவத்தில் எழிலான தோற்றம் கொண்டவை, நடுவிலே பென்னம்பெரிய தலைவாசல். தலைவாசலூடாக எத்தனை பேரும் ஒருசேர நுழையலாம், வரலாம். அத்தனை பிரமாண்டம். சாளரங்களில் பதிக்கப்பட்ட பளிங்குக் கண்ணாடிகள் வெளிநாட்டிலிருந்து தருவிக்கப்பட்டவை. நவீன பணக்கார திமிர்த்தனமும், பழங்கால பெருமையும் கலவைசெய்து நிர்மாணிக்கப் பட்டிருந்தது பங்களா.

இருவிழியி தொலைநோக்கியூடாகப் பார்த்து இத்தனை சமாச்சாரங்களையும் வர்ணித்துச் சொன்னவர்கள் மலைச்சாரலால் பயணிக்கும் உல்லாசப்பயணிகள். நாங்கள் மலையுச்சி பங்களாவுக்கருகில் வசிக்கிறோம் என்று மலைச்சாரலில் ஜீவித்தவர்கள் பெருமிதமாகப் பீற்றிக் கொண்டாலும் அவர்கள் ஒருபோதும் அந்த பங்களாவுக்குள் சென்றது கிடையாது. குறைந்தபட்சம் கொஞ்ச தூரத்தில் இருந்தாவது பார்த்தார்களா என்றால் அதுவுமில்லை. அவர்கள் இருபத்தைந்து வருடங்களாக மகா துரதிர்ஷ்டசாலிகளாக வாழ்ந்தார்கள். பங்களாவின் எழிலைக் கொஞ்சம் அனுபவித்து விட்டு வருவோம் என்று எண்ணினாலும் பங்களாவுக்குச் செல்லும் வழி ஜீம்பூம்பா கதையில் வருவதுபோல் பயமுறுத்தும் விதத்தில் இருந்ததால் அதற்கும் யாரும் துணியவில்லை. கரடுமுரடான ஒரே ஒரு பாதையைத் தவிர அனைத்துமே செறிந்த வனாந்தரம், தலைகீழாகத் தொங்கும் வௌவால்கள், இரவில் ஊளையிடும் நரிகள், சாக்குருவியின் அலறல். இது தான் அந்தப் பாதை.

பாதை ஆரம்பிக்குமிடத்திலே பிரமாண்டமான இரும்பு நுழைவாயில். அந்த நுழைவாயிலிலே வெள்ளைக்காரன் காலத்து பூட்டு எப்போதும் தொங்கியது. பூட்டுக்குப் பக்கத்திலே கற்சிலையாக காவற்காரன். அவன் எப்போது வருகிறான், எப்போது போகிறான், எப்போது சாப்பிடுகிறான், எப்போது நித்திரைக்குப் போகிறான் என்று யாருக்கும் தெரியாது. ஆனாலும் ஆள் மிகவும் கறாரான பேர்வழி, யாரோடும் பேசமாட்டான். கடவுளே நேரில் வந்து சொன்னாலும் கேட்டைத் திறந்து விடமாட்டான்.

பங்களாவைப் பற்றிய சங்கதிகளையெல்லாம் கேள்விப்பட்ட ஒரு பக்காத் திருடனுக்கு விபரீத ஆசை வந்தது. பங்களாவுக்குள் நுழைந்து ஆசைதீர சுற்றிப் பார்ப்பதோடு எவ்வளவு சுருட்ட முடியுமோ அவ்வளவு

சுருட்டிக் கொண்டு வரவேண்டுமென்பது தான் அந்த விபரீத ஆசை. பக்காத் திருடன் என்றால் அப்பழுக்கில்லாத திருடன். அவனுக்கு திருடுவதைத் தவிர வேறெந்தத் தொழிலும் தெரியாது. எப்போதும் அவன் மூச்சு திருடு திருடு என்றுதான் பேசும். அவனுடைய குரு எப்படி உபதேசித்தாரோ அதன்படி அணுவும் பிசகாது திருடும் விதிகளை அவன் பின்பற்றி வந்தான்.

'மகனே, களவெடுத்தல் என்பது நம்முடைய குலத்தொழில். அதனை விளையாட்டாக எடுத்துக் கொள்ளாதே. திருடுவதில் ஒருபோதும் நீ தவறிழைக்கக் கூடாது. திருடுவதற்கு மிகவும் பொருத்தமான இடம் ஆட்கள் எவருமேயில்லாத இடம் ஆகும். திருடுவதற்கு இரவு நேரத்தை தேர்ந்தெடுத்துக் கொள்ளுவது மிகவும் நல்லது. இரவு நேரங்களில் திருடச் செல்லும் போது மின்விளக்குகள் எரிந்தால் வீட்டில் ஆட்கள் இருக்கிறார்கள் என்று ஏமாந்துவிட வேண்டாம். இவர்கள் என்ன செய்வார்களென்றால் வீட்டில் ஆட்கள் இருக்கின்றார்கள் என்று பாவ்லா காட்டுவதற்காக மின்விளக்கை போட்டுவிட்டுச் செல்வார்கள். உண்மையில் வீட்டில் ஆட்கள் இருக்கிறார்களா என்பதைக் கண்டுபிடிக்க பலவழிகள் உள்ளன. ஒன்று மாலை ஐந்து மணியாகும்போதே மின்விளக்குகள் எரிய ஆரம்பித்துவிடும். அதைப்போலவே காலை எட்டு மணியான பின்பும் மின்விளக்கு எரிந்து கொண்டேயிருக்கும். தவிரவும் மற்ற மற்ற அறைகள் இருளடைந்து காணப்பட வரவேற்பறையில் மட்டுமே மின்விளக்கு எரியும். இந்த விஷயங்களை அவதானித்த பிறகு பயப்படாமல் களவெடுக்கச் செல்லலாம். சந்தேகமிருந்தால் அந்த வீட்டின் தொலைபேசி இலக்கத்தை நீ அறிந்து வைத்திருந்தால் அந்த இலக்கத்திற்கு அழைப்பு எடுத்து யாரும் வீட்டிற்குள் இருக்கிறார்களா என்பதை நிச்சயப்படுத்திக் கொள்ளலாம். யாராவது ரிஸீவரைத் தூக்கினால் "மன்னிக்கவும் பிழையான இலக்கம்" என்று வைத்துவிட வேண்டும். மூன்று தரம் அழைத்தும் யாரும் எடுக்கவில்லையென்றால் அந்த வீட்டிற்குள் நீ நுழைவாயாக. எப்போதும் கையில் கத்தியொன்றை வைத்துக் கொள்ள வேண்டும். ஆனால் அதனைப் பயன்படுத்துவதற்கு ஒருபோதும் எண்ண வேண்டாம், கையிலே கத்தியிருக்கிறதே என்ற அசட்டுத் தைரியத்தில் யாருடனும் மோதுவதற்கு முயற்சி செய்யவோ யாரையும் காயப்படுத்தவோ வேண்டாம். போன காரியம் கச்சிதமாக முடிந்தவுடன் அந்த இடத்தை விட்டு எவ்வளவு அவசரமாக ஓடித்தப்ப முடியுமோ அவ்வளவு வேகமாக ஓடித் தப்பிவிட வேண்டும். நீ திருடன் என்பதை எப்போதும் ஞாபகத்தில் வைத்துக் கொள். நடித்தல், நாடகமாடுதல் எதுவுமே உனக்கு உதவி செய்யாது. திருடன் என்பதால் கடவுளுடைய கடாட்சத்தையும் எதிர்பார்க்கக் கூடாது. ஏதாவது விபத்தில் நீ மாட்டிக்கொண்டு உன்னுடைய கால்கள் உடைந்து நொண்டியாகப் போனாலும் ஜனங்கள் உன்னைத் திருடனாகவேயன்றி வேறு

கோணத்தில் பார்க்கவே மாட்டார்கள். எனவே அனுதாபத்தைப் பெற்றுக் கொள்வதற்காக எந்தச் செப்படி வித்தையிலும் நீ இறங்கக் கூடாது. மிகவும் முக்கியமான விஷயம் ஒன்று உள்ளது. திருடுவதற்காக மிகவும் தூரமான இடங்களுக்கு ஒருபோதும் செல்லக்கூடாது. நன்கு பரிச்சயமான இடத்திலேயே திருடவேண்டும்' இதுதான் குரு செய்த ஞானோபதேசம்.

இதுவரை எல்லாம் நன்றாகத்தான் நடந்தது. இவ்வாறு திருட்டுஞானத்தை நுட்பமாகக் கற்று அனுபவஸ்தனாகி பக்காத் திருடனாக இருக்கின்ற அவன் பங்களாவைத் தரிசிக்க வேண்டுமென்ற ஆர்வக்கோளாறு காரணமாக குருவின் எல்லா விதிகளையும் மீறினான். தான் திருடனென்ற உண்மையை மறந்தான், பகலில் திருடப் புறப்பட்டான், பரிச்சயமற்ற இடத்தை தேர்ந்தெடுத்தான், தற்பாதுகாப்பு ஆயுதமான கத்தியைக் கைவிட்டான். அதிகாலையிலேயே எழுந்து குளித்து தான் திருடனென்பதை யாரும் கண்டுபிடிக்காத வகையில் அழகிய ஆடைகள் புனைந்து, நறுமணத்தைலம் தடவி மலையுச்சி பங்களாவை நோக்கிப்புறப்பட்டான். பக்காத் திருடனின் பெயர் பஞ்சிரி.

பங்களாவுக்குச் செல்லும் பாதையின் நுழைவாயிலில் வழமையைப் போலவே பெரியபூட்டு தொங்கியது. காவற்காரன் வழமையைப் போலவே கற்சிலைபோல் அமர்ந்திருந்தான். பஞ்சிரி காவற்காரனின் முன்னால் போய் பௌயமாக நின்று மெல்லியகுரலில் “ஐயா” என்றான். அரவங்கேட்டு கண்விழித்த தூங்கிக் கொண்டிருந்த காவற்காரன் பஞ்சிரியைப் பார்த்ததும் கோபமுற்றவனாக “நீ யார்” என்று அதட்டலாகக் கேட்டான். “ஐயா, என்பெயர் பஞ்சிரி. தொழில் எதுவும் இல்லை. பிள்ளைகுட்டிகளைக் காப்பாற்றவேண்டும். மிகவும் தூரத்திலிருந்து வருகிறேன். ஏதாவது தொழில் கிடைத்தால் உதவியாக இருக்கும். சின்னத்தொழில் என்றாலும் பரவாயில்லை" என்றான் பஞ்சிரி.

அவனை யாரும் மரியாதையாக அழைத்தது கிடையாது ஆகையால் ஐயா என்று சொன்னதும் காவற்காரனின் கோபம் சற்றுத் தணிந்து அவன் பஞ்சிரியை ஒருக்களித்துப் பார்த்துக் கொண்டே, ‘என்னிடமா தொழில் கேட்டு வந்திருக்கிறாய்?' என்று கேட்டான். காவற்காரனுக்கு ஐம்பது வயதிருக்கும். மீசை பெரிதாக நரைத்துப் போய் அவன் எலும்பும்தோலுமாகக் காட்சியளித்தான். வாயில் சுருட்டு அடிக்கடி புகைந்தது. காவற்காரன் கேட்ட கேள்வியிலிருந்தே அவன் எப்படிப்பட்ட பண்டிதன் என்று பஞ்சிரிக்குப் புரிந்து விட்டது.

“உன்னிடம் இல்லையப்பா, உன் எஜமான் ஐயாவிடம்”

“எனக்கு எஜமானன் இல்லை, எஜமானி தான் இருக்கிறாள். அவள் என் கடவுள்” என்றான் காவற்காரன்.

“ஓ கடவுளா? அப்படியென்றால் உனக்கு சம்பளம் தருவது யார்?”

“அதனைப் பற்றி உனக்கேன் கவலை? வந்த விஷயத்தைச் சொல்லு”

“அதுதான் சொன்னேன், உங்கள் எஜமானனிடம் உதவி கேட்டு வந்திருக்கிறேன்”

“நீ மீண்டும் மீண்டும் எஜமான் என்றுதான் சொல்லுகிறாய். எனக்கு எஜமானி தான் இருக்கிறாள்” என்றான் காவற்காரன் எரிச்சலுடன்.

“என்னை மன்னித்துக் கொள்” “சரி யாரைச் சந்திக்க வந்தாயோ அவருடைய பெயரைச் சொல்லு” “எனக்கு பெயர் தெரியாது”

“அவளுடைய முகத்தைப் பார்த்ததும் கிடையாதா?”

“கிடையாது”

“அவள் நல்லவளா கெட்டவளா என்று தெரியாது”

“தெரியாது”

“தெரியாது”

“ஆணா பெண்ணா என்று கூடத் தெரியாமல் தான் நீ வந்திருக்கிறாய்”

“ஆம்”

வாழ்க்கையில் இப்போதுதான் முதற்றடவையாகச் சிரிப்பதுபோல் சிரித்தான் காவற்காரன். அவனுடைய ஆடிக் கொண்டிருக்கும் பற்கள் விழுந்துவிடுமோ என்று பயந்து போனான் பஞ்சிரி. ‘உன்னைப் பார்த்தால் பாவமாகத்தானிருக்கிறது. முக்கியமான ஒரு விஷயத்தைச் சொல்ல வேண்டும். அதற்கு முதல் உன்னிடமிருந்து முக்கியமான ஒரு விஷயத்தை நான் அறிந்து கொள்ள வேண்டும். நான் உன்னிடம் கேள்வியொன்று கேட்பேன். அந்தக் கேள்விக்கு நீ உண்மையான விடையைத் தான் கூற வேண்டும்’ என்று பீடிகை போட்டான் காவற்காரன்.

“கேளுங்கள்” என்றான் பஞ்சிரி.

கண்களைச் சிமிட்டியவாறே “நீ திருடன் தானே!” என்று காவற்காரன் சடுதியாகக் கேட்க பாரிய பனிப்புயலில் சிக்கி உறைந்து போனான் பஞ்சிரி. இத்தனை வருடகால திருட்டு வாழ்க்கையில் அவனைத் திருடன் என்று ஒற்றைப் பிடியில் யாரும் இப்படிக் கண்டுபிடித்தது கிடையாது. தன்னைச் சுதாகரித்துக் கொண்ட பஞ்சிரி “நீ சொல்வது உண்மைதான். அதுசரி இவ்வளவு இலாவகமாக நான் திருடனென்று எப்படி நீ கண்டுபிடித்தாய்?” என்று ஆச்சரியத்தோடு கேட்டான். ‘சொல்லுகிறேன் கேள். உன் தோல் மினுமினுப்பாக இருக்கிறது. உன் முகம் வெயிலில் கறுக்கவில்லை. உன்னுடைய உள்ளங்கையை எப்போதாவது பார்த்திருக்கிறாயா? அது உழைப்பின் தழும்புகள் எதுவுமில்லாமல் பெண்களின் கையைப் போல மென்மையாக இருக்கிறது. ஆளைப் பார்த்தால் தளதளவென்று தோற்றமளிக்கிறாய். இத்தனை இயல்புகளையும் ஒன்றாக வைத்துப் பார்த்தால் உயர்தொழில் தகைமையுள்ள ஆளாக நீ இருக்க வேண்டும். உன் முகத்தைப் பார்த்தால் அதிலே கல்வியறிவின் களையை காணவே முடியவில்லையாதலால் உயர் தொழில் செய்யும் ஆளாக நீ இருக்க முடியாது. அல்லது உன்னுடைய தோற்றத்தை பார்க்கும் போது நீ

பணக்காரப் பரம்பரையில் வந்த ஒருத்தனாக இருக்க வேண்டும். அப்படிப்பட்ட பரம்பரையில் வந்தவன் யாரிடமும் உதவிக்காக கெஞ்சமாட்டான். ஒருபோதும் காவற்காரனை ஐயா என்று சொல்லி பௌயமாக கைகட்டி நிற்கமாட்டான். எனவே உனக்கு எங்கிருந்தோ பணம் சும்மா மடியில் வந்துவிழுகிறது. நீ வயிறு புடைக்கச் சாப்பிட்டு தளதளவெனன்று காட்சியளிக்கிறாய். எனவே நீ திருடனாக இருப்பதைத் தவிர வேறு தெரிவு இல்லை' என்று மூச்சுவிடாமல் கூறி நிறுத்தினான் காவற்காரன்.

காவற்காரன் பேசுவதை வாய்பிளந்து, வைத்தகண் வாங்காது பார்த்துக் கொண்டிருந்த பஞ்சிரி அவன் பேசி முடித்ததும் 'இவ்வளவு மதிநுட்பமும், அறிவுக்கூர்மையுள்ள நீ ஏனப்பா இந்த பழைய கதிரையில் அமர்ந்து ஈயடித்துக்கொண்டிருக்கிறாய்? என்று கேட்டான்.
“விதிக்கு மருந்தில்லையே” என்று சலித்துக்கொண்டான் காவற்காரரன்.
“அது சரி நீங்கள் ஏதோ முக்கிய விஷயம் சொல்லுவதாகக் குறிப்பிட்டீர்கள அல்லவா?”

“அதுவா? என் எஜமானியைப் பற்றிய விஷயம். அவளைச் சந்திக்கப் போகும் நீ நன்றாக ஞாபகம் வைத்துக்கொள், அவளிடமிருந்து நீ ஊசியைக் கூட எதிர்பார்க்க வேண்டாம், கஞ்சப் பெண்மணி” என்றான் காவற்காரன்.
“உன் எஜமானி கடவுள் என்று நீ ஏற்கனவே சொல்லியிருக்கிறாய்”
“அதனை இன்னமும் ஞாபகம் வைத்திருக்கிறாயா? நீ அவளுக்காக உளவு பார்க்க வந்தவனோ என்ற பயத்தில தான் அப்படிச் சொன்னேன்”
“உன்எஜமானி எப்படியிருந்தாலும் எனக்குப் பிரச்சினையில்லை. இந்த பங்களாவை ஆசைதீர சுற்றிப் பார்ப்பதற்கு என்னை அனுமதித்தாயென்றால் அதுவே போதும்” என்றான் பஞ்சிரி.

'நீ எவ்வளவு பெரிய முட்டாள். இருபது வருடங்களாக் காவற்காரனாக இருக்கும் எனக்கே அந்த சந்தர்ப்பம் இன்னமும் கிட்டவில்லை. நீ அங்கே என்ன செய்யப் போகிறாய்?' என்று கிண்டலடித்தான் காவற்காரன்.
“உன்னுடைய கதையைக் கேட்க பரிதாபமாக இருக்கிறது. ஜனங்களோ உன்னைத் தான் கொடுமைக்காரனாக நினைத்துக் கொண்டிருக் கிறார்கள். இங்கே கதை வேறுவிதமாக அல்லவா இருக்கிறது”
“இன்னும் நிறைய விஷயங்கள் இருக்கின்றன, பிறகு அவற்றைக் கூறுகிறேன். முடியுமானால் உன் சாமர்த்தியத்தைப் பயன்படுத்தி பங்களாவைச் சுற்றிப்பார்த்து விட்டு எனக்கும் வந்து சொல்லு”
“உனக்குச் சொல்லாமல் இருப்பேனா? முதலில் பூட்டைத் திறந்துவிடு. நேரம் வேகமாக ஓடிக்கொண்டிருக்கிறது” என்றான் பஞ்சிரி.
'பூட்டுக்கும் கதை இருக்கிறது'
'பூட்டுக்கும் கதையா?'
'பூட்டின் திறப்பு என் கைவசமில்லை, பூட்டைத் திறக்க வேண்டுமென்றால் அரைக்கிலோ மீற்றர் நடந்து சென்று திறப்பை வாங்கி வரவேண்டும்'

என்றான் காவற்காரன் பரிதாபமான முகத்துடன். 'யாராவது விருந்தினர்கள் அவசரமாக வந்தால் நீ என்ன செய்வாய்?' ஆச்சரியத்துடன் கேட்டான் பஞ்சிரி. நானும் 20 வருடங்களாக எதிர்பார்த்துக் கொண்டு தான் இருக்கிறேன். இதுவரை ஒரு விருந்தினர் கூட என் எஜமானியைத் தேடிவந்தது கிடையாது' என்றான் காவற்காரன்.

பஞ்சிரியால் காவற்காரன் சொல்வதை நம்பவும் முடியவில்லை. நடக்கின்றவைகளைப் பார்த்து நம்பாமலிருக்கவும் முடியவில்லை. 'உன் எஜமானி சுத்தப் பைத்தியக்காரியா? உலோபியா? காட்டுமிராண்டியா? கருங்கற்பாறையில் செதுக்கப்பட்டவளா? இரும்புப் பெண்மணியா?' என்று கேள்விகளை அடுக்கிக் கொண்டு போனான் பஞ்சிரி. காவற்காரன் பதில் பேசாமல் காட்டுப் பாதையைக் காட்டி 'கவனமாகப்போ, திருடன் என்று தெரியாதபடி நடந்துகொள். எல்லாவற்றையும் அறிந்து கொண்டு என்னிடம் வந்துசொல்' என்று புத்திமதியும் சொல்லியனுப்பினான்.

பஞ்சிரியின் மலையுச்சிப் பயணம் இலகுவானதாக இருக்கவில்லை. முட்புதர்களினூடாகப் புகுந்தும், கற்களின் இடுக்குகளினூடாக இடறியும், பாய்ந்தும், நொந்தும் ஏதோ சுவர்க்கத்திற்கு பாதை தேடிப்போவது போலிருந்தது பஞ்சிரிக்கு. ஆங்காங்கே இரத்தத் திட்டுக்கள், கிழிந்துபோன வெண்ணிற ஆடை, வீங்கியிருந்த உதடுகளோடு நவீன ஓவியம் போல் சிதைந்திருந்தாலும் பஞ்சிரி தன் இலட்சியப் பயணத்தைத் தொடர்ந்தான். பங்களாவுக்கருகே வந்து சேர்ந்ததும் பஞ்சிரி அடைந்த மகிழ்ச்சிக்கு அளவேயில்லை. சுவர்க்கம் கிட்டிய மாதிரி மகிழ்ச்சி. பயணம் கடினமாக அமைந்ததால் அவனுடைய நாவரண்டு தாகமெடுத்தது; உள்ளம் தண்ணீர் தண்ணீரென்று ஏங்கியது; கண்கள் இருள ஆரம்பித்தன. இறுதியாக அவன் கண்டதெல்லாம் கருங்கற் பாறையும், அருகிலிருந்த மரமும் மரத்திலிருந்த அணிலும் தான். அப்படியே மயங்கி விட்டான் பஞ்சிரி. தடித்த குரலுடைய நாயின் குரைப்பு தான் அவனை எழுப்பியது. கஷ்டப்பட்டு கண்களைத் திறக்க தொங்கும் நீண்ட நாக்கும் அகலத் திறந்த வாயும் அவனை வரவேற்றது. பயங்கரத் தோற்றமுடைய ஜேர்மன் *Shepard.* அவன் வெலவெலத்துப் போனான். மிகப் பயங்கரமான நாய். அடத் துரோகி காவற்காரா, நாயைப் பற்றி நீ என்னிடம் ஒன்றும் சொல்லவில்லையே! இன்று இந்தப் பிராணி என்னைக் குதறிகுதறிக் கொல்லப்போகிறதே என்றுடல் நடுங்கினான் பஞ்சிரி.

நல்ல வேளையாக நாயின் கழுத்திலே சங்கிலி இருந்தது. சங்கிலியை இழுத்துப் பிடித்தப்படி அம்மணி நின்றிருந்தாள். 'யார் நீ?' என்று கர்ணகடூரமாக அதட்டினாள் அம்மணி. துப்பாக்கிக் குழலிலிருந்து சன்னம் பீறிட்டுப் பாய்ந்து விர்ரென்று காதுச் சோணையை உராய்ந்து

சென்றது போல் இருந்தது அவளுடைய குரல். இரக்கமில்லாத இராட்சஷியா இவள்? பஞ்சிரி இந்த விஷயங்களிலெல்லாம் அனுபவஸ்தன். உடனே தன்னைச் சுதாகரித்துக் கொண்டு 'அம்மணி, நான் வழிப்போக்கன். வழி தெரியாமல் இந்தக் காட்டுக்குள் வந்து சிக்கிக் கொண்டேன்' என்று பொய்யொன்றை அவிழ்த்துவிட்டான் பஞ்சிரி. 'நீ சொல்வது உண்மைதானே' என்று கேட்டாள் அம்மணி. 'ஆம் அம்மணி, தொண்டை காய்கிறது, நாவு வரண்டுவிட்டது. தாகத்தால் தவிக்கிறேன். கொஞ்சம் குடிப்பதற்கு தண்ணீர் தரமுடியுமா?' என்று கெஞ்சும் குரலில் கேட்டான் பஞ்சிரி. 'வழிப்போக்கனான நீ ஏன் தண்ணீர் கொண்டு வரவில்லை?'
'போகின்ற வழியிலே கடைகள் இருக்குமென்று நம்பிப் புறப்பட்டு வந்தேன், அம்மணி'
'அப்படியா?' என்று கேட்ட அம்மணி, கொல்லைப்புறத்தில் கிடந்த சிரட்டையொன்றைக் பஞ்சிரியிடம் கொடுத்து, 'இருநூறுமீற்றர் கிழக்குப் பக்கம் நடந்து போனாயென்றால் பொய்கை வரும். அந்தப் பொய்கையில் இந்தச் சிரட்டையால் நீரைமொண்டு அருந்திக்கொள்' என்றாள்.

பஞ்சிரி சிரட்டையை அப்படியும் இப்படியும் புரட்டிப் பார்த்தான். அழுக்குச் சிரட்டை. காகங்கூட இந்தச் சிரட்டையில் நீரை அருந்தப் பயப்படும். அம்மணியின் தாற்பரியம் அவனுக்குப் புரிந்தது. காவற்காரன் விபரித்த எஜமானிதான் இவள் என்பதும் அவனுக்கு தெளிவாக விளங்கியது. வேறுவழியில்லாமல் கையில் சிரட்டையோடு தள்ளாடித் தள்ளாடி பொய்கையை நோக்கிப் போன பஞ்சிரி தாகம் தீருமட்டும் சிரட்டையில் நீர் அருந்தி வந்த பின்னரும் அம்மணி அங்கேயே நின்றுகொண்டிருந்தாள். அம்மணியோடிருந்த நாய் இப்போது சாந்தம்தவழ நின்று கொண்டிருந்தது. 'நன்றி அம்மணி' என்றான் பஞ்சிரி, 'எதற்கப்பா நன்றி கூறுகிறாய்?' 'நீங்கள் சிரட்டை தந்தீர்கள். எனக்கிருந்த தாகத்தை தாராளமாக தீர்த்துக்கொண்டேன். நன்றி சொல்லத்தானே வேண்டும்'

உரையாடல் அம்மணியோடு நடந்து கொண்டிருந்தாலும், பஞ்சிரியின் திருட்டு விழிகள் அங்குமிங்குமலைந்து பங்களாவின் ஒவ்வோரிடமாக நோட்டமிட்டன. எப்படி இந்த பங்களாவுக்குள் நுழையலாம் என்பதைப் பற்றியே சதா சுழன்று கொண்டிருந்தவனின் விழிகள் சட்டென்று ஓரிடத்தில் அப்படியே குத்திட்டு நின்றன. அங்கே ஒரு பையன் முன் விறாந்தையில் போடப்பட்ட கட்டிலிலே ஆழ்நத நித்திரையில் இருந்தான். கிடைத்துவிட்டது துரும்பு!. "அம்மணி, கேட்கிறேனென்று கோபிக்காதீர்கள். கட்டிலிலே ஒரு பையன் உறங்கிக் கொண்டிருக்கிறானே, அவன் யார்?" என்று கேட்டான் பஞ்சிரி. அம்மணி பதிலளிக்காமல் அவனைப் பின்தொடருமாறு சைகை காட்டிவிட்டு நடக்க ஆரம்பித்தாள். பஞ்சிரியும் அம்மணியைப் பின்தொடர்ந்தான்.

'இவன் பேரன், என் மகளின் பையன். இரவு இறந்து விட்டான்' என்று சொல்லிவிட்டு தேம்ப ஆரம்பித்தாள் அம்மணி. பஞ்சிரி திடுக்குற்றான்.
'அழாதீர்கள் அம்மணி, எப்படியம்மா உங்கள் பேரன் இறந்து போனான்?'
'கடுமையான காய்ச்சலோடும், தலையிடியோடும் தனியார் மருத்துவமனையில் அனுமதித்தோம். மூன்று நாட்களில் இறந்துவிட்டான். மூளைச் சவ்வழற்சி என்று டாக்டர்கள் சொல்லி விட்டார்கள்' 'உங்கள் துயரத்தில் நானும் பங்கு கொள்ளலாமா, அம்மணி?'
'நிச்சயமாக'
'அதுசரி அம்மணி, இறுதிக் கிரியைக்கான ஏற்பாடுகள் ஒன்றும் செய்யவில்லையா? பையனைச் சும்மா கட்டிலில் போட்டு வைத்திருக்கிறீர்களே' என்று ஆச்சரியத்தோடு கேட்டான் பஞ்சிரி.
'நீ சொல்வது வாஸ்தவம்தான். ஏற்பாடுகள் எதுவுமேயில்லை. அதுசரி உன் பெயர் என்ன?' 'பஞ்சிரி'
'பஞ்சிரி உனக்குச் சொல்வதற்கென்ன? இறந்த பையனுக்காக என்ன செய்வதென்று தெரியாமல் பங்களாவைச் சுற்றிக் கொண்டிருந்த போதுதான் அகஸ்மாத்தாக உன்னைக் கண்டேன். மலர்ச்சாலை ஆட்களுக்கு போன் பண்ணியிருக்கிறேன். விரைவில் வந்துவிடுவார்கள்' என்றாள் அம்மணி.

'அடப்பாவமே!' என்று சூள்கொட்டிய பஞ்சிரி வேகமாக இயங்க ஆரம்பித்தான்; எஜமானியிடமிருந்து வெள்ளைத் துணியொன்றை வாங்கி துண்டு துண்டுகளாகக் கிழித்து மரங்களிலும், பங்களாவைச் சுற்றியும் கொடி போலக் கட்டினான்; பெரிய வெள்ளைக் கொடியை முற்றத்திலே தொங்கவிட்டான்; கட்டிலை ஒழுங்குபடுத்தி இறந்த பையனை அதிலே படுக்கவைத்தான்; மருத்துநீர் தயாரித்து எங்கும் தெளித்தான்; ஊதுபத்திகளையும் கொளுத்தினான். அவ்விடம் இப்போது உண்மையான மரணவீடு போல் காட்சியளித்தது. எஜமானியோடிருந்த பயங்கர நாய் இப்போது பஞ்சிரியைப் பார்த்து கனிவுடன் வாலாட்டியது. பஞ்சிரி நாயை நாய்க் கொட்டிலிலே கட்டினான். அம்மணியைப் பார்த்து வெள்ளையாடை அணிந்துவரும்படி சொன்னான். அம்மணி அட்சரம் பிசகாது பஞ்சிரி சொன்னவற்றையெல்லாம் செய்தாள். இறந்த சடலத்திற்கருகே கதிரையொன்றைப் போட்டு அம்மணியை அமரும்படி பஞ்சிரி. சைகை காட்ட அம்மணியும் அமர்ந்துகொண்டாள். பஞ்சிரி சுடச்சுட தேநீர் தயாரித்து அம்மணியிடம் கொடுக்க அம்மணியின் விழியிமைகளிலே கண்ணீர் தேங்கியிருந்தது.

அவ்வேளையில் மோட்டார் வாகனமொன்றின் இரைச்சல் கேட்க 'அம்மணி, மலர்ச்சாலை ஆட்களா வருகிறார்கள்?' என்று கேட்டான் பஞ்சிரி. 'இல்லை பஞ்சிரி, என் மகள் வருகிறாள். இறந்த பையனுக்கு தாய் அவள்தான்' என்று பதிலளித்தாள் அம்மணி. 'இவ்வளவு நேரமும்

அவள் எங்கே போயிருந்தாள்?' என்று கேட்டான் பஞ்சிரி ஆர்வத்துடன்.
'அவள் பல்கலைக்கழகத்திலே சிறுவர் உளவியல் விரிவுரையாளராக இருக்கிறாள். இன்று ஏதோ கருத்தரங்காம். கருத்தரங்கிலே பங்குபற்றி விட்டு வருகிறாள்'
'அம்மணி, உங்கள் கதையைக் கேட்க ஆச்சரியமாகவும் இருக்கிறது, பரிதாபமாகவும் இருக்கிறது. அவளுடைய மகன் இங்கே உயிரில்லாமல் கிடக்க உங்கள் மகள் எங்கேயோ போய்விட்டு வருகிறாள் என்பதை நம்பவே முடியாமல் இருக்கிறது, மனசுக்கும் கஷ்டமாக இருக்கிறது. வினோதமான இந்தச் சம்பவத்தின் தாற்பரியம் என்னம்மா?' என்று கேட்டான் பஞ்சிரி. 'அவளின் பிறவிக் குணமே அதுதான். திருமணத்திற்கும் அவள் விடுமுறை எடுக்கவில்லை என்பதைச் சொன்னால் நீ நம்புவாயா?' என்று பெருமூச்செறிந்தாள் அம்மணி.
'அவளுடைய கணவன் என்ன செய்கிறான்?. இதையெல்லாம் தட்டிக் கேட்பதில்லையா?'
'பஞ்சிரி அந்த விஷயத்தை கேட்காதே, அது பெரிய சரித்திரம். சுருக்கமாகச் சொல்லப் போனால் அவளுடைய கணவனுக்கு தேவைப்பட்டதெல்லாம் பணம். அந்த நோக்கத்தில் கோடீஸ்வரியான அவளைத் திருமணம் செய்த அவன் ஒருநாள் எவ்வளவு பணத்தைச் சுருட்டமுடியுமோ அவ்வளவு சுருட்டிக்கொண்டு ஓடிப்போய் விட்டான்' என்று முகத்தில் கவலை தோய்ந்தவாறே சொன்னாள் அம்மணி.

பஞ்சிரி அன்று முழுவதும் சுறுசுறுப்பாக இருந்தான். அவனுக்கு ஓய்வென்பதே இருக்கவில்லை. ஓடியாடி இறுதிக்கிரியைகளுக்கான எல்லா ஏற்பாடுகளையும் கவனித்தான். மலர்ச்சாலை ஆட்களும் வந்தது அவனுக்கு பேருதவியாக அமைந்தது. பஞ்சிரிக்கு உண்மையில் மகிழ்ச்சியாக இருந்தது. அவன் வாழ்கையில் யாருக்குமே இப்படியாக உதவி செய்தது கிடையாது. எல்லாம் முடிந்ததும் அவன் அம்மணியின் முன்னால் வந்து நின்று 'அம்மணி நான் போகவேண்டிய நேரம் வந்துவிட்டது' என்றான். அம்மணி முதல்தடவையாக அவனைப் பார்த்துப் புன்னகைத்தாள். 'பஞ்சிரி என் குடும்பத்தைப் பற்றி எல்லா விபரங்களையும் உன்னிடம் சொல்லிவிட்டேன். உன் குடும்பத்தைப் பற்றிச் சொல்லவில்லையே' என்று கேட்டாள் பெண்மணி. பஞ்சிரியும் மெலிதாகப் புன்னகைத்தவாறே
'அம்மணி என் குடும்பத்தைப் பற்றிச் சொல்லுவதற்கு ஒன்றுமேயில்லை. ஆனால் ஓர் உண்மையை நான் மறைக்காமல் சொல்லவேண்டும்'
'என்ன பஞ்சிரி பீடிகை போடுகிறாய்? எதுவானாலும் பரவாயில்லை. மறைக்காமல் சொல்லு' 'அம்மணி நான் வழிப்போக்கன் என்று ஆரம்பத்தில் சொன்னேன் அல்லவா?'

'ஆமாம்'

'அது சுத்தப் பொய். நான் திருடன், பக்காத்திருடன். உங்கள் பங்களாவையும் சுற்றிப்பார்த்துவிட்டு திருடிப் போகலாமென்றுதான் வந்தேன்' என்று சொல்லிவிட்டு தலையைக் குனிந்துகொண்டான் பஞ்சிரி.

கொஞ்சநேரம் பஞ்சிரியையே பார்த்துக் கொண்டிருந்த அம்மணீ ஏதோ நினைத்தவளாக பஞ்சிரியின் கையைப் பிடித்து தரதரவென்று இழுத்துக் கொண்டு போய் அறையின் முன்னால் நிறுத்தி இடுப்பிலிருந்த சாவியால் அறையைத் திறக்க நெடுநாள் திறக்கப்படாதிருந்த அந்த அறை மறமறவென்ற சத்தத்தோடு திறந்தது. விசாலமான அறை. பஞ்சிரியை அப்படியே உள்ளே தள்ளிய அம்மணீ 'பஞ்சிரி உனக்கு எவ்வளவு வேண்டுமோ அவ்வளவு எடுத்துக்கொள். இனிமேல் திருடவேண்டிய எந்தக் தேவையும் உனக்கு வரவே வராது' என்று படபடத்தாள்; 'எடு எடு எடு' என்று கூவினாள், வெண்கலக் குரலில் கட்டளையிடுவது போல் அவளது குரல் இருந்தது. பணத்தாள்கள் கற்றைகற்றையாக சாக்குமூடைகளில் திணிக்கப்பட்டு வெறும் தரையிலே தாறுமாறாகக் கிடக்க பஞ்சிரி உண்மையிலேயே திக்குமுக்காடி விட்டான். அவ்வளவும் பணமோ பணம். சில கற்றைகளை கறையான் அரித்திருந்தது.

'பஞ்சிரி, நீ பணத்துக்காக ஏங்கிக் கொண்டிருக்கும் திருடன். தயங்காதே, நான் ஒன்றுமே சொல்லமாட்டேன். எவ்வளவு வேண்டுமானாலும் எடுத்துக் கொள்' என்று மீண்டும் வற்புறுத்தினாள் அம்மணி. பஞ்சிரி அப்போதும் அமைதியாக இருந்தான். 'பணம் மட்டுமல்ல, இந்த பங்களா, எஸ்டேட் எல்லாமே உனக்குத்தான் சொந்தம். நீ பணத்துக்காக ஏங்கிக் கொண்டிருப்பதைப் போல் இங்கே ஒருபிறவி அன்புக்காக ஏங்கிக் கொண்ருக்கிறது. அவள் என் மகள். நீ திருடன்தான், ஏற்றுக் கொள்கிறேன். உன்னிடம் அன்புள்ளம் இருக்கிறது. உன்னை கெஞ்சிக் கேட்கிறேன். பஞ்சிரி, தயவு செய்து என்மகளுக்கு வாழ்வு கொடு' என்று பஞ்சிரியின் கைகளைப் பிடித்து அம்மணி கெஞ்ச ஆரம்பிக்க பஞ்சிரி திகைத்துப் போனான்.

'அம்மணி விளையாடாதீர்கள், பல்கலைக்கழக விரிவுரையாளருக்கு பக்காத் திருடன் கணவனாகுவதா? ஒருபோதும் இது நடக்காது அம்மணி' என்றான் பஞ்சிரி. 'பஞ்சிரி நான் சொல்வதைக் கேள், நான் பதவிகளைப் பற்றி பேசவில்லை. வாழ்க்கையைப் பற்றிப் பேசுகிறேன்' என்றாள் அம்மணி. 'அம்மணி, என்னை மன்னித்துக் கொள்ளுங்கள். இந்த பங்களாவுக்கு வரும் வரையுள்ள இருபது வருடங்களும் பணத்தால் எல்லாவற்றையும் செய்யமுடியும் என்று நான் நினைத்திருந்தேன். இப்போது பணத்தால் எதுவுமே செய்யமுடியாது என்பதை உணர்ந்து விட்டேன். உங்கள் பணத்தில் சல்லிக்காசும் எனக்குவேண்டாம். நான் போய்வருகிறேன் அம்மணி' என்று புறப்படத்

தயாரானான் பஞ்சிரி. அம்மணி, பஞ்சிரியின் கைகளை கெட்டியாகப் பிடித்துக் கொண்டாள். ‘பஞ்சிரி, என் மகளின் வாழ்க்கைமுறை உனக்குப் பிடிக்கவில்லையென்றால் வெட்கத்தை விட்டு ஒரு விஷயம் கேட்கிறேன். தயவு செய்து என்னை உன் மனைவியாக ஏற்றுக்கொள், பங்களா பணம், எஸ்டேட் எல்லாவற்றையும் துறந்து விட்டு இந்தக் கணமே உன்னோடு வந்து விடுகிறேன்’ என்று மீண்டும் கெஞ்சினாள் அம்மணி. அம்மணியின் வேண்டுகேளுக்கு எப்படி விடையளிப்பதென்றறியாது குழம்பிப்போன பக்காத் திருடனான பஞ்சிரி அன்று முதல் ஞானியாகிற்றான்.

வயிறு நிறையச் சாப்பிட்டேன். கையிலே வேண்டியளவு பணம் இருந்தது. இந்த நாட்களில் பணம் சம்பாதிப்பது கடினமான காரியமே அல்ல. ஆடம்பரமாக தோற்றமளிப்பது அது என்னிடம் இருந்தது. பொய்யை மற்றவர்கள் நம்பக்கூடிய முறையில் சொல்லுவது, அதையும் நான் கச்சித மாகச் செய்தேன். கொஞ்சம் அதிகமாக யாரும் வாயைத் திறந்தால் மிரட்டுவது. இந்த மந்திரம் எனக்கு நன்றாகவே வேலை செய்தது. பெருவெளியிலே நடந்து கொண்டிருந்தேன். வாகனம் சரி யான தருணத்தில் சதி செய்ததால் ஒரு கிலோமீற்றர் வரை நடந்தேன். கண்ணுக்கு எட்டியவரை ஒருவரையுமே காணமுடியவில்லை. இலேசாகத்தான் ஆரம்பத்தில் தொந்தரவு ஆரம்பித்தது. பல்லிடுக்கில் ஏதோ சிக்கிக்கொண்டிருப்பது போல் உணர்வு. இருந்தால் இருக்கட்டும் என்றவாறு நடந்தேன்.

நேரம் செல்லச்செல்ல வேதனை ஆரம்பித்தது. பல்நோவு. நான் பயப்படுகிற ஒரே ஒரு விஷயம் இந்தப் பல்வலி தான். ஏற்கனவே ஏராளமான தடவை அவஸ்தைப்பட்டிருக்கிறேன். மூன்றுபற்களை பல் டாக்டர்கள் எடுத்து விட்டார்கள். மூன்று பிடுங்கிய பற்களுக்கும் மூன்று கதைகள் சொல்லுவேன். ஆனால் இப்போதைக்கல்ல. நான் படும்வேதனை எனக்குத்தான் தெரியும். இப்போது மிகவும் கடுமையாக அவதிப்பட்டேன். என் பைகளைத் தடவி பற்குச்சி கிடைக்குமா என்று பார்த்தேன். காற்சட்டைபையிலும் இல்லை, மேற்சட்டைப்பையிலும் இல்லை. பர்ஸில் ஒவ்வொரு அறையாகச் சல்லடை போட்டுத் தேடினேன். எங்குமில்லை. பெருவெளி. பெருந்தரை. கால்களால் நுணாவி ஏதாவது கம்பித்துண்டு அல்லது குச்சிகள் அகப்படுமா என்று பார்த்தேன். என் துரதிர்ஷ்டம் காய்ந்த புல்பூண்டு அல்லது புல்லின் இலை கூடக் கிடைக்கவில்லை.

பல்வேதனை தாங்கமுடியாமல் அலறினேன். கடவுளைப் பலதடவை கூப்பிட்டேன். பல்வேதனை அப்படியேதான் இருந்தது. வெளி வெறிச் சோடிக் கிடந்தது. சுற்று முற்றும் பார்த்தேன். யாரையும் காண வில்லை. பல் கழன்று கையிலே வந்து விட மாட்டாதா என்ற நப்பாசையில் நோவுள்ள பல்லைப் பிடித்து ஆட்டு ஆட்டினேன். ஒருகணம் நோவு சட்டென்று குறைந்தது போல் தெரிந்தாலும் மீண்டும் பல்வலி ஆரம்பித்து விட்டது. வேதனை இப்போது மிகவும் தீவிரமாக இருந்தது. கையில் கைப்பையுடன் எதிர்பாராதவிதமாக ஓரிளம் பெண் நடந்து வந்து கொண்டிருந்தாள். நிச்சயமாக பெண்களிடம் கொண்டை ஊசியாவது இருக்கும்.

“தங்கையே கோபிக்க வேண்டாம். எனக்கொரு உதவி செய்வீர்களா?”. என்று அவளிடம் வினயமாகக் கேட்டேன் நான். அவள் என்னுடைய முகத்தை ஓரிரண்டு தடவை ஆராய்ந்து விட்டு சரியென்று தலையாட்டினாள். நான் உற்சாகத்துடன் வாயை ஆவென்று பிளந்து

காட்டினேன். "தங்கையே என் பல்லைப் பாருங்கள். நன்றாகப் பாருங்கள். வலது பக்கமுள்ள கொடுப்புப் பல்லு.
என் பல்லிடுக்கிற்குள் இறைச்சித் துணிக்கையொன்று சிக்கி இரண்டு மணித்தியாலமாக நான் அவஸ்தைப்படுகிறேன். ஒரு பற்குச்சியாவது ஊசியாவது எனக்குத் தரமுடியுமா?" என்று கேட்டேன் நான்.

என்னைப் பரிதாபமாகப் பார்த்து "என்னை இடிமின்னல் ஒருமுறை தாக்கியது. கடவுள் பேரருளால் தப்பினேன். அருந்தப்பு" என்று சொன்னாள் இளம்பெண். நான் அவளைப் புரியாமல் பார்த்தேன். "நான் கேட்டது ஊசி. எதற்காக இடிமின்னலைப்பற்றி சொல்லுகிறீர்கள்?" என்று கேட்டேன் நான். 'ஊசியைப் பற்றித்தான் சொல்லப் போகிறேன். இப்படித்தான் இடிமின்னல் அடிக்கும் வேளையில் வீதியிலே நடந்து கொண்டிருந்தேன். எதிர்பாராத விதமாக சட்டையிலே இருந்த ஊசிமீது மின்னல் தாக்கி நான் மயங்கி விழுந்தேன். எழுந்து பார்த்தபோது நெஞ்சில் ஒருபகுதி கருகிப் போயிருந்தது. அதற்குப் பிறகு நான் உடம்பில் எந்தப் பகுதியிலும் ஊசி வைத்துக் கொள்வதே இல்லை" என்றாள் இளம் பெண். இவளுடைய கதையை நம்புவதா இல்லையா என்று தெரியாமல் தவித்த நான் "தங்கையே! பல்வலி என்னை கொல்கிறது. எதற்கும் பாருங்கள், எங்கேயாவது இருக்கும்" என்றேன் நான். என்மீது இரக்கப்பட்டவள் கொஞ்சம் தள்ளிப்போய் தன்னுடைய ஆடைகளை அலசி ஆராய்ந்தாள். பிறகு முகத்தை துக்கமாக வைத்துக் கொண்டு இல்லையே என்று கையை விரித்தாள். "கொண்டையைப் பாருங்கள். கொண்டை ஊசியாவது இருக்கும்" என்றேன் நான். அவள் என்னருகே வந்து தலையைக் குனிந்துகாட்டினாள். கேசத்திலிருந்து கமகமவென்று மல்லிகைவாசனை வந்தது. கொண்டை அலங்காரம் ஓஹோவென்று இருந்தது. பிளாஸ்டிக் hair slide களை கவரக்கூடிய விதத்தில் செருகி இருந்தாள். ஆனால் கொண்டைஊசி இருக்கவில்லை.

"உங்களுக்கு பல்வலியே வருவதில்லையா?" என்று கேட்டேன். அழகான அத்தனை பற்களும் வெளித் தெரியக்கூடிய விதத்தில பளிச்சென்று சிரித்தவள் பதிலளிக்காமலேயே சென்றுவிட்டாள்.
நான் கையடக்கத் தொலைபேசியினூடாக நண்பனுடன் தொடர்புகொண்டேன். "நண்பா, நான் நீண்டநேரமாக பல்வலியால் அவஸ்தைப்படுகிறேன். எப்படியோ என்னவோ பல்லிடுக்கில் புகுந்து விட்டது. உடனடியாக எனக்கு ஊசியாவது பற்குச்சியாவது கொண்டுவந்துதா" என்றேன் நான். நண்பன் சிரிக்க ஆரம்பித்தான். 'என்னடா, நீ பைத்தியக்காரன் மாதிரி பேசுகிறாய்? ஓர் பற்குச்சியை எடுத்துக்கொண்டு நான் அவ்வளவுதூரம் உன்னைத் தேடிவர வேண்டுமா? எவ்வளவு முட்டாள்தனமான செயலாக அதுஇருக்கும். கொஞ்ச நேரம் பொறுத்துக்கொள். எல்லாம் தானாக சரியாகிவிடும்" என்று எனக்கு உபதேசம் பண்ணினான் நண்பன். "நண்பனே நீ

நினைப்பதைப் போல் பல்வேதனை இலேசானதாக இல்லை. நான் எப்போது செத்துவிடுவேனோ தெரியாது. என்கண்கள் இருண்டு விட்டன. காது அடைத்து விட்டது. எதுவுமே எனக்கு விளங்காமல் மூளை பிசகி விட்டது" என்றேன் நான் அழாக்குறையாக. மறு முனையிலிருந்த சிறிது நேரம் பேச்சு எதுவும் வரவில்லை. கொஞ்ச நேரம் கழித்து நண்பன் பேசினான். "சரி உன்னுடைய நிலைமையை நன்றாக புரிந்துகொண்டேன். நீ சொல்வதுபோல் பற்குச்சியை எடுத்துக்கொண்டு வருகிறேன்.

நான் இப்போது உன்னுடைய இடத்திலிருந்து இருநூற்றிஐம்பது கிலோமீற்றர் தள்ளிஇருக்கிறேன். இரண்டு மணித்தியாலங்கள் பொறுத்துக் கொள். நான் வந்துசேர்ந்து விடுகிறேன்" என்றான் நண்பன். இதற்கு என்னபதில் சொல்வது? நான் இரண்டு நிமிடத்தில் மரணமடையப் போகிறேன். அவனோ எனக்கு இரண்டு மணித்தியாலம் கெடு வைக்கிறான். தூக்கம் வந்துவிட மாட்டாதா என்ற நப்பாசையில் பத்து பதினைந்து நிமிடங்கள் கண்ணை மூடிக்கொண்டு அப்படியே இருந்தேன். ஓர் இனிமையான பாடல் கேட்டது. கண்களைத் திறந்துபார்க்க ஒரு கிழவர் ஜாலியாகப் பாடியபடி வந்து கொண்டிருந்தார்.

சந்தோஷமோ சந்தோஷம். கிழவரின் கையிலே பற்குச்சி இருந்தது. "பெரியவரே, நீங்கள் வைத்திருக்கும் அந்தப் பற்குச்சியை இரவலாகத் தர முடியுமா?" என்று கிழவரைப் பார்த்து வினயத்துடன் வேண்டிக் கொண்டேன் நான். என்னை முறைத்துப் பார்த்த கிழவர் காவிபடிந்த பற்களை காட்டிக் கொண்டே "பையனே, நீ யாரென்று எனக்குத் தெரியாது. ஆனால் நீ முட்டாள் என்பது மாத்திரம் உண்மை. ஏன் சொல்கிறேன் என்றால் பற்குச்சியை யாராவது கடனாகக் கொடுத்திருப்பதாக எங்காவது கேள்விப்பட்டிருக்கிறாயா? நான் கொடுக்கப் போவதில்லை" என்று எகத்தாளத்துடன் பேசினார் கிழவர்.

நான் ஆத்திரமுற்றாலும் அதனை அடக்கிக்கொண்டே "பெரியவரே, என் பல்லிடுக்கில் இறைச்சித் துணிக்கை சிக்கிக் கொண்டு நான் அவஸ்தைப்படுகிறேன். முப்பது செக்கன்களுக்கு உங்கள் பற்குச்சியைத் தந்தால் போதும். இறைச்சித் துணிக்கையை எடுத்துவிட்டு பற்குச்சியை உடனடியாக திருப்பித் தருகிறேன்" என்றேன் நான். "எவ்வளவு கெஞ்சினாலும் பற்குச்சியை நான் உனக்கு இரவலாக தரப் போவதில்லை. இது எனக்குச் சொந்தமான பற்குச்சி. அதனை யாருக்கு கொடுக்கும் எண்ணமும் எனக்கில்லை" என்று சொல்லிக்கொண்டே கிழவர் நடக்க ஆரம்பித்தார்.

"பெரியவரே கொஞ்சம் நில்லுங்கள்" என்று சொன்ன நான் என் காற்சட்டைப்பைக்குள் துருத்திக் கொண்டிருந்த பணக்கற்றையை

வெளியே எடுத்தேன். "பெரியவரே பற்குச்சியை எனக்குக் கடனாக தரவேண்டாம். இந்தப் பணக்கற்றையை வாங்கிக் கொண்டு அந்த பற்குச்சியை எனக்கு விற்றுவிடுங்கள்" என்றேன் நான். "நீ என்ன வியாபாரியா?" என்று கிழவர் என்னைப்பார்த்து கேட்டார்.

"ஏன் எதற்காகக் கேட்கிறீர்கள்?"
"உன்னைப் போல் கேடு கெட்ட வியாபாரியை நான் எங்குமே பார்க்கவில்லை. அற்பப் பற்குச்சிக்கு பணக்கற்றையை தருமளவுக்கு உன்னிடம் பணம் இருக்கிறது என்பதன் அர்த்தம் பணத்தைக் குறுக்கு வழியில் நீ சம்பாதிக்கிறாய். அது தொடக் கூடாத பணம். நீ எவ்வள வுதான் தந்தாலும் நான் உனக்கு பற்குச்சியை விற்கப் போவதில்லை." என்று தீர்க்கமான குரலில் கூறினார் கிழவர். என் கோபம் இப்போது எல்லை மீறியது. ஒரு கிழவனிடம் நான் கெஞ்சிக்கொண்டிருக்கிறேன் என்னுடைய அந்தஸ்தையும் கௌரவத்தையும் செல்வாக்கையும் ஒருகணம் நான் மறந்து விட்டதனால் இந்த வழிப்போக்கன் என்னை எவ்வளவு இழிவாக பேசுகிறான்?.

"கிழவரே போதும். பற்குச்சியை என்னிடம் ஒப்படைக்கா விட்டால் நான் பலாத்காரத்தை பிரயோகிக்க வேண்டியிருக்கும்" என்றேன் நான் கோபத்துடன். "இது ஜனநாயக நாடு. பற்குச்சியை இல்லையென்று சொல்லுவதற்கு எனக்கு எல்லா உரிமையும் இருக்கிறது. நீ நினைப்பதைப் போல் பற்குச்சியை என்னிடமிருந்து தட்டிப் பறிப்பதற்கு உனக்கு யார் உரிமை தந்தது?" என்று பதில் சொன்னார் கிழவர் காரத்துடன். நோஞ்சான் போலத் தோற்றமளித்தாலும் கிழவர் பொல்லாதவர்; பேச்சிலே மிடுக்கும், கம்பீரமும், அஞ்சா நெஞ்சமும் இருந்தது. இதற்கு மேலும் கிழவரின் கதையைக் கேட்டுக் கொண்டிருக்க எனக்கு பொறுமையிருக்கவில்லை. இடுப்பிலே செருகி வைத்திருந்த கைத்துப்பாக்கியை எடுத்து கிழவரின் நெற்றிக்கு நேரே நீட்டினேன். "பையனே, இந்த அற்பப் பற்குச்சிக்காக என்னைக் கொல்லவா போகிறாய்" என்று கேட்டார் கிழவர். "உன்னிடம் இருக்கும் பற்குச்சியை ஒப்படைக்காவிட்டால் அதை செய்யவும் தயங்கமாட்டேன்" என்று சொன்ன நான் துப்பாக்கியை Load பண்ணினேன். சிறிது நேரம் யோசித்துவிட்டு "சரிசரி, துப்பாக்கியை எடு. பற்குச்சியை தருகிறேன்" என்று மிகவும் அமைதியாக கூறினார் கிழவர்.

துப்பாக்கியின் மகிமையை மெச்சிக்கொண்டே நான் துப்பாக்கியை மீண்டும் இடுப்பிலே செருகினேன். ஒரு கணப்பொழுது தான். கிழவர் என்ன செய்தாரோ ஏதுசெய்தாரோ எனக்குத் தெரியாது அவரின் வலது கையிலே பளபளக்கும் புத்தம்புது துப்பாக்கி ஒன்று மின்னிக் கொண்டிருந்தது. "நிலத்திலே முழந்தாளிட்டு அமர்ந்துகொள்" என்றார் கிழவர் சாவதானமாக. நான் அமர்ந்தேன். "கைகளை தலைக்குப் பின்புறமாக கட்டிக்கொள்" என்றார். நானும் அதன்படி செய்தேன். என்னருகிலே வந்த கிழவர் இடுப்பிலே செருகியிருந்த என்

கைத்துப்பாக்கியை எடுத்து தூரத்திலே வீசி எறிந்தார். பிறகு என்னைபபார்த்து “பையனே, எனக்குச் சொந்தமான பற்குச்சியை நான் யாருக்குமே கொடுக்கப் போவதில்லை” என்று சொல்லிக்கொண்டே மீண்டும் ஜாலியாக பாடிக்கொண்டே நடக்க ஆரம்பித்தார் கிழவர்.



# திருமதி பூச்சியியலாளன்

எம்.எம்.நௌஷாத்

அன்பில்லா மனைவியைப் பெற்றவன் அபாக்கியவான் என்றும் அன்பில்லா கணவனைப் பெற்றவள் அபாக்கியவதி என்றும் கல்யாண மண்டபத்தின் முகப்பிலே இரவிலும் பளிச்செனப் புலப்படும் விதத்திலே ஒளிரும் எழுத்துக்களில் எழுதப்பட்டு இருந்தது. லுவானாவுக்கு திருமணம் நடந்தது அந்த மண்டபத்தில் தான். மண்டபத்திலே வசதிகள் குறைவாகவே இருந்தன. ஆசனங்கள் பழைய ஆசனங்கள். விரிக்கப்பட்டிருந்த மேசைச்சீலைகளும் திரைச்சீலைகளும் பழசாகிப் போயிருந்தன. ஆனாலும் முகப்பில் எழுதப்பட்டிருந்த வாக்கி யங்கள் மனதை அப்படியே தொட்டு விட்டதால் அம்மண்டபத்தை தேர்ந் தெடுத்தாள் அவள். எப்படியிருந்த போதிலும் இத்தாலிய நாட்டு சமையல்காரன் மிகவும் சுவையாக சமைத்திருந்தான். விருந்தாளிகள் ஆஹா! பிரமாதம் என்று பாராட்டினார்கள். கல்யாணம் அமர்க்களமாக நடந்து முடிந்தது. அவளை மணம் முடித்தவன் லொப்ஸ்டர் என்பவன். லுவானா சாதாரண குடும்பத்தில் பிறந்தவள், சாதாரண மங்கை, அழகானவள், அன்புக்காக ஏங்கித் தவிப்பவள், அன்புக்காக எதையும் அர்ப்பணிக்கத் தயாரானவள்.

அவளுக்கு மூன்று வயதாக இருக்கும்போதே லுவானாவின் தந்தை கிளிக்கூண்டைக் கொண்டுவந்தார். “இது என்ன?” என்று கேட்டாள் லுவானா.
“கிளிக்கூண்டு”
“எதற்காக கிளிக்கூண்டு?”
“கிளி வளர்ப்பதற்கு”
“எங்கே கிளி?” என்று லுவானா கேட்டதும் பலவர்ணச் சேர்க்கையால் அலங்கரிக்கப்பட்ட ஓர் அழகான கிளியைக் கொண்டுவந்து கிளிக்கூண்டுக்குள் அடைத்தார் லுவானாவின் தந்தை. “கிளியுடன் பேசு” என்றுசொன்னார் தந்தை. “வணக்கம் லுவானா, நான் கிளி” என்று லுவானா பேசுவதற்கு முன்பாகவே கிளி பேசியது.
“ஹாய்! கிளி பேசுகிறது” என்று துள்ளிக் குதித்தவாறே உள்ளே ஓடினாள் லுவானா. அன்று முதல் கிளியுடன் அன்பாக இருக்க ஆரம்பித்தாள் லுவானா. கிளிக்கு பழங்கள் ஊட்டினாள்; கிளியுடன் பேசினாள்; கிளிக்கு கதைகள் சொன்னாள்; கிளிப்பாட்டு பாடினாள்; கிளி ஓவியம் வரைந்தாள்.

பாடசாலைக்கு போனாள் லுவானா. பாடசாலை செல்ல ஆரம்பித்த லுவானாவின் முகம் கவலையில் ஆழ்ந்தது. ஒருநாள் பாடசாலை விட்டு வந்தவுடன் தந்தையின் அருகில் வந்து “நம்முடைய கிளி பறக்கமாட்டாதா?” என்று கேட்டாள் லுவானா.
“ஏன் இப்படிக் கேட்டாய்? கிளி ஒரு பறவை. பறவைகள் பறக்கத்தானே வேண்டும்”
“நம்முடைய கிளி பறந்ததை நான் ஒருநாளும் காணவில்லையே”

“கிளியைக் கூண்டிலே அடைத்து வைத்திருக்கிறோம். அதனால் கூண்டிற்குள் இருந்து உன்னுடன் பேசுவதைத் தவிர அதனால் பறந்துசெல்ல முடியாது” என்று பதிலளித்தார் தந்தை. “உலகம் எல்லாம் பறந்து திரிய வேண்டிய கிளியை கிளிக்கூண்டில் அடைத்து வைத்திருக்கிறோம். அது பாவம் அல்லவா?” என்று கவலை தோய்ந்த குரலில் கேட்டாள் லுவானா. தந்தை லுவானாவின் தலையை அன்புடன் தடவி கிளிக்கூண்டின் சின்னக் கதவைத் திறந்துவிட பஞ்சவர்ணக்கிளி சிறகடித்துப் பறந்தது. “இப்போது சந்தோஷம் தானே” என்று கேட்டார் தந்தை. “நன்றி” என்று சொல்லி குதூகலித்தாள் லுவானா. கிளி பறந்துபோய் ஓரிரு வாரங்கள் கழித்து அயல் வீட்டின் சமையல் அறையில் பிறந்த அழகிய வெண்ணிற பூனைக்குட்டி அவளைச் சுற்றிச்சுற்றி வந்தது. லுவானா அந்தப் பூனைக்குட்டியுடன் தோழமை பாராட்டினாள். பூனை அவளுடன் விளையாடும் நேரம் தவிர்ந்த மற்ற வேளைகளில் சுதந்திரமாகச் சுற்றித் திரிந்தது; மியாவ்மியாவ் என்று கத்தியது. பூனைக்கென்று கூண்டோ கூடோ இருக்காததால் லுவானா மிகவும் மகிழ்ச்சியடைந்தாள்.

ஒவ்வாமை வரும், பூனை வேண்டாம்; மூச்சிழுப்பும் இருமலும் அடிக்கடிவரும், பூனைவேண்டாம் என்று லுவானாவின் தந்தையிடம் பலர் எச்சரித்தார்கள். லுவானா உபதேசங்களையெல்லாம் சட்டை செய்தாளா என்றால் இல்லை. சில உறவினர்கள் குட்டிப் பூனையை எங்கேயெல்லாமோ கொண்டுபோய் ஒளித்து வைத்தார்கள். அப்போதெல்லாம் குட்டிப்பூனை அவளிடமே திரும்பி வந்துவிடும். பாதையைக் கடக்க எத்தனித்த பூனைக் குட்டியை வேகமாக வந்த கனரகவாகனம் நசித்துக் கொன்றதால் குட்டிப்பூனையின் ஆயுள் அற்பமாக முடிய இறந்த பூனையைப் பின்புறத் தோட்டத்தில் புதைத்தார்கள். பூனையின் இறப்பு லுவானாவின் உள்ளத்தைக் கடுமையாகப் பாதித்தது. அவள் மூன்றுநாட்கள் அழுது கொண்டேயிருந்தாள்; பூனை புதைக்கப்பட்ட இடத்தையே சுற்றிசுற்றி வந்தாள். இறந்தபூனை திரும்பிவரும் என்று யாரோ சொல்லவே அதனை அவள் நம்பினாள். ஆனால் குட்டிப்பூனை திரும்பி வரவேயில்லை. லுவானாவின் துன்பநிலையைப் பார்த்துத் துக்கமடைந்த லுவானாவின் தந்தை எங்கெல்லாமோ அலைந்துதிரிந்து அழகாகத் தோற்றமளித்த இன்னுமொரு பூனையை கொண்டுவந்தார். அந்த நாளிலிருந்து லுவானாவின் வாழ்க்கையில் மீண்டும் மகிழ்ச்சிப் பிரவாகம் துள்ளியோட ஆரம்பித்துவிட்டது. பூனை கன்னங்கரேலன்று இருந்தது. உரோமங்கள் சிலிர்க்கையில் கரடியைப் போல் தோற்றமளித்தது. கண்கள் இருளிலே மின்னிப் பயங்கரத்தை உண்டுபண்ணின. ஆனாலும் லுவானா பூனையை அழகு என்று சொன்னாள். லுவானா எந்தவேளையிலும் பூனையுடன் பேசிக்கொண்டேயிருப்பாள். அவளுக்கு அக்கா, தங்கை யாருமில்லை; அம்மாவும் இல்லை. தன்னுடைய மகிழ்ச்சியையும் துன்பத்தையும்

பூனையுடன் பகிர்ந்துகொள்வாள். சாப்பிடும்போது அதற்கு ஊட்டுவாள். பூனை சாப்பிடாவிட்டால் அவளும் சாப்பிடமாட்டாள். லுவானா துக்கம்தோய்ந்த முகத்துடன் இருக்கும் போது பூனையும் அடுப்பங்கரை மூலையில் சுருண்டுபோய் படுத்திருக்கும். லுவானா மகிழ்ச்சிப் பெருக்கால் முகம் பூரித்திருக்கும் போது பூனையும் மகிழ்ச்சியுடன் மியாவ்மியாவ் என்று தோட்டமெல்லாம் உலாவித்திரியும். பூனைக்கு பெயரும் வைத்தாள் லுவானா. தோழிகள் எல்லோரையும் அந்த வைபவத்திற்கு அழைத்திருந்தாள். பெயர் கூயி. கூயி வந்தபின் பூனையைப் பற்றி நிறைய வாசித்தாள்; நிறையக் கதைகளும் கேள்விப்பட்டாள். சிலஉண்மையானவை; சில கட்டுக்கதைகள்; சில ஐதீகங்கள்.

பூனைகள் நோய்களால் பீடிக்கப்பட்டால் பச்சிலைகளை தேடிப்போகும்; அல்லது மூலிகைகளை தேடிப்போகும்; சாப்பிடும், நோய் தீர்ந்துவிடும். உச்சி மாடியிலிருந்து சறுக்கி விழுந்து முள்ளந்தண்டு உடைந்து போனாலும் பூனைகள் உயிர் பிழைத்துக்கொள்ளும் என்று சொன்னார்கள். அந்த விடயத்தைக் கண்கூடாகக் கண்டவள் லுவானா. ஒருநாள் மாடியிலிருந்து சறுக்கி விழுந்து மூச்சுபேச்சின்றி கூயி சுருண்டு கிடக்க லுவானா பூனையைத் தூக்குவதற்கு ஓடினாள். பூனையைத் தூக்குவதற்காக கைகளை அருகில் கொண்டு செல்லப்போனபோதே கூயி மீது அன்புசெலுத்தும் பெண்ணாக இருப்பின் உன் கைகளை இழுத்துக்கொள் என்று எங்கிருந்தோ அசரீரி கேட்டது. அவள் சட்டென்று கையை பின்னிழுத்தவாறே சுற்றும்முற்றும் பார்த்தாள். அது அசரீரியல்ல, அவளுடைய உள்ளத்தின் குரல். லுவானா பூனையைத் தொடவில்லை. விடிந்தவுடன் முதற்காரியமாக கூயி விழுந்த இடத்தைப் போய்ப் பார்த்தாள். அது அங்கிருக்கவில்லை, அது லுவானாவின் கட்டிலுக்குக் கீழே நிம்மதியாக உறங்கிக் கொண்டிருந்தது. கூயி நீண்டகாலம் உயிர் வாழ்ந்து தன்னுடைய பெயரைக் காப்பாற்றும் விதத்தில் கூயி பரம்பரையை உருவாக்கியது. அவற்றில் ஆண் பூனைகளும் இருந்தன; பெண் பூனைகளும் இருந்தன. கூயினுடைய குட்டிகளும் அன்புள்ளம் கொண்டவையாகத் திகழ்ந்தன. வெள்ளை மேனியிலே சாம்பல் நிறப்புள்ளிகள் போட்ட குட்டிகள் மூன்று லுவானாவின் கால்களையே சுற்றிச் சுற்றி வந்தன. லுவானா பூரிப்படைந்தாள். அந்தப் பூனைக்குட்டிகளும் வீட்டைவிட்டு வெளிச் செல்லவேயில்லை. அவைகளும் கூயிகூயி பரம்பரையை உருவாக்கின. இப்படியே பூனைக்குட்டிகள் பெருகிக் கொண்டே இருந்தன.

முற்றமெங்கும் பனி படர்ந்திருந்த இதமான காலையொன்றில் கம்பீரமான ஓர் ஆண்மகன் அவளுடைய வீட்டு முன்றலிலே வந்திறங்கினான். ஆண்மகன் செக்கச்செவேலென்று கண்ணுக்குக் குளிர்ச்சியாகத் தோற்றமளித்தான். "யார் நீங்கள்? எதற்காக இங்கே வந்திருக்கிறீர்கள்?" என்று கேட்டாள் லுவானா. "நான் லொப்ஸ்டர்,

உங்களைத் திருமணம் செய்துகொள்ள விரும்புகின்றேன்" என்றான் ஆண்மகன். ஒருகணம் பேசமுடியாமல் நிலைகுலைந்து போன லுவானா பிறகு தன்னைச் சுதாகரித்துக்கொண்டு "அப்படியான எண்ணத்தோடு நீங்கள் வந்திருந்தால் என் தந்தையை சந்திப்பதுதான் நல்லது" என்றாள்.

லொப்ஸ்டர் பூச்சியியலில் விசேட ஆராய்ச்சி செய்து கலாநிதிப் பட்டம் வாங்கியிருந்தார். வயது இருபத்தொன்பது. தாயும் இல்லை; தந்தையும் இல்லை. தனிக்கட்டையாக ஆற்றங்கரையிலே தனி வீடுகட்டி வாழ்ந்து வருகிறார். எல்லா நற்குணங்களும் நிரம்பிய நல்லமனிதர் என்றவாறாக லெப்ஸ்டரைப்பற்றி புகழ்ந்து 'நீ அவனைத் திருமணம் செய்துகொள்கிறாயா?' என்று லுவானாவின் தந்தை கேட்க அவள் உடனே திருமணத்திற்கு ஒப்புக்கொண்டுவிட்டாள். அவள் முடிவெடுத்தது தந்தை வழங்கிய நற்சான்றிதழை வைத்து அல்ல. அந்த வர்ணனைகளால் ஆகப்போவது ஒன்றுமில்லை. அந்த ஆண்மகனின் கம்பீரம் எப்படியோ முதற் சந்திப்பிலே அவளுடைய ஆழ்மனதில் இடம்பிடித்துக் கொண்டதுதான் காரணம்.

லுவானாவுக்கு ஒரே ஒரு கேள்விதான் கேட்க வேண்டியிருந்தது. அவள் தந்தையைப் பார்த்து அந்தக் கேள்வியைக் கேட்டாள்.
"நீங்கள் சொன்ன மனிதர் என்மீது அன்பு செலுத்துவாரா?"
"ஆம் அதிலென்ன சந்தேகம், ஆளைப் பார்த்தாலே தெரியவில்லை. அவருடைய கண்களை நீ பார்க்கவில்லையா? அந்தக் கண்களிலே தெரியும் கனிவை நீ காணவில்லையா?" என்று லுவானாவைக் கடிந்து கொண்டார் தந்தை. லுவானா "ஆமாம் ஆமாம்" என்று ஒப்புக்குத் தலையாட்டினாள் லுவானா. லுவானா நான் உங்களைத் திருமணம் செய்து கொள்ள விரும்புகிறேன் என்று சொன்ன அதே கணத்தில் அவரைத்தான் திருமணம் முடிப்பது என்று அவள் ஏற்கனவே மனசுக்குள் முடிவெடுத்துவிட்டாள். எனவே சிந்தித்து விடையளிக்க ஒன்றுமேயிருக்கவில்லை. அடுத்த நாளே கலாநுட்பத்துடன் செதுக்கப்பட்ட வைரமோதிரமொன்றை லுவானாவின் மோதிரவிரலில் லொப்ஸ்டர் அணிவிக்க அகமகிழ்ந்து போனாள் லுவானா. தேவதைக் கல்யாணம் போல் திருமணமும் உடனே நிகழ்ந்து முடிந்தது.

திருமணநிகழ்விற்குச் சற்றுமுன்னர் லொப்ஸ்டர் லுவானாவை ஒதுக்குபுறத்திற்கு அழைத்துச் சென்று "லுவானா உங்களிடம் முக்கியமான விஷயம் கேட்கவேண்டும்" என்று சொன்னார்.
"தாராளமாகக் கேளுங்கள்"
"நான் உங்களைக் காண்கின்ற வேளைகளிலெல்லாம் நீங்கள் பூனையோடு விளையாடுகிறீர்கள்; பேசுகிறீர்கள்; கொஞ்சுகிறீர்கள் இது உங்களுக்கு சிறு பிள்ளைத்தனமாகத் தெரியவில்லையா?" லுவானா சிரித்தாள்.

“இதுவா முக்கிய விஷயம்? எனக்கு சகோதரர்கள் கிடையாது; சகோதரிகள் கிடையாது. சிறு வயதிலிருந்தே பூனைகள்தான் என் தனிமையை போக்கின. அவை என்நண்பர்கள். நான் பூனைகளை நேசிக்கிறேன். அவ்வளவுதான்”

“அதைப் பற்றியெல்லாம் எனக்குத் தெரியாது. என்னைப் பொறுத்தவரை பூனைகள் நண்பர்களல்ல எதிரிகள், அவலட்சணமான ஜந்துகள்” என்றார் லொப்ஸ்டர். “ஏன் இப்படி ஏடாகூடமாகக் கதைக்கிறீர்கள்? பூனைகளுடன் பழகிப் பாருங்கள். பழகிப் பார்த்தீர்களென்றால் பூனைகள் மனிதர்களின் நல்ல நண்பர்கள் என்றவிடயம் தெரியவரும்” என்றாள் லுவானா மெல்லிய குரலில். “இதோபார் லுவானா, யார் உபதேசம் செய்தாலும் எனக்குப் பிடிக்காது. நான் பூச்சியியலாளன், பூச்சிகளை வளர்ப்பவன்; பூச்சிகளின் நடத்தை செயற்பாடுகளை அவதானிப்பவன்; பூச்சிகளை ஆய்வு செய்பவன்; உன் செல்லப்பூனைகள் என் பூச்சிகளைக் கொன்றுவிட்டால் அதனை நான் பொறுத்துக்கொள்ள மாட்டேன்” என்று இறுக்கமான குரலில் சொன்னான் லொப்ஸ்டர். லுவானா பதில் பேச முடியாமல் விக்கித்து நின்றாள். அழுவதா வேண்டாமா என்று மௌனமாக தன் கண்களைக் கேட்க விழிகளோ பதில் சொல்லாமலேயே கலங்கின. “நாளைக்கு நாம் இந்த வீட்டைவிட்டுச் செல்லும்போது உன் பூனைகள் எதுவும் நம்முடன் வரக்கூடாது, சரிதானே” என்று சொல்லிவிட்டு மணமகன் தன்னுடைய இடத்திற்கு போனான். மணமகள் சரியென்று தலையாட்டினாள்.

லொப்ஸ்டர் அற்புத அறிவுநிரம்பிய, ஞானதிருஷ்டிமிக்க விஞ்ஞானி. அவர் நாவிலிருந்து வெளிப்படும் ஒவ்வொரு சொற்களிலும் நுட்பமும், அரும்பதங்களும் விரவிக் காணப்படும். சாப்பிடுதல் என்பதை ஆகார உள்வாங்கல் என்றும், சுவாசித்தல் என்பதை உயிர்வாழ நெஞ்சசைத்தல் என்றும் வினோத சொற்றொடர்களால் அழைப்பார் லொப்ஸ்டர். அவரை வைத்தே ஓர் அகராதி தயாரித்து விடலாம். லொப்ஸ்டர் என்று பெயர் வந்ததற்கும் ஒரு சுவாரஷ்யமான கதை உண்டு. லொப்ஸ்டரின் தாயார் லொப்ஸ்டரை கருப்பையில் சுமந்து கொண்டிருந்தபோது வயிற்றை ஸ்கேன் பண்ணிப் பார்த்த மகப்பேற்றுநிபுணர் “கடவுளே, கருக்குழந்தை லொப்ஸ்டர் மாதிரி இருக்கிறான்” என்று தன்னையறியாமலே கூவிவிட்டார். “என்வயிற்றில் வளரும் கருக்குழந்தையை லொப்ஸ்டர் என்றா சொன்னீர்கள்?” என்று காட்டமாகக் கேட்டாள் லொப்ஸ்டரின் அம்மா. “இல்லை அம்மணி, என்னை மன்னித்துக் கொள்ளுங்கள் உங்கள் கருக்குழந்தை லொப்ஸ்டர் போன்று தோற்றமளிக்கிறான். அதுதான் என்னை அறியாமல் என் வாயிலிருந்து வாரத்தைகள் வெளிப்பட்டுவிட்டன, என்னை மன்னித்துக் கொள்ளுங்கள் அம்மணி” என்று மன்னிப்புக்கோரும் தோரணையில் கூறினார் மகப்பேற்று நிபுணர். என்றாலும் இந்த பதிலைக் கேட்டு லொப்ஸ்டரின் தாயார் சமாதானமடையவில்லை. லொப்ஸ்டரின் தந்தையார் எவ்வளவு

எடுத்துச் சொல்லியும் கேட்காமல் விடயத்தை பூதாகரமாக்கி நீதிமன்றம்வரை கொண்டு சென்றாள் லொப்ஸ்டரின் தாயார்.

வழக்கு நீதிமன்றத்தில் நடந்து கொண்டிருக்கும்போதே லொப்ஸ்டர் பிறந்தான். என்ன ஆச்சரியம் தோற்றத்திலும் உடலமைப்பிலும் குழந்தை லொப்ஸ்டர் போலவே இருந்தது, குழந்தை அழகாகவும் இருந்தது. தூரத்துக் கிராமத்தில் வாழ்ந்த மூதாட்டி லொப்ஸ்டர் பிறந்த செய்தி கேட்டு ஓடோடி வந்தாள். மூதாட்டி எல்லா ஞானங்களையும் தன்னகத்தே தேக்கி வைத்திருக்கும் பெண்மணி. எல்லா சாஸ்திரங்களையும் கரைத்துக் குடித்திருந்தாள் அவள். அவள் குழந்தையைக் கண்டு அகமகிழ்ந்து மெச்சி, முகர்ந்து "இந்தக் குழந்தை எதிர்காலத்தில் மகா ஞானஸ்தனாக வருவான்" என்று ஆசிர்வதித்தாள். "மூதாட்டி குழந்தைக்கு என்னபெயர் வைப்பது?" என்று லொப்ஸ்டரின் தாய் மூதாட்டியைப் பார்த்துக் கேட்க மூதாட்டி குழந்தையை நன்கு உற்றுப் பார்த்து ஒருகணம் யோசித்தபின் "லொப்ஸ்டர் என்று வைப்போம்" என்று சொன்னாள். கொஞ்சநேரம் பேசாமடந்தை ஆகிய லொப்ஸ்டரின் தாயின் குற்றமுள்ள மனம் குற்றவுணர்வால் அப்படியே வெம்பிப் போயிற்று. முதற்காரியமாக நீதிமன்று போய் மகப்பேற்று நிபுணருக்கெதிராக தொடர்ந்த வழக்கை வாபஸ்பெற்றவள் டாக்டரிடம் மீண்டும் மீண்டும் மன்னிப்பு கேட்டுக்கொண்டாள்.

திருமணம் முடித்த முதல் தினத்தன்று "நான் உங்கள்மீது அன்பு செலுத்துகின்றேன்" என்று அன்பு பொங்கச் சொன்னாள் லுவானா. "நானும்தான்" என்று பதிலளித்தார் லொப்ஸ்டர். லொப்ஸ்டர் அளித்த பதில் கல்யாணம் ஆன புதிதில் மணமகன் உற்சாகம் பீறிட சொல்லிய வார்த்தைகள் போல் இருக்கவில்லை. லொப்ஸ்டரின் வார்த்தையில் ஜீவனைக் காணவில்லை; உயிர்த்துடிப்பு இருக்கவில்லை. "ஏன் சுரத்தில்லாமல் சொல்லுகிறீர்கள்?" என்று தைரியத்தை வரவழைத்துக் கொண்டு கேட்டாள் லுவானா. லொப்ஸ்டர் மெல்லியதாக புன்னகைத்து "சரியான விடையை சொல்லட்டுமா?" என்று கேட்டார் லொப்ஸ்டர்.

"சொல்லுங்கள்"

"நாம் மூச்சு எடுக்கிறோம்; மூச்சு விடுகிறோம், சாப்பிடுகிறோம், உடல் உணவை அரைத்துக் கொடுக்கிறது, சிறுநீர் கழிக்கிறோம். இவையெல்லாம் உடற்றொழில் செயற்பாடுகள்"

"நீங்கள் சொல்லுகின்ற இந்த உடற்றொழில் செயற்பாடுகளுக்கும் அன்புக்கும் என்ன சம்பந்தம்?" "அன்பும், காதலும் ஆண்பெண் தொடர்புகள் எல்லாம் உடற்றொழில் செயற்பாடுகள்தான். அன்பை ஊற்றெடுக்க வைக்கும் சுரப்பு இருக்கிறதென்று வைத்துக் கொள்வோம். அந்தச் சுரப்பு கூடினால் அன்பு அதிகரிக்கும்; ஆசையும் ஊற்றெடுக்கும் அவ்வளவுதான். நாம் அதற்கு அன்பு என்றலேபலை

ஒட்டிக்கொள்கிறோம், அவ்வளவுதான்” என்றார் லொப்ஸ்டர். லுவானாவின் முகமும் மனமும் சுருக்கென்று சுருங்கிப் போயிற்று.

நாட்கள் போகப்போக லொப்ஸ்டர் என்ற மாபெரும் விஞ்ஞான மேதையின் இரட்டை முகங்களையும், குறுக்கு வெட்டுப்பக்கங்களையும் அவள் நிறையவே தரிசித்தாள். திருமணபத்திரம் என்பதற்கு லொப்ஸ்டர் அளித்த வரைவிலக்கணம் பிறக்கின்ற குழந்தைக்கு சட்டபூர்வமாக தந்தையை அங்கீகரிக்கும் ஆவணம். லொப்ஸ்டர் ஒருநாள் பிரகடனப்படுத்தினார்.
“என்னுடைய உள்ளம் விசாலமானது; நான் உயரிய மனிதநேயம் கொண்டவன்”
“எப்படி?”
“நீ எனக்காக எந்தப் பழக்கவழக்கங்களையும் மாற்றிக்கொள்ள வேண்டியதில்லை. நீ எதை விரும்புகிறாயோ அதனைச் சாப்பிடலாம். விரும்பும் நேரம் வீட்டைவிட்டு வெளியே போகலாம்; வரலாம், ஆடைகள் அணியலாம்; அணியாமலும் இருக்கலாம்” என்று தன் பரந்த மனதை வெளிப்படுத்தினார் லொப்ஸ்டர்.

ஒரு மாலைக்கருக்கலில் மொட்டைமாடியில் உலாவிக் கொண்டிருந்த பொழுது நீல அல்லிப்பூவின் ஓவியம் ஒன்றைக் கண்டு வியந்தாள் லுவானா. உதைப்பந்து மைதானத்தை விடப் பெரிய மலர். ஓவியன் யாரென்று தெரியாது. “அங்கே பாருங்கள், மனதைக் கொள்ளை கொள்ளும் நீல அல்லிமலர்” என்று ஆகாயத்தை சுட்டிக் காட்டினாள் லுவானா. லொப்ஸ்டர் கண் புருவங்களை உயர்த்தி “உன் கண்களில் பிதற்றலா, மாயமா அல்லது கோளாறா?” என்று கேட்டார்.
“ஏன் கேட்கிறீர்கள்?”
“உனக்குப் பைத்தியம்”
“ஏன்?”
“ஆகாயத்தில் நீ பார்த்தது நீல அல்லிமலரல்ல, மேகங்களின் சேர்க்கை, நிலவின் நிழல், ஆகாயத்தின் நிறம் இது மூன்றும் சேர்ந்த மாயத்தோற்றம். எல்லாவற்றையும் அறிவியல் கண்ணோட்டத்தில் பார்த்தாயென்றால் உன் முட்டாள்தனம் உனக்கு விளங்கும்” என்றார் லொப்ஸ்டர் கிண்டலாக. லொப்ஸ்டர் சொன்னது நூற்றுக்கு நூறு யதார்த்தமேயானாலும் மனசு வாடியது.

இச்சம்பவத்திற்குப் பிறகு லுவானா உள்ளம் சொல்பவற்றை உதட்டால் பேசுவதைக் குறைத்துக் கொண்டாள். சிறுமழலையின் சிரிப்பைக்கூட முகத்தசைச் சுருக்கத்தால் ஏற்படும் ஒரு விஞ்ஞான விளைவு என்று அர்த்தம் கொடுத்தான் லொப்ஸ்டர். தேனிலவுக்கு சென்ற போதிலும்கூட லுவானாவை மடிக்கணனியை கையில் எடுத்துச் செல்வதைப் போலத்தான் அழைத்துச்சென்றான் லொப்ஸ்டர். அதனையும் அவனேதான் சொன்னான். வீட்டிலிருந்து புறப்படும்

வேளையில் மடிக்கணனியைக் காட்டி ‘இது மடிக்கணனி’ என்றவன் கைக்கணனியைச் சுட்டிக்காட்டி ‘இது கைக்கணனி’ என்றவன் லுவானாவின் நெற்றிக்கு நேரே சுட்டுவிரலை நீட்டி ‘நீ காதல் கணனி’ என்றான். லொப்ஸ்டர் அவளிடம் பெரிதாக எதுவும் பேசவில்லை. சம்பிரதாயச் சொற்கள் வா, போ, சாப்பிடு, இரு, நீராடு, வாசி, நில், நட, போன்றவை. சல்லாபம் இல்லை. நன்றாக வடிவமைக்கப்பட்ட சாப்பாடு; டெஸர்ட்; ஆஹா சாப்பாடு நன்றாக இருக்கிறது என்ற வார்த்தைகள், அவ்வளவுதான். லொப்ஸ்டர் தேவைப்படும்போது Enter என்ற keyஐ அழுத்துவான். அப்போது மடிக்கணனி இயங்க ஆரம்பித்துவிடும். இரண்டுவாரங்கள் கழித்து தேனிலவு முடியும் தருவாயில் லொப்ஸ்டர் என்ன நினைத்தானோ தெரியாது “என்னுடை செயற்றிறன் எப்படி இருந்தது?” என்று கணனி மொழியிலே கேட்டான். வேறு சந்தர்ப்பமாக இருந்திருப்பின் அவனுடைய மேனி முழுவதையும் அடித்து காயப்படுத்தி விட்டு கண்காணாத தேசத்திற்கு ஓடிப் போயிருப்பாள் லுவானா.

பூச்செடிகளில் ஆர்வமுள்ள லுவானா எப்படியோ லொப்ஸ்டரை வயப்படுத்தி பூச்செடிகள் விற்கும் பூந்தோட்டத்திற்கு அழைத்துச் சென்றவள் விதவிதமான வர்ணங்களில் விதவிதமான பூக்களைக் கண்டு சுகானுபவத்தில் கிறங்கிப்போனாள். அவளுடைய வாய் பூக்களைப் பற்றி ஓயாமல் கதைத்துக் கொண்டேயிருந்தாலும் லொப்ஸ்டருக்கு அவளுடைய கதைகளில் ஆர்வமிருப்பதாக தோன்றவில்லை. லுவானா பேசுவதைக் கேட்டுக் கொண்டிருந்தும் ம் என்றும் சொல்லவில்லை, இல்லை என்றும் சொல்லவில்லை.

லுவானா நிறைய பூச்செடிகளை வாங்குவதற்காக சேகரித்து ஓரிடத்தில் அடுக்கி “உங்களுக்கு இந்தப் பூக்கன்றுகளில் எது அதிகமாகப் பிடிக்கும்?” என்று கேட்டாள். லொப்ஸ்டர் அதற்காக காத்திருந்தவன் போல் “பூக்கன்றுகளைப் பற்றி நீ ஏதாவது அறிந்து வைத்திருக்கிறாயா?” என்று கேட்டான். “அதிலென்ன சந்தேகம்? என் தந்தைக்கு நிறையத் தெரியும், எனக்கு கொஞ்சம் தெரியும்” என்றாள் லுவானா பெருமையாக.
“பூக்கன்றுகளை பூச்சிகள் பீடிக்குமா?”
“தெரியாது”
“பூக்கும் பூக்கன்றுகளுக்கு உகந்தபசளை எது? நைதரசன் கலவையா? பொற்றாசியம் கலவையா?” “தெரியாது”
“எந்தப் பூச்செடியில் எந்த வண்டு வந்து தேன் குடிக்கும்?”
“தெரியாது” எல்லாம் நேர்முகப்பரீட்சைக் கேள்விகள். லொப்ஸ்டர் வெள்ளைக் கடதாசி ஒன்றைஎடுத்து அதிலே பெரிதாக இரண்டு பூஜ்யங்களை போட்டு லுவானாவிடம் காட்டினான். “உனக்கு பூக்கன்றுஇயலில் பூஜ்யம்தான்” என்று சொல்லிவிட்டு லொப்ஸ்டர்

சிரிக்க அன்று எதையும் வாங்காமல் வீடு திரும்பினாள் லுவானா. அன்றைய சம்பவம் அவளுடய மனதை நன்றாகவே பாதித்தது.
“எந்த நேரமும் அறிவியல்தானா?”
“இந்தப் பிரபஞ்சத்தை இயக்குவது அறிவியல்தான்”
“கலை, கலாரசனை என்பவையெல்லாம்..!”
“சோம்பேறிகள் சிருஷ்டித்துக் கொண்ட மாயாஜால சொற்கள்” என்றான் லொப்ஸ்டர்.

முடிவு செய்ய வேண்டிய காலம் வந்தது. அது விவாகரத்து. டிசெம்பர் முதலாந் திகதி லுவானா மனதைக் கல்லாக்கிக் கொண்டு வீட்டுக்கு வந்தாள். லொப்ஸ்டர் தன்னுடைய ஆய்வுகூடத்திற்கு போயிருந்தான். லுவானா ஆய்வுகூடத்தை நோக்கி ஓட்டமும் நடையுமாகப் போனாள். “காலணிகளைக் கழற்றவும்” என்ற பெயர்ப்பலகை இருந்தது. காலணிகளைக் கழற்றினாள் லுவானா. திருமண முடித்த பின் இன்று முதல் தடவையாக லொப்ஸ்டரின் பூச்சி ஆய்வுகூடத்திற்கு வந்திருக்கிறாள் லுவானா. அடுத்த பெயர்ப்பலகை “பூச்சிகளை மிதிக்காதீர்கள்” வித்தியாசமான பூச்சிகளின் வினோத உலகத்தை அவள் அங்கே பார்த்தாள். உயிரோடு இருந்தவைகளும், உயிரற்றவைகளும், போத்தல்களில் அடைக்கப்பட்டிருந்தவைகளும், சுதந்திரமாகப் பறந்து திரிந்தவைகளும். லுவானா மிகக் கவனமாய் பூச்சிகளை மிதிக்காமல் ஒவ்வொரு எட்டாக வைத்தாள். எல்லாச் சாத்தியமான நிறங்களிலும் பூச்சிகள் இருந்தன. சிவப்பு, செம்மஞ்சள், ஊதா, கருநீலம், மஞ்சள், பச்சை, நீலம் இத்தியாதி. இத்தியாதி. பிறகு துண்டங்கள், துண்டுக் கால்கள், உணர்கொம்புகள், கழற்றப்பட்ட முட்டைக் கண்கள்.

“உடையில் தங்கும் பூச்சிகளைத் தட்டிவிடாதீர்கள்” என்று இன்னுமொரு பெயர்ப்பலகை. உடம்பு பூராக ஊர்ந்துசெல்லும் வண்ணப்பூச்சிகளை தாங்கிக் கொண்டு அவள் நகர்ந்தாள். பூச்சிகளின் முடை நாற்றத்தால் வயிற்றுக்குமட்டல் வந்தாலும் பூச்சிகளின் சிருஷ்டி அழகைப் பார்த்து லுவானா மெய்ம்மறந்தாள். பூச்சிகள் அவளைப் பார்த்து கண் சிமிட்டின; கனிமொழி பேசின; காதல் மொழி புகன்றன; ரீங்காரமிட்டன; கவிதைபாடின; அவளைப் பார்த்து வணக்கம் சொல்லின. அவளுடைய மனசு மாறிற்று. “நான் உங்கள் பூச்சிகளைக் காதலிக்கிறேன்” என்றாள் லுவானா. நுணுக்குக் காட்டியிலே மூழ்கிப்போயிருந்த லொப்ஸ்டர் பேசவில்லை.

லொப்ஸ்டரின் பூச்சி ஆய்வுகூடத்தை தரிசித்த தினத்திலிருந்து தன்னை லொப்ஸ்டருக்கு ஏற்றவாறு மாற்றிக் கொள்வதெனத் தீர்மானித்து விட்டாள் லுவானா. லொப்ஸ்டர் கேட்காமலே அவன் களைப்புற்றிருக்கும் வேளையில் தேநீர் தயாரித்துக் கொடுத்தாள். சுவை, மணம் நாசியைத் ஊடுருவித் துளைக்கிற அளவுக்கு காலைச்

சிற்றுண்டி, பகலுணவு, இரவு ஆகாரம் சமைத்தாள். சிலவேளை லொப்ஸ்டருக்கு உணவை ஊட்டிவிடவும் செய்தாள்; அவனுடைய சப்பாத்துகளுக்கு ஷூ பொலிஷ் போட்டாள்; அவனுடைய ஆடைகளை கழுவி அழகாக மடிப்புக் குலையாமல் மினுக்கி எடுத்தாள்; வாரஇறுதி நாட்களில் இனிப்புப்பண்டங்களை செய்தாள்; வீட்டை அழகுபடுத்தினாள்; ஜன்னல் சீலைகளை நேரிய முறையில் தைத்தாள்; கண்ணாடிகளை பளிச்செனத் துடைத்தாள்.

இதற்கெல்லாம் லொப்ஸ்டரின் பிரதிபலிப்பு எப்படி இருந்ததென்றால் நன்றி என்று சொல்லவும் இல்லை; வேண்டாம் என்று மறுக்கவும் இல்லை. ஆனால் இப்போதெல்லாம் லொப்ஸ்டரின் நடத்தையில் ஒருமாற்றத்தை அவதானித்தாள் லுவானா. அடிக்கடி ஆய்வுகூடத்திலிருந்து வெளியே வந்து லுவானாவின் அறைக் கதவைத் தட்டுவான்; அல்லது சமைத்துக் கொண்டிருக்கும்போது வந்து சமையலறையில் எட்டிப் பார்ப்பான். அதுமட்டுமன்றி அயல்வீட்டு மனிதரிடம் அடிக்கடி பேச்சுக்கொடுத்துக் கொண்டிருப்பான். ஒருபோதும் பேசவும் பழகவும் தெரியாத இந்த மனிதன் என்ன இவருடன் பேசிக்கொண்டிருக்கின்றான் என்று அறிய ஆவலாக இருந்தாலும் நேரம் வரும்போது கேட்போம் என்று பொறுமையாக இருந்தாள் லுவானா. மற்றவர் பேசுவதை ஒட்டுக்கேட்பது கெட்டபழக்கம் என்று அவளுக்குத் தெளிவாகத் தெரிந்திருந்தாலும் ஒருநாள் ஆர்வம் தாங்கமுடியாமல் அவர்கள் இருவரும் பேசுவதைக் ஒற்றுக்கேட்டாள் லுவானா.

“இவள் இப்போதெல்லாம் விழுந்து விழுந்து உபசரிக்கிறள். வீட்டை நேர்த்தியாக வைத்திருக்கிறாள். இவளின் நடத்தைக் கோலம் சந்தேகப்படும் படியாக இருக்கின்றது” என்றான் லொப்ஸ்டர். “வாஸ்தவம்தான்” என்றார் அயல்வீட்டார். இருவரும் மது அருந்தினார்கள். லொப்ஸ்டர் மது அருந்துவதை இன்றுதான் அவள் காண்கிறாள். “இவள்” என்று சொல்லப்படுபவள் யார் என்று சற்று மூளையைக் குழப்பிக்கொண்ட லுவானா “பேதையே, அது உன்னைத் தான் சுட்டுகிறது” என்று புரிந்து கொண்டவுடன் மனம் சஞ்சலித்து கவலையில் ஆழ்ந்தாள்.

“யாராவது ஆள் இவளைப் பார்க்கவருகிறானா?”

“இல்லை”

“இவள் யாரையாவது பார்க்கச் செல்கிறாளா?”

“அடிக்கடி மினுக்கிக்கொண்டு போகிறாள் தான், ஆனால் எங்கே போகிறாளென்று தெரியாது” “யாருடனாவது பேசுகிறாளா?”

“அடிக்கடி அவளுடைய செல்போன் அடித்துக் கொண்டிருப்பதைக் கேட்டிருக்கிறேன்” என்று அயல்வீட்டுக்காரர் சொன்னதும் லுவானாவின் உள்ளம் நீர்க்குமிழி போல் உடைந்து சுக்குநூறாகிற்று.

ஒரு நிலவு எறிக்கும் இரவில் லுவானா திடுக்கிட்டெழுந்தாள். அர்த்த ஜாமத்தில் லொப்ஸ்டர் ‘யுரேக்கா யுரேக்கா’ என்று கத்திக் கொண்டு

ஓடி வர அவள் பயந்துவிட்டாள். ஆக்கிமிடிஸின் யுரேக்காவைப் பற்றி படிக்கும் காலத்திலேயே அறிந்துவைத்திருந்த லுவானா இன்று ஆக்கிமிடிஸை நேரடியாகப் பார்த்தாள். அதே ஞானதிருஷ்டியுள்ள முகம்; அதே தாடி; ஒட்டுத் துணியுமில்லாத நிர்வாணத் தோற்றம், உடம்பிலிருந்து நீர் சொட்டுச்சொட்டாக வடிந்து கொண்டிருந்தது. "முதலில் அதை மூடிக் கொள்ளுங்கள்" என்று துவாயை நீட்டினாள் லுவானா. லொப்ஸ்டர் வெட்கத்துடன் துவாயை வாங்கி அதை மூடிக்கொண்டான். லுவானா மற்றுமொரு துவாயை எடுத்து தலையைத் துவட்டி விட்டாள். "அது சரி என்ன புதிதாக கண்டுபிடித்துவிட்டீர்கள்?" என்று தன்னைத் தானே அவன் ஆசுவாசப்படுத்திக் கொண்டபின் அவள் கேட்டாள். லொப்ஸ்டர் அவளைப் பூச்சி ஆய்வுகூடத்திற்கு அழைத்துச் சென்று கணனி சாவியை அழுத்த சலனப்படம் ஓடியது. மரங்கள், செடிகள், பூச்சிகள், பாம்புகள், கிணறு, வானம், சந்து பொந்து என்று காட்சிகள் மாறிமாறி ஓடின.

"லுவானா நீ பார்த்தாயே காட்சிகள், அவை நீ நினைப்பதைப் போல நான் எடுத்த படங்கள் அல்ல. ஒரு சிறிய கருவியைக் கண்டுபிடித்திருக்கின்றேன். அதற்குப் பெயர் Intra Cerebral Imaging Device. அந்தக் கருவியை பூச்சியின் மூளைக்கு பொருத்திவிட்டால் போதும், பூச்சியின் மூளையில் உண்டான விம்பங்களை அது கிரகித்து கணனிக்கு அனுப்பும். புரிகிறதா?" என்று கேட்டான் லொப்ஸ்டர். ஞானஸ்தனான லொப்ஸ்டர் சொன்னவை எதுவும் உண்மையில் லுவானாவுக்கு புரியயேவேயில்லை. அவளுக்கு புரியவில்லை என்பது லொப்ஸ்டருக்கு புரிந்துவிட்டது. அவன் உயிருள்ள கரப்பான் பூச்சியொன்றை பிடித்துக் கொண்டு வந்து அதனை மயக்கி அதன் தலைத் துண்டத்திலே சிறியதொரு கருவியைப் பொருத்தி கணனிச் சாவியை அழுத்த படம் ஓட ஆரம்பித்தது.

கரப்பான் பூச்சி எங்கெங்கு செல்கின்றதோ என்னென்ன கரப்பான் பூச்சிக்குத் தோன்றியதோ அந்தக் காட்சிகள் எல்லாம் கணனித் திரையிலே ஓடின. அவளுடைய வீட்டு சமையலறை, தொலைக்காட்சிப் பெட்டி, அடுப்பு, சுவர்ப்படம், நாய்க்குட்டியொன்று, என்று எல்லா விம்பங்களும் வந்தன. அவளுடைய முகம் வந்தது, அவனுடைய முகம் வந்தது. லுவானா ஆச்சரியத்தில் வாயடைத்தாள். அற்புதமான விஞ்ஞானக் கண்டுபிடிப்பு "இந்தக் கருவியைக் கொண்டு மனிதர்களின் மூளையில் பதிவாகியுள்ள விம்பங்களை கணனிக்கு அனுப்ப முடியாதா?" என்று ஆவலோடு கேட்டாள் லுவானா. "முடியும் முடியும்" என்று சொன்ன லொப்ஸ்டர் அதற்காகவே காத்திருந்தவன் போல் அந்தக் கருவியை அவளுடைய இடதுகாதுச் சோணையின் பிற்புறமாக பொருத்த "ஏன் என்னுடைய காது மடலில் பொருத்துகிறீர்கள்?" என்று புரியாமல் கேட்டாள் லுவானா.

லொப்ஸ்டர் ஒன்றும் பேசாமல் கணனித் திரையின் சாவியை அழுத்த திரையிலே படம் ஓட ஆரம்பித்தது. வரவேற்பறை, தோட்டம், குளியலறை, படுக்கையறை, சமையல் அறை என்று காட்சிகள் விரிந்தன. வருகின்ற காட்சிகளில் எல்லாம் ஒரு பூதமும் தோன்ற ஆரம்பித்தது. பூதம் சிலவேளை சாப்பிட்டது; பூதம் சிலவேளை படுக்கையறைக்குள் புகுந்தது; பூதம் சில வேளை குளித்தது; பூதம் சிலவேளை கழுத்துப்பட்டியுடன் சென்றது. லொப்ஸ்டரின் கண்கள் கோபாவேசத்துடன் சிவந்தன. 'மாயச்சிரிப்பு சிரித்து என்னை ஏமாற்றலாமென்றா பார்க்கின்றாய்? அடிக்கடி வந்துபோகும் இந்தபூதம் யார்? பூதத்துடன் உனக்கென்ன தொடர்பு? நான் கணவன் உயிரோடு இருக்கிறேன் யார் அந்தப் பூதம்?' என்று சாரமாரியாகக் கேள்விகளைத் தொடுத்தான் லொப்ஸ்டர். லுவானா மௌனமாக இருந்தாள். அடிக்கடி அவளுடைய மூளைக்கு வந்து போகும் அந்த பூதவிம்பம் யாரென்று அவளுக்கும் புரியவில்லை. பூதத்தை இப்போதுதான் காண்கிறாள். முட்டைக் கண்கள்; கூரிய நீண்ட பற்கள்; இரண்டு கொம்புகள்; பரட்டைத் தலை; கன்னங்கரேலென்ற முகம். யார் இந்தப் பூதம்? அவள் யோசித்துக் கொண்டிருந்த போதே படம் முடிந்தது. கடைசியான நெருக்கமான காட்சியில் பூதத்தின் முகம் தெளிவாகத் தெரிய அவள் நன்றாக கண்களை உற்றுப் பார்த்தாள். செம்மஞ்சள் நிறமான பூதக்கண்கள், செம்மஞ்சள் நிறமான பூதக்கண்கள் !!! லுவானாவுக்கு புரிந்ததும் கலகலவென சிரித்தாள். "உங்கள் புதுக் கண்டுபிடிப்பு பிரமாதம். இன்னுமா உங்களுக்கு புரியவில்லை? இந்தக் கண்ணாடியில் உங்கள் கண்களை நன்றாகப் பாருங்கள்" என்று நிலைக் கண்ணாடியை லொப்ஸ்டரின் முகத்திற்கு நெருக்கமாக கொண்டு போனாள் லுவானா. லொப்ஸ்டர் நிலைக் கண்ணாடியில் பிரதிபலித்த தன்னுடைய கண்களைப் பார்த்தான், செம்மஞ்சள் நிறமான பூதக்கண்கள். "இந்தப் பூதம் வேறுயாருமில்லை, நீங்கள்தான்" என்று சாவதானமாகச் சொன்னாள் லுவானா.



# 1989,மரணபீதியும் அச்சவியலும், திறப்பின் மீள்வருகை

எம்.எம்.நௌஷாத்

1989 “அம்மா புளியமரத்துக்கடியில் பிசாசு நிற்கிறது” என்று அலறியடித்துக் கொண்டே ஓடி வந்தான் ஜூரன். பிசாசை ஒருமுறை பார்த்து விடவேண்டும் என்ற ஆர்வத்தில் அம்மாவும் கொல்லைப் புறத்திற்கு ஓடினாள். கொல்லைப்புறத்தில் பதினைந்து வருடங்களாக புளியமரம் நின்றது. எல்லா இடங்களிலும் இருள். புளியமரத்திற்குக் கீழே பார்த்தபோது உயரமாக கன்னங்கரிய பிசாசு. மீண்டும் கண்ணை கசக்கிவிட்டு பார்த்தாள். சந்தேகமில்லை, பிசாசுதான். அம்மாவும் அச்சத்தால் விதிர்விதிர்த்தாள். அங்குவந்த ஜூரனின் தந்தை ஜூரனின் கையை வலுக்கட்டாயமாக பிடித்துத் தரதரவென்று இழுத்துப்போய் “இதோ பிசாசை நன்றாகப் பார்த்துக்கொள்” என்று சொல்லி ஜூரனைப் புளியமரத்தடியில் தள்ளிவிட்டார். அது பிசாசு அல்ல. மேகங்களுக்கிடையில் நகர்ந்து வந்த சந்திரனின் இலேசான ஒளி புளியமரத்தின் இலைகளுக்கூடாகவும் கிளைகளுக்கூடாகவும் பாய்ந்து பிரதிபலித்து தூரத்தில் நின்று பார்ப்பவர்களுக்கு பிசாசு நிற்பதைப்போன்ற தோற்றத்தைக் கொடுக்க ஜூரனின் அம்மா சிரிக்க ஜூரனுக்கு வெட்கமாகி விட்டது. இருட்டுக்கு பயப்படுவதென்பது ஜூரனுக்கு இது முதல்முறையல்ல. பிசாசும் பலதடவை வந்து போயிருக்கிறது. கரப்பான் பூச்சிக்குப் பயம்; பூனைக்குப் பயம்; சொல்லும் பல்லிக்குப் பயம்; வீட்டுக்குள்ளேயே பாத்ரூம் செல்லப் பயம்; வெளிச்சமில்லாமல் நித்திரை கொள்ளப் பயம்; மின்விசிறிச் சப்தத்திற்குப் பயம். அவனுடைய பயத்தை போக்குவதற்காக எத்தனையோ முயற்சிகள் எடுத்தும் பலனில்லாமல் தோற்றுப்போனார் ஜூரனின் தந்தை. அப்படிப் பயந்தாங்கொள்ளியாய் இருந்தபோதிலும் ஜூரன் மகாபுத்திசாலி.

“எல்லாத் தாவரங்களும், எல்லா இலைகளும், எல்லாச் செடிகளும் பச்சை நிறத்தில் இருக்கும் போது பூக்கள் மட்டும் மஞ்சளாகவும், ஊதாவாகவும், சிவப்பாகவும் ஏன் பூக்கின்றன?” என்று தந்தையைப் பார்த்து ஜூரன் கேட்க தந்தை பதில்சொல்ல முடியாமல் திருதிரு என்று விழித்தார். “மிருகங்கள் எப்படி ஆகாரத்தை உட்கொள்கின்றன?”
“வாய் மூலமாக”
“நாங்கள் எப்படி ஆகாரத்தை உட்கொள்கிறோம்?”
“வாய் மூலமாக”
“மரம் எப்படி ஆகாரத்தை உட்கொள்கிறது?”
“மரம் சாப்பிடமாட்டாது”
“மரத்திற்கு உயிருண்டா?”
“ஆம்” “அப்படியானால் சாப்பிடாத மரம் எப்படி உயிர வாழ்கின்றது?” தந்தை மௌனமாக ஜூரன் கைகொட்டிச் சிரித்தான். “ஐயோ தந்தைக்கு மரங்களைப் பற்றி எதுவுமே தெரியாது, தெரியவில்லை என்றால் மரங்களைப் பற்றிப் படிக்கவில்லை, மரங்களைப் பற்றிப்

படிக்கவில்லை என்றால் பாடசாலைக்குப் போகவில்லை. தந்தையே நீங்கள் பாடசாலைக்குப் போகவில்லையா?” என்றெல்லாம் கேட்பான் ஜூரன்.

மாலை வேளைகளில் வீட்டிற்கு பின்புறமுள்ள கற்பாறையில் அமர்ந்து மரஞ்செடி கொடிகளுடன் பேசுவான் ஜூரன்; புற்பூண்டுகளுடன் பேசினான்; மாதுளை மரத்துடனும் நெடிதுயர்ந்து வளர்ந்திருந்த பப்பாசியுடனும் பேசினான். “உனக்கு பைத்தியமா?” என்று கேட்டால் “நீங்களும் பேசிப் பாருங்கள், அன்பான சொற்களுடன் மிக மெதுவாக இனிமையாகப் பேசிப் பாருங்கள், தாவரங்கள் செழித்து வளரும், பூக்காத மரங்களும் பூத்துக் குலுங்கும்” என்று பதிலளிப்பான் ஜூரன். “பைத்தியக்காரப் பையா? இது புதுக்கதை?” என்று சீண்டினால் சுற்றிப் பூத்துக்குலுங்கும் மலர்களைக் காட்டுவான். அவனுடைய கதைக்கு அவை சாட்சிகளாம். அவன் தோட்டத்தில் இருந்த எல்லாப் பூக்களுக்கும் அழகான பட்டப்பெயர் சூட்டியிருந்தான். சிரிக்கும் பூ, கவிதைப் பூ, ஐன்ஸ்டைன் பூ, மலைப் பூ, மந்திரப் பூ, மரகதப் பூ என்றெல்லாம் செல்லமாக பூக்களைக் கூப்பிட்டான் ஜூரன். காலையில் பூக்களே காலை வந்தனம் என்பான். கேட்டால் பூக்களும் எனக்கு வந்தனம் சொல்லின என்று சொன்னான் ஜூரன். ஜூரனின் இந்தப் பைத்தியக்காரத்தனத்தைப் பார்த்துக் கலவரமடைந்த ஜூரனின் தந்தை ஜூரனை மனோதத்துவ நிபுணரிடம் அழைத்துக் கொண்டு போனார்.

நிபுணர் ஜூரனின் முழங்காலைத் தட்டி கணுக்காலைத் தட்டி பின் முழங்கையைத் தட்டினார்; கண்களுக்குள் ஒளியைப் பாய்ச்சி விழித்திரையைப் பார்த்தார்; உண்ணாக்கு, செவிப்பறையைப் பார்த்தார்; இரத்த அழுத்தத்தை அளவிட்டார்; நாடித் துடிப்பை கணக்கிட்டார். பிறகு ஜூரனை ஒதுக்குப்புறமாக அழைத்துச் சென்று நீண்டநேரம் உரையாடிய டாக்டர் ஜூரனின் தந்தையைப் பார்த்து “நீங்கள் கவலைப்படும் விதத்தில் ஒன்றுமேயில்லை. ஜூரன் நூறுவீதம் சரியாக இருக்கிறான். ஆனால் நான் ஒரு உண்மையைச் சொல்லுவேன். நீங்கள் அதனை ஒத்துக் கொள்ளவேண்டும்” என்று பீடிகை போட்டார். “என்ன? என்ன?” என்று பதகளிப்புடன் ஜூரனின் தந்தை கேட்க “பயப்படும் செய்தியல்ல. நல்ல செய்திதான். உங்கள் மகன் எதிர்காலத்தில் விஞ்ஞானியாக வருவான்” என்று சொல்லி முடித்தார் டாக்டர்.

“விஞ்ஞானியாகவா?”

“ஆம், விஞ்ஞானியாகத்தான். விஞ்ஞானிகளின் வாழ்க்கை வரலாற்றை படித்துப் பார்த்தீர்களென்றால் அவர்களும் இளம்பராயத்தில் இப்படித்தான் இருந்திருக்கிறார்கள். பையனை பத்திரமாக பார்த்துக் கொள்ளுங்கள்” என்று சொன்னார் டாக்டர். டாக்டருடனான

சந்திப்பிற்குப் பிறகு ஜுரனின் தந்தை தன்னைக் கொஞ்சம் மாற்றிக்கொண்டு டாக்டர் சொன்னபடி ஜூரனின் கிறுக்குத்தனமான நடத்தைக்கோலங்களை வித்தியாசமான கோணத்தில் ரசிக்க ஆரம்பித்தார்.

எந்தவேளை பார்த்தாலும் ஜூரனின் கைகளில் மண் படிந்து இருக்கும்; பாத்தியைக் கிளறிக் கொண்டிருப்பான் அல்லது பெயர் தெரியாத செடியை நட்டுக் கொண்டிருப்பான் அல்லது புல்லிலைகளையும், பூவிதழ்களையும் கைவில்லையைக் கொண்டு ஆராய்ச்சி செய்து கொண்டிருப்பான். “மாமரத்தில் என்ன காய்க்கும்?” என்று கேட்டான் ஜூரன் ஒருநாள். “மாங்காய்” என்று அப்பாவித்தனமாக பதிலளித்தார் ஜுரனின் தந்தை.
“அப்பிள்மரத்தில் என்ன காய்க்கும்?”
“அப்பிள்” என்றார் மீண்டும் அப்பாவித்தனத்துடன். “ஏன் மாமரத்தில் அப்பிள் காய்க்கக் கூடாது?” என்று கேட்டான் ஜுரன். தந்தை சிரித்தார். “ஜுரன் என்னை முட்டாளாக்குவதாக நினைத்துக் கொண்டு நீ உன்னையே முட்டாளாக்கிக் கொண்டு விட்டாயே?” என்று சொல்லி விட்டு மீண்டும் சிரித்தார் தந்தை. ஆனால் ஜூரன் சிரிக்கவில்லை. தந்தையையும் அழைத்துக் கொண்டு தோட்டப் பின்புறத்திற்கு சென்றவன் புதிதாக முளைத்திருந்த மாங்கன்றைக் காட்டி “இந்த மாங்கன்றில் பொறுத்திருந்து பாருங்கள், அப்பிள் காய்க்கப் போகிறது” என்றான்.

ஜூரனின் தந்தைக்கு மீண்டும் கவலையுண்டாகிற்று. டாக்டர் சொல்வதுபோல் இவன் விஞ்ஞானியாகாமல் மூளை பிசகி பைத்தியக்கார ஆஸ்பத்திரியிலே தான் வாழ்க்கை முடியப் போகிறது என்ற அச்சத்தினால் மனோதத்துவ நிபுணரிடம் மீண்டும் ஓடோடிப் போனார் ஜுரனின் தந்தை. ஜூரனின் கதையைக் கேட்ட மனோதத்துவ நிபுணருக்கு இனம்புரியாத புத்துணர்ச்சியும், ஆர்வமும் உண்டாகி ஒரு விஞ்ஞானியின் உருவாக்கம் ஆரம்பமாகி விட்டது என்று நினைத்து பையனின் அப்பிள் மாங்கன்றை பார்க்க ஆசையோடு ஓடிவந்தவர் தோட்டத்திலே சாதாரணமாக எங்கும் இருக்கக்கூடிய மாங்கன்றை பார்த்தவுடன் முகம் செத்துப் போனவராக ஜூரனைக் கூப்பிட்டு “ஜுரன் இந்த மாங்கன்றில் அப்பிள் காய்க்கும் என்று நீ நம்புகிறாயா?” என்று கேட்டார். “ஏன் அப்படிக் கேட்கிறீர்கள் டாக்டர்?” என்று கேட்டான் ஜுரன்.

“மாமரத்தில் மாங்காயும் அப்பிள் மரத்தில் அப்பிளும் காய்க்க வேண்டுமென்பது இயற்கையின் விதி. அதனை யாராலும் மாற்றமுடியாது”

"ஒன்றையும் மாற்றவே முடியாதென்றால் விஞ்ஞானிகள் ஏன் ஆராய்ச்சி செய்து கொண்டிருக்கிறார்கள்?" திக்குமுக்காடிப் போன மனோதத்துவ நிபுணர், ஜூரன் உண்மையில் அதிபுத்திசாலிதான் என்று உணர்ந்து சமாளித்துக்கொண்டே "ஆனால் இப்படியான ஆரய்ச்சிகளைத் தோட்டப்புறத்தில் செய்யமுடியாது, அதற்கு நவீன ஆய்வுகூடமும் உபகரணங்களும் வேண்டும்" என்றார். ஜூரன் சிரித்தான்.

"டாக்டர் ஐயா, சொல்கிறேனென்று கோபித்துக் கொள்ளக்கூடாது. நீங்கள் பல்கலைக்கழகம் சென்று படித்துவிட்டு வந்தவர், நானோ சின்னப்பையன். விமானத்தைக் கண்டுபிடித்த ரைட் சகோதரர்கள் என்ன கடை வைத்திருந்தார்கள் என்றால் சைக்கிள் கடை. சைக்கிள் கடையில் தான் ஆராய்ச்சி நடந்தது. அதேபோலவே மெண்டலின் விதியைக் கண்டுபிடித்தவர் பாதிரியார். அவரிடம் நவீன ஆராய்ச்சிக்கூடம் இருக்கவில்லை. கொப்பர்னிகஸ், டார்வின் இவர்களெல்லாம் யார்?" என்று பெரியதொரு கேள்விக்குறியோடு நிறுத்தினான் ஜுரன். டாக்டர் ஆச்சரியத்தோடு வாயைப் பிளந்தபடி ஜூரன் சொல்வதைக் கேட்டுக் கொண்டிருந்தார். ரைட் சகோதரர்கள் சைக்கிள் கடை வைத்திருந்த விடயமும், மென்டலின் ஒரு பாதிரியார் என்ற விடயமும் ஜூரன் சொல்லித்தான் அவருக்கும் இப்போது தெரிந்தது. அவர் ஜூரனின் தந்தையை ரகசியமாக அழைத்து "உன் மகன் ஆராய்ச்சி செய்துதான் இந்த மாங்கன்றை உண்டாக்கினானோ இல்லையோ எனக்குத் தெரியாது. ஆனால் நிச்சயமாக இந்த மாங்கன்று வளர்ந்து மரமாகி அதிலே அப்பிள் காய்க்கும்" என்று சொல்லிவிட்டு போய்விட்டார்.

1989ம் வருஷம் ஆரம்பித்த தினத்திலிருந்து ஒவ்வோர் இரவிலும் ஜுனி கதிகலங்கித் துடித்தாள். இரவு ஏழுமணியானதும் பிசாசின்இரவு ஆரம்பிக்கும். ஜுனி ஜன்னல்களைச் சாத்துவாள்; கதவுகளை இறுக்கி மூடுவாள். காற்று உள்ளே நுழையாது. எல்லா விளக்குகளையும் அணைத்து சமையலறை மூலையிலே ஒடுங்கி உட்கார்ந்து தூங்குவாள். எங்கேனும் சிறுசப்தம் கேட்டாலும் அவள் இதயம் படபடவென்று வேகமாக அடிக்க ஆரம்பித்துவிடும்; முகத்தில் வியர்வைத்துளிகள் அரும்பிவிடும்; கைகால்கள் நடுங்க ஆரம்பித்துவிடும்; சிறுநீர் கழிக்க வேண்டும்போல் இருக்கும். ஆனால் சிறுநீர் கழிக்க வீட்டை விட்டு செல்லமுடியாது; கதவைக்கூட திறக்கமுடியாது. அவளுக்கென்றால் குண்டூசி நிலத்தில் விழக்கூடாது; பல்லி சொல்லக்கூடாது; எலி சமையலறையில் விளையாடக்கூடாது; பூனைக்குட்டி மியாவ்மியாவ் என்று கத்தக்கூடாது; மேசை அலாரத்தின் டிக்டிக் என்ற ஒலிகூடக் கேட்கக்கூடாது. அலாரத்தை அவள் இரவில் என்னசெய்வாளென்றால் வீட்டிற்குள் தோண்டியிருந்த குழியில் புதைத்து துணிகளை அடைத்து மூடிவிடுவாள். ஜுனி இரவுமுழுவதும் இப்படியே கொட்டக் கொட்ட விழித்திருப்பாள். கடவுளே யாரும்

கதவைத் தட்டக்கூடாது என்று அவளுடைய உள்ளம் இரவு முழுவதும் கடவுள் வசமாகவே இருக்கும். ஜுனி ஜுரனின் தாய்.

இரண்டு வாரங்களுக்கு முன் 'சிசக்கா'க்காரன் ஜுனியிடம் வந்து பௌயமாக "நீங்கள் தானா ஜுனி?" என்று கேட்டான். சிசக்கா என்றால் சிவப்புச் சட்டைக்காரன் என்று அர்த்தம். ஜுனி அச்சத்தால் உடல் சிலிர்க்க மிக மெல்லிய குரலில் "ஆம்" என்றாள். அவளுடைய குரலில் இலேசான நடுக்கம் இருந்தது. சிசக்காவோ இரக்கத்துடன் "அம்மணியே பயப்படாதீர்கள், சின்னதொரு விஷயத்தை தெரிந்துகொள்ளலாம் என்றுதான் இங்கே வந்துள்ளேன்" என்று சொல்லிக் கொண்டே சட்டைப் பையிலிருந்து புகைப்படத்தை எடுத்தான். தூசி படிந்திருந்த கறுப்பு வெள்ளைப் புகைப்படம். சிசக்கா புகைப்படத்திலுள்ள ஓர் ஆளைக் காட்டி ஜுனியிடம் "இவர் யாரென்று தெரியுமா?" என்று கேட்டான். "அது என் மூத்த சகோதரன்" என்று பதிலளித்தாள் ஜுனி.
"சகோதரனின் பெயர் என்ன?"
"டினவோன்"
"ஓகே, புகைப்படத்தில் இருக்கும் மற்ற ஆட்கள் யாரென்று தெரியுமா?"
"அவர்கள் எவரையும் எனக்குத் தெரியாது"
"சரி நான் நம்புகின்றேன். உன் சகோதரனுக்கு பக்கத்திலே கொடி பறக்கிறதே அது தெரிகிறதா?" "தெரிகிறது"
"அந்தக் கொடியில் என்ன படம் பொறிக்கப்பட்டிருக்கிறது என்று சொல்ல முடியுமா?"
"நீர் நாய்"
"மிகவும் நல்லது, நாங்கள் யாருக்காக சண்டை செய்துகொண்டிருக்கிறோம்?"
"மக்களுக்காக"
"நல்லது நாங்கள் உண்ணாமல், உறங்காமல் அரசாங்கத்திற்கு எதிராகப் போராடிக் கொண்டிருக்கிறோம். உண்மைதானே"
"உண்மைதான்"
"நல்லது இப்போது அரசாங்கத்தை யார் ஆண்டு கொண்டிருக்கிறார்கள்?"
"நீர் நாய் கட்சிக்காரர்கள்"
"மிகவும் சரியான பதில். ஆகவே உங்கள் சகோதரன் நீர்நாய் கட்சிக்காரர்களின் கூட்டத்தில் கலந்து கொண்டிருக்கிறான்"

ஜுனிக்கு தொண்டையில் அடைத்து அவளால் மேலும் பேசமுடியவில்லை. "எனவே அம்மணி, நீங்கள் பேசாமல் இருப்பதிலிருந்து உங்கள் சகோதரன் மக்கள் எதிரி என்று தெளிவாகத் தெரிகின்றது" என்று நிறுத்தினான் சிசக்கா. அடுத்து என்ன சொல்லப்போகிறான் என்று தெரிந்தவுடன் ஜுனி சிசக்காவின் காலில் விழுந்து. "சிசக்கா நீங்கள் அப்படியெல்லாம் தப்புக்கணக்கு போடாதீர்கள். அது முன்பொரு காலத்தில். இப்போது அவன்

அரசியலில் ஆர்வம் காட்டுவதில்லை. தானுண்டு தன்பாடுண்டு என்று தன்மனைவி மக்களோடு அமைதியாக வாழ்ந்து வருகின்றான்" என்று அழாக் குறையாகச் சொன்னாள் ஜூனி."பயப்பட வேண்டாம். இப்போது நீங்கள் சொன்னது நூற்றுக்கு நூறுவீதம் உண்மைதானே"
"நூற்றுக்குநூறு உண்மை"
"இப்போதைக்கு உங்களை நம்புகிறேன். அதனையும் பரீட்சித்துவிட்டு வந்துசொல்கிறேன். நீங்கள் சொல்வது பொய்யென்று கண்டுபிடிக்கப்பட்டால் உங்களுக்கும் தண்டனை உண்டு" என்று எச்சரித்துவிட்டுப் போனான் சிசக்கா.

டினவோனின் புத்தகக்கடை ஜுனியின் வீட்டிலிருந்து கொஞ்சம் தள்ளிஇருந்தது. அது சின்ன பெட்டிக்கடை. சிசக்கா கடையருகே சென்று "ஐயா எனக்கொரு சிகரட் தாருங்கள்" என்று கேட்டான். டினவோனுக்கு சிகரட் கேட்டவன் சிசக்கா என்றவிஷயம் தெரியாது. சிசக்கா சிகரட்டை வாங்கிக் கொண்டு சிறிய காகிதத் துண்டைக் கொடுக்க வந்திருப்பவன் சிசக்கா என்றவிடயம் டினவோனுக்குப் புரிந்துவிட்டது. நடுக்கும் விரல்களுடன் கடிதத்தை பிரித்துப் படிக்க ஆரம்பித்தார் டினவோன். "கடையை உடனே மூடிவிடு, மூன்று நாட்களுக்கு கடையைத் திறக்கக்கூடாது" என்ற வசனம் கடிதத்திலே கோணல்மாணலான எழுத்துக்களினால் எழுதப்பட்டு இருந்தது. "ஐயா இப்போது தான் கடையைத் திறந்தேன். மனைவி பிரசவத்திற்காக ஆஸ்பத்திரியில் அனுமதிக்கப்ப்டிருக்கிறாள். அவசரமாக பணம் தேவைப்படுகிறது. கொஞ்சநேரம் கடையைத் திறந்துவைக்க அனுமதியுங்கள்" என்று மன்றாடினான் டினவோன். சிசக்கா சின்னப்பையன் மாதிரி இருந்தான். வயது பதினைந்து அல்லது பதினாறு இருக்கும். டினவோனுக்கு வயது நாற்பத்தைந்துக்கு மேலிருக்கும். டினவோன் சொல்லி முடிக்க முன்பாகவே சிசக்கா போய்விட்டான்.

அடுத்த நாட்காலை டினவோனின் நிர்வாண உடல் இரத்தக்கறைகளோடு மின்கம்பத்தில் தொங்கியது. இடுப்பில் மட்டும் மானத்தை மறைக்க ஒட்டுத்துணி இருந்தது. நெற்றிப்பொட்டில் துப்பாக்கிச் சூட்டுக்காயம் காணப்பட்டது. காயத்திலிருந்து இரத்தம் கழுத்துவரை படிந்து காய்ந்து போயிருந்தது. கைகள் பின்புறமாக கட்டப்பட்டிருந்தன. தலைக்குமேல் வெள்ளை நிறம் பூசப்பட்ட பலகை தொங்கியது. அதிலே "மக்கள் விரோதியான எனக்கு இந்த உலகத்தில் வாழ எந்த அருகதையுமில்லை" என்று எழுதப்பட்டிருந்தது. ஜுனிக்கு அழுதழுது கண்ணீரும் வற்றிப்போக ஜுரன் பிரமை பிடித்தவன் போல் காணப்பட்டான்.

பிணப்பரிசோதனை மற்றும் சட்ட மருத்துவ நடைமுறைகள் எல்லாம் முடிந்து கறுத்துச் சிறுத்துப் போன டினவோனின் உடலை வீட்டுக்குக் கொண்டுவந்த கையோடு சிசக்கா மீண்டும் ஜுனியிடம் வந்தான்.

“ஏன்டா காட்டுமிராண்டியே, இப்படிச் செய்தாய்?” என்று கேட்க நினைத்தாலும் அவளுக்குப் பயமாக இருந்தது. “அம்மணி என்மீது கோபப்படக்கூடாது. கடையை மூன்று நாட்கள் மூடுமாறு பௌயமாகச் சொன்னேன். நீர்நாய்க்கட்சியின் பூர்ஷ்வா கடையின் ஒற்றைப் பலகையை திறந்து வைத்தான்” என்று கூறினான் சிசக்கா. ஜுனி பயத்தினால் பதிலேதும் கூறவில்லை.. இத்தோடு முடியாமல் சவத்தை 24 மணித்தியாலயத்திற்கு மேல் வைத்திருக்கக் கூடாது, இறுதி ஊர்வலத்தில் பத்து ஆட்களுக்கு மேல் கலந்துகொள்ளக் கூடாது, இறந்தவரை யாரும் புகழ்ந்துபேசக் கூடாது, இறுதி ஊர்வலத்தில் சவத்தை முழங்காலுக்கு மேல் தூக்கிச்செல்லக் கூடாது. இறந்தவரை புதைக்குமிடத்தில் அவரை நினைவுபடுத்தம் எந்தச் சின்னமும் அமைக்கக்கூடாது என்று டினவோனின் இறுதிக் கிரியைகள் எவ்வாறு நடைபெறவேண்டும் என்ற அறிவுறுத்தலையும் சிசக்கா தெளிவாக வழங்க டினவோனின் குடும்பத்தாரும் அந்தக் கட்டளைகளை அட்சரம் பிசகாமல் நிறைவேற்றினார்கள்.

இந்த நிகழ்வு ஜுனியை உலுக்கியது. அவள் மட்டுமல்ல முழுக் கிராமமுமே அதிர்ச்சியில் உறைந்து போனது. ஜுனி பிணத்தைப் போல் நடமாடினாள். இரவில் நிம்மதியான நித்திரை குலைந்து கனவில் சிவப்பும், மாமிசப் பிண்டங்களுமே தோன்றின. அமைதியாக இருந்த கிராமம். எந்த வேளையிலும் இனிமையான கீதத்தோடு இதமான தென்றல் வீசிக்கொண்டிருக்கும். வாழை, மா, கொக்கோ, சோளம், குரக்கன், மரவள்ளி எல்லாம் அங்கே விளைந்தன. இரவு வேளைகளில் கரும்பையும் கிழங்குகளையும் நாசமாக்கும் யானைகளையும் பன்றிகளையும் விரட்டும் ஒலி சேனைகளிலிருந்து கேட்டுக் கொண்டேயிருக்கும். நரிகள் ஊளையிடும் சப்தமும் கேட்கும். நிறைய ஒற்றையடிப் பாதைகள், மூங்கில் காடுகள். மாலைவரின் சிறுவர்களின் கும்மாளம். இப்படியிருந்த கிராமத்தில் இப்போது அடிக்கடி ஒப்பாரியின் ஓலம் கேட்டுக்கொண்டிருந்தது.

பிரசித்தமாகிப் போன சிசக்காக்களின் காகிதத் துண்டுகளை செல்லமாக Bullet Paper என்று அடைமொழியிட்டு அழைத்தார்கள். ரவைக் காகிதம் அழகிய முறையில் வடிவமைக்கப்பட்டு நேர்த்தியாக விளிம்புகள் கத்தரிக்கப்பட்டு பூக்களின் இதழ்களைப் போல் தோற்றமளித்தன. மல்லிகைப் பூவைப் போல் ரோஜாப் பூவைப் போல் அந்தூரிய இதழ்களைப் போல் அவை அழகாக இருந்ததுடன் ரவைக் காகிதங்களை கொண்டு வந்தவர்கள் அழகான தோற்றமுடையவர்களாகவும், சாதுவானவர்களாகவும், பௌயமாகப் பேசுபவர்களாகவும் இருந்தார்கள். ரவைக் காகிதங்களை பெற்றவர்கள் சாபமிடப்பட்ட மனிதப் பிறவிகளாக அடுத்த நாட்களில் மரங்களிலோ மின்சாரத் தூண்களிலோ நெற்றியில் துப்பாக்கிச் சூட்டுக் காயங்களுடன்

நாக்கைத் தொங்கப் போட்டவாறே தொங்குவார்கள். இந்த நிகழ்வுகளையெல்லாம் பார்த்து மிகவும் கலவரமடைந்து போயிருந்த ஜுனிக்கு ஜுரனைப் பற்றிய கவலை மனதைப் போட்டு அரித்தது. பாலகனைப் பாலர் பாடசாலைக்கு அழைத்துச் செல்வதைப் போல ஜுரனைக் காலையிலே பாடசாலைக்குக் கூட்டிக் கொண்டு போய் பாடசாலை முடியும் வரை அங்கேயே நின்று பாடசாலை முடிந்ததும் ஜுரனை வீட்டுக்குக் கூட்டிக் கொண்டு வருவாள் ஜுனி. கடுமையாக சுகவீனமுற்றிருந்த காரணத்தால் ஒருநாள் ஜுரன் தன்னந்தனியாக பாடசாலைக்கு போனான். ஜுனி இவ்வளவுநாளும் எதனைப் பயந்துகொண்டிருந்தாளோ அன்று அது நடந்தது. ஜுரன் காணாமல் போனான்.

## அச்சவியலும் மரணபீதியும்

பேராசிரியர் புரூபன் பிரசித்தமான பல்கலைக்கழகம் ஒன்றில் அச்சவியல்துறை தலைமையாளராகப் பணிபுரிந்தார். அச்சமான சூழ்நிலைகளின் போதும், யுத்தகளங்களிலும், கடைத்தெருக் களேபரங்களின் போதும் மனிதர்களின் மனோநிலை எவ்வாறு மாறுபாடடைகின்றது, அச்சங்காரணமாக அவர்களுடைய உள்ளம் எப்படியெல்லாம் அதிர்ந்து போகின்றது என்பதைப் பற்றி நிறைய விரிவுரைகள் நிகழ்த்தியிருக்கிறார் பேராசிரியர் புரூபன். பேராசிரியர் பதினைந்து வருடங்களுக்கு மேற்பட்ட கற்பித்தல் அனுபவம் கொண்டவர். அதுமட்டுமல்லாமல் அமெரிக்க அச்சவியல் சஞ்சிகைக்கு (American Journal Of Fearology) நிறைய ஆய்வுக்கட்டுரைகள் எழுதியும் திருப்தியில்லாமல் இருந்தார் பேராசிரியர். வயது ஐம்பதுக்கு மேல் ஆகியும் இன்னமும் சாதிக்க வேண்டுமென்ற வெறி அவருடைய உள்ளத்தில் கனல் விட்டு எரிந்து கொண்டிருந்தது.

அச்சவியல் துறையை தேர்ந்தெடுத்தற்கு பாடசாலை மாணவனாக அவர் பார்த்த ஓர் ஆங்கிலப்படம் காரணமாக இருந்தது. அந்தப் படத்திலும் பேராசிரியர் வந்தார். குரூர மனம் படைத்த பேராசிரியர். பேராசிரியர் என்ன செய்தாரென்றால் மரணவேளையில் மனிதனில் ஏற்படும் மனோநிலை மாற்றங்களயும் உடல்நிலை மாற்றங்களையும் ஆராய்ச்சி செய்வதற்காக மனிதர்களைக் கூறுபோட்டு பதைபதைக்கக் கொலை செய்தார். அந்தப் படம் அவருடைய ஆழ்மனதில் அப்படியே பதிந்துவிட இதைப் போன்றதொரு ஆராய்ச்சியைத் தானும் செய்து புகழ்பெற வேண்டுமென்று உள்ளத்திலே நீண்ட நாட்களாக தேங்கிக் கிடந்த கனவு நிறைவேற 1989ம் ஆண்டு அவருக்கு வாய்ப்பான வருஷமாக அமைந்தது.

1989ம் வருடம் சுவர்க்கத்துதீவில் வெளிவந்த அத்தனை அகராதிகளிலும் ‘குலை நடுங்கும் இரவுகள்’, ‘தீப்பிளம்பு’, பிணவாடை, ஆற்றில் மிதக்கும் சடலங்கள், மௌனம், செத்த முகங்கள், சிவப்பு சிப்பாய்கள், சிசக்கா, இரத்தம் ஆகிய சொற்கள் மாத்திரமே இருந்தன. பேராசிரியர் புரூபன் விஷயத்தை சொன்னதும் மோசா நாலைந்து சிப்பாய்களுடன் புரூபனையும் ஏற்றிக்கொண்டு ஆட்கள் நடமாட்டமற்ற மணற் பாதையில் இராணுவ ட்ரக்கை நிறுத்தினார். அதேசமயம் ஒரு பையன் புத்தகப்பையையும் கழுத்தில் போட்டுக் கொண்டு மூச்சிளைக்க பைசிக்களையும் மிதித்தபடி வந்து கொண்டிருந்தான். மோசா அப்பிரதேச இராணுவ அதிகாரி.

மோசா சைகை காட்டி பையன் பைசிக்கிளை நிறுத்த “பேராசிரியர் புரூபன், இந்தப் பையன் உங்கள் பரிசோதனைக்குப் பொருத்தமாக வருவானா?” என்று பேராசிரியரைப் பார்த்துக் கேட்டான் மோசா. “மிக அருமையான பையன், முரட்டுத்தனம் கொஞ்சம்கூட இல்லாமல் முகத்தில் அப்பாவித்தனம் கொப்பளித்துக் கிடக்கிறது. இப்படியான இலட்சியப் பையனைத்தான் நான் இவ்வளவு காலம் தேடிக் கொண்டிருந்தேன்” என்று குதூகலத்துடன் பதிலளித்தார் புரூபன். மோசா பையனின் பக்கம் திரும்பி ‘நீ எங்கிருந்து வருகிறாய்?’ என்று கேட்டார். பாடசாலையிலிருந்து என்று பதிலளித்தான் பையன்.
“என்ன வகுப்பில் படிக்கிறாய்?”
“உயிரியல் வகுப்பு”
“நல்ல பையன் நீ. சிசக்காக்காரனோடு என்ன சம்பந்தம் வைத்திருக்கிறாய்?” என்று கொஞ்சம் அதட்டலுடன் கேட்டார் மோசா. “எனக்கு அவர்களைத் தெரியாது” என்று பயத்துடன் பதிலளித்தான் பையன். “பொய் சொல்லாதே. நீ ஒவ்வொரு நாளும் மாலை வகுப்புக்குப் போகின்ற சாட்டுடன் அவர்களுடைய அரசியல் வகுப்புக்கு போய் வருவதாக எனக்கு தகவல் கிடைத்தது” என்றார் மோசா. “இல்லை ஐயா, யாரோ உங்களிடம் பொய் சொல்லியிருக்கிறார்கள்” என்று பதட்டத்துடன் சொன்னான் பையன்.
“நான் பொய் சொல்கிறேன் என்று நீ சொல்கிறாயா?”
“இல்லை ஐயா, நான் அப்படிச் சொல்லவில்லை”
“உன்னுடைய பெயர் என்ன?”
“ஜூரன்”
“அப்படியானால் சரிதான்” என்று சொன்ன மோசா பைல் ஒன்றைக் கையிலெடுத்து புரட்டுவதுபோல் பாவனை செய்துவிட்டு “இதோ உன் பெயர் இருக்கிறது, ஜீப்பில் ஏறு” என்று அதட்டினார். ஜூரன் மறுத்துவிட்டு சைக்கிளை விட்டு விட்டு ஓடப்பார்த்தான். சிப்பாய்கள் விடவில்லை, அவனைப் பிடித்து ட்ரக்வண்டியில் ஏற்றினார்கள். கூக்குரலிட முடியாதவாறு வாய்க்குக் குறுக்காக பிளாஸ்திரி போட்டு கண்களையும் கறுப்புத் துணியால் மறைத்தான் சிப்பாய்.

ஜூரனின் இரத்த நாளத்திலிருந்து பத்துமிலீ இரத்தம் குப்பியொன்றில் எடுத்து அதன்மீது லேபலை ஒட்டி நேரத்தையும் திததியையும் அதிலே குறித்து குறிப்புப் புத்தகத்திலே குறிப்புகளையும் எழுதிக் கொண்டார் புரூபன். மாலையில் இருட்டியதும் மோசா ஜூரனை ஓரிடத்தில் கொண்டுவந்து இறக்கினார். அங்கே அவனைப் போலவே நாலைந்து பேர்கள் கைகள் கட்டப்பட்டு வாயிலே பிளாஸ்திரி போடப்பட்டிருந்த நிலையில் நிறுத்தப்பட்டிருந்தார்கள். மோசா கண்ஜாடை காட்டியவுடன் சிப்பாய்கள் ஒவ்வொரு பையனையும் தனித்தனியாக நிறுத்தி கழுத்துவரை பழைய ரயர்களை அடுக்கினார்கள். புரூபன் ஜூரனின் இரத்தமாதிரியை எடுத்தவுடன் அவனைச் சுற்றிலும் சிப்பாய்கள் ரயர்களை அடுக்கினார்கள். பிறகு சிப்பாய்கள் ஒவ்வொரு பையன்களின் தலைமீதும் பெற்றோலை ஊற்றி தீக்குச்சியைப்போட அவைகள் கொழுந்துவிட்டு எரிய ஆரம்பித்தன. இத்தனை கைங்கரியங்களையும் ஜூரன் கண்கூடாக பார்த்துக்கொண்டிருந்தான், அவனால் பேசமுடியவில்லை. கடைசியாக அவனுடைய தலையிலும் பெற்றோலை ஊற்றினான் சிப்பாய். புரூபன் சுறுசுறுப்பாக ஜூரனின் இரத்த மாதிரிகளை எடுத்துக்கொண்டார். இந்தநிகழ்ச்சி நடந்தபிறகு ஜூரன் பைத்தியக்காரன் மாதிரி பிதற்றஆரம்பித்தான். கண்களுக்கு முன்னால் அவனையொத்த பையன் உயிரோடு கொழுத்தப்பட்ட காட்சி கனவாக இருக்கக்கூடாதா என்று கண்களை மூட முயற்சித்தான், முடியவில்லை. தூங்க முயற்சித்தான், தூக்கம் வரவேயில்லை. இவ்வாறு அறுபது நாட்கள் ஜூரனுக்கு சிகிச்சை நடந்தது. அதாவது பகலில் அவனுக்கு வயிறு நிறையச் சாப்பாடு போட்டார்கள். மாலை வேளைகளில் அவனை மற்ற பிடிக்கப்பட்ட பையன்களுடன் சேர்த்து பெற்றோலை தலையிலே ஊற்றி பயத்தை உண்டு பண்ணினார்கள். எல்லாச் சந்தர்ப்பங்களிலும் ஜூரன் மட்டுமே உயிர் பிழைத்தான். அவனுடைய கண்களில் மரண பீதி தோன்றும் வேளையில் பேராசிரியர் புரூபன் உடனே அவனுடைய இரத்த மாதிரிகளை எடுத்துக் கொள்வார்.

“உங்களுடைய அச்சவியல் ஆராய்ச்சி எந்தளவுக்கு போய்க்கொண்டிருக்கிறது?” என்று கேட்டார் மோசா. “கிட்டத்தட்ட முடிவுறும் நிலைமைக்கு வந்து விட்டது. இவ்வளவு காலமும் எனக்களித்த ஒத்துழைப்புக்கு மிகவும் நன்றி. இனிமேல் பையன் தேவைப்படமாட்டான்” என்று பேராசிரியர் புரூபன் பதிலளிக்க “பையனை எங்காவது விட்டு விட்டு வாருங்கள்” என்று கட்டளையிட்டார் மோசா. “ஐயா, இவனை சும்மா விட்டுவிட்டால் அவன் நடந்தவைகளையெல்லாம் எங்காவது உளறிக் கொட்டிவிடுவான்” என்றான் சிப்பாய். “நீ சொல்லுவதிலும் உண்மை இருக்கத்தான் செய்கிறது. என்ன செய்யலாம்?” என்று யோசித்த மோசா ஓர் இரும்புப்

பொல்லை எடுத்து அவனுடைய முழங்காலிலே ஓங்கிஅடித்தார் . சிப்பாய்களும் உற்சாகத்தோடு ஜூரனை அடிக்க ஆரம்பித்தார்கள். அலறலில் ஆரம்பித்த ஜூரனின்குரல் மெல்ல மெல்ல அடங்கிக் கொண்டே போனது. “எங்காவது அவனைத் தூக்கி எறிந்துவிட்டு வாருங்கள்” என்று மோசா உத்தரவிட சிப்பாய்களும் மோசாவின் கட்டளையை அப்படியே நிறைவேற்றினார்கள்.

## திறப்பின் மீள் வருகை

என்னுடைய பொழுதுபோக்கு திறப்புகளைச் சேகரித்தல். இதைக்கேட்டு நீங்களெல்லாம் அதிசயிக்கக் கூடும். ஆனால் எவ்வகையான திறப்புகளும் என் கைவசம் இருந்தன. போர்த்துக்கேயர் காலத்தில் பயன்படுத்தப்பட்ட திறப்புக்கூட இப்போது என்னிடம் உள்ளது. ஆனால் நான் சொல்லப்போவது என்னிடமுள்ள விஷேடமான திறப்பு ஒன்றைப் பற்றி. தங்கமுலாம் பூசப்பட்ட திறப்பின் தலையில் வேதாளம் செதுக்கப்பட்டிருந்தது. காதுகள் மான் கொம்புகளைப் போல் வளைந்து இருந்தன. தண்டில் பாரசீகக் கம்பளங்களைப் போல் நேரத்தியான வேலைப்பாடு காணப்பட்டது. உண்மையைச் சொல்லப் போனால் 1989 இல் இந்தத் திறப்பை நான் திருடினேன். இப்போது வருடம் 2009. அந்தத் திறப்பு வைத்திருந்தவரை நான் நன்றாக அறிவேன். ஊரில் மிகப் பெரிய தனவந்தர். அவரின் சட்டப்பையில் இந்தத் திறப்பு எப்போதும் துருத்திக் கொண்டேயிருந்தது. அதன்மீது நான் கண் வைத்திருந்தேன். திருடுவதற்கு அல்ல எப்படியாவது அந்தத் திறப்பை கையில்எடுத்து ஆசைதீரத் தொட்டுப்பார்க்க வேண்டுமென்ற ஆவல் நீண்ட காலமாக என்மனதில் இருந்தது.

ஒருநாள் அந்த மனிதர் வேகமாக ஓடிவந்து கொண்டிருந்தார். அவருக்கு மேல்மூச்சு கீழ்மூச்சு வாங்கியது. “வருகிறார்கள்! வருகிறார்கள்! ஓடு! ஓடு!” என்று கத்திக் கொண்டே அவர் ஓடினார். யார் அவரைத் துரத்திக் கொண்டு வருகிறார்கள் என்று எனக்குத் தெரியவில்லை. அவரின் சட்டைப் பையிலிருந்த திறப்பு கீழே விழுந்ததை அவதானித்து பொறுக்கியெடுத்த நான் திறப்பை மீண்டும் அவரிடம் ஒப்படைக்க வேண்டுமென்றுதான் முதலில் எண்ணினேன். ஆனால் பேராசை பிடித்த என் மனது உன்னிடமே அதனை வைத்துக்கொள் என்று அடம் பிடித்துச் சொல்லவே மனக்கட்டளையை மீறமுடியாத நான் சரி வெறும் திறப்புதானே என்றெண்ணி என்னிடமே வைத்துக் கொண்டாலும் இப்போது மனச்சாட்சி உறுத்த ஆரம்பித்தது. வெறும் திறப்புதான் என்றாலும் நீ திருடியிருக்கிறாய் என்று என் மனசாட்சி அடித்துச் சொன்னது. இந்தத் திறப்பை எப்படியாவது உரியவரிடம் ஒப்படைத்துவிட வேணடுமென்று நான் தீர்மானித்தேன். இப்படியானதொரு தீர்மானத்தை எடுப்பதற்கு இருபது வருடங்கள்

போயிருப்பது குறித்து எனக்குள்ளே நான் வெட்கப்பட்டுக் கொண்டாலும் எனக்கு வேறு வழியேதும் புலப்படவில்லை.

என்னைப் பற்றி கொஞ்சம் சொல்ல வேண்டும். நான் மளிகைக்கடை ஒன்றில் விற்பனையாளராக பணியாற்றுகிறேன். எனது மூளையில் படிப்பு ஏறவில்லை. என்னுடைய தாய் தந்தையர்கள் எங்கிருக்கிறார்கள் என்ற விஷயமும் எனக்குத் தெரியாது. இந்தக் கடையில் எனக்கு வேலை தந்தவர் இரக்க சுபாவமுள்ள ஒரு மனிதர். இல்லாவிட்டால் என்னைப் போன்ற ஒருத்தனுக்கு இந்த உலகத்தில் யாரும் இலேசில் வேலை கொடுக்க மாட்டார்கள். நான் திறப்பு விஷயத்தை சொன்னவுடன் என்னுடைய Boss சிரிக்க ஆரம்பித்தார். “என்னப்பா, எப்போதோ நடந்த காரியத்திற்காக இப்போது பிரயாச்சித்தம் தேடப் போகிறாய்?” என்று என்னைப் பார்த்துக் கேட்டார் Boss. “எப்போதோ நடந்த காரியம்தான் என்றாலும் நான் செய்தது முற்றிலும் பிழையான காரியமல்லவா?” “வாஸ்தவம்தான், ஆனால் நீ எண்ணுவதைப் போல இது பெரிய பிழையல்ல, சின்ன விசயம். ஒரு திறப்பு இருந்திருந்தால் அதற்கு நகல் திறப்பும் இருந்திருக்கும். தவிரவும் திறப்பை தொலைப்பது என்பது சாதாரணமான விஷயம். இந்தத் திறப்பை இருபது வருடங்களுக்குப் பிறகு ஒப்படைப்பதால் எந்த நன்மையும் ஏற்படப் போவதில்லை” என்று Boss விளக்கமளித்தாலும் திறப்பை மீளவும் கொடுக்க வேண்டும் என்ற விஷயத்தில் நான் பிடிவாதமாக இருந்ததால் வேறு வழியில்லாமல் Boss என்னுடன் வர ஒப்புக் கொண்டார்.

இரண்டு மணித்தியாலங்கள் பயணம் செய்த பின் நான் அந்த ஊரைச் சென்றடைந்தேன். இந்த ஊரில் மூன்றே மூன்று விஷயங்கள் தான் எனக்குத் தெரியும். ஒன்று நான் பிறந்த ஊர். இரண்டு திறப்பை தொலைத்தவரின் வீடு. மூன்று என்னுடைய பெயர். பிறந்த மண்ணை மிதித்ததும் நான் அடைந்த சந்தோஷத்திற்கு அளவேயில்லை. திறப்பு இருக்கிறதா என்று என் பையை மீண்டும் தொட்டுப் பார்த்துக் கொண்டேன். ஊர் முற்றிலுமாக மாறி குடிசைகள் இருந்த இடங்களிலெல்லாம் நவீன கட்டிடங்களாகி இருந்தன; பாதைகளும் மாறி இருந்தன; வாகனங்களும் நிறைய ஓடின. பார்த்தேன், திறப்பைத் தொலைத்தவரின் வீடுமட்டும் அப்படியே துக்கத்தில் சோபையிழந்த வீடு போல் தோற்றமளித்தது. ஏன் இந்த வீடு மட்டும் இப்படி? நான் திருடிய திறப்பு இவர்கள் வாழ்க்கையையும் தொலைத்துவிட்டதோ என்று நான் கவலையுற்றேன்.

கால்கள் இரண்டும் ஊனமுற்றிருந்ததால் என்னால் நடக்கமுடியாது. Boss கைத்தாங்கலாக பிடித்து என்னை சக்கர நாற்காலியில் அமரச் செய்தார்.

தூரத்தில் வயது போன ஒரு தளர்ந்த பெண்மணி வீட்டுக்கு வெளியே வந்தாள். அவளை எங்கோ பார்த்திருப்பது போல் ஒருணர்வு உண்டாயிற்று. கொஞ்ச நேரத்தில் Boss திரும்பி வந்தார். அவருடைய கண்களிலே சோகம் கவிந்து கிடந்தது. “ஐயா, ஏன் உங்கள் கண்களில் கண்ணீர்?” என்று பதட்டத்துடன் கேட்டேன் நான். “உன்னுடைய திறப்புக்கு இங்கே வேலையே இல்லை” என்று துயரத்துடன் சொன்னார் Boss.
“ஏன்?”

“1989ம் ஆண்டிலேயே அந்தத் திறப்பின் சொந்தக்காரர் இறந்து போய்விட்டார்” என்றார் Boss. நான் திகைத்து விட்டேன்.

“ஏன் என்ன நடந்தது?”

“அவருடைய மகனை சிசக்கா என்று சொல்லி சிப்பாய்கள் பிடித்துக்கொண்டு போய், அவர்கள் எல்லோரும் சேர்ந்து அடிஅடியென்று அடித்து எங்கேயோ வீசிவிட்டு போய் இருக்கிறார்கள். அவனுடைய உடல் கூடக் அவர்களுக்குக் கிடைக்கவில்லையாம். அந்தத் துக்கம் தாளமுடியாது அவனுடைய தந்தை மாரடைப்பால் இறந்து விட்டார்’’ என்று Boss சொல்லிக் கொண்டிருக்க வயதான அந்த அம்மாள் இப்போது அருகில் வந்து விட்டாள். சிறிதுநேரம் என்னையே உற்றுப் பார்த்தவள் பிறகு வார்த்தைகள் நடுங்கியவளாக “ஜூரன்” என்று மெலிதாக உச்சரித்தாள். “என்னுடைய பெயர் உங்களுக்கு எப்படி தெரியும்?” என்று ஆச்சரியத்தோடு கேட்டேன் நான்.

“நீ உயிருடன் எங்கேயோ வாழ்ந்து கொண்டிருக்கிறாய் என்று இவ்வளவு காலமும் நம்பிக்கையோடு காத்திருந்தேன். அந்த நம்பிக்கை வீண் போகவில்லை. இன்று நீ உயிரில்லாத பிணம். பாவிகள் அடித்த அடியில் உன் மூளை அப்படியே பிசகிவிட்டது” என்றாள் பெண்மணி.

“அம்மணியே நீங்கள் யார்?” என்று நான் வியப்புடன் கேட்க “நான் உன் தாய் ஜுனி” என்று சொல்லி என்னை அணைத்துக் கொண்டு தேம்பினாள் அம்மணி. எனக்கென்றால் எதுவும் புரியவேயில்லை.
“அப்படியானால் இந்தத் திறப்பின் கதை?”
“திறப்புக்கு ஒரு கதையும் இல்லை. நீ மாலை வகுப்புக்குச் செல்லும்போது மறதியாக திறப்பை உன் காற்சட்டைப் பைக்குள் போட்டுக்கொண்டு போய் விட்டாய். அதற்குப் பிறகு நீ வீடு திரும்பவேயில்லை” என்றாள் அம்மணி. அந்த அம்மாள் சொன்ன கதை எனக்கு கனவு மாதிரி இருந்தது. அவள் என்னையும் அழைத்துக்கொண்டு கொல்லைப் புறத்திற்குப் போனாள். என்னுடைய நடையையும் விட மோசமாக இருந்தது அவளுடைய தளர்ந்த நடை.

அங்கே ஒரு மாமரம் நின்றது. "இது மாமரம்" என்றேன் நான். அவள் ஒரு பழத்தை நீட்டினாள். நான் வாங்கிக்கொண்டேன். "நீ மறந்து போயிருப்பாய். இந்த மாமரத்தில் அப்பிள் காய்க்கும் என்று நீ இருபது வருடங்களுக்கு முன் சொன்னாயல்லவா, சாப்பிட்டுப் பார். அப்பிள்பழம் போல இனிக்கும்" என்றாள் அம்மணி. நான் ஏற்கனவே மாம்பழத்தை சாப்பிட்டுக் கொண்டிருந்தேன். "நீங்கள் சொன்னது உண்மைதான், அற்புதமான அப்பிள் சுவை அடிக்கிறது. "ஆமாம் மாமரத்தில் எப்படி அப்பிள் காய்க்கமுடியும்?" என்று ஆச்சரியத்துடன் நான் கேட்க அம்மணி பதில் பேசாமல் என்னைக் கட்டிப்பிடித்துக் கொண்டு கதறியழ ஆரம்பித்தாள்.



# மலைக்கு அப்பால் யுத்தம் நடக்கிறது

எம்.எம்.நௌஷாத்

இதிகாச காலத்திலே சுவர்க்கத்தீவின் கிழக்கிலுள்ள செவலோன் பள்ளத்தாக்கில் பறக்கும் வல்லமையுள்ள ஓர் ஒட்டைச்சிவிங்கி வாழ்ந்துவந்தது. மனிதனின் அறிவுக்கூர்மையையும், வாக்கு வன்மையையும், உலகையே ஆட்டிப் படைக்கக்கூடிய அபாரசக்தியையும் கண்டு அதிசயித்த ஒட்டைச்சிவிங்கி தானும் மனிதனாக மாறிவிடவேண்டும் என்ற பேராவலில் இமயமலைச் சாரலில் வாழ்ந்து வந்த மகரிஷியைச் சந்தித்தது. “மென்மையான இதயம் கொண்ட ஒட்டைச்சிவிங்கியே, கடின சித்தமும் இரத்தத்தை ஓட்ட துடிப்பாகவும் உள்ள மனிதனாக மாறுவதற்கு உனக்கு என்ன உன்மத்தமா பீடித்துவிட்டது?”

என்று ஒட்டைச்சிவிங்கியை எச்சரித்தார் மகரிஷி. ஆனாலும் ஒட்டைச்சிவிங்கி பிடிவாதமாக இருக்கவே, நூற்றியெட்டு அபூர்வமூலிகைகள் கொண்டு தயாரிக்கப்பட்ட பஷ்மத்தை ஒட்டைச் சிவிங்கியின் சிரசுமீது தெளித்து ஆசீர்வதித்த மகரிஷி “சுவர்க்கத் தீவுக்கு இன்றே பறந்துபோ, கடவுளை ஜபம்செய்து கொண்டேயிரு, நூற்றியெட்டு நாட்களில் மனிதனாக மாறிவிடுவாய்” என்ற நற்செய்தியையும் அறிவித்தார்.

ஒட்டைச்சிவிங்கி ஆசீர்வதிக்கப்பட்ட செய்தியையும் அது சுவர்க்கத்தீவை நோக்கிப் பயணிக்கிறது என்ற செய்தியையும் எப்படியோ அறிந்து கொண்ட பாதாள அரக்கன் ஒட்டைச்சிவிங்கி வரும் வழியில் அதற்கு கேடு செய்வதற்காக காத்திருந்தான். ஒட்டைச்சிவிங்கி ஆகாயத்தில் பறப்பதை கண்ணுற்ற மாத்திரத்திலேயே பாதாள அரக்கன் இராட்சத கவண் கற்களை ஒட்டைச் சிவிங்கியின் இறக்கைகளை நோக்கி எறிய இதனைச் சற்றேனும் எதிர்பார்க்காத ஒட்டைச்சிவிங்கி நிலைகுலைந்து போக அதனுடைய இறக்கைகள் இரண்டும் ஒடிந்து இரத்தம் சொட்டுசொட்டாக வடிய ஆரம்பித்தது. இதற்கு மேலும் ஒட்டைச்சிவிங்கியால் பறக்கமுடியாவிட்டாலும் மனந்தளராமல் தன்னுடைய பயணத்தை தொடர்ந்து சுவர்க்கத்தீவின் செவலோன் பள்ளத்தாக்கை அடைந்த ஒட்டைச்சிவிங்கி பள்ளத்தாக்கை அடைந்த மறுகணமே ஓர் அழகான குட்டியை ஈன்றுவிட்டு தன் இறுதி மூச்சை விட்டது. ஒட்டைச்சிவிங்கிக்குப் பிறந்த அது ஒட்டைச்சிவிங்கிக் குட்டியல்ல, ஒரு மனிதக்குழந்தை. செவலோன் பள்ளத்தாக்கிலே வசித்து வருகின்ற அனைவரும் இந்த மனிதக் குழந்தையிலிருந்தே தோன்றினார்கள் என்பதே ஐதீகம். கிராபியர்களின் மூதாதையர்கள் தொடர்பான இந்த ஐதீகத்தை மறுக்க முடியாதபடி வரலாற்றாசிரியர்கள் நிறைய ஆதாரங்களை முன்வைப்பார்கள். அவற்றில் முக்கியமான ஒன்றுதான் கிராபியர்களின் உடலமைப்பு தொடர்பான ஆதாரங்கள். மெலிந்து உயர்ந்தவர்களாகவும், நீண்ட கழுத்துக்களை உடையவர்களாகவும் காட்சியளிக்கும் செவலோன்

நகரவாசிகளின் முகத்தை நன்றாக உற்றுப் பார்த்தால் மூக்குத் துவாரங்கள் கூட ஒட்டைச்சிவிங்கியின் நாசித்துவாரங்களா என்பதைப் போல் பிரமை உண்டாகும்.

செவலோன் நகர மாந்தர்கள் சந்தோஷமாக வாழ்ந்தார்கள் என்று சொல்ல முடியாவிட்டாலும் புறநகர்ப் பகுதியிலே சின்ன வீடொன்றில் வாழ்ந்து வந்த சும்மாக்கிழவர் இன்று மனப்பூரிப்புடன் காட்சியளித்த காரணம் கிழவரின் பேத்திக்கு திருமணம் நடந்தது தான். ஆறுமாத காலமாக அலைந்து திரிந்து பேத்திக்கென்று அழகான மணமகனைக் கொண்டுவந்து சேர்த்தார் கிழவர். மணமகன் பெரிய உத்தியோகம் எதுவும் பார்க்காவிட்டாலும் நற்குணங்களைக் கொண்டவன். மலைக்காட்டுக்குச் சென்று, விறகுவெட்டி, கட்டுகளாக அடுக்கி, பைசிக்கிளிலே சுமந்து நகரத்திலே விற்பதுதான் அவனுடைய தொழில். பையன் கறுப்பானாலும் இலட்சணமாக இருந்தான். கல்யாணம் மிகச் சந்தோஷமாக நடந்து முடிந்தது. நகரத்திற்கு போய் பழைய காரொன்றை வாடகைக்குக் கொண்டு வந்த சும்மாக்கிழவர் கறுப்பு நிறமான பழைய காரிலே அரிசிமூடை, பருப்புப் பொதி, சீனிப்பொதி, சமையற் பாத்திரங்கள் என்று ஏற்றினார்; இடதுபுறக்கதவால் மணமகளை ஏற்றினார்; வலதுபுறக்கதவால் மணமகனை ஏற்றினார். இந்த நடைமுறைகள் எல்லாம் கிராபியர்களின் சம்பிரதாயங்கள். சாஸ்திரப்படி தேனிலவுக்காக மாப்பிள்ளையின் வீட்டுக்குச் செல்லவேணடும். தடல்புடல் ஏற்பாடுகள் எல்லாம் முடிந்த புதுமண ஜோடி மணமகனின் வீட்டிற்குச் செல்வதற்காக கார் பயணத்தை ஆரம்பித்தது.

திடீரென்று ஜீம்பூம்பா கதையிலே பூதம் முளைப்பது போல் கைகளில் ஆயுதங்களுடன் சிப்பாய்கள் தோன்றி மணமக்களின் வாகனத்தை சுற்றி வளைக்க சாரதி சடுதியாக பிரேக் போட்டு காரை நிறுத்தினார். நேரம் இரவு எட்டுமணி. கார் ஜன்னலினுடாக ஆசனத்திலே அமர்ந்திருந்த ஆட்களின் முகங்களிலே டோர்ச் வெளிச்சத்தை பாய்ச்சினான் சிப்பாய். முதலில் மணமகள், பிறகு மணமகன், பிறகு கிழவர். “நீங்கள் செவலோன் பள்ளத்தாக்கு ஆட்களா?” என்று கேட்டான் சிப்பாய். 'ஆமாம்' என்றார் கிழவர். “அப்படியென்றால் நீங்கள் கிராபியர்களின் வம்சாவளிகளா?” என்று கேட்டான் சிப்பாய். “ஆம்” என்றார் கிழவர் மீண்டும். கிழவருக்கு படபடக்க ஆரம்பித்தது. ஏதோ விபரீதம் நடக்கப் போகிறது என்று உள்மனது சொல்லியது. டோர்ச்சை அடித்த சிப்பாய் மற்ற சிப்பாய்களைப் பார்த்து “உள்ளே மணமகள், அவளும் கிராபியள், உள்ளே மணமகன், அவனும் கிராபியன். உள்ளே கிழவர், அவரும் கிராபியன்” என்றான். “அப்படியானால் ஏன் பார்த்துக் கொண்டிருக்கிறாய்?” என்று ஒரு சிப்பாய் கடுகடுக்கவே டோர்ச்சுடன்

நின்ற சிப்பாய் சும்மாக் கிழவனை பலவந்தமாக காரை விட்டு இறக்கி தரதரவென்று இழுத்துக்கொண்டு போனான். மற்றச் சிப்பாய்கள் காரின் கதவு ஜன்னல்களை இறுக்கிமூடி காரின் எல்லாப் பக்கங்களிலும் பெற்றோலை ஊற்றவே “அவர்களை ஒன்றும் செய்து விடாதீர்கள” என்று கூச்சலிட்டு கத்தினான் சும்மாக்கிழவன்.

மணமகனும் மணமகளும் குறிப்பிட்ட நேரத்தைக் கடந்த பின்னரும் வீட்டுக்கு வந்து சேராததால் மணமகனின் வீட்டாரும் மணமளின் வீட்டாரும் கலவரமடைந்தார்கள். தொலைபேசி மூலம் ஒருவருக்கொருவர் பேசிக் கொள்வதைத் தவிர அவர்களால் வேறொன்றும் செய்ய முடியவில்லை. ஏனென்றால் இரவு ஒன்பதுமணிக்குப் பிறகு காட்டுவழியாக செல்வது பாதுகாப்பில்லை என்று சொல்லுகிற சட்டம் நிலவி வந்த காலமது. பனிமூட்டம், காலைக்கருக்கல், வசீகர நீர்வீழ்ச்சி, மலைச்சாரல், நீர்த்திவலை, தென்றல், வானவில் ஆகிய அருஞ் சொற்களை மட்டுமே அறிந்திருந்த செவலோன் பள்ளத்தாக்கிலே வேறு இரண்டு சொற்களும் சேர்ந்து கொண்டன. சாம்பல் பூத்த குவியல் ஒன்று , சாம்பற்குவியல் இரண்டு. ஒன்று மணமகளின் குவியல். எலும்பு, நகைகள், சாரி உட்பட. இரண்டு மணமகனின் குவியல். காலையிலே குளிரையும் பொருட்படுத்தாது கிராமமக்கள் வேடிக்கை பார்த்தார்கள். வேடிக்கை பார்த்துக் கொண்டிருந்த ஒருமனிதர் வேடிக்கையாக எலும்புக் குவியலை இலேசாக தொட்டபோது அது பொலபொலவென்று உதிர்ந்து துகள்களாகின. அன்றிலிருந்து சில்மிஷங்களும் ஆரம்பமாகின. கல்யாணத்திற்குப் போய்க்கொண்டிருக்கும் மங்கையரின் பின்னலைப் பிடித்திழுத்து தலையலங்காரம் கலைந்ததும் கைகொட்டிச் சிரித்தார்கள், ஆண்களின் மீசையின் பாதியை மழித்தார்கள், வெள்ளையாடை உடுத்தியவர்களை நடுவீதியில் நிற்கவைத்து சேற்றை வாரி இறைத்தார்கள், விடலைப் பையன்களின் மேற்சட்டையையும் காற்சட்டையையும் தாறுமாறாகக் கத்தரித்தார்கள், மதகுருமார்களுக்கு மொட்டையடித்து தலையிலே மஞ்சள் தேய்த்தார்கள். இந்த சில்மிஷங்களைச் செய்தவர்கள் அல்பினோ இனத்தைச் சேர்ந்த சிப்பாய்கள்.

அல்பினோ இனத்தவர்களுக்கும் இதிகாசக் கதை இருந்தது. புயலில் அகப்பட்டுக் கரை சேர்ந்த நியுபெக் நாட்டு இளவரசி சுவர்க்கத் தீவிலுள்ள வெள்ளை ராஜநாகத்தை மணமுடித்தாள். ஒன்பது மாதத்தில் அவள் வெள்ளைவெளேரென்ற, அழகான குழந்தையைப் பெற்றெடுத்தாள். அல்பினோ என்ற அந்தக் குழந்தையிலிருந்து பெருகி வந்தவர்களே இந்த அல்பினோக்கள். சுவர்க்கத்தீவில் எண்பது விழுக்காடு ஆட்களான அல்பினோக்கள் நாட்டை ஆட்சி செய்து

வந்தார்கள். செல்வச் செழிப்புடன் செவலோன் பள்ளத்தாக்கில் வாழ்ந்த கிராபியர்களை அவர்கள் வெறுத்தார்கள். அதனால் கிராபியர்களுக்கு எப்படியெல்லாம் தொல்லை கொடுக்க முடியுமோ அப்படியெல்லாம் இம்சை கொடுத்தார்கள் அல்பினோக்கள். எல்லாச் சிறு சம்பவங்களுக்கும் முத்தாய்ப்பு வைத்த ஓர் உச்சகட்டம்தான் இந்தத் துயர நிகழ்வு. காருடன் மணமக்களும் உயிருடன் எரிக்கப்பட்ட இந்தச் சம்பவம் செவலோன் பள்ளத்தாக்கில் அதிர்ச்சி அலையை உண்டாக்கியது. அமைதியிழந்த கிராபியர்கள் கண்டகண்ட இடங்களில் எல்லாம் அல்பினோ சிப்பாய்கள் மீது கற்களை எறிந்தார்கள். இரத்தஞ் சொட்டச்சொட்ட சிப்பாய்கள் அம்பியூலன்ஸ் வண்டிகளில் ஏற்றப்பட்டு ஆஸ்பத்திரிகளில் அடிக்கடி அனுமதிக்கப்பட அல்பினோக்களின் அரசாங்கம் வெகுண்டெழுந்து சிப்பாய்களை கிராபியர்கள் மீது ஏவிவிட்டது. எங்கும் புகைமண்டலம் உண்டாயிற்று. சிறுவர்கள் ஷெல்கோதுகளைப் பொறுக்க ஆரம்பித்தார்கள்.

கொஞ்சக் காலத்திலே செவலோன் நகரம் வெறிச்சோடியது. கிராபியர்களின் வீடுகளுக்குள் அல்பினோக்கள் விரும்பினால் பலாத்காரமாக புகுந்து சீவிக்கலாம் என்கின்ற மாதிரி நிலைமை உண்டாயிற்று. வணக்கஸ்தலங்களை ஆட்டுக் கொட்டில்களாக மாற்றி அங்கு ஆடுவளர்த்தார்கள் அல்லது அவற்றை கழிப்பறைகளாக மாற்றினார்கள். சும்மாக்கிழவர் இன்றும் உயிர்வாழ்ந்தார். இப்போது அவர் முதிர்கிழவர். நரைத்த தாடி முழங்கால்வரை தொங்கியது, உறவினர்கள் யாருமில்லை. எல்லோரும் எப்போதோ இறந்து விட்டார்கள். எல்லா கிராபியர்களையும் போலவே சும்மாக் கிழவருக்கும் காட்டுக்குள் ஒரு குடிசை சொந்தமாக இருந்தது. கிடுகு வேயப்பட்ட அதன் கூரை காற்றிலே சலசலத்து ஆடியது. சும்மாக்கிழவர் தள்ளாடித்தள்ளாடி நடந்து வந்தார். அவருக்கு முன்னால் சுல்பா நடந்து வந்தாள். சுல்பாவுக்கு முன்னால் நாய் நடந்து வந்தது. நாய் கன்னங்கரேலென்று கறுப்புநிறமாகவும், கூரியகண்களுடனும் எதற்கும் தயாரான நிலையிலும் காணப்பட்டது. அல்பினோக்களின் மணத்தை எங்காவது நுகர்ந்தால் அவர்களை அவ்விடத்திலேயே கடித்துக்குதறிவிடு என்று கிழவர் நாய்க்கு அடிக்கடி உபதேசித்து வந்தார். கிழவர் சொன்னது நாய்க்கு விளங்காவிட்டாலும் நன்றாக விளங்கிக்கொண்டதைப் போன்ற தோரணையில் அது நடந்துகொண்டது. புதிய ஆட்களை மோப்பம் பிடித்து பின்னால் சென்றது. அது அல்பினோ அல்ல என்று தெரிந்தவுடன் கிழவரிடம் வாலைஅசைத்து சிறிதளவில் குரைத்து தன்னுடைய செய்தியைத் தெரிவித்துக் கொண்டது.

சுல்பாவோ இந்தக் குணாதிசயங்களுக்கெல்லாம் எதிர்மாறானவள். அவள் அமைதியான சுபாவத்துடன் காணப்பட்டாள். அவளுடைய விழிகளிலே அறிவுக்கூர்மை இருந்தது. என்றாலும் உண்பதையும், நீர்

அருந்துவதையும், மலங்கழிப்பதையும் தவிர இவள் தன் வாழ்நாளில் வேறு எதையும் செய்யவில்லை. அவள் அதிகம் பேசவும் மாட்டாள். சிலவேளைகளில் வானத்தை அண்ணாந்து பார்த்துக் கொண்டு அவள் பாடுவாள்.

*நான் பேரீத்தம் கனிகளை தேடி அலைகிறேன்,*
*நெருப்பு நிறமான பேரீத்தங் கனிகள்,*
*காற்று மணற் பூக்களை என்மீது இறைக்கிறது,*
*மணற் கனிகள் இனிக்கவில்லை, கரிக்கின்றன,*
*அதிலே நான் புதையவும் கூடும்.*
*என் ஒட்டகத்தை நான் விரும்புகின்றேன், அது அழகானது.*
*ஒட்டகத்தை நான் நடத்திச் செல்கிறேன்*
*ஒட்டகம் என்னை நடத்திச்செல்கிறது.*

அவள் பாடுவது இனிமையாக இருக்கும். எல்லா கிராபியர்களும் சுல்பாவை சுற்றி நின்று உள்ளம் கிறங்கி பாடலில் மெய்ம்மறந்து போயிருப்பார்கள். பாட்டு முடிந்தவுடன் கைதட்டுவார்கள், அவளுடைய தலையை அன்புடன் தடவிக் கொடுப்பார்கள், சிறு பரிசுகளும் கொடுப்பார்கள். சும்மாக்கிழவர் இவற்றையெல்லாம் பார்த்து பூரிப்படைவார். ஆனால் சுல்பா சும்மாக்கிழவருக்கு எந்த உறவுமில்லை, அவள் எங்கிருந்து வந்தாள் என்பதுகூட யாருக்கும் தெரியாது. நீரோடைக்குப் பக்கத்திலே ஒரு நாவல்மரம் நின்றது. நாவல் மரத்திற்குப் பின்னால் இருந்த பற்றைக்காடு தான் கிழவர் காலைக்கடன் கழிக்கும் இடம். அன்று காலையும் அப்படித்தான். வழமையைப் போலவே கிழவர் காலைக் கடன் கழிக்கப் போனபோது எங்கிருந்தோ முனகல் ஒலி கேட்டது. ஒரு சிறுமி நிலத்திலே விழுந்து முனகிக் கொண்டிருந்தாள். இரவு முழுவதும் அவள் அந்த இடத்தில்தான் இருந்திருக்க வேண்டும். சிறுமி நிலத்தில் வீழ்ந்துகிடந்த கோலம் அப்படித்தான் இருந்தது. சும்மாக்கிழவர் அவசரஅவசரமாக அவளைத் தூக்கிக் கொண்டு ஆஸ்பத்திரிக்குப் போனார். அன்றிலிருந்து அவள் அவரோடு ஒன்றி கிழவரின் பேத்தியாகி விட்டாள்,

சுல்பாவால் பெரிதாகப் பேசமுடியாது. யாரோ பின்னாலிருந்து சொல்லித் தருவதை சொல்வதைப் போல் அவள் பேசினாள். சுல்பா என்பது சும்மாக்கிழவர் சும்மா வைத்த பெயர் தான். சிறுமிக்கு எப்படியும் 8-9 வயதிருக்கும். தனிமையில் வாடிக் கொண்டிருந்த கிழவருக்கு சுல்பாவின் வரவு அதீத சந்தோஷத்தைக் கொடுத்தது. எப்போதும் சிறுமிக்கு உணவூட்டுவதும், புத்தாடைகள் அணிவதுமாக அவர் காணப்பட்டார். சும்மாக்கிழவர் சுல்பாவை எவ்வளவு நேசித்தாரோ அதற்குச் சமமாக குடிசைக்கு முன்னால் பூத்திருந்த சிவப்பு ஓக்கிட்மலர் செடியையும் நேசித்தார். நீருற்றாமலேயே அந்த ஓக்கிட் மலர்ச்செடி வளர்ந்தாலும் அதிகாலை ஐந்து மணிக்கே எழுந்து

வெடவெடக்கும் குளிரில் நீருற்றுவார் கிழவர். ஓக்கிட்மலர் மீது கிழவர் அதீத அன்பு வைத்திருப்பதை சுல்பாவும் புரிந்துகொண்டு "தாத்தா நானும் நீரூற்றுகிறேன்" என்று அவளும் மழை, வெயில் என்று பாராமல் சிறிய குடத்திலே தண்ணீரை மொண்டு வந்து நீரூற்றுவாள். ஒற்றையாக ஆரம்பித்த ஓக்கிட் மலர்கள், ஒன்றாகி பலவாகி பலநூறாகி முற்றம் முழுவதும் பூத்துக் குலுங்கின.

செவலோன் நகரமக்கள் சிதறுண்டு போயிருந்தார்கள். வாழையிலை களிலும், கற்பாறைகளிலும், மரப்பட்டைகளிலும் அவர்கள் வாழ்க்கை யை எழுதினார்கள். அவை துயரச் சித்திரங்கள். ஒவ்வொரு கிராபியனும் எழுதினான். எல்லாக் கதைகளும் திரைச்சீலையை இறக்கும்போது துன்பியலில் முடிந்தன. ஆண், பெண், பிள்ளை, முதியவர், கிழவி, கைக்குழந்தை என்று எல்லா கிராபியர்களும் ஒன்றுக்காக ஏங்கினார்கள். எப்போது சொந்த ஊருக்கு திரும்பிச் செல்வோம் என்ற ஏக்கம் தான் அது. மலைக்கு அப்பால் யுத்தம் நடந்து கொண்டிருந் தது. இருபது வருடகாலமாக நீடித்துக்கொண்டு போகும் யுத்தம். இந்த இருபது வருடங்களும் கிராபியர்கள் ஒரேயொரு செய்தியைத்தான் எதிர்பார்த்துக் காத்துக்கொண்டிருந்தார்கள். ஜயபேரிகை, வெற்றிச் செய்தி. கிராபியவீரர்கள் அல்பினோக்களைத் தோற்கடித்து செவலோன் நகரத்தைக் கைப்பற்றிவிட்டார்கள் என்றசெய்தி.

மலைக்குச் செல்ல எந்தப் பாதையும் இருக்கவில்லை, தொடர்பாடல் வசதிகளும் இருக்கவில்லை, நெளிந்து செல்லும் மலையைச் சுற்றி வளைந்து வளைந்து செல்லும் புகையிரதத்தை இங்கிருந்து பார்த்தால் புள்ளிக்கோடாகத் தெரியும். காட்டிலே சீவிக்கும் செவலோன் நகரமக்களிடம் ஒரேயொரு பைனோகுலர் இருந்தது. ஒரு கடையின் கூரையிலே எப்போதும் வௌவாலைப்போல அது தொங்கிக்கொண்டிருந்தது. உண்மையில் அது வௌவால்தான். சிறகுடைந்த வௌவாலாக அது உடைந்து போயிருந்தது. உடைந்து போயிருந்தாலும் அந்த இருவிழியி உயிருள்ளதாக இருந்தது. இருவிழியியினுடாக எந்த இடங்களைப் பார்த்தாலும் அது மூன்றேமூன்று இடங்களைத்தான் காட்டியது. அந்த இருவிழியியை எடுத்து எவரும் கண்களில் மாட்டிக் கொள்ளலாம். எல்லா கிராபியர்களுக்கும் சொந்தமானது அது.

இருவிழியி காட்டக்கூடிய ஓரிடம் புகையிரத நிலையம். புகையிரதத்தில் வந்திறங்கும் உறவினர்களை எதிர்பார்த்துக் காத்திருப்பவர்கள் புகையிரதம் வரும் நேரம் பார்த்து அதை மாட்டிக் கொள்வார்கள். இரண்டாவது இடம் மலையுச்சி, மலைக்கப்பால் நடந்து கொண்டிருக்கும் யுத்தத்திலே கிராபியர்கள் ஜெயித்து மலையுச்சியிலே வெற்றிக்கொடியைப் பறக்க விட்டிருந்தால் அதனைப் பார்த்து ஆனந்தக் கூத்தாடுவதற்கு. யுத்தம் ஆரம்பித்த காலத்திலே

மக்கள் திரள்திரளாக வந்து, கியூவிலே நின்று இருவிழியியை எடுத்து ஒவ்வொருவராகப் பார்ப்பார்கள். காலம் போகப்போக மலையுச்சியில் வெற்றிக்கொடியைப் பார்க்கும் எண்ணிக்கை அப்படியே தேய்வடைந்துகொண்டு போய் இன்று மிகவும் அரிதாகத்தான் இருந்தாற்போல் ஓரிருவர் மலையுச்சியைப் பார்க்குமளவிற்கு நிலைமை மாறிவிட்டது. யாருக்கும் இப்போது வெற்றியைப் பற்றிய நம்பிக்கை அறவேயில்லாமல் போனதுதான் காரணம். இருவிழியியிலே தெரியக்கூடிய மூன்றாவது இடம்தான் வானம். வானத்திலே என்ன இருக்கிறது என்பதை இருவிழியியினூடாக பார்த்து தெரிந்து கொள்ள முடியாது. அதற்கு தொலைநோக்கி வேண்டும். ஆனால் அதிசயம் என்னவென்றால் இருவிழியியினூடாக வானத்தைப் பார்ப்பவர்கள்தான் அதிக எண்ணிக்கையில் இருந்தார்கள். அவர்களின் முகங்களில் விரக்தி விரவிக் காணப்பட்டது. விழிகளிலே சோகம் இருந்தது. மனசிலே ஏக்கம் இருந்தது. அவர்கள் ஆணாக இருந்தால் தாடி வைத்திருந்தார்கள். அல்லது மீசையைக் கத்தரிக்காமல் காணப்பட்டார்கள். பெண்ணாக இருந்தால் நன்றாக அவர்களின் கண்களை கூர்ந்து அவதானித்தால் ஒவ்வொரு கண்களிலும் ஒற்றையாக ஒவ்வொரு கண்ணீர்த்துளி காணப்பட்டது. அவர்கள் ஒன்றில் கணவனை இழந்த விதவைகளாக இருந்தார்கள், அல்லது பெற்றோரை இழந்த பிள்ளைகளாக இருந்தார்கள், அல்லது என்னநடந்ததோ என்று தெரியாமல் இரவோடிரவாக காணாமல் போனவர்களின் தாயாகவோ, தந்தையாகவோ இருந்தார்கள். இவர்களின் தோற்றம் பைத்தியக்காரக்கோலத்தில் இருந்தாலும் இவர்களில் யாரும் பைத்தியக்காரர்கள் அல்லர். இறந்தவர்களின் ஆவி வானத்திலே உலாவருகின்றன என்ற நம்பிக்கையில் அவர்கள் இருந்தார்கள். தங்கள் உறவு ஆவிகளை இருவிழியி மூலமாகப் பார்த்து விடவேண்டுமென்ற ஆதங்கத்தில் மாலை கருக்கட்ட ஆரம்பித்த உடனேயே இவ்விடத்தில் குழுமி விடுவார்கள்.

அக்டோபர்மாத வெள்ளிக்கிழமையொன்றில் சும்மாக்கிழவர் நோய்வாய்ப்பட்டு படுத்த படுக்கையாகி விட்டார். தள்ளாத வயதில் இருந்த கிழவர் இறந்து விடுவாறென்றுதான் எல்லோரும் எதிர்பார்த்துக் காத்திருந்தார்கள். கிழவர் வாந்தி எடுக்க ஆரம்பித்தார், இரத்தவாந்தி. வயிற்றுப்போக்கு அதிகரித்தது, கண்கள் அடிக்கடி மூடிக்கொண்டன, ஆகாரம் தொண்டைக்குக் கீழே இறங்கவேயில்லை. சுல்பா சும்மாக்கிழவருக்கு அருகே அமர்ந்து தொடர்ந்து அழுது கொண்டிருந்தாள். நாய் மூன்றுநாட்களாக எதுவும் சாப்பிடாமல் துக்கத்தில் ஆழ்ந்துபோயிருந்தது. “இப்படியிருந்தால் சரிவராது, ஆஸ்பத்திரிக்குக் கொண்டுபோவோம்” என்றான் ஒருத்தன். மற்றவன் உதடுகளைப் பிதுக்கினான். அதன் அர்த்தம் இந்த 84 வயதுக்கிழவன் இனிமேல் உயிர்பிழைக்க மாட்டான் என்பதுதான். ஆனால் எல்லா எதிர்பார்ப்புக்களையும் தவிடுபொடியாக்கினார் சும்மாக்கிழவர்.

ஏதோ ஆகாயத்திலிருந்து இறங்கி வந்த தேவதை டாக்டர் சிகிச்சையளித்த நோயாளியைப் போல் திடீரென்று கண்களைத் திறந்தார் கிழவர்; தட்டுத்தடுமாறி எழுந்து அமர்ந்தார், பின்னர் மெல்லியதாக உதடுகளைவிரித்து சிரித்தார், சுற்றும்முற்றும் எல்லோரையும் நோட்டமிட்டார். "என்ன குழந்தைகளா, நீங்கள் எல்லோரும் நான் இறந்துவிடுவேனென்று தானே எதிர்பார்த்துக் காத்திருந்தீர்கள்? அது நடக்காது. நான் சாகமாட்டேன். இந்தக்கட்டை ஒருபோதும் இறந்துபோகாது" என்று சொன்ன சும்மாக்கிழவர் கண்களைத் துடைத்துக்கொணடார். "இந்தக் கிழவன் உயிர்வாழ்வதன் அர்த்தம் உங்கள் யாருக்காவது தெரியுமா?" என்றோரு கேள்வியைப் போட்டார் கிழவர். பிறகு யாருடைய பதிலையும் எதிர்பார்க்காமல் சொல்ல ஆரம்பித்தார் கிழவன். "இந்த அல்பினோ கொடுங்கோலர்கள் என் சொந்தக்காரர்கள் எல்லோரையும் கொன்றொழித்து விட்டார்கள். நான் அவர்களைப் பழிவாங்காமல் விடமாட்டேன். எனனுடைய இந்த இரண்டு கைகளாலும் ஒரு அல்பினோவை கொன்றுவிட்டுத் தான் நான் சாவேன். அப்போதுதான் என் ஆத்மா சாந்தியடையும். அதுவரை நான் சாகமாட்டேன்" என்று சொன்ன சும்மாக்கிழவர் தேம்பித்தேம்பி அழ ஆரம்பித்தார். சும்மாக்கிழவர் உயிர்த்தெழுந்த செய்தியும், அவருடைய வீரப்பிரதாப வசனங்களும் செவலோன் மக்களிடையே பரவி உற்சாக அதிர்வலையை ஏற்படுத்தியது. புஜஙகளில் யானைப்பலம் வந்ததைப்போல் இளைஞர்களின் முகங்களில் தேஜஸ்ஒளி நிரம்பி வழிந்தது. எல்லாவற்றையும் விட சும்மாக்கிழவரின் அந்தஸ்து விஸ்பரூபமெடுத்து, வானளாவ உயர்ந்து கொண்டேபோனது, எந்தளவுக்கென்றால் 'செவலோன் பள்ளத்தாக்கின் இதயம்' என்று அவரை எல்லோரும் செல்லப்பெயரிட்டு அழைத்தார்கள். சுருக்கமாகச் சொல்வதானால் செவலோன் பள்ளத்தாக்கின் தற்போதைய சுப்பர் ஹீரோ சும்மாக்கிழவர் தான்.

ஓர் அதிகாலை கிராபியர்கள் அகதிகளாக அலைந்து திரிந்த அந்த வனாந்தரத்தையே உச்சி பூக்க வைக்கும், உற்சாகம் கரை புரண்டோட வைக்கும் செய்தியொன்று வந்தது. செய்தியைக் கொண்டுவந்த பையன் மூச்சிரைக்க மூச்சிரைக்க நின்றான். அவனுடைய கையிலே உடைந்த இருவிழியி தொங்கியது. எல்லா கிராபியர்களும் அங்கே கூடிவிட்டனர். சும்மாக்கிழவரும் நின்றார்; சுல்பாவும் நின்றாள்; நாயும் ஆவலோடு காத்திருந்தது. "எமது வெற்றிக் கொடி பறக்கிறது" என்று கூவினான் பையன். "மீண்டும் சொல்லு" என்று கிராபியர்கள் கூச்சலிட "எமது வெற்றிக்கொடி பறக்கிறது" என்று பையன் மீண்டும் உரத்த தொனியில் சொன்னான். சும்மாக்கிழவர் புளகாங்கிதத்தோடு இருவிழியியால் மலையுச்சியைப் பார்த்தார். பையன் சொன்னது உண்மைதான். வெற்றிக்கு அடையாளமாக பிரமாண்டமான

சிவிங்கிக்கொடி மலையுச்சியிலே பட்டொளி வீசிப்பறந்து கொண்டிருந்தது. இருவிழியியைக் கையில் எடுத்து ஒவ்வொருவராக முண்டியடித்துக்கொண்டு மலையுச்சியைப் பார்க்க ஆரம்பித்தார்கள். சந்தேகமேயில்லை, கொடி பறக்கத்தான் செய்கிறது.

மீண்டுமொரு தடவை மலையுச்சியைப் பார்த்தார் சும்மாக்கிழவர். கொடிக்கம்பத்திற்கு பக்கத்திலே ஏதோவொன்று அவருடைய கண்ணிலே பட்டது. அது என்ன? மீண்டும் நன்றாகப் பார்த்தார் சும்மாக்கிழவர். கோடி பறப்பதை மட்டும் வைத்துக்கொண்டு எதனையும் முடிவுசெய்துவிட முடியாது அல்பினோக்களின் சூழ்ச்சியாகக்கூட இருக்கலாம். ஒரு பிரமாண்டமான பலூான். மஞ்சள் நிறமான பிரமாண்டமான பலூான். பலூானின் மேற்பரப்பிலே ஏதோவொன்று எழுதப்பட்டிருக்கிறது. அதில் என்ன எழுதியிருக்கிரார்கள்? கிழவருக்கோ வாசிக்கத் தெரியாது, படிப்பறிவில்லாத மனிதர். “பட்டொளி வீசிப்பறக்கும் கொடிக்குப் பக்கத்திலே பிரமாண்டமான பலூான் ஒன்று உள்ளது. அந்த பலூான் மேற்பரப்பிலே ஏதோவொன்று எழுதியிருக்கிறார்கள். யாாராவது வாசித்துச் சொல்லுங்கள்” என்று இருவிழியியை நீட்டினார் சும்மாக்கிழவர். கூட்டத்தில் இருந்தவர்கள் ஒருவர் முகத்தை ஒருவர் பார்த்துக் கொணடார்களேயொழிய யாரும் அதனை வாங்க முன்வரவில்லை. “நான் சொன்னது உங்களுக்கு கேட்கவில்லையா? யாரும் வாசிக்கத்தெரிந்தவர்கள் வந்து என்ன எழுதியிருக்கிறது என்று வாசித்துச் சொல்லுங்கள்” என்று கொஞ்சம் சத்தமாகச் சொன்னார் கிழவர் மீண்டும். பதில் எதுவும் வரவில்லை. கூட்டத்திலே பூரண அமைதி நிலவ கிழவருக்குக் கோபம் வந்துவிட்டது. “நான்கேட்பது உங்களில் யாருடைய காதிலும் விழவில்லையா? எல்லோரும் செவிடாகிப் போய்விட்டீர்களா?” என்று உரத்த குரலில் கூப்பாடு போட்டார் கிழவர். ஊஹூம்! பதில் இல்லை.

கிழவர் தள்ளாடித் தள்ளாடி முன்னால் வந்தார். ஒரு 12 வயதுச்சிறுவன் நின்றான். கிழவர் அவனுடைய தோளைப் பிடித்து உலுக்கி, “நீ படிக்கும் பையன் தானே, ஏன் பதில் சொல்லாமல் நிற்கிறாய்? அந்தபலூானின் மேற்பரப்பிலே என்ன எழுதியிருக்கிறதென்று வாசித்து என்னிடம் சொல்” என்று இருவிழியியை அவனிடம் நீட்டினார். சிறுவன் தயங்கிக்கொண்டே “தாத்தா நான் ஒரு போதும் பாடசாலைக்குச் சென்றதில்லை” என்றான். அங்குநின்ற மற்றச் சிறுவர்களின் பக்கம் திரும்பிய சும்மாக்கிழவர் “என்ன நீங்களுமா பாடசாலை சென்றதில்லை?” என்று கேட்டான். சிறுவர்கள் சந்தோஷத்துடன் “ஆமாம்” என்று ஒரே கோரஸில் பதில் சொன்னார்கள். கிழவருக்கு மீண்டும் கோபம் எகிறியது. சினத்தால் சிவப்பேறிய முகத்துடன் கூட்டத்தை பார்த்தார் கிழவர். அப்போது ஒருவாலிபன் கிழவருக்கு முன்னால் வந்து “ஐயா, யார் இங்கு படித்திருக்கிறார்கள்? இந்த

வனாந்தரத்தில் எங்கே பாடசாலை இருந்தது? இருபது வருடங்களாக இங்கே யாருமே பாடசாலைக்குச் செல்லவேயில்லை, யாரும் பாடசாலையைப் பற்றி யோசிக்கவுமில்லை. படித்திருந்த ஒன்றிரண்டு நபர்களும் யுத்தகளத்திற்குச் சென்று மாண்டு போய்விட்டார்கள்" என்றான் வாலிபன். சும்மாக்கிழவர் என்ன பேசுவதென்று தெரியாமல் அப்படியே நிர்க்கதியாகி நின்றார். அப்போது சுல்பா எங்கிருந்தோ அங்கே ஓடிவந்தாள். "தாத்தா, எனக்கு வாசிக்கத் தெரியும், இருவிழியியைக் கொடுங்கள். வாசித்துச்சொல்கிறேன்" என்றாள். சும்மாக்கிழவர் நம்பமுடியாதவராக "உனக்கு வாசிக்கத் தெரியுமா? எங்கே படித்தாய்?" என்று சுல்பாவைப் பார்த்து அதிசயத்துடன் கேட்டார். சுல்பா பதிலேதும் சொல்லாமல் இருவிழியினூடாக மலையுச்சியைப் பார்த்தாள். பின்னர் சத்தமிட்டு வாசிக்க ஆரம்பித்தாள்.

"அல்பினோக்களைத் தோற்கடித்து நாம் கிரபியர்கள் ஜெயித்துவிட்டோம்" என்று சுல்பா வாசித்து முடித்ததுதான் தாமதம் எல்லா இடங்களிலும் உற்சாக ஆரவாரம் பீறிட்டுக் கிழம்பியது. சுல்பாவைத் தலையில் தூக்கி வைத்தபடி ஊர்வலம் ஆரம்பமாகிற்று. "வீரச்சிறுமி சுல்பா" என்று ஒருவன் சத்தமாகச் சொல்ல மற்றவர்கள் "வாழ்க" என்று கோஷமெழுப்பியவாறு ஊர்வலம் தொடர்ந்து நகர ஆரம்பித்தது. சும்மாக்கிழவரின் இடத்தை இப்போது சுல்பா பிடித்துவிட்டாள். அவள் கதாநாயகியாகி விட்டாள். நாயைப் பார்க்கவேண்டுமே, அதுவும் கம்பீரமாக வாலை அசைத்து அசைத்து நடக்க ஆரம்பித்தது. அடுத்த நாட்காலை எல்லா கிராபியர்களும் செவலோன் நகரத்தை நோக்கி தங்கள் பயணத்தை ஆரம்பித்தார்கள்.

கிராபியர் இனத்தின் மகிமையைப் புகழ்ந்துபாடும் பாடல்களை இளநங்கையர் இசைத்தார்கள். மேளதாளங்களும் எங்கும் ஒலித்தன. கதாநாயகி சுல்பாவை நன்றாகக் கவனித்துக் கொண்டார்கள், சிற்றுண்டிகள் கொடுத்தார்கள், களைப்புற்றபோது குளிர்பானம் அல்லது பழரசம் அருந்தக் கொடுத்தார்கள், நடக்கக் கஷ்டப்பட்டபோது அவளைத் தோளில் சுமந்து சென்றார்கள். செவலோன் நகரத்தை வந்தடைந்த பொழுது நண்பகலாகி விட்டது. பிரமாண்டமான வெற்றிக் கொடியையும், பிரமாண்டமான பலூனையும் அருகிலிருந்து பார்த்தபோது தான் யுத்தம் எப்போதோ முடிந்து போயிருக்க வேண்டுமென்று எல்லோருக்கும் புரிந்தது. ஏனெனில் அருகிலிருந்து பார்த்தபோது கொடி செய்யப்பட்ட துணி மங்கலாகி, உலர்ந்து, சோபையிழந்து காற்றில் ஆடிக் கொண்டிருப்பதும், கொடித்துணி மிகவும் இற்றுப் போயிப்பதும், அது கன்வஸ்துணியால் செய்யப்பட் டிருப்பதும் பலூன் நனறாகப் பழசாகிப் போயிருப்பதும் தெரிந்தது. அது

மட்டுமல்லாமல் நகரம் என்று அடையாளப் படுத்தக்கூடிய எந்த அடையாளச் சின்னங்களும் செவலோன் நகரத்தில் இருக்கவில்லை. இடிந்த சிதைபாடுகளுக்கிடையே மண்டையோடுகளும், எலும்புக்கூடுகளும் மட்டுமே விரவிக் காணப்பட்டன. உயிருள்ள மனிதர்களோ, மிருகங்களோ என்றுமே இருந்திருக்காதது போல் நகரம் செத்தபிணமாக காட்சியளித்தது. செவலோன் நகரின் எல்லா இடங்களிலும் ஒருவித துர்நெடி வீசியது. என்றாலும் செவலோன் நகரமாந்தர்கள் குண்டு வீசிப்புதைந்து போன கட்டிடங்களுக்கு மேல் ஏறிநின்று உற்சாகமாக ஆடிப்பாடினார்கள், மது அருந்திக் குதுாகலித்தார்கள், நங்கையருடன் கும்மாளமடித்தார்கள்.

சும்மாக்கிழவர் மிகவும் சிரமத்துக்கு மத்தியில் தன்வீடு இருந்த இடத்தை கண்டுபிடித்தார். அவருடைய கண்களில் இருந்து ஒரு துளிக்கண்ணீர் நிலத்திலே வீழ்ந்து சிதறியது. அது எண்ணிலடங்கா சோகக் கதைகளைத் தன்னகத்திலே தேக்கி வைத்திருந்த ஒற்றைச் சொட்டு. இன்று சும்மாக்கிழவர் தன்னந்தனியனாக நின்றார். அவருடைய எல்லாமே போய்விட்டன. கண்ணீரைத் துடைக்க யாருமில்லை. நாவரட்சிக்கு ஒரு குவளை தண்ணீர் தரவும் யாருமேயில்லை. நீல ஆகாயத்தையும், செந்நிறமான மண் துணிக்கைகளையும் தவிர எச்சங்கள் எதுவுமேயில்லை. அவருக்கு இப்போது தேவை தனிமை. தனிமை, தனிமை, தனிமை.

இரண்டுமூன்று மணித்தியாலங்கள் கற்சிலைபோல் அங்கேயே அமர்ந்து விட்டார் சும்மாக்கிழவர். சட்டென்று ஏதோவொரு உணர்வு உந்தித்தள்ள சுற்றுமுற்றும் பார்த்தார் சும்மாக்கிழவர். சுல்பா அங்கே இல்லை. ஓன்றாக வந்த நாயும் இல்லை. “சுல்பா” “சுல்பா” என்று கூப்பிட்டுப் பார்த்தார். எந்தப் பதிலும் வராமலிருக்கவே சும்மாக்கிழவர் கலவரமடைந்தார். மற்றைய நாட்களில் என்றால் கூப்பிட்ட குரலுக்கு “தாத்தா” என்று பதில் சொல்லிக் கொண்டே துள்ளிக்குதித்து ஓடிவந்து விடுவாள் சுல்பா. எங்கே இவள் போய் விட்டாள்? சும்மாக்கிழவர் தள்ளாடித்தள்ளாடி நடந்தவாறே சுல்பாவைத் தேட ஆரம்பித்தார். கண்கள் தெரியக்கூடிய துாரத்தில் எங்குமே அவள் இருக்கவில்லை. தெரிந்த ஓரிருவரிடம் சுல்பாவைப்பற்றி விசாரித்துப் பார்க்க யாருக்குமே அவள் இருக்குமிடம் தெரியவில்லை. சும்மாக்கிழவர் உண்மையிலேயே பதற்றமடைந்தார். மனத்தளர்ச்சியுடன் உடல் தளர்ச்சியும் ஒருங்கே சேர்ந்து சோர்வடைந்து போனார் கிழவர். இனிப் பாக்கி இருப்பது மயானம் மட்டுமே, அதையும் விட்டுவைக்காமல் சும்மாக்கிழவர் மயானத்திற்குள் நுழைய சுல்பா அங்கு அழுதுகொண்டிருந்தாள். சுல்பா அபூர்வமாகத்தான் அழுவாள். சும்மாக்கிழவர் பார்த்து ஒருபோதும் அவள் அழுததில்லை.

சும்மாக்கிழவர் சுல்பாவின் தோளிலே தட்டி “ஏன் சுல்பா அழுது கொண்டிருக்கிறாய்?” என்று ஆதுரத்துடன் கேட்க சுல்பா எதுவுமே பேசாமல் ஒரு பக்கமாக விரலை நீட்டினாள். அது கல்லறை. கல்லறைச் சுவரிலே இரு புகைப்படங்கள் செதுக்கப்பட்டிருந்தன. ஒன்று ஆண், ஒன்று பெண். இருவரும் கணவன் மனைவியராக இருக்க வேண்டும். அல்பினோக்களின் இராணுவச் சீருடையில் இருந்த இருவரும் அல்பினோக்கள். “உனக்கு யார் இவர்கள்?” என்று கேட்டார் கிழவர். “என்னுடைய தாயும் தந்தையும். கிராபியர்களுடன் நடந்த யுத்தத்தில் இவர்கள் இருவரும் உயிரிழந்துவிட்டார்கள்” என்று அழுது கொண்டே பதிலளித்தாள் சுல்பா. “நீ அல்பினோ இனத்தைச் சேர்ந்தவளா?” என்று அதிர்ச்சியுடன் சும்மாக்கிழவர் கேட்க “ஆம் தாத்தா” என்று பதிலளித்தாள் சுல்பா. சும்மாக்கிழவர் ஆவேசம் வந்தவராக கொண்டையை பிடித்துத் தரதரவென்று அவளை இழுத்துக்கொண்டு போனார். “செவ்லோன் நகரவாசிகளே வாருங்கள், வாருங்கள்” என்று கூச்சலிட்டுக் கொண்டே சும்மாக்கிழவர் போகவே ஒன்றுமே புரியாத செவ்லோன் நகரவாசிகள் ஏதோ விபரீதம் நடக்கப்போகிறது பார்ப்போம் என்ற ஆவலில் கிழவரைப் பின் தொடர்ந்தார்கள்.

“ஆடிப்பாடிக் கொண்டா இருக்கிறீர்கள் முட்டாள்களே, துரோகியை உள் வீட்டுக்குள் வைத்துக்கொண்டு ஆடிப்பாடிக் கொண்டா இருக்கிறீர்கள்?” என்று கூச்சலிட்டார் கிழவர். அவர் பேசுகின்ற எந்த விஷயமும் ஒருவருக்குமே புரியவில்லை. சும்மாக்கிழவர் சுல்பாவை வெற்றிக்கொடி கட்டப்பட்டிருந்த கம்பத்திலே கயிற்றால் பிணைத்துக் கட்டினார். “என்ன ஐயா, இந்தச் சிறு குழந்தையைச் செய்துகொண்டிருக்கிறீர்கள்?” என்று முன்னால் நின்றுகொண்டிருந்த பெண்மணி கேட்க “நாம் எத்துணை பெரிய முட்டாள்கள். சிறு குழந்தையா இவள்? இவ்வளவு காலமும் நச்சுப் பாம்புக்கு பாலூட்டி வளர்த்திருக்கிறோம். சுல்பா யார் தெரியுமா, நச்சுப்பாம்பு. இவள் நம்மைச் சேர்ந்தவள் அல்லள். கொடிய அல்பினோக்காரி” என்று ஆக்ரோஷமாக பதிலளித்தார் சும்மாக்கிழவர். நின்றவர்கள் அனைவரும் அப்படியே மலைத்துப் போய் விட்டார்கள். “யாரும் இவளைத் தொடக்கூடாது, அவிழ்த்து விடக்கூடாது, தண்ணீர் கேட்டால் யாரும் தண்ணீர்கூடக் கொடுக்கக்கூடாது” என்று சொன்ன கிழவர் விறுவிறுவென்று நடக்கஆரம்பித்தார்.

செவ்லோன் பள்ளத்தாக்கில் வாழ்ந்துவந்த எவரும் கிழவர் இப்படி ஆவேசமான நிலையில் இருந்ததை ஒருபோதுமே பார்த்ததில்லை. வனாந்தரத்திலுள்ள குடிசையைச் சென்றடைந்த சும்மாக்கிழவர் குடிசை முற்றத்திலே செழித்திருந்த ஒக்கிட் மலர்களை ஒவ்வொன்றாகப்

பிடுங்கி எறிந்தார், மண்ணைக் கிண்டினார், மண்ணைக் கிண்டிக்கொண்டே போனார். அவருக்கு மேல்மூச்சு கீழ்மூச்சு வாங்கியது என்றாலும் அவர் நிறுத்தவில்லை. மண்ணுக்கடியிலே பொலித்தீன் உறையிலே பொதிசெய்து வைக்கப்பட்டிருந்த கைத்துப்பாக்கியை வெளியே எடுத்தார் சும்மாக்கிழவர். புத்தம்புதிய அத்துப்பாக்கி சூரியஒளியிலே தகதகவென்று மின்னியது. லாவகமாக அதனைக் கையிலெடுத்து மரஉச்சியை நோக்கி குறிபார்த்த கிழவர் திருப்தியடைந்தவராக இடுப்பிலே செருகிக்கொண்டு விறுவிறுவென்று செவ்லோன் நகரத்தை நோக்கி நடந்தார். இப்போது செவ்லோன் நகரமக்கள் எல்லோரும் வெற்றிக்கம்பத்தைச் சூழ்ந்து நின்று நடக்கப் போவதை திகிலுடன் பார்த்துக் கொண்டிருந்தார்கள். சும்மாக்கிழவர் தளர்ந்த நடையோடு சுல்பாவுக்கு அருகில் வந்தார். அவருடைய வலதுகரத்திலே துப்பாக்கி இருந்தது. போகும்போது இருந்த உற்சாகமும் ஆவேசமும் அவரிடம் இப்போது இருக்கவில்லை. அவருடைய கால்கள் நன்றாக வீங்கிப்போயிருந்தன. நடை மிகவும் மோசமாக இருந்தது.

சுல்பா அச்சத்தினால் வெடவெடத்துப் போயிருந்தாள். சிறுநீர் அவளுடைய கால்கள் வழியாக ஓடி நிலத்தை நனைத்திருந்தது. சுல்பாவுக்கு அருகிலே வந்த கிழவர் நன்றாகக் களைப்புற்றிருந்தார். சுல்பாவின் காலடிக்கே வந்த சும்மாக்கிழவன் குனிந்து கையிலிருந்த துப்பாக்கியை சுல்பாவின் காலடியிலே போட்டு “சுல்பா என்னை மன்னித்துக்கொள்” என்று சொன்ன அதேகணம் அப்படியே மயங்கிக் கீழே விழுந்தார். அருகிலிருந்தவர்கள் ஓடிப்போய் சுல்பாவின் கட்டுக்களை அவிழ்த்துவிட்டார்கள். சுல்பா சும்மாக்கிழவரின் மேலே விழுந்து “தாத்தா” “தாத்தா” என்று கத்தினாள், கதறினாள், அழுதுபுரண்டாள். எனினும் சும்மாக்கிழவர் எழுந்திருக்கவேயில்லை.



# முன்னொரு காலத்து யானை

எம்.எம்.நௌஷாத்

நம்பினால் நம்புங்கள், என் வீட்டுமுற்றத்திலே யானையொன்று நிற்கிறது. கம்பீரமான கரியநிற யானை. காதுச் சோணைகளை ஆட்டியாட்டி காற்றைக் கிழிப்பதும் ஓர் அழகு. யானை பிளிறும், கேட்க வேண்டும்! எங்கும் கிடுகிடுக்கும், செவிப்பறை வெடிக்கவும் கூடும். அந்த யானை என் முற்றத்திற்கு வந்த கதையைத் தான் சொல்லப் போகிறேன். இக்கைங்கரியத்திற்கு முக்கிய காரணகர்த்தா யாமுறா. யாமுறா என் இளையமகன். என் இளையமகன் பிடிவாதக்காரன். நானும் அவனுடைய வயதில் அப்படித் தானிருந்தேன். அவன் நன்றாகப் பாடுவான். மூங்கிற் புதர்களுக்குள்ளும், ஆற்றங்கரை ஓரங்களிலும், கொய்யா மர உச்சிகளிலும் அவனுடைய இனிமையான பாட்டை நான் கேட்பேன். யாமுறாவுக்கு தேவதைகளை நன்கு பிடிக்கும், எனக்கும் தான். ஒருமுறை அவனுடைய வகுப்பாசிரியை சொல்லித் தந்த கதையை என்னிடம் திருப்பிச் சொன்னான் யாமுறா. நானும் தலையாட்டி தலையாட்டி கேட்டுக் கொண்டிருந்தேன். "அப்பா தேவதைகள் எங்கே வாழ்கின்றன?" என்று கேட்டான் அவன். "தேவதைகள் கிடையாது, அவை வெறுங் கற்பனைகள் மகனே" என்று நான் சொன்னதும் அவனுடைய முகம் சூம்பியது. நான் சட்டென்று சமாளித்துக்கொண்டே "கவலைப்படாதே யாமுறா, அவை சுவர்க்கத்தில் வாழ்கின்றன, ஆனாலும் நம்மால் அவற்றைக் காணமுடியாது" என்றேன். அவன் முகம் மலர்ந்தவனாக "தேவதை நேரில் வந்து என்ன வரம் வேண்டும் என்று உங்களைக் கேட்டால் என்ன கேட்பீர்கள்?" என்று என் முகத்தைப் பார்த்துக் கேட்டான். நான் திக்குமுக்காடிப் போனேன். தேவதை என்னைத் தேடிவருமென்று நான் எதிர்பார்க்காதது எப்படி உண்மையோ அதைப் போலவே இந்தக்கேள்வியையும நான் எதிர்பார்த்திருக்கவில்லை. அன்றே வரங்களின் பட்டியலொன்றை நான் தயாரித்தேன், தேவதைக்காக அல்ல என் மகனுக்காக.

என்ன நடந்ததோ தெரியாது, இப்படி சாமர்த்திவானாக இருந்த யாமுறா ஒருசில நாட்களாக யானைப் பிசாசால் பீடிக்கப்பட்டவன் போல் யானைகளாக வரைந்து தள்ளினான். பச்சை, மஞ்சள், சிவப்பு, நீலம். கறுப்பு, ஊதா என்று நூற்றுக்கணக்கான யானைகள். அவை துள்ளின, ஓடின, தும்பிக்கையை உயர்த்தின, நடனமாடின, சிலவேளைசிரிப்பது போலவும் தோற்றமளித்தன. ஒருநாள் மூச்சிரைக்க மூச்சிரைக்க ஓடிவந்து "அப்பா யானை" என்றான் யாமுறா. உண்மையாக நகரவீதியூடாக மணியசைத்து மணியசைத்து நடந்துவந்தது அந்த யானை. யானையைக் கண்டால் கேட்கவா வேண்டும்? சிறுவர்கள் சுற்றிவளைத்து விட்டார்கள். என் பையனும் அவர்களில் ஒருத்தன். "யானைமாமா, யானையைத் தடவிப் பார்க்கட்டுமா?" என்று கேட்டான் யாமுறா. "அதற்கென்ன தாராளமாக" என்று யானைப்பாகன் முறுவலித்துக்கொண்டே சொல்ல சிறுவர்களுக்கு

கொண்டாட்டமாகி யானையைச் சுற்றிச்சுற்றி வந்தார்கள், கால்களையும் தும்பிக்கையையும் சுளகு போன்ற காதுச்சோணை களையும் தொட்டுத்தொட்டுப் பார்த்தார்கள். யானைகளைத் தொட்டுப் பார்த்த குருடர்களின் ஞாபகம் எனக்கு வர சிரிப்பும் வந்தது. "யானைமாமா, யானையை விற்பீர்களா?" என்று கேட்டான் யாமுறா. "விற்பேன் தான் ஆனால் அதிக விலையாகும்" என்றான் பாகன். யாமுறா காற்சட்டைப் பைக்குள்ளிருந்த நாணயக் குற்றியை வெளியிலெடுத்து "யானைமாமா, இதைவிட அதிகமா?" என்று கேட்க எல்லோரும் சிரித்தார்கள். யாமுறாவின் முகம் வாடிவிட்டது. அதற்குமேல் நிற்காமல் என்னுடைய கையைப்பிடித்து "வாருங்கள் போவோம்" என்றான். "எனக்கு அந்த யானை வேண்டும் அப்பா" என்றான் யாமுறா போகும் வழியில். நான் விளையாட்டாகப் பேசுகிறான் என்று நினைத்து காதுகேளாதவன் போல் நடந்தேன். "எனக்கு அந்த யானை வேண்டும் அப்பா" என்றான் யாமுறா மீண்டும். "முட்டாள்தனமாக பேசாமல் வா" என்றேன் நான் சற்று கோபத்துடன். "எனக்கு யானை வேண்டும், எனக்கு யானை வேண்டும்" என்று கூப்பாடு போட ஆரம்பித்துவிட்டான் யாமுறா நடுவீதியில் வைத்து. நான் ஒன்றையும் யோசிக்காமல் கன்னத்தில் அறைய அதற்குப்பின் அவனுடைய சப்தம் அடங்கியது.

"என் குழந்தைக்கு என்ன செய்தீர்கள்? பாருங்கள் பையன் தேம்பிக் கொண்டிருக்கிறான்" என்றாள் மனைவி. "அடித்தேன்" என்றேன் நான். "குழந்தைக்கு அடிக்கக் கூடாது என்று நீங்கள் அடிக்கடி சொல்வீர்கள். இப்போது உங்களுக்கு என்ன நேர்ந்துவிட்டது?" என்று கேட்டாள் மனைவி.

"அவன் கேட்டதைக் கேட்டால் நீ அப்படிச் சொல்லமாட்டாய். அவன் யானையை வாங்கிக் கேட்கிறான்"

"இதற்கு அடிப்பதா? பையன் சிறுபிள்ளை, குழந்தைத்தனமாக கேட்கிறான் அவனைச் சமாதானப்படுத்துவதை விட்டுவிட்டு இப்படி அடிக்கலாமா?" என்று கேட்டாள் மனைவி எனக்கும் அவள் சொல்வது சரி என்பது போலத்தான் பட்டது. "யாமுறா, இரவுணவு பிந்திவிட்டது, வந்துசாப்பிடு" என்றேன் நான். "எனக்கு யானைதான் வேண்டும்" என்று மீண்டும் அடம்பிடித்தான் யாமுறா. நான் மீண்டும்மீண்டும் கெஞ்சியும் யாமுறா அதே சுலோகத்தையே திருப்பித்திருப்பி உச்சரித்துக் கொண்டிருக்க எனக்கு கோபம் தலைக்குமேல் ஏறி அவனை பிரம்பினால் விசுக்க ஆரம்பித்தேன். பையன் கூக்குரலிடவும் மனைவி ஓடோடி வந்து என் கையில் இருந்த பிரம்பை பறித்தெடுத்தாள்.

காலையில் யாமுறா அயர்ந்து தூங்கிக் கொண்டிருந்தான், முகம் வீங்கிச் சிவந்திருந்தது, அவன் இரவுணவு சாப்பிடவும் இல்லை. நான் கவலையுடன் யாமுறாவுக்கு அருகில் போய் "யாமுறா எழும்பு, விடிந்து விட்டது" என்றேன். அவன் கண்களைக் கசக்கிக்கொண்டு

எழுந்து, பல் தேய்த்து, காலைக் கடன்களை முடித்ததும், இரவு சாப்பிடாததால் பசி போலிருக்கிறது நன்றாகச் சாப்பிட்டான். சாப்பிட்டு முடித்த யாமுறா என் முகத்தைப் பார்க்காமல் "நான் இன்று பாடசாலைக்குப் போகமாட்டேன்" என்றான். நான் ஏனென்று கேட்க "யானை வாங்கித் தந்தால் தான் நான் பாடசாலைக்குப் போவேன்" என்றான் யாமுறா.

அவன் எப்போதோ என்னிடம் தந்த wish list என்னிடம் பத்திரமாக இருக்கவே நான் அவன் முன்னால் போய் வாசித்தேன். இரட்டை மணியடிக்கும் சிவப்பு பைசிக்கிள், ஒலி எழுப்பும் சப்பாத்து, பனியில் சறுக்கிச்செல்லும் skating, superman விளையாட்டுப் பொதி ..........இப்படியே நீண்டு சென்றது பட்டியல். "யாமுறா, எதை வேண்டுமானாலும் கேள் வாங்கித் தருகிறேன். இல்லை அத்தனையையும் வேண்டுமானாலும் வாங்கித் தருகிறேன்" என்றேன். "முன்பெல்லாம் கேட்டால் பணம் இல்லையென்று சொல்வீர்களே, இப்போது எங்கிருந்து வந்தது பணம்.........." என்று கேட்டான் யாமுறா. வாயடைத்துப் போன நான் "இப்போது பணம் கிடைத்துவிட்டது" என்று சமாளித்துக்கொண்டே வாய்கூசாமல் பொய்சொன்னேன். "எனக்கு யானை தான் வேண்டும்" என்றான் யாமுறா. "யாமுறா, பிடிவாதம் பிடிக்காமல் நான் சொல்வதைக் கேள். யானை விற்கும் கடையை எங்காவது கண்டிருக்கிறாயா? இல்லையே. யானையை யாரும் வாங்குவதுமில்லை, விற்பதுமில்லை" என்றேன் நான். "அப்படியானால் யானைப்பாகன் எங்கிருந்து யானை வாங்கினான்.?" என்று யாமுறா கேட்க நான் "அவன் காட்டிற்குப் போய் பிடித்துக் கொண்டு வந்திருப்பான்" என்றேன். "நாமும் காட்டிற்குப போய் யானையைப் பிடித்துக் கொண்டு வருவோம்" என்றான் யாமுறா. "யானை பிடிக்க வேண்டுமாயின் பெரிய சேணக்கயிறும், சங்கிலியும் வேண்டும்" "வாங்குவோம்" என்றான் யாமுறா.

"சரி சரி அதனைப் பற்றி பிறகு பேசலாம். இப்போது நேரமாகிவிட்டது. பாடசாலைக்குப் போக தயாராகு" என்றேன் நான். "என்னால் முடியாது" என்று அடம்பிடித்தான் யாமுறா. நான் மனைவியைப் பார்த்து "உன் பையனின் பிடிவாதத்தைப் பார்த்தாயா? அடிக்க வேண்டாமென்று சொன்னாய் அடிக்காவிட்டால் இவன் திருந்தமாட்டான்'' என்றேன். மனைவி யாமுறாவின் தலையை அன்பாகத் தொட்டாள், கைலேஞ்சியை எடுத்து அவனுடய கண்ணீரைத் துடைத்து முகத்திற்கு கிறீமும் தடவி பவுடரும் போட்டாள். "யாமுறா பரீட்சை வருகிறதல்லவா, இன்று பாடசாலைக்குப் போ. நாளைக்கு அப்பா யானை வாங்கித்தருவார்" என்று மனைவி சொன்னதும் யாமுறா பாடசாலைப்பையையும் தோளில் போட்டுக்கொண்டு பாடசாலை செல்லத் தயாரானான்.

“என்ன விளையாட்டுப் பொம்மை வாங்குவதைப் போல் சரியென்று சொல்லியிருக்கிறாய். நாளைக்கு என்ன செய்வது” என்று மனைவியைக் கடிந்து கொண்டேன் நான். “அவன் நாளைக்கு அதனை மறந்து விடுவான்” என்றாள் மனைவி. ஆனால் மனைவி நினைத்ததுபோல் யாமுறா யானையை மறக்கவேயில்லை. பாடசாலை விட்டு வந்த கையோடு “அப்பா யானை வாங்கப் போவோமா?” என்று கேட்டான் யாமுறா. “யானையும் இல்லை பானையும் இல்லை” என்று என் உருட்டு விழிகளால் அதட்டினேன் நான். மனைவி எதனையோ பேச வாயெடுத்தாள். எதுவும் பேசவேண்டாமென்று அவளுக்கு நான் சைகை காட்டினேன். “உன் மந்திரங்கள் எதுவும் அவனிடம் பலிக்காது. நான் என் மந்திரங்களைப் பாவிக்கப் போகிறேன் ” என்றேன் நான் மானைவியைப் பார்த்து. என் மந்திரங்களை அவன் அறிவான். கடுமையான மிரட்டலும் கடுமையான பிரம்படியும் தான் என்னுடய மந்திரம். அதிஉச்சமாக காட்டுக்கூச்சல் போடுவேன். உண்மையிலேயே அற்புதமாக வேலை செய்ய ஆரம்பித்தது என்னுடைய மந்திரம். யாமுறா ஒழுங்காகப் பாடசாலை செல்ல ஆரம்பித்தான்.

இரண்டு வாரம் கழித்து என்னுடைய கைபேசிக்கு யாமுறாவின் ஆசிரியரிடமிருந்து “என்னை வந்து சந்தியுங்கள்” என்று அழைப்பொன்று வந்தது. நான் போனேன். வகுப்பாசிரியர் என்னை நேரடியாக யாமுறாவின் வகுப்புக்கே அழைத்துச் சென்று “உங்கள் மகன் யாமுறாவைப் பாருங்கள்” என்றார். நான் ஒளித்திருந்தவாரே அவனை அவதானித்தேன். யாமுறா வகுப்பில் பாடம் நடக்கிறதே என்ற கவலை எதுவும் இல்லாமல் எங்கோ பார்த்தவாறே சிந்தனையில் ஆழ்ந்திருந்தான். “கடந்த இரு வாரங்களாக இதுதான் நிலைமை” என்றார் வகுப்பாசிரியர். நான் அவனுடைய புள்ளிகளை பார்வையிட்டேன், மிகமிக மோசமாக இருந்தது. என்ன அவனுக்கு நிகழ்ந்து விட்டது என்பதைப் போல் நான் ஆசிரியரைப் பார்த்தேன். “என்ன குறை வைத்தேன் நான் அவனுக்கு? புதிய ஆடை வாங்கிக் கொடுக்கவில்லையா? கைச்செலவுக்கு பணம் கொடுக்கவில்லையா?. மாலையானால் கிரிக்கட் விளையாடவில்லையா? வீடியோகேம் விளையாடவில்லையா? நேரத்துக்கு சாப்பாடு ஏன், சினிமாகூட பார்க்கவில்லையா?” என்றேன் நான் அழாக்குறையாக.

“கவலைப்பட வேண்டாம். உங்கள் மகன் கெட்டிக்காரன். ஏதோ பிரச்சினை போலிருக்கிறது, டாக்டரிடம் காட்டிப் பாருங்கள்” என்றார். “பையன் மெலிந்து போயிருக்கிறானா?” என்று கேட்டார் டாக்டர். “இருக்கலாம் டாக்டர், தளதளவென்று இருந்தவன் இப்போது மெலிந்து போயிருக்கிறான். முகம் உலர்ந்து உதடுகள் காய்ந்துவிட்டன, ஏதோ கவலைப்படுகிறான்” என்றேன் நான். டாக்டர் திருமதி தெசதானி

ஆளுமையுள்ள பெண்மணி, கெட்டிக்காரியான உளநோய் நிபுணர். என்னிடம் இரண்டே இரண்டு கேள்விகள் கேட்டார். என் பையனுடன் இரண்டு நிமிடங்கள் தான் உரையாடியவர் என்னைப் பார்த்து "உங்கள் மகனின் பிரச்சினை எனக்கு நன்றாகப் புரிந்து விட்டது. பையன் பழைய நிலைமைக்கு வருவதற்கு ஒரே ஒரு வழிதான் இருக்கிறது" என்று ஆரம்பித்தார் திருமதி தெசதானி. "சொல்லுங்கள் டாக்டர் நான் என்ன செய்யவேண்டும்?" என்று ஆவலுடன் நான் விசாரிக்க "யாமுறா கேட்கிறபடி யானையொன்று வாங்கிக் கொடுங்கள், எல்லாம் சரியாகிவிடும்" என்றார் நிபுணர். "என்ன அம்மணி இப்படிச் சொல்லுகிறீர்கள்? மாத்திரை எழுதிக்கொடுங்கள், வாங்குகிறேன் அல்லது ஊசி மருந்து போடுங்கள். இதைத்தான் நான் உங்களிடமிருந்து எதிர்பார்த்தேன். இங்கு யானைதான் மருந்து என்று பெரிய குண்டைப் போடுகிறீர்கள்" என்றேன் நான் ஏமாற்றத்துடன். "நன்றாகவே புரிந்து கொண்டீர்கள். யானை தான் மருந்து" என்றார் டாக்டர். "அம்மணி நீங்கள் சுலபமாகக் சொன்னீர்கள். நான் அறிந்தவரை யானை வாங்கும் கடை எங்கும் இல்லை. யானை வாங்க என்னிடம் பணமும் இல்லை. அப்படி வாங்கினாலும் யானை வளர்க்க ஆளும் இல்லை" என்றேன் நான். "தந்தை என்ற வகையில் எல்லா தியாகங்களையும் நீங்கள் செய்யத்தான் வேண்டும்" என்றார் டாக்டர்.

வனாந்தரத்தின் கிழக்குக் கோடியிலே யானை பிடிப்பவன் வாழ்ந்து வந்தான். "யானையொன்று என்ன விலையப்பா விற்கிறாய்?" என்று எடுத்த எடுப்பிலே கேட்டவுடன் என்னை ஒரு மாதிரியாகப் பார்த்துவிட்டு யானைபிடிகாரன் விலையைச் சொன்னதும் நான் வெலவெலத்துப்போனேன். உண்மையிலே யானை விலை. எப்படியோ வீட்டிற்கு யானை வந்து விட்டது. வந்த யானை கம்பீரமாக முற்றத்தில் நின்றது. இந்த யானைக்காக நான் பட்ட கஷ்டங்கள் கொஞ்சநஞ்சமல்ல, வீட்டை அடகு வைத்தேன், என் மனைவியின் நகைகளையும் என் தந்தை எனக்கு அன்பளிப்பாக கொடுத்த தென்னந்தோப்பையும் அற்பவிலைக்கு விற்றேன். யானையைக் கண்ட குதூகலத்தை யாமுறாவின் முகத்தில் பார்த்தவுடன் எல்லாக் கவலைகளையும் அடியோடு மறந்து நானும் குதூகலமுற்றேன்.

யானை மிகவும் நல்ல யானை. அது எங்களோடு வாழப்பழகிக் கொண்டது. நான் மதிலை உடைத்து யானை தங்குவதற்காக மடுவமொன்று அமைத்தேன். யானைபிடிகாரன் அடிக்கடி வீட்டிற்கு வந்து ஆலோசனைகள் சொன்னான். நானே யானைக்குத் தீனி கொடுத்தேன். பல்கலைக்கழக பட்டதாரியான நான் யானைப் பட்டதாரியாக மாறினேன். மாலையானவுடன் நான் யாமுறாவுடன் சேர்ந்து யானையை நடத்திக்கொண்டு போவேன். சிறுவர்களின் பட்டாளமும் எங்களைத் தொடரும். அயலவர்களோ என்னை

முகச்சுளிப்போடு பார்த்தார்கள். “அடே படித்த முட்டாளே! உனக்கு இதுவெல்லாம் தேவைதானா?” என்பது போன்ற பார்வைதான் அது.

ஒருநாள் யாமுறா “தந்தையே, யானை என்ன நிறத்தில் இருக்கும்?” என்று கேட்க நான் சிரித்தேன்.
“இது என்ன கேள்வி? யானை கறுப்பாக இருக்கும், கபிலமாக இருக்கும், கறுப்புக் கபிலமாக இருக்கும், உன்னுடைய யானையென்றால் கபிலங்கலந்த கறுப்பு”
“வெள்ளையானை இருக்குமா?”
“இல்லை” “சிவப்பு யானை?”
“இரத்தம் சிவப்பாக இருக்கும், யானை இல்லை”
“நீலயானை?”
“ஆகாயம் நீலமாக இருக்கும், யானை இல்லை”
“பச்சை யானை?”
“பாசி பச்சையாக இருக்கும், யானை இருக்காது”
“பொய் சொல்லாதீர்கள் அப்பா” என்று சொன்னான் யாமுறா. என்னை இழுத்துக்கொண்டு போய் தொலைக்காட்சியின் முன்பு என்னை அமர வைத்தான். ‘பறக்கும் யானைகளின் சாகசம்’ என்ற கார்ட்டுன் படம். யானைத்தீவில் வாழும் யானைகளின் கதை, எல்லாவகையான நிறங்களிலும் வந்து யானைகள் வீரதீரச்செயல்களில் ஈடுபட்டன.

“அப்பா, இந்த யானையின் நிறம் எனக்குப் பிடிக்கவில்லை. மஞ்சளாக இருந்தால் நான் சந்தோசப்படுவேன்”
“நீ சொல்லும் மஞ்சள்நிற யானை எங்கும் இல்லையே”
“யானைக்கு மஞ்சள் தீட்டுவோம்“
”மஞ்சள் பூசினால் யானை செத்துவிடும்“
“இல்லை எனக்கு மஞ்சள் யானைதான் வேண்டும்” என்று அழ ஆரம்பித்தான் யாமுறா. “பார்த்தாயா உன் மகனை, அளவு மீறிப் போகிறான்” என்றேன் நான் மனைவியைப் பார்த்து. “இதற்கேன் கோபப்படுகிறீர்கள்? சின்னஆசை. கொஞ்சம் பெயின்ட் வாங்கி அடித்தால் போகிறது” என்றாள் மனைவி சர்வ சாதாரணமாக. “அறிவில்லாமல் நீயும் பேசுகிறாயே, மஞ்சள் யானையைப் பார்க்கின்ற அயலவர்கள் கேலி செய்வார்கள், அடுத்த மழைக்காலம் வந்தால் மஞ்சள் கரைந்துவிடும். எல்லாவற்றுக்கும் மேலாக துவாரங்கள் அடைத்து யானை செத்துவிடும்” என்றேன் நான்.

எதையும் கேட்கக்கூடிய நிலையில் யாமுறா இல்லையாதலால் மாற்றுவழிகள் உண்டா என்ற ஆர்வத்தில் யானை வைத்தியரையும், சினிமாக்காரனையும் சந்தித்தேன். சினிமாக் காரரை சந்தித்த காரணம் ஒப்பனை நுட்பங்களை பாவித்து யானைக்கு பாதிப்பு ஏற்படாத வகையில் ஏதாவது செய்யமுடியுமா என்று அறிந்து கொள்ளத்தான். சினிமாக்காரன் ஆழ்ந்து சிந்தித்துவிட்டு சொன்ன ஐடியா எனக்கும்

பிடித்து விட்டது. பெயின்டர் ஒருவித நமட்டுச் சிரிப்புடன் வேலையை ஆரம்பித்தான். ஏணியை யானைமீது சாத்தினான். “ஐயா, யானையொன்றுக்கு வர்ணம் தீட்டும் சந்தர்ப்பம் கிடைத்திருப்பது இதுதான் முதல் தடவை. உங்களுக்கு நன்றி ஐயா” என்றான் பெயின்டர். வர்ணம் தீட்டும் வேலை மிக வேகமாக நடந்தது. மூன்றாவது நாள் யானை மஞ்சள்கோடும் கறுப்புக்கோடுமாக பிரமாண்டமான வரிக்குதிரையாக மாறி நின்றது.

யானை வரிக்குதிரையாக மாறியதோடு கதாநாயகனாக ஆகி நிறையப் பேர் யானையைப் பார்ப்பதற்கு வந்தார்கள். யாமுறாவும் யானையைச் செல்லமாக சிங்கி என்று கூப்பிடவாரம்பித்தான். ஒருநாள் சாப்பிட்டுக் கொண்டிருக்கும்போது “அப்பா யானைக்கு இந்த மணி அழகில்லாமல் இருக்கிறது” என்றான் யாமுறா. நான் நினைத்தது சரி இவன் எதற்காகாகவோ பீடிகை போடுகிறான். “மணி இருந்தால்தானே யானைக்கு அழகு. அது மணியொலிக்க ஒலிக்க கம்பீரமாக நடந்து வருவதை பார்க்க எவ்வளவு அற்புதமாக இருக்கிறது, நீ அறியவில்லையா பழமொழி, யானை வரும் பின்னே மணியோசை வரும் முன்னே” என்றேன் நான். “நீங்கள் சொல்வது சரி அப்பா. மணி வேண்டாமென்று நான் சொல்லவில்லை. மணியை காதுச்சோணையிலே கட்டினால் எவ்வளவு கம்பீரமாக இருக்கும்” “யாராவது மணியை காதுச் சோணையிலே தொங்க விடுவார்களா?” “ஏன் அம்மா, காதிலே போட்டிருக்காரே மணி” என்று மனைவியின் காதைச் சுட்டிக்காட்டிச் சொன்னான் யாமுறா. “அது மணி இல்லை, காது வளையம்” என்றேன் நான். “அப்படியானால் நம்முடைய சிங்கிக்கும் காது வளையம் போடுவோம். அதிலே சின்ன மணிகளைக் கட்டுவோம்” என்றான் யாமுறா. பிடிவாதக்காரனான யாமுறாவிடம் வழமையைப் போலவே பேசிப் பிரயோசனமில்லை என்பதால் எத்தனையோ இடங்களில் தேடியும் யானையின் காதில் துளை போடுவதற்கு யாரும் முன்வரவில்லை. எல்லோரும் “ஐயோ யானைக்கா வேண்டாம், கடவுளே” என்று பின்னடித்து விட இரும்புக்கொல்லனிடம் கெஞ்சிக் கூத்தாடி துளை போடாமல் காதுச் சோணையிலே தொங்கவிடக்கூடிய ஒருசோடி வளையங்களை செய்தெடுத்தேன். யானை கழுத்தை அசைக்கும் போதெல்லாம் காது வளையம் குலுங்கியது. காது வளையம் குலுங்கும் போதெல்லாம் வளையத்திலே தொங்கிய சிறுசிறுமணிகள் இரசனை பாவத்துடன் ஒலிக்க அதுவும் இனிமையாகத்தான் இருந்தது. இதே போக்கில் போவானென்றால் யாமுறா யானையின் காலுக்குச் சப்பாத்தும் கால்களுக்கு காற்சட்டை தைத்தும் கேட்பான் என்று எனக்குத் தோன்றியது.

நான் நினைத்ததைப் போலவே அந்த நிகழ்வுகளும் அடுத்தடுத்து ஆரம்பித்தன. யானை என்னைப் பார்த்து கிண்டலாகச் சிரிப்பது போல் பிரமையுண்டாகும். அப்போதெல்லாம் நாணத்தால் எங்கோ பார்ப்பது

போல் பாவனை செய்வேன். இப்படியே ஐந்தாறு மாதங்கள் கடந்தன. இந்த ஐந்தாறு மாதங்களும் நான்பட்ட வேதனைகளும் சோதனைகளும் கொஞ்சநஞ்சமல்ல. யானையைக் குளிப்பாட்டுவதும் நான், கழிவுகளை அகற்றுவதும் நான், நான் சாப்பிடா விட்டாலும் யானை வயிறு நிறையச் சாப்பிட்டது. காலையில் டிப்டொப்பாக ஆடையணிந்து வேலைக்குப் போகும் போது எல்லோரும் என்னை பெரியய்யா என்பார்கள். மாலையில் அரைநாண் கயிறும், காற்சட்டையும் உடுத்தி யானைப் பாகனாக மாறிவிடுவேன். எனக்கு இவையெல்லாம் பழகிப்போயின. சிங்கி குடும்பத்தில் ஓர் அங்கத்தவராக மாறி எல்லா விஷேசங்களிலும் கலந்துகொண்டது; உறவினர்களை வரவேற்றது; சிறுவர்களை வரவேற்றது; ஸலாம் போட்டது; நடனமாடிச் சிறுவர்களை களிப்பில் ஆழ்த்தியது; ஏசுபவர்களைக் கண்டால் பிளிறிப் பயமுறுத்தியது; கண்ணாமூச்சி விளையாடியது.

ஞாயிற்றுக்கிழமை காலை யாமுறா புறப்பட்டான். யானையும் ஆடை அணிகலன்களுடன் சீவிச் சிங்காரித்து, கிண்கிணி மணியோசையுடன் அவனுடன் நடக்கஆரம்பித்தது. சிங்கி வெளியேறிய சிறிது நேரத்தில் ஓர் அற்புதமான விருந்தாளி வந்தார். அவர் என் தந்தை. என்னுடைய தந்தை என் மீது அன்பும், பேரபிமானமும், வாஞ்சையுமுள்ள மனிதர். மிக நீண்ட காலத்தின் பின்னர் சந்தித்துக் கொள்கிறோம். "எப்படியோ நீண்டகால உன் கனவு நிறைவேறி விட்டது" என்று வந்ததும் வராததுமாகச் சொன்னார் தந்தை. "புரியவில்லையே" "யானை வாங்கியதைத்தான் சொல்லுகிறேன்" என்று தந்தை சொல்ல அப்படியே என் மனசு இளமைக் காாலத்திற்குத் திரும்பிவிட்டது.

"யானையைப் பற்றி கட்டுரை எழுதி வாருங்கள்" என்று வகுப்பாசிரியர் சொன்னதோடு கதை ஆரம்பமானது. வகுப்பிலுள்ள எல்லாமாணவர்களும் ஆர்வத்தோடு எழுதிக் கொண்டு வந்தார்கள். "யானை மிகப்பெரிய மிருகம். அது கரியநிறமானது. அதற்கு உலக்கை போன்ற தும்பிக்கையும், சுளகுபோன்ற காதும் உள்ளது என்ற பீடிகையோடு ஆரம்பித்து எல்லாக் கட்டுரைகளும் தொடர்ந்துகொண்டு போக நான் என்னுடைய கட்டுரையை ஆசிரியையிடம் நீட்டினேன். ஆசிரியையின் முகம்போன போக்கைப் பார்க்க வேண்டுமே! "ஏறடா வாங்கின் மேலே" என்று கிடுகிடுத்தார். நானும் வாங்கில் ஏறினேன். ஆசிரியை என் கையிலே கட்டுரையைத் திணித்து வாசிக்கச் சொல்ல நான் வாசித்தேன். "யானை மிகவும் அழகானது.........." வகுப்பு சிரித்தது. "யானை பெரியது எனினும் சிங்கம் பலசாலி. அது காட்டு ராஜா....." வகுப்பு மீண்டும் சிரித்தது. "அதன் காதுச் சோணைகள் சுறாவின் செட்டைகள் போல் பெரிதாகத் தோற்றமளிக்கும்" வகுப்பு மீண்டும் மீண்டும் சிரிக்க நான் அழுதேன். "யானையைக் கண்டிருக்கிறாயா?"

"இல்லை டீச்சர்"
"சிங்கத்தை கண்டிருக்கிறாயா?"
"இல்லை டீச்சர்"
"அப்படியானால் யானை அழகானது என்று ஏன் எழுதினாய்?"
"யானையின் படம் எனக்கு அழகாகத் தெரிந்தது டீச்சர்"

அவ்வேளை வெந்துபோன என் உள்ளத்திற்கு ஒத்தடமிட்ட ஒரு மனிதர் என்றால் அவர் என் தந்தைதான். "அப்பா, யானை அழகாக இல்லையா?" நான் கேட்டேன். "கவலைப்படாதே மகனே, யானை அழகானது தான். எல்லாப் படைப்புக்களும் ஒவ்வொரு விதத்தில் அழகானவை தான். எங்கள் பார்வையில்தான் கோளாறு இருக்கிறது. காகமும் அழகானதுதான், கழுதையும் அழகானதுதான், குரங்கும் அழகானதுதான்" என்றார் தந்தை. "யானையை ஒரு தடவை நான் பார்க்க வேண்டும்" என்றேன் நான். "அதற்கென்ன போவோமே!" என்ற தந்தை யானை ஊர்வலம் பார்க்க என்னை அழைத்துச் சென்றார். அலங்கார ஆடைகளுடன் பவனிவந்த யானைகளைப் பார்த்ததும் நான் உள்ளக் கிளர்ச்சியுடனும், கற்பனைகளுடனும் அவதியுற ஆரம்பித்தேன். யானைமீது அமர்ந்து என்வகுப்பு மாணவர்கள் முன்பாக ஊர்வலம் வரமேண்டுமென்ற ஆசைதான் அது.
அன்றிலிருந்து தந்தையை நச்சரிக்க ஆரம்பித்தேன், அழுதேன், பிதற்றினேன். என் கனவில் தொடர்ந்து அலங்கார யானைகள் அம்பாரி போவதுபோல் கண்டு கொண்டிருந்தேன். எல்லாம் சிவப்பு நிறமான, மஞ்சள் நிறமான, மெஞண்டா நிறமான வானவில் போன்ற யானைகள். கனவுகள் மாதக்கணக்கில் தொடர்ந்தாலும் நிஜயானை வரவில்லை. என் தந்தையால் யானை வாங்க முடியாதென்று எனக்குத் தெரியும். ஏன் ஒரு செம்மறி ஆட்டுக்குட்டியைக்கூட அவரால் வாங்க முடியாது. அந்தளவுக்கு எங்கள் குடும்பத்தில் வறுமை தாண்டவமாடியது. எத்தனையோ நாட்கள் நான் காலையுணவேயில்லாமல் பாடசாலை சென்றிருக்கிறேன். சிலவேளை சிறிதளவு அரிசிக்கஞ்சி கிடைக்கும். பாடசாலைக்கு அணிந்துசெல்ல இற்றுப்போன, நிறம் மங்கிப்போன ஓராடை இருந்தது. ஒருநாள் பாடசாலை விட்டு வந்தபோது வீட்டுமுற்றத்தில் இரண்டு முயற்குட்டிகள் நின்றன. வெண்ணிறமான பஞ்சுபோன்ற மெத்தென்ற அழகான முயற்குட்டிகள்.

பூரிப்படைந்த நான் இப்போது முயல்களோடு வாழ ஆரம்பித்தேன், முயல்களுடன் விளையாடினேன், உணவூட்டினேன், கொஞ்சினேன், பாடம் படித்தேன், பேசினேன், அணைத்தேன். என்னோடு சேர்ந்து முயல்களோடு விளையாடிய என்தந்தையும் இறுதியிலே என்னைப் போலவே ஆனார். முயல்கள் என் செல்லப் பிள்ளைகள் ஆகிவிட்டன. மழைபெய்து ஓய்ந்த மாலைப் பொழுதொன்றில் அந்த மகிழ்ச்சிக்கும் முடிவு வந்தது. என்னை மறந்த உறக்கத்தில் நான் இருந்தபொழுது இந்தக் கொடிய நிகழ்வு நிகழ்ந்திருக்க வேண்டும். ஏதோ உணர்வு

என்னை உந்தித்தள்ள ஓடோடி வந்து வீட்டிற்கு வெளியிலே பார்க்க என் நேசத்திற்குரிய முயல்கள் முற்றத்திலே செத்துக்கிடந்தன. அவற்றைக் கடித்துக் குதறிவிட்டு ஒருநாய் ஓடிக்கொண்டிருந்தது. நான் அழுதேன். ஒருபோதுமே அழாத என் தந்தையும் என்னோடு சேர்ந்து அழுதார். இரவு முழுவதும் நாம் கவலையில் ஆழ்ந்திருந்தோம். "முயற்குட்டிகள் ஞாபகம் வந்து விட்டதாக்கும்" என்றார் தந்தை. மறக்கக்கூடிய விஷயமா அது? என் உள்ளத்தை தீய்த்துக் கருகச்செய்த அந்த மரணத்தை என் தந்தை கூட மறக்கவில்லை என்பதே உண்மை.

நாங்கள் நீண்ட நேரமாக உரையாடினோம், குசலம் விசாரித்தோம், பகலுணவு சாப்பிட்டோம். "யானையைப் பார்ப்பதற்காகவா வந்தீர்கள்?" என்று நான் கேட்டதும் தந்தை ஆமென்பதற்கடையாளமாக தலையசைத்தார்.
"உன்னிடம் சொல்வதற்கென்ன? யானையொன்றை வாங்கி, அதிலே ஏறி சவாரிசெய்ய வேண்டுமென்று எனக்குள்ளும் ஓர்ஆசை இருந்தது. எப்படியோ உன் வீட்டிற்கு யானை வந்துவிட்டது. பார்த்து விட்டுப் போகலாமென்று தான் வந்தேன். அது சரி எங்கே அந்த யானை?"
"மகன் வெளியிலே கூட்டிக்கொண்டு போயிருக்கிறான், இப்போது வந்து விடுவான்" என்றேன் நான். யாமுறா இப்போதெல்லாம் தன்னந்தனியாக யானையை நடத்தலுக்குக் கூட்டிக்கொண்டு போகப் பழகிவிட்டான். நானும் யானை காரணமாக அலுத்துப் போயிருந்த காரணத்தால் அதற்கு அனுமதியளித்து விட்டேன். இன்று ஞாயிற்றுக்கிழமையாதலால் காலையிலேயே புறப்பட்டுவிட்டான் யாமுறா. நாங்கள் அவன் திரும்பிவருவதை ஆவலோடு எதிர்பார்த்துப் பார்த்துக்கொண்டிருக்க யாமுறா தனியாக வந்தான்.

"எங்கே யாமுறா யானை?"
"யானை நமக்கு வேண்டாம் அப்பா" என்றான் யாமுறா. "ஏன்?"
"வெள்ளையாக, அழகாக இருந்த நீங்கள் யானை வளர்த்து, கறுப்பாகி, அண்டங்காக்கா மாதிரி ஆகி விட்டீர்கள், பாவம் நீங்கள்" என்றான் யாமுறா. நான் சிரித்தேன்.
"உன் சந்தோசம்தானே என் சந்தோசம். அதைப் பற்றியெல்லாம் நீ கவலைப்படவேண்டாம். அது சரி எங்கே யானை?"
"யானையை விற்றுவிட்டேன் அப்பா"
"விற்று விட்டாயா?" என்னால் அவன் சொல்லுவதை நம்பவே முடியவில்லை. "அப்பா கவலைப்படாதீர்கள்" என்று சொன்ன யாமுறா என்னிடம் mouth organ ஒன்றை நீட்டினான். பிறகு அவன் mouth organ ஐ எடுத்து வாசிக்க ஆரம்பித்தான்.
"என்ன யாமுறா, யானையை விற்று இந்த mouth organ ஐயா வாங்கினாய்?"

“பயந்துவிட்டீர்களா, அப்பா?” என்று கேட்ட யாமுறா பணக்கற்றையை என் முன்னால் போட்டான். “இதோ மீதிப்பணம்”

“இவ்வளவு பெரிய யானைக்கு இவ்வளவு கொஞ்சம் பணமா?” என்று கேட்டேன் நான் அதிர்ச்சியுடன். யாமுறா எதையுமே சட்டை செய்யாமல் mouth organ ஐ வாசிக்க ஆரம்பித்தான்.

*பூச்சிகளை நான் பார்ப்பேன்,*
*பூச்சிகள் சிரிக்கும்,*
*வண்டுகள் பாடும்,*
*கிளிகள் கதை பேசும், நான் பறந்துபோவேன்,*
*பழங்களை தேடுவேன்,*
*கொறிப்பேன், கொய்யாவை இரசிப்பேன்,*
*பூக்களில் உட்காருவேன்,*
*வெள்ளைக்கரடியோடு பேசுவேன்,*
*மலையுச்சியில் சூரியனோடு உரையாடுவேன்.......*

என்று பாட்டு தொடர்ந்து கொண்டு போனது. முன்பு போல் என்னால் அழமுடியாது. மனசு லேசாக வலித்தது. தந்தையின் முகத்தைப் பார்த்தேன். அவருடைய முகத்திலும் அந்த வலி தெரிந்தது



# மெர்ஸலீனாவுக்கு மோட்சம்

எம்.எம்.நௌஷாத்

“மெர்ஸலீனா எப்படி ஐயா இருப்பாள்?” என்று கேட்டான் சூனியக்காரன். “ரொம்பரொம்ப அழகாக இருப்பாள். அழகு என்றால் கிளியோபேட்ரா மாதிரி எல்லா ஆண்களையும் கிறங்கவைக்கிற அழகு, புத்திசாலீ, மெல்லிடை, தொடையில் அதிர்ஸ்ட மச்சம்கூட உண்டு” என்றார் ஐஸாக்கு. சூனியக்காரன் ஐஸாக்குவை ஒரு மாதிரியாக பார்த்து விட்டு சுலோகங்களை உச்சரிக்க ஆரம்பித்தான். “வயது எத்தனை ஐயா இருக்கும்?” என்று கேட்டான் சூனியக்காரன். “மிகமிக இளமையானவள், இருபத்தைந்திற்குள் இருக்கும், ஆனால் அதைவிட இளமையான தோற்றம். இளமை என்றால் இளமைதான். காலுக்கு, முகத்திற்கு, உடம்பிற்கு, இரவிற்கு, பகலிற்கு Creamகள் எத்தனையோ Lotionகள் எத்தனையோ! கடவுளுக்குத்தான் வெளிச்சம்” என்று பேசிக் கொண்டே போனார் ஐஸாக்கு.

சூனியக்காரனோ மந்திரத்தில் ஆழ்ந்து போயிருந்தான். புகை கண்களைக் கரிக்கச் செய்தாலும் பொறுமையோடிருந்தார் ஐஸாக்கு. இப்போது சூனியக்காரன் ஐஸாக்குவை நிமிர்ந்து பார்த்து “ஐயா இன்னுமொரு கேள்வியும் கேட்கலாமா?” “கேள் கேள்” என்று அவனை உற்சாகப்படுத்தினார் ஐஸாக்கு. “ஐயாவுக்கும், அந்த மெர்ஸலீனா என்ற பெண்ணிற்கும் ஏதோ கசமுசா இருப்பதாக ஆட்கள் பேசிக கொள்கிறார்களே, அது உண்மையா ஐயா?” என்று சூனியக்காரன் தயங்கிக் கொண்டே கேட்டு முடிக்க ஐஸாக்கு வெடியுப்பு மாதிரி சிரிக்கவாரம்பித்தார். “அட சூனியக்காரனே, உனக்கே அந்த உண்மை தெரிந்தாகி விட்டதா?” என்று புளகாங்கிதத்துடன் சொன்ன ஐஸாக்குவின் முகம் திடீரென கறுத்து நிறம் மாறிற்று.

“சூனியக்காரனே, அந்த உதவாக்கரை பேச்சு எல்லாம் இப்போது வேண்டாம். வைக்க வேண்டியவர்களை வைக்க வேண்டிய இடத்தில் வைக்க வேண்டும் என்று சொல்லுவார்கள். அந்த உண்மை தெரியாமல் இப்போது துக்க சாகரத்திலே மூழ்கித் தவிக்கிறேன். அந்தக் காதகிக்கு பாடம் படிப்பித்தால் தான் என் மனம் சாந்தியடையும்” என்றார் ஐஸாக்கு ஆவேசத் தொனியில். “சொல்லுங்கள் ஐயா” “சூனியக்காரனே, நான் உனக்கு எதையும் மறைக்க விரும்பவில்லை.

என்னைப்பற்றி உனக்கு நன்றாகத் தெரிந்திருக்கும். ஐஸாக்கு என்றால் ஊரார் அண்ணாந்து பார்ப்பார்கள். அத்துணை பெரிய கோடீஸ்வரன் நான். மெர்ஸலீனா யார்? பரத்தை. ஆண்களுக்கு மேனியை விற்பவள் புதிதாக ஆடம்பர பங்களா கட்டியிருக்கிறாள். பரத்தை எப்படி பங்களா கட்டமுடியும்? எல்லாம் விபச்சாரம் செய்து சம்பாதித்த பணம். ஒருகாலத்தில் என்னுடைய மாளிகையைப் பார்த்து ஆஹா, ஓஹோ என்று புகழ்ந்தவர்களெல்லாம் இன்று பரத்தை பங்களாவை நோக்கி முண்டியடித்து ஓடுகிறார்கள். வயிற்றுப் பாட்டுக்கு அலைகின்ற கஞ்சப்பயல்கள் எல்லாம் என்னைப் பார்த்து ஒரு மாதிரியாகச் சிரிக்கிறார்கள். பெரிய பணக்காரனான எனக்கு

எப்படிப்பட்ட தலைகுனிவு பார்த்தாயா? நான் சொல்லும் விஷயங்கள் எல்லாம் உனக்கு விளங்கும் தானே” “ஆம் ஐயா”

“ஒன்றில் நோய் வந்து அவள் படுத்தபடுக்கையாகி விடவேண்டும், அல்லது பணமுடை வந்து அவள் நொடித்துப் போய்விட வேண்டும். அல்லது இடி விழுந்தோ, வெள்ளம் வந்தோ அவளுடைய பங்களா தரைமட்டமாகி விடவேண்டும். நீ என்ன செய்தாலும் சரியே, எவ்வளவு செலவானாலும் சரியே. இப்படி ஏதும் நடக்கக்கூடிய வகையில் மோசமான சூனியம் நீ செய்ய வேண்டும்....... (தாழ்ந்த குரலில்)......... மெர்ஸலீனா செத்துப் போனாலும் பரவாயில்லை என்று நினைத்துக் கொள்” என்று சொல்லிவிட்டு சூனியக்காரனின் முகத்தைப் பார்த்தார் ஐஸாக்கு.

“ஏன் பேசாமல் இருக்கிறாய்? பயந்து போய்விட்டாயா? உனக்கு முடியுமா முடியாதா என்று ஒரே வார்த்தையில் சொல்லிவிடு. நான் வேறுஆள் பார்த்துக் கொள்கிறேன். என்ன சொல்கிறாய்?” என்று கேட்டார் ஐஸாக்கு. “கவலை வேண்டாம் ஐயா, நான் செய்து முடிக்கிறேன். எனக்கு மெர்ஸலீனாவின் புகைப்படம் ஒன்று தரமுடியுமா?” என்று சூனியக்காரன் கேட்க ஐஸாக்கு தன்னுடைய பர்ஸைத் திறந்து மெர்ஸலீனா அன்பளிப்பாக கொடுத்த புகைப்படத்தை சூனியக்காரனிடம் நீட்டினார். புகைப்படத்தை வாங்கிப் பார்த்த சூனியக்காரன் “ஐயா சொன்ன மாதிரி ரொம்பரொம்ப அழகுதான்” என்றான். இவன் சூனியக்காரனா அல்லது சூட்சுமக்காரனா என்று தெரியாமல் ஐஸாக்கு தவித்துப்போனார்.

சூனியவேலைகள் ஆரம்பித்தன. சூனியக்காரன் மெர்ஸலீனாவின் புகைப்படத்தை வேப்பமரத்தில் தலைகீழாக வைத்து முகத்துக்கு நேரே ஆணியை அறைந்து செருகினான், புகையும் சட்டிக்குள் சாம்பிராணியை அள்ளி அள்ளிப் போட்டான். புகைமண்டலம் எழுந்ததும் மந்திரங்களை ஓத ஆரம்பித்தான். சூனியக்காரன் சைகைசெய்ததும் உதவியாளன் களிமண் உருண்டை ஒன்றைக் கொண்டுவந்து சூனியக்காரனிடம் கொடுத்தான். சூனியக்காரன் இரண்டு கைகளாலும் ரொட்டிக்கு மாவுபிசைகிற மாதிரி களிமண் உருண்டையை பிசையஆரம்பித்தான்.

கொஞ்ச நேரத்தில் களிமண் இருந்த இடத்தில் பெண்ணின் சிலை உருவாகிஇருந்தது. சூனியக்காரன் ஐஸாக்குவிடம் பெண் சிலையை தொட்டுக் காட்டி “ஐயா நீங்கள் பார்க்கும் இந்தச் சிலை தான் மெர்ஸலீனாவின் சிலை” என்றான். அந்தச் சிலை மெர்ஸலீனாவின் தோற்றத்தை கொஞ்சங்கூட ஒத்திருக்கவில்லை என்றாலும் ஐஸாக்கு ஒப்புக்கு ‘ஆம் ஆம்’ என்று தலையாட்டினார்.

‘ஐயா, நான் இப்போது மெர்ஸலீனாவின ஒவ்வோர் அங்கத்தையும் வசப்படுத்தப் போகிறேன். வசப்படுத்தி முடிந்த மறுகணமே, நான் அந்த உறுப்புக்கள் எல்லாம் நாசமாகிப் போவதற்கான மந்திரங்களை

உச்சரிக்க ஆரம்பிப்பேன். ஐயா என்ன செய்யவேண்டுமென்றால் என்னுடைய மந்திரம் உச்சாடனம் முடியும்வரை தியானம் செய்து கொண்டிருக்க வேண்டும்' என்று சொன்னான் சூனியக்காரன். "தியானமா? அப்படியென்றால் என்ன?" என்று அப்பாவித்தனமாக ஐஸாக்கு கேட்க "ஐயா சப்பாணி கொட்டி கண்களை மூடி அமைதியாக இருந்தால் போதும். மனதை அங்குமிங்கும் அலையவிடாது மந்திரங்கள் முடியும் வரை கண்களைத் திறக்கவே கூடாது" என்று எச்சரித்தான் சூனியக்காரன்.

ஐஸாக்கு வேறு வழியின்றி சூனியக்காரன் கேட்டுக்கொண்டபடி சப்பாணி கொட்டி அமர்ந்து கண்களை மூடிக்கொண்டார். சூனியக்காரன் மந்திரச் சுலோகங்களை நெட்டுருப்பண்ண ஆரம்பித்தான். பெண் சிலையின் தலையுச்சியை தடவி மந்திரங்களை ஆரம்பித்த சூனியக்காரன் பின்னர் கழுத்து, தோள், விரல்கள், கைகள், நெஞ்சு, வயிறு, பாதம் என்று ஒவ்வொரு அங்கமாகத் தடவி அதி உச்சஸ்தாயில் மந்திரங்களை ஜெபித்துக்கொண்டே போக நீண்ட நேரம் கண்களை மூடியிருந்த படியால் ஐஸாவுக்கு கண்கள் வலிக்க ஆரம்பித்து இடுப்பும் பிடித்ததால் சூனியக்காரன் அறியாத விதத்தில் இடைக்கிடை கண்களை திறந்துபார்த்துக்கொண்டார். சூனியக்காரன் சொன்னதற்கு எதிர்மாறாக மெர்ஸலீனாவின் பேரழகை சுற்றி அவர் மனம் சுழன்று சுழன்று அலைந்தது.

இரண்டு மணித்தியாலங்களில் சூனியக்காரன் 'ஐயா' என்றதும் ஐஸாக்கு நிம்மதிப் பெருமூச்சுடன் கண்களைத் திறந்தார். சூனியக்காரன் பெண்சிலையின் இடுப்பிலிருந்து தாயத்தைக் கழற்றி ஐஸாக்குவின் கையில் ஒப்படைக்க ஐஸாக்கு பௌயமாக அதனை வாங்கிக்கொண்டார். "ஐயா இந்தத் தாயத்து பூஜிக்கப்பட்ட தாயத்து. மகா பயங்கர சக்தி வாய்ந்தது. நீங்கள் இந்தத் தாயத்தை மெர்ஸலினாவின் கழுத்தில் கட்டினாலும் பரவாயில்லை, இடுப்பில் கட்டினாலும் பரவாயில்லை. ஆனால் கட்டுகின்ற போது நான் சொல்லித் தருகின்ற சுலோகங்களை உச்சரிக்க வேண்டும். ஐயாவால் முடியுமா?" என்று கேட்டான் சூனியக்காரன். "மெர்ஸலீனாவின் மூச்சுக்காற்றின் நிறம் கூட எனக்குத்தெரியும், அவ்வளவு நெருக்கம். இது எனக்கு மிகமிக சுளுவானவேலை" என்று உற்சாகத்துடன் சொன்னார் ஐஸாக்கு.

அன்றுமாலையே மெர்ஸலீனாவைத் தேடிவந்து விட்டார் ஐஸாக்கு. அவருடைய முகத்திலே உவகை பொங்கியது. என்றுமில்லாத ஐஸாக்குவின் முகத்தில் தெரிந்த மகிழ்ச்சிப் பூரிப்பை அவதானித்த மெர்ஸலீனா வியப்படைந்து "என்ன ஐஸாக்கு, ஏதாவது சந்தோஷ சமாச்சாரமா?" என்று கேட்டாள.

“எப்படிக் கண்டுபிடித்தாய்?” “எத்தனை ஆண்களுடன் பழகியிருக்கிறேன். அவர்களின் முகத்தைப் பார்த்து இதயத்துடிப்பு எத்தனை என்று கூடச் சொல்லி விடுவேன்” என்று கிளுக்கென்று சிரித்தாள் மெர்ஸலீனா.

“நீ ஒருடாக்டராக வந்திருக்க வேண்டியவள்”

“போலிப்புகழ்ச்சி தானே வேண்டாமென்பது. உங்களைப் போல் உள்ள ஆணின் பலவீனமும் இதுதான், அளவுக்கு மீறி ஐஸ்வைப்பது. அதைவிட்டு விடுங்கள். சந்தோஷ சமாச்சாரம் என்னவென்று சொல்லுங்கள்”

“சந்தோஷம் என்றாலும் துக்கம் என்றாலும் எல்லாம் உனக்காகத் தான் மெர்ஸலீனா. உன்னைவிட எனக்கு சந்தோஷம் ஏது? உன்னைவிட எனக்கு உலகம் ஏது? இன்று அதிர்ஷ்டவசமாக ஒரு சாமியாரை சந்தித்தேன். உன்னுடைய ஆயுள் நீடிக்கவும் வாழ்க்கையில் எப்போதுமே சந்தோஷமாக இருக்கவும் அவர் தாயத்து செய்து தந்தார். இதனை கழுத்தில் கட்டிக் கொண்டாயென்றால் உன்னுடைய ஆயுள் நீடிக்கும், வாழ்க்கை மிகச் சந்தோஷமாக இருக்கும்” என்றார் ஐஸாக்கு.

ஐஸாக்குவின் அன்பு கனிந்த வார்த்தைகளால் நெகிழ்ந்து போன மெர்ஸலீனாவின் கண்கள் கலங்கின. ஆகாய உயரமளவுக்கு எத்துணை இரக்கமுள்ளவர் இந்த ஐஸாக்கு. “என் இளமைக்காலத்தில் எத்தனை தாயத்துக்கள் கட்டியிருக்கிறேன் தெரியுமா ஐஸாக்கு, எல்லாம் எதற்காக என்றால் என்னைப் புரிந்துகொள்ளக்கூடிய அன்பான கணவன் கிடைக்கவேண்டுமென்ற வேண்டுதல். அல்லது நல்ல வாழ்க்கை அமைய வேண்டுமென்ற கனவு. ஆனால் எந்த ஆசையுமே நிறைவேறவில்லை. இந்த வாழ்க்கையை உதறிவிட வேண்டுமென்று சிலவேளை முட்டாள்தனமாக நினைப்பதுண்டு. தாயத்துக்களால் எதுவுமே ஆகாது ஐஸாக்கு” என்றாள் மெர்ஸலீனா ஏக்கப் பெருமூச்சுடன். “நீ நினைப்பதுபோல் இல்லை மெர்ஸலீனா. வாழ்க்கையில் திருப்பங்களும் உண்டு. கடவுள் நாம் எதிர்பார்க்காததை எல்லாம் நடத்திக்காட்டும் வல்லமை உள்ளவன். உன் வாழ்க்கையிலும் கடவுள் ஒருமகிழ்ச்சியை வைத்திருக்கக்கூடும்” என்றார் ஐஸாக்கு.

“கடவுளைப் பற்றிப்பேச எனக்கு எந்தத் தகுதியும் இல்லை ஐஸாக்கு, கடவுளுக்கு எதிராக யுத்தம் செய்து கொண்டிருக்கும் நான் கடவுளைப் பற்றிப் பேசினால் போலியாகப் பேசுகிறேன் என்றுதான் அர்த்தம்” என்றாள் மெர்ஸலீனா கரகரத்த குரலில். மெர்ஸலீனாவுக்கு நெருக்கமாகப் போய் அவளுடைய தலையைக் கோதி தன்னிடமிருந்த கைலெஞ்சியால் மெர்ஸலீனாவின் கண்ணீரைத் துடைத்தவாறே தாயத்தை எடுத்து அவளுடைய கழுத்திலே கட்டினார். ஐஸாக்கு

மர்ஸலீனா ஐஸாக்குவின் அன்பில் கட்டுண்டு போயிருந்தாள். சிலவேளை ஐஸாக்கு சொல்வதைப் போல் கடவுள் நாம் எதிர்பார்க்காத திருப்பங்களை இந்தத் தாயத்து மூலம் நிகழ்த்திக் காட்டக்கூடும். யார் கண்டது? கடவுள் மிக்க வல்லமையுள்ளவர்.

*தலை அழிய,*
*சுகமும் சொத்துக்களும் அழிய,*
*கைகளும், மார்புகளும், விரல்களும் அழுக,*
*அழகிய மேனி அழுக,*
*ஒளிவீசும் கண்கள் அழுக,*
*இளமை அழிய, இதயம் அழிய,*
*மூச்சு அழிய,*
*உதரமும் உணர்வுகளும் அழிய.*

என்று இப்படியே சூனியக்காரன் சொல்லித்தந்த சுலோகங்களை மந்திரித்துக்கொண்டே போனார் ஐஸாக்கு. சுலோகங்களை உச்சரிக்கும்போது சில வேளைகளில் நா தடுமாறியது; உதடுகள் ஊதாநிறமாக மாறின; மேனி சிலிர்த்தது; தலை சுற்றுவது போலவும் இருந்தது; உடம்பு வியர்வையால் நனைந்தது. திருட்டு விழிகளால் மெர்ஸலீனாவைப் பார்த்தார் ஐஸாக்கு. மெர்ஸலீனா குனிந்து கண்களை மூடியபடி இருந்தாள். நல்லவேளை மெர்ஸலீனா தன்னை கவனிக்கவில்லை என்றதும் நிம்மதிப் பெருமூச்சு விட்டார் ஐஸாக்கு.

எப்போது அவள் நோய்வாய்ப்பட்டு படுக்கையில் விழுவாள் என்றோ எப்போது விபத்தில் மாட்டிக் கொள்வாள் என்றோ சொல்ல முடியாது. சூனியக்காரன் ஏழுநாள் கெடு வைத்திருந்ததால் ஏழுநாள் கெடுவுக்குள் எதுவும் நடக்கலாம். முதல்நாள் அற்ப நப்பாசையோடு மெர்சலீனாவின் பங்களாவுக்கு போன் செய்த ஐஸாக்கு மெர்ஸலீனா மிகவும் நலமாக இருப்பதாக அங்கிருந்த பணிப்பெண் சொன்னதும் மிகுந்த ஏமாற்றமடைந்தார். இரண்டாவது மூன்றாவது நாட்களும் அவள் நாசமடையாமலேயே இருந்தாள். நான்காவது நாள் ஐஸாக்குவின் வீட்டுத் தொலைபேசி அடித்துக் கொண்டேயிருக்கவே குளியலறையில் குளித்துக் கொண்டிருந்தவர் மெர்ஸலீனாவின் பங்களாவிலிருந்து அழைப்பு என்று வேலைக்காரி சொன்னவுடன் தண்ணீர் சொட்டச் சொட்ட ஓடிவந்து ஆவலுடன் 'ஹலோ' என்றார்.

'ஐஸாக்குவா?' என்று மறுமுனையிலிருந்து குரல் கேட்டது. அது மெர்ஸலீனாவின் குரல். கடவுளே, மெர்ஸலீனாவுக்கு சனி நோய் பீடித்திருக்க வேண்டும். "ஐஸாக்கு உங்களுக்கு நன்றி தெரிவிப்பதற்காகத்தான் இந்த காலை வேளையிலே அழைப்பு

எடுத்தேன். மன்னியுங்கள். நீங்கள் தாயத்தை கட்டியதிலிருந்து உள்ளம் இலேசாகிவிட்டது போல் உணர்கிறேன். அடிக்கடி தலைசுற்றுவதாக முன்பு உங்களிடம் சொல்லுவேன் அல்லவா? இப்போது தலைசுற்று என்பதே கிடையாது. முன்புபோல் மனப்பாரம், உடற்பாரம் எதுவும் கிடையாது, உற்சாகமாக இருக்கிறேன். உங்கள் தாயத்துக்கு நன்றி. ரொம்ப ரொம்ப நன்றி" என்றாள் மெர்ஸலீனா. ஐஸாக்கு அழுதேவிட்டார்.

"சூனியக்காரனே, மெர்ஸலீனா சந்தோஷமாக இருக்க நீ தாயத்துக் கட்டினாயோ அல்லது நாசமாகிப் போக தாயத்துக் கட்டினாயோ எனக்குத் தெரியாது. தாயத்து கட்டிய நாளிலிருந்து நீ சொன்ன விஷயங்கள் எதுவுமே நடக்காமல் நீ எதனை சொல்லவில்லையோ அதுதான் நடக்கிறது. அவள் நாசமாகிப் போவாய் என்று நீ சொல்ல அவளோ மிகமிக உற்சாகமாகவும் புஷ்டியாகவும் இருக்கிறாள்" என்று ஐஸாக்கு அழாக்குறையாகச் சொன்னதும் சூனியக்காரன் மிகவும் துக்கமடைந்தான். 'நீங்கள் அழக்கூடாது ஐயா, நான் இருபது வருடங்களாக தாயத்துக் கட்டி வருகிறேன். நூற்றுக்கணக்கானவர்கள் என்னுடைய தாயத்து காரணமாக நாசமடைந்திருக்கிறார்கள். ஒன்றும் பிழைத்தது கிடையாது. நான் கொடுத்த ஏழுநாள் கெடுவை நம்புங்கள். அவள் நிச்சயம் நாசமடைந்து விடுவாள். அதுவும் ஐயாவின் காசை வாங்கிக் கொண்டு ஐயாவுக்கு துரோகம் செய்ய நான் முனைய மாட்டேன்" என்றான் சூனியக்காரன்.

ஏழாவதுநாள் காலை கடும் காய்ச்சலால் முனக ஆரம்பித்தாள் மெர்ஸலீனா. ஐஸாக்கு மெர்ஸலீனாவின் நெற்றியைத் தொட்டுப் பார்க்க நெற்றி அனலாகத் தகித்ததோடு மேனியெல்லாம் மஞ்சள் நிறமாகி மூச்சுப்பேச்சு இல்லாமல் கிடந்தாள் மெர்ஸலீனா. மிகமிக மகிழ்ச்சியடைந்த ஐஸாக்கு மகிழ்ச்சியை வெளிக்காட்டாமல் முகத்தை சோகமாக வைத்துக் கொண்டே மெர்ஸலீனாவை கைத்தாங்கலாக அழைத்துச் சென்று காரிலே ஏற்றினார். "எத்தனை நாட்களாக காய்ச்சல்?" என்று கேட்டார் டாக்டர். "அவளால் பேசமுடியாது டாக்டர். நான் பதில் சொல்கிறேன். இன்று அதிகாலை தான். அதிகாலையிலே மெர்ஸலீனா பணிப்பெண்ணை எழுப்பி கடுமையான தலைவலியாக இருக்கிறது என்று சொல்லியிருக்கிறாள். பணிப்பெண் நெற்றியிலே தைலம் தடவி பரசிற்றமோல் மாத்திரைகளும் கொடுத்திருக்கிறாள். அப்பால் வாந்தி எடுக்க ஆரம்பித்து கடுமையான காய்ச்சலும் சேர்ந்து விட்டது. அதற்குப் பிறகுதான் பணிப்பெண் எனக்கு போன்பண்ணி நிலைமையைச் சொன்னாள்" என்று ஒரேமூச்சில் சொல்லி முடித்தார் ஐஸாக்கு. "சிறுநீர் என்னநிறத்தில் போகிறது?"

"ரத்தம் ரத்தமாக போகிறது"

"அதென்ன ரத்தம் ரத்தமாக, என்ன அர்த்தம்?"

“இரத்தச் சிவப்பான சிறுநீர் டாக்டர்”
மெர்ஸலீனாவை டாக்டர் பரிசோதித்துக் கொண்டிருக்க டாக்டரின் வாயிலிருந்து வரக்கூடிய அபசகுன வார்த்தைகளுக்காக ஆவலோடு காத்திருந்தார் ஐஸாக்கு.
”மெர்ஸலீனா உயிர் பிழைப்பாள் என்று நினைக்கிறீர்களா டாக்டர்?”
“ஆம் அதிலென்ன சந்தேகம்?”
“மெர்ஸலீனாவுக்கு பாரதூரமான நிலைமை ஏற்பட்டிருக்கிறது என்பது என் அபிப்பிராயம்”
“இல்லை, யார் உங்களுக்கு அப்படிச் சொன்னது?”
“டாக்டர் எனக்கு எதுவும் விளங்கவில்லை என்றா நினைத்துக் கொண்டிருக்கிறீர்கள்? என்னிடம் எதையுமே மறைக்கவேண்டாம். நானும் படித்தவன், தொடர்ந்து மெர்ஸலீனா வாந்தியாக கக்கிக் கொண்டிருக்கிறாள்; பிதற்றிக் கொண்டிருக்கிறாள்; இரத்தம் இரத்தமாக சிறுநீர் போகிறது. நிலைமை மோசம் என்றுதானே அர்த்தம்?”
“இல்லை ஐஸாக்கு ஊசிமருந்து, சேலைன் இவைகளைக் கொண்டு நோயை நம் கட்டுப்பாட்டிற்குள் கொண்டுவந்து விடலாம்”
“டாக்டர் நீங்கள் எவ்வளவு சொன்னாலும் உடம்பு இப்படி மஞ்சளாகி இருப்பதைப் பார்த்தால் அவளுக்கு மஞ்சள் காய்ச்சல் ஏற்பட்டிருக்கிறது என்று எந்தப் புத்தியுள்ள மனிதனும் விளங்கிக் கொள்வான், மஞ்சள் காய்ச்சல் வந்தவர்கள் உயிர் பிழைத்ததில்லை என்று கேள்விப்பட்டிருக்கிறேன்”

“இல்லை ஐஸாக்கு நீங்கள் அளவுக்கு மீறி கவலைப்படுகிறீர்கள். மஞ்சள்காய்ச்சல் வேறு. அதனை ஆங்கிலத்தில் நாங்கள் yellow fever என்று சொல்லுவோம். மெர்ஸலீனாவுக்கு ஏற்பட்டிருப்பது வைரல் ஹெப்பரைட்டிஸ். அதாவது ஈரல்அழற்சிநோய். நல்ல ஓய்வுடன் சரியான கவனிப்பும் இருக்கும்போது அவள் நிச்சயமாக குணமடைந்து விடுவாள்” என்றார் டாக்டர்.

டாக்டரின் பேச்சை நம்பாத ஐஸாக்கு மெர்ஸலீனா இறந்து விடுவாள் என்ற அதீத நம்பிக்கையில் பணத்தை தாராளமாகச் செலவழித்து மெர்ஸலீனாவுக்கு என்று தனியறை ஏற்பாடு செய்திருந்தார். தனியறையில் ஏஸி, தொலைக்காட்சி, வைபை என்று எல்லாம் இருந்தன. ஜன்னலுக்கூடாக யானைச்சவாரி கூடப் பார்க்கலாம்.

பொத்தானை அழுத்துவதன் மூலம் விஷேட வைத்திய நிபுணருடன் நேரடியாக தொடர்பு கொள்ளக் கூடிய வசதியும் இருந்தது. ஐஸாக்கு மட்டுமே மெர்ஸலீனாவின் அறைக்குள் நினைத்தநேரம் உள்ளே நுழையமுடியும் என்பதோடு எல்லோருடைய கண்களுக்கும் தெரியக் கூடியதாக ‘விருந்தினர்கள் வர வேண்டாம்’ என்ற போர்ட்டும்

தொங்கிக் கொண்டிருந்தது. வரவர நிலைமை மோசமாக அவளால் வாய்திறந்து பேச முடியவில்லை. ஒருசில வார்த்தைகளை உச்சரித்தாலும் அந்த வார்த்தைகளுக்கிடையில் காரணகாரிய தொடர்பெதுவும் இருக்கவில்லை. கன்னங்கள் ஒட்டியுலர்ந்து மரணம் அவளை வாவா என்று அழைத்தது.

பங்களா என் கைக்கு வந்தபிறகு 'மெர்ஸலீனா தேவதை இல்லம்' என்ற போர்டை கழற்றி எறிந்து அந்த இடத்தில் தங்கத்தால் ஆக்கப்பட்ட *'கௌரவ ஐஸாக்கு கனவான் மாளிகை'* என்ற போர்டைக் கொழுவி மாளிகையிலே நான் சதாகாலமும் வசித்து வருவேன் என்ற கனவில் மிதந்து திரிந்தார் ஐஸாக்கு. ஐஸாக்குவே சொல்லுவதைப் போல் கடவுள் எதிர்பார்க்காததையெல்லாம் நடத்திக்காட்டும் வல்லமையுல்லவர் என்பதிற்கொப்ப எதிர்பாராத விதமாக மெர்ஸலீனா இரண்டு வாரங்களில் குணமடைந்து வீடு திரும்பினாள். தாங்கமுடியாத ஏமாற்றத்துடன் ஐஸாக்கு சூனியக்காரனை தேடிப்போக சூனியக்காரனோ இரண்டுநாட்களுக்கு முன்னர் விபத்தில் சிக்கி செத்துப்போயிருந்தான்.

இப்படியிருக்கையில் நகரின் எல்லையில் வசித்து வந்த மதபோதகர் பற்றிய செய்தியொன்று வந்தது மதபோதகருக்கென்றே பிரத்தியேகமான கோயிலும் இருந்தது. மதபோதகர் பணக்காரர்களுக்கு நல்ல நண்பர் ஆவார். ஏழைகளுக்கு அவரின் கதவுகள் ஒருபோதும் திறக்கப்பட மாட்டாது. காத்திராப் பிரகாரமாக ஓர் ஏழையை சந்திக்க நேர்ந்துவிட்டாலும் 'கடவுள் உன்னை விரும்பினால் ஆசிர்வதிப்பாராக' என்று முகத்தைச் சுளித்துச் சொல்லுவார் மதபோதகர், கடைந்தெடுத்த ஆசாடபூதியான அவரைச் சந்திக்க ஐஸாக்கு போனார். 'என்ன பிச்சைக்காரனா வந்திருப்பது?' என்று மதபோதகர் கேட்க 'இல்லை மதபோதகரே, பணக்காரன். என்னுடைய பெயர் ஐஸாக்கு. என்னைப் பாருங்கள். உயர்ரக சப்பாத்து அணிந்திருக்கிறேன், கோட்டும் சூட்டும் போட்டு கோட்டில் சிவப்பு ரோஜாவும் செருகியிருக்கிறேன், ஸ்மார்ட்போன் வைத்திருக்கிறேன், காரில் வந்திருக்கிறேன், கார்ச் சத்தம் கேட்டதல்லவா? அது என்னுடைய கார் தான்' என்று ஐஸாக்கு பதிலளிக்க, பணிப்பெண் வந்து ஐஸாக்குவை உள்ளே அழைத்துக்கொண்டு போனாள்.

மதபோதகர் ஐஸாக்குவை மேலும் கீழுமாக அளந்தார். எதனையோ புரிந்துகொண்ட ஐஸாக்கு கோட்டுப்பையிலே துருத்திக் கொண்டிருந்த பணக்கற்றையை எடுத்து பௌயமாகக் குனிந்து மதபோதகரின் கையிலே கொடுக்க பணக்கற்றையைக் கண்டதும் மதபோதகரின் சிடுமூஞ்சி முகம் மறைந்து ஆகர்ஷிக்கும் புன்னகை மலர்ந்தது.

பணக்கற்றையை மடியில் வைத்துக்கொண்டே ஐஸாக்குவை அமரும்படி சைகை காட்டிய மதபோதகர் 'என்ன வேண்டும் குழந்தாய்?' என்று கேட்க ஐஸாக்கு நடந்தவைகள் அனைத்தையும் ஆதியோடந்தமாக மதபோதகரிடம் சொன்னார். 'மதபோதகரே, பணக்காரர்களுடன் விபச்சாரம் செய்யும் மெர்ஸலீனா என்ற இந்த விலைமாது இன்று பணக்காரர்களுக்கு போட்டியாக மாறியிருக்கிறாள். நீங்களே சொல்லுங்கள், பரத்தை மாளிகை கட்டலாமா? என்னால் இதனை அனுமதிக்கவே முடியாது. அழகும் அலங்காரமும் கொண்ட அந்த மாளிகை என் கைகளுக்கு வந்தால்தான் என்மனம் ஆறும் மதபோதகரே' "நான் மதபோதகன். என்னால் இதற்கு என்ன செய்ய முடியும்?" என்று கேட்டார் மதபோதகர்.

"உங்களைப் பற்றி நான் நிறைய கேள்விப்பட்டிருக்கிறேன். உங்களால் எவ்வளவோ செய்யமுடியும். பணம் எவ்வளவு செலவழிக்க வந்தாலும் பரவாயில்லை" 'குழந்தாய், இவ்வளவு பணம் செலவழிக்கத் தயாராக இருக்கின்ற நீ பங்களாவை வாங்கியிருக்கலாம் அல்லவா? என்னிடம் ஏன் வந்தாய்?' "மதபோதகரே, மெர்ஸலீனா, பங்களாவை விற்கமாட்டாள். அது அவளின் உயிர். நானும் அதனை வாங்குவதற்காக எத்தனையோ தகிடுதத்தங்கள் செய்தும் அவள் மசிகின்ற மாதிரிக் காணோம். நகரசபைத் தலைவரிடம் கட்டட வரைபடத்தை அங்கீகரிக்க வேண்டாமென்று கேட்டுக் கொண்டேன். நகரமாந்தர்களை கெடுக்கிறாள் என்று அரசாங்க தலைவர்களுக்கு மனு எழுதிப்போட்டேன். அவளோ என்னைவிடச் செல்வாக்கு படைத்தவளாக இருக்கிறாள். பிடிக்க வேண்டியவர்களை பிடித்து காரியத்தை சாதித்துவிட்டாள்" எனறு ஆற்றாமையுடன் சலித்துக் கொண்டார் ஐஸாக்கு.

ஆழ்ந்த சிந்தனையில் மூழ்கிய மதபோதகர் கொஞ்சநேரம் கழித்து முகம் மலர "ஐஸாக்கு, நிறையப் பணம் வைத்திருக்கிறீர்கள் தானே?" என்று கேட்டார். "ஆம், மதபோதகரே" "என் உள்ளத்திலே ஐடியா ஒன்று வந்திருக்கிறது. கொஞ்சம் கஷ்டமான காரியம் தான் என்றாலும் நான் ஜெயித்து விடுவேன். நீங்கள் தாராளமாக பணம் செலவழிக்க வேண்டும். சம்மதம் தானே" என்று கேட்டார் மதபோதகர். ஐஸாக்கு தலையாட்டி பொம்மை போல் தலையாட்டினார். அடுத்தநாள் மதபோதகர் மெர்ஸலினாவின் பங்களாவுக்கு காரிலே வந்திறங்க மெர்ஸலீனாவின் பணிப்பெண்கள் மதபோதகரை வரவேற்றார்கள். வாடிக்கையாளர்களை புத்தம்புதிய ரோஜா மலர்ச்செண்டு கொடுத்து வரவேற்கும் வழக்கத்திற்கேற்ப அதே சம்பிரதாயப்படி மதபோதகருக்கும் பூச்செண்டு வழங்கினார்கள் பணிப்பெண்கள். குளித்து, சிவப்பு ரோஜாச்செண்டை கூந்தலில் செருகி, ஒய்யாரநடையில் வரவேற்பறைக்குள் நுழைந்த மெர்ஸலீனா மதபோதகரைக் கண்ட மாத்திரத்திலேயே கால்கள் பின்ன

நரைத்த தாடி, குழிவிழுந்த கண்கள், ஞானம் புதைந்தமுகம், கையிலே கனமான புத்தகம், கழுத்திலே உருத்திராட்ச மாலையுடன் இருக்கும் இவர் நிச்சயமாக பெண் பித்தனான வாடிக்கையாளர் அல்ல என்று அவளுடைய உள்ளம் சொல்லிற்று.

மெர்ஸலீனாவைக் கண்டதும் மதபோதகர் ஆடித்தான் போனார். அவள் அழகு ஆண்களைக் கிறங்கடிக்கும் அழகு. தன்னைச் சுதாகரித்துக்கொண்டு "மெர்ஸலீனா நான் தான் மதபோதகர். நீ பரத்தை என்று கேள்விப்பட்டேன். இதுவரை எத்தனை ஆண்களுடன் சுகித்திருக்கிறாய்?' என்று இறுகிய தொனியில் கேட்டார் மதபோதகர். மெர்ஸலீனா அதிர்ச்சியிலே விக்கித்துப் போனாள். மோசமான எத்தனையோ ஆண்களை அவள் தன்னுடைய வாழ்க்கையிலே சந்தித்திருக்கிறாள். அவர்கள் யாருமே இப்படி மோசமான வார்த்தையை பாவித்து அவளை வைததில்லை. "நீங்கள் மதபோதகர் என்று சொன்ன அந்த வார்த்தைக்காக உங்களை மன்னித்து விடுகிறேன். எனக்கு போதனை எதுவும் தேவையில்லை. இங்கிருந்து ஓடிவிடுங்கள்" என்று பிசாசித்தாள் மெர்ஸலீனா. அவள் வாழ்க்கையில் முதற்தடவையாக கண் சிவக்கும் அளவிற்கு கோபத்தில் குமுறினாள். கணவன் அவளுடைய அதீத அழகில் பொறாமை கொண்டு, அவளுடைய நடத்தையை சந்தேகித்து கோபித்துக்கொண்டு போனபோதுகூட அவள் விம்மி விம்மி அழுதாளே தவிர கொஞ்சங்கூட கோபம் கொள்ளவில்லை. இன்று சினங் கொண்டவளாகினாள்.

இப்படியொரு பதிலை எதிர்பார்க்காது கொம்பேறிமூக்கன் தீண்டியவரைப்போல் ஆன மதபோதகர், எமகாதகன் அவர் தன்னைச் சுதாகரித்துக்கொண்டு மிகவும் தாழ்ந்த குரலில் பேசினார். 'குழந்தாய், இப்படி நான் ஒரு தடவை கேட்ட குற்றத்திற்காக என்னை கெட்அவுட் என்று சொல்லி விட்டாய். மதபோதகன் நான் உன்னை மன்னித்துவிடலாம். கடவுள் ஒருநாள் இதே கேள்வியை உன்னிடம் துருவித்துருவி கேட்கப்போகிறார். கடவுளுக்கு கெட்அவுட் என்று உன்னால் சொல்ல முடியுமா? யார்மீது கோபித்தாலும் நீ செய்து கொண்டிருக்கும் இந்தக் கொடிய பாவத்திற்கு நரகம் காத்துக் கொண்டிருப்பதை நீ அறியவில்லையா?" என்று மதபோதகர் சொல்லிக் கொண்டே போக "என்னை மன்னித்து விடுங்கள் மதபோதகரே" என்று கரகரத்த குரலில் கூறினாள் மெர்ஸலீனா.

"நான் சாமான்யன். என்னிடம் மன்னிப்பு கேட்பதால் ஒன்றுமே ஆகிவிடாது, குழந்தாய். கடவுளிடம் மன்னிப்புக்கேள், உனக்காக மோட்சம் காத்திருக்கிறது" என்று மதபோதகர் சொல்ல சட்டென்று

மெர்ஸலீனாவின் முகம் மாறியது. அவள் கவலையில் ஆழ்ந்துபோனாள்.

“பெண்ணே, எதைப்பற்றி ஆழமாக யோசிக்கிறாய்?”
“ஒன்றுமில்லை மதபோதகரே, நீங்கள் மோட்சத்தை பற்றிச் சொன்னீர்கள். எனக்கு மோட்சம் கிடைக்குமென்று நான் நம்பவில்லை”
“ஏன் அப்படிச்சொல்கிறாய்? அப்படிச் சொல்லாதே. மன்னிப்புக் கேட்க நீ தயாராக இருந்தால் கடவுள் உன்னை மன்னிக்கத் தயாராக இருக்கிறார்”
“கடவுளிடம் மன்னிப்பு கேட்பதை மாபாவியான நான் அறியாமல் இருக்கிறேன் மதபோதகரே” “முதலில் என்ன செய்ய வேண்டுமென்றால் விபச்சாரத்தை விட்டு விடுவதாக நீ கடவுளிடம் வாக்குறுதியளிக்க வேண்டும். பிறகு கண்ணீர் விட்டழுது நீ செய்த பாவங்கள் அனைத்தையும் கடவுளிடம் ஒப்புக்கொள்ள வேண்டும். கடவுள் மன்னிக்கத் தயாராக இருக்கிறார்” என்றார் மதபோதகர்.

“மதபோதகரே, எதை வேண்டுமானாலும் கேளுங்கள், விபச்சாரத்தை விட்டுவிட முடியாது. நாளைக்கு நான் எப்படிச் சாப்பிடுவேன்? ஆடைகளுக்கான கிரயத்தை எப்படிப் பெற்றுக் கொள்வேன்? பணிப்பெண்களுக்கு எப்படிச் சம்பளம் கொடுப்பேன்? பூந்தோட்டத்தை எப்படிப் பராமரிப்பேன்? ரோஜாச் செடிகளுக்கு தோட்டக்காரனை எப்படி நியமிப்பேன்? எல்லாவற்றையும் பார்த்துக்கொண்டிருக்கிற கடவுளுக்கு இந்த விஷயங்கள் தெரியாமலா இருக்கும்?” என்றாள் மெர்ஸலீனா.
“குழந்தாய், கவள உணவிற்காகவும், தோட்டக்காரனுக்கு சம்பளம் கொடுப்பதற்காகவும், ரோஜாச்செடிகள் அழகு என்று சொல்வதற்காகவும் பணக்காரப் பயல்களோடு சுகிப்பது நல்ல விஷயமென்றா நீ சொல்லவருகிறாய்?’ என்று மதபோதகர் காட்டமாகக் கேட்க ”நீங்கள் சொல்வது வாஸ்தவம்தான்” என்றாள் மெர்ஸலீனா.
“அதாவது சாக்கடையில் நீந்துவதற்கு நினைக்கிறாய். அகப்பை கஞ்சியானாலும் கைகளால் உழைத்துச் சாப்பிடுவது எவ்வளவோ உயர்ந்த விஷயமல்லவா? கிழிந்த ஆடையானாலும் நேர்மையாக கிடைத்தால் அதில் அழகு உண்டல்லவா?” என்றார் மதபோதகர்.
“மதபோதகரே, யோசிப்பதற்கு எனக்கு கொஞ்சம் அவகாசம் தரமுடியுமா?”
“தாராளமாக, எவ்வளவு காலமென்றாலும் பரவாயில்லை. நான் ஒரு புத்தகம் தருகிறேன். நேரம் கிடைக்கும் போதெல்லாம் அந்தப் புத்தகத்தை வாசித்துப்பார். மிகமிக அற்புதமான புத்தகம்” என்று சொல்லிக்கொண்டே புத்தகத்தை மெர்ஸலீனாவின் கையில் ஒப்படைத்தார் மதபோதகர். புத்தகத்தின் தலைப்பு *மோட்சம் செல்லும் பாதை*

மதபோதகர் இரண்டாவது தடவையாக மெர்ஸலீனாவின் பங்களாவிற்கு சென்றபோது அவரை வரவேற்பதற்கு பணிப்பெண்கள் யாரும் இருக்கவில்லை, ரோஜாப் பூச்செண்டு இல்லை, தோட்டக்காரன் இல்லை, மெர்ஸலீனாவின் கழுத்தில் கற்கள் பதித்த ஆபரணங்கள் இல்லை, அலங்காரம் ஜொலிக்கும் கூந்தல் இல்லை. “நான் விபச்சாரத்தை விட்டுவிட்டேன்” என்றாள் மெர்ஸலீனா. அவள் இப்போது வெண்ணிறஆடை அணிந்திருந்தாள். “கடவுள் உன்னை ஆசிர்வதிக்கட்டும்” என்றார் மதபோதகர். “மதபோதகரே, பணிப்பெண்களை வைத்திருந்த எனக்கு பணிப்பெண்ணாக வேலைசெய்து பழக்கமில்லை என்றாலும் கரிபடிந்த முகத்துடன் நான் வேலை செய்யக்கூட தயாராக இருந்தேன். யாராவது மனம் வைத்தால் பூச்செடிகளுக்கு தண்ணீர் ஊற்றும் தோட்டக்காரியாக மாறக்கூட நான் தயாராக இருந்தேன். ஆனாலும் போகின்ற இடங்களில் எல்லாம் என்னுடைய உடலுக்கு விலை பேசுகிறார்களே தவிர சின்னத் துரும்பு தூக்கும் வேலையைத் தரக்கூட யாரும் தயாராக இல்லையே. மதபோதகரே எனக்கு வேறுவழி தெரியவில்லை. இருக்கின்ற நகைகளை எல்லாம் விற்று ஜீவனம் நடத்துகிறேன்” என்றாள் மெர்ஸலீனா தேம்பிக் கொண்டே.

“அழுகிறாயா குழந்தாய்?”

“மதபோதகரே, அதனை நினைத்து நான் அழவில்லை. மோட்சத்தை அடைவதற்காக எதைச் செய்யவும் நான் தயாராக இருக்கிறேன். இவ்வளவு காலமும் செய்து கொண்டிருந்தேனே கொடிய பாவங்கள், அந்தப் பாவங்களை எண்ணித்தான் நான் கண்ணீர் வடிக்கிறேன்”

“மெர்ஸலீனா, நான் ஒன்றுசொல்கிறேன். நீ கோபிக்கக்கூடாது” என்று பீடிகையோடு ஆரம்பித்தார் மதபோதகர்.

“எதுவானாலும் சொல்லுங்கள் மதபோதகரே”

“நீ எவ்வளவு தான் கண்ணீர்வடித்து அழுதாலும் பாவச்சுமைகள் இருக்குமட்டும் உன்னுடைய பாவங்களைக் கண்ணீரால் கழுவி விடமுடியாது”

“மதபோதகரே நீங்கள் சொல்வதன் அர்த்தம் ஒன்றும் எனக்கு புரியவில்லை. நான் என்ன செய்ய வேண்டும் சொல்லுங்கள்”

“குழந்தாய் நான் சொல்வது என்னவென்றால் இங்கே இருக்கின்ற எல்லாமே பாவச்சுமைகள் தான். தொலைக் காட்சி, குளிர்சாதனப் பெட்டி, ஏஸி, ரோஜாச் செடி, சுவரோவியங்கள், அலங்கார மின் விளக்குகள், சோபா செட், வெதுவெதுப்பான நீரைத்தரும் hot shower என்பன. ஏன் சொல்கிறேன் தெரியுமா? அத்தனையும் நீ விபச்சாரம் செய்து சம்பாதித்தவை” என்றார் மதபோதகர். மெர்ஸலீனாவின் கன்னங்கள் வழியாக கண்ணீர் வழிந்தோடியது. “எல்லாமே பாவச்சுமைகள் தான். நாம் உரையாடிக் கொண்டிருக்கிறோமே இந்த இடம், இதுவும் பாவச்சுமை. பணக்காரப் பயல்களுக்கு உடலை விற்றுக் கட்டினாயே பங்களா, இதுவும் பாவச்சுமைதான். பாவச்சுமைகளை சுமந்து கொண்டு மோட்சமடைய முடியுமென்று நீ

நம்பிக் கொண்டிருக்கிறாயா?” என்று கேட்டார் மதபோதகர். மெர்ஸலீனா பதில் சொல்லத் தெரியாமல் தட்டுத்தடுமாறி நின்றாள்.

சட்டத்தரணி ஐசாக்குவை நோக்கி “வேலை முடிந்தது” என்றார். ஐச]ாக்கு பங்களாவை வாங்கிக் கொண்டதற்கு அடையாளமாக தஸ்தாவேஜீக்களில் கையொப்பங்களை வைத்தார். ஐசாக்குவின் சட்டத்தரணி பணக்கற்றையை வாங்கி மெர்ஸலீனாவிடம் நீட்டினார். மெர்ஸலீனா பணக்கற்றையை அப்படியே வாங்கி மதபோதகரிடம் கொடுத்தார். மதபோதகர் பணக்கற்றையை அப்படியே வாங்கி தன்னுடன் வந்திருந்த ஆளிடம் கொடுத்து “சகோதரனே, இந்தப் பணத்தை வீணாக்கிவிடாதே. உன்னுடைய இல்லத்திலே வளரக்கூடிய அனாதைக் குழந்தைகளை ஆளாக்க வேண்டிய பெரும் பொறுப்பை உன்னிடம் தநது விடுகிறேன். மெர்ஸலீனா நன்கொடை தந்தாள் என்று பெரிய போர்டு ஒன்றையும் தொங்கவிடு. அதுதான் நான் உன்னிடம் எதிர்பார்ப்பது” என்றார். அவன் மனநெகிழ்வுடன் மெர்ஸலீனாவுக்கும் மதபோதகருக்கும் நன்றி தெரிவித்துவிட்டு அங்கிருந்து அகன்றான்.

“மதபோதகரே, இவ்வளவு சீக்கிரமாக மெர்ஸலீனாவினை மாற்றிவிடுவீர்களென்று நானென்றால் எதிர்பார்க்கவில்லை” என்றார் ஐஸாக்கு. “நான் கூடத்தான். பெரிய இடத்துப் பெண் போல நடந்து கொண்டாலும் அவள் வடிகட்டிய முட்டாள். அதுவும் இவ்வளவு பெரிய முட்டாளாய் இருப்பாளென்று நானென்றால் கொஞ்சங்கூட நினைக்கவில்லை” என்று பதிலளித்தார் மதபோதகர். “நீங்கள் செய்யும் காரியங்களை பார்த்தால் மெர்ஸலீனா உண்மையிலேயே மோட்சம் சென்றுவிடுவாள் போலிருக்கிறதே” என்றார் ஐஸாக்கு. “அவள் மோட்சம் போவாளோ இல்லையோ எனக்குத் தெரியாது. ஆனால் நாமிருவரும் நரகம் செல்வோம் என்பது மட்டும் நிச்சயம்” என்றார் மதபோதகர்.

“மதபோதகரே, ஏன் என்னை பயமுறுத்துகிறீர்கள்?’
“கவலைப்பட வேண்டாம். மோட்சம் செல்லும் பணக்காரர்களும் இருக்கிறார்கள். உங்களுக்கும் சிலவேளை அந்த அதிர்ஷ்டம் கிட்டலாம். அதிருக்கட்டும், எல்லாம் உங்களுக்குத் திருப்திதானே”
“மதபோதகரே, ஏன் ஏடாகூடமாகப் பேசுகிறீர்கள். என்னுடைய வாழ்க்கையிலே இன்றைய நாளைப் போல் சந்தோஷமான நாளை நான் சந்தித்ததே இல்லை”
“அப்படியென்றால் கொஞ்சம் சிரித்தால் என்ன? என் முகத்தை உம்மென்று வைத்திருக்கிறீர்கள்?” என்றார் மதபோதகர்.
“சிரித்தால் மெர்ஸலீனா என்னைத் தப்பாகப் புரிந்துகொள்வாளோ என்று பயமாக இருக்கிறது” “பழக்கதோஷம் போகாதே. இன்னமும் பழைய நாட்களை மறக்கவில்லை போலிருக்கிறது” என்று சொல்லிவிட்டு சிரிப்பு வெளியே வராமல் சிரித்தார் மதபோதகர். ஐஸாக்கும் மதபோதகரைப் போலவே அடக்கிச் சிரித்தார்.

மதபோதகர் ஏற்பாடு செய்திருந்த இடம் மெர்ஸலீனாவுக்கு நன்றாகப் பிடித்துப்போயிருந்தது. மூங்கில் நதிக்கரை, நதிக்கரையிலெ பலகையால் செய்யப்பட்ட கொட்டில்வீடு, வீட்டைச்சுற்றி வனாந்தரம், பறவைகளின் ஒலி, பூச்சிகளின் ஓசை, அமைதியான இயற்கைச் சூழல். அண்ணாந்து பார்த்தால் நிர்மலமான நீலவானம், ஒற்றைக்கதவு, கதவுக்கருகிலே நிலத்தரையிலே தியானம் செய்ய விரிக்கப்பட்ட பனையோலையால் வேயப்பட்ட பாய், மூங்கிலால் செய்யப்பட்ட கதிரை, இற்றுப்போன மேசை, தண்ணீர் கூஜா, குவளைகள் இரண்டு, பீங்கான் ஒன்று, ஒருசில சமையற் பாத்திரங்கள், காற்றுவரப்போக சிறு ஜன்னல்.

“இந்த இடம் உனக்கு பிடித்திருக்கிறதா?”

“மதபோதகரே, நினைத்து நினைத்து, கரைந்து, கண்ணீர் உகுத்து, கடவுளைப் பிரார்த்திப்பதற்கு உலகத்திலே இதைவிடப் பொருத்தமான இடம் கிடைக்குமென்று நான் நினைக்கவில்லை” “சுகபோகங்களுடன் வாழ்ந்தவள் நீ. இப்படி ஒன்றுமேயில்லாத வெறுமையான வாழ்க்கையை வாழப் போகின்றோமே என்று துக்கப்படவில்லையா?” “கொஞ்சங்கூடத் துக்கமில்லை மதபோதகரே, நீங்கள் என் பாவக்கறையை போக்கினீர்கள், கடவுளைக் காட்டினீர்கள், இப்பொழுது கடவுளையே நினைத்து நினைத்து வாழ்வதற்கு அற்புதமான இடத்தையும் ஏற்பாடு செய்து தந்திருக்கிறீர்கள்” நெகிழ்ச்சியுடனும், உணர்ச்சிப்பெருக்குடனும் வார்த்தைகளை கோர்த்து கோர்த்துச் சொன்னாள் மெர்ஸலீனா.

“இவ்வளவு உபகாரங்கள் செய்த எனக்கு பிரதியுபகாரமாக ஏதாவது செய்யவேண்டுமென்று நீ நினைத்துப் பார்க்கவில்லையா?” என்று கேட்டார் மதபோதகர். “மன்னிக்க வேண்டும் மதபோதகரே, பாவக்கறை படிந்த என் வாழ்க்கையையே நினைத்து அழுந்திக் கொண்டிருந்ததால் உங்களை நினைத்துப் பார்க்கக்கூட மறந்துவிட்டேன். சற்று முன்னர் ஞாபகப்படுத்தியிருந்தாலாவது பங்களா விற்ற பணத்திலிருந்து ஒரு தொகையை தந்திருக்கமுடியும். இப்பொழுது உங்களுக்கு தருவதற்கு என்னிடம் ஏதுமில்லையே” என்று கவலைப்பட்டாள் மெர்ஸலீனா. மதபோதகர் கூரை முகட்டை பார்த்துக்கொண்டே ‘ஏன் உன்னுடைய அழகான உடலை இதற்குள்ளேயே மறந்து விட்டாயா?” என்று கேட்டார். மதபோதகர் சொன்ன வார்த்தைகளின் அர்த்தம் புரிந்தவுடன் “என்ன வார்த்தை சொல்லிவிட்டீர்கள் மதபோதகரே” என்று அதிர்ச்சியுடன் கேட்டாள் மெர்ஸலீனா.

“பதட்டப்படாதே மெர்ஸலீனா, விபச்சாரம் என்று இதனை தப்புக்கணக்கு போடாதே. இது அர்ப்பணித்தல். நான் கடவுளின் ஊழியன். நான் உனக்குச் செய்த உதவிகளுக்கு பிரதியுபகாரமாக

உன்னை எனக்கு அர்ப்பணித்தால் எந்தப்பாவமும் உன்னை வந்து சேராது மெர்ஸலீனா" என்றார் மதபோதகர். மெர்ஸலீனாவால் எதுவுமே பேசமுடியவில்லை. அவளுடைய தொண்டை அடைத்திருந்தது. "இதிலே தயங்குவதற்கோ யோசிப்பதற்கோ ஒன்றுமில்லை மெர்ஸலீனா. கடைசித் தடவை என்று நினைத்துக்கொள். மோட்சத்தை பெற்றுத் தருவதாக நான் வாக்களித்திருக்கிறேன் அல்லவா? அந்த வாக்குறுதியில் எந்த மாற்றமும் கிடையாது. வாக்களிக்கப்பட்ட மோட்சம் நிச்சயம் உனக்காக காத்திருக்கிறது" என்று சொன்ன மதபோதகர் மெர்ஸலீனாவுக்கு நெருக்கமாக வந்து அவளுடைய தோளிலே கையை வைத்தபோது அவளால் தடுக்க முடியவில்லை. கல்லையும் கரைக்கக்கூடிய மதபோதகருக்கு முன்னால் அவள் தோற்றுப் போனாள். மேசையிலே புத்தகம் ஒன்று காற்றிலே படபடத்துக்கொண்டிருந்தது. அது *"மோட்சம் செல்லும் பாதை"* என்ற புத்தகம்.



# மனசு ஒடிந்த நகரம்

எம்.எம்.நௌஷாத்

நபுஜாநகரத்தில் பிறந்தவர்கள் ஒருபோதும் அழமாட்டார்கள். நானும் அங்குதான் பிறந்தேன். நபுஜாவில் பிறந்த காரணத்தால் நபுஜாநகரத்தை நினைத்து அடிக்கடி பெருமைப்பட்டுக் கொள்வேன். நபுஜா வசீகரமாக இருந்தது. வசீகரமாக இருந்ததால் நபுஜாநகரத்தை செல்லமாக எல்லோரும் *வசீகரநகரம்* என்ற பட்டப் பெயரிட்டு அழைத்தார்கள். வசீகர நகரத்திற்கு வரும் எந்த விருந்தாளியும் நபுஜாவின் மயக்கும் எழிலில் கிறங்கிப்போவான். கசக்கப்பட்ட காகிதத் துண்டை பாதையில் எறிவதைக்கூட நபுஜாமக்கள் பாவச் செயலாகக் கருதினார்கள். நபுஜாவில் சட்டங்கள் எவையும் இருக்கவில்லை. மனசுதான் சட்டம். விதிகள் எல்லாம் மனச்சாட்சியின் விதிகள். அதனால் நகரம் பளிச்சென்று இருந்தது, அழகு ஜொலித்தது.

நான் பிறந்த நகரத்தின் கலாதேஜஸ்களை கட்டாயம் சொல்ல வேண்டும். கலாதேஜஸ் எல்லா மனிதர்களின் இதயங்களிலும் வியாபித்து இருந்தது. எந்த விஷயத்தையும் அவர்கள் கலைக் கண்களால் பார்த்தார்கள், கலாரசனையோடு அளவளாவினார்கள், புன்னகையிலும், சொற்களிலும், உண்பதிலும், நுண்உணர்வுகளிலும் அன்பும், வாஞ்சையும், அழகுணர்ச்சியும் அற்புதமாகத் தொனித்தது. நகரவரைஞர்களும், புதைபொருள் ஆராய்ச்சியாளர்களும், உல்லாசப்பயணிகளும், பல்கலைக்கழகப் பேராசிரியர்களும் இந்த விஷயங்களைப் பார்த்து குழம்பினார்கள். ஆகாசக் கட்டடங்கள் இங்கே இருக்கவில்லை, பளிச்பளிச்சென்று வண்ண விளக்குகள் இங்கே ஒளிரவில்லை, மெத்தென்ற கார்கள் ஓடவில்லை. எங்கே நோக்கினும் கலைநயம் மிளிர்ந்து கலைப்பொருட்கள் விரவிக் கிடந்தன. வீதிகளும், ஆற்றங்கரையும் அழகாக இருந்தன, வயல் வரம்புகளும், வீட்டின் கொல்லைப் புறமும் எழிலாக காட்சியளித்தன, கழிப்பறையின் கூரையும், சாக்கடையும் அழகாக இருந்தன. உடைந்த தும்புத்தடியையும், காதறுந்த காலணியையும், தேநீர்க் கோப்பையையும், இற்றுப்போன துணியையும், பட்டுப்போன மரத்தையும் கலைப்பொருளாக மாற்றிவிடும் கைவண்ணம் நபுஜா நகர மாந்தர்களிடம் நிறையவேயிருந்தது. ஏற்கனவே நான் சொன்னவிஷயங்களை அற்பம் என்றுதான் சொல்லுவேன். அதை விட மேவியதாக ஒரு குணம் இருந்தது. நபுஜா நகரமக்கள் ஒருபோதும் அழமாட்டார்கள்.

தங்களுடைய குழந்தை மரணித்தால்கூட நபுஜா நகரவாசிகள் அதனை சாதாரண விஷயமாக எடுத்துக் கொண்டார்கள். அவர்களுடைய கண்களிலிருந்து சொட்டுக் கண்ணீர் சிந்தாது. இந்த விஷயம் விஞ்ஞானிகளைக் குழப்பியது. உலகத்திலுள்ள அனைத்து விஞ்ஞானிகளும் குழம்பிப் போனார்கள். ஆயிரக்கணக்கான நபுஜா நகரவாசிகளின் கலமாதிரிகளைச் சேகரித்து PCR எனப்படும் DNA பரிசோதனை செய்து பார்த்தார்கள். மரபணு விஞ்ஞானிகள் ஒன்று கூடி Gene Mapping எனப்படும் நிறமூர்த்தக் கற்கைகளிலே தீவிரமாக

ஈடுபட்டார்கள். ஈற்றிலே ஏமாற்றமே விஞ்சியது. மற்றைய மனிதர்களிலிருந்து நபுஜாவாசிகளை பிரித்தறியக்கூடிய எந்த முடிவுகளுமின்றி அவர்கள் கூடிக் கலைந்தார்கள்.

உலகிலேயே மிகச்சிறந்த மண்ணியல் நிபுணரான ஸொய்லர் ஒரு கோடைக்காலத்திலே நபுஜா வந்து சேர்ந்தார். நபுஜாநகரத்தின் சிறப்புகளைக் கேள்வியுற்று உல்லாசப்பயணியாக இங்கு வந்த அவருடைய கண்களுக்கு மண்ணியல் நிபுணரென்பதால் முதலில்பட்டது இந்த நகரின் மண்தான். எங்கு பார்த்தாலும் காக்காப் பொன்நிறத்திலே நபுஜா மண் பளபளத்தது. அதிகாலை வேளையிலும் சூரியன் மறையும் வேளையிலும் சூரியக்கதிர்களின் நிறமும் மண்ணின் வர்ணமும் குழைந்து நபுஜாநகரம் தகதகவென ஜொலித்தது. உலகில் எங்குமே இப்படி அற்புதமண் கொண்ட நகரம் இருக்கவில்லையாதலால் அந்த எழிலிலே மயங்கிப் போய் வானவில் ஆகாயத்தில் தோன்றும் நாட்களில் மழைத்துளிகளும் வானவில்லின் வர்ணச் சேர்க்கையும் வானத்தின் வர்ணமும் இழைந்து இதமான நிறக் கலவையாகி கற்பனைத்திறன் மிக்க ஓவியன் வரைந்த அற்புதமான ஓவியம் போல் நபுஜாநகரம் தோற்றமளிக்கும். மாலையொன்றில் கடைத் தெருவுக்கு வந்த ஸொய்லர் அந்த அழகிய வசீகரத்தை பார்த்த மாத்திரத்திலேயே நபுஜாவிலேயே தங்கி விடுவதென்று முடிவெடுத்தார்.

மண்ணியல் நிபுணரான ஸொய்லர் நபுஜாநகர மண்மாதிரிகளில் அபூர்வமான பொன்துகள்கள் இருப்பதைக் கண்டறிந்தார். தென்னந்தோப்பு, ஆற்றங்கரை, சிறுவர்கள் விளையாடும் மணல்வெளி எக்ஷோரா மலர்த்தோட்டம், மகளிர் நீராடச் செல்லும் ஒற்றையடிப்பாதை என்று ஸொய்லர் மண் மாதிரிகள் சேகரித்த இடங்களிலெல்லாம் பொன்துகள்கள் இருந்தன. நபுஜாநகர மக்களின் அதீத கலாரசனைக்கும் அவர்கள் கண்ணீர் வடிக்காமல் இருப்பதற்கும், துயருராமல் வாழ்வதற்கும் இந்த பொன்துகள்களுக்குமிடையே ஏதோ தொடர்பிருக்க வேண்டுமென்று திடமாக நம்பி அந்த மண்மாதிரிகளை பெல்ஜியத்திலுள்ள பிரசித்திபெற்ற மண்ணியல் ஆராய்ச்சி நிறுவகத்திற்கு அனுப்பிவைத்த ஸொய்லர் பெல்ஜியம் நிறுவகத்திலிருந்து ஆராய்ச்சி முடிவுகளைத் தாங்கிய கடிதவுறை வந்ததும் வியப்புக்குள்ளானார். வழமையாக பழுப்புநிறக் கடதாசியொன்றிலே ஏதோ சுரத்தில்லாமல் ஆராயச்சி முடிவை எழுதியிருப்பார்கள். இங்கே காகித உறையின் மேலே வனப்புமிக்க ஓர்கிட் மலரொன்று வரையப்பட்டு உள்ளே மெஜண்டா வர்ணக் கடதாசியிலே ஆராய்ச்சி முடிபுகள் தங்க நிறத்திலே இருந்தன. இதுதான் நபுஜாநகர மண்ணின் மகிமை என்று புரிந்துகொண்டார் ஸொய்லர்.

என்னிடம் மஞ்சள் நிற பைசிக்கிள் இருந்தது. அதன்மீது எனக்கு அலாதிப்பிரியம். சின்ன வயதிலிருந்தே அந்த பைசிக்கிள் தான் என் நண்பன். மாலைப் பொழுதொன்றிலே வழமையைப் போல பைசிக்களோடு பயணமானேன் நான். பாதையோரமாக கற்பாறை இருந்தது. அந்தக் கற்பாறைமீது அன்று ஓரிள மங்கை அமர்ந்திருந்தாள். இரண்டு மணித்தியாலயம் கழித்து திரும்பி வந்தேன். அப்போதும் அவள் கற்பாறையில் அமர்ந்திருந்தாள். எதற்காக இவ்வளவு நேரம் இந்தக் கற்பாறை மீது உட்கார்ந்திருக்கிறாள் என்ற கேள்வி மனதில் எழுந்தாலும் நமக்கேன் வீண்வம்பு என்று அவளைக் கடந்து போய்விட நினைத்த நான் பைசிக்கிள் சப்தம் கேட்டு அவள் திரும்பிய ஒருகணம் அவளுடைய முகத்தைப் பார்த்து விட்டேன். அவ்வளவுதான், அவளுடைய அழகிலே லயித்துப் போய்விட்டது மனம், காந்தம்போல் அவள் என்னை ஆகர்ஷித்து விட்டாள். “இள நங்கையே, எதற்காக இவ்வளவு நேரம் இங்கே காத்திருக்கிறாய்?” என்று கேட்டேன் நான். அவள் என்னை ஏசுவதற்காகவோ என்னவோ அந்தப் பாவனையில் வாயை நெழிப்புக் காட்டி தலையை உயர்த்தி என்னைப் பார்த்தவள் என்னைப் பார்த்த மறுகணமே சாந்தமானவளாக “நீங்கள் யார்?” என்றுகேட்டாள். நான் என்னை அறிமுகப்படுத்தினேன்.

அவள் கண்ஜாடையால் நிலத்தைக் காட்டினாள். அவள் காட்டிய புள்ளியிலே ஓர் அணில்குஞ்சு விழுந்து மல்லாக்காகக் கிடந்தது. “அணில் குஞ்சு” என்றேன் நான். “ஆம், அணில் குஞ்சுதான். இந்தக் குஞ்சு மரத்திலிருந்து விழுந்திருக்க வேண்டும். அணில்குஞ்சின் தாய் வந்து அணில் குஞ்சைத் தூக்கிச் செல்லும்வரை பார்த்துக் கொண்டிருக்கிறேன்” என்றாள் அவள்.
“உங்கள் பெயரென்ன?”
“நாமிகா”
“நாமிகா,இவ்வவளவு சிரமம் ஏன் எடுத்துக் கொள்ளுகிறீர்கள்? தாயணில் வந்து அணில்குஞ்சை எப்படியும் எடுத்துச் செல்லத்தான் போகிறது. அப்படியில்லை என்று வைத்துக்கொள்வோம். நீங்களாவது அணில்குஞ்சை கூட்டிலே வைத்திருக்கலாம் தானே” என்றேன் நான்.
“அணில்கூடு எங்கே இருக்கிறதென்று எனக்குத் தெரியாது. மரத்தில் ஏறவும் தெரியாது. உங்களுக்கு மரம் ஏறத்தெரியுமா?” என்று மரத்தை அண்ணாந்து பார்த்துக்கொண்டே கேட்டாள் நாமிகா. அவசர அவசரமாக சிறிதளவு வெட்கத்தோடு “இல்லை” என்று தலையசைத்த நான் அணில் குஞ்சிற்கருகே சென்று அதனைத் தூக்கப் போனேன். “அதனைத் தொடாதீர்கள்” என்று அலறினாள் நாமிகா. நான் வியப்புடன் ஏன் அப்படி அலறினாய் என்ற கேள்விக் குறியோடு அவளுடைய முகத்தைப் பார்க்க “உங்கள் கையிலுள்ள கிருமிகள் அணில்மீது படர்ந்து அணில்குஞ்சு செத்துவிடும்” என்று விளக்கமளித்தாள் நாமிகா.

“அப்படியானால் அணில் குஞ்சின்தாய் வருமட்டும் இங்கேயே இருக்கப்போகிறீர்களா?”
“ஆம், அதிலென்ன சந்தேகமும், கிண்டலும்? நாய்கள் சுற்றுகின்றன, பூனைகள் சுற்றுகின்றன. நான் விட்டுவிட்டுச் சென்றேனென்றால் நாய்கள் அணிற்குஞ்சைக் குதறிவிடும்” என்றாள் நாமிகா. அவள் சொல்லிக் கொண்டிருக்கும் போதே கன்னங்கரிய நாயொன்று அவளைப்பார்த்து முறைத்தவாறே அவளைக் கடந்து சென்றது.

இந்தளவு இரக்க சிந்தையுள்ள பிறவியை என் வாழ்க்கையில் ஒருபோதும் நான் சந்தித்ததில்லை. என் மனசு அவளையே சுற்றிச்சுற்றி வந்தது. அடுத்தநாள் அதே பாதையால் செல்லும்போது கற்பாறையைப் பார்க்க அது வெறுமையாக இருந்தது. மனசிற்குள் ஏமாற்றம் என்றாலும் ஒவ்வொரு நாளும் கற்பாறையைப் பார்ப்பேன்; அவ்விடத்திற் தரித்து நின்று நாமிகா வருகிறாளா என்று சுற்றுமுற்றும் பார்ப்பேன். ஒரு ஞாயிற்றுக்கிழமை நாமிகா கற்பாறையில் அமர்ந்திருக்க நான் அடைந்த மகிழ்ச்சிக்கு அளவே இல்லை. அவளருகே சென்ற நான் “என்ன இன்றும் அணில் குஞ்சா?” என்று கேட்டேன். அவள் ‘க்ளுக்’கென்று சிரித்துவிட்டாள். நானும் சிரித்தேன். “இந்த மண்ணும் பொன்னிறம், உன் மேனியும் பொன்னிறம், உன சிரிப்பும் பொன்னிறம், உன் எழிலும் பொன்னிறம்” என்றேன் நான். “ஐஸ், உடம்பெல்லாம் குளிர்கிறது” என்றாள் நாமிகா. “இல்லை” என்றேன் நான். “என்னுடன் பேசுவதாயிருந்தால் உண்மை பேசுங்கள். நான் பொய் பேசுபவர்களை விரும்புவதில்லை” என்றாள் அவள் வெடுக்கென்று. அதற்குப் பிறகு அவளுடன் பேசும்போதெல்லாம் நான் சொற்களை அளந்துபேசினேன். அவள் என்னை நம்ப ஆரம்பித்தாள். அவளை நான் நம்பினேன், நேசித்தேன். எங்களுக்கிடையில் அந்நியோன்யமான அன்புப் பிணைப்பு மலர்ந்து வளர்ந்தது.

திடீரென்று நபுஜாநகர வீதிகளில் வேற்றுக் கிரகவாசிகளின் இரசாயனத் தாக்குதலை எதிர்கொள்ள வந்தவர்கள் போல் முகமூடி அணிந்த சிப்பாய்கள் தோன்றினார்கள். நபுஜா நகரத்திற்கு அனுப்பப்பட்ட சிப்பாய்களுக்கு *சிப்பாய்களே, நபுஜாநகர எல்லைக்குள் நுழையமுன்பு நீங்கள் முகமூடிகளை அணிந்து கொள்ளுங்கள். அப்படி நீங்கள் செய்யத் தவறினால் நபுஜாமண்ணின் நறுமணத்தை நீங்கள் நுகர்வீர்கள். அந்நறுமணம் உங்கள் நாசியூடாகச் சென்று நீங்கள் அதனால் ஆகர்ஷிக்கப்படுவீர்கள். உங்களுக்கு கலாரசனை உண்டாகிவிடும். நீங்கள் உங்கள் வீரத்தை இழந்துவிடுவீர்கள், துப்பாக்கிகளை வீசி எறிந்து விடுவீர்கள். ஆகவே கவனம்!* என்று வாசகங்கள் எழுதப்பட்டிருந்த துண்டுப்பிரசுரத்தை அரசாங்கம் கொடுத்தது. வெள்ளிக்கிழமை அதிகாலையில் இராணுவ ட்ரக்வண்டிகளின் இரைச்சல் கேட்கவே நகரவாசிகள் ட்ரக்வண்டிகளை

இதுவரை கண்டிருக்கவில்லையாதலால் ட்ரக் வண்டிகள் வந்த திசையை நோக்கி ஓடினார்கள்.

கண்காணும் இடங்களில் எல்லாம் பசுமையான வயல்கள் இருந்ததால் எங்களூர் எப்போதும் பச்சையாகவே இருக்கும். பச்சை வயல்களைச் சுற்றி உள்ளங்களைச் சுண்டும் இதமான தென்றல் வீசிக்கொண்டிருக்கும் ஒரு நாளில்தான் சிப்பாய்கள் வந்தார்கள். நகரவாசிகள் பார்த்துக் கொண்டிருக்கும்போதே ட்ரக் வண்டிகள் வயல்களை துவம்சம் செய்தன. ட்ரக் வண்டிகளில் வந்த சிப்பாய்கள் நகரவாசிகளின் முகங்களையே உற்றுப் பார்த்திட்டாலும் ஒருவருடைய முகத்திலும் துக்கம் புலப்படவோ யாரும் கண்ணீர் வடித்து அழவோ, இல்லை இந்த நாசவேலையை நிறுத்துங்கள் என்றும் யாரும் சொல்லவோ இல்லை. படப்பிடிப்பொன்றை வேடிக்கை பார்ப்பதைப் போல் சிப்பாய்களின் சில்மிஷத்தைப் நகரவாசிகள் பார்த்துக்கொண்டிருந்ததால் சினமுற்ற நபுஜா நகரத்தின்மீது கொண்ட காழ்புணர்ச்சி கொண்ட சிப்பாய்கள் வந்த வேகத்திலேயே திரும்பிச் சென்ற கதையும் நடந்தது.

இவ்வாறு சுவர்க்கத்தீவிலே கோபம் வராத, கண்ணீர் சிந்தாத, கலாரசனைமிக்க குணவியல்புகள் கொண்ட நகரமாக நபுஜா திகழ்ந்தது. எங்கள் நகரமக்கள் வேற்றுமொழி பேசவும் ஏனைய நகரமக்களின் பாஷை கரடுமுரடாக தகரடப்பா போல் இருக்க நபுஜா மொழி இனிமையானதாக இருக்கவுமான நகரமிருப்பது அரசாங்கக் கட்சியினருக்கு பிடிக்கவில்லையாதலால் சிப்பாய்கள் நகர மத்தியிலே கூடாரமிட்டு வணக்கஸ்தலம், பள்ளிக்கூடம், சந்தை இருந்த சனசந்தடி மிக்க இடங்களில் பெண்களின் ஆடைகளை இழுத்தும் வணக்கஸ்தலத்திற்கு செல்பவர்களைச் சீண்டியும் ஆட்களின் மேலே சாணத்தையும், குப்பைகளையும் எறிந்து பார்த்தாலும் நபுஜா நகரமக்களின் மனவுறுதி குலையவில்லை.

நபுஜா நகரத்தை நிர்மூலமாக்க வேண்டும் என்று சர்க்கார் கண்டிப்பான உத்தரவு போட்டிருந்த காரணத்தால் சகல மூலோபாயங்களையும் பிரயோகித்த சிப்பாய்கள் அடுத்த கட்டமாக பாதையிலே செல்லக்கூடிய விடலைப் பையன்களைப் பிடித்துப்போய் துர்நடத்தையில் ஈடுபடுத்தியதோடு கற்றோரை தூஷணச் சொற்களால் வசைபாடினார்கள், சமயக்குரவர்களின் ஆடைகளைக் கிழித்தெறிந்து கேவலமாக வைதார்கள். ஆனாலும் நபுஜாநகரவாசிகள் எதுவுமே நடக்காதைப் போல் நகரவீதிகளிலே நடமாடினார்கள், அன்றாடக்

கருமங்களிலே ஈடுபட்டார்கள், சினிமா பார்த்தார்கள், நடனசாலைகளிலே களியாட்டங்களில் மூழ்கிக் கிடந்தார்கள்.

இப்படியிருக்கையில் கல்லூரி மாணவிகளைப் போல் தூய வெண்ணிற ஆடை அணிந்த ஆகாயத்திலிருந்து சந்திரன் இறங்கியதைப்போல் மிகவும் அழகாக இருந்த வாகனங்கள் நபுஜா நகருக்குள் நுழைந்தன. பளிச்சென்று மின்னிமின்னி அவை நபுஜாநகர வீதிகளில் ஓடித் திரிவது கண்கொள்ளாக் காட்சியாக இருந்தது. இந்த வாகனங்களின் விஷேசம் என்னவென்றால் இலக்கத்தகடுகள் இருக்காத அவை ராத்திரிகளில் மாத்திரமே ஓடியதுடன் அது எந்த இடத்திலே நிற்குமென்று யாருக்குமே தெரியாது. அது எங்கே நிற்கிறதோ அங்கே பெரிய பூட்ஸுகளோடு ஒரு சிப்பாய் தடதடவென்று இறங்குவான். அவன் கன்னங்கரிய பெரிய முறுக்குமீசையோடு இருப்பான். கண்களிலே நெருப்புப்பொறி பறக்கும். தடதடவென்று இறங்கும் அவன் அதே வேகத்தோடு வீட்டுக்கதவை தடதடவென்று தட்டுவான். கதவைத் திறக்காவிட்டால் பூட்ஸ்களால் கதவை கடிதாக உதைத்து உடைக்கும் பொறுமையேயில்லாத பயங்கரப் பேர்வழி. கதவு திறந்ததும் சிப்பாய் இன்னார் இருக்கிறானா என்று பெயரைச் சொல்லி வீட்டில் உள்ளவர்கள் நடுநடுங்க காட்டுக் கத்தலாகக் கேட்பான். சிலர் நின்ற இடத்திலேயே சிறுநீரும் கழிப்பார்கள். ஏனெனில் அவனுடைய கையில் துப்பாக்கி எனப்படும் நெருப்புக்குழல் இருக்கும். எல்லோரும் ஒருமித்த குரலில் “இல்லை” என்று சொல்லுவார்கள். பயங்கரப் பேர்வழி அப்படியே விட்டுவிட மாட்டான். முகத்திலே டோர்ச்வெளிச்சத்தைப் பாய்ச்சுவான். கண்கள் கூசும். பயங்கரப் பேர்வழி. அவன் எல்லாம் தெரிந்தவன். வீட்டின் நிலவறையிலிருந்தோ, கூரைக்கு கீழேயிருந்தோ, குளியலறையின் மூலையிருந்தோ ஒருபையனையோ ஒருயுவதியையோ அவன் பிடித்திழுத்து வருவான்.

அடுத்த நாளில் ஆண் தேடும் படலம் ஆரம்பமாகும். பெண்ணாயிருந்தால் பெண் தேடும் படலம். தாயோ தந்தையோ அருகிலுள்ள பொலிஸ் நிலையத்திற்குப் செல்வார்கள். இன்னார் இங்கே இருக்கிறாரா? என்று கேட்பார்கள். பொலிஸ்காரன் கையை விரிப்பான். அருகிலுள்ள இராணுவ முகாமிற்குச் செல்லுவார்கள். அதே கேள்வி. அதே பதில். இப்படியே நபுஜா நகரிலுள்ள எல்லா இடங்களுக்கும் செல்ல வேண்டி வரும். பதில் ஒரே மாதிரியாகத்தான் இருக்கும். இரண்டு மூன்று நாட்களில் இன்னாரின் சடலம் ஆற்றங்கரையிலோ, வீதியோரத்திலே, மயானத்திலோ கிடப்பதாக யாராவது சொல்லுவார்கள். தாயும் தகப்பனும் ஓடோடிப் போய் பார்த்தால் இன்னார் என்று சொல்லப்பட்டவர் தங்கள் மகன் அல்லது மகள் அல்லது கணவன் என்று அறிந்துகொள்வார்கள்.

அதிர்ஷ்டசாலியான தாய், தகப்பனுக்குத்தான் இந்த நிலைமை. துரதிர்ஷ்டசாலி தாயும், தகப்பனும் எவ்வளவுதான் தேடினாலும் போனவன் அல்லது போனவள் கிடைக்கமாட்டார்; சடலமாகவேனும் கிடைக்கமாட்டார். சிலர் மாதக்கணக்கிலும், சிலர் வருடக்கணக்கிலும் சிலர் வாழ்நாள் முழுவதும் தேடிக் கொண்டிருப்பார்கள். காணாமற்போகும் வினோதங்கள் காரணமாக நகரமக்கள் கதறியழுவார்கள் என்று சிப்பாய்கள் எதிர்பார்த்தாலும் அது நடக்கவில்லை. நகரம் அப்படியே வெறிச்சோடிப் போய்விடும் என்றும் எதிர்பார்த்தார்கள். அதுவும் நடக்கவில்லை. இப்படிக் காணாமல் போனவர்களின் மனைவிமார்கள் விதவையாகிப்போன போதிலும் அவர்கள் நடமாடினார்கள்.

நபுஜா நகரத்திற்கென்றே வினோதமான சட்டங்கள் கொண்டுவரப்பட்டன. முதலாவது சட்டம் மாலை ஆறுமணிக்குப் பின் யாரும் வீட்டைவிட்டு வெளியிறங்கக் கூடாது. அவ்வாறு வெளியிறங்கிய காது கேளாத பைத்தியக்காரன் சுட்டுத் தள்ளப்பட்டான். இரண்டாவது சட்டம் ஒரு பகுதியிலிருந்து இன்னொரு இடத்திற்குச் செல்வதாயின் போலிசாரிடமிருந்து காரணத்தைச் சொல்லி முன் அனுமதி பெறவேண்டும். கிராமசேவகர் கடிதம் கொடுக்க வேண்டும். இப்படி ஒன்றிரண்டல்ல 178 வினோதமான சட்டங்கள் நபுஜாநகர வாசிகளுக்ென்று இருந்தன. மனிதர்களுக்கு மாத்திரமன்றி நபுஜாநகர ஆடுமாடுகளுக்கும் சட்டங்கள் ஆக்கப்பட்டன. எப்படி சிறுநீர் கழிக்கவேண்டும், எப்படி முக்காரம் போடவேண்டும், எப்படி அசைபோட வேண்டும் போன்ற சட்டங்கள். இந்த சட்டங்களை இயற்றியவர்கள் அரசாங்கத்திலுள்ள பாமரமக்கள் என்று நினைத்துக் கொண்டால் அது முற்றிலும் தவறாகும். பாராளுமன்றத்திலுள்ள புத்திஜீவிகளும், விஞ்ஞானிகளும், சட்டத்தரணிகளும் இருகைகளையும் உயர்த்தி இந்தச் சட்டங்களை ஆதரித்தார்கள்.

முன்பெல்லாம் நான் நாமிக்காவை நாள் தவறாது சந்தித்து வந்தேன். எங்களுக்குள் அன்பு பெருகியது. நாமிகாவை ஒருநாளேனும் சந்திக்காமல் இருக்க முடியாது என்ற நிலைமை எப்போது ஏற்பட்டதோ அன்றே இந்தச் சட்டங்களும் வந்துவிட்டன. நாமிகா நகரத்தின் வடமுனையிலும் நான் தென்முனையிலும் சீவித்த காரணத்தால் அவளை இப்போது சந்திப்பதும் அபூர்வமான காரியமாகி, நடமாடுவதும் அபாயகரமான சங்கதியாகி காலை, பகல், இரவு எவ்வேளையில் நடமாடினாலும் காணாமல் போகும் அபாயம் இருந்தது. பார்க்குமிடங்களிலெல்லாம் சிப்பாய்களின் தலைக்கறுப்பும் வெள்ளை வேன்களின் நடமாட்டமுமே இருந்தன. ஓர் அதிகாலையில் நபுஜா நகர தொலைக் காட்சிக் கோபுரத்தின் உச்சியிலிருந்து ஒலிபெருக்கி அலறியது. கோபுர உச்சியிலே சிப்பாய் நின்றான்.

*“இத்தால் நபுஜா நகரவாசிகளுக்கு விடுக்கும் அறிவித்தல் என்னவென்றால் நகரவாசிகள் அனைவரும் மைதானத்திலே கூடவேண்டும். ஆண்களும் கூட வேண்டும், பெண்களும் கூட வேண்டும், சிறுவர்களும், கிழவர்களும் கூட வேண்டும், அதிகாரிகள், பேராசிரியர்கள், மருத்துவர்கள், அனைவரும் கூட வேண்டும்”* என்று அடிக்கடி அறிவித்துக் கொண்டிருந்தான் சிப்பாய்.

இவ்வினோதமான சங்கதியை கேள்விப்பட்டதேயில்லை என்பதால் நபுஜாநகரவாசிகளான நாங்கள் ஆச்சரியமுற்றோம். எங்கள் பாட்டன், முப்பாட்டன்களும் ஆச்சரியப்பட்டார்கள். சிப்பாயின் உத்தரவை மீறமுடியாது என்பதால் நாங்கள் மைதானத்தில் ஒன்று கூடினோம். சிப்பாய் சுட்டெரிக்கும் வெயிலிலே எங்களை முழந்தாளிட்டு இருக்கச் சொன்னான். தாகத்திற்கு தண்ணீர் கூட இல்லாமல் .இரண்டு மூன்று மணித்தியாலங்கள் நாங்கள் வெயிலிலே இருந்தோம். அப்போதுதான் நிகழ்ந்தது ஓர் எதிர்பாராத சந்திப்பு. இரண்டு மூன்று வரிசைகள் தள்ளி என்னுடைய நாமிகாவும் முழந்தாளிட்டு அமர்ந்திருந்திருந்தாள். பசி, தாகம் எல்லாவற்றையும் நான் முற்றாக மறந்தேன். அவ்வேளையில் நான் அடைந்த மகிழ்ச்சியின் பரிமாணத்தை மட்டிட்டுச் சொல்ல வார்த்தைகள் இல்லை.

மெல்ல நகர்ந்து அவளருகே போனேன். “ஏன் என்னுடன் பேசாமல் இருக்கின்றீர்கள்?” என்று சிணுங்கிக் கொண்டே கேட்டாள் நாமிகா. “கனவிலும், நனவிலும் , இரவிலும், பகலிலும், இளவேனிற் காலத்திலும் , முதுவேனிற் காலத்திலும் நான் உங்களுடன் பேசிக்கொண்டுதான் இருக்கிறேன்” என்றேன் நான்.
“அழகாகப் பேசுகிறீர்கள்”
“அந்தப் பேச்சில் தானே நீங்கள் மயங்கினீர்கள்”
“போங்கள்” என்று விஸ்மஅழகுடன் சிரித்தாள் நாமிகா. கன்னங்களில் குழிவிழுந்து அன்றைய நாளில் இருந்த அதே வசீகரம் மேலும் ஒளிவெள்ளத்துடன் பிரகாசித்து மிளர்ந்தது. “என்னை எப்போது திருமணம் முடிக்கப்போகிறீர்கள்?” என்று கேட்டாள் நாமிகா. “இப்போதே” என்று சொன்ன நான் அவள் எதிர்பாராவிதமாக அவளுடைய விரலில் மோதிரத்தை அணிவித்தேன். நாமிகா திக்குமுக்காடி விட்டாள்.

“நாமிகா நான் செய்தது தவறென்றால் மன்னித்துவிடு, இந்த மோதிரத்தை நான் எப்போதோ வாங்கி உன்னைச் சந்திப்பதற்காகத் தான் காத்திருந்தேன். இன்றுதான் அந்தச் சந்தர்ப்பம் கிடைத்தது” என்றேன் நான் தயக்கத்துடன். நாமிகா மோதிரத்தைத் திருப்பித் திருப்பிப் பார்த்தாள். “மோதிரத்திலே இரண்டு மல்லிகைப் பூக்கள், நடுவிலே ஒரு நட்சத்திரம். அழகாக இருக்கிறது. எப்படி இந்த அற்புதமான கற்பனை உங்களுக்கு வந்தது?” என்று கேட்டாள் நாமிகா.

“அது கற்பனையல்ல. உன் விழிகளை நான் காணும்போதெல்லாம் அவை மல்லிகைப் பூக்களாக எனக்குத் தோன்றும். நிலைக்கண்ணா டியில் உங்கள் முகத்தைப் பாருங்கள். நெற்றியிலே எப்போதும் நட்சத்திரம் மின்னிக் கொண்டிருக்கும். அதுதான் அந்த நட்சத்திரம்” என்றேன் நான். நாமிகாவின் முகத்தில் விகசிப்பு பளீரென்றது.

“அங்கே என்ன குசுகுசுப்பு?” என்று அதட்டினான் சிப்பாய். நான் வாயை மூடிக்கொண்டேன். அவளும் மூடிக்கொண்டாள். அந்த மைதானத்திலே ஜொலித்த அவளுடைய எழில் என்னிதயத்திலே அப்படியே பதிந்து விட்டது. வெயில் காரணமாக வடிந்த வியர்வை வைரங்களாக பளிச்சிட்டு மின்னின. அவள் பேசினாள். அந்தக் கணத்திலிருந்து அவள் என்னுடன் பேசிக் கொண்டேயிருந்தாள். இப்போது வசீகரநகரம் இன்னும் அழகாக எனக்குள் தோற்றமளித்தது. அண்டங்காக்கைகள் கவிதை பாடின, கழுதைகளின் கத்தல் என் காதுகளுக்கு இசையாக இருந்தது. அவளோடு வாழ்க்கை நடத்த ஆரம்பித்தேன்; அவளோடு கற்பனையில் வாழ்ந்தேன். நப்ஜா நகரத்தை இரண்டு மூன்று துண்டுகளாகப் பிரித்து இந்தத் துண்டிலிருந்து அடுத்த துண்டிற்குள் யாரும் போக முடியாது என்று சிப்பாய்கள் சட்டம் போட்டதால் இந்தச் சந்திப்புக்குப் பிறகு நான் நாமிகாவைச் சந்திக்கவே இல்லை. நாமிகா அடுத்த துண்டில் குடியிருந்தாள்.

நான் உயர்தர விஞ்ஞானப்பிரிவில் கற்பதற்காக அண்மையிலுள்ள நகரப் பாடசாலைக்குப் போனேன். அந்த வகுப்பில் ஸெய்ரூனி என்பவளும் இருந்தாள். அவளுடைய தந்தை இராணுவக் கட்டளை அதிகாரியாக நபுஜாநகரத்திற்கு புதிதாக நியமிக்கப்பட்டிருந்தார். சிப்பாய்களுக்கென்று வேறு பள்ளிக்கூடம் இல்லையாதலால் ஸெய்ரூனியும் எங்களோடு வந்து சேர்ந்தாள். ஸெய்ரூனியின் தந்தை பிடி, அடி, இடி, கொல் என்ற போக்கில் எல்லோருடனும் நடந்துகொண்ட கடும் போக்காளர் என்பதால் அவருடைய முரட்டுத்தனமான போக்கல் நபுஜாநகரம் ஏற்கனவே ஆடிப்போயிருந்தது. நபுஜா நகர நறுமணத்தை நுகரக்கூடாதென்பதற்காக அவர் எப்போதும் முகமூடி அணிந்து காணப்பட்டார். தகப்பன் அப்படியென்றால் மகளும் அப்படித்தான். அவளுக்கும் முகமூடியிருந்தது. கர்வமாகவும், டாம்பீகமாகவும் அவள் வகுப்பு மாணவர்களுடன் நடந்து கொண்டாள், தடதடவென்று பூமியதிர நடக்கும் அவள் யாருடனும் பேச்சுக் கொடுக்கமாட்டாள். முகமூடி வேறு ட்ராகுலாவின் முகம்போல் பயங்கரமாக இருந்தது. அதனால் அவள் வகுப்பிலும், பாடசாலையிலும் நிறைய பட்டப் பெயர்களைச் சம்பாதித்துக் கொண்டாள். *“காண்டாமிருகம்” “அண்டங்காக்காய்” “முரடி” “கறுப்புப் புகையிரதம்” “பெண் பிசாசு” “பூதம்”* இப்படிப்பல. கரும்பலகையிலும், பாடசாலை மதில்களிலும், ஸ்நானஅறையிலும்,

கழிப்பறையிலும். அவள் நாக்கை நீளமாகத் தொங்கப் போட்டவாறு காணப்பட்டாள்.

அன்று ஜனவரி முதலாந்திகதி என் வாழ்க்கையில் மறக்கமுடியாத நாள். நான் பாடசாலைக்கு வழமையாக ஏழுமணிக்கெல்லாம் வந்துவிடுவேன். அன்றைய தினமும் அப்படித்தான் ஆரம்பமானது. நான் வகுப்பறையைச் சுத்தம் செய்துகொண்டிருக்கும் போது ஸெய்ரூனி முகமூடியுடன் வகுப்பறைக்குள் நுழைந்தாள். “புத்தாண்டு வாழ்த்துக்கள்” என்றேன் நான். வகுப்பில் யாருடனும் பேசாத அவள் என்னுடன் மாத்திரம் ஓரிரு வார்த்தைகள் பேசுவாள். அந்த நம்பிக்கையில் தான் வாழ்த்துக்கள் சொன்னேன். அவள் பதில் சொல்லாமல் மேசைமீது இரண்டு கைகளையும் ஓங்கிக்குத்தினாள். மேசை இரண்டாக வெடித்துச் சிதறியதோ என்று நான் பயந்து விதிர்விதிர்த்துப் போய் பேச நாவராமல் நான் அதிர்ச்சியடைந்து போய் நிற்க அவள் மேசைமீது ஏழெட்டுப் புகைப்படங்களைத் தூக்கிப் போட்டாள். அத்தனையும் பெண்களின் அரை நிர்வாணப்படங்கள். யாரோ கனகச்சிதமாக ஸெய்ரூனியின் தலையை அப்படங்களில் பொருத்தியிருந்தார்கள். பார்ப்பவர் உள்ளத்தில் அரைநிர்வாணமாக இருப்பவள் ஸெய்ரூனி தான் என்ற தோற்றப்பாட்டை ஏற்படுத்தும்வகையில் அவை தத்ரூபமாக அமைக்கப்பட்டிருந்தன. ஒவ்வொரு புகைப்படத்திற்கு பின்னாலும் “அடி சிறுக்கியே, நான் உன்னைக் காதலிக்கிறேன்” என்ற வாசகங்கள் வேறு.

வகுப்புமாணவர்கள் அனைவரும் காலைப் பிரார்த்தனையை முடித்து ஆசனங்களில் அமர்ந்ததும் விபரீதம் ஆரம்பித்தது. பத்துப்பதினைந்து சிப்பாய்கள் வகுப்பிற்குள் ஆயுதங்களுடன் நுழைய, கறுப்பான, மீசை வளர்த்த, முரட்டு சிப்பாய் புகைப்படங்களைத் தலைக்கு மேலே உயர்த்தி “யார் இவைகளை அனுப்பியது?” என்று வகுப்பறைச் சுவர்களும், கூரையும் அதிர கர்ணகடூரமாக கேட்டான். எல்லோரும் மௌனமாக இருக்கவே சிப்பாய் ஒவ்வொரு மாணவராக மேசை மேலே ஏற்றி துப்பாக்கிச் சனியனை முகங்களுக்கு நேரே நீட்டினான். “யாரடா, இதை அனுப்பிய காண்டாமிருகம்?” என்று சிப்பாய் மீண்டும் கேட்க ஒவ்வொருவரும் “தெரியாது” என்ற பதிலையே நடுநடுங்கிச் சொன்னார்கள். சிலரின் வாய்களிலிருந்து வார்த்தைகள் வராமல் காற்று வெளிப்பட்டது. ஸெய்ரூனி சிப்பாயிடமிருந்து துப்பாக்கியைப் பிடுங்கினாள். மாணவர்களை நோக்கி துப்பாக்கியை நீட்டிய அவள் “ம்.... உடைகளைக் கழற்றுங்கள்” என்று கோபாவேசத்துடன் கூச்சலிட அவளுடைய காட்டுக்கத்தல் பாடசாலை முழுவதும் எதிரொலித்தது.

மாணவர்கள் அவசர அவசரமாக ஆடைகளைக் களைய சில நிமிடங்களில் எல்லோரும் உள்ளாடையுடன் அரை நிர்வாணமாக நின்றார்கள். சிலர் பயம் காரணமாக நின்ற இடத்திலேயே சிறுநீர் கழித்தும் விட்டார்கள். என்னை நோக்கித் திரும்பி “நீங்கள் ஆடைகளைக் களைய வேண்டியதில்லை” என்று சற்று மென்மையான குரலில் சொன்ன ஸெய்ரூனி மறுகணமே “ம்.. இவர்களைக் கொண்டுபோய் மாடுகளைப் போல் ட்ரக்கில் ஏற்றுங்கள்” என்று உச்சஸ்தாயில் கட்டளை போட்டாள். இராணுவக் கட்டளையிடும் அதிகாரியைப் போல் ஸெய்ரூனி எனக்கு அன்று காட்சியளித்தாள். அவள் கையிலிருந்த துப்பாக்கியிலிருந்து சன்னம் பாய்ந்து வந்துவிடுமோ என்று நான் பயந்தேன். அவளுடைய தாண்டவம் அப்படித்தானிருந்தது. வகுப்பு மாணவர்கள் அனைவரும் மாடுகளைப் போல் ட்ரக்கில் அடைக்கப்பட்டார்கள். என்னையும் அவளையும் தள்ளினால் மொத்தம் 54 மாணவர்கள். என்னை வேறாக நிற்குமாறு சைகை காட்டிய ஸெய்ரூனி அவளுடைய காரிலே என்னை ஏற்றினாள். இராணுவ வண்டி முன்னே செல்ல கார் பின்னால் பயணத்தை ஆரம்பித்தது. அவள் எதுவும் பேசவில்லை. நானும் கேள்விகள் கேட்கவில்லை. உண்மையில் நான் திக்பிரமையடைந்திருந்தேன்.

கொஞ்சநேரம் கழித்து “ஏதாவது சாப்பிடுவோமா?” என்று கேட்டாள் ஸெய்ரூனி. அவளுடைய கையில் இன்னமும் துப்பாக்கியிருந்ததால் நானும் ஒப்புக்கு ஆமென்று தலையாட்ட கார் நிற்க சட்டென்று என் மனதில் திட்டமும் உதித்தது. அவள் ஏமாந்த சமயம் பார்த்து காரிலிருந்து இறங்கி தலைதெறிக்க ஓடினேன். அப்போதுதான் முன்னால் வந்த காரிலிருந்து வந்திறங்கிய நாமிகாவை நான் கண்டேன். அவளுடைய கண்களும் என்னுடைய கண்களும் ஒருகணம் சந்தித்துக்கொண்டன, அவ்வளவுதான், அதற்குப்பின் அவள் புள்ளியாக மறைந்து போனாள்.

பத்துவருடங்கள் நான் நபுஜா நகரத்திற்கு திரும்பி வரவேயில்லை. அவ்வளவு காலமும் நான் வெளிநாட்டில் இருந்தேன். பத்து வருடங்கள் கழித்து திரும்பி வந்தபோது நபுஜா சிப்பாய்களின் கெடுபிடி ஒழிந்து அமைதியாகவும் பழைய தேஜஸ் உடனும் காட்சியளித்தது. இப்போது எனக்கு நபுஜாவின் வசீகரம் முக்கியமல்ல, எனக்கு நாமிகா வேண்டும். அவளைத் திருமணம் செய்ய வேண்டும். நகரத் தெருக்களிலெல்லாம் அவளைத் தேடியலைந்தேன். துப்பு கிடைக்குமா என்று பார்த்தால் வகுப்பு மாணவர்கள் யாரும் கண்களில் அகப்பட மாட்டேன் என்கிறார்கள். என் பிரயாணப்பை நிறைய பரிசுப் பொதிகள், வைரமோதிரம், நெக்லஸ், நாமிகாவுக்கு விருப்பமான இளம் பச்சை நிறமான கைப்பை. எனக்கு

நிச்சயமாகத் தெரியும் நாமிகா வேறுயாரையும் திருமணம் முடித்திருக்க மாட்டாள். எனக்காகக் காத்திருப்பாள்.

திடீரென்று பின்புறமாக "ஹலோ" என்ற குரல் கேட்டது. எப்போதோ கேட்ட பரிச்சயமான குரல். திரும்பிப் பார்த்தேன். ஸெய்ரூனி நின்றாள். பேராச்சரியம் என்னவென்றால் அவள் முகமூடி இல்லாமல் நின்றாள். முகத்தில் போனஸாக ஒரு புன்னகை. உண்மையில் இவள் ஸெய்ரூனி தானா? "ஸெய்ரூனி இங்கே என்ன செய்துகொண்டிருக்கிறாய்?" என்று கேட்டேன் நான். "நான் இங்கே குடியேறிவிட்டேன். "அதுசரி, அன்று நீங்கள் ஏன் கோழைபோல் தப்பி ஓடினீர்கள்?" நான் பதில் சொல்லாமல் சிரித்தேன். "நான் நீங்கள் ஓடுவதைப் பார்த்துக் கொண்டுதான் இருந்தேன்" என்று ஸெய்ரூனி சொன்னதும் நான் திகைப்புற்றேன். எல்லாவற்றையும் விட ஆச்சரியமாக ஸெய்ரூனி மிகவும் மென்மையாகப் பேசினாள்.

"அதுசரி அன்று என்னை மட்டும் ஏன் அப்படி விஷேடமாக நடத்தினீர்கள்?"

"நான் உங்களை விரும்பினேன். அன்று இராணுவமொழி மட்டுமே எனக்குத் தெரிந்திருந்ததால் அந்த அன்பை என்னால் சொல்லத் தெரியவில்லை. ஜனவரி முதலாந்திகதி என் காதலை வெளிப்படுத்தத்தான் உங்களைத் தனியாக அழைத்துச் சென்றேன். பிற்பாடு தான் நீங்கள் நாமிகா என்ற பெண்ணை விரும்புவதை அறிந்து கொண்டேன்" என்றாள் ஸெய்ரூனி.

நான் அடக்கமுடியாத ஆவலுடன் "நாமிக்காவை உங்களுக்குத் தெரியுமா, அவள் இப்போது எங்கே இருக்கிறாள்?" என்று கேட்டேன்.

"என் வீட்டுக்கு வாருங்கள், எல்லாக் கதையையும் சொல்கிறேன்"

"நீங்கள் இப்போது நன்றாக மாறிவிட்டீர்கள்"

"எல்லாம் இந்த நபுஜா மண்ணின் மகிமை. என்று நான் இந்த முகமூடியைக் கழற்றி எறிந்தேனோ அன்றிலிருந்து இந்த நகரத்தின் நறுமணம் என் நாசிக்குள் நுழைய ஆரம்பித்தது. நான் மென்மையும், அன்பும், நாணமும் கொண்ட பெண்ணாக மாறிவிட்டேன்" என்று பேசிக் கொண்டே போனாள் ஸெய்ரூனி.

ஸெய்ரூனியின் வீடு கலைக்கூடமாக இருந்தது. ஸெய்ரூனி ருசியான முறையில் சமைத்துப் பரிமாறினாள். ஸெய்ரூனி இத்தனை அற்புதமான கலாரசனையைக் கொண்டவளென்று நான் எதிர்பார்த்திருக்கவில்லை. முற்றத்திலே 55 பூகோள உருண்டைகளை வர்ணந்தீட்டி செதுக்கி இடைக்கிடை கற்களைப் பரவி, பன்னத் தாவரங்களை நட்டு மனதை ஆகர்ஷிக்கும் வகையில் முக்கோண வடிவத்தில் ஒரு கலைச்சின்னம் ஆக்கப்பட்டிருந்தது. "ஒரு கொடுமைக்கார இராணுவக்கட்டளை அதிகாரியின் மகளான உன்னை இந்த நபுஜாநகர மண் எப்படி ஒரு கலாவுணர்வு கொண்ட ஒருத்தியாக மாற்றிவிட்டது என்பதைக் குறித்து

நான் ஆச்சரியப்படுகிறேன்” என்றேன் நான். ஸெய்ரூனி அழ ஆரம்பித்தாள். அவள் அழுவதை இன்றுதான் முதன் முறையாக நான் பார்க்கிறேன்.

“ஏன் அழுகிறாய் ஸெய்ரூனி?”
“நான் மாறிவிட்டேன் என்று நீ இப்போது சொன்னாயல்லவா, அது உண்மைதான். ஆனாலும் மென்மையுள்ள மங்கையாக நான் மாறுவதற்குள் எல்லாக் கொடுமைகளும் நடந்தேறி விட்டன நண்பா” என்று சொல்லிவிட்டு குலுங்கிக் குலுங்கி அழ ஆரம்பித்தாள் ஸெய்ரூனி.
“என்ன சொல்லுகிறாய் ஸெய்ரூனி?”
“முற்றத்தில் உள்ள அந்தக் கலைச்சின்னத்தில் உருண்டை வடிவங்களைப் பாரத்தாயல்லவா?” “ஆம்”
“அவை அத்தனையும் நான் அன்று கடைசி நாளன்று அழைத்துக்கொண்டு போனேனே நம்முடைய வகுப்பு மாணவர்கள், அவர்களின் மண்டையோடுகள்” என்றாள் ஸெய்ரூனி. எனக்கு பேச்சே வரவில்லை, நம்பமுடியாமல் அவளைப் பார்த்தேன். “என்னையும், உங்களையும் தள்ளினால் வகுப்பில் 54 மாணவர்கள். ஆனால் அங்கே 55 உருண்டைகள் இருக்கின்றன” என்றேன் நான். “ஏறிப்பார்” என்றாள் ஸெய்ரூனி. முக்கோண உச்சியிலே ஒரு மோதிரம் இருந்தது. இரண்டு மல்லிகைப் பூக்களும் நடுவிலே ஒரு நட்சத்திரமும். நாமிகாவின் இரண்டு கண்களும் நெற்றியிலே ஜொலித்த நட்சத்திரமும் “உச்சியிலே இருப்பது உன் நாமிகாவின் மண்டையோடு” என்றாள் ஸெய்ரூனி. நான் அழவில்லை. ஏனெனில் நபுஜாநகரத்தில் பிறந்தவர்கள் ஒருபோதும் அழமாட்டார்கள்.

(எம்பிலிபிட்டிய 1989- மாணவர்கள் படுகொலை ஞாபகார்த்தமாக)

அர்த்தம் பொதிந்த வகையில் தத்துவஞானிகள் உதிர்க்கும் தத்துவங்கள் மீது எனக்கு சின்ன வயதிலிருந்தே அதீத பிரேமை இருந்தது. எனவே பல்கலைக்கழகத் திலே மனிதஇயலில் பட்டப் படிப்பை முடித்த கையோடு தத்துவவியலில் பட்டப்பின் படிப்பையும் முடித்துக் கொண்டு பிரஞ்சு மொழியில் பாண்டித் தியம் பெற்றிருந்த காரணத்தால பிரான்ஸில் உள்ள பிரபலமான பல்கலைக்கழக மொன்றில் விரிவுரை யாளராக இணைந்து கொண்டேன். அப்போது எனக்கு வயது இருபத்தெட்டு. இரவிலே கண்விழித்து, பகலிலே பசியோடிருந்து, தத்துவங்களை நெட்டுருப் பண்ணி ஒப்புவித்துத்தான் மாணவர்கள் பட்டங்களையும், விஷேடபட்டங்களையும் பெற்றுவந்தனர். இந்த வகையான கிளிப்பிள்ளை கல்வி எனக்கு கொஞ்சங்கூட பிடிக்கவில்லை. என்னுடைய வாழ்க்கைக் காலத்தில் பெரும்பகுதி பயணங்களில்தான் கழிந்தது. அதற்கு காரணமும் இருந்தது. பிரமாண்ட அளவில் எழுதப்பட்டிருந்த தத்துவங்களில் சொற்ப அளவாவது யதார்த்தம் இருக்கிறதா? அந்த தத்துவங்களின் படி அட்சரம் பிசகாது இந்த உலகத்தின் எந்த மூலையிலாவது யாராவது வாழ்ந்து கொண்டிருக்கிறார்களா? என்று அறிந்து கொள்ளத்தான் இந்தச் சஞ்சாரம் எல்லாம். இத்தனை வருடங்களாக அப்படியான மனிதனைத் தேடியும் கிடைக்கவில்லை.

ஒருமுறை இமயமலையின் அடிவாரத்திற்கு சென்றிருந்தேன். ஞானிகளையும், ரிஷிகளையும், தத்துவஞானிகளையும் ஒருங்கே தரிசிக்க வேண்டுமென்றால் இமயமலையின் அடிவாரம் தான் சரியான இடம். இந்திய தத்துவநூல்களில் ரிஷிகள்பற்றி நிறைய வர்ணனைகள் செய்திருந்தார்கள். அவர்கள் காலவோட்டத்திலே தவவலிமை காரணமாக மகரிஷிகளாக உருவெடுப்பார்கள் என்றும் எழுதியிருந்தார்கள். இந்த வர்ணனைகள் அச்சொட்டாக பொருந்தக்கூடிய, இடுப்புவரை தொங்கும் நீண்ட நரைத்த தாடிவளர்த்த, கண்களில் ஞானத் தீட்சண்யம் புதைந்த ரிஷியை அங்கு சந்தித்தேன். வாரப்படாத சிக்குடன் காணப்பட்ட பரட்டைத் தலையை பார்த்தவுடன் குமட்டல் வந்த போதிலும் பொறுத்துக் கொண்டேன்.

“இமயமலைச் சாரலிலே என்ன செய்து கொண்டிருக்கிறீர்கள்?” என்று கேட்டேன் நான்.
“தவம் செய்து கொண்டிருக்கிறேன்”
“தவம் என்றால் என்ன?”
“கண்களை மூடி, ஆடாமல் அசையாமல் மனதை ஒருமுகப்படுத்தி, கடவுளை நோக்கியவாறு கடவுளின் சிந்தனையுடனேயே இருக்க வேண்டும்”
“தவம் செய்தால் என்ன பிரதிபலன் கிடைக்கும்?”
“கடவுளின் அனுக்கிரகம் கிடைக்கும்”
“கடவுளின் அனுக்கிரகம் கிடைத்தால் அதற்குப் பிறகு?”
“எவற்றையெல்லாம் நம்முடைய வாழ்க்கையில் விரும்புகிறோமோ அவையெல்லாம் நமக்குக் கிட்டும். அழகான வீட்டின் மீது

ஆசையிருந்தால் அது, ஆடம்பர வாகனம் மீது ஆசையிருந்தால் அது, அழகான மனைவி மீது ஆசையிருந்தால் அது....” என்று அடுக்கிக் கொண்டே போனார் ரிஷி. “நீங்கள் திருமணம் முடித்தவரா?“ என்று கேட்டேன் நான். “ஐயோ! சம்சார வாழ்க்கை நம்தவத்தை நாசமாக்கி விடும்” என்று காதுகளை மூடிக்கொண்டார் ரிஷி.

“நீங்கள் இந்த இமயமலைச்சாரலிலே எத்தனை வருடங்களாக தவம் செய்கிறீர்கள்?”

“இருபது வருடங்களாக”

“இருபது வருடங்கள் தவம்செய்த உங்களுக்கு கடவுளின் அனுக்கிரகம் கிட்டி விட்டதா?”

“இல்லை”

“இருபது வருடங்களாக உங்களுக்கு கிடைக்காத கடவுளின் அனுக்கிரகம் இனிமேலும் கிடைக்குமென்று நம்புகிறீர்களா?”

“அதிலென்ன சந்தேகம்? நாம் தொடர்ச்சியாக முயற்சி செய்து கொண்டே இருக்கவேண்டும்”

“ரிஷி அவர்களே, நான் சொல்கிறேன் என்று கோபிக்கவேண்டாம். கடவுளை நீங்கள் தவறாக புரிந்து வைத்திருக்கிறீர்கள்” என்றேன் நான். “ஏன் அப்படிச் சொல்கிறீர்கள்?” “நீங்கள் இந்த இருபது வருடங்களும் உங்கள் கைகளால் உழைத்து வந்திருப்பீர்களென்றால் நீங்கள் என்னென்ன ஆசைப்பட்டீர்களோ அவை எல்லாமே கிடைத்திருக்கும். அழகான மனைவி, ஆடம்பர வாகனம், மாளிகை எல்லாமே. நீங்கள் உங்கள் வாழ்க்கையை வீணடித்துவிட்டீர்கள்” என்றேன் நான்.

அதன் பிறகு எனது சஞ்சாரம் சுவர்க்கத்தீவை நோக்கி தொடர்ந்தது. நல்ல மனிதர்களான சுவர்க்கத் தீவுவாசிகள் எப்போதும் முகத்தில் புன்னகை தவழப் பழகுவார்கள். அவ்வாறான சுவர்க்கத்துத் தீவில் சஞ்சரித்துக் கொண்டிருந்தபோது தான் அபூர்வ சவப்பெட்டியைச் சந்தித்தேன். சவப்பெட்டி அபூர்வமானது; நிறமும் அபூர்வமானது. கபிலமாகவும் இல்லாமல் பொன்நிறமாகவும் இல்லாமல் மஞ்சளாகவும் இல்லாத ஒலிவ் பச்சையில் அது இருந்தது. தடவிப் பார்த்தேன். மேற்பரப்பு கரடுமுரடாக இருந்தது. உள்ளே கைகளை விட்டு துளாவினேன். உட்பரப்பும் கரடுமுரடாக இருந்தது. அந்த அபூர்வ சவப்பெட்டிக்குச் சொந்தக்காரனான அபூர்வ மனிதனின் பெயர் ஜவான். வயது ஐம்பது இருக்கும். அவன் மலையடிவாரத்தில் வாழ்ந்து வந்தான். அருகில் அழகான நீர்வீழ்ச்சியும், பசுமை கொழிக்கும் வனாந்தரமும் இருந்தது. நீர்வீழ்ச்சியிலே நீர் விழுந்து தெறிக்கும் ஒலி எவ்வேளையிலும் கேட்டுக் கொண்டிருக்கும் இடத்தில் அவன் வாழ்ந்தான். ஜவானுக்கு *சவப்பெட்டி மனிதன்* என்ற பட்டப் பெயரும் இருந்தது. இந்த மனிதனைப் பற்றி கிராமத்தில் எல்லோரும் பேசிக் கொண்டிருந்ததால் நானும் சவப்பெட்டி மனிதனை சந்திக்கும் ஆசையில் அவனுடைய வீட்டிற்குப் போனேன்.

வீடு என்று அவனுடைய வீட்டை அழைக்க முடியாது. கூரையை இலைகுழைகளால் வேய்ந்து, மண்ணைக் குழைத்து சுவரை வரித்துக் கட்டியிருந்தான். அதிசயம் என்னவென்றால் சவப்பெட்டி மனிதனின் வீட்டிற்கு கதவுகள் இல்லை, ஜன்னல் கிடையாது, முகப்பும் அற்ற வீடு. நான் வீட்டிற்குள் நுழைந்தபோது ஜவான் பெட்டியொன்றிற்குள் நிம்மதியாகத் தூங்கிக் கொண்டிருந்தான். நான் அவனைத் தட்டி எழுப்பி என்னை அறிமுகப்படுத்தி ‘என்ன மனிதரே, இந்த வீட்டில் எவ்வளவோ இடம் இருக்க எதற்காக இந்தப் பெட்டிக்குள் தூங்கிக் கொண்டிருக்கிறாய்?’ என்று கேட்டேன். என்னை ஏற இறங்கப் பார்த்து விட்டு வெடிச்சிரிப்பு சிரித்தான் சவப்பெட்டி மனிதன். “நீ இதனை வெறும்பெட்டி என்றா நினைத்துக் கொண்டிருக்கிறாய்? இது பெட்டி இல்லை. நானோ நீயோ செத்துப் போனவுடன் உடலைப் போட்டு, ஆணி அறைந்து மூடுவோமே பெட்டி, சவப்பெட்டி” என்றான் ஜவான். நன்றாக உற்றுப் பார்த்தபோது ஜவான் சொன்னது போல் அது சவப்பெட்டி தான். “இந்த ஊரே உன்னைப்பற்றி புகழ்ந்து பேசிக்கொள்ளும் சவப்பெட்டி இதுதானா?” என்று நான் கேட்க ஜவான் புன்னகைத்துக் கொண்டே “ஆம்” என்றான்.

ஜவானைப் பார்த்தால் உளநோயால் பீடிக்கப்பட்டவனாகவோ பைத்தியக்காரனாகவோ தெரியவில்லை அல்லது வாழ்க்கையை வெறுத்து விரக்தியினால் அப்படிச் செய்பவனாகவும் தெரியவில்லை. அவன் சுடச்சுடக் காப்பி ஊற்றிக் கொண்டு வந்தான். காப்பியின் நறுமணம் அறை முழுவதும் கமழ்ந்தது. அவனே தயாரித்த காப்பி. நீர்வீழ்ச்சியின் குளிருக்கு காப்பி இதமாக இருந்தது. சுவையும் பிரமாதம். அவனிடம் இந்த விருந்தோம்பலைத் தவிர நிறைய நற்குணங்களை நான் அவதானித்தேன். “ஜவான் உன்னைப் பார்த்தால் பரம ஏழையாகவும் தெரியவில்லை. எதற்காக இப்படி கஷ்டப்படுகிறாய்? இந்தக் குறுகிய சவப்பெட்டிக்குள் படுத்துத் தூங்குகிறாய்?” என்று நான் ஆற்றாமையால் கேட்டபோது “வாழ்க்கையில் எந்தக் கணத்திலும் மரணஞாபகத்தில் வாழ்வதற்கு இதை விடச் சிறந்த வழியை நான் காணவில்லை” என்று அனாயாசமாகப் பதிலளித்த ஜவான் அவனுடைய சமையலறைக்கு என்னை அழைத்துச் சென்றான். அங்கு மூன்று கற்கள், ஒரு பானை, ஓர் அகப்பை, ஒரு தீப்பெட்டி, ஒரு பீங்கான் என்பவற்றைத் தவிர சமைப்பதற்கான எந்தத் தடயங்களும் காணப்படவில்லை.

“என்னப்பா ஜவான் சமையலறை? எப்படிச் சாப்பிடுகிறீர்கள்?’ என்று கேட்டேன். “கோதுமை மா இருக்கிறது, நீரிலே அவித்துச் சாப்பிடுவேன். அரிசி இருக்கிறது, வறுத்துச் சாப்பிடுவேன். குரக்கன்மா இருக்கிறது, குழைத்துச் சாப்பிடுவேன்” என்றான் ஜவான். “இதுவா வாழ்க்கை?” நான் கேட்டேன்.

“உங்கள் உணர்வுகள் எனக்குப் புரிகிறது. என்றாலும் வாழ்க்கையை வாழ்கிறோம் என்று சொல்லிக் கொண்டு நாம் எலிப்பந்தயம் அல்லவா நடத்திக் கொண்டிருக்கிறோம்”
“நீங்கள் என்ன சொல்லுகிறீர்கள் புரியவில்லையே?”
“வாழ்கிறோம் என்ற ஆசை அதிகமாகி நாம் வந்து நிற்கிற இடம் எங்கே? மற்றைய மனிதனின் கழுத்தை மிதித்துத் தான் ஒவ்வொரு நாணயக் குற்றியையும் நாம் சம்பாதிக்கிறோம். அப்படியான வழிமுறைக்கு என் மனம் ஒப்பவில்லை. அது மட்டுமல்ல சொத்துக்கள் குவியக்குவிய அதனை கட்டிக் காக்கும் நடவடிக்கையில் நாம் இறங்க வேண்டிவரும், அதற்காக மனிதன் மனிதனை கொலை செய்யவும் தயங்க மாட்டான்” எனப் பதிலளித்தான் ஜவான்.

ஜவானை எனக்கு நன்றாகப் பிடித்து விட்டதால் நான் அவனுடைய வீட்டிற்கு அடிக்கடி போய் வந்தேன். வீட்டு வேலைகளுக்கு வேலைக்காரியையாவது வைத்துக் கொள்ளும்படி நான் அவனை வேண்டியும் அவன் மறுத்து விட்டான். அவனுடைய மனது ஏதோ காரணத்தால் கடுமையாக காயப்பட்டிருப்பதைப் போல் எனக்குத் தோன்றிற்று. அவனுடைய இதயத்தை சுற்றிக் கட்டப் பட்டிருக்கும் கருங்கல் கோட்டையை உடைக்க நான் பலதடவை முயற்சி செய்தும் முடியவில்லை. இந்த உலகத்தில் வாழ்வதற்கு இவன் எவ்விதத்திலும் லாயக்கற்றவன் என்றாலும் இவன் மீது எனக்கு அபரிமிதமான அபிமானம் இருந்தது. ஒருநாள் ஜவான் என்னை மிகத் தொலைவிலுள்ள வண்ணத்துப்பூச்சி பூங்காவிற்கு அழைத்துச்சென்றான். பூங்கா உண்மையிலேயே வண்ணமயமான வண்ணத்துப்பூச்சி வகையறாக்களால் நிரம்பி வழிந்த அற்புத உலகம். சிறுவர்கள் வண்ண வண்ண ஆடைகளுடன் வண்ணத்துப் பூச்சிகளுடன் விளையாடிக் கொண்டிருந்தார்கள். எல்லாவகையான வண்ணத்துப்பூச்சிகளும் அங்கே வாழ்ந்ததோடு வண்ணத்துப்பூச்சி ரசிகர்களும் அங்கே வாழ்ந்தார்கள். யாரும் வண்ணத்துப் பூச்சிகளைத் தொடக் கூடாது, பார்க்கலாம், ரசிக்கலாம், வர்ண சலனப்படங்களாக எடுக்கலாம், தொடக் கூடாது. அது பூங்காவில் நிலவிய சட்டம்.

“வண்ணத்துப் பூச்சிகளுடன் பேசவும் முடியும்” என்றான் திடீரென்று ஜவான். நான் கிண்டல் கலந்த தொனியில் சிரித்துக் கொண்டே சொன்னேன்.
“பைத்தியம் பிடித்தால் மனிதன் பாம்புகளுடனும் பேசலாம்”
“அப்படியா சொல்கிறாய்?”
“அப்படித் தான் சொல்கிறேன்” சிவப்பு, கபிலம் ஆகிய வர்ணச் சேர்க்கைகளால் குழைத்துச் செய்யப்பட்ட இறகுகளுடன் ஒரு வண்ணத்துப்பூச்சி ஜவானின் உள்ளங்கையில் வந்து அமர்ந்தது.
“அழகிய வண்ணத்துப் பூச்சியே, எந்த உலகத்திலிருந்து வருகிறாய்?” என்று அதைப் பார்த்துக் கேட்டான் ஜவான். வண்ணத்துப்பூச்சி பேசவில்லை. ஜவான் வண்ணத்துப்பூச்சியின் இறகுகளை ஒட்டிப்பிடித்து

காதருகே கொண்டுபோய் "அங்கே என் மனைவியைக் கண்டாயா?" என்று கேட்டான். ஜவான் என்ன விளையாடுகிறானா? அல்லது உண்மையாகவே பைத்தியம் பிடித்துவிட்டதா? "யாருடன் பேசிக்கொண்டிருக்கிறாய்?" என்று கேட்டேன் நான்.

"கலைத்துவமிக்க ஆடைகள் அணிந்துவந்து இங்கு நிற்கும் இந்த வண்ணத்துப்பூச்சியுடன்" "வண்ணத்துப்பூச்சிகள் ஒரு போதும் பேசமாட்டாது" என்றேன் நான் எரிச்சலுடன். "வண்ணத்துப் பூச்சிகளின் மொழி நமக்குத் தெரிந்தால் பேசலாம்" என்றான் ஜவான்.

"வண்ணத்துப்பூச்சிகளுக்கும் மொழி இருக்கிறதா?"

"ஏன் இருக்கக்கூடாது? எறும்புகளிற்கும் மொழி உண்டு. ஒட்டகச் சிவிங்கிகளிற்கும் மொழி உண்டு. இயற்கை என்ற அற்புதமான மொழி அது. அந்த மொழியைக் கற்றுக்கொண்டால் புல்புல் பறவையுடனும் பேசலாம், சூரியகாந்தி மலருடனும் பேசலாம்" என்றான் ஜவான்.

"தத்துவவியல் பட்டதாரியுடன் தத்துவம் பேசுகிறாயே" என்று சிரித்தேன் நான். "நான் சொல்வது ஏட்டுச் சுரைக்காய் தத்துவமல்ல, உண்மை" என்றான் ஜவான். "அதுசரி, அந்த விஷயம் ஒருபுறம் இருக்கட்டும். உனக்கு மனைவி இருக்கிறாள் என்ற விஷயத்தை ஒருபோதும் நீ என்னிடம் சொல்லவே இல்லையே"

சற்று நேரம் கண்களை மூடிக்கொண்ட ஜவான் "அவள் எப்போதோ இறந்துவிட்டாள்" என்றான் சோகத்துடன். "வாழ்க்கை மீது உனக்கு ஆசை இல்லை, பற்று இல்லை என்று தத்துவம் உதிர்த்தாயே, எங்கே அந்தத் தத்துவங்கள்?" என்று கேலியுடன் கேட்டேன் நான். "வாழ்க்கைமீது ஆசை இல்லை என்று நான் ஒருபோதும் சொன்னது கிடையாது. அதீத ஆசை கூடாது. மரணத்தை எக்கணமும் எதிர்பார்த்திருக்க வேண்டும். மரணம் வருகிறதே என்று கவலைப்படக் கூடாது" என்றான் ஜவான்.

"பிள்ளைகள் யாருமில்லையா?"

"இல்லை. குழந்தை வயிற்றில் இருக்கும்போது தான் இரத்தப்பெருக்கு ஏற்பட்டு அவள் இறந்துபோனாள்" என்று ஜவான் சொல்ல நான் துயருற்றேன்.

பொன்னிற இறகுகளில் மஞ்சள், கறுப்புப் புள்ளிகள் கலந்த ஒரு வண்ணத்துப் பூச்சி ஜவானுக்கு அருகிலிருந்த கற்பாறையில் வந்து அமர்ந்ததும் சடுதியாக ஜவானின் முகம் சோகத்திலிருந்து விடுபட்டு மகிழ்ச்சித் துள்ளலாக மாறிற்று. வெயில் பட்டு அதனுடைய இறகுகள் தகதகவென்று மின்னின. "இதோ என் மனைவி வந்து விட்டாள்" என்று மகிழ்ச்சிப் பெருக்கால் கூவினான் ஜவான். "வண்ணத்துப்பூச்சி உன் மனைவியா? இது சாதாரண வண்ணத்துப்பூச்சி. அது அழகாக இருக்கிறதேயொழிய உன் மனைவியல்ல" என்றேன் நான். "வண்ணத்துப்பூச்சி என் மனைவி இல்லை என்றா சொல்லுகிறாய்?" என்று கோபத்துடன் கேட்டவாறே விறுவிறு என்று நடக்க ஆரம்பித்தான் ஜவான். "நில் நில்" என்று சொல்லிக்கொண்டே நான் ஜவானுக்கு

பின்னால் ஓடினேன். என்னைப் பார்த்து கலகலவென்று சிரிக்க ஆரம்பித்தவன் “என்ன பயந்துவிட்டாயா?”
என்றவாறே உள்ளே போய் ஆடையொன்றுடன் வெளியே வந்தான். “இதோ என் மனைவி இறந்தபோது இந்த ஆடையைத்தான் அணிந்திருந்தாள். இப்போது வண்ணத்துப்பூச்சியாக திரும்பி வந்துள்ளாள்” என்று சொல்லியவாறே வண்ணத்துப்பூச்சியின் இறகுகள் இரண்டையும் விரல்களால் பிடித்து ஆடையின்மீது வைத்தான் ஜவான். என்ன ஆச்சரியம்! வண்ணத்துப்பூச்சியின் இறகுகளுடன் அந்த ஆடையின் அலங்காரம் அச்சொட்டாக பொருந்தியது. உண்மையாகவே இந்த வண்ணத்துப்பூச்சியை அவனுடைய மனைவி என்று நம்புகிறானா? அல்லது எனக்கு பூச்சாண்டி காட்டுகிறானா? மொட்டைத்தலைக்கும் முழங்காலிற்கும் முடிச்சுப்போடும் இவன் என்னையும் அந்த ஆழிக்குள் மூழ்கடிக்க முயற்சி செய்கிறான்.
உன்மனைவி இறந்து எத்தனை வருடங்களாகின்றன?”
“முப்பதுவருடங்கள்”
“ஒரு வண்ணத்துப் பூச்சியால் முப்பது வருடங்கள் ஜீவிக்கமுடியுமா?”
“சாகாவரம் பெற்ற வண்ணத்துப் பூச்சியை பற்றி நீ கேள்விப்படவில்லையா? இதயத்திற்குள் என் மனைவி சாகாவரம் பெற்று வாழ்கிறாள். இந்த வண்ணத்துப்பூச்சியும் அப்படித்தான் சாகாவரம் பெற்று வாழ்கிறது” என்றான் ஜவான். “நீ எப்போது இறப்பாய்?” என்று நானும் இடக்குமுடக்காகக் கேட்டேன்.
“கடவுள் தான்அறிவார். அந்த நல்ல நிகழ்ச்சிக்காகத்தான் நானும் ஆவலோடு காத்திருக்கிறேன்” “ஏன் தற்கொலை செய்து கொள்ளவில்லை?”
“அது கோழைகளின் செயல்”
“நீ மரணிக்கும்போது எங்கே இருக்க வேண்டுமென்று ஆசைப்படுகிறாய்?”
“சந்தேகமே இல்லாமல் சவப்பெட்டிக்குள் தான்”
“சவப்பெட்டிக்குள்ளேயே நீ மரணித்து விட்டாய் என்று வைத்துக்கொள்வோம். அந்த மரணத்தை மற்றவர்கள் அறிந்துகொள்வது எப்படி?” நான் கேட்டேன். ஜவான் கொஞ்சநேரம் யோசித்தான். “அதற்காகத் தான் என் வீட்டை கதவுகளே இல்லாமல் நிர்மாணித்திருக்கிறேன். வழிப்போக்கர்கள் என் வீட்டிற்குள் நுழைந்து நான் சவப்பெட்டிக்குள் மரணித்துப் போயிருப்பதை காண்பார்கள்”
“அது சரி வீட்டிற்குள் நுழையாமல் நீ சவப்பெட்டிக்குள் மரணித்து இருப்பதை வழிப்போக்கர்கள் எப்படி அறிந்து கொள்வார்கள்?” “என் நடமாட்டம், சந்தடி இல்லாததைக் கொண்டு அறிந்து கொள்வார்கள்?”
“உன் நடமாட்டம் இல்லாவிட்டால் நீ ஊரில் இல்லை என்று தான் வழிப்போக்கன் நினைத்துக் கொள்வானே ஒழிய நீ மரணித்துவிட்டாய் என்று நினைக்க மாட்டான். நீ இறந்துவிட்டாய் என்பதை வழிப்போக்கன் எப்படி அறிந்துகொள்வானென்று சொல்லட்டுமா?”
“சொல்லுங்கள்”

“நீ சவப்பெட்டிக்குள் அப்படியே மரணித்துவிடுவாய். இரண்டு மூன்று நாட்கள் கழித்து உன் உயிரற்ற உடம்பு புழுத்து பிணவாடை வீச ஆரம்பிக்கும். வழிப்போக்கன் வந்து பார்ப்பான், காவல்துறைக்கு அறிவிப்பான். அவர்கள்வந்து அனாதைப் பிணம் என்று சொல்லி எங்கோ ஒரு மூலையிலே அடக்கம் செய்துவிடுவார்கள்” “ஓ இப்படியும் ஒன்று இருக்கிறதா?” என்று யோசிக்க ஆரம்பித்தான் ஜவான்.

“ஜவான், நான் சொல்வதை கவனமாகக் கேள். இருபத்துநான்கு மணிநேரமும் நீ மரணத்தை எதிர்பார்த்து வாழ்கிறாய், அது உண்மை. அதில் எந்தத் தவறும் இல்லை. ஆனால் மரணித்த பின் புழுத்த அனாதைப் பிணமாக அடக்கப்படுவதை யாரும் விரும்பமாட்டார்கள். குறைந்தபட்சம் உன் மரணத்தை உலகம் தெரிந்து கொள்வதற்காகவாவது ஒரு பெண்ணை மணந்துகொள்” என்று சொன்னேன் நான். “அதற்குப் பிறகு இன்னுமின்னும் பணம் சம்பாதிக்கவேண்டும் என்றபேராசை உண்டாகிவிடும்” என்றான் ஜவான். “ஜவான், அதற்கும் வழி சொல்கிறேன். பரம ஏழையான பெண்ணைத் திருமணம் செய்துகொள். திருமணம் முடித்த கையோடு உனக்கிருக்கும் எல்லாச் சொத்துக்களையும் அவள் பெயருக்கே எழுதி வைத்துவிடு. உன்னுடைய சவப்பெட்டியை மட்டும் உன்னோடு வைத்துக்கொள். அதற்குப்பிறகு ராஜாமாதிரி சவப்பெட்டிக்குள் படுத்துறங்கு. மரணம் பற்றிய கவலையே இல்லாமல்” என்றேன் நான். ஜவான் கொஞ்சநேரம் சிந்தனையில் ஆழ்ந்தான். “நீங்கள் சொல்லும் யோசனையும் நன்றாகத்தான் இருக்கிறது. அந்த யோசனையையும் பரிசீலித்துப் பார்க்கிறேன்” என்று பதிலளித்தான் ஜவான்.

இதற்கிடையில் சுவர்க்கத்துத்தீவில் என் விடுமுறைக் காலம் முடிந்துவிட்டபடியாலும் பல்கலைக்கழகத்தில் முடிக்கவேண்டிய வேறுகாரியங்கள் நிறைய இருந்ததாலும் நான் பிரான்ஸை நோக்கி பயணமானேன். மூன்று மாதங்கள் கழிந்து ஒருநாள் ஜவான் என்னுடன் தொலைபேசியில் தொடர்புகொண்டு நான் அறிவுறுத்தியபடி அவன் பரம ஏழைப்பெண்ணை திருமணம் செய்து கொண்டுவிட்டதாகவும் எல்லாச் சொத்துக்களையும் அவள் பெயருக்கே எழுதி வைத்துவிட்டதாகவும் எனக்கு அறிவித்தான். இந்த தொலைபேசி உரையாடலுக்குப் பிறகு எந்தத் தொடர்புகளும் எங்களுக்கிடையில் இருக்கவில்லை. வேலைச் சோலியும் அதிகரித்ததால் ஜவானை நான் அடியோடு மறந்தேன்.

இவ்வளவு நேரமும் நான் சொல்லியது இருபத்தைந்து வருடங்களுக்கு முன்னர் நடந்த கதை. இருபத்தைந்து வருடங்களுக்குப் பிறகு சுவர்க்கத்துத்தீவுக்கு வேறுகாரியம் நிமித்தம் வந்திறங்கிய பொழுது என்னுடைய ஞாபகத்திற்கு வந்த முதல் மனிதன் ஜவான். அற்புதமான அந்த மனிதனின் ஞாபகங்கள் என்னுடைய அடிமனதிலெ இன்னும் நீக்கமற நிறைந்திருந்தது. முதலில் அவன் கிறுக்கனாகத்தான் தோற்றமளித்தாலும் யோசித்துப் பார்த்தபொழுது தத்துவஞானிகளையும்

விஞ்சிய இலட்சணங்கள் அவனிடம் இருந்தன. ஏனெனில் தத்துவஞானிகள் எல்லோரும் கிறுக்கர்களாகத் தான் இருந்தார்கள். அவனிடம் ஓர் ஆசை இருந்தது. அதனை அவன் என்னிடம் சொன்னான். தான் மரணமடைந்து சவப்பெட்டிக்குள் வைத்த உடன் சவப்பெட்டியின் மூடியை நான்தான் மூடவேண்டுமென்ற அவன் ஆசை நிறைவேறவில்லை. இப்போது மண்ணோடு மண்ணாக உக்கிப் போயிருப்பான் அவன். ஜவானுடைய மனைவியையாவது தரிசித்துவிட வேண்டும் என்ற ஆவலில் ஜவான் வாழ்ந்த இடத்திற்கு போனேன். ஜவான் இருந்த இடத்தில் இப்போது அழகிய பங்களா இருந்தது. சுற்றிவரப் பூந்தோட்டம் இருந்தது. கார், காவற்காரர்கள் எல்லோரும் இருந்தார்கள். நான் பிரமித்துப் போனேன்.

அடர்த்தியான மீசை வளர்த்த கம்பீரமான இளைஞன் என்னை வரவேற்றான். நான் என்னைப் பற்றி சொல்ல ஆரம்பித்ததும் அந்த இளைஞன் முந்திக் கொண்டு “எனக்கு உங்களைப் பற்றி நன்றாகத் தெரியும். தந்தை உங்களைப் பற்றி அடிக்கடி பேசிக் கொண்டிருப்பார்” என்றான். என்மனம் நெகிழ்ந்தது, பெருமையாகவும் இருந்தது. இந்தளவுக்கு என்னை நேசித்த மனிதனை நான் வாழ்க்கையில் சந்தித்ததேயில்லை. சற்று நேரத்தில் ஒரு பெண்மணி வர முக இலட்சணங்களை வைத்து அவள் ஜவானின் மனைவி என்பதை புரிந்து கொண்டேன். என் முகக்குறிப்பை அவள் உணர்ந்தவளாக “நான்தான் ஜவானின் மனைவி” என்று சொன்னாள். ஜவானின் சவப்பெட்டிக்கு என்ன நடந்தது என்று அறிந்துகொள்ள என்மனம் ஆவலாய்த் துடித்தது. இந்த விஷயத்தை எப்படி இவர்களிடம் கேட்பது? என்னை பைத்தியக்காரன் என்று நினைத்துக் கொள்ள மாட்டார்களா?

நான் தயக்கத்துடன் “நீங்கள் கோபித்துக் கொள்ளவில்லை என்றால் ஒரு விஷயத்தை அறிந்து கொள்ள ஆவலாய் இருக்கிறேன்” என்றேன். “பரவாயில்லை கேளுங்கள்” என்றான் மகன். “உங்கள் தந்தை ஒரு சவப்பெட்டி வைத்திருந்தார். அந்த சவப்பெட்டிக்குள் தான் எப்போதும் படுத்துறங்கினார். மரணத்தை எக்கணமும் எதிர்பார்த்துக் காத்திருந்தார். அந்த சவப்பெட்டிக்கு என்ன நடந்தது?” என்று ஆவலோடு கேட்டேன் நான். மகன் சிரித்தான். “வாருங்கள், அந்தச் சவப்பெட்டி அப்படியேதான் இருக்கிறது. ஆனால் நீங்கள் நினைப்பதுபோல் இல்லை. அது களஞ்சியசாலையின் மூலையில் போடப்பட்டு எத்தனையோ வருடங்களாகி விட்டன” என்று சொல்லிக் கொண்டே என்னை வெளிவீட்டிற்கு அழைத்துச் சென்றான் மகன்.

என் கண்களையே நம்பமுடியாமல் பார்த்தேன், ஆடம்பர கட்டிலில், அழகிய பஞ்சணையில், வெளிநாட்டிலிருந்து இறக்குமதி செய்யப்பட்ட திண்டுகளோடு, அலங்கார விளக்குகள் நடுவே, பணிவிடை செய்ய

வேலைக்காரர்கள் சூழ நிம்மதியாக தூங்கிக் கொண்டிருந்தான் ஜவான். அவன் இன்னமும் உயிரோடுதான் இருக்கிறான்.

நான் அவனை எழுப்பினேன். உடனடியாகவே என்னை அடையாளம் கண்டுவிட்ட ஜவானின் கண்களிலிருந்து கண்ணீர் வழிந்து ஓடியது. வயதுத் தளர்ச்சியா? வாழ்க்கைத் தளர்ச்சியா? என்னுடைய கைகளைப் பற்றிக்கொண்டே சிரமப்பட்டுப் பேசினான் ஜவான். "நீங்கள் வருவீர்கள் என்று எனக்குத் தெரியும். உங்களை எதிர்பார்த்திருந்தேன். என் உயிரை எப்படியாவது காப்பாற்றுங்கள்" என்று கெஞ்சினான் ஜவான். "ஏன் ஜவான் உனக்கு என்ன நடந்தது?" என்று நான் பதைபதைப்புடன் கேட்க "டாக்டர்கள் நாள் குறித்து விட்டார்கள். எனக்கு நுரையீரற்புற்று. என்னுடைய மகனின் திருமணத்தை நான் பார்க்கவேண்டும்; என்னுடைய பேரப் பிள்ளைகளை நான் பார்க்க வேண்டும். பணத்தைப் பற்றி கவலைப்பட வேண்டாம். என்னை உங்கள் நாட்டுக்கு கொண்டு போயாவது காப்பாற்றுங்கள். எவ்வளவு வேண்டுமானாலும் செலவழிக்கத் தயாராக இருக்கிறேன்" என்று தட்டுத்தடுமாறி வார்த்தைகளைக் கோர்த்து பேசினான் ஜவான். அவை இறுதி வார்த்தைகள். சவப்பெட்டியைப் பற்றிப் பேசுவதற்குள் என் மடியில் படுத்தவாறே உயிரை விட்டான் ஜவான்.

கடவுள் என்ன காரியத்திற்காக என்னை இங்கு வரவைத்தாரோ தெரியவில்லை. ஆனால் ஜவான் ஆசைப்பட்டபடி அவனுடைய மரணத்திற்கு நான் வந்து விட்டேன். நான் மகனிடம் ஜவானின் ஆசையைச் சொன்னேன். "இந்த சவப்பெட்டிக்குள் தன்னை அடக்கவேண்டுமென்று உங்கள் தந்தையின் ஆசை இருந்தது. அந்த ஆசையை நிறைவேற்றுவது நம்முடைய கடமை" என்றேன் நான். மகன் என்னை களஞ்சிய அறைக்குள் அழைத்துச்சென்றான். அந்தச் சவப்பெட்டி இற்றுப்போய் அனாதையாக மூலையில் கிடந்தது. "ஐயா, நீங்கள் சொல்லும் விஷயம் எனக்குத் தெரியாது. இந்தப் பெரிய வீட்டை தந்தை நிர்மாணித்தார். எனக்காகவும் குடும்பத்துக்காகவும் அவர் கடைசிவரை வியர்வை சிந்தி உழைத்தார், நிறையச் சொத்துக்களை சேர்த்தார். அப்படிப்பட்ட மனிதரை இற்றுப் போன இந்தப் பெட்டிக்குள் அடக்க நான் ஒருபோதும் சம்மதிக்கமாட்டேன்" என்று ஒரே அடியாக மறுத்துவிட்டான் மகன். இதற்கு மேல் என்னால் ஒன்றுமே பேசமுடியாது. அந்த உரிமை எனக்கு இல்லை.

இது அவர்களின் குடும்ப விவகாரம். இறுதிக் கிரியைகள் ஆடம்பரமான முறையில் நடந்து நான் அவர்களின் வீட்டைவிட்டு புறப்படுவதற்கு முன் களஞ்சிய அறைக்குச் சென்று சவப்பெடடிக்கு அருகில் அமர்ந்தேன். மௌனமாக, புழுதி படிந்து இற்றுப் போயிருந்த பெட்டியை தூசு தட்டிவிட்டு மேல்மூடியைத் திறந்த நான் திகைத்துப்போனேன். சவப்பெட்டி நிறைய பணத்தாள்கள் கற்றை கற்றையாக அடுக்கி வைக்கப்பட்டிருந்தன. *பட்டறை 2009*



# வீரர்கள் அழிவதில்லை

எம்.எம்.நௌஷாத்

டாக்டர் மிலானோ முசுப்பாத்தியான ஆள். பயணம் முழுவதும் பாடிக் கொண்டே வந்தார். காட்டுப் பாதையால் பிக்அப் திரும்பியது. பாழடைந்த முச்சந்தி வந்ததும் வாகனத்தை நிறுத்தச் சொன்னார் டாக்டர் மிலானோ. ‘இந்த இடத்திலா? எதற்காக?’ என்று ஆச்சரியத்துதோடு கேட்டான் சாரதி. ‘ஆம். இந்த இடத்தில் தான்’ என்று பதிலளித்தார் டாக்டர் மிலானோ. சாரதி மிரளமிரள சுற்றுமுற்றும் பார்த்துக் கொண்டே ‘டாக்டர் ஐயா, இந்தக் குக்கிராமத் திற்கு எதற்காக என்னை அழைத்து வந்திருக்கிறீர்கள்?’ என்று கேட்க டாக்டர் சிரித்தார். ‘நீ பார்க்கிறாயே இந் தக் குக்கிராமம், இந்தக் கிராமத்தில் தான் நான் பிறந்தேன், வளர்ந்தேன், ஓடித்திரிந்தேன், படித்தேன் என்றால் நம்புவாயா?” ‘இந்தப் பாழடைந்த கிராமத்திலா? நம்பவே முடியவில்லையே ஐயா’ என்றான் சாரதி. பார்க்குமிடங்களில் எல்லாம் கிராமம் பாழடைந்து போய்த்தான் இருந்தது. கிராமத்தின் பெயர் அளுப்பொத்தை. உள்ளூர்மொழியில் அதன் அர்த்தம் சாம்பல்மேடு. உண்மையில் ஊரும் அப்படித்தான் தோற்றமளித்தது. ஐம்பதுவருடங்களுக்கு முன் பதித்த நடுகல், எழுத்துக்கள் எல்லாம் மங்கிப்போய் இப்போதும் அப்படியே இருந்தது. நடுகல்லின் மேல் மூவர் குந்திக்கொண்டு அரட்டை அடித்துக் கொண்டிருந்தார்கள். கறுப்பு நாயொன்று குறுக்கால் ஓடியது. வீதியோரங்களில் எல்லாம் மாமிச எச்சங்களும், குப்பைகூளங்களும்.

நீண்டதூரப் பயணம், இருவருக்கும் களைப்பாக இருக்கவே அருகிலிருந்த தேநீர்க் கடையில் சிற்றுண்டி எடுத்தார்கள். எடுத்ததும் டாக்டர் மிலானோ துள்ளித் திரிந்த இளமைக் காலத்திற்குச் சென்று விட்டார். அவர் அடிக்கடி பிரஸ்தாபித்ததெல்லாம் ஸீகா என்ற பெயரைத்தான். ஸீகா அவருடைய பழைய தோழன். அப்போது இருவருக்கும் வயது ஏழெட்டிற்குள் இருக்கும். ஸீகாவின் தந்தைக்குச் சொந்தமாக பெரியதோட்டம் இருந்தது. தோட்டத்திலே மாமரங்கள் நின்றன, அன்னாசிப் பழங்கள் விளைந்து குலுங்கின, பப்பாசி, மாதுளை, வாழை, கொக்கோ, கோப்பி என்று எல்லாவகையான பயிர்களும் தோட்டத்தில் இருந்தன, சில பருவங்களில் சோளம் காய்த்து தோட்டம் பொன் நிறமாக தகதகவென்று மின்னிற்று.

மிலானோவும், ஸீகாவும் என்ன செய்வார்களென்றால் விளைந்திருக்கும் சோளக் கதிர்களைத் திருடி தோட்டத்திற்குள்ளேயே நெருப்பு மூட்டி சுட்டுச் சாப்பிடுவார்கள். சுட்டசோளத்தின் சுவையோ சுவை. அது அவர்களுக்கு மட்டும்தான் தெரியும். தோட்டத்தின் கிழக்குமூலையிலே தூர்ந்துபோன கிணறு ஒன்று இருந்தது. அந்தக் கிணற்றிலே எல்லாக் காலங்களிலும் தண்ணீர் நிறைந்திருக்கும். தண்ணீரை அள்ளியள்ளி இருவரும் தலையிலே ஊற்றி ஆசை தீரக் குளிப்பார்கள். அநேகமான சமயங்களில் வகுப்பிலுள்ள குறும்புக்கார நண்பர்களும் அவர்களோடு சேர்ந்து கொள்வார்கள். அதிகாலை

வேளையில் வந்து மாம்பழங்களைப் பொறுக்குவார்கள். அவற்றிலே அணில் கோதிய மாம்பழங்களும் இருக்கும், நல்ல மஞ்சளான மாம்பழங்களும் இருக்கும். தோட்டத்திற்குள்ளே சிறிய கொட்டிலொன்று இருந்தது. அந்தக் கொட்டிலில் யாரும் தங்குவது கிடையாது. இவர்கள் எல்லோரும் பாய்களைப் போட்டு உள்ளே அமர்ந்து கொள்வார்கள். பிறகென்ன ஒவ்வொரு மாம்பழமாகக் கொறிப்பார்கள். சூரியனும் மறைய ஆரம்பிக்கும். பழுத்துச் சிவந்திருந்த கோப்பிப் பழங்களைக்கூட இவர்கள் விட்டு வைக்கவில்லை. அவற்றையும் பறித்து ருசித்துச் சாப்பிட்டார்கள். காய்த்துக்குலுங்கிய கொக்கோப் பழங்களையும் உடைத்து உண்டார்கள். எமகாதகப் பயல்கள்.

சாமர்த்தியமாகத் திட்டமிடுவதால் இந்த பக்காத் திருடர்களின் நாடகம் இலகுவில் பிடிபட மாட்டாது. எப்போது மிலானோவும், ஸீகாவும் அகப்படுவார்களென்றால் வயிற்றுவலி வந்து கதறும்போது, வாந்தியிலே கொக்கோப் பழ எச்சங்கள் வந்து கொட்டும் போது, வயிற்றுப் போக்கால் அவதியுறும் போது, காய்ச்சலால் நடுங்கித் துடிதுடிக்கும் பொழுது. எல்லாம் குணமடைந்தபின் மிலோனோவும், ஸீகாவும் நிறைய பிரம்புப் பழங்கள் சாப்பிடுவார்கள். எந்தள விற்கென்றால் முதுகு இரத்தவிளாராக சிவந்து போகும், கணுக்காலிலே வலியெடுக்கும், கன்னம் வீங்கும், உதடுகள் தடித்துத் தொங்கும். அதற்குப் பிறகு இரண்டுவாரங்களுக்கு அவர்கள் தோட்டப்பக்கம் தலை காட்டவே மாட்டார்கள் இரண்டுவாரங்கள் கழிந்ததா? மீண்டும் வேதாளம் முருங்கைமரத்தில் ஏறிவிடும்.

ஒரு வெள்ளிக்கிழமை காலை, ஸீகா முதல் ஆளாக வகுப்புக்கு வந்திருந்தான். கழுத்திலே ரை(tie), வெண்மை பளிச்சிடும் ஆடை, எல்லாவற்றையும் விஞ்சும் வகையில் இடக்கை மணிக்கட்டிலே அழகான கைக்கடிகாரம் இருந்தது. அது சூரிய ஒளியிலே தகதகவென மின்னியதுடன் சிவப்புநிறப் பட்டியோ ஒளியோடு எழில் சேர்த்தது. அந்தச் சிறிய பாடசாலையிலே கைக்கடிகாரம் அணிந்து வந்த முதல்மாணவன் ஸீகா என்பதால் நண்பர்கள் ஸீகாவைச் சூழ்ந்து கைக்கடிகாரத்தை தொட்டுத் தொட்டுத் பார்த்தார்கள், காதுச்சோணைகளை மணிக்கட்டுக்கருகிலே வைத்து டிக்டிக் ஒலியை ரசித்தார்கள். ‘என்னுடைய தகப்பனார் என்னுடைய பிறந்தநாளிற்காகப் பரிசளித்தார்’ என்று பெருமையாகக் கூறினான் ஸீகா. ஸீகாவைக் காண்கின்ற எல்லோரும் ‘ஸீகா நேரத்தைச் சொல்லப்பா’ என்று கேட்டார்கள். அவனும் பற்கள் தெரியும் புன்னகையோடு நேரத்தை வாசித்துக் கொண்டேயிருந்தான்.

ஸீகாவின் மணிக்கட்டிலே கடிகாரத்தைப் பார்த்ததிலிருந்து மிலானோ முகவாட்டத்துடன் காணப்பட்டான். மிலானோவின் தந்தை கூலித் தொழிலாளி. சின்னச்சின்ன எடுபிடி வேலைகள் செய்து அன்றாடம்

கிடைக்கும் சொற்ப ஊதியத்தில் தான் அவர்களுடைய வாழ்க்கை ஓடிக் கொண்டிருந்ததால் கைக்கடிகாரம் வாங்குமளவுக்கு அவனுக்கு வசதி இல்லை. சில வேளைகளில் சாப்பிட எதுவுமே இருக்காது. நிறைய நாட்களில் காலை ஆகாரமில்லாமலேயே பாடசாலைக்கு வருவான் மிலோனோ. காலில் சப்பாத்து கிடையாது. கைக்கடிகாரத்தை அவன் நினைத்தும் பார்க்க முடியாது. ஸீகா புத்திசாலி. மிலானோவின் முகவாட்டத்திற்கான காரணம் அவனுக்கு உடனே புரிந்ததால் தந்தையிடம் சென்று 'மிலானோவுக்கும் கைக்கடிகாரம் வாங்கிக் கொடுங்கள் அப்பா' என்று கெஞ்சினான். ஸீகாவின் தந்தையோ ஸீகாவின் கோரிக்கைக்கு இணங்க மறுத்து விட்டார்.

கடிகார மகிமைக்கேற்ப ஸீகாவும் ஆளே மாறினான். பாடசாலை காலை ஏழு முப்பதுக்கு ஆரம்பிப்பது என்றால் ஏழு இருபத்தொன்பதிற்கே வகுப்புக்குள் நிற்பான் ஸீகா, சரியாக ஐந்து ஐம்பத்தொன்பதிற்குப் பல் துலக்குவான், ஆறு இருபத்தொன்பதிற்கு ஆடை அணிவான், ஆறு நாற்பத்தொன்பதிற்கு சப்பாத்து அணிவான், ஆறு ஐம்பத்தொன்பதிற்கு சாப்பிடுவான், கைக்கடிகாரம் காரணமாக அவனிடம் ஒரு நேரந் தவறாமைக் குணம் வந்து விட்டது. 'கடிகாரப் பையன்' என்ற செல்லப் பெயரும் அவனுக்கு வந்தது. பளிச்பளிச் என்று பளபளக்கும் சப்பாத்தும் அணிந்து கொண்டு மின்மின் என்று மின்னும் கைக்கடிகாரமும் அணிந்து கொண்டு கடிகார இறக்கைகள் முளைத்த சிறுவனாகப் பவனி வந்தான் ஸீகா. இந்தச் சங்கதிகள் ஒன்றுமில்லாததால் மிலானோ எப்போதும் பாடம் படிப்பதிலே மூழ்கிக் கிடந்தான். நெஞ்சை நிமிர்த்துவதற்கோ, கம்பீரமாக நடப்பதிற்கோ அவனுக்கு எந்தத் தகுதியும் இருக்கவில்லை. அவன் ஏற்கனவே நோஞ்சனாக இருந்தான், கேசம் பரட்டையாகவும் கண்கள் துருத்திக்கொண்டும் நின்றன, மண்ணெண்ணெய் விளக்கில் படித்ததால் காலையில் அவனுடைய மூக்குத் துவாரங்களில் கரி படிந்திருக்கும். துன்பியலான பாடசாலை வாழ்க்கை.

டாக்டர் மிலானோ பெருமூச்சுடன் கதையை நிறுத்தினார். 'என்ன டாக்டர் ஐயா, கதையை திடுதிப்பென்று நிறுத்திவிட்டீர்கள்? மீதிக் கதை எங்கே? படிப்பதற்காக நன்றாக கஷ்டப்பட்டிருக்கிறீர்கள். ஆனாலும் நீங்கள் டாக்டரான கதையைச் சொல்லவில்லையே' என்று ஆவலுடன் கேட்டான் சாரதி. டாக்டர் விகசிப்புடன் அவனைப் பார்த்து 'அந்தக் கதை கொஞ்சம்தான். நான் புலமைப்பரிசில் பரீட்சையிலே திறமையுடன் சித்தியடைந்தேன். நகரப் பாடசாலைக்கு வரும்படி எனக்கு அழைப்பு வந்தது. இருக்கின்ற சிறிய வீட்டையும் விற்றுவிட்டு நகரத்திற்கு கிளம்பிப் போனோம். நகரத்தின் ஒதுக்குப் புறத்தில் சிறிய வீடொன்றை வாடகைக்கு எடுத்தோம், அதற்குப்பிறகும் நான் மிகவும்

கஷ்டப்பட்டேன். எப்படியோ இந்த நிலைமைக்கு உயர்ந்து விட்டேன்' என்றார் டாக்டர்.

'டாக்டர் ஐயா, உங்கள் நண்பன் ஸீகாவுக்கு என்ன நடந்தது?' 'நான் நகரத்திற்குப் போகின்ற அன்றையதினம் இருவரும் அழுது கொண்டே இருந்தோம். அந்திப் பொழுதுவரை எங்கள் அழுகை நீடித்தது. அதற்குப் பிறகு நாங்கள் பிரிந்துவிட்டோம். இது சுமார் இருபது வருடங்களுக்கு முன்பு நடந்த சம்பவம்' என்றார் டாக்டர்.
'அதற்குப்பிறகு உங்கள் நண்பரை நீங்கள் சந்திக்கவே இல்லையா?'
'இல்லை, சந்திக்கவேயில்லை. என்னுடைய தந்தையும் இறந்து விட்டபின் இந்த ஊருக்கு வரக்கூடிய சந்தர்ப்பம் எனக்குக் கிடைக்க வில்லை. இன்று என்னுடைய நண்பனைக் காண்பதற்காகத்தான் இங்கே வந்திருக்கிறேன்' என்று முடித்தார் மிலானோ. அடக்கமுடியாத ஆவலுடன் சாரதியும் ஸீகாவைக் காண்பதற்கு ஆசைப்பட்டான்.

இதற்கு மேல் வாகனம் செல்லாது என்று அருகிலிருந்த கடைக்காரன் சொல்லவே இருவரும் சரளைக்கற்கள் நிறைந்த ஒற்றையடிப் பாதையால் நடக்க ஆரம்பித்தார்கள். கவனமாக அடிகளை வைக்கவேண்டும். பாதை இருமருங்கிலும் புதர்களும், அடர்ந்தகாடும். அங்கொன்றும் இங்கொன்றுமாக குடிசைகள். கொஞ்சதூரம் நடந்ததும் ஆறு குறுக்கிட்டது. ஆற்றைக் கடக்க பாலம் எதுவும் இருக்காததால் வேறு வழியின்றி நீளக்காற்சட்டையை முழங்கால் வரை மடித்துக்கொண்டு மிலானோ ஆற்றிற்குள் இறங்க சாரதியும் அவரைப் பின் தொடர்ந்தான். எதிர்பாராதவிதமாக மழைதூற ஆரம்பித்ததும் ஒதுங்கக்கூட இடமில்லாததால் மிலானோ மழையிலே தெப்பமாக நனைந்தார். குளிர் காரணமாக உடம்பு வெடவெடவென்று நடுங்கியது. சாரதி டாக்டரைப் பரிதாபத்தோடு பார்த்தான். இருவரும் மலையுச்சியை நோக்கி நடந்தார்கள். மலையடிவாரத்திலிருந்து மூன்றுபாதைகள் பிரிந்துசென்றன. கிராமவாசிகள் சொன்ன அடையாளத்தின்படி புளியமரத்திற்கு வலதுபக்கத்திலிருந்த பாதையால் இருவரும் திரும்ப ஸீகாவின் வீடு தூரத்திலே புள்ளியாகத் தெரிந்தது. வீட்டை அண்மித்ததும் டாக்டர் மிலானோ திடுக்குற்றுப் போனார். மிகவும் சிறியவீடு, நாணற்புற்களால் மேயப்பட்ட கூரை. இதுவா அவனுடைய வீடு? மிகவும் செல்வச்செழிப்போடு வாழ்ந்த ஸீகா ஒதுக்குப்புறத்தில் அனாதையைப் போல் வாழ்வானென்று அவர் நினைத்துக்கூட இருக்கவில்லை. மனசிலே இலேசாக ஒருவலி உண்டாயிற்று. என் அருமை நண்பன் ஸீகாவுக்கு என்னதான் நேர்ந்தது.?

முற்றத்திலே அரைநிஜார் பையன்கள் கோலிக்குண்டு விளையாடிக் கொண்டிந்தார்கள். வெயில் சுட்டெரித்த மேனி, கன்னங்கரிய ஒருத்தன்,

மேற்சட்டை இல்லை. ஸீகாவின் பையன்களாகத் தான் இருக்க வேண்டும் என்று நினைத்துக்கொண்டார் டாக்டர் மிலானோ. ஒருமுகம் சின்னவயதில் பார்த்த ஸீகாவின் முகத்தைப் போலிருந்தது. 'எங்கே உன் தந்தை ஸீகா?' என்று கேட்டார் டாக்டர் மிலானோ. ஸீகாவின் தோற்றத்திலிருந்த பையன் வீட்டிற்குள் செல்லும்படி சைகை காட்டிடவே இருவரும் வீட்டிற்குள் நுழைந்தார்கள். அப்போதுதான் மழை ஓய்ந்திருந்த படியால் வீட்டிற்குள்ளே சில இடங்களில் மழைநீர் சொட்டுசொட்டாக வடிந்துகொண்டிருந்தது. நாலைந்து பழைய பிளாஸ்ரிக் கதிரைகள், தேய்ந்துபோன ஒருமேசை, ஒரு கலண்டர், ஒரு சுவர்க்கடிகாரம், நிறம் மங்கிப்போன ஜன்னல் திரைச்சீலை, நிலத்தில் விழுந்து கிடந்த நாலைந்து புத்தகங்கள். இவைகளைத் தவிர வீட்டிற்குள் வீடு என்று சொல்வதற்கு வேறெதுவும் இருக்கவில்லை. சுவர் சுண்ணாம்புச் சுவர். சுவரில் திட்டுதிட்டான படிவுகள் மாத்திரமே காணப்பட்டன.

புழுதிபடிந்த பாய்களுக்கும், ஓட்டை உடைசலான ஒரு கட்டிலுக்கும் நடுவே நின்ற ஒரு புழுதி படிந்த பெண்மணி 'நான் ஸீகாவின் மனைவி, நீங்கள் யார்?' என்று கேட்டாள். டாக்டர் தன்னை அறிமுகப்படுத்திக் கொள்ள 'இங்கேயே இருங்கள், நான் ஸீகாவை அழைத்து வருகிறேன்' என்று சொன்னாள் பெண்மணி. எங்கே இருக்கச் சொன்னாள் என்று தெரியவில்லை. அமருவதற்கென்று ஆசனமெதுவும் அங்கிருக்க வில்லை. வேறு வழி தெரியாமல் இருவரும் அவளைப் பின்தொடர துாரத்தில் ஒரு புள்ளியாக ஸீகா நின்றான். அவனை நெருங்கியபோது தான் ஸீகா இராணுவச் சீருடையுடன் நிற்பது தெரிந்தது. இருவருடைய கண்களும் சந்தித்துக் கொள்ள இருவரும் ஆரத்தழுவிக் கொண்டார்கள். 'இராணுவச் சீருடையுடன் நிற்கிறாயே, என்ன காரணம்?' என்று ஆரம்பித்தார் டாக்டர் மிலானோ.

வாடியுலர்ந்து எலும்புக்கூடு மாதிரி தோற்றமளித்த ஸீகாவின் கண்களில் ஒளி மின்னியது. ஸீகா சுற்றும்முற்றும் பார்த்தான் டாக்டர் மிலானோவும் சுற்றும்முற்றும் பார்த்தார், ஸீகா ராகமிசைத்து இனிமையான குரலில் பாடஆரம்பித்தான்.

*இது என்தேசம்!*
*பனிபடர்ந்த மலைச்சாரல் ரம்மியமானது,*
*நீரூற்றின் தெளிந்த நீரில் நான் நீராடுவேன்.*
*இது என்தேசம்! மக்களின் இதயங்களை நான் வருடுவேன்.*
*இது என்தேசம்! மக்களின் இதய மலர்களோடு நான் உறவாடுவேன்!.*
*இது என்தேசம்!*
*நட்சத்திரங்களில் நடந்து கொண்டும், நீலக்டலில் பறந்து கொண்டும் என் விழிகளால் படம் பிடிப்பேன்.*
*இது என்தேசம்.! பாடுவேன்! சுகானுபவத்தில் மிதப்பேன்! ஓடங்களில் நடனமாடுவேன்! விருட்சங்களை வில்லாய் வளைப்பேன்.*

*இது என்தேசம்.! என்தேசம் சாசுவதமானது! என் குருதிச் சொட்டுக்கள் பனியாய் இலைகளின் மேலே படியும், எங்கேயும் செல்லுங்கள்.*
உள்ளத்தை ஊடுருவிச் சென்ற பாட்டு, டாக்டர் மிலானோவுக்கு உடம்பெல்லாம் புல்லரித்தது. சாரதிக்கும் அதேஅனுபவம்.

'ஸீகா உன்னைக் குறித்து நான் பெருமைப்படுகிறேன். இந்தத் தேசத்திற்காக உன்னை எப்படி அர்ப்பணித்துள்ளாயோ அதே போலத்தான் நானும், நான் இராணுவ டாக்டர்' என்றார் டாக்டர் மிலானோ. அங்கு நின்ற அனைவருக்கும் ஆச்சரியமான சந்திப்பாகவும், மகிழ்ச்சியைத் தரக்கூடிய சுகானுபவமாகவும் அந்த நிகழ்வு நடந்து முடிந்தது. இருவரும் யுத்தகளத்திலே தங்களுக்கு நேர்ந்த சுவையான நிகழ்வுகளைப் பகிர்ந்து கொண்டார்கள். பிறகு டாக்டர் மிலானோ, ஸீகா இருவரும் தங்கள் பாடசாலைப் பராயத்தை நோக்கி பின்னோக்கிப் பயணித்தார்கள். நதிக்கரையோரத்தில் குயிலோடு பேசியது, காட்டுத்தேன் குடித்தது, மூங்கிற் குழல்களால் துப்பாக்கி செய்தது, அம்பு, விற்களுடன் காட்டிற்குள் அலைந்தது, நரியின் கல்யாணத்திற்குப் போனது, பாம்பு துரத்தத் துரத்த பிடறி அடிபட ஓடியது என்று திரைப்படம்போல் நினைவுகள் ஓடிக்கொண்டேயிருந்தன. எத்துணை அழகான இளமைக்காலம்!

ஸீகாவின் மனைவி ருசியான பகலாகாரம் சமைத்திருந்தாள். பலா விதைப் பொரியல், தேங்காய்ச் சம்பல், கருவாட்டுக் கறி என்று சுவையான கலவை, டாக்டர் மிலானோ நீண்ட நாட்களுக்குப் பிறகு வயிறு நிரம்பச் சாப்பிட்டார். எப்படியிருந்த போதிலும் ஸீகா வாழ்ந்து வரும் சூழல் குறித்த கவலை நெஞ்சை நெருடிக் கொண்டேயிருந்தது. கேட்கக்கூடாது, கேட்கக்கூடாது என்று நினைத்து இனியும் பொறுக்கமுடியாது என்ற நிலைமை வந்தவுடன் கேட்டுவிட்டார் டாக்டர் மிலானோ.
'ஸீகா உண்மையைச் சொல், நீ இப்போது வாழும் வாழ்க்கையை என்னால் தாங்கிக் கொள்ள முடியாமல் உள்ளது. உனக்கு என்ன நடந்தது, ஸீகா?'
'டாக்டர் மிலானோ எதனைப் பற்றிக் கேட்கிறீர்கள்' 'டாக்டர் என்ற அடைமொழி வேண்டாம், சும்மா மிலானோ என்றே கூப்பிடு, எதையுமே மறைக்க நினைக்காதே. செல்வச் செழிப்போடு வாழ்ந்த நீ எப்படி இப்படியொரு வறுமைச் சுழிக்குள் அகப்பட்டுக் கொண்டாய்? கட்டாயம் நீ சொல்லித்தான் ஆகவேண்டும்' என்று வற்புறுத்தினார், மிலானொ. ஸீகா கொஞ்சநேரம் மௌனமாக இருந்தான். அவன் அழுகிறானா என்று பார்த்தால் அப்படியுமில்லை. ஆனாலும் துயரம் முகத்தில் கவிந்து கிடந்தது. தன்னை ஆசுவாசப்படுத்திக் கொண்டு பேச ஆரம்பித்த ஸீகா பேசினான், பேசிக்கொண்டே போனான். அவன் பேசப்பேச உள்ளம் உருகி, நீர்க்குமிழிகளாக தான் வெடித்துச் சிதறுவதைப் போல் உணர்ந்தார் டாக்டர் மிலானோ.

ஸீகா பணக்கற்றைகளோடும், செல்வ மிடுக்கோடும் வாழ்ந்தவன். பிறந்த வேளை அவன் கரங்களில் வெள்ளிக் கரண்டிகள் இருந்தன. பட்டினத்தில் இருந்த தந்தைக்குச் சொந்தமான இரும்பு விற்கும் கடை, விசாலமான பழத்தோட்டம், பெரிய பங்களா, கைச்செலவுக்கு நினைத்த நேரத்தில் நினைத்த அளவு பணம், விதம்விதமான சமையலுக்கென தருவிக்கப்பட்ட சமையல்காரன், தோட்டக்காரன், கூர்க்கா இப்படி எல்லாமே ஸீகாவுக்கு கைக்கெட்டிய தூரத்தில் இருந்தன. எது வரைக்கும் என்றால் பாடசாலை விளையாட்டுப் போட்டியில் அவன் நானூறுமீற்றர் ஓடிக் கொண்டிருக்கும் போது அவனுடைய காதுக்கு பேரிடியாய் வந்து சேர்ந்ததே செய்தி அது வரைக்கும். வீட்டுத் தோட்டத்திலிருந்த பலாமரத்தில் ஏறி பலாக்காய் பறித்துக் கொண்டிருந்த போது ஸீகாவின் தந்தை தவறி விழுந்து விட்டார் என்பதுதான் அந்தச் செய்தி. வீட்டு முற்றத்தில் நிறைய ஆட்கள். தந்தையின் இடுப்பு முள்ளந்தண்டின் நான்காவது எலும்பு முறிந்து விட்டதாக நின்றவர்கள் பேசிக் கொண்டார்கள். ஸீகா அப்போது சின்னப்பையன். அவனுக்கு கொஞ்சம் புரிந்தது நிறையப் புரியாதது மாதிரி இருந்தது. ஸீகாவுடன் பிறந்த சகோதரர்கள் ஐந்துபேர். அத்தனை பேரும் இளையவர்கள். ஸீகாவின் தாய் தந்தையை எல்லா ஆஸ்பத்திரிகளுக்கும் கொண்டு போனாள். நகரத்திலுள்ள எல்லா வைத்திய நிபுணர்களும் அவரைப் பரிசோதித்தார்கள். கையிலிருந்த பணம் கரைந்து கொண்டே போனது. இருப்பிலுள்ள காசு தீர்ந்தபின் நகைகளை விற்க ஆரம்பித்தாள் ஸீகாவின் அம்மா. பிறகு சொத்துக்கள் ஒவ்வொன்றாக கைமாறின. உழைப்பதற்கென்று யாருமேயில்லை. எல்லோருமே சின்னவர்கள் என்பதால் தாய்க்கு அவர்களால் உதவமுடியவில்லை.

ஒருநாள் பாடசாலை விட்டுவரும்போது அம்மா பாதையில் நின்று கொண்டிருந்தாள். இடுப்பிலே இரண்டே வயதான தங்கை, வீட்டின் கேற்றிலே பெரிய பூட்டொன்று தொங்கியது. நெருங்கிப் பாரத்தபொழுது அம்மா அழுதுகொண்டிருப்பது தெரிந்தது. ‘ஏனம்மா அழுகிறீர்கள்?’ என்று கேட்டான் ஸீகா. ‘வீட்டை விற்றுவிட்டேன், உனக்காகத்தான் காத்திருக்கிறேன். வாபோகலாம்’ என்று தேம்பிக்கொண்டே பதிலளித்தாள் அம்மா. புதிய வாடகை வீட்டில் குடிபுகுந்த நேரத்திலிருந்து வாழ்க்கை இன்னமும் கடினமாகிற்று. எவ்வளவு பணம் செலவான போதிலும் தந்தையை குணப்படுத்த முடியவில்லை. முள்ளந்தண்டு முறிவைச் சரிசெய்யமுடியாது என்று நரம்பியல் விஷேடநிபுணர்களே கைவிரித்து விட்டார்கள். படுத்த படுக்கையில் அழுந்தியவாறே இறுதிமூச்சை விட்டார் ஸீகாவின் தந்தை. அவருடைய பிற்புறம் முழுவதும் ஆறாமற்போன படுக்கைப்புண்கள் நிறையக் காணப்பட்டன. தந்தையின் மரணத்தின் பின் தாயும் படுத்தபடுக்கையாகிப் போனாள். எல்லாப் பொறுப்புகளையும் சுமக்க வேண்டிய துர்ப்பாக்கிய நிலைமைக்கு ஸீகா தள்ளப்பட்டான். மூத்தபையனாக இருப்பதன் தார்ப்பரியம் அப்போதுதான் அவனுக்குப்

புரிந்தது. அந்தளவுக்கு அவன் கஷ்டப்பட்டான். என்றாலும் அவன் மனந் தளரவில்லை, படித்தான். இராணுவத்தில் சேர வேண்டுமென்பதே அவனுடைய கனவெல்லாம். எப்படியோ அது நிறைவேறியது.

'நோயாளியான அம்மாவைக் கவனித்துக்கொள்வது, சகோதரர்களின் படிப்பு, குடும்பத்தைக் கொண்டுசெல்வது என்று என்வாழ்க்கை ஒரு மாதிரியாகப் போய்க்கொண்டிருக்கிறது' என்று முடித்தான் ஸீகா.
'சொற்பமாகக் கிடைக்கும் உன்னுடைய சம்பளத்தைக் கொண்டு இவ்வளவு பொறுப்புக்களையும் நிறைவேற்றுவது உனக்கு சிரமமாகத் தெரியவில்லையா, ஸீகா?'
'கஷ்டம் தான், பொறுமையாக அவற்றைச் சகித்துக் கொள்கிறேன். வேறுவழிதான் இல்லையே!' 'கோபித்துக் கொள்ளாதே ஸீகா நான் ஓர் ஆலோசனை கூறுகிறேன். உன்னிடம் நல்ல திறமை இருக்கிறது. இந்தத் தொழிலை விட்டு வியாபாரமொன்றை ஆரம்பித்தாயென்றால் உனக்கு சீக்கிரமே முன்னுக்கு வந்துவிடமுடியும்' என்றார் டாக்டர் மிலானோ. 'உயிரை விடச்சொல் விடுகிறேன். ஆனால் இந்தத் தொழிலை விட்டுவிடுவதைப் பற்றி என்னால் கற்பனை கூடப் பண்ணிப்பார்க்க முடியாது. சின்ன வயதிலிருந்தே எனக்கொரு தாகம் இருந்தது. நாட்டுக்காக என்னையே அர்ப்பணிக்க வேண்டுமெனற கனவு, அதற்காகத்தான் இவ்வளவு கஷ்டத்திற்கு மத்தியிலும் படித்து இராணுவத்தில் இணைந்து கொண்டேன், அந்தக் கனவை சுருட்டி வீசச்சொல்கிறாயா?' என்று கேட்டான் ஸீகா. இதற்குமேல் டாக்டர் மிலானோ ஒன்றுமே பேசவில்லை. ஏனெனில் ஸீகாவின் பதிலில் அர்த்தமும் தெளிவும் இருந்தது. என்றாலும் எப்படியாவது ஸீகாவுக்கு உதவ வேண்டுமென்று அவர் விரும்பினார். பலதடவைகள் முயற்சித்த போதிலும் ஸீகா பணம்வாங்க மறுத்துவிட்டான். ஸீகாவின் மனைவியை அணுகினார் மிலானோ, அவளோ 'மன்னிக்கவும் டாக்டர், நானோர் இராணுவவீரனின் மனைவி, மற்றவர்களிடம் பணம் வாங்கி எனக்குப் பழக்கமில்லை' என்று உறுதியாக மறுத்துவிட்டாள்.

டாக்டர் மிலானோ எப்போதும் எளிமையான தோற்றத்தில் காணப்படுவார். அழகாக ஆடை அணிவார், ஆனால் ஆடம்பரம் இருக்காது, அவருடைய விழிகளில் தீட்சண்யம் இருந்தது. நடையில் கம்பீரமும், பேச்சில் ஞானமும் ஒளிர்ந்தது. மிடுக்கான சொற்களுடன் அவர் பேசினார். அற்பமான காரியங்களையும் அவர் அற்புதமாகச் செய்வார். அட்சரம் பிசகாத இராணுவ டாக்டர் என்ற பதத்திற்கு அகராதி இலக்கணமாக அவர் திகழ்ந்தார். அவருடைய காற்சட்டைப்பைக்குள் எப்போதும் நேரஅட்டவணைப் புத்தகம் இருந்தது. அதிகாலை 4.55 உறக்கத்தை முறிக்கும் நேரம், 5.00 பல் துாய்மைக் காரியம், 5.10 வெந்நீராடுதல், 5.30 தேநீருடன் உலர் ரொட்டி, என்ற அட்டவணைப் பிரகாரம் டாக்டர் மிலானோ இயங்கினார்.

அதிகாலை ஐந்து நாற்பத்தைக்கு இராணுவ அணிவகுப்பில் முதல்ஆளாய் நிற்பார். இராணுவ அணிவகுப்பில் நீங்கள் தினசரி கலந்துகொள்ள வேண்டியதில்லை என்று சகஅதிகாரிகள் சொல்லியும் அவர் மறுத்துவிட்டார். 'நான் இராணுவ வீரனாகவே வாழ விரும்புகிறேன், இராணுவவீரனாகவே மரணிக்கவும் விரும்புகிறேன்' என்றார் டாக்டர் மிலோனோ. தான் சொன்னதன் பிரகாரம் அசல் இராணுவ வீரனாகவே வாழ்ந்துவந்தார் அவர். பிணி, பீடை, உபாதைகள் எதுவும் இதுவரை அவரைப் பீடித்தது கிடையாது.

டாக்டர் மிலானோவுக்கு பிடித்தமான ஆடையின் நிறம் வெள்ளை அல்லது சாம்பல், பல்துலக்கும் பிரஷ் பச்சைநிறம், சப்பாத்து கபிலநிறம், உள்ளாடை கறுப்பு நிறம், கழுத்துப்பட்டி கருநீலம், காலுறை செம்மஞ்சள் நிறம், நீர் அருந்தும் குவளை ஒலிவ்பச்சை நிறம், சாப்பிடும் பீங்கான் வெளிர்நீலநிறம், பேனை மெரூன்நிறம், பிறிப்கேஷ் கிறிம்ஸன் நிறம், கைக்கடிகாரம் பொன்னிறம், கைலேஞ்சி மஞ்சள்நிறம். இது டாக்டர் மிலானோவின் நிறக்கோட்பாடுகள். இவ்விதிகளை அவர் ஒருபோதும் மீறியது இல்லை. அதைப் போலவே நேரந்தவறாமை அவருடைய இரண்டாவது கோட்பாடாகவும், உயரதிகாரிகளின் கட்டளைகளுக்கு நூற்றுக்கு நூறு அடிபணிதல் மூன்றாவது கோட்பாடாகவும் இருந்தன.

டாக்டர் மிலானோ எதற்கும் அஞ்சா எ.்.கு இதயம் படைத்த சிங்கமாக இருந்தார். டிங்டோங் அவருடைய மேலதிகாரி. டிங்டோங்கைச் சந்திக்கச் சென்றார் டாக்டர் மிலானோ. 'ஐயா, நான் திருமணம் செய்யப் போகிறேன், விடுமுறை வேண்டும்' என்றதும் டிங்டோங் கேட்ட முதல்கேள்வி, 'டாக்டர் நீங்கள் கட்டாயம் திருமணம் செய்யத்தான் வேண்டுமா?' அப்படிப்பட்ட பிரகிருதிதான் டிங்டோங். பிறகு நேர்முகப் பரீட்சை ஆரம்பித்தது. மணமகளுடைய பெயர், வயது, குடும்பப் பின்னணி, கல்வித் தராதரம் இப்படி இத்தியாதி கேள்விகள். அதுவும் போதவில்லையென்று மணமகளின் புகைப்படத்தையும் சமர்ப்பிக்கும்படி கேட்டார் டிங்டோங். இப்படியான அதீதப் பிரசங்கி கேள்விகளால் சினமுற்று டாக்டர் மிலானோ இடக்குமுடக்காக நடந்துகொண்டாரா என்றால் அதுவுமில்லை. இடக்குமுடக்காகப் பதிலளித்து அவருக்குப் பழக்கமேயில்லை. திருமணத்திற்காக பதினான்கு நாட்கள் விடுமுறை கேட்டு விண்ணப்பித்திருந்தார் டாக்டர் மிலானோ. அத்தனை நாட்கள் விடுமுறை வழங்க அடியோடு மறுத்துவிட்ட டிங்டோங் சாக்குப்போக்குச் சொல்லி ஐந்து நாட்களுக்கு விடுமுறையை அனுமதித்தார். டாக்டர் மிலானோவின் திருமணநாள் நெருங்கியதும் எதிர்பாராத விதமாக யுத்தமேகங்கள் சூழ ஆரம்பித்து எல்லா இராணுவ வீரர்களதும் விடுமுறைகள் ரத்துச் செய்யப்பட்ட அதேவேளை டாக்டர் மிலானோவின் ஐந்துநாள் திருமண விடுமுறையிலும் வெட்டுவிழுந்தது.

அலங்கரிக்கப்பட்ட மணமகள் மணமேடையிலே உறவினர்கள் புடைசூழ வீற்றிருந்தாள். பிற்பகல் மூன்று முப்பதிற்குத் திருமணம். திருமணமண்டபத்திற்கு குறித்த சுபநேரத்திற்கு வருவதாக டாக்டர் மிலானோ வாக்களித்திருந்தார். திருமணத்திற்கு வந்த எல்லோரும் பதற்றத்துடன் மணமகனை எதிர்பார்த்துக் காத்திருந்தார்கள். மணமகளும் மிகக் கவலையோடு இருந்தாள். முகத்திலே மணமகளுக்குரிய தேஜஸ் இருக்கவில்லை. துயரத்தை வெளிக்காட்டிக் கொள்ள முடியாமல் அவஸ்தையுற்று அமைதியோடு காத்திருந்தாள் அவள். சுபநேரம் நெருங்கியது. என்னே அதிசயம்! டாக்டர் மிலானோ சரியாக மூன்று இருபத்தொன்பதிற்கு திருமண மண்டபத்திற்குள் பிரவேசித்தார். மணமகள் வீட்டார் மிகக்குதுாகலத்துடன் அவரை வரவேற்றார்கள். ஆடைமாற்றவும் அலங்கார மணமகனாக மாறவும் அவருக்கு நேரமிருக்கவில்லை. இராணுவச்சீருடை தான் அவருடைய திருமண ஆடை. திருமணம் இனிதே நடந்து முடிந்தது. டாக்டர் மிலானோவைக் கூட்டிக்கொண்டு வந்த ட்ரக்வண்டி திரும்பிச் செல்லாமல் அங்கேயே நின்றது. அழகாகச் சோடிக்கப்பட்ட சொகுசு மோட்டார்கார் அதற்கருகிலே நின்றது. காகமும், பஞ்சவர்ணக்கிளியும் அருகருகே நிற்பதுபோல் ஒரு காட்சி, மிலானோ மணமகளை வாகனத்திற்குள் ஏற்றினார். மணமகளுக்கு மனஸ்தாபம் உண்டாகிற்று.

‘இப்படியொரு வாழ்க்கை தேவைதானா?’ என்று முகத்திலடித்தது போல் அவள் கேட்டாள். ‘என்னைத் திருமணம் செய்வதற்கு முன்பாகவே நான் இராணுவடாக்டர் என்ற விஷயம் உங்களுக்குத் தெரியும்தானே’
‘நிச்சயமாக’
‘இராணுவடாக்டரான நான் யுத்தத்திலே காயமடையும் வீரர்களுக்கு மருந்திடுகிறேன். நானே சிகிச்சை அளிக்கிறேன், குணமடையும் வரை அவர்களை நானே பார்த்துக் கொள்கின்றேன். அவர்கள் காட்டிலும், மழையிலும், பணியிலும் நமக்காகப் போராடுகிறார்கள். நாம் அவர்களுக்காக கைம்மாறு செய்யத்தேவையில்லை என்றா சொல்லுகிறீர்கள்?’
‘அதற்கு நீங்கள் மட்டும்தானா?’
‘வீடு எரிந்துகொண்டிருக்கும் போது சிட்டுக்குருவி தன்னுடைய சிறிய சொண்டினால் நீரைமொண்டு கொண்டுபோய் நெருப்பை அணைக்க முயற்சித்ததாக ஒரு கதை இருக்கிறது. பகுத்தறிவேயில்லாத சிட்டுக் குருவியின் கடமையுணர்ச்சியில் ஓர் அற்பப் பங்காவது நமக்கும் இருக்க வேண்டுமல்லவா?’ என்று கேட்டார் டாக்டர் மிலானோ. டாக்டரின் புது மனைவி இராணுவமுகாமில் இரண்டுவாரங்கள் மட்டுமே தங்கினாள். அதற்குப் பிறகு தன்னுடைய வீட்டுக்குப் போய்விட்டாள். டாக்டரின் மிலானோவின் எந்த வியாக்கினங்களாலும் அவள் சமாதானமடையவில்லை.

திடீரென்று ஒரு நாள் அவள் செய்தியொன்று அனுப்பினாள். தான் கர்ப்பமடைந்துள்ளேன் என்பதுதான் அந்தச் செய்தி. டாக்டர் மிலானோ

மிகவும் மகிழ்ச்சியடைந்தார். தொடர்ந்து வேறு செய்தியும் வந்தது. மனைவி கர்ப்பமடைந்த நேரத்திலிருந்து வாந்தியெடுக்க ஆரம்பித்துவிட்டாள் என்பதுதான் அந்தச் செய்தி. வாந்தியென்றால் சும்மா பேச்சுக்கு சொல்லும் வாந்தியல்ல. ஒரு மிடறு தண்ணீர் அருந்தினாலும் அது பன்மடங்காகி, நூறுமடங்காகி அன்றைய நாள் முழவதும் வாந்தியாக விசிறியது. வயிற்றுக் குழிக்குள் உள்ள சிறுகுடல், பெருங்குடல் எல்லாம் வாய்க்குழி வழியாக வெளியே வீசப்பட்டு விடுமோ என்று அச்சமடையுமளவிற்கு வாந்தி அதிதீவிரமாக இருந்தது. இத்தனை விஷயங்களையும் மிலானோ மனைவி சொல்லித்தான் தெரிந்து கொண்டிருந்தார். டாக்டர் மிலானோ டிங்டோங்கைச் சந்தித்தார்.
'ஐயா!, என் மனைவி வாந்தியெடுத்துக் கொண்டே இருக்கிறாள். தயவுசெய்து விடுமுறை வேண்டும்'
'ஏன் வாந்தி எடுக்கிறாள்?'
'அவள் கர்ப்பமடைந்து விட்டாள்'
'டாக்டர் மிலானோ, நீங்கள் ஒருடாக்டர் அல்லவா?'
'ஆம்..ஐயா!..'
'கர்ப்பிணிகள் வாந்தி எடுக்கத்தான் செய்வார்கள் என்பது உங்களுக்கு நன்றாகத் தெரியும்' 'ஆமாம்'
'நீங்கள் அங்கேபோய் செய்யக்கூடியது ஏதாவது இருக்கிறதா?'
'விஷேசமாக ஒன்றுமில்லை. மகப்பேற்று நிபுணர் பார்த்துக் கொள்வார். என்றாலும் முதற்குழந்தை அல்லவா? மனைவி அதிகமாகப் பயப்படுகிறாள். அருகில் நான் இருந்தால் மனசுக்கு தெம்பாக இருக்குமென்று மனைவி என்னை அழைத்துக்கொண்டே இருக்கிறாள்' என்றார் டாக்டர் மிலானோ. 'நீங்கள் சொல்வதை நான் ஒப்புக்கொள்கின்றேன், டாக்டர் மிலானோ. ஆனால் இராணுவ வீரர்களாகிய நாங்கள் சின்னச்சின்ன விஷயங்களுக்காக மனதை குழப்பிக்கொள்ளக் கூடாது. மன உறுதியுடன் நின்று நாட்டுக்காக நாம் செய்யக்கூடிய கடமையில்தான் கண்ணாயிருக்க வேண்டும். புரிகிறதா டாக்டர்?' 'புரிகிறது' என்றார் மிலானோ.

அதற்குப்பிறகு நிறையத் தொலைபேசி அழைப்புக்களும், குறுந்தகவல்களும் மனைவியிடமிருந்து வந்தபோதிலும் டாக்டர் மிலானோ அவைகளைப் பொருட்படுத்தவேயில்லை. மூன்றுமாதங்கள் கழித்து டாக்டர் மிலானோவுக்கு மூன்றுநாட்கள் விடுமுறை கிடைத்தது. மனசு நிறையக் கற்பனைகளைச் சுமந்துகொண்டு வீட்டிற்குள் கால்வைத்த அவரிடம் மனைவிகேட்ட ஒரு கேள்வியால் அப்படியே திக்குமுக்காடிப் போய்விட்டார் டாக்டர் மிலானோ. 'என்னை நீங்கள் எப்போது விவாகரத்து செய்யப்போகிறீர்கள்?' என்பதுதான் அவள் கேட்டகேள்வி. மிலானோவின் நாவிலிருந்து சொற்கள் எதுவுமே வரவில்லை. தன்னைச் சுதாகரித்துக்கொண்டு அவர் என்னவெல்லாமோ சொன்னார். சொன்ன எந்தச் சமாதானமும் அவளுடைய காதுகளில்

ஏறவேயில்லை. மூன்றுநாட்களும் முகத்தை உம்மென்று வைத்திருந்தாள்.

டாக்டர் மிலானோ பணிபுரிந்த இராணுவமுகாம் ஓரடர்ந்த காட்டிற்குள் இருந்தது. மிக விசாலமான முகாம். சுற்றிவர உயர்ந்த முள்வேலி. ஒவ்வோர் ஐம்பதடிக்கும் கொங்கிரீட் கோபுரங்கள். அதிவிஷேட பயற்சிபெற்ற இராணுவவீரர்கள் இருபத்துநான்கு மணிநேரமும் முகாமைக் காவல் காத்தார்கள். எல்லை முகாம் என்பதால் எதிரிகள் தாக்கக்கூடும் என்ற அச்சம் எப்போதும் இருந்து கொண்டேயிருந்தது. வினோதப் பேர்வழியான டாக்டர் மிலானோ இந்த விஷயங்களையல்லாம் சட்டை செய்யாமல் கற்பாறைமேல் அமர்நது எழுதிக் கொண்டேயிருப்பார். அவர் எழுத ஆரம்பித்தால் இந்த உலகை மறந்துவிடுவார். சஞ்சரிப்பதற்காக கனவுலகிற்குச் சென்றுவிடுவார். கற்பாறைக்கருகாலோடும் நீரோடையை இரசிப்பார், இளந்தென்றலை இரசிப்பார், இலைகள் இனிமையாகப் பாடுவதையும், காட்டுக் கொடிகளாடுவதையும் இரசிப்பார். சிறுபையன் போல் மரக்கொப்புகளில் ஏறி உட்கார்ந்துகொண்டு கண்களை மூடிக்கொள்வார். அப்போது தான் இராணுவடாக்டர் என்பதையும் மறந்துவிடுவார். சீருடையை மறந்துவிடுவார், முள்ளுச் சப்பாத்துக்களையும் மறந்துவிடுவார். ஓர் இராணுவவீரனின் அனுபவடயறிதான் அவர் எழுதிக் கொண்டிருந்தவை எல்லாம். அந்த டயறி இப்போது ஆயிரக்கணக்கான பக்கங்களையும் தாண்டி நடைபோட்டது. காயப்பட்ட வீரர்களின் மயிர்க்கூச்செறியும் அனுபவங்களும், வீர மரணமடைந்தவர்களின் யுத்த காவியங்களும் டயறியிலே விரவிக் காணப்பட்டன. டாக்டர் மிலானோ முகாமிலுள்ள வீரர்களுக்கு கதையை வர்ணித்து வாசிப்பார். அப்போதெல்லாம் அவருடைய கண்கள் பேசும், விரல்கள் நர்த்தனமாடும், மேனி வீரத்தோடு சிலிர்க்கும். கதையைக் கேட்டுக் கொண்டிருக்கும் சிப்பாய்களும் மெய்சிலித்துப் போவார்கள். உள்ளக் கிளர்ச்சியால் பிரவாகிப்பார்கள், வீரப்பிரதாபங்களுக்குரியவர்களாக தங்களைப் பாவனை செய்துகொண்டு வீறு கொண்டெழுவார்கள்.

டாக்டர் மிலானோ காயத்திற்கு மருந்திடுவதிலும் அழகுணர்ச்சியிருந்தது. சிப்பாய் குதிகாலிலே காயத்துடன் முனகிக் கொண்டிருப்பான்; இரத்தம் சொட்டுச் சொட்டாக வடிந்து கொண்டிருக்கும். டாக்டர் மிலானோ அவனைக் கனிவுடன் நோக்குவார்; பெயரைக் கேட்டு அவனுடைய குதிகாலை மிகவும் அவதானத்துடன் திண்டின் மேலே தூக்கிவைப்பார். 'என்ன டாக்டர் செய்யப்போகிறீர்கள்?' என்று காயப்பட்ட வீரன் வேதனைதோய்ந்த குரலில் கேட்பான். டாக்டர் அவனுடைய கேள்விக்கு காது கொடுக்காதவர் போல் 'இப்படித்தான் ஒரு பராக்கிரமசாலி இருந்தான். எதிரிகள் அவனைக் கண்டால் உள்ளம் கலங்குவார்கள்; குலைநடுங்குவார்கள்; பிடறி அடிபட ஓடி ஒளிப்பார்கள்' என்று கதை சொல்ல ஆரம்பிப்பார்.

உதவித்தாதி ஸேலைன் திரவத்தாலும், அயடீன் கரைசலாலும் காயப்பட்ட பகுதிகளை இடமிருந்து வலமாகவும், மேலிருந்து கீழாகவும் சுத்தஞ்செய்வாள். அப்போதெல்லாம் டாக்டர் மிலோனோவின் கைகள் சங்கீத இயக்குனரைப் போல் சமிக்ஞை செய்து கொண்டே கண்களால் அவளை இயக்குவார். உதவித் தாதிக்கு டாக்டரின் நாதமும், ரிதமும் நன்றாகப் பழகிவிட்டது. டாக்டர் மிலானோ சொல்லும் கதை சட்டென்று நின்றுவிடும். காயப்பட்ட வீரன் மெல்லிய முகவலியுடன் டாக்டர் 'என்னை என்ன செய்யப்போகிறீர்கள்?' என்று மீண்டும் கேட்பான். 'எல்லாம் முடிந்து விட்டது' என்பார் டாக்டர். காயப்பட்டவீரன் தலையைக் கொஞ்சம் உயர்த்தி பின் குனிந்து காலைப் பார்ப்பான். காலைச் சுற்றி பெரிய பன்டேஜ் காணப்படும். 'இவ்வளவு பெரிய காயமா? யாரிதற்கு மருந்து போட்டது?' என்று ஆச்சரியத்தோடு கேட்பான் வீரன். 'நான் சொன்னேன். தாதி போட்டாள்' என்பார் டாக்டர். 'நீங்கள் மருந்திடும்போது நான் எங்கே போயிருந்தேன்?' என்று கேட்பான் வீரன். 'நீ கதையில் மூழ்கிப் போயிருந்தாய்' என்று விடையளிப்பார் மிலானோ. 'ஓ! அப்படியா? கடைசியில் அந்தப் பராக்கிரமசாலிக்கு என்ன நடந்தது?' என்று ஆவலுடன் கேட்பான் காயப்பட்ட வீரன். 'அந்தப் பராக்கிரசாலியான வீரன் நீதானப்பா' என்று முடித்து வைப்பார் டாக்டர் மிலானோ. தாங்கவொண்ணா வேதனையிலும் வீரனுக்கு சிரிப்பு வந்துவிடும், முகம் நட்சத்திரங்களாக மலரும், புளகாங்கிதமடைவான்.

'இப்படியோர் இதயமுள்ள டாக்டரா? நீங்கள் எந்த நாட்டில் பிறந்தீர்கள்?'
'இந்த நாட்டில்தான் பிறந்தேன்'
'யார் உங்களைப் படைத்தது?'
'உன்னைப் போல் என்னையும் கடவுள்தான் சிருஷ்டித்தார்.' என்பார் டாக்டர் மிலானோ சிரித்துக்கொண்டே. இவை நாளாந்தம் நடக்கும் சங்கதிகள் தான். டாக்டரின் பார்வையும் நடையும் எல்லோருக்கும் பிடித்துப் போய்விட்டது. இராணுவ முகாமிலிருந்த வீரர்கள் மிலானோவுடன் பௌயமாக நடந்துகொண்டார்கள், டிங்டோங்கைத் தவிர. அட்சரம் பிசகாமல் நடந்து கொள்வதால் டாக்டர் மிலானோவுக்கு ஒரு பட்டமும் வைத்து விட்டார்கள் *'அஆஇ அரிச்சுவடி'*. அதைப்போலவே அலங்கோலமாக நடப்பதால் டிங்டோங்குக்கும் ஒரு பட்டம் இருந்தது *"குப்பை வண்டி"*.

டாக்டர் மிலானோவின் மனைவிக்கு பிரசவநாள் நெருங்கியது. எவ்வளவுதான் அசாதாரண தைரியத்துடன் இருந்தாலும் டாக்டருக்கு சிறிதளவு மனக்கலக்கம் உண்டாகத்தான் செய்தது. பிரசவம் சுகப்பிரசவமாக நடந்துவிட வேண்டுமே என்ற கவலையும் அவரை வாட்டியது. பிரசவத்திற்கு மூன்று வாரங்கள்தான் இருக்கும்போது மனைவிக்கு இரத்த அழுத்தம் ஜாஸ்தியாக இருப்பதாகவும், கால்களிரண்டும் நடக்கமுடியாத அளவு வீங்கிருப்பதாகவும் வந்த

தகவலால் டாக்டர் மிலானோ நிம்மதியிழந்து போயிருந்தார். மகப்பேற்று நிபுணரோடு பேசியபோது மகப்பேற்று நிபுணர் அவசரமாக மனைவிக்கு ஸீஸேரியன் செய்யவேண்டுமென்ற தீர்மானத்தை எந்த ஒளிவுமறைவுமின்றி அறிவிக்க டாக்டர் மிலானோ டிங்டோங்கிடம் ஓடோடிப்போனார். இந்த வேளையில் கணவனின் கடமை மனைவிக்கு அருகில் இருப்பதுதான் என்ற வாழ்க்கைக் கோட்பாட்டைப் டிங்டோங்கிற்குப் புரியவைத்து எப்படியும் விடுமறையைப் பெற்றுக் கொள்ளலாம் என்ற நப்பாசையோடு தான் அவர் டிங்டோங்கின் அலுவலக அறைக்குள் நுழைந்தார். இங்குமங்குமாக அறைக்குள்ளே நடந்து திரிந்து கொண்டிருந்த டிங்டோங் அவ்வேளை பதட்டத்துடன் காணப்பட்டார்.. அவருடைய வலது கையிலே இருவிழித் தொலைநோக்கி இருந்தது. டாக்டர் மிலானோ உள்ளே நுழைந்து காலை வணக்கம் சொன்னது கூட அவருடைய காதுகளில் விழவில்லை.

டாக்டர் மிலானோ 'ஐயா' என்றழைத்தார். டிங்டோங் இலேசாகத் தலையைத் திருப்பி மிலானோவைப் பார்த்தார். மிலோனோ கணித ஆசிரியரிடம் மாணவன் வாய்ப்பாட்டை ஒப்புவிப்பதைப் போல் மளமளவென்று மனைவியின் நிலைமையை அவரிடம் ஒப்புவித்து விட்டு 'ஐயா, அவசரமாக எனக்கு இரண்டு நாட்கள் விடுமுறை வேண்டும்' என்று முடித்தார். டிங்டோங் ஒன்றும் பேசாமல் தன் கையிலிருந்த தொலைநோக்கியை டாக்டரிடம் கொடுத்தார். டாக்டர் தொலை நோக்கியினுாடாக டிங்டோங் காட்டிய திசையில் பார்த்துவிட்டு 'எதிரிகளின் நடமாட்டம் இருப்பது போல் தெரிகிறது' என்றார்.

'ஆம். எதிரிகள்தான், ஆயுதக்கிடங்கை நோக்கிப் போய்க் கொண்டிருக்கிறார்கள்'

'நிச்சயமாக அவர்கள் ஆயுதக் கிடங்கை நாசமாக்கத்தான் போகிறார்கள்'

'ஆமாம். நாங்கள் உடனடியாகச் செயலில் இறங்கவேண்டும். இருபது பேர் கொண்ட குழுவொன்றை அனுப்பப்போகிறேன்'

'பனிமூட்டமாக இருக்கிறது. யுத்தம்புரிய கஷ்டமான இந்தச்சூழலில் ஆட்களை அனுப்புவது ஆபத்தான காரியமல்லவா?'

'டாக்டர் மிலானோ, நீங்கள் சொல்வது நூற்றுக்கு நூறு உண்மை. ஆனால் வேறு வழியில்லை. இரண்டு மூன்று மணித்தியாலங்களுக்குள் எதிரிகளைத் தாக்க வேண்டும். இந்த விடுவிப்பு நடவடிக்கைக்கு ஒரு பெயர் சொல்லுங்கள் டாக்டர் மிலானோ' என்றார் டிங்டோங். கொஞ்ச நேரம் யோசித்த மிலானோ 'ஒபரேஷன் டியூரொப்ஸ் (Dew Drops) என்று வைப்போம்'

'மிகவும் அற்புதமாகப் பெயர் சூட்டியிருக்கிறீர்கள். டாக்டர் மிலானோ'

'நன்றி'

'உங்கள் விடுமுறையைப் பற்றி என்ன சொல்லுகிறீர்கள்?'

'நான் எப்படி விடுமுறை எடுப்பது? காயப்பட்டு வரும் வீரர்களுக்கு சிகிச்சையளிக்க ஒருவருமே இல்லை அல்லவா?'

'நல்லதொரு முடிவு' என்று டாக்டரின் தோளில் தட்டிக் கொடுத்தார் டிங்டோங்.

மாலைநேரம் முகாமிலுள்ள வீரர்கள் அனைவரும் ஒன்று கூடிவிட்டார்கள். முகாம் முழுவதும் மகிழ்ச்சி வெள்ளம் கரைபுரண் டோடிற்று. Operation Dew Drops நூற்றுக்கு நூறு வெற்றி. எல்லோரும் அந்தச் சந்தோஷத்தைக் கொண்டாடத்தான் தயாரானார்கள். டிங்டோங் மிகவும் கம்பீரமாக நடந்துவந்தார், மீசையை முறுக்கினார், அகன்ற மார்புகளை நிமிர்த்தியவாறே மைதானத்திலே வந்து நின்றார். பத்தொன்பது வீரர்களும் டிங்டோங்குக்கு சல்யூட் அடித்தார்கள். அவர்களின் சீருடைகள் பிய்ந்து தொங்கினாலும் சப்பாத்துக்கள் கிழிந் திருந்தாலும் முகங்களில் சேறு படிந்திருந்தாலும் எல்லாவற்றையும் மீறி அவர்களின் முகங்களில் களிப்பு விரவியிருந்தது. புகைப்படக்காரன் எல்லோரையும் புகைப்படமெடுத்தான். டிங்டோங் ஒவ்வொரு வீரருடனும் கைகுலுக்கினார். டாக்டர் மிலானோவும் ஒவ்வொரு வீரருடனும் கைகுலுக்கிக்கொண்டே வந்து பத்தொன்பது வீரர்களுடனும் கைகுலுக்கி முடிந்தபின் அவரின் முகம் சட்டென்று இருண்டது. 'நாம் இருபது வீரர்களை அனுப்பினோம். இங்கே பத்தொன்பது வீரர்கள் இருக் கிறார்கள். எங்கே இருபதாவது வீரன்?' என்று டிங்டோங்கைப் பாரத்து பதகளிப்புடன் கேட்டார் டாக்டர் மிலானோ.

தேசியக்கொடியால் முகம் மூடப்பட்டிருந்த வீரனின் உடலை, வலது சுட்டு விரலால் சுட்டிக் காட்டினார் டிங்டோங். டாக்டர் மிலானோ ஓடோடிச் சென்று முகத்தைத் திறந்து பார்த்தார். அவர் எதிர்பார்த்தது தான். கண்களிலே கண்ணீர் வரத்துடித்தாலும் அவர் சிரமப்பட்டு அடக்கிக் கொண்டார்.

'டாக்டர் மிலானோ கவலைப்பட வேண்டாம். நாம் ஒரேயொரு வீரனைத்தான் இழந்திருக்கிறோம்' 'அவன் ஒருவன் தான். ஆனால் அவன் என்பால்ய நண்பன் ஸீகா' என்றார் மிலானோ. டிங்டோங் மிலானோவைத் தன்னுடைய அறைக்கு அழைத்துச் சென்றார். 'டாக்டர் மிலானோ ஸீகாவின் மரணம் உங்களைக் கவலையில் ஆழ்த்தும் என்பது எனக்கு நன்றாகத் தெரியும். ஸீகா உங்கள் அருகிலேயே இருக்க வேண்டுமென்று நீங்கள் விரும்பி உங்கள் முயற்சியால் தான் ஸீகா இந்த முகாமுக்கு வந்து சேர்ந்தான். ஆனாலும் அவன் இறந்துவிட்டான். டாக்டர் மிலானோ நாங்கள் குடும்பம், பாசம், நட்பு இந்த விஷயங்களுக்கெல்லாம் அப்பாற் சென்றவர்கள். தேசத்திற்காக எங்களை நாங்கள் அர்ப்பணித்துள்ளோம். ஸீகா அவன் ஆசைப்பட்ட படியே தன்னுயிரை நாட்டுக்காக ஈந்திருக்கிறான். அவனுடைய மரணம் குறித்து நாங்களெல்லாம் உண்மையில் பெருமைப்பட வேண்டும்' என்றார் டிங்டோங். நாள் முழுவதும் ஒப்பாரி வைத்து அழ வேண்டும்

போல் மனது உந்திற்று. 'உங்கள் உணர்வுகளை நான் புரிந்து கொள்கிறேன் டாக்டர். ஆனாலும் இராணுவ வீரர்கள் ஒரு போதும் அழக்கூடாது. இரண்டு வாரங்கள் விடுமுறை தருகிறேன். வீட்டிற்குச் சென்று மனவைிக்கு துணையாக இருந்து விட்டு வாருங்கள். மனக்கவலைக்கும் மருந்தாக இருக்கும்' என்றார் டிங்டோங் ஆறுதல் அளிக்கும் குரலில்.

கைப்பேசியிலிருந்து அழகிய குழந்தையொன்றின் புகைப்படத்தை டிங்டோங்கிடம் காட்டினார் டாக்டர் மிலானோ. 'இரண்டு மணித்தியாலங்களுக்கு முன்னர் தான் குழந்தை பிறந்தது. தாயும் குழந்தையும் சேமமாக இருக்கிறார்கள். மனைவியின் ஆசீர்வாதத்தால் Operation Dew Drops வெற்றியுடன் முடிந்திருக்கிறது' என்றார் டாக்டர் மிலானோ.

'என் வாழ்த்துக்கள். அதுசரி உங்கள் மனைவிக்கும் Operation Dew Dropsக்கும் என்ன சம்பந்தம்? எனக்குப் புரியவில்லையே?'

'Dew Drops என்றால் எங்கள் மொழியில் பனித்துளிகள் என்று அர்த்தம், அது என் மனைவியின் பெயர்' என்றார் டாக்டர் மிலானோ. டிங்டோங் சற்று அமைதியாக இருந்தார். பிறகு அவர் டாக்டர் மிலானோவின் கைகளைப் பிடித்துக் கொண்டு தழுதழுத்த குரலில் கூறினார். 'டாக்டர் மிலானோ நீங்கள் உண்மையில் அதிர்ஷ்டசாலி. எனக்கு அந்த அதிர்ஷ்டம் இருக்கவில்லை. பத்து வருடங்களுக்கு முன்பு இதே போன்ற ஒரு நாளில் என் மனைவிக்கும் ஸீஸேரியன் அறுவைச் சிகிச்சை நடந்தது. மனைவியும் பிழைக்கவில்லை, குழந்தையும் பிழைக்கவில்லை'



# ஜன்னலில் குடியிருத்தல்

எம்.எம்.நௌஷாத்

ஜன்னல் மனிதனின் எத்துணை மகத்தான நிருமாணம் என்பதற்கு இந்தக் கண்காட்சியே சாட்சி. கண்காட்சியின் தலைப்பு *ஜன்னலின் விழிகள்*. ஓவியங்களின் வானவில் கலவை அது. ஜன்னலூடாகப் பார்த்தால் பாம்பு படமெடுத்தது, ஹேலியின் வால்வெள்ளி கண் சிமிட்டியது, மரத்தில் நாவற்பழம் பழுத்துக் குலுங்கியது, சிறுமி ஓக்கிட் பூக்களை கொண்டையிற் செருகிக் கொண்டு நர்த்தனமாடினாள், மீனவர்கள் ஹோஹோ என்றுளு படகிழுத்தார்கள், ஆலமரத்தில் பிசாசு குடியிருப்பதுபோல் இரவு தோன்றியது, யானைப் பாகனைக் கூட்டிக்கொண்டு யானை நடந்தது, மகளிர் நீராடினார்கள். ஜன்னலூடாகத் தோன்றும் நூற்றுக்கணக்கான காட்சிகள் அற்புதமான வாழ்க்கைச் சித்திரங்கள் ஆகும்.

ஓவியன் கற்பனையுலகில் சஞ்சரித்துக் கொண்டிருந்தான். லூஸன் ஓவியனைச் சந்தித்தான். ‘ஓவியரே, உங்கள் ஓவியங்களில் நான் அப்படியே மெய்ம்மறந்து மூழ்கிவிட்டேன். வாழ்க்கைக் கலையைச் செதுக்கி, உருக்கி, வார்த்து வரைந்திருக்கிறீர்கள்’ என்றான் லூஸன். ‘மிகவும் நன்றி’ என்றான் ஓவியன். ‘இந்த ஓவியக் காட்சிகளை எப்படி கற்பனை செய்தீர்கள்?’ என்று கேட்டான் லூஸன். இங்கே வரையப்பட்ட காட்சிகளெதுவும் கற்பனையல்ல. எல்லாம் என் விழிகளால் பார்த்தவை, ரசித்தவை, அனுபவித்தவை, தலைப்பைப் பாரத்தீர்களா? ஜன்னலின் விழிகள், ஜன்னல்தான் என்ஆயுதம்’ என்று புளகாங்கிதத்துடன் வர்ணித்தான் ஓவியன். லூஸன் சிரித்தான்.
‘ஏன் சிரிக்கிறாய்?’
‘உன்னுடைய ஓவியங்கள் உயிர்த் துடிப்புள்ளவை தான், சந்தேகமில்லை ஒப்புக்கொள்கிறேன். ஆனாலும் இவைகள் எல்லாவற்றை விடவும் ஜீவனுள்ள ஓவியத்தை தவறவிட்டு விட்டாய்’ என்று பீடிகை போட்டுப் பேசினான் லூஸன். ‘எனக்குப் புரியவில்லையே’ லூஸன் ஓவியனையும் அழைத்துக்கொண்டு கண்காட்சி மண்டபத்தை விட்டு வெளியேறினான். ஓவியன் சஞ்சலத்தில் ஆழ்ந்தான். ‘ஓவியரே, உங்களில் ஏனிந்தச் சஞ்சலம்?’ என்று மென்மையான குரலில் கேட்டான் லூஸன். ‘நான் நிறைய இடங்களுக்குச் சென்றிருக்கிறேன், பலநாடுகளையும் தரிசித்திருக்கிறேன், ஜன்னல்களுக்குப் பின்னால் அமர்ந்து ஓவியம் வரைவதுதான் என்தொழில். ஆயிரக்கணக்கான ஜன்னல்கள். முக்கியமான ஜன்னல் ஓவியமொன்றை தவறவிட்டு விட்டேன் என்று நீங்கள் இப்போது சொன்னீர்களே, என் இதயம் சஞ்சலத்தில் மூழ்கிவிட்டது’ என்றான் ஓவியன். ‘ஓவியனே, கவலைப்படாதே’ என்று ஆறுதல் வார்த்தைகள் சொன்னான் லூஸன். லூஸன் ஜன்னலைத் திறந்ததும் ஓவியன் திகைப்படைந்தான். உண்மையிலே இது தவறிய ஓவியம்தான். ஓர் அழகிய ஆரணங்கு அங்கே நிர்வாணமாக நடனமாடிக் கொண்டிருந்தாள்.

அடுத்தநாள் காலைக்கருக்கலிலே ஓவியன் அங்கே பிரசன்னமாகி விட்டான். தூரிகைகள், வர்ணக் கலவைகள், நிலைநிறுத்தி, நுண் கற்பனைக் கண்கள் என்று அத்துனை ஓவியச் சாதனங்களும் அவன் கைவசம் இருந்தன. ஓவியங்களை வரைந்து தள்ளினான் ஓவியன். நூற்றுக்கணக்கான ஓவியங்கள், ஆயிரமாயிரம் வர்ணச் சேர்க்கைகள், நிர்வாண நங்கை கண்களைச் சிமிட்டினாள், கூந்தல் காற்றிலே மிதக்க ஆடினாள், வெண்முத்தம் தந்தாள், வதனத்தைச் சுழலவிட்டாள். ஓவிஓவியம். நூற்றுக்கணக்கான நாட்கள். இரவையும் பகலையும், பிரித்தறிய முடியாத நாட்கள். பசி, தாகம், கவலை, கோபம் எதனையுமே உணரமுடியாத நாட்கள். ஓவியன் அங்கேயே இருந்தான். லூஸனுக்கோ தோல்சிவது. எங்குமே கொப்புளங்கள், தடித்த வளையங்கள், தாங்க முடியாத நமைச்சல், வாந்தி. இதுதான் லூஸனின் நோய். அவளின் நிர்வாண நடனத்தை ஒருமுறை பார்த்தாலே போதும், நோயில் மூழ்க ஆரம்பித்துவிடுவான்.

'ஓவியனே, போதும் போய்விடு. ஜன்னல் எனக்கு ஒவ்வாது, அடைக்கப் போகிறேன். நோய் என்னைக் கொன்றுவிடும்' என்று கெஞ்சினான் லூஸன். ஓவியன் எதனையுமே சட்டை செய்யாமல் கருமமே கண்ணாயிருந்தான். ஓவியனை அங்கிருந்து அனுப்புவதற்குள் போதும் போதும் என்றாகி விட்டது. லூஸன் கண் விஷேட நிபுணரிடம் போனான். இவர் அவன் சந்திக்கப் போகும் மூன்றாவது கண் விஷேட நிபுணர். ஏற்கனவே லூஸனுக்கென்று பதில் தயாராக இருந்தது. 'உன் கண்களிலே ஒரு கோளாறுமில்லை' என்ற பதில். இப்போது மூன்றாவது நிபுணரிடம் வந்திருக்கிறான். லூஸன் சந்தோஷப்பட்டான். மூன்றாவது நிபுணரின் அறையில் நிறைய கருவிகள் இருந்ததால் அவர் நல்ல விடையொன்று கூறுவார் என்று அவன் திடமாக நம்பினான். நிபுணரும் எல்லாக் கருவிகளாலும் லூஸனைப் பரிசோதித்தார். 'திரு லூஸன் அவர்களே, நீங்கள் அதிர்ஷ்டசாலி. உங்கள் கண்களிலே எந்தக் குறைபாடும் இல்லை. கண் தசைகள் நன்றாக இயங்குகின்றன. கண் வில்லைகளுக் கூடாக ஒளி நன்றாக ஊடுருவிப் பாய்கிறது. விழி வெண்படலம் துலக்கமாக இருக்கிறது. விழித்திரை, பார்வை நரம்பு, மஞ்சள் பொட்டிடம் என்று எல்லாமே நல்ல நிலையில் இருக்கின்றன. ஆகவே திரு லூஸன் அவர்களே, மீண்டும் எந்தக் கண் வைத்தியரிடமும் போக வேண்டாம்' என்று கருணையுடன் உபதேசித்தார் கண் விஷேட நிபுணர்.

'அப்படியானால் டாக்டர் ஜன்னலைத் திறக்கும் போதெல்லாம் ஏன் அந்த இளமங்கை தோன்றுகிறாள்?' என்று விரக்தி தொனிக்க கேட்டான் லூஸன்.

'அவள் நிர்வாணமாக நடனமாடுகிறாள்?'

'ஆமாம் டாக்டர்'

'அவளைப் பார்க்கின்ற போதெல்லாம் ஒவ்வாமை வந்து தத்தளிக்கிறீர்கள்?'

'ஆமாம்'
'இந்தக் கதையை எத்தனை தடவை சொல்லியிருக்கிறீர்கள்?'
'ஞாபகமில்லை, பல தடவைகள்'
'கவலைப்பட வேண்டாம், திரு லூஸன் அவர்களே, எதிர் வீட்டிலே அழகான பெண் வசித்து வருகிறாள். அது உண்மை. அவள் நிர்வாணமாக நடனமாடுகிறாள். அதுவும் உண்மை. இந்தக் காலத்தில் இதுவெல்லாம் சர்வ சாதராணமான விஷயம். அவள் கணிகையாக இருக்கலாம். கவனிக்காமல் விட்டுவிடுங்கள்' என்றார் கண் விஷேடநிபுணர். 'டாக்டர் எனக்குமட்டும் ஏன் இப்படி நிகழவேண்டும்? கோபிக்காமல் தயவு செய்து இன்னுமொரு முறை என் கண்களைப் பரிசோதிக்க முடியுமா?' என்று லூஸன் அழாக்குறையாகக் கேட்க கண் நிபுணர் அப்படியே அயர்ந்துவிட்டார். இப்படியோரு விடாக்கண்டன் நோயாளியை அவர் தன் வாழ்நாளில் சந்திந்திருக்கவேயில்லை. 'நீங்கள் விடாப்பிடியாக இருக்கிறீர்கள். பரவாயில்லை. வேண்டுமானால் நான் உங்களுக்கு ஓருதவி செய்கிறேன். உங்களுக்காக உங்கள் வீட்டிற்கு வந்து அங்கு என்ன நடக்கிறது என்பதை அறிந்து கொள்கிறேன். உண்மையை அறிந்து கொண்டால் அதற்குத் தகுந்தாற்போல் சிகிச்சையும் செய்யலாம். என்னுடைய அபிப்பிரயாயத்திற்கு என்ன பதில் சொல்லுகிறீர்கள், திரு லூஸன்?' என்று கேட்டார் கண் நிபுணர். கண் நிபுணரின் முடிவை சந்தோஷத்தோடு ஏற்றுக் கொண்டான் லூஸன்.

லூஸன் ஜன்னலைத் திறந்ததும் கண் நிபுணர் கிறங்கிப்போனார். எழில் என்றால் அவ்வளவு எழில். அவளை விட்டும் கண்களை அப்பால் திருப்புவதற்கு மிகுந்த பிரயாசை எடுக்க வேண்டியதாயிற்று. லூஸன் அவருடைய கண்களை கிட்டத்தட்ட பிடுங்கின மாதிரி தலையைத் திருப்பி ஜன்னலைச் சாத்தினான். 'ஜன்னலை ஏன் அவசரப்பட்டு சாத்துகிறீர்கள்?' என்று கேட்டார் கண்நிபுணர். 'நான் சொன்னேன் அல்லவா! ஒவ்வாமை. என் மேனியைப் பாருங்கள். தடிக்கிறது, சிவக்கிறது, இனி கொப்புளங்கள் உண்டாகும், வாந்தி வரும். இதுதான் என்னைப் பீடித்துள்ள வியாதி' என்று பதிலளித்தான் லூஸன். லூஸன் சொன்னது முற்றிலும் வாஸ்தவம். பார்த்துக் கொண்டிருக்கும்போதே லூஸனின் மேனியெங்கும் தடித்து கொப்புளங்கள் உண்டாயிற்று, வாந்தியும் வந்தது. கண் நிபுணர் அடுத்தநாளும் வந்தார். பிறகு அடிக்கடி வரஆரம்பித்தார். வந்தவுடனேயே ஜன்னலை அவராகவே திறப்பார். ஆடும் பெண்ணையே நெடுநேரம் உற்று நோக்கியிருப்பார். கையிலே ஒரு வெந்நீர குடுவையிருந்தது. இடைக்கிடை அதனைத் திறந்து தேநீர் அருந்துவார். இரண்டு மூன்று மணித்தியாலங்கள் இதே நிலையில் அவருடைய காலம் கழியும்.

கண்நிபுணரின் போக்கினால் எரிச்சலுற்ற லூஸன் 'டாக்டர் ஏன் இப்படி அநாகரிகமாக நடந்து கொள்கிறீர்கள்?' என்று கேட்டான். கண்நிபுணர்

அவனுடைய கேள்வியால் கோபமுற்றாரா என்றால் இல்லை. அவர் லூாஸனின் தோளிலே இலேசாகத் தட்டி
‘திரு லூாஸன் அவர்களே, நீங்கள் என்னை அநாகரிகமான டாக்டராக நினைத்துக் கொள்ள வேண்டாம். உண்மையைச் சொல்லப் போனால் நான் ஆராய்ச்சியில் ஈடுபட்டிருக்கிறேன்’ ‘ஆராய்ச்சியா? என்ன ஆராய்ச்சி டாக்டர்?’
‘நான் அந்த நிர்வாணப் பெண்ணின் கண்களை ஆராய்ந்து கொண்டிருக்கிறேன்’
‘அவளுடைய கண்களையா? எதற்காக?’
’இசகுபிசகாக நடக்கும் இவளுடைய கண்களிலும் ஏதாவது கோளாறு இருக்கக்கூடுமோ என்று நான் அஞ்சுகிறேன். அதனைக் கண்டுபிடிக்க வேண்டும்’
‘டாக்டர் நீங்கள் உண்மையாகத்தான் சொல்லுகிறீர்களா?’
‘ஏன் அதிலும் சந்தேகமா?’
‘இல்லை டாக்டர் இவ்வளவு தூரத்திலிருந்து அவளுடைய கண்கோளாறைக் கண்டுபிடிக்க முடியுமென்று நானென்றால் நம்பவில்லை. நீங்கள் நம்புகிறீர்களா டாக்டர்?’ லூாஸனின் இந்தச் சாமர்த்தியமான கேள்வியால் கூனிக்குறுகிப்போன கண் நிபுணர் அதற்குப்பிறகு லூாஸனின் வீட்டுப்பக்கம் தலைகாட்டவேயில்லை.

லூாஸன் அடுத்ததாக மனோவைத்திய நிபுணரைச் சந்தித்தான். ‘எல்லோரும் என்னைப் பித்தன் என்று சொல்லுகிறார்கள். தயவுசெய்து மனோவசியப் படுத்தி என்னை பரீட்சித்துப் பாருங்கள் டாக்டர்’ என்று எடுத்த எடுப்பிலேயே கெஞ்ச ஆரம்பித்துவிட்டான் லூாஸன். ’லூாஸன் நீ புத்திசாலித்தனமாகப் பேசுகிறாய், உன்னைப் பித்தன் என்று யார் சொன்னார்கள்?’ என்று கேட்டார் மனோதத்துவ நிபுணர்.
‘நான் யார் யாரிடமெல்லாம் என் பிரச்சனையை எடுத்துரைக்கிறேனோ இறுதியில் அவர்களெல்லோரும் எனக்கு பித்தன் என்று பெயர்சூட்டி விடுகிறார்கள்’
‘உன்னுடைய பிரச்சினை என்ன?’
‘எதிர்வீட்டிலே ஓரிளம்பெண் வாழ்கிறாள்’
‘அது பிரச்சினையே இல்லையே’
‘அதுவல்ல பிரச்சினை, நான் ஜன்னலைத் திறக்கும் போதெல்லாம் அவள் நிர்வாணமாக நடனமாடிக் கொண்டிருக்கிறாள்’
‘இந்தக் காலத்திலே இதுவும் சின்ன விஷயம்தான்’
‘இப்படித்தான் எல்லோரும் சொல்லுகிறார்கள். என்னைப் பொறுத்தவரை இது மிகவும் மோசமான நடத்தைக் கோளாறு. ஏன் டாக்டர் மிகவும் சாதாரணமாக இந்த விஷயத்தை எடுத்துக் கொள்ளுகிறீர்கள்?’
‘லூாஸன் நான் சொல்லுவதை நம்பு, இது இருபத்தோராம் நூற்றாண்டு, நிர்வாணமாக இருப்பதைத் நாகரிகத்தின் ஓரங்கமாக மக்கள் எடுத்துக் கொள்கிறார்கள். உன்னுடைய பார்வையில் தான் அசிங்கம்

இருக்கிறது' என்றார் மனோவைத்திய நிபுணர். என்றாலும் லூாஸன் அவரோடு தர்க்கித்தான், நிர்வாணக்காட்சி காரணமாக தன்னுடலில் ஏற்படும் உபாதைகளை நிறுத்துவதற்கு தன்னை ஆழ்நிலைத் தூக்கத்துக்குள்ளாக்கி காரணத்தை அறிவதே சரியான தீர்வாகும் என்று லூாஸன் வாதிட்டான். அவனுடைய நச்சரிப்பைப் தாங்க முடியாத டாக்டர் அவனை ஆழ்நிலைத் துாக்கத்திற்குட்படுத்தினார்.

'நீ இப்போது உன் இளம்பராயத்திற்கு செல்லுகிறாய்?'
'ஆம்'
'உன் தந்தை குடிகாரர்'
'இல்லை'
'அவர் ஒவ்வொருநாளும் வீட்டிற்கு வந்து உன்தாயை கொடுமைப்படுத்துவார்'
'இல்லை'
'அவர் உன்னை அடிப்பார்' 'இல்லை' 'உன் தந்தையைக் காண்பதற்காக ஒரு பெண் அடிக்கடி வருவாள்'
'இல்லை'
'உன் தாய் மோசமானவள்'
'இல்லை'
'அவள் உனக்கு வேளாவேளை ஆகாரம் அளிக்காமல் கொடுமைப்படுத்துவாள்'
'இல்லை'
'சின்னவயதாக இருக்கையில் பெண்ணொருத்தி நிர்வாணமாக இருப்பதைப் பார்த்துவிட்டாய்' 'இல்லை' அவர் சாத்தியமான எல்லாக் கேள்விகளையெல்லாம் அடுக்கிக்கொண்டே போன போதிலும் லூாஸனின் வாயிலிருந்து இல்லை இல்லை என்ற பதில் தொடர்ந்து வந்துகொண்டிருக்கவே களைத்துப் போன மனோதத்துவ நிபுணர் ஆழ்நிலை உறக்கத்தை முடிவுக்குக் கொண்டுவந்து 'திரு லூாஸன் அவர்களே, எந்த விதமான உளவியல் பிரச்சினைகளுமில்லாத திடமான மனிதர் நீங்கள்' என்று பிரகடனமும் செய்தார்.

வீட்டுக்குப் போன லூாஸனுக்கு ஆச்சரியம் காத்திருந்தது. வீட்டு முற்றத்திலே சொகுசு மோட்டார் காரை நிறுத்தி அதிலிருந்து மனோதத்துவநிபுணர் இறங்கி வந்தார். 'ஏன் டாக்டர் ஐயா, இவ்வளவு அவசரமாக இங்கே வந்தீர்கள்?' என்று கேட்டான் லூாஸன்.
'உன் பிரச்சினை என் மனதைத் தொட்டு விட்டது. நிலைமையை நேரில் அறிந்து கொள்ளத்தான் இங்கே வந்தேன்'
'டாக்டர் ஐயா நீங்கள் சொல்வதும் சரிதான்' என்று சொன்ன லூாஸன் ஜன்னலைத் திறந்து நிர்வாண மங்கையின் ஆட்டத்தைக் காட்டினான். மனோதத்துவ நிபுணர் இப்போது அடிக்கடி லூாஸனைத் தேடிவர ஆரம்பித்தார். 'எதற்காக ஐயா, அடிக்கடி இங்கே வருகீறீர்கள்?' என்று லூாஸன் ஒருநாள் கேட்டான்.
'நான் முக்கியமான ஆராய்ச்சியில் ஈடுபட்டிருக்கிறேன்'

'நிர்வாணமாக ஆடும் பெண்ணில் என்ன ஐயா ஆராய்ச்சி வேண்டிக் கிடக்கிறது?' 'அதிசயப்படாதீர்கள் திரு லூாஸன் அவர்களே, நிர்வாணவியல் என்றொரு துறை இருப்பதைப் பற்றி உங்களுக்கு தெரியுமா?'
'இப்படியொரு துறை இருப்பதை நான் கேள்விப்படவேயில்லை'
'தொடர்ந்து நிர்வாணமாக இருப்பவர்களின் நடத்தைக் கோலங்கைள ஆராயும் துறை அது. நான் இந்தப் பெண்ணை ஆராய்நது ஆராய்ச்சிக் கட்டுரையை அனுப்பி வைத்தேனென்றால் நம்நாட்டின் புகழ் உலகெங்கும் பரவக்கூடும்' என்றார் டாக்டர்.
'நம்பவே முடியவில்லையே, டாக்டர் ஐயா'
'உங்களுக்கு இந்தவிஷயங்களெல்லாம் விளங்காது, திரு லூாஸன். நவீன விஞ்ஞானம் அந்தளவுக்கு வளர்ந்துவிட்டது. பிறகொரு காலத்தில் நீங்கள் நிர்வாணவியலைப் பற்றி நிச்சயம் அறிந்துகொள் வீர்கள்' என்றார் டாக்டர்.

லூாஸன் மனக்குழப்பத்திற்கு உள்ளானான். என்ன செய்வதென்றே அவனுக்கு தெரியவில்லை. தன்னுடைய அப்பாவித்தனத்தைப் பயன்படுத்தி எல்லோரும் தன்னை ஏமாற்றுவதாக இப்போது அவன் திடமாக நம்பினான். நாட்கள் செல்லச்செல்ல நிலைமை மோசமாகியது. இளநங்கையைக் காணும் போதெல்லாம் இரத்தவாந்தி எடுக்குமளவுக்கு லூாஸன் காணப்பட்டான். இதற்கு மேலும் பொறுக்கமுடியாத லூாஸன் தீர்க்கமான முடிவுக்கு வந்தவனாக ஒருநாள் அந்த ஒற்றை ஜன்னலை ஆணியறைந்து நிரந்தரமாக அடைத்தான். அன்றோடு கொப்புளங்கள் உண்டாவதும், இரத்தவாந்தி எடுப்பதும் முற்றாக நின்று போனாலும் புது வியாதியொன்று ஆரம்பித்தது, மூச்சுத்திணறல். மூச்சுத்திணறல் என்றால் சாதாரண மூச்சுத்திணறல் அல்ல. உயிரை யாரோ பிடுங்க முயற்சிப்பது போல் ஓருணர்வு. சிறிதளவேனும் காற்றோட்டம் இல்லையாதலால் மூச்செடுக்கும் கிரியை மிகவும் கடினமாயிற்று. முகம் ஊதிப் பருக்கவாரம்பித்தது, கண்கள் வெளிர் ஊதாநிறமாக மாறின, மேனி மஞ்சளாக மாறிற்று, நெஞ்சுக்குழி விழுந்து விழுந்து எழும்பிற்று. எண்ணெய்ப்பீப்பா போல் லூாஸன் தோற்றமளித்தான். அவன் ஆழ்ந்த கவலையில் மூழ்கியிருந்தான். தாடிமீசை ஏடாகூடமாக வளர்ந்து கொண்டேபோனது. லூாஸனுடைய வேலைத்தளத்திலுள்ள சக ஊழியர்கள் அவனைப் பரிதாபத்தோடு பாரத்தார்கள். முன்பெல்லாம் அழகாக ஆடைபுனைந்து, நறுமணம் மேனியெங்கும் கமழ கம்பீரமாக வேலைக்கு வருபவன் இப்போது இராப்பிச்சைக் காரனைப் போல் நடமாடினான்.

அலுவலகத்தில் லூாஸனுக்கு நெருங்கிய ஒரு தோழன் இருந்தான். லூாஸனின் அலங்கோலத்தைக் கண்டு துயருற்ற அவன் ஒருநாள்

இதுபற்றி லூாஸனிடம் கேட்க லூாஸன் நடந்த சமாச்சாரங்கள் அனைத்தையும் விலாவாரியாக மனந்திறந்து சொன்னான். 'லூாஸன் கேட்கிறேனென்று கோபிக்காதே' என்று பீடிகைபோட்டான் நண்பன். 'பரவாயில்லை, எதுவானாலும் கேள்' என்றான் லூாஸன்.
'நிர்வாணப் பெண்ணின் நடனத்தைப் பார்க்கும் வேளைகளில் உள்ளத்தில் எந்தச் சலனமும் ஏற்படுவதில்லையா?'
'நிச்சயமாக இல்லை. என்னைப் பொறுத்தவரையில் அவள் வெறும் மாமிசப்பிண்டமே, வெறும் ஜந்து, மரக்கட்டை' என்றான் லூாஸன்.
'உன்னுடைய வித்தியாசமான ஆளுமை குறித்து நான் பெருமைப்படுகிறேன். ஆனாலும் ஒரு விஷயம். நவீன காலத்திலே நீ பார்க்கிறாயே இந்தக் காட்சி, இது அற்பமாகும். நீ பெரிதாக அலட்டிக் கொள்ள வேண்டாம்' என்று ஆறுதல் படுத்தினான் நண்பன்.
'நானும் அலட்டிக் கொள்ளாமல் இருக்கத்தான் முயற்சி செய்தேன், உடம்பு கேட்கவில்லையே, இரத்த வாந்தி எடுக்குமளவுக்கு நிலைமை மோசம்'
'அதற்காக காற்றோட்டம் வரக்கூடிய ஓரேயொரு ஜன்னலையும் அடைத்துவிட்டு வாழ்ந்தாயென்றால் விரைவில் நீ மூச்சுத்திணறி இறந்து போவாய்'
'அதுவும் உண்மைதான்'
'அப்படியென்றால் நானொரு ஆலோசனை கூறுகின்றேன் கேள், இந்த இடத்தை விற்று விட்டு வேறெங்காவது போய்விடு. உன்னுடைய பிரச்சினைக்கு சரியான தீர்வாக அது அமையும்' என்றான் நண்பன்.
'நானும் இந்த விஷயத்தை ஏற்கனவே பலதடவை யோசித்துப் பார்த்தேன். ஆனால் அதில் பிரச்சினை இருக்கிறது. நான் இப்போது சீவிக்கக்கூடிய வீடு கொஞ்சம் கொஞ்சமாக பணத்தைச் சேமித்து வாங்கிய இடம். இந்த இடத்தை வாங்க எனக்கு பத்து வருடங்கள் பிடித்தது. திடீரென்று புதிய வீடு வாங்குவதைப் பற்றி என்னால் நினைத்துக் கூடப் பார்க்கமுடியாது' என்று ஆற்றாமையோடு சொன்னான் லூாஸன்.

லூாஸனின் வாழ்க்கை இப்போது வீட்டிலிருந்து ஆஸ்பத்திரிக்கும், ஆஸ்பத்திரியிலிருந்து வீட்டிற்குமென்று ஆகிவிட்டது. அடிக்கடிவரும் மூச்சுத் திணறலால் அவன் கடுமையாக அவதிப்பட்டான். வைத்தியர்கள் ESR, Mantaux Test, CxR, AFB, Lung Scan என்று ஆரம்பித்து எல்லாப் பரிசோதனைகளும் செய்து பார்த்தார்கள். ஒன்றிலுமே அவனுடைய நோய் அகப்படாததுடன் லூாஸன் அவர்களுக்கு புரியாத புதிராக இருந்தான். அவர்கள் அவனைக் கைவிடும் நிலைமைக்கு வந்தார்கள். இப்போதெல்லாம் லூாஸன் ஆஸ்பத்திரிக்கு பழகிப்போன நோயாளியாக மாறினான். அவன் விடுதிக்குள் நுழைந்த மறுகணமே தாதி உத்தியோகத்தர்கள் Hydrocortisone மருந்துக் குப்பியுடனும், Nebulizer உபகரணத்துடனும் அவனருகில் ஓடோடி வந்து விடுவார்கள். சிற்றூழியன் பிராணவாயு உருளையோடு பின்னால் வருவான்.

பௌர்ணமி நிலவு எறித்த ஓர் இரவு. அன்று லூஸன் நன்றாகப் பயந்து போனான். யாரோ நகக் கண்களிலிருந்து உயிரை வெடுக்கென்று பிடுங்குவது போல் உணர்வு. மூச்சுத்திணறலின் உச்சக்கட்டத்தில் அவன் இருந்தான். ஒருசில கணங்களில் மூச்சு நின்றுவிடும் போல் அவனுக்குத் தோன்றிற்று. யாராவது உதவிக்கு வரும்படி தன்னுடைய சக்தியையெல்லாம் திரட்டி அவன் கூப்பிட்டான்; உதடுகள் பேசின, சொற்கள் வரவில்லை. நெஞ்சுக்குழிக்குள்ளிருந்து உஸ்உஸ் என்று சப்தம் கேட்டது. யாரும் வருவதாகக் காணோம். அவனுடைய இரு விழிகளும் மெல்ல மெல்ல மூட ஆரம்பித்தன. மரணம் தன்னை சமீபித்துவிட்டதை தெளிவாகப் புரிந்துகொண்ட வேளை லூஸன் உணர்விழந்து மயங்கிப் போனான். கண்களைத் திறந்தபோது பேச்சுக்குரல் கேட்டது. ஆஸ்பத்திரி, ஸேலைன், மின்விசிறி, தாதியர், டாக்டர். நான் மரணிக்கவீலையா? மரணிக்கவீலையாயின் ஏன் மரணிக்கவில்லை?

அலுவலக நண்பன் அருகில் நின்று கொண்டிருந்தான். 'நீ அன்று உயிரிழந்து போயிருக்க வேண்டியவன். கடவுள் அருளால் தப்பிவிட்டாய்' என்றான் நண்பன். 'உண்மைதான் நான் உயிர்பிழைக்க மாட்டேன் என்றுதான் அந்தக் கணத்தில் நினைத்தேன். அதுசரி யார் என்னைக் காப்பாற்றியது?' என்று ஆவலுடன் கேட்டான் லூஸன். 'நிர்வாணமாக நடனமாடுவாளே அந்த எதிர் வீட்டுப் பெண்தான். உள்ளே முனகல் சப்தம் கேட்டு அயலவர்களின் உதவியுடன் ஜன்னலை உடைத்து உள்ளே வந்திருக்கிறாள். அவள் சரியான தருணத்தில் வந்து உன்னைக் காப்பாற்றியிருக்காவிட்டால் நீ இப்போது சுவர்க்கலோகத்திலே சுற்றிக் கொண்டிருப்பாய்' என்று சிரித்துக்கொண்டே சொன்னான் நண்பன். லூஸனும் சேர்ந்து சிரித்தான். 'எதற்கும் அவளிடம் சென்று நன்றி என்ற வார்த்தையையாவது சொல்லிவிட்டு வா' என்று நண்பன் ஆலோசனை சொல்ல லூஸனுக்கும் அது சரியென்றே பட்டது.

ஆஸ்பத்திரியிலிருந்து Discharge ஆன லூஸன் நேரடியாகவே அவளுடைய வீட்டிற்குப் போனான். அங்கே அவனுக்கு நிறைய ஆச்சரியங்கள் காத்திருந்தன. முதலாவது ஆச்சரியம் கண் வைத்தியர். 'என்ன டாக்டர் ஐயா, இங்கே என்ன செய்து கொண்டிருக்கிறீர்கள்?' என்று கேட்டான் லூஸன். 'கண்ணாராய்ச்சி செய்து கொண்டிருக்கிறேன்' அடுத்த ஆச்சரியம் மனோதத்துவ நிபுணர்.
'என்ன ஐயா, இங்கே செய்து கொண்டிருக்கிறீர்கள்?'
'நிர்வாணவியல் ஆராய்ச்சியில் ஈடுபட்டிருக்கிறேன்'
மூன்றாவது ஆச்சரியம் ஓவியன்.
'ஓவியரே, இங்கே என்ன செய்து கொண்டிருக்கிறீர்கள்?'
'ஜன்னல் வாழ்க்கைக்கு உயிர்த்துடிப்பைக் கொடுத்துக் கொண்டிருக்கிறேன்' என்றான் ஓவியன்.

இளமங்கையிடம் சென்று தன்னை அறிமுகப்படுத்திக் கொண்டான் லூாஸன். 'நங்கையே, என்னுயிரைக் காப்பாற்றியதற்கு நன்றி. இவ்வளவு காலமும் உங்களை வெறுமனே ஒரு மாமிசப்பிண்டம் என்றுதான் நினைத்துக்கொண்டிருந்தேன். நீங்கள் மனிதாபிமானம் நிறைந்த மானிடப்பிறவி என்று இப்போதான் தெரிகிறது' என்றான் லூாஸன் நெகிழ்ச்சியுடன். 'நன்றி, உங்கள் புகழ்ச்சிக்கு நன்றி' என்றாள் நிர்வாணப்பெண். லூாஸன் கையிலிருந்த பரிசுப்பொதியை இளநங்கையிடம் கொடுத்தான். 'மறுக்காமல் ஏற்றுக்கொள்ள வேண்டும், சிறிய பரிசுப்பொருள்' என்றான் லூாஸன்.
'உள்ளே என்ன இருக்கிறது?'
'ஆடைகள்?'
அவள் கண்கள் வியப்பால் விரிந்தன. பொதியை மறுக்காமல் வாங்கிக்கொண்டு அறைக்குள் நுழைந்த அவள் கொஞ்சநேரத்தில் வெளியே வந்தாள். 'ஆடையோடு நீங்கள் மிகவும் அழகாக இருக்கிறீர்கள்' என்றான் லூாஸன். 'எனக்கு இதுவரை யாரும் ஆடையைப் பரிசளித்தது கிடையாது. அதனால்தான் உடுத்திக்கொண்டு வந்தேன்' என்றாள் பெண் நன்றியறிதலுடன். 'இன்னுமொரு பரிசும் இருக்கிறது. அதனையும் நீங்கள் மறுக்காமல் ஏற்றுக்கொள்ள வேண்டும்' என்று பீடிகையோடு ஆரம்பித்த லூாஸன் உள்ளங்கையைத் திறந்து அவளிடம் காட்டினான். திருமண மோதிரம். 'நான் உங்களைத் திருமணம் செய்துகொள்ள விரும்புகிறேன். நீங்கள் என்ன சொல்லுகிறீர்கள்?' என்று கேட்டான் லூாஸன். நிர்வாணநங்கை வாழ்க்கையில் முதல்தடவையாக நாணினாள். லூாஸன் திருமண மோதிரத்தை அவளுக்கு அணிவிக்கும் போது கண் வைத்திய நிபுணர், மனோதத்துவ டாக்டர், ஓவியன் ஆகிய மூவரும் ஓரே கோரஸாக 'அடப் பைத்தியக்காரா, இந்த விலைமாதையா திருமணம் செய்து கொள்ளப்போகிறாய்?' என்று கோபாவேசத்துடன் கேட்டார்கள்.



# கசாப்புக் கடையில் புல்புல் பறவை

எம்.எம்.நௌஷாத்

எனக்கு கசாப்புக் கடைக்காரனை கொஞ்சங்கூடப் பிடிக்காது. ஸேக்ஸ்பியரின் “வெனிஸ் வர்த்தகன்” நாடகத்தைப் பார்த்து எப்படி வெனிஸ் வர்த்தகனை நான் வெறுத்தேனோ அதைப்போலவே கசாப்புக் கடைக் காரனை வெறுப்புமிழும் கண்களோடு பார்த்தேன். சுவர்கள் சிவப்பு, கூரை சிவப்பு, கசாப்பு அணிந்திருந்த பனியன் சிவப்பு, காற்சட்டை சிவப்பு, அவன் வைத்திருந்த கத்தியின் கைப்பிடி சிவப்பு என்றாக கசாப்புக் கடைக்காரனின் கடை செக்கச்சிவந்து இருந்தது; சிவப்புக்குள் சிவப்புக் குலைகுலையாக மாமிசம் தொங்கி எங்கு பார்த்தாலும் வியாபித்திருந்தது இரத்தம். இரத்தக் காட்டேறி, ஈவு இரக்கமில்லாத உயிர்களைக் காவு கொள்ளும் பிரகிருதி என்று அவனை மனசுக்குள் திட்டினேன். கசாப்பு மீது இந்தளவு நான் எரிச்சலைடைய முக்கியமான காரணமாக அமைந்தது அவனுடைய கடையிலிருந்த புல்புல் பறவை.

கசாப்புக்கடையில் புல்புல் பறவையா? என்னால் நம்பவே முடியவில்லை. மென்மையுள்ளங் கொண்ட இந்த புல்புல் பறவை இங்கே எப்படி வந்து மாட்டிக் கொண்டது என்று நான் கவலைப்பட்டேன். புல்புல்லின் உயிரை இவன் பறித்து விடுவானோ என்ற அச்சம் என்னைப் பீடித்து படாதபாடுபடுத்தியது. புல்புல்பறவை மிகவும் அழகாகத் தோற்றமளித்தது, இனிமையாகப் பாடியது. கசாப்புக்குள்ளிருந்து புல்புல் பாடுவதைப் பார்ப்பதற்குத் தான் என்னால் சகிக்க முடியவில்லை. தினசரி கசாப்புக் கடைப்பக்கம் செல்ல ஆரம்பித்தேன் நான். உயிரோடு புல்புல் பறவை இருப்பதைத் கண்டவுடன் தான் எனக்கு நிம்மதிப் பெருமூச்சுவரும். கசாப்புக் கடைக்காரன் ஒருநாள் என்னைச் சைகை காட்டியழைத்தான். நான் போனேன். ‘நீங்கள் யார்?’ என்று கேட்டான் கசாப்பன். ‘நானொரு கவிஞன்’ என்றேன் நான். ‘நானும் அவதானித்துக் கொண்டு வருகின்றேன். தினசரி கடைப்பக்கம் வருகிறீர்கள், கவலைதோய்ந்த முகத்தோடு என்னைப் பார்க்கிறீர்கள், பிறகு திரும்பிச்செல்கிறீர்கள். கவிஞரே, உங்களுக்கு என்னால் ஏதாவது ஆக வேண்டியிருக்கிறதா?’ என்று கேட்டான் கசாப்பன்.

‘கசாப்பனே, நான் உன்னைப் பார்க்க வரவில்லை. நீ வைத்திருக்கிறாயே இந்த புல்புல் பறவையைப் பார்ப்பதற்காகத்தான் வருகிறேன்’ என்று வெடுக்கென்று பதிலளித்தேன் நான். ‘மிகமிகச் சந்தோஷம். புல்புல் நன்றாகப் பாடுகிறது. பாட்டைக் கேட்டீர்கள் தானே. இனிமையான சங்கீதம். எப்போது வேண்டுமானாலும் நீங்கள் வந்து பார்த்துவிட்டுப் போகலாம். கவலை தோய்ந்த முகத்துடன் நீங்கள் வந்து போவதைப் பார்க்கப் பார்க்க எனக்கும் கவலையாக இருக்கிறது’

‘நான் உன்னோடு குசலம் விசாரித்துக் கொண்டிருக்க இங்கே வரவில்லை. என்னுடைய கவலையே வேறு. ஊசலாடிக்

கொண்டிருக்கும் புல்புல் பறவையின் உயிர் போய்விடுமோ என்ற எண்ணத்தில் தான் கவலையோடு வந்து போகிறேன்'

'கவிஞர் ஐயா, புல்புல் பறவைக்கு எந்த நோயுமே பீடிக்கவில்லையே. அது மிகவும் ஆரோக்கியத்துடன் தானே இருக்கிறது'

'நீ யார்?'

'கவிஞர் ஐயா இது என்ன அதிசயமான கேள்வி, நான் கசாப்புக் கடைக்காரன் என்பது எல்லோருக்கும் தெரிந்த விடயம் தானே. மாமிசம் விற்பதுதான் என்தொழில்'

'அதுதான் கவலை. நீ கசாப்பன். மாமிசம் விற்பது உன் தொழில். நாவுக்கு ருசியான மாமிசம் தேவைப்பட்டு புல்புல் பறவையை அறுத்துச் சாப்பிட்டு விடுவாயோ என்ற பயத்தில்தான் ஒவ்வொரு நாளும் இங்கு வந்து பார்க்கிறேன்' என்றேன் நான். கசாப்பன் என்னை ஒரு மாதிரியாகப் பார்த்தான்.

'நீங்கள் யார்?'

'அதுதான் ஏற்கனவே சொல்லி விட்டேனே, நான் ஒரு கவிஞன்'

'கவிஞன் என்றால் இருபத்திநான்கு மணி நேரமும் கவிதை பாடிக் கொண்டிருக்க வேண்டுமே, ஏன் சும்மா இருக்கிறீர்கள்?'

'கசாப்பனே முட்டாள்தனமாகப் பேசாதே, கவிஞன் என்றால் நாள் முழுவதும் கவிதை பாடிக் கொண்டிருக்க வேண்டுமென்று அர்த்தமல்ல, அதைப் புரிந்துகொள்' என்றேன் சற்று கோபத்தோடு. 'அப்படித்தான் நானும் ஐயா, கசாப்புக் கடைக்காரன் என்பதற்காக இருபத்திநான்கு மணிநேரமும் காணும் உயிர்களையெல்லாம் காவுகொள்கிறேன் என்று நினைக்க வேண்டாம்' என்றான் கசாப்பன். நான் அசந்துவிட்டேன். இவன் சாதாரண ஆளல்லன், புத்திசாலி. இவனோடு இனிமேல் மிகவும் கவனமாகத்தான் பேச வேண்டும் என்று அப்போதே முடிவு செய்தேன் நான்.

கசாப்பனைச் சந்திப்பதை நான் இயன்றளவு தவிர்த்துக் கொண்டு வந்தபோதிலும்கூட ஒருநாள் அவனிடம் வசமாக மாட்டிக் கொண்டேன்.

'கவிஞர் ஐயா, உங்களோடு நான் கொஞ்சம் உரையாட வேண்டும் முடியுமா?'

'பரவாயில்லை. எதை வேண்டுமானாலும் கேட்கலாம்'

'சொல்லுங்கள் ஐயா. நீங்கள் எதைப் பற்றியெல்லாம் கவிதை வடிப்பீர்கள்?'

'ஓஹோ, உனக்கும் கவிதைகள் மேல் ஆசை வந்துவிட்டதா? அதிசயம்தான். சொல்லுகிறேன் கேள். பூச்சிகளைப் பற்றிப் பாடுவோம், நாங்கள் வானம், நதிகளைப் பற்றிப்பாடுவோம். பெண்களின் கூந்தல், காதல், நட்சத்திரங்கள், நிலவு இவைகளைப் பற்றியெல்லாம் கவிதை வடிப்போம்' என்றேன் நான்.

'எனக்குகொரு ஆசை கவிஞர் ஐயா, கேட்கிறேனென்று கோபித்துக்கொள்ளக் கூடாது'

'என்ன பீடிகை பலமாக இருக்கிறது எதுவாக இருந்தாலும் தயங்காமல் கேள்' என்றேன் நான். 'நீங்கள் எத்தனையோ விஷயங்களைப் பற்றி

கவிதை வடிக்கிறீர்கள். மாமிசத்தைப் பற்றியும், கசாப்புக் கடைக்காரனான என்னைப் பற்றியும் ஒருகவிதை வடிக்கக்கூடாதா ஐயா?' என்று கேட்டான் கசாப்பன்.

அவனுடைய அறியாமையை எண்ணி நான் சிரித்தேன்.
'ஏனய்யா சிரிக்கிறீர்கள்?'
'நீ கேட்ட கேள்விக்கு சிரிக்காமல் வேறென்ன செய்ய முடியும்? உலகத்திலே எந்தக் கவிஞனும் நீ சொன்ன பொருள்களை வைத்து ஒருபோதும் கவிதை எழுதவில்லையே, நான் என்ன செய்வது?'
கசாப்பன் ஒரு கடதாசித் துண்டைக் கொண்டு வந்து என் கையிலே திணித்தான். கடதாசித் துண்டிலே ஒரு கவிதை.
'கவிஞர் ஐயா, என்னைப்பற்றி எழுதப்பட்ட கவிதை நன்றாக இருக்கிறதா என்று பார்த்துச் சொல்லுங்கள்'

*நல்ல மனிதர்கள் நட்சத்திரங்களை நாடுவர், நயமாய் அழகை ரசிப்பர், நரமனிதர்கள் நரமாமிசம் புசிப்பார், நல்லோரிதயம் கொல்வர். உள்ளங்களைக் கொல்வதும் ஒன்றே! உயிர்காவும் கசாப்பு செய்வதும் ஒன்றே!*

என்றிருந்தது கவிதை.
'கசாப்பனே, இந்தக் கவிதையை உனக்கு எழுதித் தந்தது யார்?'
'மாமிசம் வாங்குவதற்கென்று என் கடைக்கு நிறையக் கவிஞர்கள் வருவார்கள். அவர்களில் ஒருத்தர் தான் இதனை எழுதித்தந்தார்' நான் சிரித்துக் கொண்டே 'அது உன்னைத் தூற்றி எழுதிய கவிதையப்பா' என்றேன்.

வீட்டிற்குப் போனதும் மனைவி நச்சரிக்க ஆரம்பித்துவிட்டாள். இரண்டு மூன்று நாட்களாகத் தொடரும் இந்த நச்சரிப்புக்குக் காரணகர்த்தா பையன் ஒருத்தன். சேரிப்புறத்தில் வாழ்ந்து கொண்டிருக்கும் பையனைப் பற்றிய கதை. வயது பன்னிரண்டு இருக்கும். பையனின் பெற்றோர் எங்கள் வீட்டிற்குப் பக்கத்தில்தான் குடியிருந்தார்கள். மிகமிக நல்லவர்கள். எங்கள் வீட்டுச் சேமநலனில் அக்கறையாக இருந்தவர்கள். துரதிர்ஷ்டவசமாக ஏற்பட்ட பொருளாதார முடை காரணமாக இருந்தவீட்டை விற்றுவிட்டு சேரிப்புறத்திற்கு குடிபெயர்ந்து விட்டார்கள். அந்தப் பையன்தான் இப்போது சுகவீனமுற்றிருக்கிறான். காய்ச்சலில் தான் ஆரம்பித்தது. பிறகு சிறுநீர் கழிக்கும்போது எரிவு உண்டாகியது. நாட்கள் செல்லசெல்ல உடம்பெல்லாம் வீங்கிப்புடைத்து இப்போது மரணத்தறுவாயில் இருக்கிறான். சிறுநீரகங்கள் இரண்டும் பாதிக்கப்பட்டுள்ளதாம். இத்தனை விஷயங்களும் மனைவி சொன்னவை. அவனுடைய வீட்டுக்குப் போய் கொஞ்சம் சுகம் விசாரித்துவிட்டு வாருங்கள் என்று அவள் அடிக்கடி சொல்லிக் கொண்டேயிருந்தாள். நான் தான் சாக்குப்போக்கு சொல்லிக் கொண்டிருந்தேன். நான் அங்கே செல்லாமலிருப்பதற்கு முக்கியமான காரணம் சேரிப்புறம் எனக்கு ஒத்துக் கொள்ளாது,

முடைநாற்றம் காரணமாக வாந்தி வந்துவிடும். முடைநாற்றத்திற்குக் காரணம் கழிவுக் கால்வாய். வளைந்தும் நெளிந்தும் சேரிப்புறக் குடிசைகளின் இடுக்குகளிற்கூடாகத்தான் கழிவுக்கால்வாய் சென்றது.

என் வீட்டுச்சூழலைப் பார்த்தால் ரம்மியமாக இருக்கும், எப்போதும் நறுமணம் கமழும், சுற்றிலும் மலர்ச்செடிகளும், மலர்களும், மலர்களில் அமரந்திருக்கும் வண்டுகளும், வண்ணத்துப்பூச்சிகளும் கண்களை வசீகரிக்கும் கண்கொள்ளாக் காட்சிகள். நான் பணஞ்செலவிட்டு உருவாக்கிய பூந்தோட்டம். ஓரிரு வருடங்களுக்கு முன் வீட்டுச்சூழல் மிக மோசமாக இருந்தது. நகர கழிவுக் கால்வாய் வீட்டிற்கு அருகாகச் சென்ற காரணத்தால் என் கற்பனைகள் எல்லாம் முற்றாக வற்றியிருந்தன. நாற்றத்திற்கு மத்தியிலே குமட்டல் வந்ததேயொழிய கவிதை வராததால் கவிதை வரிகூட எழுத முடியாமல் காலம் கழிந்தது. மனதிலே காரிருள் சூழ்ந்த அக்கால வேளையிலே நான் ஒரேயொரு வேலை தான் செய்தேன். என்னிடமிருந்த பைசிக்கிளை மிதிப்பேன், மிதித்து நான்கைந்து கிலோமீற்றர் ஓடுவேன். நகரின் மத்தியிலே அழகிய பூங்காவனம் இருந்தது. அந்தப் பூங்காவனத்திற்குச் சென்று கற்பனையிலாழ்ந்து விடுவேன். பூங்காவனத்தில் கவிதைகள் ஊற்றெடுக்கும். வானம் பாடிகள், மணிப்புறாக்கள், நயகரா நீர்வீழ்ச்சி, தவழ்ந்து வரும் தென்றல், ஊசியிலைக்காடுகள், புல்நுனியில் பனித்துளி, அல்ப்ஸ் மலையில் பஞ்சவர்ணக்கிளி என்றெல்லாம் கவிதைகள் எழுத ஆரம்பிப்பேன். பூங்காவனம் போகாத நாட்களில் நதிக்கரையோரஞ் சென்று ஓடங்களை மனதிற்குள் ஓடவிடுவேன், விண்மீன்களை இரசிப்பேன், நிலவிலே நீராடுவேன், தூமகேதுவோடு பேசுவேன்.

என்றாலும் வீட்டிற்கு திரும்பிய மறுகணமே முடைநாற்றத்தால் அவதியுறுவேன். கவிதைப் பூஞ்சோலை வரண்ட பாலைவனமாகிவிடும், சாப்பிடுவதற்குக் கூட மனசுவராது. பிள்ளைகளின் நிலைமையும் அதே கெதியாகத்தான் இருந்தது. அடிக்கடி உடல் உபாதைகளால் அவர்கள் துயருற்றார்கள். நாங்கள் நகரசபைத் தலைவரிடம் போனோம். அவர் மிகமிக நல்லவர். அழகிய ஆசனங்களிலே அமரவைத்து எங்கள் எல்லோரையும் பார்த்துப் புன்னகைத்து சிற்றுண்டியும் வழங்கினார். எனக்கருகில் டாக்டர், மற்றவர் உதவி ஆணையாளர், மற்றவர் வரியிறுப்பாளர் சங்கத் தலைவர், பிரபல வர்த்தகர், மின்பொறியியலாளர் என்று எல்லோருமே மரியாதைக்குரிய ஆட்கள். உயர்தர ஆங்கிலத்தில் எழுதப்பட்டிருந்த எங்கள் மகஜரை நகரசபைக் தலைவர் வாசித்தார். நகரசபையின் அடுத்த வரவு செலவுத்திட்டதிலே நிதி ஒதுக்கப்பபட்டு கழிவுக்கால்வாய் சேரிப்புறத்தின் திசையில் திருப்பப்பட்டு இப்போதும் அது ஓடிக் கொண்டிருக்கிறது. நகரசபைத் தலைவரே, உங்களுக்கு நன்றி.

**எம்.எம்.நௌஷாத்**

கசாப்பன் இன்றும் சிவப்பு பனியனோடு நின்றதால் நான் எரிச்சலடைந்தேன். கசாப்புக்கடையை நான் கடுமையாக வெறுத்தாலும் புல்புல்மீது கொண்ட அதீதபிரேமை காரணமாக அங்கே செல்லாமலிருக்க என்னால் முடியாமலிருந்தது. புல்புல்பறவையைத் தேட அது கசாப்பனின் தோளிலே அமர்ந்து சுற்றுமுற்றும் பார்த்தது. ‘இந்த புல்புல் பறவையைப் பற்றி உனக்கு ஏதாவது தெரியுமா?’ என்று கசாப்பனைப் பார்த்து கேலியாகக் கேட்டேன் நான். ‘அது நன்றாகப்பாடும், அதனைத் தவிர வேறெதுவும் எனக்குத் தெரியாது’ என்றான் கசாப்பன். ‘எங்கே புல்புல் பாடவில்லையே’ என்றேன் நான். கசாப்பன் புல்புல் பறவையைப் பார்த்து ‘புல்புல் நண்பனே, கவிஞர் ஐயா உன்னைப் பாடச்சொல்கிறார், கொஞ்சம் பாடிக் காட்டேன்’ என்று சொல்ல புல்புல் இனிமையாகப் பாட ஆரம்பித்தது. நான் அந்த இனிமை மயக்கத்திலேயே கொஞ்ச நேரம் இலயித்திருந்தேன்.

‘என்ன கசாப்பா, ஆச்சரியமாக இருக்கிறதே, நீ பேசுவது இந்த பறவைக்கு எப்படி விளங்குகிறது? நீ சொன்ன மாத்திரத்திலேயே அதுபாட ஆரம்பித்து விட்டதே’ என்றேன் நான் நிஜமான ஆச்சரியத்துடன். ‘எப்படி என்று எனக்குத் தெரியாது கவிஞர்ஐயா! ஆனால் அது நான் பாடச் சொன்னால் பாடும். புல்புல் பாடுவதாயிருந்தாலும் அதனுடைய Mood நல்ல நிலையில் இருக்கவேண்டும்.’ என்றான் கசாப்பன்.

‘Mood சரியாக இருக்க வேண்டுமா? அதனையெல்லாம் நீ எப்படிக் கண்டுபிடிப்பாய்?’

‘எப்படிஎன்று எனக்கு தெரியாது ஐயா, புல்புல் பறவையின் முகத்தை ஒரு முறை பார்த்தேனென்றால் எனக்கு அதனுடைய மனநிலை புரிந்துவிடும்’ என்றான் கசாப்பன். அவன் சொல்வது உண்மையா? கயிறு திரிக்கிறானா? என்ன ஏமாற்றுகிறானா? கசாப்புக் கத்தியால் என்னை அறுக்க நினைக்கிறானா? எதுவுமே எனக்குப் புரியவில்லை. தலைசுற்றியது.

அடுத்தநாள் அதேவழியாகப் போகையில் கடை வெறுமையாக இருக்க கசாப்பன் கடையில் இல்லாமல் புல்புல் மட்டும் இறைச்சிக் கத்திப்பிடி மீது குந்தியவாறே வீதியை நோட்டமிட்டுக் கொண்டிருந்தது. நல்ல சந்தர்ப்பம் புல்புல்லோடு பேசு என்று என்னுள்ளம் சொல்லவே நான் புல்புல்லுக்கு அருகிலே போய், ‘புல்புல் பறவையே, பாடு’ என்றேன். புல்புல் அமைதியாக இருந்தது. புல்புல் பறவைக்கு காது கேட்கவில்லையோ என்றெண்ணி ‘புல்புல் பறவையே, கொஞ்சம் பாடு’ என உரத்த தொனியில் சொன்னேன். உரத்துப் பேசியும் அதற்கும் புல்புல்பறவை லட்சியம் பண்ணாமல் எங்கோ பார்த்தபடி இருக்கவே எனக்குக் கோபம் வந்து ‘புல்புல் பறவையே, உன்னுடைய காதுகள் செவிடாகி விட்டனவா? பாடச் சொன்னேன் அல்லவா! ஏன் காது

விளங்காத மாதிரி நடிக்கிறாய்? பாடு பறவையே பாடு' என்று நான் அதட்டினேன். என்னுடைய அதட்டலுக்கும் புல்புல் மசிந்தமாதிரி தெரியவில்லை. புல்புல் செத்துவிட்டதோ என்று சந்தேகம் வரவே மிகவும் அண்மித்து அதன் கண்களைப் பார்த்தேன். கண்களை அகல விரித்தபடி புல்புல் உயிரோடுதான் இருந்தது. 'ஏய் கேடு கெட்ட பறவையே! கசாப்புக் கடைக்காரனை நம்புகிறாய், கவிஞன் என்னை நம்பாமல் இருக்கிறாய். நான் உன்னைப் பற்றி நூறு கவிதைகள் எழுதியிருக்கிறேன். பயங்கர ஆளான கசாப்பன், நாளைக்கோ நாளையன்றைக்கோ உன்னைக் கொன்று புசிப்பான். பாடு...பாடு... பாடு...' என்று ஆக்ரோஷத்துடன் கத்தினேன் நான். புல்புல்லோ அப்பால் முகத்தை திருப்பிக் கொண்டது.

அதற்குள் கசாப்பனும் வந்துவிட்டான். வந்ததும், வராததுமாக 'கவிஞர் ஐயா, புல்புல் பறவைக்கு நீங்கள் தாறுமாறாக ஏசினீர்களா?' என்று கேட்டான் கசாப்பன். நான் அசந்துபோய் விட்டேன். 'புல்புல்லின் முகத்தைப் பாருங்கள். எது எவ்வளவு வருத்தமாக இருக்கிறது. அப்படியெல்லாம் நீங்கள் ஏசக்கூடாது. ஏற்கனவே புல்புல் சுகவீனமுற்றிருப்பது உங்களுக்குத் தெரியாதா?' என்று கேட்டான் கசாப்பன். அவனுடைய குரலில் மெல்லிய கோபம் கலந்திருப்பதை நான் அவதானித்தேன். 'புல்புல்பறவைக்கு சுகவீனமா? என்ன கதையாஅளக்கிறாய், கசாப்பா?' என்று கேட்டேன் நான். 'கதையளக்கவில்லை ஐயா, உண்மையைத்தான் சொல்கிறேன். ஏதாவது மூலிகை மருந்து கிடைக்குமோ என்று பார்ப்பதற்காகத்தான் வெளியே போனேன்' என்று பதிலிறுத்தான் கசாப்பன்.

இரண்டு வாரங்கள் நான் கசாப்புக் கடைப்பக்கம் போகவேயில்லை. கசாப்பு என்னோடு கண்ணாமூச்சி ஆட்டம் ஆடுவதுபோல் எனக்கு தோன்றிற்று. அற்பமான புல்புல் பறவைக்கு முன்னாலும், கசாப்புக்கு முன்னாலும் என்னால் அவமானப்பட முடியாது. என்றாவது ஒருநாள் புல்புல்லின் உயிர் பிரியப் போகிறதே என்ற கவலை என்னை வாட்டிக்கொண்டே இருந்தது.. கசாப்பன் எப்படியும் புல்புல்லை அறுத்துச் சாப்பிடத்தான் போகிறான். நான் புல்புல்லை காப்பாற்றியாக வேண்டும். சாதுரியமாகப் பேசி அந்தப் பறவையை எனதாக்கிக் கொள்ள வேண்டும். இந்த இறுதிமுடிவோடு நான் கசாப்புவின் கடையை நோக்கி விரைந்தேன்.

நான் போனவேளை கசாப்பன் மிகவும் பிஸியாக இருந்தான். கண்களால் கடையைத் துழாவியதும் மனது திக்கென்றது. நான் நினைத்தது சரியாகிப் போய்விட்டது. புல்புல் இல்லை. கசாப்பன் இறுதியிலே புல்புல்லின் உயிருக்கு உலைவைத்து விட்டான். மிகவும் மனமுடைந்தவனாக, 'கசாப்புவே, புல்புல்லை காணவில்லையே. எங்கே அது?' என்று

கேட்டேன் நான். அதன் சொந்தக்காரன் வந்து வாங்கிப் போய்விட்டான்' என்றான் கசாப்பனும் சோகத்தோடு. 'என்ன கசாப்பனே, என்னை ஏமாற்றவா பாக்கிறாய்? புல்புல்லின் சொந்தக்காரன் கடவுள் அல்லவா?' என்றேன் நான். 'ஏமாற்றவில்லை ஐயா, உண்மையைத் தான் சொல்லுகிறேன். அது பெரிய கதை, நடந்தது என்வென்றால் புல்புல் பறவையை என்னிடம் அடமானம் வைத்தார்கள், இப்போது வாங்கிக்கொண்டு போய்விட்டார்கள்'
'அடமானம் வைத்தார்களா? புல்புல் பறவையையா? அடமானம் வைத்தது யார்? இப்படியொரு வினோதமான சம்பவத்தை என் வாழ்நாளில் நான் ஒருபோதும் கேள்விப்பட்டதே இல்லையே'

'நான் சொல்வது நூற்றுக்கு நூறு உண்மை ஐயா, எனக்கும் இது புதிய அனுபவம். இந்த புல்புல் பறவைக்குச் சொந்தக்காரன் ஒரு சிறுவன். அவன் கடுமையாக நோய்வாய்ப்பட்டு படுத்த படுக்கையாக இருக்கிறான். தந்தை இல்லை. மருந்துகள் வாங்கப் பணம் வேண்டும். தாயிடம் பணம் இல்லை. வீட்டிலிருந்த எல்லாவற்றையும் அடமானம் வைத்து இனி அடமானம் வைக்க எதுவுமேயில்லை என்ற நிலையில் என்னிடம் கடன்வாங்க வந்தாள் தாய். நான் கல்நெஞ்சக்காரன், கடன் தரமாட்டேன் என்று மறுத்துவிட்டேன். அவள் வீட்டுக்கு திரும்பிச்சென்று புல்புல்பறவையைக் கொண்டு வந்தாள். அதனை அடமானம் வைத்துக் கொண்டாவது கொஞ்சம் கடன்தருமாறு கெஞ்சினாள். புல்புல்லைக் கண்டதும் எனக்கும் ஆசை வரவே புல்புல்லை அடமான வைத்துக் கொண்டு கடன் கொடுத்தேன்'
'பிறகு என்ன நடந்தது?' என்று ஆவலோடு கேட்டேன் நான். 'இரண்டு நாட்களுக்கு முன்பு தாய் மீண்டும் வந்தாள். கடைக்காரரே, புல்புல் பறவை என்மகன் ஆசையாக வளர்த்தது. இன்றோ நாளையோ என்று சாகக் கிடக்கும் அவன் புல்புல் பறவையைப் பார்க்க துடியாய்த் துடிக்கிறான். அடமானப் பணத்தைத் தருவதற்கு என்னிடம் சல்லிக் காசும் இல்லை. கொஞ்சம் மனமிரங்குங்கள் என்று கெஞ்சிக் கேட்டாள். நானும் கொடுத்துவிட்டேன்' என்று முடித்தான் கசாப்பன்.

'கடைக்காரரே, எனக்கொரு உதவி செய்யுங்கள். அந்த புல்புல் பறவையை நான் வாங்க விரும்புகிறேன். எவ்வளவு விலையானாலும் பரவாயில்லை. உங்களுக்குரிய பணத்தையும் தந்துவிடுகிறேன். புல்புல் பறவையை மையமாக வைத்து நான் பெரிய காவியமொன்று படைக்கப்போகிறேன். சிறுவனின் வீட்டைக் காட்டி விட்டீர்களென்றால் நன்றியுடையவனாக இருப்பேன்' என்றேன் நான். கடைக்காரர் என்னை அழைத்துக் கொண்டு போனார். அது சேரிப்புறம். எந்த சேரிப்புறத்தை முடைநாற்றமென்று நான் வேண்டவே வேண்டாமென்று ஒதுக்கி வைத்தேனோ அதே சேரிப்புறம். கழிவுநீர் கசிந்து சேற்றில் கால்கள் புதைந்தன. மழையும் தூறிக் கொண்டிருந்ததால் சாக்கடை நாற்றமெடுத்தது. நான் கைலேஞ்சியால் நாசியைப் பொத்திக் கொண்டேன்.

‘நீங்கள் கேள்விப்பட்டிருக்கிறீர்களா, கவிஞர் ஐயா?’
‘எதைப்பற்றிக் கேட்கிறீர்கள்?’
‘இப்போது பார்த்தீர்கள் தானே சாக்கடை, அதன் காரணமாக இந்தச் சேரிப்புறத்திலே நிறையச் சிறுவர்கள் நோய்வாய்ப்பட்டிருக்கிறார்கள், பலர் உயிரிழந்திருக்கிறார்கள். நாம் தேடிப்போகும் பையனுக்கும் இதே நோய்தான். அவன் உயிர்பிழைக்கமாட்டான் என்று டாக்டரும் கைவிரித்து விட்டாராம்’
‘அப்படியா?’ என்ற நான் அசிரத்தையோடு ம்ம் என்றேன். என் விழிகளுக்குள்ளும், செவிகளுக்குள்ளும், இதயத்திற்குள்ளும், இரத்த நாளங்களுக்குள்ளும் புல்புல் மட்டுமே பறந்து கொண்டிருந்ததால் வேறெந்தக் கதையுமே செவிக்குள் நுழையவில்லை.

சிறுவனின் குடிசையை அண்மித்தபோது அங்கே நின்றுகொண்டிருந்த என் மனைவி என்னை வெறுப்புமிழப் பார்த்தாள். சிறுவன் இறந்து விட்டான். போய்ப் பாருங்கள் என்று என்னை அடிக்கடி நச்சரித்தாளே அந்தச் சிறுவன். வெள்ளைக்கொடிகள் பறந்து கொண்டிருந்தன. குடிசையில் நாங்கள் நுழைந்ததுமே தாயார் ஓப்பாரி வைக்க ஆரம்பித்துவிட்டாள். தரையிலே ஒரு வெள்ளைத் துணி விரிக்கப்பட்டு சிறுவனின் சடலம் அதன் மீது வைக்கப்பட்டிருந்தது. அறையை மேலோட்டமாக நோட்டமிட்டபோது கசாப்புக் கடைக்காரன் சொன்னதுபோல் அவளிடம் அடகு வைப்பதற்கென்று எதுவுமேயில்லையென்பது துலாம்பரமாகப் புரிந்தது.

என் ஆசைக்குரிய புல்புல்லை நான் தேடினேன். அது சிறுவனின் தலைமாட்டில் குந்தியிருந்தவாறே மெல்லிய குரலில் பாடிக்கொண்டிருந்தது. ‘எத்தனை இனிமையான குரலில் இந்த புல்புல்பறவை பாடுகிறது’ என்று கசாப்பனின் காதிற்குள் கிசுகிசுத்தேன் நான். ‘சத்தம் போட்டுப் பேசாதீர்கள் ஐயா, அது பாடவில்லை, அழுது கொண்டிருக்கிறது’ என்றான் கசாப்பன். ‘புல்புல் அழுகிறதா?’ என்று சந்தேகத்துடன் கேள்விக்கணை தொடுத்தேன் நான். ‘புல்புல் பறவை எப்படி அழும் என்று எனக்கு விவரிக்கத் தெரியாது. ஆனால் அது இப்போது அழுது கொண்டிருக்கிறது என்பதே உண்மை’ என்றான் கசாப்பன். ‘சரி சரி. நீ சொல்லுவதை நான் நம்புகிறேன், அது எப்போது அழுகையை நிறுத்தி பாட ஆரம்பிக்கும்?’ என்று கேட்டேன் நான். ‘ஏன் எதற்காகக் கேட்கிறீர்கள்?’ என்று புரியாமல் என்னைப் பார்த்தான் கசாப்பன். ‘அதனை வாங்கிச் செல்வதற்கு’ என்று பதிலளித்தேன் நான்.

# நன்றிகள் . . .


என் ஆரம்பகாலச் சிறுகதைகளை எவ்வித அறிமுகமுமின்றி பிரசுரித்த
மல்லிகை டொமினிக் ஜீவா அவர்களுக்கும், சிரித்திரன், வியூகம்,
தினகரன், வீரகேசரி, சிந்தாமணி, தீபம், சுடர் ஆசிரிய பீடங்களுக்கும்
மற்றும் பட்டறை (பிரதேச செயலகம், சம்மாந்துறை)
மீலாத் மலரின் மலர் ஆசிரியர் குழாமிற்கும்

தட்டச்சிடும் பொறுப்பை ஒருங்கிணைத்த எம்.எம்.நுஸ்கி — மாவட்ட மார்பு நோய்ச் சிகிச்சை நிலையம், சம்மாந்துறை

தட்டச்சிட்ட ஏ.சீ.றுபைக் அஹமட், ஏ.ஆர்.சாஜித் அலி, ஏ.அஸ்லம், யூ.எல்.எம்.றிபாஜ், எல்.இர்பான் முஹம்மட்

புத்தக வடிவமைப்பு — ரைப்செட்டிங் ஒழுங்கமைப்பு —பிரிண்டிங் ஒருங்கிணைப்புச் செய்த றிஸ்வி ஸெயின் ஆசிரியர்

அட்டைப்படம் – ஓவியங்கள் வரைந்த ஓவியர். சீ.ருத்ரா

அச்சுப் பதிப்புச் செய்த — கொழும்பு லீட் பிரிண்டர்ஸ்

உரைகள் வழங்கிய
பேராசிரியர் றமீஸ் அப்துல்லாஹ்
உமா வரதராஜன்
கலாநிதி க. இரகுபரன்

அறிமுக உரை வழங்கிய
மன்சூர் ஏ. காதிர்

நூலை வெளியிட்ட
கலாபூஷணம் மாறன் யூ.ஸெயின்
தேசிய கலை இலக்கியத் தேனகம், சம்மாந்துறை.

எம்.எம்.நௌஷாத்

பல்வேறு சந்தர்ப்பங்களில் கதைக் கருக்களை இரவலாகத் தந்த
டாக்டர் எம்.எம்.பசீர், அக்கரைப்பற்று
(அழகு என்பதற்கான நிறமூர்த்த ஒழுங்கு)

டாக்டர் திருமதி: சம்மிகா (Dr.Mrs.Chammika),
OPD GH Ampara (2007)
(வீரர்கள் அழிவதில்லை)

டாக்டர் திருமதி: ஜெஸ்மின் மாஹில் –(Dr.Mrs.Jesmin Mahil),
கண்டி, அனிவத்த.
(மலையுச்சி பங்களாவாசிகள்)

எவ்வேளையிலும் ஆலோசனை வழங்கும் ஊக்குவிக்கும்
என்துணைவி ஏ.எல்.தைஹிபா

என் முதல் ரசிகர்களான என் பிள்ளைகள் அஹ்ஸன் ஸுஹைல்,
(மருத்துவ பீடம்), அப்ஸல் இஹ்ஸான், அப்ஸானா ஸஹானி,
அஹ்னாப் தில்ஸாத்

நண்பர்கள் எம்.எச்.அமானுல்லாஹ், எம்.ஐ.ஏ.சமட், ஜனாப், எம்.றிபாவுதீன்
(நூலகர் – தென்கிழக்குப் பல்கலைக்கழகம்)

வெளியீட்டு விழா சிறப்பாக நடைபெற உதவிய
அனைத்து நல் உள்ளங்களுக்கும்

வெளியீட்ட விழாவில் கலந்து கொண்ட பிரதம அதிதி, அதிதிகள் மற்றும்
நேசமுள்ள நண்பர்கள், கலைஞர்கள், இலக்கிய வாதிகள், கவிஞர்கள்,
உறவினர்கள், வைத்திய அதிகாரிகள், சம்மாந்துறை ஆதார
வைத்தியசாலை வைத்திய அத்தியட்சகர்,
உத்தியோகத்தர்கள் மற்றும் ஊழியர்கள்
ஆகிய அனைத்து உள்ளங்களுக்கும்
என் உளப்பூர்வ நன்றிகள்!

எம்.எம்.நௌஷாத்